உ

சிவமயம்

செங்குந்தப் படையோன் சேவடி வாழ்க

வண்ணக்களஞ்சியம் காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர்

1926ஆம் ஆண்டு வெளியிட்ட

# செங்குந்தர் பிரபந்தத் திரட்டு

மூலமும்

சைவநன்மணி, கேதாரச் செல்வர்,

புலவர். சரவணசதாசிவம், எம்.ஏ., எம்.எட்.,

(உதவித்தலைமை ஆசிரியர், நகராட்சி மே.நி.ப. காஞ்சிபுரம்)

அவர்கள்

எழுதிய உரையும்.

வெளியீடு :

கவிச்சக்கரவர்த்தி

ஒட்டக்கூத்தர் மன்றம்

80. A. திருக்கச்சிநம்பி தெரு. காஞ்சிபுரம். 631503

# நூல் வெளியீட்டு விவரம்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : செங்குந்தர் பிரபந்தத்திரட்டு (மூலமும் உரையும்) |
| நூலாசிரியர் | : தனித்தனியே பலரால் இயற்றப் பட்டது. |
| தொகுப்பாசிரியர் | : வண்ணக்களஞ்சியம் காஞ்சி ஸ்ரீ நாகலிங்கமுனிவர் அவர்கள் |
| உரையாசிரியர் | : சைவநன்மணி, கேதாரச்செல்வர் புலவர். சரவண சதாசிவம் எம்.ஏ., எம்.எட்., |
| பதிப்பு | : முதற்பதிப்பு. மே. 1993. |
| வெளியீடும் பதிப்புரிமையும் | : கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றம். காஞ்சிபுரம். 631503. |
| பக்கங்கள் | : 32 +96 +496 +4 = 628 |
| காகிதம் | : 8.2 Kg, கிரீம்வூவ். TNPL |
| அளவு | : டிம்மி 1/8 |
| அச்செழுத்துக்கள் | : 10, 12 பாயிண்ட்ஸ் |
| பிரதிகள் | : 5,000 |
| அச்சிட்டோர் : | : அமுதன் அச்சகம். 66. தந்தைபெரியார் தெரு. எம் ஜி.ஆர். நகர். சென்னை.78 |
| விலை | : ரூ. 150/- (ஒருநூற்றைம்பது) |




வண்ணக் களஞ்சியம்
காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் அவர்கள்

வீரவாகுதேவர் தம்மகளான சித்திரவல்லியைச் சோழமரபில் முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு மணமுடித்துத் தர, அவர்களுக்குத் தோன்றிய அங்கிவன்மன் முதலான ஆயிரத்துத் தொள்ளாயிரவர் செங்குந்தரில் முதற்சந்ததியார் என்று கூறப்படுவர் செங்குந்தர், சிவபெருமான் வழியில், சுப்பிரமணியருக்குத் தம்பியராக வந்தநவவீரர் மரபினர் ஆதலின், உபசுப்பிரமணிய கோத்திரத்தினர் என்று கூறப்படுவர். இவர்களே 'முதலியர்' என்னும் பட்டத்திற்குரியர் என்றும் கூறுவர்.

நவவீரர்கள் முருகப் பெருமானுடைய படைக்குத் தலைமை யேற்ற காரணத்தால் 'சேனைத்தலைவர்' எனவும் போற்றப் படுவர். முசுகுந்தச்சக்கரவர்த்தி மரபில் தோன்றி, சேனைத் தலைவர்களாகவும், அரசர்களாகவும், சிற்றரசர்களாகவும் விளங்கிப் பெருமை கொண்டவர்கள்.

இவர்கள் பெருமைகளும் செய்த சிறப்புடைய செயல்களும் பல புரணங்களிலும் இலக்கியங்களிலும் பலபடப் பாராட்டிக் கூறப்பட்டுள்ளன. பிற்காலத்தே அறிஞர் பெருமக்கள் பலர் செங்குந்தர் தம் சிறப்பியல்புகளைத் தனித்தனி நூல்களாக (பிரபந்தங்களாக)ப் பாடியுள்ளனர். சிற்றிலக்கியங்கள் என்று தமிழில் வழங்கிவரும், அந்தாதி, கோவை, பிள்ளைத்தமிழ் மாலை, ஊசல், கட்டியம் போன்ற பலவகைகளில் செங்குந்தர் மீது அவ்வக் காலத்தே பாடப்பட்ட பலநூல்கள் திரட்டப்பட்டு பல காலங்களில் தொகுப்பாக வெளியிடப் பட்டுள்ளது. அது போன்ற ஒருநூல் 'செங்குந்தர் பிரபந்தத்திரட்டு' என்னும் பெயரில் 1926 ஆம் ஆண்டில் காஞ்சிபுரம் ஸ்ரீ நாகலிங்க முனிவர் என்னும் பெருமகனாரால், திருவாரூர் வள்ளல் தி. க. சபாபதி முதலியார் அவர்களுடைய பொருளுதவி கொண்டு வெளியிடப் பட்டுள்ளது. அந்தப் பதிப்பு இப்போது கிடைப்பது அரிதாக உள்ளது. யாரோ சிலரிடம்மட்டுமே உள்ள அந்தப் பதிப்பும் உரை விளக்கம் இல்லாமல் பாடல்கள் மட்டும் அடங்கியதாகும்.

1987 ஆம் ஆண்டு காஞ்சிபுரம் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர் மன்றத்தினர், ஒட்டக்கூத்தர் விழா நடத்தியபோது, தமிழகத்தின் முன்னாள் சட்டப் பேரவைத் தலைவரும், செங்குந்தர்குலத் தோன்றலும், தமிழ் அறிஞரும், தமிழில் பல உரைநடை நூல்களை எழுதியவருமான, செய்யாறு மாண்புமிகு **புலவர். கா. கோவிந்தன்** M. A., அவர்கள் உரையாற்றி-



னார்கள். அப்போது விழா முடிவில் ஸ்ரீ நாகலிங்க முனிவர் அவர்களின் செங்குந்தர் பிரபந்தத் திரட்டு நூலை எங்களிடம் அளித்து, இந்த நூலை மீண்டும் வெளியிட்டுச் செங்குந்த சமுதாயம் பழம் பெருமைகளை அறிந்துகொண்டு பயன் பெறச் செய்ய வேண்டியது உங்கள் கடமை என்று கூறி னார்கள்.

ஒட்டக்கூத்தர் இயற்றியருளிய தக்கயாகப்பரணி நூலை உரையுடன் வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டிருந்ததாலும், இந்த நூல் வெளியீட்டிற்குப் பெரும் பொருள் செலவாகும் என்று கருதியதாலும் பொருளும் காலமும் கருதி வெளியிடுவது தாமதமாயிற்று. நூலுக்குப் பொருள் விளக்கம் இன்றி மூலம் (பாடல்கள்) மட்டுமே இருந்ததனால் பாடல்களுக்கு விளக்கம் எழுதி வெளியிட வேண்டும் என்ற எண்ணமும் தாமதத்திற்கு ஒரு காரணமாக அமைந்தது.

மன்றத்தின் துணைச் செயலராக அமைந்து மன்றச் செயல் பாடுகளுக்கு உறுதுணையாக இருந்துவரும், **ஐயங்கார்குளம், சைவநன்மணி, புலவர் சரவணசதாசிவம்** அவர்களைக்கொண்டு உரையெழுதுவது என்று முடிவு செய்யப்பட்டது இவர் நூல் வெளியீட்டில் அனுபவமும் ஆர்வமும் உடையவர். முன்பு இம் மன்றத்தின் சார்பில் 1992 இல் வெளியிட்ட 'தக்கயாகப்பரணி' நூலைப் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்டவர்.

அவர் தலைமையாசிரியர் பொறுப்பில் இருந்து, பல அலுவல்களை மேற்கொண்டு அதனுடன் இந்த அரும் பணியை யும் உவந்து ஏற்றுப் பல சிரமங்களுக்கிடையே இந்த நூலுக்குச் சிறந்ததொரு உரையை எழுதி அளித்திருக்கின்றார்கள். பல அரிய செய்திகளுக்கு நல்ல மேற்கோள்களை எடுத்துக்காட்டி விளக்கியிருக்கும் தன்மை போற்றுதற்குரிய ஒன்றாகும். இச் செயல் செங்குந்தர் சமுதாயம் என்றும் நன்றியுடன் நினைத்துப் பாராட்ட வேண்டியதாகும்.

அந்த உரையை முழுவதுமாகப் பார்வையிட்டுச் செப்பம் செய்தவர் மகாவித்துவான், பேராசிரியர், டாக்டர். **திரு சி. அருணை வடிவேல் முதலியார்** அவர்கள் ஆவார்கள். அவர்கள் திருக்கரம்பட்டு வெளிவரும் இவ்வுரை 'பொன் மலர் நாற்றம் உடைத்து' என்பது போல அழகுக்கு அழகு சேர்க்கிறது. இதுதவிரப் பேராசிரியர் அவர்கள் இந்த நூலுக்கு

வீரவாகுதேவர் தம்மகளான சித்திரவல்லியைச் சோழமரபில் முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு மணமுடித்துத் தர, அவர்களுக்குத் தோன்றிய அங்கிவன்மன் முதலான ஆயிரத்துத் தொள்ளாயிர வர் செங்குந்தரில் முதற்சந்ததியார் என்று கூறப்படுவர் செங் குந்தர், சிவபெருமான் வழியில், சுப்பிரமணியருக்குத் தம்பியராக வந்தநவவீரர் மரபினர் ஆதலின், உபசுப்பிரமணிய கோத்திரததினர் என்று கூறப்படுவர். இவர்களே 'முதலியர்' என்னும் பட்டத்திற்குரியர் என்றும் கூறுவர்.

நவவீரர்கள் முருகப் பெருமானுடைய படைக்குத் தலைமை யேற்ற காரணத்தால் 'சேனைத்தலைவர்' எனவும் போற்றப் படுவர். முசுகுந்தச்சக்கரவர்த்தி மரபில் தோன்றி, சேனைத் தலைவர்களாகவும், அரசர்களாகவும், சிற்றரசர்களாகவும் விளங்கிப் பெருமை கொண்டவர்கள்.

இவர்கள் பெருமைகளும் செய்த சிறப்புடைய செயல்களும் பல புரணங்களிலும் இலக்கியங்களிலும் பலபடப் பாராட்டிக் கூறப்பட்டுள்ளன. பிற்காலத்தே அறிஞர் பெருமக்கள் பலர் செங்குந்தர்தம் சிறப்பியல்புகளைத் தனித்தனி நூல்களாக (பிரபந்தங்களாக)ப் பாடியுள்ளனர். சிற்றிலக்கியங்கள் என்று தமிழில் வழங்கிவரும், அந்தாதி, கோவை, பிள்ளைத்தமிழ் மாலை, ஊசல், கட்டியம் போன்ற பலவகைகளில் செங்குந்தர் மீது அவ்வக் காலத்தே பாடப்பட்ட பல நூல்கள் திரட்டப்பட்டு பல காலங்களில் தொகுப்பாக வெளியிடப் பட்டுள்ளது. அது போன்ற ஒருநூல் 'செங்குந்தர் பிரபந்தத்திரட்டு' என்னும் பெயரில் 1926 ஆம் ஆண்டில் காஞ்சிபுரம் ஸ்ரீ நாகலிங்க முனிவர் என்னும் பெருமகனாரால், திருவாரூர் வள்ளல் தி. க. சபாபதி முதலியார் அவர்களுடைய பொருளுதவி கொண்டு வெளியிடப் பட்டுள்ளது. அந்தப் பதிப்பு இப்போது கிடைப்பது அரிதாக உள்ளது. யாரோ சிலரிடம்மட்டுமேஉள்ள அந்தப் பதிப்பும் உரை விளக்கம் இல்லாமல் பாடல்கள் மட்டும் அடங்கியதாகும்.

1987ஆம் ஆண்டு காஞ்சிபுரம் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர் மன்றத்தினர், ஒட்டக்கூத்தர் விழா நடத்தியபோது, தமிழகத்தின் முன்னாள் சட்டப் பேரவைத் தலைவரும், செங்குந்தர்குலத் தோன்றலும், தமிழ் அறிஞரும், தமிழில் பல உரைநடை நூல்களை எழுதியவருமான, செய்யாறு மாண்பு மிகு **புலவர். கா. கோவிந்தன் M. A.,** அவர்கள் உரையாற்றி



னார்கள். அப்போது விழா முடிவில் ஸ்ரீ நாகலிங்க முனிவர் அவர்களின் செங்குந்தர் பிரபந்தத் திரட்டு நூலை எங்களிடம் அளித்து, இந்த நூலை மீண்டும் வெளியிட்டுச் செங்குந்த சமுதாயம் பழம் பெருமைகளை அறிந்துகொண்டு பயன் பெறச் செய்ய வேண்டியது உங்கள் கடமை என்று கூறி னார்கள்.

ஒட்டக்கூத்தர் இயற்றியருளிய தக்கயாகப்பரணி நூலை உரையுடன் வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டிருந்ததாலும், இந்த நூல் வெளியீட்டிற்குப் பெரும் பொருள் செலவாகும் என்று கருதியதாலும் பொருளும் காலமும் கருதி வெளியிடுவது தாமதமாயிற்று. நூலுர் பொருள் விளக்கம் இன்றி மூலம் (பாடல்கள்) மட்டுமே இருந்ததனால் பாடல்களுக்கு விளக்கம் எழுதி வெளியிட வேண்டும் என்ற எண்ணமும் தாமதத்திற்கு ஒரு காரணமாக அமைந்தது.

மன்றத்தின் துணைச் செயலராக அமைந்து மன்றச் செயல் பாடுகளுக்கு உறுதுணையாக இருந்துவரும், **ஐயங்கார்குளம், சைவநன்மணி, புலவர் சரவணசதாசிவம்** அவர்களைக்கொண்டு உரையெழுதுவது என்று முடிவு செய்யப்பட்டது இவர் நூல் வெளியீட்டில் அனுபவமும் ஆர்வமும் உடையவர். முன்பு இம் மன்றத்தின் சார்பில் 1992 இல் வெளியிட்ட 'தக்கயாகப்பரணி' நூலைப் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்டவர்.

அவர் தலைமையாசிரியர் பொறுப்பில் இருந்து, பல அலுவல்களை மேற்கொண்டு அதனுடன் இந்த அரும் பணியை யும் உவந்து ஏற்றுப் பல சிரமங்களுக்கிடையே இந்த நூலுக்குச் சிறந்ததொரு உரையை எழுதி அளித்திருக்கின்றார்கள். பல அரிய செய்திகளுக்கு நல்ல மேற்கோள்களை எடுத்துக்காட்டி விளக்கியிருக்கும் தன்மை போற்றுதற்குரிய ஒன்றாகும். இச் செயல் செங்குந்தர் சமுதாயம் என்றும் நன்றியுடன் நினைத்துப் பாராட்ட வேண்டியதாகும்.

அந்த உரையை முழுவதுமாகப் பார்வையிட்டுச் செப்பம் செய்தவர் மகாவித்துவான், பேராசிரியர், டாக்டர். **திரு சி. அருணை வடிவேல் முதலியார்** அவர்கள் ஆவார்கள். அவர்கள் திருக்கரம்பட்டு வெளிவரும் இவ்வுரை 'பொன் மலர் நாற்றம் உடைத்து' என்பது போல அழகுக்கு அழகு சேர்க் கிறது. இதுதவிரப் பேராசிரியர் அவர்கள் இந்த நூலுக்கு

அரியதொரு மதிப்புரையையும் வழங்கிச் சிறப்புச் செய்திருக்கிறார்கள். அவர்களுக்கு மன்றத்தின் சார்பில் பணிவான நன்றி அறிதலுடன் கூடிய வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

நூல் அச்சாவதற்குப் பெரும் பொருள் தேவைப்பட்ட போது பொருள் பெறும் வழிகளைக் கூறியும் உடனிருந்து பெற்றுத் தந்தும் உதவியவர் தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தின் துணைத் தலைவர் உயர்திரு **M. M. தணிகைமலை** அவர்கள் ஆவார்கள். இவ்வகையில் இவர் பெரிதும் பாராட்டுக்குரியவர் ஆவர். தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத் தலைவர், உத்தியோக ரத்னா, திரு. **J. சுத்தானந்தம்** அவர்கள் தலைமைச் சங்கத்தில் இருந்து ரூ. 50.000/ ஐம்பது ஆயிரமும், மாவட்டந்தோறும் முன் வெளியீட்டுவிலையாக நூல் ஒன்றிற்கு ரூ.100/= ஆக (15 000/=) பதினைந்தாயிரமும் கொடுத்து உதவியுள்ளார்கள்.

காஞ்சிபுரம் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றப் புரவலர்களும், சென்னை கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றத்தின் சார்பில், அதன் தலைவர் சென்னை உயர்நீதிமன்ற ஓய்வு பெற்ற நீதிபதி மாண்பமை T. N. **சிங்காரவேலு M. A., B. L.,** அவர்களும், மேற்படி மன்றத்தின் பொருளாளர் உயர்திரு M. S. **ரெங்கையா** B.A. அவர்களும், இந்நூல் வெளியீட்டிற்கு ரூபாய் 10 000 (பத்தாயிரம்) அளித்துள்ளார்கள். தொழிலதிபர் சென்னை உயர்திரு A. **இராஜாமணி** அவர்கள் ரூ 10,000/= பத்தாயிரமும், செங்கை எம். ஜி ஆர். மாவட்டச் செங்குந்த மகாஜன சங்கத்தலைவர், அம்மையார் குப்பம் திருமிகு G. S. **துரைசாமி செங்குந்தர்** அவர்கள் ரூபாய் (15,000) பதினைந்தாயிரமும் முன்பணமாகக் கொடுத்து உதவினார்கள் தாராள மனம் கொண்ட அப்பெருமக்களின் பொருள் உதவியும் மற்றும் பல அன்பர்கள் பொருளுதவியும் ஒத்துழைப்பும் என்றும் எண்ணி நன்றி பாராட்டத்தக்கது.

இந்நூலினை வடஆர்க்காடு அம்பேத்கார் மாவட்டம், குடியேற்றம் நகரில் நடைபெற்ற 17ஆவது தென்னிந்திய செங்குந்தர் மாநில மாநாட்டில் மன்றப்புரவலர் சென்னை உயர்நீதிமன்ற ஓய்வு பெற்ற நீதிபதி மாண்பமை T. N. சிங்காரவேலு M.A., B.L., அவர்கள் வெளியிட, தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் டாக்டர் உயர்திரு. சி. பாலசுப்பிரமணியன் அவர்கள் முதற்பிரதியைப் பெற்றுக் கொண்டார்கள்.

இந்நூலுக்குச் சிறப்புமிக்க அணிந்துரையை அளித்துதவிய மாண்பமை T. N. சிங்காரவேலு M. A., B. L., அவர்களுக்கும், முகவுரை அளித்த முனைவர் திரு. சி. பாலசுப்பிரமணியன் அவர்களுக்கும், முன்னுரைவழங்கிய தென்னிந்திய செங்குந்த மகாஜன சங்கத்தலைவர் உத்தியோக ரத்னா உயர்திரு ஜெ. சுத்தானந்தம் அவர்கட்கும் இம்மன்றம் இதயம் கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறது.

எல்லாவற்றையும்விட அரிய பணி படி திருத்தலாகும். அப்பணியைத் திறம்பட மேற்கொண்ட உரையாசிரியர் புலவர். திரு. சரவண சதாசிவம் அவர்களுக்கும், சிறந்த முறையில் அச்சிட்டு உதவிய, அமுதம் அச்சக உரிமையாளர் சென்னை எம். ஜி. ஆர். நகர் **வெள்ளையாம்பட்டு திரு. சுந்தரம்** அவர்களுக்கும், அழகான முறையில் கட்டமைப்புச் செய்து கொடுத்த சென்னை உமாபதி பைண்டிங் ஒர்க்ஸ் உரிமையாளர் திரு. **உமாபதி** அவர்களுக்கும் மன்றத்தின் நன்றி உரியதாகும்.

இந்நூல் முழுமையாக வெளிவருவதற்கு இம் மன்றத்தின் செயலாளர், நல்லாசிரியர் **புலவர் திரு. ஆ. சித்தரவடிவேலு** அவர்கள் மேற்கொண்ட பணி பாராட்டுதலுக்கும், போற்றுதலுக்கும்உரியது. 1987ஆம் ஆண்டு மன்றம் தொடங்கியகாலந் தொட்டு, கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தரின் புகழ் பரப்பவும், அவருடைய நூல்கள் மீண்டும் வெளிவரவும், சமுதாயத்தினர் மேம்பாடுறவும் அவர்கள் தமிழாசிரியராகப் பணியாற்றிய காலத்தும், ஓய்வு பெற்ற காலத்தும் அயராது பாடுபட்டு வருபவர். தன்னலமற்ற அவர் தம் தொண்டு சிறக்க மன்றம் வாழ்த்துகிறது.

இப்பிரபந்தத்திரட்டு நன்கு வெளிவருதற்குத் தம்முடைய முழு ஒத்துழைப்பைத் தந்துதவிய,

திருவாளர்கள். நா. ப. தணிகையரசு
மு. சண்முகம் எம். ஏ., எம். எட்.,
ந. பாலசுப்பிரமணியம்
தா. சுப்பிரமணியம்
அ. சம்பந்தன்

ஆகிய பெருமக்களுக்கு மன்றச் சார்பில் நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

செங்குந்தர் பிரபந்தத் திரட்டு என்னும் இவ்வரிய நூலினைத் தாங்கள் பெற்றுப் படிப்பதுடன், எதிர்காலத் தலைமுறையினருக்கு இந்நூலின் பெருமைகளை எடுத்துக்கூறி, அவர்களை இந்நூல் நம் இனத்துக்குரிய ஒரு வைப்பு (பொக்கிஷம்) என எண்ணச் செய்வது அனைவருடைய கடமையுமாகும்.

செங்குந்தர் தம் மரபு, வரலாறு, ஒழுகலாறு, செய்த அரும் பெருஞ் செயல்கள் முதலியவற்றை விளக்கிக் கூறும் இந்நூல் வெளிவருவதற்குச் செங்குந்தப் படையோனாகிய முருகப் பெருமானுடைய திருவருளே துணையாகும். உயர்ந்த புகழுக்குக் காரணமான குல முதற்கடவுள் முருகப் பெருமானையும் நவவீரர்களையும் வணங்கி, அன்பர்கள் இந்நூலைப் பெற்றுப் படித்துப் பயன்பெறுவாராக என வேண்டுகின்றேன்.

காஞ்சிபுரம்
ஸ்ரீமுக, வைகாசி
1993 மே

இங்ஙனம்,
A. L. சுந்தரராஜன்
தலைவர்

கவிச் சக்கரவர்த்தி
# ஒட்டக்கூத்தர் மன்றம், காஞ்சிபுரம்.



திரு. A. L. சுந்தரராஜ், B.Sc.,
தலைவர்.

# உரையாசிரியர் உரை

திருமுருகன் துணைவரான நவவீரர் மரபினர் எனப்படும்
செங்குந்தர்களின் மீது, அவர்தம் ஒழுகலாறுகள், செய்த அருஞ்
செயல்கள், படைத்தலைமை ஏற்றுச் செய்த வீரச் செயல்கள்
போன்றவைகளைக் குறித்து அறிஞர் பெருமக்கள் பலர்.
பலகாலங்களில் இயற்றியருளிய நூல்களின் தொகுப்பாக உள்ள
**செங்குந்தர் பிரபந்தத் திரட்டு** என்னும் இந்த நூலின் பாடல்
களுக்கு உரைவிளக்கம் செய்யும் பெரும்பேறு, **திருக்குமரக்
கோட்டத்து முருகப் பெருமான்** திருவருளால் எளியேனுக்குக்
கிட்டியது.

இலக்கண இலக்கியங்களில் வல்ல அறிஞர் பெருமக்கள்
தம் அறிவின் முதிர்ச்சியினாலும், உலக அனுபவத்தினாலும்,
கண்டும் கேட்டும் உணர்ந்தும் இயற்றியருளிய உயர்ந்த பாடல்
களுக்கு உரையெழுத எனக்குக் கிடைத்த பெரும் பணியைப் பல
பிறவிகளில் செய்த புண்ணியப் பயன் என்று எண்ணி மகிழ்கின்
றேன். 'நூலின் கருத்து உரையாலே விளக்கம் பெறும்' என்பத
னால் மிகவும் சிந்தனை செய்து உரையெழுதியிருக்கின்றேன்.

செங்குந்தர் பிரபந்தத் திரட்டு எனப் பெயரிய இந்
நூலில் அடங்கிய பிரபந்தங்கள் தனித்தனிப் பகுதிகளாகவும்,
சில பிரபந்தங்கள் அடங்கிய தொகுப்பாகவும் பலவேறு சமயங்
களில் அச்சிடப்பட்டுள்ளன. 1911 ஆம் ஆண்டில் **'ஜாதி நூல்
கோவை'** என்ற பெயரில், கொடையுள்ளம் கொண்ட
பெருமக்கள் பலரது பொருளுதவியுடன் ஐயங்கார் குளம்
திரு. பொன்னுசாமி முதலியார் என்பவரால் அச்சிடப்
பட்டுள்ளது. இப்பெருமகனார் சைவ புராணிகராக
விளங்கியவரும, காஞ்சிப்புராண உரையாசிரியரும், சித்தாந்த
ஆசிரியராக விளங்கியவருமாகிய திரு. பொன். சண்முகனார்
அவர்களின் தந்தையார் ஆவர். பிற்காலத்தில் துறவு மேற்
கொண்டு பொன். குமாரசாமி அடிகள் என்னும் திருப்
பெயருடன் வாழ்ந்து, திருவள்ளுவர் செந்தமிழ்ப் பாடசாலை
என்று நிறுவிப் போதகாசிரியராகவும் விளங்கியவர்.

1926 ஆம் ஆண்டில் காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் அவர்கள் **'செங்குந்தர் பிரபந்தத் திரட்டு'** என்னும் பெயரில் இந்நூலைத் திருவாரூர் வள்ளல் திரு. தி. க. சபாபதி முதலியார் அவர்களைக் கொண்டு பதிப்பித்து வெளியிட்டுள்ளார். அந்தப் பதிப்பே இன்று உரையுடன் வெளிவரும் இந்த நூலுக்கு அடிப்படையாகக் கொள்ளப்பட்டது. இப் திப்பில் இல்லாத சில பகுதிகள் [செங்குந்தர் சரித்திரச்சுருக்கம், கங்கா பவானிக்கு இலட்சுமிதேவி சொல்லிய இலட்சணக் குறவஞ்சி, செங்குந்தர் சங்கப் பட்டயம் என்பன] 1911 ஆம் ஆண்டு பதிப்பில் காணப்படுகின்றன. எனவே, அந்தப் பிரபந்தங்கள் இப்பதிப்பில் சேர்க்கப்படவில்லை.

**செங்குந்தர் சரித்திரச் சுருக்கம்** என்னும் பகுதி கந்தபுராணப் பாடல்களை ஆதாரமாகக் கொண்டு எழுதப்பட்டு, கந்த புராணப் பாடல்கள் இடையிடையே சேர்க்கப் பட்டுள்ளன. **இலட்சணக் குறவஞ்சி** என்பது, திருமால் சிங்கன் என்னும் குறவனாகியும், திருமகள் சிங்கி என்னும் குறத்தியாகியும் வந்து பார்வதி தேவிக்குச் செங்குந்தர் வரலாறு கூறியதாக அமைந்துள்ளது. இந் நூலின் பலவிடங்களில் **'சீர்ப்பனப்பாகை வாழி'**, **'எழில் பனப்பாகை** நகரும் வாழ்க', 'புகழோங்கும் **பனப்பாகை**' எனவருகிறது இந்நூல் பனப்பாக் கத்தில் வாழ்ந்த செங்குந்தர் குலத் தோன்றல் திரு **முனியப்ப முதலியார்** என்பவரால் எழுதப்பட்டது என்பது, அந்நூலுக்கு எழுதப்பட்டுள்ள சிறப்புப் பாயிரத்தால் அறிய முடிகிறது.

**செங்குந்தர் பட்டயம்** உரை நடையில் எழுதப்பட்டுள்ளது. இதை எழுதியவர் இன்னார் என்பது அறிய இயலவில்லை.

**மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்**
**தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனரே'—**

என்ற புறப்பாடல் வரிகளுக்கு இயையப் புகழ் தரும் நூல்களை எழுதிய அவர்கள் மறைநதுவிட்டனா.

**உரையுடன் கூடிய இந்நூல் 19.6 ஆம் ஆண்டில் காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் பதிப்பித்து வெளியிட்ட நூலில் காணப் பட்ட முன்னுரை முதலியன எந்தவித மாற்றமும் இன்றி [96 பக்கங்கள்] இந்நூலின் முன்பகுதியில் சேர்க்கப் பட்டுள்ளன. இதில் அடங்கிய 'பதிப்பாளருரை' அரிய செய்தி கள் பலவற்றைக் கூறிச் செல்லுகிறது.**



இந்நூலுக்கு அடியேன் உரையெழுதி வருங்கால் மூலப் பாடல்களையும் உரையையும் முழுமையாகப் படித்துத் தேவை யான விளக்கங்களைக் கூறியும், பொருளை விளங்கவைத்தும், உரையினைத் திருத்தியும் செப்பம் செய்தவர், காஞ்சிபுரம் பச்சையபபன் பள்ளியில் எனக்குத் தமிழாசிரியராக விளங்கிய வரும், சித்தாநத சாத்திரங்கள், திருமுறைகள், திருமந்திரம், காஞ்சிப் புராணம் முதலிய பல அரிய நூல்களுக்குஉரைவிளக்கம் செய்தவரும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தாரால் முனைவர் பட்டம் வழங்கப் பெற்றவரும், ஆதீன கர்த்தர் களால் மதித்துப் பாராட்டப்படுகின்றவரும், வேறு பல சிறப்புக்களுக்குரியவரும் ஆகிய **முதுபெரும் புலவர், மகாவித்து வான், சித்தாந்தக் கலைமணி, திரு. சி. அருணை வடிவேல் முதலியார் அவர்கள்** ஆவார்கள். அப்பெருமகனாருடைய திருக்கரங்களால் இந்த உரை திருத்தம் பெற்று வருவது நாமெல்லாம் செய்த புண்ணியப் பயனாகும்.

சில பாடல்களுக்கு விளக்கமும் பொருள் முடிபும் காண இயலாமல் நான் தயங்கியபோது மகாவித்துவான் அவர்கள் மிக எளிமையாக அவைகளை விளக்கிப் பொருள் முடிபு காட்டிய திறம் அவருடைய நுண்மாண் நுழைபுலத்திற்குச் சான்றாக உள்ளது. ஸ்ரீ முனிவர் பதிப்பில் காணப்பட்ட சில பிழையான பாடங்களையும் திருத்திச் செம்மைப்படுத்தி உதவி னார்கள். அன்னாருக்கு நான் என்றும் நன்றி செலுத்தும் கடப்பாடு உடையேன்.

காஞ்சி நாகலிங்க முனிவர் பதிப்பிலும், பிற பதிப்புக் களிலும் 'ஈட்டி எழுபது' நூலுக்கு மட்டும் உரை உள்ளது. இவ்வுரை **கச்சிப் பிரதாபனார்** என்பவர் இயற்றிய பழைய உரை யாகும். இவர் மாதவச் சிவஞான சுவாமிகளின் மாணவராகிய இலக்கணம் சிதம்பரநாத முனிவருடைய மகனும் மாணவரு மாவர் அந்த உரையின் கீழ் உள்ள விளக்கமும் மேற்கோள் பாடல்களும் ஒவ்வொரு பதிப்பிலும் மாறுபடுகின்றன. மேற்கோள்கள் தேவைக்கு அதிகமாகவும், பாடல்கள் எந்த நூல்களில் உள்ளன என்பது குறிக்கப் படாமலும் உள்ளன. [இந்த உரையுடன் ஈட்டி எழுபது நூல் பலரால் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது] உரையும் சற்றுக் கடினமாக உள்ளது. பிற நூல்களுக்கு உரைவிளக்கம் இல்லை.

இந்தக் குறைகளைக் களைய வேண்டியும், மூலப் பாடல்களின் கருத்தைப் புரிந்து கொள்ளும் வகையிலும், எதிர்காலச் சந்ததியார்க்கு ஒரு கருத்துக் கருவூலமாக அமையும் வகையிலும் இந்நூலை உரையுடன் வெளியிடவேண்டும் என்று **காஞ்சிபுரம் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றத்தினர்** விரும்பினர். அவர்களுடைய விருப்பம் நிறைவேறும் வகையில் பாடல்களுக்குப் பொழிப்புரை எழுதியுள்ளேன் ஈட்டி எழுபது நூலுக்குப் பழைய உரையை ஆதாரமாகக் கொண்டும், பிறவற்றிற்குப் புதியதாகவும் உரை எழுதப்பட்டுள்ளது. சில விடங்களில் அருஞ்சொற்பொருள்களும், இன்றியமையாத இலக்கணக் குறிப்புக்களும், சொற்களைப் பிரித்துக் காட்டியும் எழுதப்பட்டுள்ளன.

உரையெழுதி வரும்போது சில இடர்ப்பாடுகளும் நேர்ந்தன. பாடல்கள் சிலவற்றில் செங்குந்தர் மரபில் மேற்கொள்ளப்பட்ட சில பழக்கங்கள் இடம் பெற்றுள்ளன. செங்குந்த இனத்தவர் தாம் ஒன்று கூடி ஒருபகுதியில் கட்டுப் பாட்டுடன் வாழ்ந்தபோது பின்பற்றிய அவ்வழக்கங்கள், காலப் போக்கினாலும், தொழில் வாணிகம் அலுவல் போன்ற பல காரணங்களால் பலவிடத்தும் விரவி வாழ்வதனாலும் இன்று நடைமுறையில் இல்லாமையாலும், அறியக்கூடாமலும் விளக்கம் கூறுவார் இன்றியும் உள்ளன. உதாரணமாக,

'நுகத்தூணைப் பாய்ச்சுவர் செங்குந்தரே'

'ஊட்டியில் ஈட்டியைப்பாய்ச்சுவர் செங்குந்தரே'

என்பன போன்றவைவிளங்கிக் கொள்ள இயலவில்லை

நூல்பற்றிய சில விளக்கங்கள் அவ்வந்நூலின் தொடக்கத்தில் கூறப்பட்டுள்ளன. 1911 ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பட்ட 'ஜாதிநூல் கோவை' என்ற நூல் ஏறக்குறைய உரை எழுதி முடியும் நிலையில், எனக்குக் கிடைத்தது. இது முன்பே கிடைத்திருப்பின் பல செய்திகளை எடுத்துச் சேர்த்திருக்கக் கூடும். இருப்பினும் அந்நூலின் சில செய்திகள் இதில் எடுத்துச் சேர்க்கப்பட்டுள்ளன.

திருக்கை வழக்கம், பிள்ளைத்தமிழ், தசாங்கம், கலித்துறை மாலை போன்ற நூல்கள் அருமையான நடைப் போக்கும் மிகுந்த சுவையும் கொண்டு விளங்குகின்றன. பிள்ளைத் தமிழ் நூலில் சில பருவங்களில் பாடல்கள் குறைந்து காணப்படுகின்றன. அவற்றின் காரணம் விளங்கவில்லை. திருவொற்றி



யூர்ச் செங்குந்த விநாயகர் மாலை என்னும் நூல் பல புராணச் செய்திகளைக் கூறிச் செல்லுகின்றது. பிற நூல்களும் ஒவ்வோர் வகையில் சிறப்பாக அமைந்துள்ளன.

செங்குந்தர் உபசுப்பிரமணிய கோத்திரத்தினர் என்று வழங்கப்படுவர். செங்குந்தர் முருகப் பெருமானோடும், வீரவாகு தேவர் முதலிய நவவீரர்களோடும் தொடர்புடையவராதல் பற்றி இத்திரட்டில் அமைந்துள்ள நூல்களில் கந்தபுராணச் செய்திகள் பல கூறப் பெறுகின்றன. முருகப் பெருமான், நவவீரர் முதலியோர் செயல்கள் செங்குந்தர் செயல்களாகவே கூறப்பெறுகின்றன.

இத்திரட்டில் உள்ள நூல்கள் வெவ்வேறு ஆசிரியர்களால் பலகாலங்களில் இயற்றப்பட்டிருப்பதனால், ஒரே செய்தி பல விடங்களில் காணப்படுகின்றது. அவ்வாறு வருவனவற்றிற்குச் சில இடங்களில் விளக்கமாகவும் சில இடங்களில் சுருக்கமாகவும் உரை எழுதப் பட்டுள்ளது. சில இடங்களில் அந்தச் செய்திகள் முன்பே கூறப்பட்ட இடங்கள் பற்றிக் குறிக்கப்பட்டுள்ளன.

உரையெழுதுங்கால் இதில் காணப்படும் கதைப்பகுதிகளுக்குத் தனியே விளக்கம் எழுதி **கதைப்பகுதி** எனச் சேர்க்க முடிவு செய்யப் பட்டது. ஆனால் படிப்பவர்கள் அந்த இடத்திலேயே விளங்கிக் கொள்ள எளிமையாக இருக்கும் பொருட்டு, உரையின் பின்னர் அவை அங்கேயே எழுதிச் சேர்க்கப்பட்டன.

இந்நூலுக்கு உரையெழுதுவதற்குத் தேவையான விளக்கங்கள் கந்த புராணம், பெரியபுராணம், விநாயகபுராணம், தேவாரம், திருவாசகம், நாலடியார், தனிப்பாடல் திரட்டு போன்றவைகளில் இருந்து மேற்கொள்ளப்பட்டன. அபிதான சிந்தாமணியில் இருந்து பல செய்திகள் எடுத்துச் சேர்க்கப் பட்டுள்ளன.

இந்நூலுக்கு உரையெழுதி வரும் போது, **செங்குந்தர் பெருமையை விளக்கும் வீரநாராயண விசயம், வீரசிங்காதன புராணம், வல்லான் காவியம், ஸ்ரீகந்தபுராணம், கந்த விரத விலாசம்** முதலிய நூல்கள் தனித் தனியே உரையுடன் அச்சிட்டு வெளிப்படுத்தப் படவேண்டும் என்றஎண்ணம் தோன்றியது. (வீரவாகுதேவரின் மகளும் முசுகுந்த மன்னனின் மனைவியுமான சித்திரவல்லி சந்தான மாங்கனியை உண்டு அதனால் பெற்றெடுத்த மகனுக்கு முசுகுந்தன் **அங்கிவன்மன்** என்று பெயரிட்டான் என்று கந்த

விரத விலாசம் என்ற நூல் கூறுகின்றது.) திருவருள் துணையும் தக்கவர்கள் முயற்சியும் இருப்பின் அவை நிறைவேறும்.

இந்தப் பிரபந்தத்திரட்டிற்குத் திருவருள் துணையினால் 'யானறி அளவையின்' ஒருவாறு உரையெழுதி நிறைவு செய்துள்ளேன் உரையெழுதத் தூண்டி ஊக்கப் படுத்தியவர்கள் மன்றத்தின் தலைவர் திரு ஏ எல் **சுந்தரராஜன் பி.எஸ்சி.**, மன்றச் செயலர் புலவர் **திரு ஆ சித்திரவடிவேலு**, **திரு. நா ப. தணிகையரசு, புலவர் திரு தா. சுப்ரமணியன்** ஆகியோர் ஆவர். இவர்களுக்கு என் நன்றி என்றும் உரியது.

'அறிதோறறியாமை கண்டற்றால்' என்ற திருவள்ளுவர் கூற்றுக்கு ஏற்ப இந்நூலுக்கு உரை எழுதிவரும்போது என் அறியாமையும் விளங்கியது உரை எழுதும் வாய்ப்பு அறிவு வளரவும் வழி வகுத்தது. இந்நூலுக்கு எழுதப்பட்டுள்ள உரைகளில் உள்ள நிறைகள் என்னை ஆளாக்கியவர்களைச் சாரும். குறைகள் இருப்பின் அது என்னைச் சாரும் என்று கூறிக் கொள்ளுகின்றேன் குறைகள் இருப்பின் அவை அடுத்துவரும் பதிப்புக்களில் திருத்திக்கொள்ளப்படும் எனவும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

**'நாயேனையும் இங்குஒரு பொருளாக நயந்துவந்து**
**நீயே நினைவின்றி ஆண்டுகொண்டாய்'**

என்னும் அபிராமிபட்டரின் வாக்கிற்கேற்ப, என்னை ஒரு பொருளாக எண்ணி இப்பெரும்பணியில் ஈடுபடுத்தியவர்களுக்கும், உதவியாக இருந்தவர்களுக்கும் என் பணிவான நன்றி என்றும் உரியது.

**'யாமோ தியகல் வியும்எம் அறிவும்**
**தாமே பெறவே லவர்தந் தது...'**

என்ற கந்தரனுபூதி அடிகளையும்,

**'என்னை நன்றாக இறைவன் படைத்தனன்**
**தன்னை நன்றாகத் தமிழ்செய்யு மாறே'**

என்ற திருமூலரின் திருமந்திரத்தையும் நினைந்து, காஞ்சிக் குமரகோட்டப் பெருமானுடைய திருவடி மலர்களை வணங்கி, இவ்வுரையை என் தாய் தந்தையர் திருவடிகளில் சமர்ப்பிக்கின்றேன்.

**ஸ்ரீமுக, வைகாசி**
**மே 1993**

பணிவார்ந்த,
**சரவண சதாசிவம்**



நீதி அரசர்
**திரு. T. N. சிங்காரவேலர்**
**புரவலர்.**



**திரு. M. S. ரங்கையா, B.A.,**
**புரவலர்.**

**கவிச் சக்கரவர்த்தி**

# ஒட்டக்கூத்தர் மன்றம், காஞ்சிபுரம்.



புலவர். ஆ. சித்திரவடிவேலு
செயலர்.



புலவர். சரவண. சதாசிவம்
உரையாசிரியர்.

# மதிப்புரை

மகாவித்துவான், முனைவர்,

*சி. அருணைவடிவேல் முதலியார், காஞ்சிபுரம்*

**'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்: சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்'**

என்னும் பொதுமறையின்படி மக்களாய்ப் பிறந்தோர் யாவரும் பிறப்பினால் ஒரு சமூகத்தினரேயாயினும் அவரவர் ஆற்றும் தொழில் வேறுபாட்டால் தமக்குள் வேறுபட்ட பல சமூகத்தவ ஆகின்றனர். எனவே, பிறப்புப்பற்றிச் சொல்லப் படுகின்ற **'மனித சமுதாயம்'** என்பது **பொது இனமும்,** தொழில் பற்றிச் சொல்லப்படுகின்ற **பல்வேறு சமூகங்கள் சிறப்பினங்களும்** ஆகின்றன. 'மக்கள்' எனப்படுவோர் யாவரும் இந்த இருவகை இனப்பற்றையும் உடையர் ஆதல் வேண்டும்.

'இனப்பற்று உடையராதல் வேண்டும்' என்றால், 'அது காரணமாக நடுவுநிலை திறம்பி ஒழுக வேண்டும் — என்பது கருத்தன்று; 'இவர் யாரோ, எவரோ, இவரைப்பற்றி நமக்கென்ன கவலை' என அயலவராக எண்ணிப் புறக்கணிக்காமல் 'இவர் நம்மவர்' என ஒருவகை அன்பும், ஆர்வமும் உடையவராய் இருத்தல் வேண்டும்' என்பதுதான் கருத்து.

'மக்களாய்ப் பிறந்தோர் யாவரும் ஓரினத்தவரே' என மதிக்கும் மதிப்பே **'மனிதாபிமானம்'** என்றும், மனித சமுதாயத்துள் வேறுபட்ட பல சமூகப் பற்றே **இனப் பற்று'** என்றும் சொல்லப்படுகின்றன.

**திருவள்ளுவர் மனிதாபிமானத்தை, 'மக்கட்பண்பு' என்றும், இனப் பற்றை, 'சுற்றம் தழால்' என்றும் குறிப்பிடுகின்றார்.**

சிவமயம்

முருகக்கடவுள் துணை

குலோத்துங்க சோழன் தொகுத்த

# களிப் பொருபது

மூலமும் பொழிப்புரையும்

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் ஈட்டி எழுபது என்னும் பிரபந்தம் பாடத் தங்கள் தலைகளை அரிந்து சிரச்சிங்காதனம் அமைத்த செங்குந்தத் தலைவர்களுடைய தலைகளும் உடல்களும் மீண்டும் முன்போல் தம்மில் சேருமாறு அவர் 'எழுப்பெழுபது' என்னும் நூலைப் பாடினார். அதனால் உடலில் உயிர்பெற்று எழுந்த அதிசயத்தைக் கண்டவர் வியந்து பாடிய பத்துப்பாடலின் தொகுப்பு இக் 'களிப்பொருபது' ஆகும். இதனைக் குலோத்துங்கச் சோழன் தொகுத்ததாகச் சொல்லப்படுகிறது.

அசரீரி

**88 இந்தக் கைக் கோளர் இசைக்கெண் கணன் படைத்த**
**எந்தக் கைக் கோளர் இணை ஆவாரே — அந்திப்**
**பிறையணிகைக் கோளனுருப் பெற்றவன்பால் வைகும்**
**நிறையணிகைக் கோளரே நேர்.**

இதன் பொருள் :

ஒட்டக்கூத்தர் இருந்து பிரபந்தம் பாடுதற்குத் தங்கள் தலைகளை வெட்டிக் கொடுத்து, பின்பு அவரால் எழுப்பப்பட்ட இந்த, 'கைக்கோளர்' எனப்படும் செங்குந்தருடைய புகழுக்கு எட்டுக் கண்களை உடைய பிரமதேவனால் படைக்கப்பட்ட எந்தச் செயலைக் கொண்டவர் புகழும் இணை ஆக மாட்டா அந்தியில் தோன்றும் பிறைச்சந்திரனைச் சடையில் தரித்த சிவபெருமானது உருவத்தைப் பெற்று அவனருகில் இருக்கும் நிறைந்த அழகுடைய உருத்திரரே இவர்கட்குப் புகழால் இணையாவார்கள். பிறர் ஒருவரும் இணையாகார் என்பதாம்.

*[உருப் பெற்றவர் என்பது, சாரூப, சாலோக, சாமீப, சாயுச்சியம் என்னும் நான்கு நிலைகளில் 'சிவ சாரூபம்' பெற்றவர்களை.]* 1

ஔவையார்

**89 மூவுலகை யுங்கடந்து மூதண்டப் பித்திகையை**
**மேவிஅதற் கப்பாலும் மின்னியதே - பூவிலென்றும்**
**மங்காத நூல்வேண்டி மாண்கூத்தற் கிட்டசிரச்**
**சிங்கா தனத்தலைவர் சீர்.**

*[இ.ள்] பூவுலகில் என்றும் மறையாமல் நிலைத்துநிற்கும் தன்மையை உடைய ஒரு நூல் [ஈட்டி எழுபது] ஒட்டக்கூத்தரால் இயற்றித் தரப்படல் வேண்டும் என்பதற்காக, பெருமையை உடைய அவருக்குச் சிரச்சிங்காதனம் இட்ட செங்குந்தத் தலைவர்களுடைய புகழ்ஒளி, மூன்று உலகங்களையும் கடந்துபோய், அண்டங்களினுடைய மேல் முகட்டைப் பொருந்தி நின்று, அதற்கு அப்பாலும் போய்ப் பிரகாசித்தது.*

*[பித்திகை - சுவர்; பூவில்- பூவுலகத்தில்; மாண்- பெருமை]* 2

கம்பர்

**90 கந்தழியென்(று) ஆன்றோர்கள் கண்டு நிதம்பரவும்**
**எந்தை முருகன் இளையவராம் - சந்ததியில்**
**வந்துமகிழ் செங்குந்தர் வாய்மைதனை என்சொல்கேன்**
**செந்திருமால் செல்வர்களே தேர்ந்து.**

*[இ.ள்] திருமாலால் புரக்கப்படும் செல்வக்குடியில் தோன்றியவர்களே! ஆன்றோர்கள் 'கந்தழி' எனச் சொல்லிப் புகழும் கடவுள் கந்தனாகிய இவனே என்று அறிவுடையவர்கள் நாள்தோறும் கண்டு வணங்கித் துதிக்கின்ற, எம்தந்தையாகியமுருகப் பெருமானுக்குஇளையவராகிய வீரவாகுதேவர் முதலியநவவீரர்களுடைய மரபில் வந்து தோன்றி மகிழ்ந்து, திருச்செங்குந்தப் படையைக் கையில் தரித்த செங்குந்தர்களுடைய, சொல் மாறுபடாத தன்மையினை ஆராய்ந்து, என்னவென்று சொல்லிப் புகழுவேன்!*

*[தொல்காப்பியர் 'கந்தழி' எனக்கூறியது கந்தனைத்தான் என்பது இதில் உள்ள நயம்.]* 3



புகழேந்தி

**91 விண்முகத்தோர் பூமாரி வீசியதும் ஓர்வியப்போ**
**மண்முகத்தே செங்குந்தர் மாய்சிரங்கள் - எண்முகத்தும்**
**சிந்தியதத் தம்முடலைச் சேர்ந்தொட்டிக் கொண்டொலித்து**
**வந்தவிதம் எண்ணவருங் கால்.**

*(இ.ள்) இந்த மண்ணுலகத்தில் செங்குந்தத் தலைவர்கள் சிரச்சிங்காதனம் அமைக்க அரிந்து வீசிய தலைகள் எட்டுத்திசைகளிலும் சிதறிக் கிடந்த தங்கள் தங்கள் உடல்களோடு சேர்ந்து பொருந்தி உயிர்பெற்று மீண்டும் பேரொலியோடு வந்த தன்மையை எண்ணும்போது உண்டான வியப்பே பெருவியப்பு. அதைக்கண்டு தேவலோகத்தில் இருந்தவர்கள் மலர்மழை பெய்தது அதற்கு ஈடான ஒரு வியப்புக்குரிய செயலாகுமா!* 4

அம்பிகாபதி

**92 குந்தர் பெருமிதத்தைக் கூறுவதென் பார்த்திபர்காள்**
**சந்தத் தமிழ்க்கடலார் தாம்போற்ற - விந்தைத்**
**தலைதந்தார் பாடலுக்குத் தாமென்றும் பூவில்**
**கலைதந்தார் மக்களுக்குக் காண்.**

*இ.ள்) சந்தப்பாடல்கள் என்னும் தமிழ்க்கடலுக்கு உரியவர்களான கவிபாடுவதில் வல்ல புலவர்கள் மகிழ்ந்து போற்றுமாறு, ஈட்டி எழுபது என்னும் நூலைப் பெற, இதுவரை இல்லாத புதுமையாகத் தம் தலைகளையே செங்குந்தர்கள் அரிந்து கொடுத்தார்கள். அதுபோன்றே பூமியில் உயர்ந்த மானத்தைக் காப்பதற்கு மக்களுக்கு ஆடை நெய்து கொடுத்தார்கள். மன்னர்களே, இப்படிப்பட்ட சிறப்பினை உடைய செங்குந்தர்களின் பெருமைகளை, எப்படி அளவிட்டுக் கூறுவது!* 5

சோழன்

**93 ஏதென் றெடுத்துரைக்கேன் என்னாசான் தன்கவியைப்**
**போதுள் இருந்துவளர் பொன்மாதே - ஈதலவா**
**சாகாத கல்வியென்று சான்றோர்கள் சாற்றிவைத்த**
**ஏகாந்தச் சொல்லாகும் எண்.**

*[இ.ள்] செந்தாமரை மலரில் இருந்து வாழும் திருமகளே, என் குருநாதராகிய ஒட்டக்கூத்தர் அருளிய நூலின் சிறப்பை நான்*

என்ன' என்று எடுத்துச் சொல்லுவேன்! சான்றோர்களாய் உள்ளோர், 'இஃது அன்றோ உலகில் என்றும் அழியாத புகழுடன் நிலைத்து நிற்கும் நூல்' என்று சொல்லி வைத்த ஒரு தனிப்புகழையுடைய நூல் அது என்று அறிவாயாக. 6

பாண்டியன்

94 அன்றும் கவிநலத்தை ஆய்ந்தறிந்தேன் பாண்டியிலே
இன்றும் கவிநலத்தை ஈங்கறிந்தேன் - என்றும்தான்
கூத்தற் கெதிருண்டோ கூறும் அவனிதனில்
பார்த்திபரே காண்மின் படித்து.

[இ.ள்] பாண்டிய நாட்டில் பல சந்தர்ப்பங்களில் பல புலவர்கள் பாடிய கவிகளை அவர்கள் பாடியபோது, ஆராய்ந்து அக்கவிகளின் சிறப்பினை அன்று உணர்ந்தேன். இன்று சோழ நாட்டில் பாடப்பட்ட ஒட்டக்கூத்தருடைய நூலின்மூலம் அச்சிறப்பினை அறிந்தேன். இந்த உலகத்தில் கவிபாடுவதற்கு ஒட்டக்கூத்தருக்கு இணையான புலவர் ஒருவரும் இல்லை என்பதை, அரசர்களே! நீவிர் படித்து உணர்ந்துகொள்ளுங்கள்! 7

சேரன்

95 விண்கண்ட தேவரெலாம் வீற்றிருந்தார் ஈங்கென்று
கண்கண்ட மாமுனிவர் காட்டினார் - பண்கொண்ட
கூத்தன் கவிக்குக் குவிந்ததலை ஆசனத்தைப்
பார்த்திடவே நன்றாய்ப் பதிந்து.

[இ.ள்] புகழுடைய ஒட்டக்கூத்தர் தங்கள் மரபினர்மீது உயர்ந்த இசையோடு கூடிய கவிபாடவேண்டும் என்பதற்காக, வெட்டிக் குவிக்கப்பட்ட தலைகளினால் அமைக்கப்பட்ட சிரச்சிங்காதனத்தின் அழகைக் காண்பதற்காகவிண்ணுலகத்தில் உள்ள தேவர்களெல்லாம் இங்கே நன்றாகப் பொருந்தி அமர்ந் திருந்ததைப் பாருங்கள் என்று தங்கள் கண்களால் கண்டு மகிழ்ந்த சிறப்புடைய முனிவர்கள் ஏனையோர்க்கு விளங்கக் காட்டினார்கள். 8



அஞ்சனாட்சி

96 வாழிசக்ர வர்த்திதன்பேர் வாய்ந்தஒட்டக் கூத்தன்பார்
ஏழினொடும் ஏழுமதன் மேலுநிலை - சூழச்செய்
ஈட்டி எழுபதெனும் இந்நூற்கொப் பின்மைகண்டீர்
நாட்டினுயர் வாணர்களே நன்கு.

[இ.ள்] நாட்டில் வாழும் உயர்ந்தோர்களே, ஏழுடன் ஏழு என்று சொல்லப்படுகின்ற பதினான்கு உலகங்களிலும், அதற்கு அப்பாலும் நிலைபெற்றுப் புகழைப் பரப்புகின்ற ஈட்டி எழுபது என்னும் இந்த நூலுக்கு வேறு எந்த நூலும் ஒப்பில்லை என்பதை நன்கு உணர்ந்து கொள்ளுங்கள். அவ்வாறு புகழ் உடைய இந்த நூலை இயற்றிய கவிச் சக்கர வர்த்தி என்னும் பட்டப்பெயர் பெற்ற, ஒட்டக்கூத்தர் நெடுநாள் நிலைத்து வாழ்வாராக! 9

சைவாசாரியர்

97 வாழிஒட்டக் கூத்தன்! வகைவந்தார் தாம்வாழி!
வாழிமன்னன் எந்நாளும்! வையகத்தில் - வாழி
கொலைகளவு கள்காமம் கோள்விலகி மாக்கள்
உலைவில்லா இன்பத் துகந்து.

[இ.ள்] (ஈட்டி எழுபது, எழுப்பெழுபது என்னும் சிறந்த நூல்களைப் பாடிய) கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் என்றும் வாழ்வாராக! அக்கூத்தர் மரபில் தோன்றியவர்கள் வாழ்வார்களாக! உலகை ஆளுகின்ற அரசன் என்றும் வாழ்வானாக! இவ்வுலகில் வாழும் மக்கள் கொலைசெய்தல், களவாடல் கள்ளுண்டல், காமங் கொள்ளல் முதலிய குற்றங்களில் இருந்து விலகி, நிறைவான இன்பத்தை அடைந்து எந்நாளும் வாழ்வாராக! 10

**களிப்பொருபது**
**மூலமும் உரையும் முற்றிற்று.**



**'அரம்போலும் கூர்மைய ரேனும், மரம்போல்வர்**
**மக்கட் பண் பில்லா தவர்.'**

**'காக்கை கரவா கரைந்துண்ணும், ஆக்கமும்**
**அன்னநீ ரார்க்கே உள'**

என்னும் குறள்கள் காணத் தக்கன.

**'பண்பெனப் படுவது பாடறிந் தொழுகல்'**

என்னும் கலித்தொகை அடியும் மனிதாபிமானத்தையே குறித்தது.

பொது இனப் பற்றாகிய மனிதாபிமானத்தைப் புறக்கணித்து தாம் தாம் பிறந்த சிறப்பு இனப் பற்றை மட்டும் கொள்ளுகின்ற பொழுதுதான் இனப் பற்று ஒரு குற்றமாகக் கருதப்படுகின்றது. மனிதாபிமானத்தைப் புறக்கணிக்காத இனப் பற்று சமூக முன்னேற்றத்திற்குரிய நற்பண்பாகவே மதிக்கப்படும். இத்தகைய நற்பண்பு உடையோரைப் பெற்றுள்ள சமூகம் முன்னேற்றம் அடையத் தடையில்லை.

இத்தகைய இனப் பற்றை உறுதி செய்யும் வகையில் மக்கள் தம் தம் சமூகத்தை உயர்த்திக் கூறுவதில் தவறில்லை. அவ்வாறு கூறும் கூற்றுக்கள் **'தன்னம்பிக்கை'** எனப்படுமேயன்றி, **'தற்பெருமை'** எனப்படாது. ஏனெனில், தம் இனத்தை உயர்த்திக் கூறும் பொழுதும் அவர்கள் மனிதாபிமானத்தை மறக்கவில்லை.

இத்தகைய கண்ணோட்டத்தோடு நாம் இலக்கிய உலகை நோக்கும்பொழுது தமிழில் சிற்றிலக்கிய வளர்ச்சிக் காலத்தில் செங்குந்த மரபின் உயர்வை விளக்குவதையே பொருளாகக் கொண்ட இலக்கியங்கள் பலவாக இருத்தல் நமக்கு வியப்பைத் தருகின்றது. **செங்குந்த மரபைத் தவிர வேறு எந்த ஒரு மரபிற்கும் இந்தஅளவான சமூகச் சிறப்பிலக்கியம் இருப்பதாகத் தெரியவில்லை.**

கம்பர் பாடியனவாகச் சொல்லப்படுகின்ற **'ஏரெழுபது. திருக்கைவழக்கம்'** — என்னும் இரண்டு இலக்கியங்கள் வேளாண் புகழ்ச்சி இலக்கியங்களாக உள்ளன. எனினும அவை, 'இரண்டு' என்னும் அளவிலே நிற்கின்றன.



**'தொண்டை மண்டல சதகம்'** போன்ற மண்டல சதகங்களில் வேளாளர் சிறப்புக்கள் சொல்லப்படுகின்றன. வேறு புராண இலக்கியங்களிலும் **குலப் புகழ்ச்சி** இடம் பெற்றுள்ளது. எனினும் அவையெல்லாம் ஒரு குறிப்பிட்ட குலப் புகழ்ச்சி இலக்கியங்களாக இல்லை.

இவ்வாறு செங்குந்த மரபின் சிறப்பைக் கூறும் பிரபந்தங்கள் பல சிற்றிலக்கியக் காலத்தில் புலவர் பலரால் இயற்றப் பட்டு வழங்கின. அவை அனைத்தையும் ஒருங்கு திரட்டி வெளியிடும் நன் முயற்சி ஒரு சமயம் தோன்றி அது வெற்றியும் பெற்றது. அத்தகைய நன்முயற்சியை மேற்கொண்டு வெற்றி பெற்றவர் **காஞ்சி வண்ணக் களஞ்சியம் நாகலிங்க முனிவர்** என்பது குறிப்பிடத் தக்கது.

'முனிவர்' என்பதனால் 'இவர் துறவர்' என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை. **'வண்ணக் களஞ்சியம்'** என்னும் பட்டப் பெயரால், இவரது கவியியற்றும் திறம் நன்கு விளங்கும். இவர் குமரகோட்டப் பெருமான்மீது பாடிய வண்ணங்கள் அடங்கிய புத்தகத்தை நான் பார்த்திருக்கின்றேன். இத்தகைய கல்விச் சிறப்பும் ஒழுக்க மேன்மையும் உடைய இவர், **'ஆன்றவிந் தடங்கிய சான்றோர்'** — என்பதற்கு ஏற்ப அடக்கம் மிக்கவராயும் இருந்தார். இவரது மாண்பு காரணமாக நல்லறிஞர் பலர் இவருடன் நட்புக் கொண்டிருந்தனர். எனது இளமைப் பருவத்தில் நான் இவரோடு பழகியிருக்கின்றேன்.

முனிவரது மரபும் செங்குந்த மரபுதான். அதனால் இவர் தம்மைத் தோற்றுவித்து உருவாக்கிய மரபிற்குத் தாம் செய்யும் நன்றிக்கடனாகத் தம் மரபினைப் புகழ்ந்து கூறும் பிரபந்தங்களை ஒருங்கு திரட்டி அச்சேற்றி வெளியிடுதலை மேற்கொண்டு அச்செயலை முடித்திருக்கலாம். இவர் எடுத்த முயற்சி நிறைவு பெறமுன்வந்துபொருளுதவிசெய்தபெருமக்களைமுனிவரவர்கள் தமது **பதிப்பாளர் உரையில்** குறித்திருக்கின்றார். **'செங்குந்தர் பிரபந்தத் திரட்டு'** எனப் பெயரிடப்பட்ட இத்திரட்டில் அடங்கியுள்ள பிரபந்தங்கள்— 15. கண்ணிகளாய் அமைந்த பிரபந்தங்கள் இரண்டு. கண்ணிகளை ஒரு பாடலாக வைத்து அனைத்தையும் எண்ணிப் பார்க்கில் இத்திரட்டில் உள்ள பாடல்கள் 700 — க்கும் மேற்பட்டனவாகும்.

இவைகளை அருள்திரு. முனிவர் அவர்கள் நல்ல முறையில் பதிப்பித்து 1926 ஆம் ஆண்டு வெளியிட்டார். அவரிடத்தில் நன்மதிப்பும், நட்பும் கொண்டிருந்த காரணத்தால் சிறந்த அறிஞர் பலர் பாராட்டுரைகளுடன் அரிய பல ஆராய்ச்சிகள் நிறைந்த மதிப்புரைகளை அக்காலத்தில் வழங்கியிருப்பது இத்திரட்டிற்குக் கூடுதல் சிறப்பாய் உள்ளது.

இதன்கண் உள்ள பல பிரபந்தங்களை இயற்றிய ஆசிரியர்களும், இத்திரட்டிற்கு மதிப்புரை வழங்கியவர்களுள் பெரும்பாலோரும் செங்குந்த மரபல்லாத பிற மரபினராகவேயிருத்தல் இங்குச் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. எடுத்துக்காட்டாக அக்காலத்தில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப்பேராசிரியராய் இருந்த **திரு கா.நமச்சிவாய முதலியார்** அவர்கள், ஆராயச்சி வல்லுநர் **திரு மு. இராகவையங்கார்** அவர்கள், காஞ்சிபுரம் தழுவக் குழைந்தான் மடம், **கல்வெட்டு அறிஞர் திரு. சுப்பிரமணிய தேசிகர்** அவர்கள் முதலியோரைக் குறிப்பிடலாம். திரு. தேசிகர் அவர்கள் செங்குந்தர் சிறப்புக்கள் தமிழ்நாட்டுக் கல்வெட்டுக்களில் காணப்படுதலைக் குறித்திருக்கின்றார்.

தமிழில் முதல் முதலாக **'மொழி நூல்'** எழுதி அக்காலத்து அரசியலாரது பாராட்டினைப்பெற்ற **திருமாகறல் கார்த்திகேய முதலியார்** அவர்கள் தமது சிறப்புரையை **'செங்குந்தர் மரபு விளக்கம்'** என்னும் ஒரு பிரபந்தமாகவே ஆக்கி அளித்துள்ளார்; அந்தப் பிரபந்தமும் இத்திரட்டில் சேர்க்கப்பட்டுள்ளது. இவையேயன்றி வடமொழி வல்லவர்களும், ஆங்கில மேதைகளும் வழங்கியுள்ள கருத்துரைகளும் இத்திரட்டின் முற்பதிப்பைச் சிறப்பிக்கின்றன.

இவையெல்லாம் அருள்திரு முனிவர் அவர்களது பெருந்தகைமை காரணமாகவே அமைந்தனவாகும்.

முற்காலத்து அறிவுக் கருவூலங்களாகிய இவைகளை இப்பதிப்பிலும் முதற்கண் சேர்க்கப்பட்டிருத்தல் மிகுந்த பாராட்டுக்கு உரியது.

முனிவரது பெருமுயற்சியின் பயனாக 1926 ஆம் ஆண்டில் வெளிவந்த இத்திரட்டு நூல் இதுபொழுது காஞ்சிபுரம் ஒட்டக்கூத்தர் மன்றத்தினரது நன்முயற்சியால் மீண்டும் வெளிவருகின்றது.



முதற் பதிப்பிற்கு வேறாக இப்பதிப்புப் பெற்றுள்ள ஒரு சிறப்பு, அனைத்துப் பிரபந்தங்களும் சுருக்கமான பொழிப்புரையோடு கூடியதேயாகும். பொழிப்புரையாசிரியர் சைவநன்மணி புலவர். திரு. **சரவண சதாசிவம் M. A M Ed**, அவர்கள் காஞ்சிபுரம் நகராட்சி மேல் நிலைப் பள்ளியின் உதவித் தலைமையாசிரியராகப் பணியாற்றுபவர். காஞ்சி ஸ்ரீகாமகோடி பீடம் **ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்** அவர்களால் **சைவநன்மணி** என்று பட்டம் வழங்கப் பெற்றவர். சமயத்துறையில் ஈடுபாடும், சொற்பொழிவாற்றும் திறமையும் பெற்றவர். கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றத்தின் துணைச் செயலராகவும் பணியாற்றுபவர். 700க்கும் மேற்பட்ட பாடல்களுக்கு உரை காண்பது என்பது ஓர் எளிதான செயலன்று. உரையெழுதியதுமட்டுமன்று; வேறு பல செயல்களிலும் இப்பதிப்பில் அவர் பங்குகொண்டுள்ளார். எனவே அவரது உழைப்பைப் பாராட்டுதல் மட்டுமன்று; அவருக்கு நன்றி செலுத்தும் கடமையும் மன்றத்தார்க்கும், மற்றவர்கட்கும் உண்டு.

காஞ்சிபுரம் ஒட்டக்கூத்தர் மன்றத்தினருடன் எனக்கு உள்ள தொடர்பு காரணமாக முன்பு **தக்கயாகப் பரணிக்கு** ஒரு பொழிப்புரை எழுதித் தந்தேன். அதனை அவர்கள் சிறப்பாக வெளியிட்டு, எனக்குப் பாராட்டும், பரிசும் வழங்கினார்கள்.

**குலோத்துங்கன் பிள்ளைத் தமிழ்க்கும்** ஒரு பொழிப்புரை எழுதிக் கொடுத்துள்ளேன். அதுவும் உரிய காலத்தில் வெளிவருதல் கூடும்.

இம்முறையில் இத்திரட்டின் உரையில் நான் செய்ய விரும்பும் மாற்றம், கூட்டல், குறைத்தல் முதலியவைகளைச் செய்யும் உரிமையை எனக்கு இம்மன்றத்தினர் அளித்தார்கள். அதனை நான் நல்லதொரு பணியாகவே ஏற்று என்னால் இயன்றவைகளைச் செய்துள்ளேன். இந்த வாய்ப்பை எனக்கு அளித்தமைக்கு காஞ்சிபுரம் ஒட்டக் கூத்தர் மன்றத்தார்க்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இத்திரட்டில் உள்ள பிரபந்தங்களையும், இவற்றின் உரைகளையும் நான் முழுமையாகப் படித்துப் பார்த்த நிலையில் எத்தனையோ புதிய பொருள்களை அறிந்து கொள்ள முடிந்தது அதுபற்றிக் கூறும் பொழுது ஒன்றிரண்டைக் குறிப்பிட வேண்டியுள்ளது.

இதில் உள்ள பிரபந்தங்களில் பழைய மரபாக வரும் கதைகள் பல குறிப்பிடப்படுகின்றன. அவைகளில் சிலவற்றைத்

தெளிவாக அறிந்துகொள்ள வாய்ப்பில்லை. காரணம் அவை யெல்லாம் குறிப்பிட்ட ஒரு சமூகத்திற்குள்ளே வழங்கிவந்தமையும், அவைகளை அறிந்த பெரியோர்கள் பலர், இப்பொழுது இல்லாமையுமேயாகும்.

அறுபத்து மூவர் நாயன்மார்களில் பலருக்கு அவர்களுடைய பிறந்த இனம் சொல்லப்பட்டுள்ளன. ஒரு சிலர்க்கு அது சொல்லப்படவில்லை. சொல்லப்படாதவர்களுடைய வரலாறு **'மரபறியாக் கதைகள்'** எனக் குறிக்கப்படுகின்றன. ஆயினும் இத்திரட்டில் உள்ள பிரபந்தங்களில் சில, மரபு அறியப்படாத நாயன்மார்களை, **செங்குந்த மரபினர்** எனக் கூறுகின்றன.

அவையேயன்றிச் சைவ சந்தான குரவர், மற்றும் சிலர் மரபு அறியப்பட்டவராக எங்கும் சொல்லப்பட்டவர்களில் சிலரையும் அந்தப் பிரபந்தங்கள், 'செங்குந்த மரபினர்' எனக் கூறுகின்றன. இவை அறிஞர்கள் ஆராயத்தக்கன.

இனித் தலையாய செய்திகள் சிலவும் ஆராயத் தக்கனவாய் உள்ளன. அவை 'ஒட்டக் கூத்தர்' அப்பெயரைப் பெற்றதற்குக் கூறப்படும் காரணம், திருக்கை வழக்கப் பிரபந்த ஆசிரியராகக் குறிக்கப் பட்டுள்ளவரைப் பற்றிய செய்தி, இவை போன்றனவாகும்

மற்றொன்றையும் இங்குக் கூற வேண்டியுள்ளது. இதில் அடங்கிய பிரபந்தங்களில், **'சேனைத் தலைவர் மரபு விளக்கச் சூறாவளி'** என்பது ஒன்று. இஃது ஒரு மறுப்பு நூல். இதனால் மறுக்கப்பட்டது, **'சேனைத் தலைவர் மரபு விளக்கம்'**— என்னும் பிரபந்தம். அஃது இதில் உள்ள பிரபந்தங்களுக்கெல்லாம் முரணானதாகத் தெரிகின்றது. மறுப்பு நூலை வெளியிட்ட அருள் திரு முனிவர் அவர்கள், மறுக்கப்பட்ட நூலை ஏனோ, இத்திரட்டில் சேர்க்காமல் விட்டுவிட்டார்; மறுக்கப்பட்ட நூலைப் பார்த்தால்தான் மறுப்பு நூலின் சிறப்பும் விளங்கும். அந்த ஒரு வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது.

இத்திரட்டில் உள்ள பிரபந்தங்கள் குறிப்பிட்ட ஒரு சமூகத்தைப் பற்றியன என்றாலும் தமிழைப் பற்றியும், வேறு பல செய்திகளையும் இவை வாயிலாக அறிந்துகொள்ள வாய்ப்பு உள்ளது.

எனவே, இத்திரட்டினைத் தமிழ் ஆர்வம் உள்ள அனைவரும் பெற்றுப் படித்தல் நலம் பயக்கும். எல்லாவற்றிற்கும் இறையருள் துணை செய்வதாக. நலம்.



# அணிந்துரை


***நீதியரசர் திரு* T. N. *சிங்காரவேலு* M. A. B. L,**

முன்னாள் உயர்நீதிமன்ற நீதிபதி. சென்னை.


காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் 1926 ஆம் ஆண்டு பதிப்பித்து வெளியிட்டு, இப்போது காஞ்சிபுரம் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றம் பாடல்களுக்குச் சிறந்த முறையில் பொழிப்புரை எழுதி வெளியிடும் 'செங்குந்தர் பிரபந்தத் திரட்டு' என்னும் செந்தமிழ்ப் பனுவலைப் பார்க்கவும், படிக்கவும் வாய்ப்புக் கிட்டியது. நவவீரர்களின் வழித் தோன்றல்களாகிய செங்குந்த மரபினரின்வரலாற்றையும், ஒழுகலாறுகளையும், கலை, நாகரீகம், பண்பாடு முதலியவற்றையும் வகுத்தும் தொகுத்தும் விரித்தும்கூறும் சிறப்புடையவை இச்சிற்றிலக்கியங்கள்,

ஈட்டி எழுபது உட்படப் பதினான்கு சிற்றிலக்கியங்களுக்கும் அவற்றின் உருவாக்கங்களுக்கும் ஈட்டி எழுபது மிகப் பெரிய உந்து சக்தியாக விளங்கியிருக்கலாம் ஏனெனில் ஒவ்வொரு சிற்றிலக்கியத்திலும ஈட்டி எழுபதின் கருத்துச் சாயல் பளிச்சிடுகிறது.

செங்குந்தர் பெருமையைக் கூறும் ஒவ்வொரு சிற்றிலக்கியமும் வடிவத்தாலும், உள்ளடக்கத்தாலும் ஒவ்வொரு வகையின. ஒரு கதம்ப மாலை கண்ணுக்கினிமை தருவதுபோல் பல இலக்கிய வகைகள் செங்குந்தரின் சீரையும் சிறப்பையும் கூறிப் பயில்வார்க்கு இனிமை அளிக்கின்றன.

ஈட்டி எழுபது, எழுப்பெழுபது, களிப்பொருபது என எண்ணிக்கை வகையிலும், பிள்ளைத் தமிழ் வகையிலும், தசாங்கம் என உறுப்பு வகையிலும், கலித்துறை அந்தாதி என

யாப்பு வகையிலும், ஊசல் வகையிலுமாகப் பற்பல வடிவங்களில் செங்குந்தரின் பெருமை வெளிபபடுகிறது. செங்குந்தரின் திறமும் செந்தமிழ்த் தரமும் ஒருசேர வெளிப்பட்டு நம்மை இன்பக் கடலில் ஆழ்த்துகின்றன. இப் பிரபந்தத் திரட்டு நமக்கு இரு பெரும் பயனைத் தருகின்றது.

ஒன்று, ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் வரலாறு நமக்குக் கிடைக்கிறது. இரண்டு தமிழுக்குப் புதிய இலக்கியவடிவம் அல்லது இலக்கியப் பாடுபொருள் கிடைக்கிறது.

அக இலக்கியம் புற இலக்கியம் என்பதுபோல், நீதி இலக்கியம் பக்தி இலக்கியம் என்பதுபோல், இத்தகைய சாதி வரலாறு கூறும் பாடல்களைச் சாதி வரலாற்று இலக்கியம் அல்லது சமூக மரபு இலக்கியம் எனக் கூறலாம். தமிழ் இலக்கியத்திற்கு இஃதொரு புது வரவுதானே!

இத்தகைய சாதி வரலாறுகளைக் கூறும் இலக்கியங்கள் அதன் கருத்துகள் முற்றிலும் உண்மையாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. தல புராணங்கள் எவ்வாறு முற்றிலும் வரலாற்று உண்மையாக அமையாமல் புராணப் பின்னணியில் அமைந்திக்கிறதோ அதைப் போலத்தான் ச தி வரலாற்றிலக்கியமும். இவற்றிலிருந்து உண்மையை வருவித்துக்கொள்வதுதான் ஆராய்ச்சியாளர்களின் பணி.

சீனர்களைப்போல வரலாற்றுணர்ச்சி நம் தமிழ் மக்களுக்கில்லை. நாம் வாழுகின்ற காலத்தில் வாழ்ந்த தலைவர்களுக்குக் கூடச் சரியான வரலாறு எழுதும் பழக்கம் நம்மிடையே இன்னும் உருவாகவில்லை. இந்த நிலையில நமது சமூக வரலாற்றை, மரபுகளை நமது முன்னோர் கற்பனை கலந்தாகிலும் எழுதியதற்காக நாம் பெருமைப்படலாம் அல்லவா!

காய்தல் உவத்தல் அகற்றிக் கற்பனையையும் உண்மையையும் பாகுபடுத்திவிட்டால் நமக்கு உண்மை வரலாறு கிடைத்துவிடும். இப்படி ஒவ்வொரு சமூக வரலாற்றையும் நாம் அறிந்துகொண்டால் நமக்கு ஒட்டுமொத்தமாக தமிழ்ச் சமூக வரலாறு கிடைத்துவிடும். இன்றைய சமூக ஆராய்ச்சியாளர்கள் சாதி வரலாறுகளைக் கட்டமைப்புச் செய்யும் பணியையே நமது முன்னோர்கள் அக்கால நிலைகளுக்கேற்பச் செய்தார்கள். குறிப்பாக இலக்கியவாதிகள், வரலாற்றைக் கற்பனை கலந்து இலக்கியமாக்கினர்.



செங்குன்றம், செங்குந்தம், கைக்கோளர், கைக்கோலர் ஆகிய சொற்களெல்லாம் இக்கால மொழியியல் வல்லுநரின் (Linguist) ஆராய்ச்சிக்கு விருந்தாக அமையலாம்.

வீரவாகு முதலிய நவவீரர்களின் வழித்தோன்றல்களே செங்குந்தர்கள் என்று சமயப்பற்றுடையார் புராணத்தோடும் கடவுளோடும் இணைத்துச்சாதியின் ஆதி வரலாறு தேடுகிறார்கள். செங்குந்தப் படையேந்தி முருகப் பெருமானுக்குத் துணை நின்றோர் செங்குந்தர்கள் (நவவீரர்கள்) என்னும் வரலாறு மானிடவியல் ஆராய்ச்சியாளர்களுக்கு (Antsro Pologist) வேறு புதிய பார்வையைத் தரலாம்.

ஈட்டியை முதன் முதலில் பயன்படுத்தத் தெரிந்த ஒரு புராதனச் சமூகம் அல்லது ஈட்டியை ஒரு குறியீடாகக் (Totem) கொண்டு வழிபட்ட புராதனச் சமூகம் செங்குந்தர் சமூகம் என்னும் கருத்தை மானுடவியல் அறிஞர்கள் ஆராய்ந்து சொல்லக்கூடும் இப்படிப் பல ஆராய்ச்சிகளுக்கு இடம் தரக்கூடிய மூல நூலாக (Text) இந்நூல் விளங்குகிறது

தமிழகத்தில் உள்ள ஒவ்வொரு சாதிக்கும் ஒவ்வொரு வரலாற்றுப் பின்புலம் உண்டு குழுக் குழுவாகத் தமிழ்மக்கள் பிரிந்து தத்தமக்குரிய ஒழுகலாறுகளுடன் விளங்குகிறார்கள். இதில் தவறில்லை. சமூகத்தை நேரிய முறையில் வழி நடத்திச் செல்வதற்கு இது துணைபுரிவதும் கூட. ஆனால் இந்த அமைப்பு பயனற்றுப் போகும் இடம் எதுவெனில் தமக்குள் பிறப்பால் உயர்வு தாழ்வு கற்பித்து இழிசினப் பார்வை பார்க்குமிடத்தில்தான்.

Edgar Thurston என்பார் தமிழ்ச்சாதிகளைப் பற்றி மட்டுமின்றித் தென்னிந்தியச் சாதிகளையும் உள்ளடக்கி Caste and Tribes in south India என்னும் பெயரில் பல தொகுதிகளை எழுதியுள்ளார் சாதிகளைப் பற்றி ஆராயும் சமூகவியலாளர்களுக்கு அஃது ஒரு நோக்கு நூலாகப் பயன்படுவது போல் இச்செங்குந்தர் பிரபந்தத் திரட்டும் பயன்படும் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

சுய சாதிப் பற்று என்பது பிற சாதிகளைத் தாழ்த்திப் பேசுவதில் இல்லை. எவர் மனமும் புண்படாமல்,

எவரையும் தாழ்த்திப் பேசாமல் தன் சாதியின் உயர்வைப் பாடியிருப்பது இப் பிரபந்தத் திரட்டின் தனிச் சிறப்பாகும். நூல் முழுவதும் விரவிக்கிடக்கும் இந்தப் பரந்தபோக்கு என்னை மிகவும் கவர்ந்தது.

செங்குந்தர் பிள்ளைத்தமிழ் போல் சற்றுக் கடின நடையில் பாடல் இருந்தாலும், டலாச்சுளைபோல் முயற்சி செய்து எடுத்துச் சுவைக்கத் தக்கன. ஏனைய பாடல்கள் வாழைக் கனிபோல் முயற்சியின்றிச் சுவைக்கத் தக்கன. இதோ சான்றுக்கு ஒரு பாடல்.

**'பெருக்க முடையவர்; செய்கைதப் பாதவர்; பின்னும் முன்னும்**
**வருக்க முடையவர் ; வாகாய்ப் பிறந்தவர்; வன்மரபில்**
**உருக்க முடையவர் ; உத்தமி கௌரி உயர்குலமென்**
**செருக்கை உடையவர் ,செல்வரில் செல்வர்; இச்செங்குந்தரே.**
*(259)*

என்னும் பாடல் எவ்வளவு எளிமையாக அமைந்து செங்குந்தர் சிறப்பைக் கூறுகிறது.

தங்கள் குலப் பெருமையைக் கூறிக் கவி புனைய வேண்டுமென்பதற்காக ஒட்டக்கூத்தர் முன் தங்கள் தலையையே அரிந்து முன்வைத்த செங்குந்த வீரர்களின் மறப்பண்பை இன்னொரு பாடல் பின்வருமாறு கூறுகிறது.

**குந்தர் பெருமிதத்தைக் கூறுவதென் பார்த்திபர்காள்**
**சந்தத் தமிழ்க் கடலார் தாம்போற்ற — விந்தைத்**
**தலை தந்தார் பாடலுக்குத் தாமென்றும் பூவில்**
**கலை தந்தார் மக்களுக்குக் காண்.** (92)

இப்படி எளிமையுடன் இனிமையும் சேர்ந்து சுவைக்கத் தக்க பல பாடல்கள் இப்பிரபந்தத்தில் உள்ளன.

சிந்திச் சிதறிக் கிடந்த இப்பிரபந்தங்களை ஒன்று சேர்த்து ஒரேதொகுதியாக அறுபது ஆண்டுகளுக்குமுன்னரேவெளியிட்ட காஞ்சி முனிவர் ஸ்ரீ நாகலிங்கரின் தமிழ்ப் பணிக்குத் தமிழ்கூறு நல்லுலகம் நன்றிக் கடன்பட்டுள்ளது. குறிப்பாகச் செங்குந்த மரபினர் இச்சீரிய பணிக்காக மனம் மொழி மெய்களால்



முனிவரை வந்திக்கக் கடமைப்பட்டுள்ளனர். பயன் கருதாது செய்த இப்பணி தமிழுக்குப் பயனுடையது; தமிழர்களுக்குப் பயனுடையது. தமிழ் நாட்டுக்குப் பயனுடையது.

ஓரளவே தமிழ்ப் புலமை உள்ளவர்களும் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் பிரபந்தங்களுக்கு காஞ்சிபுரம் ஒட்டக் கூத்தர் மன்றத்தின் துணைச் செயலர், புலவர் சரவணசதாசிவம் M.A., MEd., அவர்கள் முழுவதுமாக உரை எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது. உரை இல்லாவிட்டால் சில புராண வரலாறுகள் எளிதில் புலப்படா.

தமிழ்ப் பணி ஒன்றையே தம் வாழ்நாள் பணியாக மேற்கொண்டிருந்த முனிவர் இச்சமூகப் பணியையும் மனமுவந்து பெருந்தன்மையுடன் செய்திருப்பது நாம் பெற்ற பேறு. வாழ்க அவர் புகழ்.

அதுபோலவே, 67 ஆண்டுகளுக்குப் பிறகு இந்தப் பிரபந்தத்தைப் பெரும் பொருட் செலவில் மீண்டும் அச்சிட முன்வந்த காஞ்சி ஒட்டக்கூத்தர் மன்றத்தினரையும், சிறப்பாக அதன் தலைவர் பண்புமிகு சகோதரர் உயர்திரு. A. L. சுந்தரராஜன் அவர்களையும் வாழ்த்திப் பாராட்ட வேண்டியது செங்குந்தரின் நன்றிக்கடன். இந்நூல் நம் மரபு, இனப்பற்றுள்ள ஒவ்வொருவரின் இல்லத்திலும் வைத்துப் போற்றப்பட வேண்டிய ஒரு பொக்கிஷம், வாழ்க்கை நூல், நம் வரலாற்றுப் பெட்டகம்.

வாழிய செந்தமிழ்! வாழ்க நற்றமிழர்?

சென்னை
3-5-1993

இங்ஙனம்
**T. N. சிங்காரவேல்**



# முன்னுரை

உத்தியோகரத்னா,
**J. சுத்தானந்தன் B. A.,**
தலைவர், தென்னிந்திய செங்குந்த மகாஜனசங்கம்
அரண்மனைக்காரன் தெரு, சென்னை-1

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுளும், திருமுருகனும், நக்கீரரும் தமிழ்ச்சங்கத்தில் வீற்றிருந்து தமிழை வளர்த்தனர் என்பது தொன்று தொட்டு வழங்கிவரும்செய்தி. அச்சங்கத்தில் வீற்றிருந்த புலவர்கள் பாடிய பாடல்கள் தமிழ்க் கருவூலங்களாக விளங்கி தமிழர்களின் வரலாறு, பண்பாடு, நாகரிகம் முதலியவைகளை அறிந்துகொள்ள உதவுகின்றன. தமிழின் வளர்ச்சி, சங்க இலக்கியங்கள், பெருங்காவியங்கள், புராண இதிகாசங்கள், பக்தி இலக்கியங்கள், சிற்றிலக்கியங்கள் எனப் படும் பிரபந்தங்கள் என்று விரிவடைந்து கொண்டு சென்றது

ஒட்டக்கூத்தர், கம்பர்போன்ற பெரும்புலவர்கள் தாங்கள் சார்ந்திருந்த இனத்தின்மீது கவிதைகள் இயற்றிய செய்திகளும் இலக்கியங்களில் காணப்படுகின்றன.

பிற்காலத்தே தோன்றிய தமிழ் அறிஞர்களும் கவிஞர்களும் சிறுநூல்கள் பலவற்றைச் செய்யுள் வடிவில் இயற்றிப் பக்தி நெறியையும், தமிழையும் வளர்த்தனர்.

சிவபெருமானின் நெற்றிக் கண்ணில் தோன்றிய முருகப் பெருமானுடைய துணைவர்களாக வந்த நவவீரர்களுடைய மரபில் தோன்றியவர்கள் செங்குந்தர் என்று புராணங்கள் கூறுகின்றன. முருகப்பெருமான் சூரபதுமனை அழிக்கச்சென்ற போது அச்சேனைக்குத் தலைமை ஏற்ற சேனைத்தலைவர் எனவும், செங்குந்தப்படையைக் கையில் ஏந்தியமையால் செங்குந்தர் எனவும் பெயர்பெற்றனர் என்று வரலாறு கூறுகின்றது.



சிவபெருமான்எல்லாத் தேவர்களுக்கும்தலைவர் என்பதும், அநாதியானவர் என்பதும் புராணவழக்கு அவர் முதலில் தோன்றியவர் என்பதனால் அவருக்கு 'முதலியர்' என்று பெயர் என்பதும், அவர்வழியில் தோன்றிய செங்குந்தர்க்கு **முதலியர்** என்ற பட்டப் பெயர் உரிமை உடையது என்பதும், ஒட்டக்கூத்தர் இயற்றியஈட்டி எழுபது பாட்டு 31 அதன் உரை (பக்கம் 16, 17) ஆகியவற்றில் குறிக்கப்பட்டுள்ளது.

செங்குந்தர்களுடைய உயர்வு, சிறப்புக்கள், செய்த அரும் செயல்கள், கொடைச்சிறப்பு போன்றவைகளைக் குறித்துப் பல அறிஞர்களும், புலவர்களும் இயற்றிய பல நூல்கள் ஒன்று திரட்டப்பட்டு ஒரு பெருநூலாக 1926 ஆம் ஆண்டு நம் செங்குந்தகுலத் தோன்றலும், இனத்திற்கும் தமிழுக்கும் சேவை செய்தவருமாகிய, காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் என்பவரால் வெளியிடப்பட்டுள்ளது அதுவரை வந்திருந்த நூல்களில் அது திருத்தமும் செம்மையும் உடையது.

அந்த நூல் இப்போது கிடைப்பது அரிதாக உள்ளது. அந்த நூலைக் காஞ்சிபுரம் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக் கூத்தர் மன்றத்தினர், பாடல்களுக்கு உரைவிளக்கம் எழுதிப் பெரும் பொருள் செலவில் வெளியிடுவது பாராட்டுக்குரியது. பண்டிதரேயன்றிப் பாமரமக்களும் எளிதில் படித்துப்புரிந்து கொள்ளும் வகையில் பாடல்கள் பிரித்து எழுதப்பட்டு உரைவிளக்கம் செய்யப் பட்டுள்ளது. இந்த வகையில் உரையாசிரியர், புலவர் திரு. **சரவண சதாசிவம்** அவர்கள் பாராட்டுக்குரியவர். நல்ல விளக்கங்களையும், உதாரணங்களையும் தம்உரையில் காட்டியிருப்பது செய்திகளை எளிதில் விளங்கிக்கொள்ள உதவுகின்றது.

எடுத்துக்காட்டாக, **ஈட்டியெழுபது** 55 ஆம்பாடலின் (பக் 29, 30) உரையில் புலியூர்ப்பள்ளி கொண்டானின் அம்பும், மன்மதனின் அம்பும் செய்யும் செயல்களை ஒப்பிட்டு, பழம் பாடலை மேற்கோள் காட்டி எழுதியுள்ள உரை படித்து இன்புறத் தக்கது. **திருக்கை வழக்கம்** கண்ணி 96 இல் (பக். 91) கருமாறிப் பாய்ச்சல் பற்றிய விளக்கமும், கண்ணி 109 இல் (பக் 95) ஐவகையாகம் பற்றிய விளக்கமும், கண்ணி 1?9 இல் (பக். 105) நற்குணம் பத்து, துற்குணம் பத்து என்பதை விளக்கி எழுதி இருக்கும் பாங்கும் பிறவும் படித்து மகிழத் தகுந்தவைகளாகும்.

கடின நடையில் உள்ள **பிள்ளைத் தமிழ், செங்குந்த வேற் பதிகம்** போன்றவைகளை எளிதில் புரிந்து கொள்ளும் வகையில் உரையாசிரியர் உரை எழுதியிருக்கிறார். **கலித்துறை மாலையின்** உரை தெளிந்த நீரோட்டம் போன்று உள்ளது **செங்குந்தர் விநாயகர் மாலை**யில் பல புராணக்கதைகள் நன்கு விளக்கப் பட்டுள்ளன. 24 ஆம் பாடல் (பக். 344) உரைக்குப் பொருத்த மாக நாலடியார் பாடல் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. விளக்கவுரையுடன் இலக்கணப்பகுதிகளும் விளக்கப்பட் டுள்ளன. மற்ற நூல்களின் உரைகளும் சிறப்பாக எழுதப்பட்டு உள்ளன. உரையாசிரியருடைய முயற்சியும்உழைப்பும் போற்று உரியவை.

இந்த அரிய பணியை மேற்கொண்டு, நம் குலப்பெரு மக்களுக்கு அரிய பொக்கிஷமான இந்த நூலைச் சிறந்த முறையில் வெளியிட்டு உதவும் காஞ்சிபுரம் ஒட்டக்கூத்தர் மன்றத் தலைவர் திரு. A. L. சுந்தரராஜ் B s c, அவர்களையும், செயலாளர் புலவர் ஆ. சித்திரவடிவேலு அவர்களையும், மன்றத்தினரையும் பெரிதும் பாராட்டுகின்றேன். வாழ்த்து கிறேன்.

இந்த நூலை அனைவரும் பெற்றுப்படித்துப் பயன்பெற வேண்டியது சமூகத்துக்கும் தமிழ்மொழிக்கும் நாம் செய்யும் கடமையாகும். இதுபோன்றநற்பணிகள் தொடர, செங்குந்தர் குலக்கடவுளாகிய திருமுருகன் திருவருளை எண்ணித் துதிக் கின்றேன்

ஈரோடு
5- 5- 93

அன்பன்
**J. சுத்தானந்தன்**



# முகவுரை

## டாக்டர் சி. பாலசுப்பிரமணியன் அவர்கள்

**தலைவர். தமிழ்மொழித்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்**

செங்குந்தர் பிரபந்தத் திரட்டு என்னும் ஓர் அரிய நூல் இப்பொழுது காஞ்சிபுரம் கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றத்துச் சார்பில் வெளியிடப்பெறுகின்றது. இந்த நூற் றாண்டின் தொடக்கத்தில் காஞ்சி நாகலிங்க முனிவர் என்னும் பெரியவர் திருவாரூர் வள்ளல் திரு. சபாபதி முதலியார் அவர் களுடைய ஆதரவைக் கொண்டு இதை வெளியிட்டார். அரிதின் முயன்று அவர் தொகுத்து அளித்த அந்நூல் இற்றை நாளில் செங்குந்தர்களுக்குக் கிடைக்கவில்லை. செங்குந்தர் குலப் பெருமை பேசும் இவ்வரிய நூல் மீண்டும் அம்மக்க ளிடையே வாழ்வுப்பேற்றினைப் பெறுகின்றது. 'கல்வியில் கரையிலாத காஞ்சி' மா நகரில் கவிச்சக்ரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றம் வைத்து நாளும் நற்றமிழ்த் தொண்டினை ஆற்றிவரும் மதிப்பிற்குரிய பெரியவர் திரு. சுந்தர்ராஜ செங்குந்தர் அவர் களால் அச்சாகி வெளிவருகிறது.

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் பிற்காலச் சோழ வேந்தர் அவையில் பெரும்புலவராய்த் திகழ்ந்தவர் ஆவர். பொதுவாகப் பிற்காலச் சோழர் காலம் நாட்டு வரலாற்றின்— இலக்கிய வரலாற்றின் பொற்காலம் என்று போற்றப்பெறுவ தாகும். விக்கிரமசோழன் காலத்திலும், இரண்டாம் குலோத்துங்கசோழன் காலத்திலும், இரண்டாம் இராஜ இராஜசோழன் காலத்திலும் சோழ அவைக்களப் புலவராகவும் பின்னிரண்டு சோழ மன்னர்கட்குக் குலகுருவாகவும் விளங்கிய ஒட்டக்கூத்தப் பெருமான், செங்குந்தர் குலப்பெருமை விளங்க ஈட்டிஎழுபது என்னும் நூலினைப் பாடினார் என்பர்.

கவிச்சக்கரவர்த்தி என்னும் பட்டத்தினைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் பெற்ற இருபெரும் புலவர்களில் ஒருவர் ஒட்டக்கூத்தர் ஆவர்; பிறிதொருவர் கவிச்சக்கரவர்த்தி கம்பர் ஆவர். ஒட்டக்கூத்தர் 'கவிராட்சசர்' என்றும் 'கவுடப்புலவர்' என்றும் பாராட்டப் பெறுபவர். மேலும் வடமொழி சியாமள சாஸ்திரத்தை அறிந்த ஒரே தமிழ்ப்புலவர் ஒட்டக்கூத்தர் என்றும் அழைப்பர். இவர் பிறந்தஊர் கூத்தனூர் என்றும், மறைந்த ஊர் தாராசுரம் என்றும் குறிப்பிடுவர்.

தொண்ணூறு ஆண்டுகளுக்குமேல் வாழ்ந்திருந்த இக்கவிச் சக்ரவர்த்தி புலமை மிடுக்கும், நடைச்சிறப்பும், கவிப்பெருமையும் அணிகள் அமையப்பாடுவதில் சிறந்த தேர்ச்சியும் மிக்கவர் ஆவர். செங்குந்தர் குலம் எல்லாக் காலத்திலும் இவர் தம்மரபைச் சேர்ந்த பெரும் புலவர் என்று எண்ணி எண்ணிப் பெருமிதம் கொள்ளத்தக்க சான்றோர் ஆவர்.

'செங்குந்தர் பிரபந்தத் திரட்டு' என்னும் இந்நூலில் (1) ஈட்டியெழுபது (2) எழுப்பெழுபது (3) களிப்பொருபது (4) திருக்கைவழக்கம் (5) பிள்ளைத்தமிழ் (6) கலித்துறைமாலை (7) தசாங்கம் (8) ஊசல் முதலியவை அடங்கி உள்ளன. இவை எல்லாம் செங்குந்தர் குலச்சிறப்பு, தோற்றம், பெருமை, பழக்கவழக்கங்கள், இறைப்பற்று, வீரப்பண்புகள், கொடை நெஞ்சம் முதலியனவற்றை யெல்லாம் விளக்கமாகக் குறிப்பிடுகின்றன.

இந்நூலின் முகப்பில் அமைந்துள்ள காவேரிப்பாக்கம் திரு. க. நமச்சிவாய முதலியார் அவர்களின் முன்னுரையும் திரு. மு. இராகவையங்கார் அவர்களின் ஆராய்ச்சி உரையும்' திரு. சுப்பிரமணிய தேசிகனார் அவர்களின் கல்வெட்டுரையும் தமிழ்த்தாத்தா உ. வே. சாமிநாதையர் உள்ளிட்ட பெரும் புலவர்களின் மதிப்புரையும் ஆழ்ந்து கூர்ந்து படித்து மகிழற் பாலவையாகும்.

கார் உள்ளளவும், கடல்நீர் உள்ளளவும், தமிழ் உள்ளளவும் நின்று நிலைத்து வாழும் பெற்றியமைந்த செங்குந்தர் புகழ்பாடும் 'பிரபந்தத் திரட்டு' பொதுவாகத் தமிழர் இல்லம்தோறும் — சிறப்பாகச் செங்குந்தர் உள்ளம்தோறும் இருக்கத்தக்க சீர்த்தி வாய்ந்த செந்நூலாகும். இந்நூலினை



இப்பொழுது தம் அரிய முயற்சியால் வெளியிடும் காஞ்சி திரு. சுந்தர்ராஜ் செங்குந்தர் அவர்களையும், உரையாசிரியர் புலவர். திரு. சரவணசதாசிவம் அவர்களையும் செங்குந்தர் குலப் பெருமக்களும் தமிழ்கூறும் நல்லுலகமும் நன்றியோடு போற்ற வேண்டும்.

செங்குந்தர் ஒவ்வொருவரும் விலைகொடுத்து வாங்கி வாழையடி வாழையாக, தம் மரபினர்க்கு அரிய கருவூலமாக — சொத்துக்களில் ஒன்றாகத் தந்துவிட்டுப் போகவேண்டிய ஓர் அரிய நூல் இதுவென்று, முருகப்பெருமானைக் குலமுதற் பொருளாக நினைந்து வாழும் செங்குந்தர் குலப்பெருமக்களுக்கு இந்நூலினைப் பரிந்துரை செய்கின்றேன்.

வாழ்க செங்குந்தர் ! வெல்க செங்குந்தம் !!
முருகனருள் முன்னிற்பதாக !!!

சென்னை — 600 029
10. 5. 1993

**சி. பாலசுப்பிரமணியன்**

*கவிச்சக்கரவர்த்தி*

# ஒட்டக்கூத்தர் மன்றம்

தலைவர்

A. L. **சுந்தரராஜ்.** B. Sc.,

*புரவலர்கள்*

T. N. **சிங்காரவேலு** M.A.,B.L., M.S. **ரங்கையா,** B.A.,

**நா. ப. தணிகையரசு.**

ஆலோசகர்கள்

மு. **சண்முகம்.** M. A. MEd., **நா. பாலசுப்பிரமணியம்**

துணைத் தலைவர்கள்.

**சு. வேதகிரிமுதலியார். புலவர்.தா. சுப்பிரமணியம்.**

செயலாளர்

புலவர். **ஆ. சித்திரவடிவேலு.**

துணைச்செயலாளர்கள்.

**புலவர். சரவணசதாசிவம்.** M.A., M.Ed., **சு. பெருமாள்.**

பொருளாளர்

**சு.சதாசிவம்.** B. Litt.,

செயற்குழு உறுப்பினர்கள்

T. P. இலட்சுமணன் B. Com.
A. K. G. சம்பந்தம்
சு. திருவேங்கடம்
A. சம்பந்தம்
L. சண்முகம்
R. ஏழுமலை

புலவர் ஆ. வேலு.
வீனஸ். G. பெருமாள்
C. S. சம்பந்தமூர்த்தி
புலவர். சா. ஜகந்நாதன் M. A. B.Ed.,
புலவர். கி. வச்சிரவேலு M. A., M.Ed.,



கவிச்சக்கரவர்த்தி
**ஒட்டக்கூத்தர் மன்றம், காஞ்சீபுரம்.**

செயற்குழுவினர்.

**காஞ்சிபுரம்**

**ஸ்ரீநாகலிங்க முனிவர் அவர்கள்**

1926 இல் பதிப்பித்து வெளியிட்ட முதற்பதிப்பில் உள்ள

# முன்னுரை

சென்னை மேரிமகாராணியார் கலாசாலைத்
தமிழாசிரியர்

**ஸ்ரீமான் கா. நமச்சிவாய முதலியாரவர்கள்**

**எழுதியது**

சாதி சமய வேறுபாடுகளே இந்நாட்டின் நலத்திற்கும் நாகரிகத்திற்கும் இடையூறுகளாய் நிற்கின்றன என்னும் கொள்கை பரவிவரும் இக்காலத்தே செங்குந்தர் பிரபந்தத் திரட்டு என்னும்இந்நூற்றொகை வெளிவருவதுகண்டு அறிஞர் பலர் அதிசயம் எய்துவர். அன்றியும், இதனைப் பதிப்பிப்பவர் ஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள் எனக் கேட்கவே, அவ்வதிசயம் பன்னூறு மடங்காகப் பரவியெழுதலும் வியப்பா காதன்றே. அதற்கு யான் முன்னுரைஒன்று எழுத முற்படுதலும் பெரியதோர் வியப்பைப் பயவாதிராது. இவை யனைத்தும் என்மனத்திற்கே இறும்பூதாகத் தோன்றியும் இம்முன்னுரையை எழுத உடம்பட்டதற்குக் காரணம் கீழ்வருமாற்றான் அறியலாம்.

நிலப் பிரிவுக்குரிய மக்கட் பகுதியே யன்றிக் குலப் பிரிவான மக்கட்பகுதியை நெடுங்காலத்திற்குமுன் இத் தமிழகம் எய்தி யிருந்ததில்லை என்பதை அறிஞர் அறிவர்.

வடநூல் மதம்பற்றி யெழுந்த சாதிப்பிரிவு, அதுதோன்றிய வடநாட்டினும், வந்து புகுந்த தென்னாட்டில் ஆணிவேர் கொண்டு ஆழ்ந்து நிலைத்துவிட்டது. அதனை அசைக்க இனி எவ்வகையான சூறைக் காற்றுக்கும் வன்மை ஏற்படுதல் கூடாத காரியமேயாம். ஒரு தாய்வயிற்றில் தோன்றிய உடன்பிறந் தோரும், தாம் கொண்ட மனைவியின் வாயிலாகவாவது

உயர்வு தாழ்வு கூறிக்கொள்ள உபாயந் தேடுகின்றனர். இவ் வாறாயின், இந்நாட்டில் எழுந்த குலவேறுபாடு குறைவதற்கு ஒரு வழியுமுண்டாமோ!

குலம் சாதி முதலிய பிரிவுகளில் பற்றுக்கொண்டோர் தம் குலத்திற்கு ஏதோ ஒரு தெய்வத்தைப் பற்றுக் கோடாகக் கொண்டு அதன்வழியே தாம் தோன்றினராகக் கூறிப் புகழ்ந்து கொள்ளும் கொள்கையை மேற்கொண்டு விட்டனர். சிலர் சூரியன் வழித் தோன்றினோம் என்பர்; சிலர் சந்திரன் வழித் தோன்றினோம் என்பர்; சிலர் அக்கினியின் வழியே தோன்றி னோம் என்பர்; இவ்வாறே மற்றுஞ் சிலர் மற்றைக் கடவுளரைச் சுட்டிக் கூறுவர். சூரியன் முதலிய கிரகங்கள் மானிடவடிவந் தாங்கி இம்மண்ணுலகில் வந்து தம்மரபை வகுத்து வளர்த்துக் கொண்டனவோ, அன்றி மாந்தரே அக்கிரகங்களைத் தாம் வழிபட்டுத் தம் மரபை வகுத்துக் கொண்டனரோ யாமறி யோம். மாந்தரே வகுத்துக்கொண்டனர் எனின், அனுமனும் வீமனும் வாயுவுக்குப் பிறந்தனர் என்றும், யுதிட்டிரன் எமனுக் குப் பிறந்தனன் என்றும், அர்ச்சுனன் இந்திரனுக்குப் பிறந்த னன் என்றும், கன்னன் சூரியனுக்குப் பிறந்தனன் என்றும் கூறப்படும் கதைகளுக்கு முடிவிடம் யாண்டோ அறியோம்.

அன்றியும் குலப்பற்றுடைய சிலர் சகல சாதிகளும் நான் முகனிடத்திருந்தே தோன்றின என்பர். பிரமன் முகத்தினின்று ஒரு சாதியும், தோளினின்று ஒரு சாதியும், தொடையினின்று ஒரு சாதியும், பாதத்தினின்று ஒரு சாதியும் தோன்றின என்னும் கொள்கையும் உண்டு. பிறப்பினால் சாதயோ தொழிலினால் சாதியோ என முரண்பட்டு வாதாடுவர் சிலர். இவ்வாறெல்லாம் சாதிப்பற்றுமை உயர்வும் தாழ்வுமாகக் கருதப்பட்டு இந்நாட்டில் நிலைத்துவிட்டது. இத்தகைய சாதி யபிமானம் முற்றத் துறந்த முனிவரையும் விட்டதாக விளங்க வில்லை.

மதுரைச் சங்கத்து நக்கீரனார், 'நெற்றிக்கண் காட்டினும் குற்றங் குற்றமே' என்று கூறிய காலத்து, சிவபெருமான்,



'சங்கைக் -கீருகீ ரென்றறுக்கும் கீரனோ என்கவியை - ஆராயும் உள்ளத் தவன்' என்று அவரது சாதியைப் பாராட்டி இழித்துக் கூறினர் என்னும் சரித்திரத்தைச் சிறப்பாகக் கொண்டாடு வார்க்கு முனிவரரும் சாதியபிமானங் கொள்கின்றனர் என்பது முரணாகக் காணாதன்றே. இவ்வகையில் நந்தம் நாகலிங்க முனிவர் இந்நூலை வெளியிடுதற்கான காரணம் ஒருவாறு புலப்படும். அன்றியும் செங்குந்த மரபினர் தம் மரபைச்சார்ந்த ஒட்டக் கூத்தப் புலவரை யணுகித் தம் மரபின் சிறப்பை விளக்கி ஒரு நூல் செய்யும்படி கேட்டலும், அவர் அதற்கு உடம்படாமை கண்டு, அம்மரபினர் அப்புலவரை வெறுத்து ஒறுத்த கதையை யறிந்த நந்தம் நாகலிங்க முனிவர், தம்மர பினர் கருத்துக் கிசைந்து இதனை வெளியிட்டுதவாவிடின் அன்னார் தம்மை வெறுத்துப் பழிப்பரே என்னும் பழிக்கஞ்சி இம்முயற்சிக்கண் தாம் தலையிட்டுக் கொண்டனர் என்று கூறினும் தவறாதல் இல்லையன்றே.

இது நிற்க, பலவாற்றாற் பரந்துள்ள சாதிகளைப் பற்றிப் புலவர் பலர் சாதிநூல்கள் பலவற்றைப் பாடி வைத்தனர்; அவற்றில் உயர்வுநவிற்சியான போலிக் கதைகள் காணப் படினும், சில சாதியாருடைய பண்டைக்கால வழக்க வொழுக் கங்களும் வேறு சில செய்திகளும்கிடைப்பதனால், சாதிநூல்கள் அறவே கடியப்படத் தக்கன அல்ல. இத்தகைய பயன் கருதியும் நந்தம் நாகலிங்க முனிவர் இதனைப் பதிப்பித்தனர் எனலும் ஏற்றதாகும்.

இந்நூல் செங்குந்தர் என்னும் ஒரு மரபினரைப் பற்றிக் கூறுகின்றது. செங்குந்த மரபினர் வீரவாகு தேவர் முதலிய ஒன்பதின்மர் வழித் தோன்றினவர் என்ப, குந்தம் என்னும் வீரப்படைக்கு உரியார் என்பது பொருள். இத்திரட்டில் பதினான்கு நூல்கள் காணப்படுகின்றன. அவற்றுள் எட்டு நூல்கள் பழமையானவை; ஆறு நூல்கள் பிற்பட்டவை; ஆகவே பிற்பட்ட ஆறு நூல்களைப் பதிப்பாசிரியர் அனுபந்த மாகச் சேர்த்தனர். இனி அந்நூல்களில் ஒவ்வொன்றையும் பற்றி ஒரு சிறிது கூறுதல் தக்கதாகும்.

**1. ஈட்டியெழுபது :—** இதனை இயற்றியவர் **ஒட்டக்கூத்தர்** என்ப. இந் நூலை அவர் இயற்றியதற்குக் **காரணம்,** செங்குந்தர் பிரபந்தத் திரட்டின் நான்காம் பக்கத்தில் சரித்திர வரலாறு என்னுந் தலைப்பின்கீழ் விரிவாக எழுதப்பெற்றிருக்கிறது; ஆண்டுக் கண்டு கொள்க.

இச்சரிதையில் செங்குந்தர் மரபைச் சிறப்பித்துப் பாட உடன்படாத கூத்தரைக் கொலைசெய்ய ஆவூர்ச் செங்குந்தர் முயன்றதும், பின்னர் கூத்தர் ஓராயிரத்தெண்மர் சிரங்களை அறுத்து ஒன்றாக்குவித்துச் சிரச்சிங்காதனம் அமைப்பின், அதன்கண் இருந்து ஈட்டிப்படையைக் குறித்து ஒரு பிரபந்தம் பாடுவேன் என்றதும் அப்புலவரது தெய்வீகத் தன்மையை விளக்க எழுந்த உயர்ச்சிக் கூற்றோ அன்றி உண்மைக் கூற்றோ என்பதை ஆராய்தல் வேண்டும். அஃதன்றியும், கூத்தர் தம் மரபின் பெருமை கச்சியப்ப சிவாசாரியரால் மொழிபெயர்க்கப் பெற்ற கந்த புராணத்துக் காணப்பெறும் சிறப்பே நம் மரபினருக்குச் சாலும் என்றுரைத்ததாக உரையாசிரியர் உரைக்கின்றனர். அவ்வாறாயின் கச்சியப்பர் கந்தபுராணம் செய்தது கூத்தருக்கு முற்பட்டதாக முடியும்.

தமிழ்க் கந்தபுராணம் அவ்வளவு நீண்ட காலத்தது என்பதைச் சரித்திர ஆராய்ச்சியாளர் ஒப்பார் இந்நூற்கு உரையெழுதியவர் **கச்சிப் பிரதாபனார் என்பவர்;** இவரை **இலக்கணம் சிதம்பரநாத முதலியார்** மாணாக்கர் என்று கூறுவர்.

**எழுப்பெழுபது :—** இது சிரச் சிங்காதனத்தின் பொருட்டு வெட்டப்பட்ட தலைகள் உயிர்பெற்றெழும்படி கூத்தர் நாமகளை வேண்டிச் செய்ததாகும். எழுபது செய்யுட்களில் பன்னிரண்டே கிடைத்துள்ளன. ஒவ்வொரு செய்யுளிலும் முருகக் கடவுள் வீறு செவ்வையாகச் சொல்லப்படுகிறது. அறுபட்ட தலைகள் உறையூரினின்றும் பறந்தோடி ஆங்காங்கே விழுந்து கிடந்த உடலோடு சேர்ந்து ஒட்டிக் கொண்டு உயிர் பெற்றன என்று கூறப்படுகிறது. இதனால் கூத்தர் ஒட்டக் கூத்தர் எனப் பெயர் பெற்றனர் என்னும் வரலாறு வழங்குகிறது.



**3. களிப்பொருபது: —** இது கூத்தர் நடத்திய தெய்வச் செயலைக் கண்ட அசரீரி, அவ்வை முதலியோர் களிப்புற்றுக் கூறிய பத்துச் செய்யுளையுடையது. இதில் கம்பர், புகழேந்தி, அம்பிகாபதி, சேரன், சோழன், பாண்டியன், அஞ்சனாட்சி, சைவாசாரியார் பெயர்களுங் காணப்படுகின்றன இந்நூலைத் தொகுத்தவர் **குலோத்துங்க சோழன்** என்பர்.

**4. திருக்கை வழக்கம்: —** இது **புகழேந்தியார்** பாடியது என்ப; கம்பர் பாடிய திருக்கை வழக்கம் போன்றது. இதில் வருஞ் செய்திகள் பெரும்பாலும் ஈட்டி யெழுபது என்னும் நூலில் வருஞ் செய்திகளேயாம் 'வீற்றுசிரம்—யாவுந் தத்தம் முடலோ டாகியுயிர்ப் பான்புரிந்து-கூவுமொட்டக் கூத்தனென் பேர் கொள்ளுங்கை' என்னும் அடிகளால் அவ்விஷயம் வெளிப்படும்.

**5. பிள்ளைத்தமிழ்: —** இது **ஸ்ரீ ஞானப்பிரகாச முனிவர்** செய்தது. ஆண்பாற் பிள்ளைக்கவியாகப் பத்துப் பருவங்களையுடையது. வீரவாகு தேவர் முதலிய ஒன்பதின்மர், சுப்பிரமணியக் கடவுள் ஆகிய இவர்கள் மரபில் வந்தவர் செங்குந்தர் என்னும் செய்தியைத் தெரிவிக்கின்றது. இதனை, 'மயில் வாகனத்தோன் துணையாக வந்தோர் தாலோ தாலேலோ' என்னும் அடியான் அறியலாம். அன்றியும், 'சங்குந்து வயல் மேவு செங்குந்த வளநாடர் சப்பாணி கொட்டி யருளே' எனக் கூறப்படுதலால், செங்குந்த நாடு என்று ஒரு நாடு இருந்த தென்பதும், செங்குந்தர் அந்நாட்டிற்குரிய சிற்றரசராயிருந்தனர் என்பதும் தெரியும்.

**6. கலித்துறையந்தாதி. —** இது **நாகைமுத்துக் குமார தேசிகர்** செய்தது. இந்நூல் நல்ல நடையில் இயன்றுள்ளது; செங்குந்த மரபினர் சிறப்புக்களும் வீர தீரங்களும் சொல்லப்படுகின்றன. ஈட்டி யெழுபது முதலிய நூல்களை இம்மரபினர் பெற்ற வரலாறுகள் இதில் கூறப்படுகின்றன. 'தப்பில் புராணம் பரணி உலா பிள்ளைத் தண்டமிழ் முன் — செப்பும்

பிரபந்தம் எண்ணில பெற்றவர் செங்குந்தரே' என்னுஞ் செய்யுளடிகளைக் கண்டு தெளிக.

7. **தசாங்கம்** — இது செங்குந்த மரபினர்க்குரிய தசாங்கங்களைக் கூறும். இந்நூல் **சத்திய சந்தர்** என்பவர் செய்தது. இதில் மலை, யாறு, நாடு, நகர், மாலை, குதிரை, யானை, முரசு, கொடி, செங்கோல் ஆகிய பத்துங் கூறப்படும். இவற்றில் செங்கோல் ஒழிய மற்றைய ஒன்பதும் இவ்விரண்டாகக் கூறப்படும் சிறப்பு கவனிக்கத் தக்கது. ஒன்று விண்ணரசுக்கும் ஒன்று மண்ணரசுக்குமாக அமைக்கப் பெற்றுள்ளன. இதனைச் 'செப்பு தசாங்கம் இருவகைப் பெற்றவர் செங்குந்தரே' என்னும் அடி நன்கு விளக்கும். ஒவ்வொரு பாட்டும் ஒவ்வொரு பறவையை முன்னிலைப்படுத்திக் கூறப்படுஞ் சிறப்பு பாராட்டற் பாலதாம்.

8. **ஊசல் முதலியன:**— இது **மயிலை நாதர்** செய்தது. இதில் செங்குந்த குலத்தரைப் பெரும்பாலும் மன்னவராகக் கொண்டு பாடப்பட்ட செய்தி விளங்குகிறது. செங்குந்தர் உமாதேவியார் புத்திரர் என்றும், சோழமண்டல முதலிகள் என்றும் கூறப்படுகிறது.

**அனுபந்தம்:**— என்னும் பிரிவில் ஐந்து பிரபந்தங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அவைகள் முன்னர்க் கூறிய நூல்களில் உள்ள செய்திகளை விரித்தும் தொகுத்துங் கூறுகின்றன. அவைகளுள்ளே நான்கு பிற்காலத்து நூல்கள். ஐந்தாவதாகிய **திருக்கைவழக்கத் தந்தாதி** கலியுக வருஷம் 4900-ல் செய்யப்பட்டதாகத் தெரியவருகின்றது.

செங்குந்த மரபினரைப் பற்றிய இந்நூல்கள் எல்லாம் குலச் சார்பாகக் கூறுவனவே. சிறப்பித்துச் செல்லும் வகையால் இடையிடையே உயர்வு நவிற்சியான சிற் சில கதைகள் புகுந்திருப்பினும், அவற்றினுள்ளே ஒரு சில உண்மைகளுங் காணப்படுகின்றன. அவற்றை எடுத்துக் கூறுதல் இன்றியமையாததாம்.



செங்குந்தர் என்னுஞ் சொல் குந்தத்திற்கு உரியவர் என்று பொருள்படும். குந்தம் எனினும் ஈட்டி எனினும் ஒன்றே. முதற்கண் எழுந்த ஈட்டி யெழுபது என்னும் நூல் இம்மரபினர்க்குச் செங்குந்தர் என்னும் பெயர் உண்டாயினதற்கு உண்டான உண்மையை விளக்கிக் கூறுகின்றது. அன்றியும், இம்மரபினர்க்குக் கைக்கோளர் என்று பெயர் ஏற்பட்டதற்கும் இதுவே காரணம் என்று சிலர் கருதுகின்றனர், ஆயினும், அச்சொல் கைக்கோலர் என்று இருந்து பிறகு கைக்கோளர் என்று மாறிற்று என்பர். இந்த இரண்டு வகைக்கும் ஆதாரம் உண்டு.

'எய்தவர்க்குச் சிறைச் சோறு மீகுவர் கைக்கோள ராகிய செங்குந்தரே' என்னுஞ் செய்யுளடி இரண்டு பெயரும் ஒன்றென்பதைக் காட்டும்.

'நிதம் அந்திசந்தி சிவசிந்தனை மறவாதவராவரிச் செங்குந்தரே' என்னும் அடி செங்குந்தர் சிறந்த சீலமுடையவர் என்பதைக் காட்டுவதால், கை - ஒழுக்கத்தை, கோளர் - கொண்டவர் என்று கூறப்படும் பொருளும் ஒருவாறுபொருந்துமாறு காண்க.

'குருபூசை சிவபூசை மறவாத தயவாளர் கொட்டியருள் சப்பாணியே' என்பதையும், 'தேவே விலகினும்நாவிலங் காதவர் செங்குந்தரே' என்பதையுங் காண்க.

செங்குந்தர் வீரவாகுதேவர் ஆகிய ஒன்பதின்மர் மரபில் வந்த வீரர் என்பது புராணப் பிரசித்தம். 'தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள் சிறுதே ருருட்டி யருளே', 'சிவகயிலாய பரம்பரைபா ரென்னும் செங்குந்தரே.', 'குமரச், செட்டிக் கிளையநற் செட்டிகளாகும் இச்செங்குந்தர்' என்பன முதலிய அடிகள் இதனை விளக்கும்.

செங்குந்தர் சிறந்த வீரர்கள் என்பது, 'சண்முகன்றன் சேனாபதிகளும் சேனையும் ஆனவர் செங்குந்தரே', 'சிங்கமாதிய பல்தேயம் வென்றவர் செங்குந்தரே' என்பன முதல் அடிகளால் விளங்கும்.

செங்குந்தர் சிறந்த சீலமுடையார் என்பது, 'தேவாரமுற்றும் படிப்பாரும் அங்கையிற் செங்குந்தரே', 'திருவாசகஞ் சொல் ஒருவா சகத்தரும் செங்குந்தரே' என்பவற்றால் அறியலாம்.

இவ்வும் இவர்களது சிறப்புக்களைப் பிரபந்தங்கள் பலபடப் புகழ்ந்து கூறும். அவற்றையெல்லாம் இந்நூல்களைப் படித்து நன்கு உணரலாகும்.

இதனைப் பதிப்பவராகிய ஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவர் தமது அறுபதாம் யாண்டில் துறவு பூண்டது முதல் சாதியபிமானமற்ற நிலையில் உள்ளவராயினும், செங்குந்த மரபினர் அவரைப் பல முறையும் விரும்பி வேண்டிக்கொண்டமையால் அவர்தம் வேண்டுகோளுக்கு இணங்கி இதனை வெளியிடத் துணிந்தனர். இந்த நூல்களில் பெரும்பாலானவை முன்னரே அறிஞர் பலரால் தனித்தனியே பதிக்கப்பட்டுள்ளன. அவற்றை ஒன்று திரட்டி எழுத்துப் பிழைகளை நீக்கிப் புதிய முறையில் அழகாக அச்சிட்டுத் தந்த தொன்றே நந்தம் முனிவர் மேற்கொண்ட முயற்சியாகும். **திருக்கை வழக்கத்தந்தாதி** ஏடு ஒன்று மட்டும் இவரிடம் இருந்தமையால் அவற்றை இறுதியில் சேர்த்திட்டனர்.

நந்தம் ஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவர் இல்லறத்திலிருந்த காலத்தே செய்த தமிழ்த் தொண்டு தமிழ் நாடறிந்ததே.

இவர் இளமையில் வண்ணக்களஞ்சியம் எனச் சிறப்புப் பெயர் பெற்று, தணிகைப் பெருமான் மீது பாடிய வண்ணங்கள் பலவாகும். **தணிகைச் சந்நிதிமுறையை** அச்சிடுவித்தனர். சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கையும் ஒன்றுதிரட்டி உரையுடன் முதல் முதல் **மெய்கண்ட சாத்திரம்** எனப் பெயர் சூட்டி ஒரு தொகுப்பாக அச்சிட்டு உதவிய அறிஞர் இவரே. பின்னரும் பற்பல நற்காரியங்களை நந்தம் தமிழ் மொழிக்குச் செய்து வந்தனர்.



**காஞ்சிப் புராணம்** இரண்டாம் பதிப்பைப் பிழையறப் பரிசோதித்து, செவ்விதின் அச்சிட்டு வெளியிட்டனர். மற்றும் தம்மரபினர் விருத்தியடையுமாறு தென்னாட்டில் பல சபைகளைத்தாபித்துப்பிரசங்க வாயிலாகவும் பத்திரிகை வாயிலாகவும் பெரிதும் முயன்று உழைத்து வந்தனர் பின்னர்த் **தொழிற்கல்வி, செங்குந்த மித்திரன்** முதலிய பத்திரிகைகளைத் தாமே நடத்தினர்.

பேரகராதி என்னும் பெரிய நூலில், சித்தாந்த சாத்திரங்களில் வரும் அரிய சொற்கள் முதலியவற்றை ஆயிரக் கணக்காகக் கூட்டித் **தமிழ்மொழியகராதி** எனப் பெயர் தந்து அழகுறப் பதிப்பித்து, மாட்சிமை தங்கிய மன்னர் பெருமான் **ஜார்ஜ்** மகிபருக்கு உரிமை யாக்கி 1912ஆம் வெளியிட்டனர்.

இது நிற்க, செல்வத்தாற் சிறந்த ஸ்ரீமான்கள் செய்ய வேண்டிய கடமைகளுள் தம் சாதியார் முன்னேற்றமடையச் செய்யுங் காரியமும் ஒன்றாகும். அவ்வழியில் தம் குலத்தின் நலத்தை முறையாக எடுத்துக் காட்டி, அவர்களுக்கு ஊக்கமுண்டாக்கி அவர்களை ஏமாற்றமடையச் செய்தல் சிறந்த மார்க்கமாம்.

இவ்வகையில் திருவாரூர்ச்செல்வச்சீமான் **நாகப்பமுதலியார் அவர்கள்** செய்த நற்றவப் பயனாகப் பிறந்தவரும், அருங்குணங்கள் அமையப்பெற்றவரும், மூத்த பிள்ளையார் திருவடிக்கு மெய்யன்பு பூண்டவரும், சிவ தருமங்களில் நீங்காத அன்புடையராய்த் திருப்பணிசெய்யும் உண்மைநேயம் வாய்ந்தவரும் ஆகிய **ஸ்ரீமான் தி. க. ச. சபாபதி முதலியார் அவர்கள்,** இந்நூலை நந்தம் ஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவர் வாயிலாக அழகு பெற அச்சிட்டு வெளியிட்டனர். இவ்வாறே **ஸ்ரீகந்த புராணம், மதுரைப் புராணம், செங்குந்தர் புராணம்** முதலிய நூல்களையும் வெளியிட நோக்கங் கொண்டிருக்கின்றனர். இவர்தம் தமையனாரும், தமிழ்மொழியின்கண் நீங்காத பற்றுடையவரும், குலாபிமானங் கொண்டவரும் ஆகிய **ஸ்ரீமான்**

**தி. க. ச. கலியாணசுந்தர முதலியார் அவர்கள்** சமீப காலத்தில் **செங்குந்த மகாநாடு** ஒன்று கூட்டித் தம் மரபு விருத்தி யடைவதற்கான முயற்சிகளைத் தேடுவதோடு அம்மரபைச் சார்ந்த பிள்ளைகள் உயர்தரக் கல்விநலத்தை யடையுமாறு **பாடசாலை** யொன்று நிறுவுதற்கு எண்ணியிருப்பதாக எனக்கு ஒரு கடிதம் எழுதி யிருக்கின்றனர். இத்தகைய நன்னோக்க முள்ள செல்வச் சீமான்கள் மேற்கொண்டுள்ள முயற்சிகள் முற்றுப்பெறத் திருவருள் புரியுமாறு முருகக் கடவுளின் திருவடித் தாமரைகளை வாழ்த்தி வணங்குகின்றேன்.

நெய்தலகம், மயிலை. **கா. நமச்சிவாயன்**

1. 4. 26



1926 இல் பதிப்பித்து வெளியிட்ட
முதற்பதிப்பில் உள்ள
பிரபந்த

# ஆராய்ச்சியுரை

'தமிழ்-லெக்ஸிகன்-கமிட்டி'
தலைமைப் பண்டிதர்
**பிரம்மஸ்ரீ மு. இராகவையங்காரவர்கள்**
எழுதியது

**செங்குந்தர் பிரபந்தத் திரட்டு** என்ற தலைப்பை பெயரிட்டு, ஸ்ரீமத் காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்களாற் பதிப்பிக்கப் பெற்ற நூலொன்று, அவர்களால் அன்போடும் எனக்கு அளிக்கப்பட்டது.:

பண்டைக் காலத்தே வீரசிகாமணிகளாக விளங்கிய செங்குந்த மரபினரது அறிவாற்றல் பெருமைகளைச் சிறப்பித்துப் புலவர்கள் பலரால் பாடப்பட்ட செய்யுட்டிரட்டு இதுவாகும்.

செங்குந்தர் குலவரலாறுகளாக வழங்கும் நூல்கள் பல வுள்ளன என்பதும், அம்மரபின் முன்னோரது சரித்திரங்களும் பல என்பதும் இவற்றால் அறியப்படும்.

முருகக் கடவுள் துணைவர்களான நவவீரர்களின் வழித் தோன்றலாகத் தங்களைப் பழங்கால முதலே வழங்கி வருவதையும், சோழவரசர் காலத்தே அவ்வரசரது வெற்றிகளுக்குக் காரணபூதரான படைவீரர்களாய், அவரது பேரபிமானத்துக்குப் பாத்திரரா யிருந்தமையும் அந்நூல்களிற் பரக்கக் காணலாம். இக்குலத்தில் உதித்தவரே, கவிஞர் பெருமானாகிய ஒட்டக் கூத்தர்.

## 1. ஈட்டியெழுபது

இப்புலவர் பாடிய நூல்களிலே ஈட்டி யெழுபது என்பதும் ஒன்று. இஃது இவரது குலப்பெருமைகளை யெல்லாம் கம்பீரமாக விளக்குவது. இப்பிரபந்தத் திரட்டில் இதுவே முதன்மை பெற்றுள்ளது. இந்நூலை அப்புலவர் பாட நேர்ந்த வரலாற்றின் சுருக்கம் அடியில் வருமாறு:—

ஒரு சமயம், செங்குந்தரிற் பலர், தங்குலப் பெருமையைச் சிறப்பித்து ஒரு நூல் பாடித் தரும்படி தம்மரபினரும் கவிச்சக்கரவர்த்தியுமான ஒட்டக் கூத்தரை வேண்ட, அவர், தங்குலத்தைத் தாமே எடுத்துப் புகழின், அஃது அபிமானத்தாற் கூறியதாமென்று கொள்ளவும் படும் என்று கருதி, அதற்கு உடம்படாராக, அப்போது அச்செங்குந்தர் 'இவர் குலாபிமானமற்றவர்' என்றுநினைத்து பெருஞ்செற்றங் கொண்டு, புலவரைக்கொல்லுதற்குத் திரண்டு வந்தனர். அது தெரிந்த கூத்தர், தம்பாலன்பு மிக்கவரும் புவனையென்னும் ஊரில் வாழும் பிரபுவுமாகிய சோமன் என்பவரது மாளிகைக்கண் ஓடி யொளித்து அடைக்கலம் புக்கனர்.

சோமன் தன்னையடைந்த புலவரைக் காத்தல் வேண்டித் தன் ஒருமகனையும் ஒரு மூடுசிவிகையுள் வைத்துத் தன் மனையைச் சூழ்ந்து கூத்தர் வரவை எதிர்பார்த்து நின்ற அக்கூட்டத்தாரை நோக்கி, 'இதன்கண் உள்ள உங்கள்மரபிற் புலவரை, இடையே திறவாமல், உரியவிடத்தில் வைத்து விரும்பியவாறு செய்யுங்கள்' என்று விடுப்ப, அன்னோர் ம கி ழ் ந் து அச்சிவிகையைத் தனியிடத்துக் கொண்டு போய்த் திறந்து பார்த்த அளவில், தாங்கருதிய புலவராயில்லாமற் சோமன் மகனாயிருத்தல் கண்டு, அப் பிரபுவின் அடைக்கலங் காத்தற் சிறப்பை வியந்து, அம் மகனைக் கொல்லாமலே திரும்பிச் சோமன்பா லெய்தி நிகழ்ந்த



துரைக்க, அவ் வள்ளல், 'தங்குலத்தையே புலவர் பாடுவராயின் அஃது அபிமானத்தாற் பாடப்பட்டதாமென உலகோர் கருதவும் இடந்தரும்; உங்கள் அரிய வீரத்திறத்தைப் பலரறிய அரசன் முன் காட்டுவீராயின், அதனைக் காரணமாகக் கொண்டு, புலவர் தங்குலப் பெருமையைச் சிறப்பிக்கத் தடையிராது' என்று கூறக் கேட்டு அவரெல்லாந் திரண்டு சென்று, கூத்தருடன் ஓலக்கமாக வீற்றிருந்த அரசன் திருமுன்பு வந்து தாங்கொண்டுள்ள கருத்தைக் கூறிப் புலவர் விருப்பத்தின்படியே, தங்கள் தலைகளை யரிந்து வைத்துச் சிரச் சிங்காதன மிட்டுத் தம் சுத்தவீரத் திறத்தைக் காட்டிச் சபையோரைப் பிரமிக்கச் செய்தனர்.

அப்போது, அச்சிரச் சிங்காதனத்தில் வீற்றிருந்து புலவர் பெருமான் தன் மரபினரது வீரப் பெருமைகளை யெல்லாம் அரசனும் சபையோரும் வியக்குமாறு ஈட்டி யெழுபது என்ற நூலால் பாடினர் — என்பது இந்நூல் வரலாறு. இதனை—

'பூவார் புவனையிற் சோமன் றரும்பழி போனபின்பு
நாவாணர் போற்றிய நாடகங் கேட்ப நலமுடனே
ஆவாணர் செங்குந்த ராயிரத் தெண்டலை
கொய்திரத்தப்
பாவாடையிட்ட துலகமெல் லாம்புகழ் பாலித்ததே'
(ஈட்டி. தற்சிறப்.)

'முத்தமி ழிராசரா சேந்திரன் முன்னமே
சத்தவீ ரத்திறத் துலங்கு தற்கொரு
பொய்த்தலை கொடுத்தலிற் புகழ்பெறாதென
மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே'
(ஈட்டி. 60)

என்ற அந்நூற் செய்யுள்களாலும், இவற்றுக் கெழுதப்பட்ட உரைகளாலும் வி வ ர மா க அறியலாகும். இனி, இந்நூலாசிரியரைப் பற்றிச் சில விஷயங்கள் ஆராய்ச்சி செய்தற்குரியன.

அபயன் எனப் பெயர் பெற்ற குலோத்துங்க சோழனது (கி. பி. 1070 — 1118) ஆட்சியில் அவனது வாயிற் பெரும் புலவராய்க் கவிச்சக்கரவர்த்தி எனப் புகழ் பெற்று விளங்கிய சயங்கொண்டாரைப் போலவே, இவ்வபயன் மகன், பேரன், பிரபௌத்திரன் ஆகிய மூவர் காலங்களிலும், சோழ ராஸ்தானப் பெரும் புலவராய்க் கவிச்சக்கரவர்த்தி யென்று உலகம் புகழ விளங்கியவர் இப்புலவர் பெருமானே.

இவர் சோணாட்டுள்ள மலரி என்ற கிராமத்தில் எளிய குடும்பத்திற்பிறந்து, தம்மிளமையில் சடையவள்ளலின் தந்தையாகிய 'புதுவைச் சங்கரன்' என்ற பிரபுவுக்கு உதவித் தொழில் புரிந்து வந்தவர். இளமையிலேயே இவர் பெற்றிருந்த அறிவின் திட்ப நுட்பங்களைக் கண்டு வியந்து, 'காங்கேயர்' என்ற பிரபு, இவர் கலைகணிரம்பிச் சிறப்பதற்குப் பெருந்துணையாய் நின்று மிகவும் ஆதரித்தனர். அவர் எதிர் பார்த்திருந்ததற்கு அதிகமாகவே, பெரும் புலமையும் அருங்கவி பாடுந் திறமும் இவர் மிகப் பெற்றதோடு, அக்காலத்துப் புலவரெல்லாம் அஞ்சத்தக்க இவரது பேராற்றலை நோக்கிக் 'கவிராட்சசன்' என்ற சிறப்புப் பெயரும் பெறலானார். இங்ஙனம் தம்மை ஆதரித்துத் தங்கல்விச் சிறப்புக்குக் காரண பூதரான அக் காங்கேயர்மேல், தம் செய்ந்நன்றி பாராட்டி 'நாலாயிரக் கோவை' என்ற பிரபந்தமொன்று பாடினரென்று சோழ மண்டல சதகங் கூறும்.

**'புதுவைச் சடையன் பொருந்து சங்கரனுக்**
**குதவித் தொழில்புரி யொட்டக் கூத்தனைக்**
**கவிக்களி றுகைக்குங் கவிராட் சதனெனப்**
**புவிக்குயர் கவுடப் புலவனு மாக்கி**
**வேறுமங் கலநாள் வியந்துகாங் கயன்மேற்**
**கூறு நாலாயிரக் கோவை கொண் டுயர்ந்தோன்'**

என்ற பழைய அகவலால் இச்செய்திகள் விளங்குதலுங்காண்க.



தமிழ்நாவலர் சரிதையிலிருந்து, கூத்தர் நாமகளருள்பெற்று முதன் முதற் பாடிய பிரபந்தம் 'அரும்பகைத் தொள்ளாயிரம்' என்று தெரிகின்றது. இந்நூல், 'முத்தொள்ளாயிரம்', 'வச்சத் தொள்ளாயிரம்' என்பன போன்று 900 பாடலில், சோழன் பகைவென்றதைப் புகழ்வதென்பது.

**'நடித்தது நச்சர வுச்சியி னச்சி மதிலிங்கை**
**யிடித்தது வென்ற திருபது தோள்பதி னெண்பகலே**
**முடித்தது பாரதம் வீரப் புலிவைப்ப மூரிச்செண்டால்**
**அடித்தது பொற்கிரி விக்ரம சோழ வகளங்கனே'**

என்ற தமிழ்நாவலர் சரிதையிற் கண்ட அதன் மாதிரிகைப் பாடலினின்று தெரிகின்றது.

இப்பிரபந்தத்தை விக்கிரம சோழனது பேரவையில் கூத்தர் அரங்கேற்றினர். இச்சோழன் (1118 - 1132) அபயனாகிய குலோத்துங்க சோழன் மகனாய் அவனுக்குப் பின் பட்டமெய்தியவன். இவன் புவியரசராய் விளங்கிய காலத்தே, இப்புலவர் கவியரசராய் விளங்கலாயினர். இச்சோழனது பவனியைச் சிறப்பித்து 'விக்கிரம சோழனுலா' என்ற பிரபந்தம் இப்புலவராற் பாடப் பெற்றது.

இவ்விக்கிரமன் மகனாய் அவனுக்குப் பின் பட்ட மடைந்த அநபாயன் குலோத்துங்கன் II ஆட்சிக் காலமுழுதினும், அநபாயன் மகன் இராசராசன் ஆட்சியின் முற்பகுதியினும் இப்புலவர் வாழ்ந்திருந்தனர் என்பது — இவ்விருவரையும் உலாப் பிரபந்தங்களால் இவர் பாடியிருப்பதால் தெரியலாம்; குமார குலோத்துங்கன் என்பவனது சகோதரனான சங்கர சோழன்மேற் புலவரொருவர் பாடிய உலாவில் —

**"கூடிய 'சீர்தந்த' வென்றெடுத்த கூத்தனுலாச்**
**சூடிய விக்கிரம சோழனும் — பாடிய**
**வெள்ளைக் கலியுலா மாலைதொறு மீண்டுமவன்**

பின்ளைத் தமிழ்மாலை பெற்றோனும்
— தெள்ளித்தம்
முன்னா யகரிலவன் மூதுலாக் கண்ணிதொறும்
பொன்னா யிரஞ்சொரிந்த பூபதியும்'

என்றும்,

'பரணிக்
கவியாற் சயங்கொண்டான் கட்டுரைப்பக்
கொண்டான்
குவியாக் கரத்தரசு கொண்டான் — கவிகை
நிலாக் கொண்டான் கூத்த னிகழ்த்த வொருமூன்
றுலாக் கொண்டான் போந்தா னுலா'

என்றும், கூத்தரால் உலாக்கள் பெற்ற சோழர் மூவரைக் குறிப்பிடுதல் அறியத்தக்கது. இவ்வரசருள் முதல்வனான விக்கிரம சோழன் காலத்தே அவனால் இவர் பெருஞ் சிறப்புப் பெற்றுத் தம் வறுமை நீங்கி விளங்கினர் என்பது—

'இடுக்கட் புண்படு நிரப்புக் கொண்டுழன்
றிரக்கச் சென்றவின் றெனக்குச் சிங்களந்
திடுக்கிட் டஞ்சும்வெஞ் சினத்துச் செம்பியன்
திருக்கைப் பங்கயஞ் சிறக்கத் தந்தன
படுக்கக் கம்பளம் பதிக்கக் குங்குமம்
பதக்கக் கங்கணம் பரிக்கக் குஞ்சரங்
கடுக்கக் குண்டலங் கலிக்கச் சங்கினங்
கவிக்கப் பஞ்சரங் கவிக்குத் தொங்கலே'

என,—சோழன் வரிசையளித்து விடுத்தபோது கூத்த முதலியார் கூறிய வகுப்பு — என்ற தலைக் குறிப்புடன் தமிழ் நாவலர் சரிதையிற் காணும் பாடலால் தெரியலாம். விக்கிரமசோழன் மகன் அநபாயன் - குலோத்துங்கன், நம் புலவர் கீழ்க் கற்றுத் தேறிய மாணாக்கனென்றே சொல்லற் குரியவன். ஒரு சமயம் அவ்வரசனை,



'ஆடுங் கடைமணி நாவசை யாம லகிலமெல்லாம்
நீடுங் குடையிற் றரித்த பிரான்
என்று புலவர் பாடி முடிக்கு முன்னே,
— என்று நித்தநவம்
பாடுங் கவிப்பெரு மானொட்டக் கூத்தன்
பதாம் புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றெயெனைச்
சொல்லுவரே'

என்று, இச்சோழன் முடித்துத் தான் அவர்க்கு அடியனான தன்மையைக் கூறிப் போந்ததுங் காண்க. இக்குலோத்துங்கன் மகன் இராசராசன் காலத்தேதான், 'தக்கயாகப்பரணி', 'ஈட்டி யெழுபது' என்ற நூல்கள் புலவர் பெருமானாற் பாடப் பெற்றன. இவற்றுள், 'தக்கயாகப்பரணி' பாடப்பட்ட வரலாறு, இற்றைக்கு 280 வருஷங்கட்கு முன் இயற்றப்பட்ட 'வீரசிங்காதன புராணம்' என்ற நூலின் அகளங்கச் சருக்கம் என்ற பகுதியில் விரிவாகக் காணப்படுகின்றது. அதன் சுருக்கம் வருமாறு:

சோணாட்டை இர்ராசராசன் என்ற சோழன் ஆண்டு வருங் காலத்தே கூத்தர் அச்சோழனது வாயிற் பெரும் புலவராய் விளங்கினர்.

அக்காலத்தில், குடந்தை வீரசிங்காதன மடத்தில் வாழ்ந்த சிவயோகியாருள் ஒருவர் திருஞான சம்பந்த மூர்த்திகள் அருளிய திருவீழி மிழலைப் பதிகத்தை ஓதிக் கொண்டு பலியேற்றுவரும் ஒரு தினம் அப்பதிகத்தில் வருங் 'கல்லா னிழற் கீழாயிடர் காவாய்' என்ற தேவாரத்தைச்சொல்லிக்கொண்டே கூத்தர் மனையகம் புக, அது கேட்ட புலவர் அப்பாடற் பொருளைப் பலகாற் சிந்தித்தும் பொருள் செவ்வனே புலப் படாமையால், 'இத்தேவாரப் பொருள் யாது? என்று அச் சிவயோகியாரை உசாவினர். அவர் சினக்குறிப்புடன்

'யானறிந்திலேன்; நீரும் அதனை அறிய வல்லீரல்லீர்' என்றனர். அது கேட்டதும், அவ்யோகி தம்மைக் குறைகூறியதைப் பொறாது பெருஞ் சினங்கொண்டு, புலவர் அவரைக் கசைகொண்டு நையப் புடைக்க அவரும் அவ்விடத்தே மடிந்து வீழ்ந்தார். கூத்தரும் இக்கொடுமையை யிழைத்துத் தம் சினமாறி மனையுட் புக்கனர்.

சில பொழுதில், அச்சிவயோகியார் வசிக்கும் மடத்திலுள்ள சங்கமர்கள் இச்செய்தி கேட்டதும் பெருஞ் சினத்துடன் ஆரவாரித்துக் கொண்டு ஆயுதபாணிகளாய்த் திரண்டெழுந்து அப்புலவர் மனையைச் சூழ்ந்துகொண்டனர்.

இவர்கள் கோபத்துடன் வரப்போவதை முன்னரேயறிந்த புலவர், சோழனை யடைந்து நடந்ததை அறிவிக்க அவனும் பெரிதுங் கவன்றுகொண்டிருக்கும்போது, அச் சங்கமத்திரள், புலவரிருப்பறிந்து சோழன் அவையை அடைந்து நடந்த கொலையைக் கூறி முறையிட்டது. அரசனும் 'இப்பழிக்கு நீவிர் கூறும் பரிகாரம் யாது?' என்று அச்சங்கமத் தலைவர்களைக் கேட்க, அவர்கள், 'கூத்தரை எங்களிஷ்டம் போற் செய்ய எங்களிடம் ஒப்பிப்பதே பரிகாரம், அவரைப் பெற்றாலன்றி மீளேம்' என்றும் உறுதியாக நின்றனர்.

உடனே, அரசன் இரகசியமாய் மந்திரிகள் மூலம், தன் மகனை ஒரு மூடுசிவிகையில் வைப்பித்து அவர்களிடம் ஒப்பித்து 'இதனுள் உள்ள புலவரை இடையில் திறவாமல், உரியவிடத்தில் வைத்துத் திறந்து உங்களிஷ்டப்படி செய்யுங்கள்' என்று கூறி அவர்களை அனுப்பினன்.

சங்கமர்கள் யாவரும் அச்சிவிகையுடன் சென்று, கூத்தரைப் பழிக்குப் பழி வாங்க வெண்ணி உரியவிடத்தில் வைத்து மூடியைத் திறந்து பார்த்தவளவில், உள்ளிருப்பவர் கூத்தராயில்லாமல் அரசன் புதல்வனாயிருப்பக் கண்டு திடுக்குற்று நிற்ப, அப்புதல்வன் — 'நீவிர் எண்ணியதை என்பாற் செய்க' என்றான். அவர் அதற்கிணங்காமல், அப்புதல்வனுடன் அரசனிடந் திரும்பச் சென்று, கூத்தரையே தம்பாலொப்பிக்கும்படி மன்றாடிப் பிடிவாதமாய் நின்றார்கள்.



அரசன் செய்வதறியாமல் திகைத்து நின்றபோது, கூத்தர் தாமே நேரில் வந்து தம்மை அவர்களிடம் ஒப்பித்துவிட்டனர். அச்சங்கமர்கள், புலவரை யழைத்துக்கொண்டு குறித்தவிடஞ் சென்றபோது சூரியனும் அஸ்தமித்தனன்.

தம்மைப் பழிக்குப் பழி வாங்கத் துணிந்து நின்ற அக் கூட்டத்தவரை நோக்கிப் புலவர் — 'என் நித்திய பூசையை முடிவாக நான் செய்துகொள்ளும்படி விடைதந்து, அது முடிந்தபின் உங்கள் எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளுதிர்' —என்று அச்சங்கமக் கூட்டத்தாரை வேண்டிக்கொள்ளலானார். அவர்களும் அதற்கு அனுமதி தந்தனர்.

புலவர், உடனே அரிசிலாற்றில் நீராடி அந்நதிப் பக்கத்துள்ள 'முளைச்சாளம்மை' கோயிலுள் நுழைந்து யாவரும் விலகியுள்ள தருணம் பார்த்துக் கோயிற்கதவை யடைத்துத் தாழிட்டுக் கொண்டனர். அஃதறிந்ததும், சங்கமரெல்லாம் பெருங் கோபங் கொண் டாரவாரித்தனராயினும், கோயிலுள்ளாரை ஒன்றுஞ் செய்ய ஒருப்படாமல், விடிந்தபின் வெளிப்படுத்திக் கொல்வதாகத் தீர்மானித்திருந்தனர்.

கோயிலுள்ளிருந்த புலவர், அவ்விரவில் காளிகாதேவியை நோக்கித் தமது பேராபத்தை நீக்கி யருளும்படி பலவாறு பிரார்த்திக்க, அத்தேவியும் 'உமது பெரும்பழி நீங்கும்படி, சங்கமர் வழிபடுந் தெய்வமாகிய வீரபத்திரக்கடவுளின் சரித்திரத்தை ஓர் பிரபந்தமாக இயற்றுதிர்' என்று ஆணையிட, அவரும், அன்றிரவு முடிவதற்குள், 'தக்கயாகப் பரணி' என்ற அரிய நூலை அக்கடவுள்மேற் பாடி முடித்தனர். சூரியனும் உதயமாயினன்.

விடிவதை எதிர்ப்பார்த்து நின்ற பழிகாரர்கள் புலவரை வெளியேறும்படி அழைத்தனர்.

புலவரும், தாம் 'இரவில் வீரபத்திரக்கடவுள் சரித்திரத்தைப் புனைந்து பாடிய பிரபந்தம் இது' என்று சாளரமொன்றன்வழியே அவர்களிடம் நீட்ட, அவர்களும் அதனை வாங்கிப் படித்தவளவில், 'நங்கடவுள் சரித்திரத்தை ஓரிரவில் மிக அழகாகப் பாடி முடித்தது அற்புதம், அற்புதம்' என்று வியந்து, 'இத்தகையோரைக் கொல்வதினும், இவராற் பல நன்மைகளும் உலகம்பெற விடமுண்டே' என்ற சிந்தையால், தங்கள் கோபந் தணிந்தவர்களாய், முடிவாக, 'பழிக்குத் தக்க பரிகாரத்தை நீரே செய்து பரிசுத்தராகிய உம்மை இனிக் கொல்லோம்' என்று தங்கள் ஆயுதங்களையெல்லாம் அச்சாளரவழியே புலவரிடஞ் சேர்த்துவிட்டு — 'இனி உம திஷ்டம்போல வெளியேறிச் செல்க' என்று வேண்டினர்.

புலவர் — 'இதுவும் திருவருட்செயலே' என்று தேவியைப் பலவாறு புகழ்ந்து வெளியேற, அவரது கொலைப்பாவத்துக்கு ஏற்ற பரிகாரத்தையும் அச்சங்கமரே செய்வித்து, அவரைத் தம் மனைக்கேகச் செய்தனர். அரசனும் இச்செய்தி தெரிந்து அளவற்ற மகிழ்ச்சி யடைந்தான் — என்பது.

இச்சரித்திரத்தினின்று, ஈட்டியெழுபது பாடிய வரலாறாக முன் கூறியதைப் போலவே தக்கயாகப்பரணி பாடியவரலாறும் அமைந்துள்ள செய்தி தெரியலாம். செங்குந்தர்க்குப் பிரதியாகச் சங்கமர்களும், சோமன் தன் புதல்வனை மூடுசிவிகையில் அனுப்பினன் என்பதற்குப் பிரதியாகச் சோழன் அவ்வாறு செய்தான் என்பதும் அவ்விரண்டு கதைகளிலுமுள்ள வேறுபாடுகளாக வுள்ளன. ஆனால் தமிழ் நாவலர் சரிதையில் —

**''பழிகாரர் தோடர்ந்தபோது கூத்தர்**
**சோமன் வாசலில் ஓடிச்சொன்ன கவி''**

**''அடையென்பார் தள்ளென்பா ரன்பொன் னிலாமற்**
**புடையென்பார் தங்கடைக்கே போகேம்**
**— கொடையென்றால்**
**முந்துஞ்சோ மாபுவனைமுன்னவனே நின்கடைக்கீழ்**
**வந்துய்ஞ்சோ மாதலான் மற்று''**

என்ற கூத்தர்பாட்டொன்று குறிப்புடன் காணப்படுகின்றது.



'பழிகாரர்' என்பதனாற் கொலைக்குக் கொலை வாங்க வந்தோர் என்பதும், 'சோமா புவனை முன்னவனே' என்பதனால், அப்போது கூத்தர்க்கு அடைக்கலங் கொடுத்தவன் சோமன் என்ற புவனைத்தலைவன் என்பதும் பெறப்படுதலால், எவ்விதத்தும் சோமனே கூத்தரை ஆபத்தினின்று தப்பிவைக்க முயன்றவன் என்பது தெளியப்படும். ஆகவே, சோமன் என்பதே சோழன் என்று பிற்காலத்தாரால் எழுத்துமாறிக் கதை கூறப்பட்டதென்று கருத இடமுண்டு.

இச் சோமன், சோணாட்டுத் திரிபுவனம் என்ற புவனையில் பெருஞ்செல்வனும் வள்ளலுமாக வாழ்ந்தவன்.

**'சொல்லருமை நாலிரண்டிற் சோமன்**
**கொடையருமை**
**புல்லரிடத் தேயறிமின் போய்'**
(தனிப்பாடல்)

**'துலையிலங் கியகொடைச் சோமன்வாழ்**
**புவனையில்'**
(தமிழ் நா சரி.)

**'சோமனோர் வள்ளலிந்து'**
(சூடாமணி நிகண்டு)

என்பனவற்றால் இவனது கொடைப்பெருமை நன்கு வெளியாகும். ஒருகால், சோழனைக் காணவேண்டி அரண்மனையுள் நுழைந்த சோமன், அவ்வரசனைக் கண்டு திரும்புகின்ற கூத்தரை எதிர்ப்பட்டு, 'அரசன் சமயம் யாது' என்று உசாவ, அப்புலவர் —

**'தன்னுடைய தேவியர்க்குத் தார்வளவன்**
**றானுரைப்ப**
**துன்னுடைய சீர்த்தி யுயர்நலமே — துன்னுபுகழ்ச்**
**சோமா திரிபுவனத் தோன்றலே நின்புகழை**
**யாமா ருரைக்க வினி'**

என்று கூறினரென்று தமிழ் நாவலர் சரிதையிற் குறிப்புடன் காணப்படும் வெண்பா, பேரரசரும் மதித்த இவ்வள்ளலின் பெருமைக்குத் தக்க சான்றாகின்றது.

இனி, கூத்தர் காலத்தே புகழேந்திப்புலவரும் பெரும் புலவராய் விளங்கினர் என்பது, முன்னூல்களாலும் கன்ன பரம்பரையாலும் தெளிவாகின்றதாயினும், அவ்விருவர்க்கும் பெரிய மாற்சரியம் உண்டாயதென்று கொண்டு பற்பல கதைகள் கற்பிக்கப்பட்டு வழங்கி வருவதை, நூலாராய்ச்சி யுடையார் நம்பக்கூடவில்லை. உதாரணமாக; புகழேந்தியார் 'நளவெண்பா'வை அரங்கேற்றும்போது 'மல்லிகையே வெண் சங்கா வண்டூத' என்ற பாட்டில் ஒட்டக்கூத்தர் நிகழ்த்திய கேள்வியும் புகழேந்தியார் அதற்கு விநோதமாகக் கூறிய விடையும் 'விநோதரச மஞ்சரி' முதலியவற்றில் வழங்குவதைப் பலரும் அறிவர். இவை பிற்காலத்தார் புனைந்த கற்பனையே யன்றிப் பிறிதன்று என்பது—

**'எல்லியம்போ திருஞ்சிறைவண்**
**டெம்பெருமான் குணம்பாடி**
**மல்லிகைவெண் சங்கூது**
**மதிலரங்க மென்பதுவே'**

என்ற பெரியாழ்வார் திருமொழித் தொடரினும் 'மல்லிகைப் போதில் வெண்சங்கம் வண்டூத' என்ற திருக்கோவைத் தொடரினும் இதுவே கருத்துப் பயிலுதலால் தெளிவாகும். ஆகவே, முன்னோர் மொழிபொருளையுஞ் சொல்லையும் பொன்னேபோற் போற்றிக் கூறியதை அறியாது கூத்தரும் புகழேந்தியும் தருக்கித்தனர் என்பது கட்டுக் கதையே யென்பது தெளிவு.

இனி, கூத்தரையும் கம்பரையும் 'இராமாயணம்' பாடும்படி சோழனிட்ட கட்டளைப்படி இருவரும் பாடி முடித்து விட்டனரென்றும், இவற்றுட் கம்பரது இராமாயணமே



சீரியதாதலை யுணர்ந்து கூத்தர் தாம்பாடியதை வெளியேற்ற விரும்பாது வெறுத்து அஃதெழுதிய சுவடியைக் கிழித்து வந்தனரென்றும், தற்செயலாகக் கூத்தரைக் கம்பர் பார்க்க வந்தபோது இச்செயல் நிகழ்ந்ததை அறிந்து, உத்தர காண்டத்தையேனுங் கிழியாமல் உலகினர்க் குதவும்படி வேண்ட அவ்வாறே கூத்தர் செய்தனரென்றும் ஒருகதை வழங்குவது பலரும் அறிவர். இதுவும் உண்மையுடைய தன்று.

கூத்தர் இராமாயணம் பாடத் தொடங்கியதாக எந்த ஆதரவுங் காணப்படவில்லை. கூத்தர் வயதால் மிக முதிர்ந்துள்ள காலத்தில் கம்பர் மிக இளைஞராயிருந்தவர். இச்செய்தி, சடையவள்ளலின் தந்தைக்கு உதவித் தொழில் செய்து வந்தவர் கூத்தரென்றும், அச்சடைய வள்ளலால் அருமையாக வளர்க்கப் பட்டுக் கலைகள் நிரம்பிக் கவியரசராயினவர் கம்பரென்றும் தமிழ் நாவலர் சரிதை, 'சோழ மண்டல சதகம்' முதலியன தெளிவாகக் கூறுதலாற் பெறப்படும்.

கம்பர் இராமாயணம் பாடியது அவரது வாழ்க்கையின் பிற்பகுதியிலாம். அக்காலத்துக் கூத்தர் இருந்தனரோ இல்லையோ தெரியாது. இருந்தவரேயாயினும், மூன்று தலைமுறைகளாகச் சோழர்களது வாயிற் பெரும்புலவராய் இணையற்ற செல்வாக்குப் படைத்திருந்த அப்பெரியவரை, அவரது முதிர்ந்த நிலையில் கம்பர்க்குப் 'போட்டி' யாக இராமாயணம் பாடும்படி அரசன் நியமித்தனன் என்பது, எவ்வகையாலும் பொருத்தமுடையதன்று. ஆனால் கம்பருடன் பெரிதும் இகலிநின்ற புலவனொருவன் இருந்தனன். இவன் பெயர் 'வாணியன் தாதன்' என்பதாகும். இவன், அக்காலத்துவிளங்கிய பெருங் கவிகளுள் ஒருவன். தாம்பாடிய 'மும் மணிக் கோவை' யொன்றைக் கம்பர் சோழன் திருமுன்பு அரங்கேற்றியபோது, இவ்வாணியன் தாதன், அதன் முதற் பாட்டின் முதற்சீரிற் குற்றங் கூறினன் என்பது—

'கைம்மணிச் சீரன்றியாக் கம்ப நாடன்சொன்ன
மும்மணிக் கோவை முதற்சீர் பிழைமுனை
வாளெயிற்றுப்
பைம்மணித் துத்திக் கணமணிப் பாந்தட் படம்
பிதுங்கச்
செம்மணிக் கண்பிதுங் கப்பதம் பேர்த்த
செயதுங்கனே'

என்று, இத்தாதன் பாடிய கவி தமிழ்நாவலர் சரிதையிற் காணப்படுவதினின்று தெரியலாம். இவ்வாணியன் தாதற்கு அடிமைப்பட்டவரான 'கூவந்தியாகசமுத்திரம்' என்ற ஊரினர், ஒருகால் கம்பர் தம்மூர்ப்புறமாகச் சிவிகையிற் பிரயாணமாக வருதலறிந்து திரண்டு சென்று தம்மூர்க்கு வந்து தம்மைப் பாடும்படி வேண்டினரென்றும், தம் பகைவனான வாணியன் தாதனுக்கு அடிமையான அவ்வூர்க்கு அவர் வந்துபாட மறுத்தனரென்றும், அவ்வூரார் அதற்காக ஒழியாராய் கம்பர் சிவிகையை நெடுந்தூரஞ் சுமந்தும், அடைப்பையிட்டும் பெரிதும் வழிபட்டதற்கு உவந்து முடிவில் அவர்களைப் பாடினர் என்றும்—

'ஓங்கிய செந்தமிழ்த் தாதற் கடிமையவ் வூரதனால்
நாங்கலி சொல்வது மில்லையென் றேகம்ப
நாடன்செல்ல
ஆங்கவ னேறுஞ் சிவிகை சுமந்து
மடைப்பையிட்டுந்
தாங்கவி கொண்டது கூவந் தியாக சமுத்திரமே'

என்ற பழையபாட்டால் விளங்குகின்றன. இத்தாதனுக்குச் சோழன் விருது காள முதலிய வரிசைகளை அளித்துச் சிறப்பித்தபோது, அது பொறாத கம்பர்—



கூளம் பிடித்தெள்ளின் கோதுவைப் பானங்
குலக்கவிக்குக்
காளம் பிடித்திடிற் சின்னம் படுமன்பர் காதலிமார்
வேளம் பிடித்தகண் வெள்ளம் பிடிக்கவெம்
பேய்க்கிளம்பேய்
தாளம் பிடிக்கத் தனிவேல் பிடித்த சயதுங்கனே'
[தமிழ் நா.சரி.]

என்று பாடியதாக வழக்குண்மையாலும், அவ்விருவர்க்கும், உள்ளார்ந்த செற்றமிருந்தமை புலனாகும். கம்பர் இறந்தது கேட்டு ஒட்டக்கூத்தர் பாடியதாக வழங்கும்—

'இன்றன்றோ கம்ப னிறந்தநா ளிப்புவியில்
இன்றன்றோ புன்கவிகட் கேற்றநாள்— இன்றோதான்
பூமடந்தை வாழப் புவிமடந்தை வீற்றிருப்ப
நாமடந்தை நூல்வாங்கு நாள்'

என்ற வெண்பா, அத்தாதன் பாடியதாகவே தமிழ் நாவலர் சரிதை கூறுகின்றது கம்பர் கூத்தர்க்குள் எவ்வகைச் செற்றமும் நிகழக் காலம் வயது முதலியன பொருத்தம் பெறாமையால், அச்செற்றம்பற்றி வழங்குவன யாவுந் தாதனோடு கம்பர்க்கிருந்த பகைமை பற்றியவை என்று கொள்வதே பொருத்தம், இராமாயணம் உத்தரகாண்டம், கூத்தராற் பாடப்பட்டதென்பதற்குக் கன்னபரம்பரை தவிர வேறு தக்க ஆதரவொன்றும் இதுவரை கிடைத்திலது. கம்பரும் வாணியன் தாதனும் அக்காவியத்தை ஒருங்குபாட, அவற்றுட் கம்பர் வாக்கே புலவர்களாற் பெரிதும் போற்றப்பட்டமையால், அத்தாதன், தான்பாடிய இராமாயணத்தை ஒருக்கால்அங்ஙனங் கிழித்திருக்கலாமேயன்றிக் கூத்தர் அவ்வாறு செய்தனர் என்பது பொருத்தமற்றதென்றே சொல்லலாம்.

'தாணிலாவுங் சுழலபயன் சபையிற் பயிலுத்
தரகாண்டம்
வாணிதாத னரங்கேற்ற வைத்தார் சோழ
மண்டலமே,

என்ற சோழமண்டலசதகத் தொடரை நோக்கும்போது, இவ் வாணியன் தாதனே அவ்வுத்தரகாண்டம் பாடியவனோ என்று கருத இடந்தருகின்றது. வாணியன் தாதன் என்பது வாணி தாதன் என்று திரிந்து, அது, நாமகளருள் பெற்ற கூத்தர்க்குரிய பெயராக மாறிக்கருதப்பட்டதாகவுஞ் சொல்லத்தகும். ஆனால் இக்கொள்கைக்கு வேறு தக்க ஆதாரம் வேண்டும்.

கூத்தர் தக்கயாகப்பரணி பாடியபின்பே, ஈட்டியெழுபது பாடியவர் என்பது—

'ஏந்தையா மம்மைபாகத் திறைவனை
வணங்கியாமே
பைந்தமிழ்ப் பரணிசெய்த பாடலோடு'
[ஈட்டி - 63]

என்னும் தொடரால் அறியப்படும். சோழரது வாயிற்புலவ ரான இவர், மற்ற வேந்தரினும் உயர்வாகத் தம்மரசனை நாட்கவியாற் சிறப்பித்து வந்தனர் என்பதை —

'வாட்கவி கொண்ட மன்னன் வளவனு மகிழநாமே
நாட்கவி பாடுநாட்போ லிருப்பது சோழநாடே'
(ஈட்டி - 2)

என்று இவரே ஈட்டியெழுபதிற் பாடுதலால் உணர்க. இக் காலத்து விளங்கிய பெரும் புலவர்களில் பேராசிரியர் என் பவரும் ஒருவர். கூத்தர் விக்கிரமசோழனுலா அரங்கேற்றும் போது நேமிநாதர் பட்டோலை பிடித்தெழுத இப்பேராசிரியர் பாடியதாகத் தமிழ் நாவலர் சரிதை கூறும் அழகிய பாடல் அடியில் வருமாறு: —



'செங்கான்மட வன்னம்படர் தீயாமென வெருவிச்
சிறையிற்பெடை மறையக்கொடு திரியத்திரன்
கமுகின்
பைங்காய்மர கதமீது படர்ந்தேறி நறுந்தண்
பாளைக்கிடை பவளக்கொடி படர்காவிரி
நாடா
தங்காதலி யருமைந்தரு முடனாக வணங்கித்
தலைகாவெம துடல்காவெம துயிர்காவக
ளங்கா
கொங்காமன துங்காவென மதுரேசர் வணங்குங்
கொல்யானைய பயங்காலிவள் குழலோசை
பொறாளே'

இப்பேராசிரியர், தொல்காப்பியவுரையாளருள் ஒருவரான 'நல்லறிவுடைய தொல்பேராசானோ' என்று கருத இட முண்டு. தொல்காப்பியஞ் செய்யுளியல் 161 - ஆம் சூத்திர வுரையுள்—

'இக்காலத்தார் ஏறியமடற்றிறம் என்னும் பெருந்திணைப் பொருண்மேலும் காமஞ்சாலா இளமையோளை யொழிந்த மகளிரோடுங் கூட்டியுரைக்குங் கைக்கிளைப் பொருண்மேலுங் கலிவெண் பாட்டெனப் பொருள்கொடுத்துச் செய்யுள் செய்ப வால் ... ... ...'

என்று அப்பேராசிரியர் எழுதுவது, கூத்தர்பாடியஉலாக்களைக் குறிப்பதாகக் கருதற்குரியதே. ஈண்டு நேமிநாத ரெனப் பட்டவர், நேமிநாதமென்ற சின்னூலியற்றிய ஆசிரியர் போலும், இனி, மேற்கூறிய பாடல், 'பேராசிரியர்—நேமி நாதர்' என்பவர் பட்டோலைபிடிக்க ஒட்டக்கூத்தர் பாடியதாகக் கூறுவதுமுண்டு. ஆயின், தொல்காப்பிய வுரையாளர்க்கு நேமிநாதரென்ற இயற்பெயர் வழங்கியதாக வேனும், அன்றி வேறு புலவரைக் குறிப்பதாகவேனும் கொள்ளற் குரியது.

சங்காலத்தில், புன்கவிகள் பலர்தோன்றி, தமிழின் பெருமை இதையச் செய்துவந்ததைப் பொறாத இப்புலவர், அரசாங்கத்துத் தமக்கிருந்த செல்வாக்கினால், அவர்களையெல்லாங் கடுந்தண்டனையால் ஒறுத்துவந்தனரென்றும், அதுபற்றிப் புலவரெல்லாம் இவரை வெறுத்தனரெனறும், கதைகள் வழங்குவதில் உண்மையில்லாமற் போகவில்லை. இரண்டொன்றா முடிந்து தலையிறங்கப்போட்டு—வெட்டு தற்கோ கவியொட்டக் கூத்தனில்லை—தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே' என்று பிற்காலத்தாரும் இதனைப் பாடினர். பழைய சரித்திரங்களைக் கூடியவரை முன்னை வழக்கைப்பற்றியே கூறுவதாக மதிக்கப்படும் தமிழ்நாவலாசரிதையில் **'கவிகளை அறுத்தபோது புலவரெல்லாம் வெகுளப் பாடியது'** என்ற குறிப்பின்கீழ்—

**'பாட்டுத் தொடுக்கும் புலவோர்க்குக் கூத்தன் பயப்படல்பே**
**தாட்டுக் கடற்புலி யஞ்சலன் றோவறுத் துக்கிடந்த**
**சூட்டுக் கதிர்க ணிலத்தடங் காமற் றொகுத்துமள்ள**
**மேட்டுக் குவாலிடும் பொன்னிநன் னாடுடை வேற்கண்டனே'**

என்றும், **'கவிஞரை வெட்ட வேண்டா என்று நெற்குன்ற வாண முதலியார் பாடியது'** என்ற தலைப்பின்கீழ்—

**'கோக்கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர் கோகனகப்**
**பூக்கண்டு கொட்டியும் பூவா தொழிந்தில பூவில் விண்ணோர்**
**காக்கண்ட செங்கைக் கவிச்சக்கர வர்த்திநின் கட்டுரையாம்**
**பாக்கண் டொழிவர்க ளோதமிழ் பாடிய பாவலரே'**

என்றும் வரும் பாடல்கள் மேற்கூறிய வரலாற்றின் உண்மைக்குச் சான்றாதல் காண்க.



இக் கூத்தர், கூத்தன் கவிச்சக்கரவர்த்தி, ஒட்டக் கூத்தர் என்றும் வழங்கப்பெறுவர். தக்கயாகப் பரணியிறுதியில் 'வாழி கவிச்சக்கரவர்த்தி கூத்தனே' 'கூத்தன் கவிச்சக்கரவர்த்தி வாழியே' என்று இவர்தாமே கூறிக் கொள்ளுவதுங் காண்க.

செங்குந்தரது அற்றதலைகள் ஒட்டப்பாடினமையால் ஒட்டக்கூத்தரென்று பெயர் பெற்றார் என்று கூறுவதுண்டு.

விக்கிரமசோழன் திருமுன்பு இவர் முதன்முதல் எய்திய போது, அவன், தன்முன் இவர் பாடியரங்கேற்றிய அரும்பகைத் தொள்ளாயிரத்து ஓர் செய்யுளைத் தனக்கு ஒட்டப்பாடச் சொன்னானென்றும், இவர் அவ்வரசன்மேற் பாடிய உலாவில் இரு கண்ணிகளையிணைத்து ஒரு வெண்பாவாக ஒட்டப்பாடச் சொன்னான் என்றும் அறியப்படுதலால், அவ்வாறே பலமுறை ஒட்டப்பாடிய சிறப்புப்பற்றி அப்பெயர் பெற்றனரோ என்று அறிஞர் கருதுவர். அன்றி, ஒட்டம் என்பது பந்தயப் பொருளாதலின், பிறபுலவருடன் பந்தயம் வைத்துப் பாடும் புலவர் என்று பொருள் கூறுதலும் பொருந்தும். பிற்காலத்திலும் இவரது வாக்கினயம் பெரிதும் பாராட்டப்பட்டதே.

ஒட்டக்கூத்த னென்ற பெயர் தரித்த புலவனொருவன் ஏதோ கவிகள் பாடி வந்ததைக் கேட்ட தத்துவப் பிரகாசர் என்ற புலமைப் பெரியார்—

**'பறியாரோ நின்வாயிற் பல்லதனைப் பாவோர்**
**முறியாரோ நின்முதுகின் முள்ளைச்—சிறுகவொரு**
**மட்டப்பேர் போதாதோ வாக்கிதுவே யானக்கால்**
**ஒட்டக்கூத் தன்றா னுனக்கு'**

என்று, அவன் வாக்கை வெறுத் திழித்தனரெனத் தமிழ் நாவலர் சரிதை கூறும்.

மேற்கூறியவற்றினின்று, கூத்தர் பாடிய நூல்கள் **அரும்பகைத் தொள்ளாயிரம், காங்கேயன்மேல் நாலாயிரக் கோவை, விக்கிரமசோழனுலா, குலோத்துங்க சோழனுலா, இராசராசனுலா, குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், தக்கயாகப்**

பரணி, ஈட்டியெழுபது— என்பவை என்று தெரியலாம். இவையன்றி எதிர் நூல் என்ற இலக்கண மொன்றும் கூத்தரால் இயற்றப்பட்டிருந்த தென்பது—

'ஆரவார விலக்கணநூ லைந்துமுழங்க
வதற்கெதிர் நூல்
பாரின்மீது தமிழ்க்கூத்தன் பாடியமைத்தான்
பயனோர்ந்தே'

என்ற தமிழ்நாவலர் சரிதைத் தொடரால் புலப்படுகின்றது. 'அவர் உடம்படாதனசொல் உளவென்று 'எதிர் நூல்' என ஒருவன் பிற்காலத்து நூல் செய்யுமாயின்' (தொல்-மரபி-64) என்று பேராசிரியர் எழுதியது இந்நூல் வழக்கைக் குறிப்பிக்கின்றது. இவையன்றி, தனிப்பாடல்களாகக் கூத்தர் பாடியவை, பலவாக வழங்குகின்றன. அவற்றுள் தமிழ் நாவலர் சரிதையில், அப்புலவர் அவ்வப்போது பாடியனவாகக் கண்ட அரிய செய்யுட்கள் அடியில் வருமாறு:—

**இந்த விருதுகள் யாருக்கென்றபோது கூத்தர் பாடியது**

'பத்துக்கொண் டனதிக்கும் பதறிப்போய் முடியப்
பைம்பொற்றா ரகைசிந்தப் பகிரண்டத்
திடையே
மத்துக்கொண் டமுதத்தைக் கடையாழித் திருமால்
வடிவாகிப் புவிகைக்கொண் டருண்மானா
பரணா
முத்துப்பந் தரினிற்குங் குருளைக்குஞ் சினவேன்
முருகற்கும் பொதியக்கோ முனிவற்கும் பதுமக்
கொத்தற்குஞ் சடிலக்குந் தளருக்கு மல்லாற்
கூழைத்தண் டமிழர்க்கேன் கொடியுங்கா
ளமுமே.'



**விக்கிரமசோழனுலாப் பாடியபோது 'ஒரு கண்ணியை ஒட்டப் பாடுக' என்றபோது பாடியது**

'★கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே — வையம்
அளந்தா யகளங்கா வாலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளென் மான்'

**தேவி ஊடலாய்க் கதவடைத்தபோது கூத்தர் பாடியது**

'கரத்துஞ் சிரத்துங் களிறுடைக் கண்டன்வந்தான்
நிரத்துங்கபாட மினித்திறப் பாய்பண் டிவனணங்கே
உரத்துஞ் சிரத்துங் கபாடந் திறந்திட்ட
துண்டிலங்கா
புரத்துங் கபாட புரத்துங்கல் யாண புரத்தினுமே'

**கண்டன் துலாபுருடதானம் பண்ணியபோது கூத்தர்பாடியது**

'தொழுகின்ற மன்னர் சொரிந்திட்டசெம்பொற்று
லாத்திடைவண்
டுழுகின்ற தார்க்கண்ட னேறிய ஞான்றி
னுவாமதிபோய்
விழுகின்ற தொக்கு மொருதட்டுக் காலையில்
வேலையில்வந்
தெழுகின்ற ஞாயிறொத் தான்குல தீப
னெதிர்த்தட்டிலே'

**ஆனை நிகளம் படுத்தபோது பாடியது**

'இன்னங் கலிங்கத் திகல்வேந்த ருண்டென்றோ
தென்னன் தமிழ்நாட்டைச் சீறியோ — சென்னி
அகளங்கா வுன்ற னயிரா வதத்தின்
நிகளங்கால் விட்ட நினைவு'

★ இதன் முதலடியிரண்டும் விக்கிரமசோழனுலாவின்கண் உள்ளன.

கண்டன் சென்று வெளியிற் குதிரை யேறியபோது
கூத்தர் பாடியது

‘கண்டன் பவனிக் கவனப் பரிநெடுங்கால்
மண்டுளக்கா தேயிருந்த வாறென்னோ
— கொண்டிருந்த
பாம்புரவி தாயல்ல பாருரவி தாயல்ல
வாம்புரவி தாய வகை’

இராசா கை கொடுத்தபோது கூத்தர் பாடியது

‘கொலையைத் தடவிய வைவே லரக்கர் குலமடியச்
சிலையைத்தடவிய கையே யிதுசெக தண்டத்துள்ள
மலையைத் தடவிய விந்தத் தடவி மலைந்த
வொன்னார்
தலையைத் தடவி நடக்குங்கொல் யானைச்
சயதுங்கனே.’

மடையனைத் தண்டஞ் செய்ததை விலக்கக் கூத்தர் பாடியது

‘மீனகம் பற்றிய வேலையு மண்ணையும்
வெற்படங்கப்
போனகம் பற்றிய மாலல்லை யோபொருந்
தாவசுரர்
கானகம் பற்றக் கனவரை பற்றக் கலங்கள்பற்ற
வானகம் பற்ற வடிவேல் விடுத்த மனதுங்கனே.’

கூத்தர் மாணாக்கன் பாடிய அந்தாதிச் சமுத்தி

‘மாவுறங்கின புள்ளுறங்கின வண்டுறங்கின
தண்டலைக்
காவுறங்கின வின்னமென்மகள் கண்ணுறங்கிலள்
கையணைக்
கோவுறங்கு கடைத்தலைக்குல தீபவள்ளை
குதட்டநின்
றாவுறங்குபு காரசஞ்சல வஞ்சலென்ன வடுக்குமே.’



அரியைப் பாட வேண்டுமென்னக்
கூத்தர் பாடியது

‘ஆரே யெனுமொன்று சொல்லத் தொடங்கினு
மவ்விடத்துன்
பேரே வருமென்ன பேறுபெற் றேன்பெரு
நான்மறையின்
வேரே மிதிலையின் மின்னுட னேவெய்ய
கானடந்த
காரே கடல்கொளுந் தச்சிலை வாங்கிய
காகுத்தனே.’

இத் தனிப் பாடல்களினின்றும், தமக்குச் சோழனளித்த கொடி காள முதலிய பெரு வரிசைகள், தந்தகுதிக்கு மேற்பட்டனவென்று கூத்தர் கூறியதும், விக்கிரம சோழனுலாவை அச்சோழன் திருமுன்பே அரங்கேற்றியதும், தேவியின் ஊடலைத் தீர்த்துவைக்கும் அந்தரங்க நட்பினராய் இவர் அரசனிடம் விளங்கினமையும், சோழனது துலாபுருஷ யாகத்தைச் சிறப்பித்துப் பாடியதும், அவன் ஏறிய யானை குதிரைகளின் பெருமைகளைப் புனைந்ததும், சோழனால் கைகொடுத்து மரியாதை செய்யப்பட்டவரென்பதும், அரசனுக்குத் தீங்கு விளைத்து அதனால் கடுந்தண்டனை விதிக்கப்பெற்ற இராச மடையனை அத்தண்டனையினின்று விலக்கி உய்ய வைத்தன ரென்பதும், மாணாக்கர் பலரை யுடையரா யிருந்தவ ரென்பதும், திருமாலிடமும் பத்தி பூண் டிருந்தவரென்பதும் நன்கு விளங்கும்.

இப் புலவர் பெருமானது ஊர் மலரி என்று தண்டியலங்காரப் பாடலொன்று (49, மேற்.) குறிப்பிக்கின்றது ஒரு சாரார் மணவை என்று கருதுவர். இவற்றினுண்மை ஆராய்ச்சிக்குரியதாகும்.

தஞ்சாவூர் ஜில்லா, பூந்தோட்டம் என்ற ஸ்டேஷனுக்குப் பக்கத்துள்ள கூத்தனூரில், ஒட்டக் கூத்தர்க்கு விக்கிரகமொன்றும், அப்புலவர் வழிப்பட்ட சரசுவதி ஆலயமும் உள்ளன என்றும் தெரியவருகின்றன. (சோழமண். சத. பாடப்

பட்டோர் வரலாறு, பக். 39) இதுவரை கூறிவந்தவற்றால், கவிச்சக்கரவர்த்தியாகிய கூத்தரது உண்மை வரலாற்றின் ஒரு பகுதி முன்னூல்களின் ஆதரவுடன் விளங்கக் கூடியதாதல் கண்டுகொள்க.

## 2. எழுப்பெழுபது

இஃது இரண்டாவது நூலாக இப் பிரபந்தத் திரட்டில் அமைந்துளது.

சோழன்முன் தங்கள் சுத்தவீரத் திறந் துலங்கும்படி சிரச் சிங்காதனமிட்ட செங்குந்த வீரர்களது வெட்டுண்ட தலைகள் ஒட்டிக் கொள்ளுமாறு கலைமகள் முதலிய கடவுளரை வாழ்த்திக் கூத்தர் பாடியதென்று இதன் விவரங் காணப் படுகின்றது.

இந்நூலை அப்புலவரே பாடினர் என்பதற்கு வேறு ஆதாரம் இல்லையேனும், பரம்பரை வழக்குண்டென்பர்.

இப் பிரபந்தத்துள் இப்போது கிடைத்துள்ளவை பதின் மூன்று பாடல்களேயாம்.

## 3. களிப்பொருபது

இது சிலர் சிங்காதனமிட்ட செங்குந்த வீரர்களின் பெருமையையும் அவற்றை ஒட்டப் பாடிய கூத்தரது தெய்வீக சக்தியையும் சிறப்பித்து அசரீரி முதலியோர் பாடியனவாகத் தொகுக்கப்பட்டது.

## 4. திருக்கைவழக்கம்

இது செங்குந்த மரபினருள்ளே மேம்பட்டவர்களது கைவண்மைகளைச் சிறப்பித்துக் கலிவெண்பாவில் அமைந்த தொரு பிரபந்தமாகும்.

வேளாளரைப் பற்றித் **திருக்கை வழக்கம்** என்கிற நூல் பாடப்பட் டுள்ளவாறே, இதுவும் செங்குந்தரைப் பற்றியதாய் ஒவ்வொரு கண்ணியும், 'கை' என்ற சொல்லால் முடிவுறுவது.



இந்நூல் புகழேந்தியார் பாடியதென்பர்; ஆனால், இதற்கு வேறு ஆதாரம் ஆராய்ந்தறிய வேண்டும்.

## 5. பிள்ளைத்தமிழ்

இது செங்குந்த வீரர்களது பிள்ளைமைப் பருவங்களைச் சிறப்பித்து **ஸ்ரீஞானப்பிரகாச முனிவர்** என்பவரால் இடம்பெறப் பெற்றது. அவ் வீரரது வீரம் நியாயம் தியாகம் முதலிய சிறப்புக்களை இனிய வாக்கிற் பலபடப் பாராட்டுவது.

இற்றைக்கு ஒரு நூற்றுத்தொண்ணூறு வருஷங்கட்கு முன்பு இந்நூல் இயற்றப்பட்டதென்று, இதனிறுதியில் வரும் பாட்டி னால் அறியக் கிடக்கின்றது.

## 6. கலித்துறைமாலை

இதுவும் செங்குந்தரது பெருமைகளை யெடுத்து ஒரு நூறு கட்டளைக் கலித்துறைகளாற் புகழ்ந்து **நாகைமுத்துக் குமார தேசிகர்** என்பவரால் இயற்றப் பெற்றது. இனிய எளிய வாக் குடையது.

இந்நூற் பாடல்களாகப் பிறகு கிடைத்த வேறு சிலவும் அனுபந்தமாகப் பதிப்பாசிரியராற் சேர்க்கப்பட்டுள்ளன.

## 7. தசாங்கம்

செங்குந்தரது மலை, யாறு, நாடு, நகர், மாலை, குதிரை, யானை, முரசு, கொடி, செங்கோல்களைப் புகழ்ந்து பத்து வெண்பாக்களால் அமைந்தது. இது **ஸ்ரீ சத்திய சந்தர்** என் பவரால் இயற்றப்பட்டதென்பர்.

## 8. ஊசல் முதலியவை

இது **மயிலைநாதர்** என்பவரால் இக்குலத்து வீரர்களைப் பற்றிப் பாடப்பட்ட ஊசல், வாழ்த்து, லாலி, எச்சரிக்கை, பெரியகட்டியம், சின்னகட்டியம், மங்களம் என்ற விஷயங் களமையப் பாடப்பட்ட செய்யுட்டொகுதி யாகும்.

இப் பிரபந்தங்கள் ஒரு மரபினரைப் பற்றியே புகழப் பட்டவை யாயினும், இவற்றினின்று அறியக் கிடக்குஞ் சரித் திரங்கள் பலவாகும். கர்ணபரம்பரையாக இச்சரிதங்கள் வழங்கி வருவனவாதலின் சரித்திரவாராய்ச்சி செய்வார்க்கு இவை மிக உதவியாகக் கூடியனவே.

இந்நூல்களுள்ளே ஈட்டியெழுபது மட்டும், பழைமையும் புதுமையுமான வழக்குக்களைத் தழுவி எழுதப்பட்ட பேருரை யுடன் கூடியுள்ளது. இவ்வுரையுட் பல வரலாறுகள் வேறு நூல்களைத் துணைகொண்டு விளக்கப்பட்டிருக்கின்றன.

ஈட்டியெழுபதிற் கூத்தர் குறிப்பிட்ட **பழுவூர் வீரன், பழுவை நாராயணன்** முதலிய செங்குந்த வீரர்களது சரித்திர விரிவை **வீர நாராயண விசயம்** என்ற தமிழ்க்காவியத்துங் காணலாம். இவ் வீரர்கள் **பராந்தகன்** எனப் பெயர் பெற்ற சோழனது படைத் தலைவர்களாக அக்காவியங் கூறுதல் அறியத்தக்க விஷயமாகும்.

**ஸ்ரீ காஞ்சி நாகலிங்க முனிவர் அவர்கள்** தம் குலத்து முன்னோர்களது ஆதி வரலாறுகளைப் பலரும் அறிதற் குதவியாகச் 'செங்குந்தர் பிரபந்தத் திரட்டு' என்ற இந் நூற்றொகுதியை வெளியிட்டது புகழ்ச்சிக் குரியதே.

இப் பிரபந்தத் திரட்டுக்கு 'ஆராய்ச்சியுரை' ஒன்றை என்னிடமிருந்துபெற விரும்பினமையின், நெடுங்காலமாகத் தமிழ்த் தொண்டு புரிந்துவரும் அவர்களது விருப்பத்தை நிறை வேற்றுவது என் கடமையாகவே கொண்டு இஃதெழுத லாயினேன்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்துச் **செந்தமிழ்ப்** பத்திரிகையை, **ஸ்ரீ** ஸேதுஸம்ஸ்தானம் மகாவித்வானும், என் அரும்பெறல் அத்தை மகனாருமான **ஸ்ரீ ரா. இராகவையங்கார் அவர்களும்** யானும் நடத்தி வந்த காலத்தே, அப் பத்திரிகை வாயிலாகப் பொய்யா மொழிப் புலவர், கூத்தர் முதலிய புலவர் பெருமக்கள் வரலாறுகள் பல வருஷங்கட்கு முன்பே அரிய புதிய செய்தி களுடன் எங்களால் நன்கெழுதப்பட்டுள்ளன. அவற்றையே ஒருசில கூட்டியுங் குறைத்தும், புதியவாய் ஆராய்ச்சி செயது கண்டவர்போல எழுதித் தங்கட் குரிமையாக்கிக் கொண்டாரும் உளர். அன்னோர் கையாண்டு வரும் ஒழுக்கம் எத்தகைய



தாயினும், எம்மாராய்ச்சியின் கருத்துக்களும் முடிவுகளும் எவ் விதத்தும் தமிழகத்திற் பரவி வருவது மகிழ்ச்சியையே தருகின்றது.

கூத்தன் கவிச்சக்கரவர்த்தி வரலாறுகளாக முன்பெழுதப் பட்டவற்றோடு, பின்பு புதியவாக்க் கண்ட கருத்துக்களையும் இவ்வாராய்ச்சி யுரையுட் குறித்திருக்கிறேன்.

இங்ஙனம், கவிச்சக்கரவர்த்தியின் அருமை பெருமைகளைக் கொண்டாடி எழுதும்படி தக்க சந்தர்ப்பமொன்றை எனக் களித்த முனிவரவர்கட்கு நான் பெரிதும் நன்றியறிதற் கடப்பா டுடையேன்.

திருவல்லிக்கேணி
8—3—26

**மு. இராகவையங்கார்**



## அனுபந்தம்

**குறிப்புகள் :**

சோமன் - திரிபுவனம் என்னும் ஊரிலிருந்த ஒருவள்ளல். திரிபுவனம் திருநாகேசுரம் இரயிலடிக்குச் சமீபத்திலுள்ளது. இது ஒரு சிவத்தலம். பக் - 21.

புவனை- திரிபுவனம் அல்லது புவனகிரி யாதல் வேண்டும். புவனகிரி என்னும் பட்டினம் சோமன் கண்டதென்று பலர் கூறு கின்றனர். ஆராய்ந்தறிய வேண்டும் பக் - 21.

பேராசிரியர் வேறு நேமிநாதர் வேறு. பேராசிரியர் தொல் காப்பியத்திற்குரை யெழுதியவரா யிருக்கவேண்டும். இவரையே நச்சினார்க்கினியர் என்று கூறுவதும் உண்டு. நேமி நாதர் 'நேமிநாதம்' செய்தவர். பக்- 26-27

இந்நெற்குன்றவாண முதலியார் திருப்புகலூர் அந்தாதி பாடியவர்; நெற்குன்றம் வண்டலூர் இரயிலடிக்குச் சமீபத்தி லுள்ளது. பக் - 28.

'கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ் - செய்யகரிய திரு மால்' என்னும் வெண்பாவின் முன்னிரண்டடியும் விக்கிரம சோழனுலா - 15-வது கண்ணியாம். பக்- 31.

கபாடபுரம் |- பாண்டி நாட்டின் பழைய தலைநகர். கலியாணபுரம் - சளுக்க வேந்தருடைய இராஜதானி, வடக்கே நைசாம் ராச்சியத்திலுள்ளது. பக்- 31.

துலாதானம் - ஒருவனுடைய நிறையளவு பொன்னை ஒரு அறிவனுக்குத் தானஞ் செய்வது. பக் - 31.

கண்டன் - சோழன். செண்டு வெளி - செண் டாடுகிற வெளி. செண்டு - பந்து. பக்- 31.



# கல்வெட்டுரை

காஞ்சிபுரம்

தொண்டைமண்டலம் கண்டருளிய தழுவக்குழைஞ்சான்மடம்

**கல்வெட்டாராய்ச்சியரும் காலக்கணிதருமாகிய**

**ஏகைநூல் வானநூல் காணும்**

**தமிழ்மருத்துவன்**

**ஸ்ரீமத் திரு. சுப்பிரமணிய தேசிகனார் அவர்கள்**

எழுதியது

"தடவரை முனிவ னீன்ற தமிழ்க்கொழுங்
குழவி தன்னை
படர்வெயி லுமிழுஞ் சங்கப் பலகையாந்
தொட்டிலேற்றி
நடைவர வளர்த்து ஞால நனந்தலை
மறுகில்விட்ட
மடனறு புலமை யோரை மனத்துயா
நினைத்து மன்றே"

தமிழர்களது சாதியினைப்பற்றிஆராய்ச்சி செய்வதனுக்குக் கருவியாகிய வாகையினைக் கூறும் வாகைப்படலம் முதலிய இறந்தன; ஆயினும், ஒருசில சூத்திரங்கள் அகத்தியம், காக்கைப்பாடினியம், அவிநயம், செம்பூட்சேயம், இளந் திரையம் முதலியவற்றுள் கிடைக்கின்றன.

மதுரைத் தலைச்சங்கத்தார் காலத்துக்கு முந்தி நம் தமிழர்கள் பல வகுப்பாகப் பிரிந்திருந்தார்கள் என்பதைப்பற்றி யாதொரு செய்தியும் கூறுவதற்கு அக்காலத்திய நூல்கள் கிடைப்பதே அருமையாகும்.

மிக்க பழையகாலத்துத் தமிழர்கள் அதாவது பத்து பன்னீராயிரம் ஆண்டுகட்கு முற்பட்டவர்கள் ஐந்து நிலங்களா கிய முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்பன

வற்றுள் வாழ்ந்து வந்தவராகிய ஐந்நில மாக்கள் அவ்வவ் நிலத்தால் பெயரினைப் பெற்றவர்களே பிற்பட்ட காலங்களுள் அறிவர், அரசர், வணிகர், வேளாளர் என்கிற பிரிவினர்களும், அவர்களை ஒப்பக்கிடந்த வேறு பல தொழிலினருமாகப் பல்கிப் பெருகினார் என்பதற்குச் சிற்சில சான்றுகள் அவ்வக் காலத்து நூல்களால் காணக்கிடக்க இன்றும் அகப்படுகின்றன; அதற்குப் பின்னரும் அந்தணர் என்கின்ற ஒரு வகுப்பாரும் தோன்றித் தமிழரில் கலப்பா ராயினர்.

இம்மாதிரியே தமிழரில் பல வகுப்பினராய் அந்தணர், அறிவர், அரசர், வணிகர், வேளாளர், பொருநர், பாணர், ஆயர், வேட்டுவர், மறவர், கூத்தர் முதலிய பல சாதிகள் பிரிவு பட்டிருந்தனர்.

பெயர்கள் முறையாகக் கூறும் கலைக்கோட்டுத்தண்டு, பார்த்திபம், கைலாசநிகண்டு முதலிய இறந்து ஒருசார் சூத்திரங்கள் ஒன்று இரண்டு கிடைப்பதே அருமையாகியன. மிகவும் பிற்பட்ட காலத்ததுவாகிய திவாகரம் ஒன்றே உக்கிரப் பெருவழுதியார் காலத்திற்கு அணுமையில் அம்பல் சேந்தனால் பாடப்பெற்றது; அஃது ஆரியச்சொற்கள் மிகவும் விரவப் பட்டது; இரண்டாயிரத்து நானூறு ஆண்டுக்கு முன்னர் உண்டாயதாகையால் அஃதே தற்கால நிகண்டுகட்கெல்லாம் முற்பட்டது; சங்கத்தார் நூல்களை ஆய்வதனுக்கு ஒருசார் உபயோகப்பட்டு வருகின்றன. அதனுள்,—

'செங்குந்தப் படையர் சேனைத் தலைவர்
தந்து வாயர் காருகர் கைக்கோளர்'

எனச் சிறப்பித்து சேந்தன் திவாகரராற் கூறப்பட்டுள்ள செங்குந்தப்படையர், சேனைத்தலைவர், தந்துவாயர், காருகர், கைக்கோளர் என்கின்ற ஐந்து பெயர்களும் கைக்கோளரையே குறிக்கின்றன என்று நமக்கு நன்றாகப் புலப்படுகின்றன; ஆயினும், பல்குன்றக் கோட்டத்துச் சிங்கம் பொருந்த



வளநாட்டுத் தேவனூரில் உற்பவித்தாராகிய *ஆசிரியர் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரத்து இந்திர விழவூரெடுத்த காதையுள்,—

'பட்டினு மயிரினும் பருத்தி நூலினும்
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையும்'

என்னு மிடத்து, 'பட்டுநூலாலும் எலிமயிராலும் பருத்தி நூலாலும் நுண்ணிய தொழில்களை' ஊசியாற் பிணிக்கும் பட்டுச் சாலியர் இருக்குமிடங்களும் என்று சாலியரையே குறிப்பிட்டுக் கைக்கோளர் என்கின்ற சாதியாரைக் காட்டாமல் விட்டது. அவர்கள் சேனைத்தலைவர்களும் தொண்டைமான் முதலியோர்களாற் பெரும்பட்டங்களையும் அரசச் செல்வங் களையும் அடையப்பெற்ற ஒரு பண்டைய பெருங்குடிகள் ஆதலினாலென்க.

செங்குந்தர் முருகவேளாரின் உடற்பிறப் பாயினர் என்று குறிப்பிக்கப்பட்டு அம்மையார் பாதச் சிலம்பிற்றோன்றுதல் பற்றி ஒன்பான்வீரர் என்று வழங்கிய நவவீரர் வழியினராகை யினாலும், அவர்களைப்பற்றிக் கூறும் காதை முருகவேளார் காதை யாகையினாலும், அக்காதை கூறும் நூல் பரிபாடல் ஒன்றே யாகையினாலும், அஃது ஐயாயிரத் திருபத்தெட்டாம் ஆண்டுகளிற்றோன்றி இரண்டாயிரத்து நானூறு ஆண்டுகள் வரையும் நிகழ்ந்துவந்த கடைச்சங்கத்தில் எழுபது பாடல்களே பாடப்பெற்றபடியினாலும், அவற்றுள்ளும் முப்பத்தொருபாட்டே முருகவேளுக்கு அமைந்தபடியினாலும் அவைகளினாற் கொள்ளக் கிடக்கும் சரிதங்கட்கும் வடநூற் புராணங்கட்கும் கச்சிப்பேட்டு இறையான்சேரிக் கச்சியப்பப்

---

* ஒரு கல்வெட்டு :— காஞ்சிபுரம் தூயவனத்துத் [தும்ப வனம் அல்லது தூப்புல்] தழுவக்குழைஞ்சான் மடம் ஸ்ரீ அறிவன் பெரிய சிவனார் இற்றைக்கு 480 - ம் ஆண்டில் குறித்துவைத் துள்ள ஒரு சாசனத்தில் 'பல்குன்றக் கோட்டத்துச் சிங்கபுர நாட்டுத் தேவனூர் ஊரில் 480- ஆண்டுகட்கு முந்தி வசித்தவர் ஆசிரியர் அடியார்க்கு நல்லார் என்று காணப்படுகிறது. இதனால் அடியார்க்கு நல்லார் காலமும் அவர் ஊரும் விளக்க மாகும். அடியார்க்கு நல்லார் செங்குந்த குலத்தின் ஒரு பகுதியைச் சேர்ந்தவர் என்க.

பட்டர் கந்தபுராணத்திற்கும் வேற்றுமை மிகவும் உள்ளது. 'பம்பாயில் திருவேங்கட யந்திர சாலையில் பதிப்பித்திருக்கின்ற வடமொழிக் காந்த புராணத்தில் சூரபன்மா என்கின்ற செய்தியே கிடையாது' என்றால் மற்றவை எப்படியிருக்கும் என்பதை ஆராய்ச்சிக்காரர்கள் நுனித்துப் பார்க்கவேண்டும்.

ஆகையினால், கச்சிப்பேட்டு இறையான்சேரிக் கச்சியப்பப் பட்டரால் பாடியருளிய கந்த புராணம், பரிபாடல் எழுபதும் கிடைக்காத படியினாலும், ஆரியர்கள் அவர்கட்குக் கிடைத்த தமிழ் முருகவேளார் சரிதையினை ஆயிரத்தைந்நூறு ஆண்டு கட்கு முந்தியே அவரது வடநூல் பாகுபாட்டுக் கியைய மாற்றி விட்டார்களாதலானும் தமிழ்நாட்டு முருகவேளைப்பற்றிய செவிக் கேள்விகளையே ஆதாரமாகக்கொண்டு தாமியற்றிய புராணத்தை ஒருவாறு பூர்த்திசெய்தனர்.

செங்குந்தர்களைப்பற்றி எழுத வேண்டுமென்றால் மிகவிரி யும். பழைய காலத்துக் கல்வெட்டுகளாகிய விசையாலயன், பராந்தகன், கோப்பரகேசரி, இராசேந்திரன், இராசராசன், சுந்தரசோழன், திரிபுவனதேவன், வீரராசேந்திரன், குலோத் துங்கன், விக்கிரமசோழன், இராசநாராயணன், வீரசம்பன், அநபாயன், அபயகுலசேகரன், கோப்பெருஞ்சிங்கன், சுந்தர பாண்டியன், வல்லாளதேவன், வாணாதராயன் முதலிய அரசர் களது காலத்து எழுதப்பட்டுள்ள அரும்பெறற் செய்திகளுள் இப்பெரும் பிரிவினர்களைப் புகழாத இடங்களே கிடையா. இவர்களது ஒழுக்கங்களுள் பல உயர்ந்தவையுள்ள வென்று முற்காலத்திலு மெண்ணுதற்கு இடமுண்டு.

பல சாதனங்களுள் இச்செங்குந்தர்களை பேரரசர்க்கும் சிற்றரசர்க்கும் உரிமைதரும் சேனையாளர்களாகக் கூறப் பட்டும் அரிய பெரிய உரிமைப் பட்டங்கள் எய்தினரும் பலர்.

திருவண்ணாமலையில் இறைவன் கோயிலாகிய அண்ணா மலையுடைய நாயனார் கோயிலுள் வல்லாள தேவரால் எடுப்பித்த கோபுரத்தின் தென்பாகத்தில் எழுதப்பட்டுள்ள ஒரு அரிய கல்வெட்டினில் கைக்கோளர்க்கு வலங்கை வரிசைகள் ஏற்படுத்தியுள்ள சிறப்புகளை ஆராயும்தோறும் அவர்கள் பெருமையைச் சொல்லத் திறம் அன்று.



பழைய ஒழுக்கத்தை இன்றும் கைவிடா தொழுகிவரும் தமிழ்நாட்டுச் சாதியர் என்னும் பகுப்பினுள் இவர்களும் ஒரு பான்மைய ரென்றும் குறிப்பிக்கப்படும்

இவர்களின் பெருமைகளையும் பண்டைய நாட்களின் பல சிறப்புகளையும் குறித்துப் பல்லிடங்களில் எழுதியிருந்தாலும், பல்குன்றக் கோட்டத்துச் சிங்கபுரநாட்டு அண்ணமங்கலயப் பற்று தேவனூர்க் கோயில் கல்வெட்டுகளிலும், வெண்ணிக் கோட்டத்து கோலிய நல்லூரிலும், பையூர்க் கோட்டதுக் கீழ் பட்டைய நாட்டின் திருவான்பூரென்னும் தமிழ் முருக வேளாரது கோயிலுள்ளும் எழுதப்பட்டுள்ள அரிய கல் வெட்டுகளுள் இவர்களது பெருமைப்பாடுகளைக் குறித்து மிகச் சிறப்பிக்கப்படுகின்றன.

இச்சாதியார் எத்தனையோ கோயில்களை எடுப்பித்தனர். கச்சியுள் ஆண்ட பல தொண்டைமான்கட்குத் துணையாகப் போந்து பல போர்களில் வெற்றி கொண்டனர்.

இவர்களின் வீரச் செயல்களின் வீரர்கள் பலரிருந்து மேம்பட்டனர்களென்பதும் அவர்களது பெயர்களைக் கொண்டே உணரலாம். அவர்களுள் ஊன்புசிக்காது தூய்மை யாக இருந்தவர் பல்லோர்கள்.

அவர்கள் இடையில் மேற்கொண்ட தொழில்களுள் நூல் நூற்றல், ஆடையாக்கல் முதலிய செய்திகளினாலேயே அவர் களது பாவச்செயல் இன்மையாகிய விருத்தியைப் புலப்படுத் தும். அவர்கள் பழந்தமிழ்ப் பரம்பரையைச் சேர்ந்தவர்களென் றெண்ணுவதற்குச் சான்றாக இன்றும் தங்கள் தமிழாசாரியர் களிடத்திலேயே பல சடங்குகளையும் நடத்திக் கொள்ளு கின்றனர்.

பிற்காலத்தும்கூட இவர்களது ஆட்சியில் அரும் பெருங் கோயில்கள் அகப்பட்டுக்கிடக்கின்றன. அவற்றுள் கச்சி வேளுக் கைத் தண்காக் கோயிலும், கச்சிக் கச்சாலையுடைய நாயனார் கோயிலும், கச்சிமேற்றளியும், கச்சிப் பஃறளியும் இன்னும் பலவாம்.

உலகத்து மக்கட்கு மானத்தைக் காப்பதற்கு உறுதியாவன ஆடை முதலிய உடுக்கைகளே. அவற்றை முற்காலங்களில்

நூல் நூற்கும் பொறி முதலியன இல்லாத போழ்தத்துப் பெண்டிரும் ஆடவருமாய்க் கையாலும் சிறு கருவிகளினாலும் பஞ்சுகளைக்கொண்டு நூல் நூற்று ஆடை முதலிய வமைத்து மக்களுக்கு மானத்தை நீக்கி வைத்தவர்கள் தமிழ் நாட்டுக் கைக்கோளர் அல்லது கைக்கோலர் என்கின்ற செங்குந்தர் என்னும் பெரும் பிரிவினரே. அவர்களது ஒவ்வொரு பண்டைய நாகரிகங்களும் மிக்கு ஆராய்ச்சியான் நிகழ்ந்து நடந்து வருகின்றன.

சுமார் ஆயிரத்து ஒரு நூற்றாண்டுகட்கு முந்தியிருந்தவரும், அடியார்க்குநல்லார் கம்பர் முதலாயினர்களான் சிறப்பித்துப் புகழப்பட்டாரும் கவிச்சக்கரவர்த்தியுமாகிய ஒட்டக்கூத்தராலேயே இவர்களது பெருமை முதலிய விளக்கியிருப்பதனால் அவையிற்றினையான் கூறுவதெங்ஙனம்; ஆயினும், யான் இப்போது எழுதிவரும் தொண்டைமண்டல வரலாறு என்னும் நூலுள் இவர்கள் சரித்திரம் விரிவாக வரக் காணலாம்.

தேவனூர் கல்வெட்டு முதலியவைகளினால், செங்குந்தர் கைக்கோளர் கைக்கோள முதலிகள் என்று இரு பாகு பாட்டினராக விருந்தனர்கள் என்றும், இதனுள் கைக்கோளர் கோயில்களைச் சூழ்ந்த மடவளாகத் திருந்து திருத்தொண்டியற்றுவாருள் ஒருபகுதியார் என்றும், கைக்கோள் முதலிகள் சேனைத்தலைவர்களாயும் சேனைகளாயும் குறுநில மன்னர்களாயும் உள்ளவர்கள் என்றும், முருகவேளாருக்கு எப்படி போர்களிலே துணை புரிந்தனர்களோ அப்படியே தொண்டைமான்கட்குத் துணையாய் இருந்து போர்புரிந்தும் சேனைத்தலைவர்களாயும் இருந்து தண்டத் தலைமை சேனாபதி முதலிய பேறுகளைப் பெற்றும், சிற்றரசு பட்டம் பெற்றும் கல்விக்கோர் தொண்டைமான், கங்கைகொண்ட தொண்டைமான், அவனியாண்ட தொண்டைமான்கள் காலத்தில் சீரும் சிறப்பும் எய்தியவர்கள்; பிற்றைக்காலத்திலும் ஸ்ரீவீரவல்லாள தேவராயர் காலத்திலும் பெருமையுற்றவர்களாய் விளங்கினார்கள் என்க.



## ஒருசில கல்வெட்டுகள்

### செங்குன்றக் கோட்டத்து அண்ணாநாட்டு அண்ணா மலையில் வல்லாளன் கோபுரத்தில் உள்ளவை

1. சுவஸ்திஸ்ரீ ஸ்ரீமன் மஹாமண்டலீஸ்வரந் ஹரிராய விபாடந் பாஷைக்குத் தப்புவராயர் கண்டன் ஸ்ரீ அரியண உடையார் பிரதிவிராஜ்யம் பண்ணி அருளாநின்ற ஸகாப்தம் 1296ல் மேல் செல்லா நின்ற பிங்களவருஷம் ஆடி மாதம் 3உ உடையார் திருவண்ணாமலை யுடைய நாயனார் கோயில் தானத்தாரோம் மண்டலபுருஷர் வீரசிங்கதேவர் மகன் பெற்ற பெருமாளுக்கு கல் வெட்டிக் குடுத்தபடி வீரவல்லாளன் திருவாசல் திருமெய்க்காவல் பெற்றபெருமாளுக்கு நாள் ஒன்றுக்கு நெல்லு தூணிப்பதக்கும் கோயில் பேறு சோறு நானாழியும் ஆண்டு ஒன்றுக்குப் புடவை முதலுக்கு காசு அறுநூறும் இம் முதல் சந்த்ராதித்ய வரையும் பெற்று போதக்கடவார் ஆகவும்,

குறிப்புரை:—இக்கல்வெட்டில் திருவண்ணாமலைக் கோயில் கானத்தாராகிய ஸ்ரீமண்டல புருஷர் வீரவல்லாளன் திருமெய்க்காப்பாளன் (Body Gaurd) ஆகிய வீரசிங்கதேவர் மகன் பெற்ற பெருமாளுக்கு நெல்லும் சோறும் காசும் கொடுப்பித்ததைக் கண்டபடியாம். சகாப்தம் 1296 க்கு கி. பி. 1373 செங்குந்தருக்குத் தேவர் பட்டம் பரம்பரைப் பட்டமாதல் இங்கே கண்டு தெளியவேண்டும்.

2. சுவஸ்திஸ்ரீ ஸ்ரீமன் மஹாமண்டலேஸ்வரர் மதுராய விபாடந் பாஷைக்குத் தப்புவராய கண்டன் மூவராயர் மூவாதிபதி ஸ்ரீவீரதேவராயர் குமாரர் ஸ்ரீ வீரவிஜய பூபதிராய உடையார் பிரதிவிராஜ்யம் பண்ணியருளா நின்ற ஸகாப்தம் 1340ன் மேற் செல்லா நின்ற விளம்பி வருஷத்து தனு நாயற்று பூர்வ பக்ஷத்து தஸமியும் புதன் கிழமையும் பெற்ற ரேவதி நாள் ஜயங்கொண்ட சோழமண்டலத்து செங்குன்றக் கோட்டத்து பெண்ணை வடகரை வாண்கோப்பாடி அண்ணாநாட்டுத் தனியூர் திருவண்ணாமலைக்கு இடங்கை வலங்கை இல்லை.

திருவண்ணாமலையில் இரண்டு தெருவில் கைக்கோளர்க்கு முன்பு பூர்வம் நடந்து போந்த சங்கு தண்டு ஆனை சாமரம மற்றும் வலங்கைக்கு உள்ள வரிசைகளெல்லாம் சந்திராதித்த வரையும் நடக்கக் கடவதாகவும் இந்த காரியத்துக்கு அழிவு செய்தவன் சிவத்துரோகியும் இராசத்துரோகியும் ஆகக்கடவா னாகவும்.

குறிப்புரை:— இக்கல்வெட்டில் ஸ்ரீவீரதேவராயர் குமாரர் வீரவிஜைய பூபதிராய உடையார், கைக்கோளருக்குப் பண்டைய காலப்படி திருவண்ணாமலைத் திருவீதியில்வலங்கை வரிசைகள் முற்றும்கொடுத்ததாகக் காணப்படுகிறது. சகாப்தம் 1296க்கு கி. பி, 409. பிறகு எந்த வகையில் இடங்கை வரிசை கைக்கோளருக்கு வந்து நுழைந்த தென்பதை ஆராயவேண்டும்.

3. ஸ்ரீராஜ ராஜ தேவர்க்கு யாண்டு 20 வது ராஜ ராஜ வளநாட்டுத் திருமுனைப்பாடித் திருவெண்ணை நல்லூர் பிரம தேசம் திருவெண்ணெய் நல்லூர் உடையார் ஆட்கொண்ட தேவர் கோயில் கைக்கோளரில் அறமுடையான் மகார் திரு மலையழகியானான வீர பல்லவராயநேந் உடையார் திரு வண்ணாமலையுடைய நாயனாற்கு திரு நந்தா விளக்கு ஒன் றுக்கும் சந்திராதித்த வரை செல்வதாக விட்ட பசு 32 ரிஷபம் 1 இவ் விளக்காய் இட்ட குத்துவிளக்கு 1.

குறிப்புரை: — இக்கல்வெட்டில் ஸ்ரீஇராஜராஜ தேவர் ஆட்சியில் திருவெண்ணெய் நல்லூர், பிரமதேசம், ஆட் கொண்டதேவர் கோயில் இம்மூன்றும் பார்த்து வந்த கைக் கோளரில் அறமுடையான் மகன் திருமலை யழகிய வீரபல்லவ ராயன் திருவண்ணாமலையுடைய பெருமானுக்குச் செய்த தூங்காத் திருவிளக்குத் தருமங் காணப்படுகிறது. செங்குந் தருக்கு இராயர் பட்டம் வந்த காரணம் ஆராய்ந்தறிய வேண்டும்.

## தேவனூர் கோயில் கர்ப்பக் கிரகத்தில் உள்ளவை

4 சுவஸ்திஸ்ரீ திரிபுவந சக்கரவத்திகள் குலோத்துங்க சோழ தேவற்கு யாண்டு ......... வது ஜயங்கொண்ட சோழ மண்டலத்து உத்தம சோழ வளநாடான சிங்கபுர நாட்டு ஆளுடையார் திருநாகேஸ்வரமுடைய நாயனார்க்குச் செங் கேணி நாலாயிரவன் அம்மை அப்ப நான ராஜேந்திர சோழச்



சம்புவராயனேன் இத்தேவர் தேவதானம் தேவனூர் மகா ..................................... சிறுபாடிக் காவல், கைக்கோளர் தறிக் கடமை சில வரிகளாலும்.........

குறிப்புரை: — இக்கல்வெட்டில் ஸ்ரீகுலோத்துங்கச் சோழ தேவர் சிறுபாடிக்காவல் கைக்கோளர் செங்கேணி நாலாயிர வன் திருநாகேசுரமுடைய நாயனாருக்குச் செய்து வந்த தருமம் காணப் படுகிறது. பாடிகாவல் துன்பந் துடைக்கும் சிறை. ''கோடிகாவனைக் கூறாத நாளெலாம் - பாடி காவலிற் பட்டுக் கழியுமே'' என்பது திருநாவுக்கரசு நாயனார் தேவாரம்.

5. சுவஸ்தி ஸ்ரீ சகல லோக சக்கரவர்த்திகள் இராஜ நாராயண சம்புவராயற்கு யாண்டு பதினாறு தேவனூர் உடை யார் திருநாகேசுரமுடைய நாயனாற்கு இவ்வூரில் கைக் கோளர் பேரால் நூலாயம் ஆடைச்சம்மாதம் செக்குக் கடமை பேறுகடமை ஆயம் மற்றும் புறக்குடி பேறு கடமை ஆயம் ஆட்டைச் சம்மாதம் உட்பட இந்நாயனாற்கு சர்வ மானிய இறையிலி ஆக சந்திராதித்த வரையும் நடக்கக் கடவதாக கல்வெட்டிக் கொள சொல்லிக் குடுத்தோம்.

குறிப்புரை:— இக்கல்வெட்டில் ஸ்ரீ இராஜ நாராயண சம்புவராயர் காலத்தில் தேவனூருடையார், திருநாகேசுவர முடையார் கோயில் தருமங்கள் பல நடந்தேறக் கைக்கோளர் பேரால் அமைக்கப்பட்ட சருவமானியம் முதலியவை காணப் படுகிறது.

6. சுவஸ்திஸ்ரீ ஸ்ரீமன் மஹாமண்டலேஸ்வரன் பாஷைக் குத் தப்புவராய கண்டன்.........ஹரியண உடையார் குமாரர் ஸ்ரீ விருப்பண உடையார்க்குச் செல்லா நின்ற............ தாது ஸம்வத்ஸரத்து ஆனி மாதம் பத்தாந் தியதி தேவனூருடையார் திருநாகீஸ்வரமுடைய நாயனார் கோயில் ஸ்ரீ மஹேஸ்வரரும் தானத்தாரும் கைக்கோளரும் கைக்கோள முதலிகளும் மன்னரை முடிசூட்டும் பெருமாள் திருவோலக்க மண்டபத்தில் நிறைவுற நிறைந்து குறைவறக் கூடி இருந்து தானடைக்கு குடுத்தபடி தேவோள் நாச்சியார் தேவதானம் அனாதி புலைத் தலையாய்க் கிடைக்கையில் ..............அனாதி புலைத்தலை யாய்க் கிடைக்கையில் அப்பநாயன் தென்னவதிரையர் சிங்காசன ஏந்தல் என்று ஏரியும் வெட்டி நிலமுந் திருத்தி

கிணறும் வெட்டி கடமையும் இறுத்துக் கொள்ள நஞ்சை புஞ்சை நாற்பாற் கெல்லையும் தென்னவதிரையற்கு குடி நீங்காத தேவதாநம் ஆகக்குடுத்தோம் சந்திராதித்த வரையும்.

குறிப்புரை:— இக்கல்வெட்டில் ஸ்ரீ அரியண உடையார் குமாரர் விருப்பண உடையார் காலத்தில் கைக்கோளரும் கைக்கோள முதலிகளும் மற்றையரும் தேவருடையார் திருநாகேசுர முடையார் கோயிலுக்கு ஏரி, கிணறு, நஞ்சை, புஞ்சை முதலிய தானஞ் செய்தமை கூறப்படுகிறது.

## தேவனூர் திருவோலக்க மண்டபத்தில் உள்ளது

7. சுவஸ்திஸ்ரீ சகல லோகச் சக்கரவர்த்திகள் ஸ்ரீ இராஜ நாராயண சம்புவராயற்கு யாண்டு 16-வது ஆளுடையார் திருநாகீஸ்வரமுடையார் கோயில் தேவரடியார் ஆசிரியங் காத்தார் மன்னரை முடிசூட்டும் பெருமாள் இந்நாயனாற்கு திருவோலக்க மண்டபம் திருமதிலும் திருமடைப்பள்ளி திருக் கோபுரமும் இவருடைய தர்மம்.

குறிப்புரை: இக்கல்வெட்டில் ஸ்ரீ இராஜ நாராயண சம்புவராயர் காலத்தில் திருநாகேசுர முடையார் கோயில் திருப்பணி பல மன்னரை முடிசூட்டும் பெருமாள் செய்ததாகக் காணப்படுகிறது. செங்குந்தருள் மன்னர்க்கு முடிசூட்டும் கூட்டம் காஞ்சிவள நாட்டில் இன்னும் காணப்படுகிறது.

கி. பி. 1714 ஆண்டு அதாவது இற்றைக்கு 212-ம் ஆண்டுகளில் ஆற்காட்டு நவாப்பாகிய சத்துல்லாகான் என்பவனது படைகளின் எறி புழைக் குண்டுகளால் தகர்ந்து பிளவுப்பட்ட கோபுரம் தேவனூரில் இன்றும் உள்ளது. அக்கோயிலின் திருச்சுற்று மாளிகையின் மேல் முளைத்துப் பெருமரமாகிய புளிய மரம் ஒன்றினை நான் யாத்திரையாகக் கல்வெட்டு பார்க்கப் போந்த போது பார்த்தேன். திருச்சுற்று மதில்களும் திருநடை மாளிகையும், கோபுரம் அழிவுற்று உள்செல்லுதற்கு பயங்கர நிலையிலுள்ளன. அக்கோயிலின் கல்வெட்டுகள் குரோதி யாண்டு புரட்டாதித் திங்களில் என்னால் பார்க்கப்பட்டது.



## கோலியபுர நல்லூர் கோயிலுள் உள்ளவை

8. சுவஸ்திஸ்ரீ இராசநாராயணன் சம்புவராயர்யாண்டு 16 வது கோலியபுரநல்லூர் நாயனார் திருவாலீஸ்ச்சுர முடைய நாயனார் திருமடவளாகத்தில் இருக்கும் கைக்கோளரில் அகிலாந்திரை தேவர் மகன் திருமேனி அழகியரான நாற்பத் தெண்ணாயிரமா ராயர் செய்த திருப்பணி [illegible] தேவர் கோயில் பெலிபீடமும் திருவாசலும் நாற்பத் தெண்ணாயிரமா ராயத் தன்மம்.................................

9 சுவஸ்தி ஸ்ரீமன்மகாமண்டலீச்சுரன் ஹரிஹரராய விபாடரந் ஸ்ரீ வீரதேவராய உடையார் குமாரர் விஜயபூபதி ராய உடையார் பிரதி விராச்சியம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1340மேல் செல்லாநின்ற விளம்பிவருஷத்து துலா நாயற்று பூறுவபக்ஷத்து பௌர்ணமியும் சுக்கிரவாரமும் பெற்ற .............................................................................ண நான் ஸ்ரீமது ஆர்க்கராமுற் செம்பந்தை தேவரசன் விருப்பஎய .............................................................................உடையார் திருவாலீஸ்வரமுடைய நாயனாருக்கு சோமவார புண்ணிய காலத்திலே சர்வமான்னிய இறையிலியாக விட்ட நறையூரில் சோழமுத்தரையன் ஏந்தலாந தேவரச நல்லூர் ..........................................................

குறிப்புரை: — இக்கல்வெட்டுகள் இவ்வூர் பழமையுடைய தென்பதும், அறிவன் அரசன் வணிகன் உழவன் முதலிய சான்றோர்கள் அமையப் பெற்றிருந்தனர்களென்பதும், மேல் நோக்கிய கிழக்கில் ஊற்றுவாய்க் காலுக்கு வடக்கிலுள்ள சிவாலயமும், மேல் நோக்கிய ஊர் நடுவில் உள்ள விஷ்ணு ஆலயமும், தெற்கு நோக்கிய ஊர்க்கு வடக்கிலுள்ள ஜினாலயமும் உள்ளடக்கி, வடகிழக்கிலுள்ள செல்லப் பிள்ளையார் ஆலயத்தையும் தனதகத்துக் கொண்டமையப் பெற்றுள்ளதும், இவ்வூர்த் திருமடவளாகம் செங்குந்தர் குலத்தினராய அகிலாந்திரை தேவர் மகன் திருமேனி அழகியராக நாற்பத் தெண்ணாயிரமா ராயன் திருப்பணி செய்விக் கப்பட்ட திருவாலீச்சுரம் என்கிற சிவாலயமும் அமையப்பெற்ற தென்பதையும் நமக்கு விளங்க வைக்கின்றன. இங்கே பல்லவக் கூட்டங்களாகி யிருந்து பன்னூறு வருடங்கட்கு முன்னரே அழிந்துவிட்டன வென்றும் தோற்றுகின்றது.

தூயவனம்,
அக்ஷய ஞு ஆனி 4 } திரு. சுப்பிரமணிய தேசிகர்

# மதிப்புரை

சிதம்பரம்

ஸ்ரீமீனாட்சி தமிழ்க்கலாசாலைத் தலைமையாசிரியர்
மகாமகோபாத்தியாயர்

## பிரம்மஸ்ரீ வே. சாமிநாதையர் அவர்கள்

எழுதியது

கவிச்சக்கரவர்த்தியாகிய ஒட்டக்கூத்தருடைய கல்விப் பெருமையையும் அவர்பாலமைந்திருந்த கவித்துவ சத்தியையும் அவரால் தமிழுலகம் அடைந்த பயன்களையும் அறியாதார் யார். அவரியற்றிய ஈட்டியெழுபதும் பிற நூல்களும் அடங்கிய பதிப்பையும் அதற்குத் தக்க கல்விமான்கள் எழுதியிருக்கும் மதிப்புரைகளையும் பார்த்து மகிழ்ந்தேன்.

இவ்வளவு செவ்வையாகப் பதிப்பித்து வெளிப்படுத்திய உபகாரிகள் விஷயத்தில் நன்றி பாராட்டுதற்குத் தமிழுலகம் கடப்பாடுடையது.

வே. சாமிநாதையர்.

○

காமகோடிபீடம்

## ஸ்ரீமது புண்ணியகோடி சோமசுந்தரகுருக்கள் அவர்கள் எழுதியது

இப் பிரபந்தத் தொகுதியுள் உப சுப்பிரமணிய வம்சோத்பவர்களாகிய செங்குந்தர் என்னும் சோழமண்டல முதலிகள் வம்ஸாவளி முற்றும் விரிவாகக் காணப்படுகிறது. பல கிரந்தங்களில் குறிப்பிக்கப்பட்டிருந்த சரித்திரத் திரட்டியே தெய்வீகப் புலவராகிய ஒட்டக்கூத்தர் செய்தருளிய ஈட்டியெழுபது என்னும் செஞ்சொற் பிரபந்தத்திற்கு ஆதாரமாம். மற்றைய எழுப்பெழுபது, திருக்கை வழக்கம் முதலிய பிரபந்தங்கள் பெரும்பாலும் ஈட்டியெழுபது கூறிய சரித்திரத்தைச் சுருக்கியும் விரித்தும் கூறுகின்றன.



இந் நூற்றொகுதியுள் வேறு பண்டைய சரித்திரங்கள் பல செவ்வையாகக் காணப்படுவதால் இது செங்குந்த மரபினர் ஒருவருக்கே அன்றிப் பொதுவில் எல்லார்க்கும் பயன்படுமென்பது ஒருதலையாம் இதனை நந்தம் முனிவர் வழியாக வெளியிடுவித்த ஸ்ரீமான் தி. க. ச சபாபதி முதலியார் அவர்கள் தன்றி சோழமண்டல முதலிகள் என்றும் பாராட்டற்பாலதொன்றாம்.

கா. பு. சோமசுந்தரகுருக்கள்

○

திருவாரூர்
இலக்கணவிளக்கம் சாமிநாததேசிகர்
பரம்பரை

## ஸ்ரீமத் மு. சாமிநாததேசிகர் அவர்கள் எழுதியது

கவிச்சிங்கம் என்கிற ஒட்டக்கூத்தர் செய்தருளிய தெய்வீகப் பிரபந்தமாகிய ஈட்டியெழுபது, எழுப்பெழுபது என்னும் பெயரிய நூலும் மற்றைய நூல்களும் அடங்கிய பதிப்பையும் அதற்குத் தக்க புலவர்கள் எழுதியிருக்கும் முன்னுரைகளையும் செவ்வையாகப் படித்துப் பார்த்து மகிழ்ச்சி யடைந்தேன்.

இவ்வளவு திருத்தமாகப் புதிய முறையில் பதிப்பித்து வெளிப்படுத்திய ஸ்ரீ காஞ்சி நாகலிங்கமுனிவர் அவர்களுக்குத் தமிழுலகம் நன்றி பாராட்டுதற்குப் பின்னிடாதென்று உண்மையில் நம்புகிறேன்.

மு. சாமிநாததேசிகர்

## நாட்டு மடம்
## ஸ்ரீமத் கா. சட்டைநாததேசிகர் அவர்கள் எழுதியது

கவிஞர்பெருமானாகிய ஒட்டக்கூத்தர் செய்தருளிய ஈட்டியெழுபது, எழுப்பெழுபது என்னும் தெய்வீகப் பிரபந்தமும், மற்றைய திருக்கைவழக்கம் முதலிய செஞ்சொற் பிரபந்தங்களும் அடங்கிய செங்குந்தர் பிரபந்தத் திரட்டு என்னும் பெரிய நூற்றொகுதியைப் படித்துப் பார்த்து மிக்க மகிழ்ச்சியடைந்தேன்.

இதனுள் கைக்கோளர் அல்லது கைக்கோலர் என்கிற வேளாளர் சரித்திரம் ஸ்ரீ காந்தபுராணத்தில் உள்ளபடி காணப்படுகிறது. அவர்கள் அறிவு ஆற்றல் கொடை ஒழுக்கம் வழக்கம் முதலியவற்றை இந்நூற் றொகுதிகொண்டு செவ்வையாக அறிந்து கொள்ளலாம்.

இப் பிரபந்தத்திரட்டை நந்தம் 'காஞ்சி மகாநாட்டு வித்தியாப் பிரசாரகர்' மூலமாக **ஸ்ரீமான் தி. க. ச. சபாபதி முதலியார் அவர்கள்** அச்சிட்டு வெளிப்படுத்தியதற்குச்செங்குந்த உலகம் என்றென்றும் நன்றி பாராட்டுதற்குக் கடப்பாடுடையதே.

**கா. சட்டைநாததேசிகர்**

○

திருச்சேய்ஞ்ஞலூர்
நாவினால் மழுவெடுத்த ஞானப்பிரகாச தேசிகர்
பரம்பரை

## ஸ்ரீமத் நெ. முத்துக்குமாரதேசிகர் அவர்கள் எழுதியது

சிரச்சிங்காதன பதியாகிய ஒட்டக்கூத்தர் திருவாய் மலர்ந்தருளிய ஈட்டியெழுபது என்கிற தெய்வீகப் பிரபந்தத்தைக் கச்சிப்பிரதாபனார் உரையோடு எங்கள் வீட்டுக் கையேட்டுப் பிரதியில் பலமுறை பாடமாக வைத்துப் படித்திருக்கிறேன்; அதனுள் அமைந்து கிடக்கும் செங்குந்தர் சரித்திரம் பெரும்பாலும் வடமொழிக் காந்தபுராணத்தில் உள்ளபடியே காணப்படுகிறது.



இப்பால் எங்கள், நாவினால் மழுவெடுத்த ஞானப்பிரகாச தேசிகர் அவர்கள் வடமொழியின்படியே பாடாந்தரம் கொண்டு சாமிநாதன் கட்டளைப்படி மொழிபெயர்த்துத் தமிழில் மூன்று காண்டமாகப் பாடிய ஸ்ரீகந்தபுராணம் என்கிற பாரகாவியத்துள் ஈட்டியெழுபது கூறிய செங்குந்தர் சரித்திரம் ஒரு சிறிதும் மாறுபடாது விளக்கமுறையில் விரிவாகக் காணப்படுகிறது.

காலத்தினால் ஒட்டக்கூத்தர் ஞானப்பிரகாச முனிவருக்கு முற்பட்டவர் என்பது உறுதி மொழியாம். கூத்தர் காலம் கி. பி. 1070; தேசிகர் காலம் கி. பி. 1185. இது எங்கள் வீட்டிலுள்ள செப்புப் பட்டயம் ஒன்றில் காணப்படுவதாகும்.

இவ்வளவு மேம்பட்ட நூலுடன் மற்றைய பிரபந்தங்களையும் ஒன்று சேர்த்து 'மெய்கண்ட சாத்திரப் பிரசாரகர்' வழியாக வெளியிடுவித்த **ஸ்ரீமான் தி. க. ச. சபாபதி முதலியார் அவர்கள்** எங்கள்பால் அரிதிற்பெற்ற ஸ்ரீகந்தபுராணத்தையும் அச்சுவாகன மேற்றித் தமிழுலகில் பரவச் செய்வார்களென்று உண்மையில் நம்புகிறேன்.

**நெ. முத்துக்குமாரதேசிகர்.**

## समाननाशय:

---

चिदम्बरनिवासिनां श्रीमीनाक्षीसंस्कृत महाकलाशाला
प्रधानाध्यक्षाणा, महामहोपाध्याय बिरुदङ्कितानां,
ब्रह्मश्री दण्डपाणिस्वामिदीक्षितेन्द्राणा

## ॥ अभिप्राय: ॥

स्वस्ति,

विदितमेवेदम् महाशयानाम यत् किल द्राविडकविकुलचक्रवर्ती ओट्टक्कूत्तनामा तुण्डीमण्डलीम् मण्डयामासेति, तदीयाश्च कृतय अतिमनोरमा इति च। तासु च ईट्टियेलुपतु नाम्नी अतिविचित्रतरा कृति अन्याभिश्च तत्तत्कवितिलकैर्विरचिताभि: कृतिभि: महिता सुस्निग्धैरक्षरै सुपरिष्कृतया रीत्या च मुद्रिता अमन्दमानन्दमुत्पादयति। यथेयं कृति: सुमहतीं प्रथाम् प्राप्नुयात्, यथाचैतत्प्रकाशकस्य काञ्चीनिवासिन: नागलिङ्गनामकस्य सुमहान् परिश्रम सफलो भवेत्, तथा आस्तिकमहाशया: प्रयतेरन्निति विश्वसिमि।

इत्थम्

शिव, दण्डपाणिस्वामिदीक्षित:





०३पूर्व पुत्तियाल्पेट् हैस्कूल् संस्कृतपण्डितानां
ब्रह्मश्री तिरुवत्तियूर कपालिशास्त्रिणां

## ॥ अभिप्राय: ॥

I

१ कुन्तपाणिकुलपूर्वचरित वीरबाहुमुखपुरुषमूलम्।
द्राविडेषु किल कुन्तजनास्तद्भवो भुवि कुमारगणस्य ॥
२ षाण्मुखी ननु इयं परम्परा राजताचलपतेस्समुद्गता।
आगता भुवमुदारदक्षिणां रक्षणाय शिवधर्मकर्मिणाम ॥

II

१ जगौ द्वादशसाहस्रीं रामायणकथां शुभाम्
आदौ द्राविडवाण्यां य: कम्ब: कविकुलध्वज ॥
२ तस्यैव समकालीनस्तत्समो यशसि श्रुते।
कौमारसमयोज्जीवी कुन्तहस्तकुलोद्भव: ॥
३ ओट्टक्कूत्त उमासुतप्रभवतां दिव्यान्वयस्यात्मनै:
पद्यानामिह सप्तति रचितवानाख्यातुकाम: कवि:।
व्याचख्यौ विबुधस्सतां बहुमत: कश्चित्प्रतापकूकिलार्
प्राचुर्यं गमयत्यं च सुकृती श्रीनागलिङ्गो मुनि: ॥

III

१ शिवश्रीविलासाद्वशित्वाध्वगामी
निसर्गांशुधारासुधावारवाग्मी।

समानताशय-

शाकेनागालिङ्गमदावसकाञ्चो

श्रीकुन्तवशप्रतापध्वजोऽयम् ॥

१ चारित्रप्राधान्यात् गरवगमबान्धव्यकथनात्

कवेर्महाभाग्यात् पृथुलयशसोदुर्लभतरात् ।

प्रतापाद् व्याख्यातु विमलवचसो वा सहृदया

यतेर्वैदुष्याद्वा प्रथयितुरनर्घा कृतिरियम् ॥

---

श्रीचिदम्बरनिवासिना

ब्रह्मश्री नटराजमूर्तिदीक्षितेन्द्राणां

## ॥ अभिप्राय: ॥

१

काञ्च्यां द्राविडसूरिणा विरचिता योट्टन कूत्तन या

प्रासाख्यस्य कवीन्दुराजिमहिता या सप्ततिष्षाण्मुखी ।

व्याख्यानेन युतां प्रतापपदभाक्कच्चेस्तु विद्वन्मणे

प्राचुर्यं समनीनयत् मुनिवर श्रीनागलिगाभिध ॥

२

श्रीकैलासपरंपराजनिजुषा ख्यातेन मुद्रापिता

काञ्च्यां राजति नागलिंगमुनिना कुन्तस्य या सप्तति ।

सेयं वैभवमाब्रवीति नितरां श्रीस्कन्दभक्तावले

स्कन्दस्यापि महीतले पठनत: सर्वाश्च सिद्ध्यन्त्यहो ॥

---



# OPINIONS

## Mr. T. V. SESHAGIRI AIYAR, B.A., B.L.,

**Retired High Court Judge and President,
Lexicon Committee, Madras,**

I have read with great pleasure Kanchi Nagalinga Munivar's edition of Itti Elupathu (literally, the 'seventy spear stanzas'). The story as to how the poem was composed is romantic. I hope to write in detail about it later. The aim of the stanzas to give the life history of Sengunthars, a community of great wealth and influence in the Tamil country. The poet belonged to this class and speaks from inside knowledge of its achievements: Ottakuthar, whose fame as a Tamil poet is very high, has given the world excellent poetry, albeit it is the chronicle of a class.

The commentary of Kachi Prathapa Kizhar is delightfully simple. There is absolute absence of pedantry. The style is terse and elegant. The Editor has given us an arresting story of the origin of the poem, and his explanatory additions attest to ripe scholarship and considerable acquintance with the Tamil literature. He has done good service not only to the

Community concerned, but to the Tamil reading public, by bringing out this rare edition of the poem of a great poet.

The printing and get up are very good.

'Govarthan.' Kilpauk, 29-12-'25 } T. V. Seshagiri Iyer.

O

## Dr. S. KRISHNASWAMY AIYENGAR,

**Prof. ofndian I History & Archaeology,**
**University of Madras.**

I have just seen a new edition of the Tamil classic, Itti Elupadu, of the great Tamil poet Otta-Kuttan, the Poet Laureate under the Chola monarch Kulottunga II. It is a remarkable work of its kind and has enjoyed great reputation both on account of its own merits and on account of the great reputation of the author. It is a historical work bearing upon one Indian community called 'Sengundar.' The edition is brought out with a commentary by Kacchi Pratapanar by Kanchi Nagalinga Munivar an ascetic of the same community.

The editor is well-known for his retired life and active interest in Tamil literature. His publications are many, and among them mention may be made of his Coronation Tamil Dictionary, a handy dictionary of the Tamil language. The new publication is likely to prove of value generally, and may stimulate effort in the community to better themselves.

I wish the enterprise all success.

'Srijaya vasam', 8-7-'26. } S. Krishnasawmy Iyengar.



## Mr. C.T. PARTHASARATHI MUDALIAR, B.A.L.T.,

**I. E. S. (Retired)**
**Honorary Presidency Magistrate.**

C. S. Nagalinga Munivar is well known in the field of Tamil Literature for his scholarly edition of Tamil Classics and for his antiquarian researches. The present book 'Eeti Ezhupathu' (ஈட்டி எழுபது) traditionally ascribed to the great Poet Otta Koothar, is an ancient classic which, though not in the best style of Koothan, is valuable as throwing a flood of light on the ancestry of the modern Tamil Community known as Senguntharas or Kaikolars the familiar weaving class of South India. The Poem attributes to them a divine origin, and attempts to sustain it on the etymology of the word 'Kuntham' (குந்தம்), which, the author declares in stanza 42, is nothing else than the Saktivel or the peerless javelin of Lord Skanda This position appears to me to be absolutely untenable if Skanda Purana is to be recognized as an authority. But I have no doubt that this central point would be clearly discussed by the Munivar in his critique, and the controversy set at rest. When that is done, the present edition of 'Eeti Ezhupathu' will make a valuable contribution to the historical study of the origins of South Indian communities, useful not only to the Senguntharas but to all students of the history of the Tamils. I heartily wish him success in his present undertaking.

'Guhalaya', Purasawakam, Madras, 21st July 1926. } C.T. Parthasarathi Mudr.

## Mr. R. BALASUNDARA MUDALIAR, B.A., L.T.,

**Editor, 'Doodle',**

Born and brought up in Canchi of crowded historic memories, taught and trained in the sacred Mutt of Tiruvaduthurai, author of many valuable Tamil Works on Saivasidhanta philosophy, the Revered Canchi Nagalinga Munivar has always led the life literary.

In recognition of the Munivar' s merits, he was honoured by Tiruvaduthurai Mahasannidhanan Srilasri Ambalavana Desigar Swamigal, by the great Poet Dandapani Swamigal, by Ponnambalam Pillai avl., the translator of Tolkapyam, and highly reviewed by Dr G, U. Pope in the Asiatic Review.

The Sanyasam bestowed on him at his sixtieth year really expreses, not a title, but the beauty of a pure life of high thinking and noble living,

It does not need any very rare scholarship to pay the meed of homage to the Revered Sri Canchi Nagalinga Munivar for his having brought out this classical work of the Tamil Poet Ottakkuthan, in his series of Sengunthar Prabhantha Thirattu. Ottakkuthan occupies a Place of an altitude as high as that occupied by Milton or Bhavabhuti, each in his respective sphere. The Revered Muniver has undertaken to devote the riper days of a life dedicated to Tamil Literature to, the editing of this Thirattu, to awake and arouse in the Community of Sengunthars a sense of their glorious past History, and to exhort them to live up to those ideals of their glorious ancestors. But for that ideal the erudite Munivar would not have cared to stray into by-



lanes of Tamil, neglecting for a while, under a sense of self-sacrificing necessity, the broad and well lit high road of sacred Tamil Literature. Nevertheless, the Revered Munivar has laid the Sengunthars in particular, and students of Tamil in general, under a deep obligation. The only repayment can be the realization of the hope, which, let us pray, will attend in the largest possible measure.

MADARS
13th July 1926 } R. Balasundara Mudaliar.



உ

முருகன் துணை

# பதிப்பாளருரை

வேலுமயிலுந்துணை

'நினைத்த தெத்தனையிற் றவறாமல்
நிலைத்த புத்திதனைப் பிரியாமல்
கனத்த தத்துவமுற் றழியாமல்
கதித்த நித்தியசித் தருள்வாயே
மனித்தர் பத்தர்தமக் கெனியோனே
மதித்த முத்தமிழிற் பெரியோனே
செனித்த புத்திரரிற் சிறியோனே
திருத்தணிப் பதியிற் பெருமானே.'

வேலுமயிலுந்துணை

செங்குந்தர் பிரபந்தத்திரட்டு இதனுள் காணப்படும் நூல்கள் **பதினான்கு**. அவைகளுள்ளே ஸ்ரீபடம்பக்க நாதன் சாத்திர தோத்திர ரூபமாகச் செய்த **திருவொற்றியூர்ச் செங்குந்த விநாயகர் மாலை** ஒன்று நீங்கலாக மற்றைய நூல்கள் பதின்மூன்றும் பண்டைக் காலத்தே வீரசிகாமணிகளாக விளங்கிய செங்குந்த மரபினரது உற்பத்தி அறிவு ஆற்றல் கொடை ஒழுக்கம் வழக்கம் முதலியவைகளைச் சிறப்பித்துப் பெரும் புலவர்கள் பலரால் பாடப்பட்டனவாம்.

குறிப்பு:— செங்குந்த விநாயகர், வடிவாம்பிகைக் கோயில் மகாமண்டப மேற்பாற் சுவரில் மேற்கே நோக்கிய திருமுகக் கோலத்துடன் வீற்றிருந்தருளுவர். இதனை அவதூம்ப்ர க்ஷேத்திர பட்டயத்தாலும், 'வடிவாம்பிகைக் - கற்கிக்கு மேற்பால் தென் கோணத்துள் மேவினன் ஒற்றியூர்ச் செங்குந்த



விநாயகன்' எனவரும் அந்நூல் முதற் செய்யுளாலும் காண்க.

இந் நூற்றொகுதியுள் முதன்மையாக வைக்கப்பட்ட **ஈட்டியெழுபது** என்னும் தெய்வீகப் பிரபந்தம் மிகப் பழமை யானதும் செங்குந்தர் வம்ஸாவளி முதலியவற்றை உண்மையிற் செவ்வையாக விளக்கிக் கூறுவதுமாம். இதனை இயற்றியருளிய கவிச்சக்கரவர்த்தியாகிய **ஒட்டக்கூத்தர்** முதலாங் **குலோத்துங்க சோழன்** காலத்தவர்,

கு - பு. முதலாங் குலோத்துங்க சோழன் 'அபயன்' என்ற பெயரும் பெறுவன். இவன் கி. பி. 1070 - ம் ஆண்டு தொடுத்து 1118 - ம் ஆண்டு வரையும் அரசாண்டவன். இவன் மகன் விக்கிரம சோழன், இவன் மகன் இரண்டாங் குலோத்துங்க சோழன் என்க.

ஒட்டக்கூத்தர் பெரும்பாலும் ஈட்டியெழுபது வடமொழிக் **காந்தபுராணம்** கூறியபடியே செங்குந்தர் சரித்திரத்தை எடுத் தாண்டிருக்கின்றனர், சிறுபான்மை **திருவாரூர் லீலை, உறந்தை மான்மியம், கருவூர்க் காதை** முதலிய பிற நூல்களும் மேல் காதைக்கு இடந்தத்திருப்பன என்பது உண்மை யுரையாம்.

கு - பு. வடமொழிக் காந்தபுராணம் இலக்ஷங் கிரந்த முடைய ஐந்துகாண்டங்களால் புனையப்பட்டது. அது சனற் குமாரசங்கிதை, சூத சங்கிதை, பிரம சங்கிதை, விஷ்ணுசங்கிதை, சங்கர சங்கிதை, சூர சங்கிதை என்று பிரிவுபடும். இதனுள் சங்கர சங்கிதை பன்னிரண்டு பாகமுடையது. இப்பகுதியில்முற் பட்டது பதின் மூவாயிரம் கிரந்தமுடைய 'சிவரகசிய கண்டம்' இக் கண்டம் தனதுறுப்பாகக் கொண்ட சப்த காண்டத்துள் 'முருகக்கடவுள் சரித்திரம்', நவவீரர் சரித்திரம்', முதலான வைகளைச் செவ்வையாகக் கூறப்படுகிறது.

தென்மொழியில் 'கந்தபுராணம்' எனப் பெயரிட்டு சிவ ரகசிய கண்டம் ஏழு காண்டத்துள் ஆறு காண்டத்தைக் காஞ்சி புரம் கச்சியப்ப சிவாசாரியர் பன்னீராயிரம் செய்யுளால் பாடி முடித்தனர். இதனைக் 'கந்தப்புராணம் பன்னீராயிரஞ் சொன்ன கச்சியப்பர்' என வரும் 'தொண்டை மண்டல சதகம்' 87 வது செய்யுளானும் அறியக்கிடக்கிறது. எஞ்சிய ஏழாவது காண்டம் அவ்வூர்ப் பிளையார் பாளையம் குகனேரியப்ப

நாவலர் அவர்களால் தமிழில் செய்யப்பட்டது. இக் கந்த புராணத்துள் செங்குந்தர் வம்ஸாவளி காணப்படினும் அது ஈட்டி யெழுபது என்னும் நூலுக்குத் துணை செய்ததாகக் கருதப்படாது.

ஒட்டக்கூத்தர் கி. பி. 1070- ல் அரசாண்டிருந்த முதலாங் குலோத்துங்க சோழன் காலத்தவர். கச்சிக் கச்சியப்ப சிவாச்சாரியர் கி. பி. பதினாறாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் ஈழ மண்டலத்திலே யாழ்ப்பாணத்தில் அரசாண்ட பரராஜ சேகர சிங்கை யாரியன் மேற்,—

**'பொங்குமிடி யின்பந்தம் போயதே யென்கவிதைக்**
**கெங்கும் விருதுபந்த மேற்றதே — குங்குமந்தோய்**
**வெற்பந்த மானபுய வீரபர ராஜசிங்கம்**
**பொற்பந்த மின்றளித்த போது'**

என்று பாடிய அந்தகக் கவிவீரராகவ முதலியார் காலத்தவர். அது ''தமிழ் நாவலர் சரிதை'என்னும் நூலுள், —'கவி வீரராகவன் காஞ்சிபுரத்திலே படித்தபோது கந்த புராணம் கச்சியப்பர் பாடியது' என்னும் தலைப்பின் கீழ்,—

**'பொங்குதமி ழயோத்தியில்வாழ் தசரதனென்**
**போனிடத்தும் பூதூர் வேந்தன்**
**துங்கவடு கன்னிடத்தும் வீரரா**
**கவரிருவர் தோன்றி னாரால்**
**அங்கொருவ னொருகலைமா னெய்திடப்போய்**
**வசைபெற்றா னவனி பாலன்**
**இங்கொருவன் பலகலைமா னெய்திடப்போய்க்**
**கவியினா லிசை பெற்றானே'**

என்று வரும் விருத்தம் ஒன்றினால் அறியலாகும். இது நிற்க;

திருச்சேய்ஞ்ஞலூர் நாவினால் மழுவெடுத்த ஸ்ரீ ஞானப்பிரகார தேசிகர் அவர்கள் சிவரகசிய கண்டத்தை மொழிபெயர்த்து **'ஸ்ரீகந்த புராணம்'** என்னும் பெயரினால் கலியுகாதி௵ **4286-** ல் பாடியிருக்கின்றனர். அது 'பாலகாண்டம்', 'யுத்த காண்டம்,' தேவ காண்டம்' என்னும் முப்பகுதியை யுடையது.



இதனுள் 'செங்குந்தர் சரித்திரம்' மிக விரிவாகக் காணப்படுகிறது. ஆனால் இந் நூலும் காலத்தினால் ஒட்டக்கூத்தருக்குப் பிற்பட்டதாகவே காணப்படுவதால் ஈட்டி எழுபதிற்கு ஒரு சிறிதும் சரிதத்துணையாகவே மாட்டாது.

இந் நூல் கிடைத்த ஏடு கொண்டு 'செங்குந்தவித்துவஜன சேகரர்' ஸ்ரீமான் தி. க. ச. சபாபதி முதலியார் அவர்கள் வேண்டுகோட்படி என்னால் செப்பஞ்செய்யப்பட்டு வருகிறது; சீக்கிரமே அச்சுவாகனமேறி வெளிவந்துலாவக் கூடும்.

இக் கந்தபுராணம் திருவேரகமலைச் சுவாமிநாதன் கட்டளைப்படி ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகர் பாடியதாக அப் புராணத்துள் காணப்படுகிறது. இது பாடிய நீண்ட நாட்கட்குப் பின் கச்சிக் கச்சியப்பர் தாம் எந்தக் காரணத்தை முன்னிட்டுக் கந்தபுராணத்தைப் பாடினர் என்பதை ஆராய வேண்டும். இக் கச்சிக் கச்சியப்பர் கந்தபுராணம் அச்சுக்கு வந்தபோது ஏட்டின்படி சரிவர அச்சிடவில்லை என்று கூறுவாரும் உண்டு.

ஒட்டக்கூத்தர் ஈட்டி யெழுபதினைத் தமது தளர்ந்த வயதில் செய்ததாகத்தான் சொல்ல வேண்டும். இவர் முதல் முதல் பாடியன **சரசுவதியந்தாதி, காங்கேயன் நாலாயிரக் கோவை, குலோத்துங்க சோழனுலா.** பின்னர் முறையே பாடியன **அரும்பைத்தொள்ளாயிரம், விக்கிரமசோழனுலா, குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழ், இராஜராஜ சோழனுலா, தக்கயாகப்பரணி, ஈட்டியெழுபது, எழுப்பெழுபது** என்னும் நூல்களுமாம். கடைசியாக இலக்கண நூல் என்கிற **எதிர் நூல்** ஒன்றையும் செய்தனர்.

கு - பு. 'காங்கேயன் நாலாயிரக்கோவை' என்னும் நூலைத்தான் முதன் முதல் ஒட்டக்கூத்தர் செய்ததாகச் சொல்லுவர். அது பொருந்தாது. இவர் முதன் முதல் பாடியது, 'சரசுவதி யந்தாதி' என்றே கொள்ளவேண்டும். அது, சரசுவதி தமது திருமுலைப்பாலைப் பொன் வட்டிலிற் கறந்து உண்பித்துச் 'சகலகலாநிலயம்' என்னும் ஒரு புத்தகத்தினை அவர் கையிற் கொடுத்து மறைந்தனர்' என்று வழங்கிவரும் ஒட்டக் கூத்தர் சரித்திரத் தொடர்ச்சியால் உணரப்படும்.

'நாலாயிரக் கோவை' பாடிய வரலாறு:—

'கோலா கலமன் னரிலவன்போற்
கொடுத்தே புகழுங் கொண்டாரார்
மேலார் கவுடப் புலவனெனும்
விழுப்பேர் கூத்தன் முழுப்பேராய்
நாலா யிரக்கோ வையும்புனைய
நவில்கென் றிசைத்து நாட்டுபுகழ்
மாலா மெனுங்காங் கயன்வாழ்வு
வளஞ்சேர் சோழ மண்டலமே'

எனவரும் 'சோழ மண்டல சதகம்' 93 ஆம் செய்யுளால் காணப் படுகிறது. இங்கே இச் செய்யுட்கு உதாரணமாகச் சோழ மண்டல சதகப் பதிப்பாசிரியர் காட்டிய,—

'பதிநோக்கி யன்னையைத் தண்டனிட் டேனெனும் பாங்கியரை
எதிர்நோக்கி நின்று தழுவுகின் றேனெனு மென்றுபொன்னி
நதிநோக்கி வாழு நவபுதுச் சேரிநன் னாட்டிலென்றன்
விதிநோக்கிக் காளைபின் மேவுகின் றேனெனும் வேதியரே'

என்னும் சுரம்போக்குத் துறையின் செவ்வி காணத்தக்கது.

கவுடம் என்பது ஒரு அலங்காரம்; அது குணவலங்காரம் பத்துடன் கூடாது தனியே நடக்கும் சிறப்புடையது.

'அரும்பைத்தொள்ளாயிரம்', 'அரும்பகைத்தொள்ளாயிரம்' என்றும் ஏடுகளில் காணப்படுகின்றது. இது, 'முத்தொள்ளாயிரம்', 'வச்சத்தொள்ளாயிரம்' என்பன போன்று தொள்ளாயிரம் பாடலில் சோழன் பகைவென்றதைப் புகழ்ந்து கூறுவது. இதைத் தான் ஒட்டக்கூத்தர் முதன் முதல் பாடினர் என்பர். அதனை ஆராயவேண்டும்.

இராஜராஜ சோழன் இரண்டாம் குலோத்துங்க சோழன் மூத்தமகன், இளையமகன் சங்கர சோழன் என்ப. இந்த இராஜ ராஜசோழன் காலத்தேதான் ஒட்டக் கூத்தர், 'தக்கயாகப் பரணி', 'ஈட்டி யெழுபது', 'எழுப்பெழுபது' என்றநூல்களைப் பாடினர். ஆனால் உறந்தையில், 'ஈட்டியெழுபது' பாடிய பொழுது இராஜராஜ சோழன் இளவரசாயிருந்திருக்கலாம் என்று ஆராய்ச்சியில் வல்ல பண்டிதர் கூறுகின்றனர்.



'தக்கயாகப்பரணி பாடப்பட்ட வரலாறு இற்றைக்கு 280-வருஷங்கட்கு முன் இயற்றப்பட்ட 'வீரசிங்காதன புராணம்' என்ற நூலின் 'அகளங்கச்சருக்கம்' என்ற பகுதியில் விரிவாகக் காணப் படுகின்றது.

'ஈட்டி யெழுபது' பாடிய வரலாறு அந் நூற்கு உரை எழுதிய கச்சிப்பிரதாபனார், அந்நூலுள், 'பூவார் புவனை என்னும் தற்சிறப்புப் பாயிரப் பாட்டுரையில் விரிவாக விளக்கி எழுதியிருக்கின்றார். இவர் திருவாவடுதுறை மாதவச் சிவஞான யோகிகள் மாணவராகிய இலக்கணம் சிதம்பரநாத முனிவர் மகனும் மாணாக்கருமாவர். துறைசைச் சிவஞான யோகிகள் கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டில் இருந்தவர். இவர்பால் வரலாற்று முறையில் கல்வி பயின்ற பரம்பரையில் வந்தோர் இன்றும் பலர் காஞ்சிப்புரத்தில் வாழ்கின்றனர். என் தந்தை பிரதாபம் சரவணப் பெருமாள் முதலியார் அவர்களும் இக் கூட்டத்தைச் சேர்ந்தவரே. இதனை யானெழுதிய 'தமிழ் மொழியகராதி' யின் முன்னுரையிற் காண்க.

ஒட்டக்கூத்தர் 'தக்கயாகப்பரணி' அன்றி 'செங்குந்தர் பரணி' ஒன்று செய்திருப்பதாகவும் தெரிய வருகின்றது. ஆனால் அப்பிரபந்தம் முற்றுங் கிடைக்கவில்லை. இதனை,—

"எந்தையா மம்மைபாகத் திறைவனை வணங்கி யாமே
பைந்தமிழ்ப் பரணிசெய்த பாடலோடு'

என வரும் ஈட்டி யெழுபதால் உணர்க.

'எதிர் நூல்' பெரும் புலவர்களுக்கு விருந்தாக இருந்திருக்கலாம்; அப்படி இல்லையேல் 'தொல்காப்பியம்' என்னும் பழைய நூலுக்கு உரை எழுதிய பேராசிரியர் அந்நூலுள் 'அவர் உடம்படாதன சொல் உளவென்று 'எதிர் நூல்' என ஒருவன் பிற் காலத்து நூல் செய்யுமாயின்' என்று குறிப்பிட மாட்டார். தொல்காப்பியம், மரபியல் சூத்திரம். 64. இதனை,—

'ஆர வார இலக்கண நூல் ஐந்து முழங்க
அதற்கெதிர்நூல்
பாரின் மீது தமிழ்க்கூத்தன் பாடி யமைத்தான்
பயன் ஓர்ந்தே'

எனவரும் 'சோழமண்டல சதகம்' 95 ஆம் செய்யுளாலும் உணர்க.

ஒட்டக்கூத்தர் சோழ நாட்டுத் திருப்பதிகளில் ஒன்றாகிய திருவாய்மூர்ப் பக்கலிலுள்ள **மணக்குடி**யில் பிறந்தவர். இவர் தந்தையார் பெயர் **சிவசங்கரபூபதி** என்றும், தாயார் பெயர் **வண்டமர்பூங்குழலி** என்றுங் கூறுவர். ஆதியில் ஒட்டக் கூத்தர் பெயர் **அம்பலக் கூத்தர்** என்று வழங்கி வந்தது. இப்பெயர் பின்னால் **கூத்தர்** என்றே பெருவழக்கில் நின்றுவிட்டது

கு - பு. 'மணக்குடி' தென்னிந்திய ரெயில் பாதையில் திருவாரூர் சந்தியிலிருந்து அறந்தாங்கிக்குப் போகும் வழியிலுள்ள திருநெல்லிக்கா ரெயிலடிக்கு 7 மைல் தூரத்திலுள்ளது. இவ்வூருள் நாளைக்கும் ஒரு மனைக்கட்டு 'ஒட்டக் கூத்தர் மனைக்கட்டு' என்று வழக்கில் காணப்படுகிறது.

தமிழில் 'தண்டியலங்காரம்' செய்த 'தண்டி' என்னும் புலவர் தமது நூலுள்,—

'சென்று செவியளக்குஞ் செம்மையவாய்ச்
சிந்தையுள்ளே
நின்றளவி லின்ப நிறைப்பவற்றுள் —ஒன்று
மலரிவருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மலரிவருங் கூத்தன்றன் வாக்கு'

என்று ஒட்டக்கூத்தர் பாட்டைப் புகழ்ந்திருப்பதினால் ஒரு சாரார் அவ்வொட்டக் கூத்தர் 'மலரி' என்னும் ஊரிலே பிறந்தவர் என்று கருதுவர். அவர், இப் பாட்டு சில கையேட்டுப் பிரதிகளிலே பின்னடி இரண்டும்,—

'மணமமருங் கூந்தலார் மாதர்நோக் கொன்று
மணவைவருங் கூத்தன்றன் வாக்கு'

என்று வருவதைக் கண்டு ஆராய்ந்தறிவாராக.



இனி, 'சோழ மண்டல சதகம்' பாடியவர் 'கம்பனென்றுங் கும்பனென்றுங் காளியொட்டக் கூத்தனென்றும்' என வரும் பிற்கால வெண்பா ஒன்றினை ஆதரவாகக் கொண்டு ஒட்டக் கூத்தர் சீர்காழியில் பிறந்தவர் என்று கூறுவர். அது,—

'ஒத்த துணர்ந்த நாடனைத்து மொருங்கே கூடி
யுயர்கூத்தன்
கத்தி யலையத் துரத்துதலுங் கசிந்து காழிக்
கவுணியர்கோன்
பத்தி யுடனே தக்கன்மகப் பரணி பாடப் பணிந்துமுத்தின்
வைத்த சிவிகை மகிழ்ந்தேற வைத்தார் சோழ
மண்டலமே'

என்று காணப்படுகிறது. செ. 64. இந்நூற் பதிப்பாளர் அக் கூற்றுக்கு ஒட்டக்கூத்தர் பாடிய 'வீரபத்திரப்பரணி'யிலுள்ள—

'ஞாயில் கொண்ட மதிற்புறம்பர
சமய கோளரி நண்ணுமுன்
கோயில் கொண்ட மடத்தை வெங்கனல்
கொண்டு குண்டர் கொளுத்தவே' 172

'திருமடத்தெரி யிட்ட குண்டர்
கிடக்க வவ்வெரி தென்னரிற்
பெருமடத் தரசைச் சுடத்திரு
வாய்மலர்ந்து பிள்ளையே' 173

'பிள்ளை கொண்ட கனல்சென்று
தென்னர் பிரானுய ராவியைக்
கொள்ளை கொண்டுடலங் கொதிப்ப
வெந்து நின்று கொளுத்தவே' 174

''நாணீ ரறியீருறி வல்லமணீர்
மதுரேசனை யெங்குல நாயகனைக்
காணீ ரவர்தந்திரு நீறிடுவீர்
முகிலூர்தி பெறாத கவின்பெறவே'' 193

எனவரும் கண்ணிகளை எடுத்துக்காட்டுங் காட்டுவர்.

இவ்வெடுத்துக் காட்டின் விஷயம் ஒன்றும் பொருத் தமில்லா திருப்பதை ஆராயவேண்டும். 'காளியொட்டக் கூத்தன்' என்பது ஏட்டின் பாடமாம்.

'கூத்தர்' என்கிற பெயர் 'ஒட்டக் கூத்தர்' என்றாயது சம் பிரதாய வழக்காலும், இப் பிரபந்தத்துள் 'எழுப்பெழுபது' கடைச் செய்யுளாலும், எனது ஞானாசாரியர் 'வண்ணச் சரபம்' ஸ்ரீ முருக தாசர் அவர்கள் செய்தருளிய 'புலவர் புராணம்'—

''வெட்டத்தா மிருகூறாகி விழுந்தவர் தம்மை யெல்லாம்
கிட்டப்பார்த்திருந்தோர் மெச்சக் கிளர்ந்தவே லவனைப் போற்றும்
இட்டத்தாற் பழைய வண்ண மிலங்கிடப் பொருத்தி விட்டான்
ஒட்டக்கூத் தனெனு நாம மூலகமுற் றுரைத்த தன்றே''

என்று கூறுவதாலும் உணரப்படும்.

இனி, 'தமிழ் நாவலர் சரிதை' யில், — ''சரசுவதி தம்பலங் கொடுக்கக் கவிதை யுண்டாகிய கூத்த முதலியாரை, 'அரும் பைத் தொள்ளாயிரம்' பாடும்போது, விக்கிரம சோழன் கேட்டு, ஒரு கவியை யொட்டச் சொல்லென்று சொன்னபோது பாடியது'' என்ற தலைப்பின் கீழ் காணும்,—

''நடித்தது நச்சர வுச்சியி னுச்சி மதிலிலங்கை
பிடித்தது வென்ற திருபது தோள்பதி னெண்பகலே
முடித்தது பாரதம் வீரப் புலிவைப்ப மூரிச்செண்டால்
அடித்தது பொற்கிரி விக்கிரம சோழ வகளங்கனே''

என்ற கலித்துறை பாடியும்,

'விக்கிரமசோழனுலா பாடும்போது, இரண்டு கண்ணியை ஒரு பாட்டாகப் பாடென்றபோது பாடியது'' என்ற தலைப்பின் கீழ்காணும்,—

''கையு மலரடியுங் கண்ணுங் கனிவாயுஞ்
செய்ய கரிய திருமாலே — வையம்
அளந்தா யகளங்கா ஆலிலைமேற் பள்ளி
வளர்ந்தாய் தளர்ந்தாளென் மான்''



என்ற வெண்பாப் பாடியும் கூத்தர் 'ஒட்டக் கூத்தர்' என்று பெயர் பெற்றார் என்பாரும் உளர். இஃதன்றி 'ஒட்டம்' என்பது 'பந்தயம்' என்று பொருள் தருதலால், பந்தயம் வைத்துப் பாடுதல் ஒட்டக் கூத்தர் காலத்து வழக் கென்பாரும் உளர்.

ஒட்டக்கூத்தர் கி. பி. பத்தாம் நூற்றாண்டு முதல் சோழ தேசத்தைச் சிறப்புடன் ஆண்டுவந்த சோழமன்னவர் பலருள் கி. பி. 1118 - ம் ஆண்டு தொடுத்து 1143 - ம் ஆண்டு வரை அரசாண்ட **விக்கிரம சோழன்,** இவன் தந்தை முதலாம் **குலோத்துங்க சோழன்,** விக்கிரம சோழன் மகன் **இரண்டாம் குலோத்துங்க சோழன்,** இவன் மகன் **இராஜ ராஜ சோழன், சங்கர சோழன்** இவர்களால் பெரிதும் உபசரிக்கப்பட்டுக் **கவிச்சக்கரவர்த்தி** என்றும், **ஆசிரியர்** என்றும், **பிரதி பிதா** என்றும் அழைக்கப்பட்டவர்.

கு - பு. 'கவிச்சக்கரவர்த்தி' என்று ஒட்டக்கூத்தர் வழங் கப்படுவதை அவரியற்றிய 'தக்கயாகப்பரணி' என்னும் நூலுள்,—

''வாழி தமிழ்ச்சொற் றொடுத்த நூற்றிரள்
வாழி திசைக்கப் புறத்து நாற்கவி
வாழி பதுக்கொன் பதுற்ற நூற்றுவர்
வாழி கவிச்சக்ர வர்த்தி வாழியே''

''ஆக்கம் பெருக்கம் புயத்தி வாழியே
யாற்றங் கரைச்சொற் கிழத்தி வாழியே
கோக்கன் றெழச்செய் குலத்தர் வாழியே
கூத்தன் கவிச்சக்ர வர்த்தி வாழியே''

என வருவனவற்றால் அறிக. சயங்கொண்டார் 'பரணி' பாடியும் 'இசையாயிரம்' பாடியும் அபயனால் 'கவிச்சக்கர வர்த்தி' என்று சிறப்புப் பெயர் பெற்றது போல, ஒட்டக் கூத்தர் 'அரும்பைத் தொள்ளாயிரம்', 'உலா', 'பிள்ளைத் தமிழ்', 'பரணி' முதலியன பாடி விக்கிரம சோழன் முதலி யோரால் 'கவிச்சக்கரவர்த்தி' என்னும் சிறப்புப் பெயரைப் பெற்றனர் என்க.

'ஆசிரியர்' என்று ஒட்டக்கூத்தர் குலோத்துங்க சோழன் சம்ஸ்தானத்தில் விளங்கி வந்ததை அவன் பாடிய,—

............ "நித்தநவம்
பாடுங் கவிப்பெரு மானொட்டக் கூத்தன்
பதாம்புயத்தைச்
சூடுங் குலோத்துங்க சோழனென் றேயெனைச்
சொல்லுவரே',

என்று வரும் பாவினாலும், ஸ்ரீ தண்டபாணி முனிவர்,—

"எத்தனை புலவ ரோமுன் னிறைவரை
வயஞ்செய் துற்றார்
அத்தனை பேரு ளாரு மருந்தமிழ் ஒட்டக் கூத்தன்
ஒத்தவர் முடிமேல் தந்தாள் உறவைத்த தில்லை
யில்லை
இத்தனை யதிட்ட மன்னோற் கிசைந்தமை யேற்றந்
தானே"

என்று தாம் பாடிய 'புலவர் புராணம்' என்னும் காவியத்துள் கூறலானும் உணர்க.

'பிரதி பிதா' என்று ஒட்டக்கூத்தர் சோழ சம்ஸ்தானத்தில் மதிப்படைந் திருந்ததை,—

"விக்கிரம சோழன் விழைந்தபடி மைந்தனுக்காம்
அக்கரமே யாதி யழகமைத்தான் — மிக்கபுகழ்
பார்த்திபருங் காணப் பழைய நட்பைக் கைவிடாக்
கூத்தனெனு நாவலர்கள் கோன்"

என வரும் தனியன் ஒன்றினால் அறிக.

ஒட்டக்கூத்தர் பிறந்தது **மணக்குடி** யாயினும் அவர் பெரும்பாலும் வசித்துவந்த ஊர் அவருக்குக் குலோத்துங்க சோழனால் அவர் பெயரால் தானமாகக் கொடுக்கப்பட்ட **கூத்தனூர்** என்று அறிய வேண்டும். இக் கூத்தனூரில் ஒட்டக் கூத்தரால் கட்டப்பட்ட **சரசுவதியாலயம்** அரிசொல வந்த ஆற்றங் கரையில் உண்டு. இப் பாரதியார் மீது ஒட்டக் கூத்தர் பல **பிரபந்தம்** பாடியிருக்கின்றனர்.



கு - பு. 'கூத்தனூர்' தென்னிந்திய ரெயில்பாதையில் மாயூரம் கிளையிலிருந்து திருவாரூருக்குப் போகும் வழியில் 'பூந்தோட்டம்' ரெயிலடிக்கு ஒரு மைல் தூரத்தில் உள்ளது. இவ்வூரார் எழுதும் பத்திரங்கள் முதலியவற்றுள் மட்டும் 'ஒட்டக்கூத்தனூர்' என்று எழுத்தில் காணப்படுகிறது. அரிசொல வந்த நதி என்பது அரிசிலாறு என்று வழங்குகிறது.

சரசுவதியார் ஆலயத்துள் சாரதாதேவியார் மூர்த்தம் அன்றி, ஒரு மூலையில் பிரமதேவர் உருவமும், மற்றொரு மூலையில் ஒட்டக் கூத்தர் உருவமும் காணப்படுகின்றன. மற்றைய கோயில்களிலுள்ள பரிவார மூர்த்தங்கள் இக் கோயிலுள் காணப்படவில்லை. இப்போது அவ்வாலயத்துள்ள கணபதி விக்கிரகம் இரண்டுள் ஒன்று செங்குந்தர் வீதியிலிருந்து கொண்டுவந்து சில நாளைக்குமுன் வைக்கப்பட்டதாக அவ்வூர் மக்கள் சொல்லுகிறார்கள். இதனால் இவ்வூரில் செங்குந்தர் மிகுதியாக வசித்து வந்ததாகச் சொல்ல இடமுண்டு. ஆனால் இப்போது அவ்வூரில் அக்குலத்தவர் இருக்கை கிடையாது. பார்ப்பனர் கூட்டமும் மற்றையர் கூட்டமுந்தான் காணப்படுகிறது. கூத்தர் காலத்தில் அங்கே வசித்து வந்த செங்குந்தர்களெல்லாம் அவருக்குப் பிற்காலத்தில் ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டுப் 'போலகம்' முதலிய ஊர் சென்று குடியேறி விட்டதாகக் கூறுகிறார்கள்.

'பிரபந்தம்' காலாந்தரத்துப் போற்றுவாரின்றி ஏடுகள் பல செல்லரிக்கப்பட்டு மறைந்தன. இப்போது கிடைக்கும் தனிப் பாடல்களைக்கொண்டு ஆராய்ச்சிக்காரர் உண்மையை ஆராய்ந்தறிய வேண்டும். கம்பநாடர் பாடியதாக வழங்கி வரும் 'சரசுவதியந்தாதி' ஒட்டக் கூத்தர் பாடியதாகவே வரலாற்று முறையில் படித்துணர்ந்த பண்டைய வித்துவான்கள் கூறுவர்.

ஒட்டக்கூத்தர் ஈட்டியெழுபது பாடி முடித்த உடன் இப்பிரபந்தத் தொகுதியுள் இரண்டாவதாக வைக்கப்பட்ட **எழுப்பெழுபது** பாடினர். பின்னர் **கூத்தேசுரர் மாலை, கூத்தேசுர லீலை** முதலிய பல பிரபந்தம் பாடியும் அவ்வப்போது **தனியன்**களாகப் பன்னூறு செய்யுட்கள் பாடியும் உலகில் பெரும் புகழ் படைத்திருந்தனர்.

கு- பு. 'எழுப்பெழுபது' பாடிய வரலாறு இப்பிரபந்தத் தொகுதியுள்முதலாவதாக வைக்கப்பட்ட ஈட்டிஎழுபதுள் கச்சிப் பிரதாபனார் எழுதிய உரையால் காணப்படும். இப்பிரபந்தம் முற்றும் கிடைக்கவில்லை. கிடைத்த பாட்டுகள் பதின்மூன்றே. இப்பதின் மூன்று பாடல்களிலும் முன்னிரண்டடியில் முருகு வேளார்பேராற்றலைச் செவ்வையாக விளக்கிக் கூறி பின்னிரண் டடியில் ஒட்டக்கூத்தர் தமது வேண்டுகோளைத் திருமகளா ரிடம் விண்ணப்பம் செய்திருக்கிறார்.

ஒட்டக்கூத்தர் விரும்பிய வண்ணம் சரசுவதி அம்மையார் அற்றுக்கிடந்த தலைகள் முற்றும் அவ்வவ்வுடலில் ஒட்டிக் கொண்டு உயிர்பெற் றெழச்செய்தது ஒரு வியப்பாகாது; தமிழின் பெருமை அதுவாகும் தமிழ்ப்பாட்டின் பெருமையை,—

**'தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை**
**யுண்ட பாலனை யழைத்தது மெலும்பு பெண்ணுருவாக்**
**கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்**
**தண்டமிழ்ச் சொலோ மறுபுலச் சொற்களே சாற்றீர்'**

என்று 'திருவிளையாடற் புராணம்' கூறும்.

இஃதன்றித் தமிழில் 'அங்கதம்' பாடுதல் என்கிற ஒரு விதியை 'தொல்காப்பியம், பொருளதிகாரம் செய்யுளியல்' 49 ஆம் சூத்திரத்துள் 'நிறைமொழி மாந்தராணை, என்று கூறு கின்றது. அங்கதம் ஒருவர் வாழவும் தாழவும் செய்யவல்ல மந்திரச் செய்யுள்.

மதுரை 'வடமொழிச் சங்கத்தார்' தலைவனாக இருந்த 'குயக் கொண்டான்' என்பவன் தமிழை இகழ்ந்தது பற்றி நக்கீரதேவர் அவனை முனிந்து,—

**'முரணில் பொதியின் முதற்புத்தேள் வாழி**
**பரணர் கபிலரும் வாழி — அரணிலா**
**ஆனந்த வேட்கையான் வேட்கோக் குயக்**
**கொண்டான்**
**ஆனந்தஞ் சேர்கசுவா கா'**

என்றுபாட அவன் இறந்தனன் என்றும், அதுகண்ட 'வட மொழிச் சங்கத்தார்' திடுக்கிட்டு மிக வருந்தி 'அறியாது செய்த பிழையை மன்னித்தல் வேண்டும்' என்று இறைஞ்சி நிற்க; நக்கீரதேவர் கோபம் தணிந்து,—

**'ஆரிய நன்று தமிழ்தீ தெனவுரைத்த**
**காரியத்தாற் காலக்கோட் பட்டானைச் — சீரிய**
**அந்தண் பொதியி லகத்தியனா ராணையினாற்**
**செந்தமிழே தீர்க்கசுவா கா'**

என்று பாடி அவனைப் பிழைக்கச் செய்தனர் என்றும் 'தமிழ் நாவலர் சரிதை' கூறும்.

இவ் வெண்பா இரண்டினையும் பேராசிரியர் 'தொல்காப் பியம்' பொருளதிகார உரையில் அங்கதப் பாட்டிற் குதாரண மாக எடுத்துக் காட்டி, 'இவை தெற்கண் வாயில் திறவாத பட்டி மண்டபத்தார் பொருட்டு நக்கீரர் ஒருவன் வாழவும் ஒருவன் சாவவும் பாடிய மந்திரம் அங்கதப் பாட்டாயின' என்று கூறுவர்.

ஒட்டக் கூத்தர் கடைசியாக இராஜராஜன் விருப்பப்படி உறந்தையிற்றானே தங்கியிருந்து தமது 97 ஆம் வயதில் பரிபூரணம் அடைந்தார். அவரடைந்த திருநக்ஷத்திரம் ஆவணி மாத உத்திராடம் என்ப.

கு- பு. உறந்தை என்பது உறையூர். அவ்வூர் சரித்திர சம்பந்தத்தால் 'கோழியூர்' எனப்படும். அது 'முற்காலத்து ஒரு கோழி யானையைப் போர்தொலைத்தலான் அந்நிலத்திற் செய்த நகர்க்குக் கோழி என்பது பெயராயிற்று' என்பர் அடியார்க்கு நல்லார்.

இதனை 'சிலப்பதிகாரம் நாடுகாண் காதையுள்,—

**''முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய**
**புறஞ்சிறை வாரணம் புக்கனர்''**

என்று இளங்கோவடிகள் கூறுவர்.

'உத்திராட நக்ஷத்திரம், ஒட்டக்கூத்தர் பரிபூரண தினமாகக் கொண்டு ஆவணி மாதத்தில் மதுரை, காஞ்சி, உறந்தை, கமலை முதலிய பல இடங்களில் கொண்டாடப்படுகிறது.

'ஈட்டியெழுபதுரை' எனக்குக் கிடைத்த ஏடு கொண்டே ஒருவாறு செப்பஞ் செய்யப்பட்டது. இவ்வுரையுள் சில கூட்டியும் பல விலக்கியும் எழுதிய சிற்றுரை ஒன்று கி பி. 1842 ஆம் வருஷத்தில் புதுவையில் முதன் முதல் அச்சிடப்பட்டிருக்கிறது. அப்பதிப்பில் வரும் சிறப்புப் பாயிரம் இது,—

### புதுவை க. சுப்பராய முதலியார் அவர்கள்
செய்தது

"உலகெலாந் தந்த வுமையொரு பாகன்
இலகுநன் னுதலெழீஇ யெரிசுடர் விழிப்பொறி
யாறொரு கூறா யீறில்பே ராற்றல்
ஆனன மிருமூன் றானெனு முரைபெறீஇ
மிளிர்சர வணபவன் கிளர்புய வீர
வாகுதே வாதி யாகுமொன் பதின்மர்
இணையறு பூதக் கணமொடு சென்றோர்
இடும்பையி லமரர்க் கடும்பகை யாஞ்சூர்
முதறடிந் தும்பர் பதிசசி மணாளற்
கருளுபு தேவகுஞ் சரிமணம் புணர்ந்தோர்
எல்லையி லாட னல்லுல காடுபு
பாமக டலைவன் மாமகள் கொழுநன்
ஆதியோர் வழுத்த சோதியார் கந்த
மலைமிசை நிலைஇய கலைநிறை புலவன்
தன்னருள் சுட்டிப் பின்னிகல் வல்லன்
மநுவழி வந்த தனுவின னாமுசு
குந்தனின் றாற்று மந்தமி றவத்திற்
கிதயம துருகி நிதியருள் பெருகி
வந்துபோர் கண்ட செங்குந்தரொன் பானெனும்



வீரரை யவன்படை வீரராத் தரவவர்
கோவின்மங் கையர்க்குக் காவல ராகி
யெட்டுத் திக்குள மட்டறு மடையலர்
போரில் வெந்கண்ட சீரிய ராயமர்ந்
தான்ற பேராற்ற லேன்ற சுந்தரராங்
குமரரைத் தரவவர் நிமிர்திற லெண்ணா
எண்ணச்சென் னாள்கடை நண்ணிப் புரிந்திட்
டோவாச் செல்வ மேவாத் தகைபெறூஉஞ்
சந்தமார் மருமர்செங் குந்தர்வண் புகழ்நில
மெங்குநின் றொளிர்தரத் தங்குலத் தாயிரஞ்
சிரமறுத் தாசனந் தரையிலிட் டொப்பிலா
அமிழ்தினிற் சுவைதரூஉந் தமிழ்தெரி புலவராம்
அரசருக் கரசனா வுரைசெய்சென் னியுமகிழ்ந்
தேத்திடு மொட்டக் கூத்தனை யிருத்தி
யவன்றிரு வாயா னவந்தரக் கேட்ட
ஈட்டி யெழுபதென நாட்டு பிரபந்தங்
கற்றவர் மற்றைய ருற்றெளி தறிதர
இயற்றமி ழுரையாக் குயிற்றித் தருகென
வதுவை நீங்காத புதுவையா மமரர்
பதியினல் லொழுக்கந் ததிபெறக் கிளைத்துச்
சந்தமார் கல்விச் செந்தளிர் தளிர்த்தே
இயலிலக் கியமெனு நயமலர் பூத்துத்
திசைபல வுஞ்செல விசைமணம் வீசிச்
சுவைதரு மின்சொன் நவநற வந்துளித்
துலகுணக் கொடைக்கனி யிலகுறப் பழுத்தே
இன்புறு நண்பர்க் கன்பெனு நிழறந்
தற்புறத் துயர்ந்தகற்பகத் தாரு
சுந்தர மமைந்தசெங் குந்தநன் மரபில்
வந்தந் தரிக்கிடந் தந்தசங் கரனருள்
முருகனம் போருகச் சரணம்வாய் நெஞ்சினன்

வள்ளலென வுரைக்கும் வெள்ளைமுத் தேந்திரன்
மாதவத் துதித்த வாதவ னருத்தம்
என்னைய நல்கெனும் பொன்னைய பூபன்
நல்லப்ப னென்னுஞ் சொல்லுக்கும் வண்கை
முதல்வ னுதவிய புதல்வ னெனமரீஇத்
திக்கனைத் தும்புகழ்ச் சக்கர நடாத்தும்
ஒப்பிலாச் சவலைச் சுப்பரா யக்கோ
உம்பரும் புகழும் அம்புலித் தோன்றல்
அரிதினிற் பயந்த கரையில் சீர்க்காளை
யொப்பாரு மில்லா அப்பாவு குரிசிற்
பிள்ளைவண் டார்தொடைப் பள்ளிகொண் டான்சுதன்
பங்கய முகம்பார் மங்கைய ரிரந்தோர்
முத்தைய தாவெனு முத்தைய கோமான்
மட்டறு புகழினன் குட்டய நரபதி
அருந்தவப் பயனெனப் பெருந்தல முதித்த
பூண்ட விராதணி தாண்டவ ராயவேள்
இப்புவி யெலாம்புகழ் சுப்பரா யன்செயு
நன்னிலை வந்த சென்னிலை யுடைய
அண்ணா மலையென நண்ணுநா மத்தன்
நனைதார்த் தோளினன் வினைதீர்த் தான்றிருத்
தோன்ற லெனவந்த வான்ற கலைவல்ல
இராமநா பரனெனு மிராமசா மிப்பதி
பொன்னாத் தருங்கைச் சின்னாத்தை தந்த
சிவசங் கரிக்காள் சிவசங் கரக்கோ
அருணனில் விளங்கும் அருணா சலன்றருங்
குழந்தையென் றுதித்த குழந்தையென் பெயரோன்
நுவலு மொன்பதின் மருநுவன் றாகத்
திசைபல வற்றினு மிசைபிர பந்த
மாயிர மழைத்ததின் மீயுயர் பொருளின்
வழுக்களைந் தான்ற விழுப்பொரு ளாக



அங்கையி னெல்லிச் செங்கனி யென்ன
இயற்றின னுரைபெருங் கயற்றிர ளெழுந்து
மழைதலைச் சுமந்த தழைகமு கின்குலை
உகுத்தர விந்த நகைத்துண ருறங்கு
மணிநீர் வளத்த வணிநீர்ப் பெண்ணை
நதிபுற முடுத்த நிதிபெறு பட்டாம்
பாக்கத் தெழிறரு மார்க்க டுதிக்குஞ்
சிதம்பர முகிலரு ளிதம்பன்
வாய்மைசேர் சுப்ப ராயநா வலனே.'



**தருமபுரவாதீனம் சோமசுந்தர கவிராயர் அவர்கள்**
செய்தது

'சீரார்பொன் னையன்முனந் திரையமுதைப்
புலவருணச் செய்தல் போலிப்
பாராரப் புதுவையில்வாழ் பொன்னையமா
லீட்டியெழு பதெனும் வாரி
நேராரு முரையமுதை யெழிற்பட்டாம்
பாகைமகிழ் நிபுணன் மிக்க
பேராருஞ் சுப்பரா யக்கவியா
மந்தரத்தாற் பெறச்செய் தானே'

அகவலுள் 50ஆம் வரியில் காணப்படும் 'வெள்ளை முத்து' என்பவர் சென்னை ஐக்கோர்ட்டு வக்கீல் ஸ்ரீமான் பு. வே. நடராஜ முதலியார் (Commissioner Hindu Religious Endowment Board) அவர்களின் மூதாதையாவர். இக் குடும்பத்தவர் நீண்ட காலமாக 'சிதம்பர ரகசிய தரிசனம்' என்கிற இடத்தில் விடப்பட்டிருக்கும் திரைச் சீலையைக் கொடுத்து வருகின்றனர்.

'எழுப்பெழுபது' எனக்குக் கிடைத்த 13 செய்யுளுள், அச்சுப் பிரதிகளில் தனிப்பாடலாக வழங்கி வரும் 'கலைவாணி' என்கிற முதற் செய்யுளும், 'நிலை தந்தார்' என்கிற கடைச் செய்யுளும் நீங்க, மற்றைய செய்யுட்கள் 11-ம் காஞ்சிப்புரம் ஏகாம்பர முதலியார் அவர்கள்பால்இருந்து கிடைக்கப்பட்டன.

மற்றைய செய்யுட்களும் கூடிய முழுப்பிரதி பல இடங்களில் இருப்பதாகச் சொல்லுவதுண்டு. கிடைப்பின் அடுத்த பதிப்பில் சேர்த்தச்சிட மிக்க உதவியாயிருக்கும்.

இனி, இந்நூற் றொகுதியுள் காணப்படும் மற்றைய பிரபந்தங்களுள் **களிப்பொருபது குலோத்துங்க சோழனால்** தொகுக்கப்பட்டதும், **திருக்கை வழக்கம், பிள்ளைத் தமிழ், கலித்துறைமாலை, தசாங்கம், ஊசல்** என்பவை முறையே **புகழேந்திப் புலவர், ஞானப்பிரகாச தேசிகர். முத்துக்குமார தேசிகர், சத்தியசந்தர், மயிலைநாதர்** என்பவர்களால் பாடப்பட்டனவுமாம்.

கு - பு. 'களிப்பொருபது' ஈட்டி யெழுபது அரங்கேற்றிய சபையில் அசரீரி ஆதியாகப் பாடியது. அங்கே பன்னூறு புலவர்கள் தனித் தனிப் பாடி யிருப்பினும் 'படைக் கொருவன்' 'கொடைக் கொருவன்' என்றபடி சிறந்த புலவர்கள் பாட்டுக்களே சோழ மன்னவனால் தொகுக்கப்பட்டன.

'திருக்கை வழக்கம்' ஒட்டக்கூத்தர் தலைமையின் கீழ் உறந்தையில் அரங்கேற்றியதென்ப. இந்நூல் வனப்பை அறிவாளர் போற்றத் தக்கதே அரங்கேற்றிய அவையின்கண் அப்போதிருந்த ஒளவையார்,—

**'என்றும் பெருங்காட்சி யென்றும் பெருங்கேள்வி**
**என்றும் பெருமொழிமற் றென்றும் பெருவினையே**
**என்றாலிக்கைக்கோள்கைக் கேனோர் நூலானாலும்**
**நன்றீது நன்றீது நன்று'**

என்று புகழ்ந்திருப்பதும் அறியற்பாலது.

சரித்திர ஆராய்ச்சிக்காரர், இத் திருக்கை வழக்கம் எடுத்துக் கூறும் சரித்திரப்பேர் சில கொண்டு புகழேந்தியார் காலவரையறை காண்பர். நம் நாட்டில் பெரும்பாலும் அவரவர் மக்களுக்கிடும் பெயர், பாட்டன் முப்பாட்டன் பெயராகவே காணப்படுவதை அவர்கள் ஆராய்ந்தறிவாராக.

இத்திருக்கை வழக்கம் முதன் முதல் திருமழிசை முத்துச்சாமி முதலியார் அவர்களால் கி. பி. *1893*ல் பதிப்பிக்கப்பட்டது.



'பிள்ளைத்தமிழ்', காஞ்சி மகாநாட்டுத் தலைவர் தலைமையின் கீழ் கச்சி மாவடியில் கி. பி. *1736* ல் அரங்கேற்றியதென்ப. இந்நூலைப் பாடிய ஸ்ரீ காஞ்சி ஞானப்பிரகாச தேசிக மூர்த்திகளின் பரம்பரை அடியர் குழாத்துள் ஒருவராய்த் திருச்சேய்ஞ்ஞலூரில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ ஞானப்பிரகாச முனிவரே நாவினால் மழுவெடுத்தவர் ஆவர். நாவினால் மழுவெடுத்த வரலாறு 'வீரநாராயண விஜயம்' என்னும் வ[illegible]லான் காவியத்தாலும்,—

**நரசிங்க ராயனமர் நல்ல சபை தன்னில்**
**வரசிங்க ஞானமுனி வாயில் — உரைசெய்யும்**
**குந்தர் முதலியெனக் கூறிமழு வாங்கினனால்**
**கந்தப்பன் கண்ணருளால் காண்.**

எனவரும் வெண்பாவினாலும் அறியப்படும்.

நரசிங்கராயர் சோழமன்னவர் காலத்தவர். பிற்காலத்தில் காஞ்சி நகரத்தில் இருந்தவர் அல்லர்.

இந்நூல் மயிலை இலட்சுமண சுவாமி முதலியார் அவர்களால் திரிசிரபுரம் வி. கோவிந்தபிள்ளை அவர்கள் பார்வையின் கீழ் பல ஏடு கொண்டு முதன் முதல் கி. பி. *1868*ல் அச்சிடப்பட்டது. அப்பதிப்பிற் காணப்படும் சிறப்புப்பாயிரம் இது:

## திருத்தணிகை விசாகப் பெருமாளையர் அவர்கள்

செய்தது

'சீர்கொண்ட செங்கதி ராயிர கரங்களாற்
செழுமறை முறுக்க வீழ்த்துக்
தேனைச் சிலீமுகந் தமக்குமீந் திடுகின்ற
திறமது தானென்னவே
நார்கொண்ட ஞானப்பிர காசனெனு நாவல
னன்றுசெங் குந்தமரபார்
நயந்தோ திடப்பிள்ளைத் தமிழினை யுரைத்தன
னந்நாளி லிந்நாளினற்

பேர்கொண்ட மயிலைத் தியாகரா யக்குரிசில்
    பெட்புறு தவத்தில்வந்தோன்
பேசுறு மசுரர்குல காலனா முருகவேள்
    பின்னுக னுதற்கண்வந்தோன்
நேர்கொண்ட வருள்பெறுஞ் செங்குந்தர் மரபெனு
    நிலத்தவ தரித்தவழகன்
நிறிலக்கு மணசாமி முதலியா ரச்சினி
    னிகழ்த்துவித் தனனதனையே.'

### திரிசிரபுரம் வி. கோவிந்தபிள்ளை அவர்கள்

செய்தது

'செங்குந்தர் பிள்ளைத் தமிழ்த்யாக ராய சிரோரத்தினந்
தங்குந் தனிமயி லைப்பதி வாழ்வு தழைத்துநின்று
பொங்குந் தவலட் சுமண சுவாமிப் புனிதன்புகன்
றெங்குந் தழைக்க வெழுதா வெழுத்தி விசைத்தனனே.'

'பாருலவு திருமயிலை யூரிலுறை செங்குந்தர்
    பாரகுல திலகதீரன்
பண்புறு தியாகரா யக்குரிசில் செய்தவப்
    பாக்யசுத னோக்குசுகுணன்
காருலவு கையனுரை மெய்யனுறு துய்யன்
    களங்கமில் லாதசந்த்ரன்
கன்னியர்க ளுன்னவொளிர் செவ்விய னடங்காத
    கருதலரை வென்றதிறலோன்
ஏருலவு நீபமலர் மார்பனிரு கட்கமல
    விருநிதிக் கிழவனுரவோன்
இலட்சுமி விலாசன திலட்சண வுலாசணணி
    லட்சுமண சாமிமகிபன்
சீருலவு செங்குந்தர் பிள்ளைத் தமிழ்ப்பனுவ
    றெள்ளிதி னுணர்ந்துகொள்ளச்
செவ்வைதிக ழச்சிலா ராய்வித் தொழுங்கிற்
    றிருந்தப் பதித்தனனரோ.'



### கோமளபுரம் இராசகோபாலபிள்ளை அவர்கள்

செய்தது

'அங்குந் தரணி மிசையுமுர
    ணாற்றுந் திறல்வா ளவுணர்குழு
வாகும் பெருங்கா ரிருட்படல
    மடைய வாரி வாய்மடுத்து
நுங்குந் தரணி தனையினைய
    நுனைவேற்படைகைக் கொளுமண்ணல்
நோன்மை சான்ற துணைவரென
    நுவலொன்ப தின்மர்மர பினராஞ்
செங்குந் தரணி சீர்த்திநனி
    தெரிக்கும் பிள்ளைக் கவிதைதமிழ்ச்
செந்நாவலர்கோன் கோவிந்தச்
    செய்யோன் றன்னால் வழுஉக்களைந்து
சங்குந் தரணியலார் முத்தந்
    தயங்கும் பழன மயிலைவரு
தனத னிலக்கு மணக்குரிசி
    றகுமச்சியற்று வித்தனனே.'

### செய்யூர் செ. சந்தியப்பமுதலியார் அவர்கள்

செய்தது

'ஆதிதனிற் சிவபெருமான் புதல்வர்சேனைக் கதிபர்நங்க
    ணவவீரர் மரபா ரென்றுஞ்
சாதியர்செங் குந்தரென் பதற்குச் சான்று சகலசிவத்
    தலங்கடொறு மிவர்கள் சென்று
கோதிலச்சே னைத்தலைவர் வேடம்பூண்டு குமரவே
    ளுடன்கூடி யின்று காறும்
பூதலத்திற் சூரனைச்சம் மாரஞ்செய்யும் புகழ்பெற்ற
    வுற்சவமே போதுமாதோ.'

'கதிரவனைக் கண்ணாடி யான்மறைப்ப னென்பதொரு
    கதையைப் போலப்
புதியதொரு நூல்செய்து கைக்கோளர் புகழையெல்லாம்
    பூண்டு கொண்ட

மதியிலா தவர்கண்மனம் வாடிவெருஉக் கொண்டோட
மயிலை யென்னும்
பதியிலக்கு மணக்கோன்செங் குந்தர்பிள்ளைத்
தமிழையச்சிற்
பதிப்பித் தானே.'

### திரு காமுசெட்டியார் அவர்கள்

செய்தது.

'ஒருவிடை யடுத்து மிருவிடை யாகிபு
முக்கட வுளரி னொக்க வேய்ந்து
மகடூஉ வாகியு மலர்விழி சாத்தியும்
இன்னணம் பற்பல வியைந்து மெய்த்த
திசைமுகற் பயந்தோன் றிகைமுகங் கொளாவொண்
மான மிரக்கம் பொறையிலர் தேறவோ
ஈன நாற்கா லேனமே யாகியுந்
தன்கழற் காணொணாத் தாணுவாய் நிமிரெழிற்
றற்பர வைம்முகற் றணவாப் பரையின்
பாதச் சிலம்பி னாதரம் பெறவுதித்
தறுமுகற் கெழுதுணை யாயெண் ணரூஉம்
ஒன்பான் றிறனமர் தொண்டியல் பத்தராய்
இறைவனார் முதலா வுறையொளிர் சங்கமும்
பதினோ ருருத்திரர் பன்னிரு வருக்கரைப்
போத யாவும் படைபோத னெனப்புகழ்
தெய்வப் புலமைத் திருவள் ளுவர்துதி
ஒளவை நிரந்தரஞ் சான்றோ ருடைத்தெனப்
பதின்மூன்று தமிழார் பதிநயந் தோங்க
ஈழ முதலொழி நிலம்வியந் தேங்க
நவிறெண் ணீர்வயற் றொண்டைநன் னாட்டில்
திலக முறழ்ந்துகப் பலகில் காஞ்சிவாழ்
செங்குந் தர்மிசைஇப் பொங்கஞ் சிவணாப்
புற்றிடத் துறைய ராக்கடுத் தவன்சொற்
போலி நாவலர் தூற்றிடப் புறந்தமிழ்



வேலி நாவலர் போற்றிடப் புத்தகக்
கூலி நாவலர் குலவிளக் கிணையுயர்வில
இராம லிங்கற் பிணங்குவார் கோளரி
யிராம லிங்கற் பிரியா தேத்துமெய்ஞ்
ஞானப் பிரகாசன் வானண நுவன்ற
வள்ளைத் தமிழ்சேர் பிள்ளைத் தமிழையோர்
அச்சிற் பதிப்பித் திச்சகம் பரப்பினன்
பதத்தோர் விரலின் மிதித்தரா வணற்றெற
வானவர் வானர மாக்கோ லியும்வேண்
டிராமற் கருளிய பராபரச் சிவன்றாட்
சிந்தையோன் மயிலைத் தியாக ராயன்
செல்வச் செம்மலாய்ச் செங்குந்தர் குலத்தோர்
இலக்க மாவுறீஇய விலக்குமண சாமியே.''

### பாக்கம் திருஞானசம்பந்தமுதலியார் அவர்கள்

செய்தது

"சீர்திகழ் திங்க டிமிலுறு தரங்கப்
பேர்மிகு கங்கைப் புனலுறு செஞ்சடைக்
கோவிட மமர்ந்த கொடியருண் மதலை
பாவல ருடுக்களிற் பைங்கதிர் மதியெனும்
பொய்யா மொழிக்குப் பொருளுரைத் திட்ட
கையீ ராறுடைக் கடம்பனொ டிகலராய்ப்
பேருரங் கொண்டு போரினி னிமிர்ந்த
குரூரப் பொருப்புக டுணிபடச் செங்குந்
தம்பிடி யொன்பான் றம்பியர்ச் சார்ந்தே
செம்மயிற் பெருமா டம்மை நசைஇ
அருண்மிக நாளு மடைந்தெக் குலத்தினுந்
தெருளொடுஞ் சிறந்து சீர்த்தித் துசநிறீஇ
வாழ்செங் குந்தர் மரபிற் சிறந்ததொன்
றாழ்கட லுலகி லரிதெனத் தேர்ந்துடன்

அருளொடு நின்றே யம்மர போர்மேற்
பொருளுற வெடுத்துப் பொற்புறு பிள்ளைத்
தமிழினை வியந்தவர் தங்குடி மரபாம்
அமிழ்தென முன்னுணர்ந் தருந்தமிழ் நாட்டிற்
கற்பன வுணர்ந்து கருதிய வவ்வழி
நிற்பவ ராகவு நினைதொறு நினைதொறூஉம்
இதனிற் சீரிய திலையென நோக்கினோர்
அதனிற் சிறந்த வருப்பொருள் வழியுற
மும்மலந் தன்னை முனைந்தவவ் வாற்றினாற்
கம்மலர் நிருத்தக் காட்சியே காட்சியாக்
கண்டவ னடியரை யண்டியே மகிழ்ந்து
பண்டைய ஞானப் பரவையி லிழிவித்
தாடச் செய்தோ னருளினை யென்றுங்
கூடி யிருக்கக் குறிப்பினை யுணர்த்தினோன்
ஞானப் பிரகாச நற்சுவா மிகளெனு
மாநற் பெயரோ னறைந்தன னந்நாள்
திருமயி லாபுரிச் சீர்ப்பதிக் கபாலிபால்
ஒருமையி னெழுந்த வுள்ளத் தினனாய்
நாடொறுஞ் சென்று நயந்தின் புருகி
வாடுறா வண்ணம் வணங்குபு நின்று
தயாமிக வாழ்த்தித் தண்ணளி யடைந்த
தியாஅக ராய முதலியார் தினனும்
செய்தவப் பயனே திரண் டுருவாகி
வைய மீதினில் வந்ததென் றெண்ணவு
முட்டாட் டாமரை முனிந்திவன் முகத்தை
விட்டா லிடனிலை விமலையென் றெண்ணவும்
இரப்போ ரெனுமளி யினமிவன் கரமே
தரப்போ தும்மெனத் தம்மனத் தெண்ணவுஞ்
சாந்தநன் ஞானிக டாம்பயின் றுலாவப்
போந்தவ னிவனருட் பொதிகையா னெனநற்



குணமொடு பிறந்திலக் குமணச் சாமி
யெனு நற் பெயர்கொண் டிருந்தநல் வள்ளல்
பாற்கட லமுதினைப் பயிலுங் கிருட்டியின்
சேற்சல சரக்கட் செழுபிணைக் குட்டியை
மணந்த செவ்வேளு மனத்தினி லுன்னு
குணங்கெழு மன்பன் கோதறு குணத்தன்
தம்மர பினிற்குறு மம்மையெல் லாஞ்சொல்
செம்மைநூ லேதெனத் தேடமை யத்து
மீன்னுற் பாத மென்னத் தோன்றி
மன்னுறு வித்தமிழ் தன்னைக் கண்டுடன்
ஏட்டுப் பிரதி களிற்கைப் பிழைகளை
யோட்டிச் சுத்தமோ டொளிபெறத் திருத்துவித்
தாவருஞ் சிறந்த வச்சில்
தேவரு நயக்கச் செய்திட் டனனே.''

'கலித்துறைமாலை' கச்சித் திருவேகம்பர் சந்நிதியில் அரங்கேற்றிய தென்ப. இந்நூலைச் செய்த நாகை முத்துக்குமார தேசிகர் ஸ்ரீ காஞ்சி ஞானப்பிரகாச மூர்த்திகள் ஆதீன அடியார் குழாத்துள் ஒருவராய் நாகப்பட்டினத்து மடத்தில் வசித்து வந்தவர்.

இப் பெரியாருக்கமைந்திருந்த சிறப்பினை,—

'பெத்த நிலைவிட்டுப் பேரின்ப வீட்டுநிலை
முத்துக் குமரன் முனமடைய — வைத்திட்ட
தேசிகா கச்சித் திருமடத்துள் வாழ்சிவனே
பாச மெனையகலப் பார்'

எனவரும் 'பண்டாரமாலை' யால் உணரப்படும்.

இக் கலித்துறைமாலை பழைய பதிப்பைச் சேர்ந்தது; பதிப்பித்த காலம் கி. பி. 1892. பதிப்பாசிரியர் திருமயிலை தணிகாசல முதலியார்.

'தசாங்கம்' இந் நூலைப் பாடிய சத்திய சந்தர் என்பவரும் ஸ்ரீ ஞானப்பிரகாச முனிவர் அடியார் குழாத்தவரே. இவர் காலத்தில் இவரால் நடந்த அற்புதங்கள் பல என்று முன்னிருந்த

பண்டாரச் சந்நிதிகள் (என் துறவற ஆசிரியர்) எனக்குக் கூறிச் சிலவெண்பாக்களையும் எடுத்துக் காட்டுவர். அதனுள்,—

'கச்சித் திருப்பதியுள் கம்பன் திருவருளால்
இச்சித் துறைமாக்க ளின்படைய — பச்சிமத்து
மேகம் பொழிந்து வேண்டு வனவிளைந்து
தாகந் தணிந்திடுமே தான்'

என்ற தொடக்கத்து 'கச்சித்திரு வெண்பா'வினுள் இப் பாட்டு காஞ்சியில் மழைபெய்யப் பாடியதாகும்.

இந்நூல் பழையபதிப்பைச் சேர்ந்ததே; பதிப்பித்த காலம் கி. பி. 1892 பதிப்பாசிரியர் திருமயிலை தணிகாசலமுதலியார்.

'ஊசல்முதலியன' இந்நூலும் பழையபதிப்பைச்சேர்ந்ததே; பதிப்பித்த காலம் கி.பி. 1868. பதிப்பாசிரியர் திருமயிலை இலக்ஷுமணசாமிமுதலியார். அவர்காலத்துப் புலவர் பாடிய சிறப்புக்கவி,—

### கோமளபுரம் இராஜகோபாலபிள்ளை அவர்கள்
செய்தது

'மருமையிலைக் குழலியர்கண் போல்வா னாங்கண்
மருமையிலை யுகளுமலர்த் தடங்கண் மல்கு
திருமையிலை நகருடையான் கமல மேவு
திருமையிலை வாகளித்த தியாக ராயன்
இருமையிலை தாம்பயனைப் பெறுவான் றந்த
விலட்சுமணப் பெருமான்செங் குந்த ரூசல்
அருமையிலை யிதனினுங் கென்ன வச்சி
லாற்றினான் புலவரவை யேற்றி னானே.'

### காஞ்சி இராமசாமிநாயுடு அவர்கள்
செய்தது

'தேசுலகுற் றிடநிறை தண்டரளவயற் றிருமயிலைத்
தியாக ராயன்
பேசலகற் றிடமுயன்று வப்பயனா லிலக்குமணப்
பெயரின் வந்தோன்



கூசலகத் துள்ளாதார் கொண்டுகரந் துறையவளர்
குலச்செங் குந்தர்
ஊசலகத் தூசலெலா மூசலுறப் பதித்திகந்தா
னுவமை மன்னோ'

### திரு காமுசெட்டியார் அவர்கள்
செய்தது

'பரிதி மதிதீ யிருவிழி யாவுடை
யுரிதி வடனதா ளொருவாப் புலத்தவ
குளத்திரு டபவவிர் களங்கமொண் கந்தரச்
சுந்தர வரனை துன்வல மார்ந்த
கருநிற வண்ண றிருவுந்தி பூத்த
முளரித் தவிசின் விளைஇ வேதன்
நிருமா ணஞ்செய் யொருமா ணஞ்சால்
கார்கலித் திரைமோ தார்கலி யுடுத்த
வட்டநே ரவனி யட்டதிக் கும்புகழ்
கிட்டிய வொண்கவி யொட்டக் கூத்தனாந்
தீதணா மாண்பன் கோதறத் தோன்றுபு
பாயிருட் சீக்கும் பானுவோ டலவனைத்
தங்குந்த மரமீண் டெங்குந் துளக்காத்
தகையரென் றிகல்புரிந் திகமீட்டி யெழுபான்
மைதீர் பநுவ றெய்வீ கத்துரைத்
தோங்கிட விளக்க மாயுறூஉம் பண்பமர்
செங்குந்தர் தம்மேற் றங்குந் தரமேல்
ஊசல் வாழ்த்துயர் லாலி கட்டிய
மாசின் மங்கள மன்னோற் கடுத்து
வருதோன் றலென வுரைசெயத் தன்குலம்
பழுதின்றி யாய்வித் தெழுதா வெழுத்தில்
இயைஇ வித்திசை யுய்த்தனன் றிசைதொறுந்
தயைபெறு தியாக ராயச் செம்மல்
தந்த சற்குணஞ் சாரிலக் குமணச்
சாமிசெங்குந்தத் தோமி லானே.'

இந்நூலை மயிலைநாதர் திருமழிசை நாட்டார் விருப்பப் படி கபாலீச்சரத்தில்கி.பி.1830ல் அரங்கேற்றி வைத்தாரென்ப; மயிலைநாதர் குமாரதேவர் மடத்தடியவர் என்று கூறுவர்.

இனி, இந்நூற்றிரட்டில் அனுபந்தமாகச் சேர்க்கப்பட்ட **1. செங்குந்த விநாயகர்மாலை, 2 செங்குந்த சிலாக்கியர் மாலை, 3. செங்குந்தவேற்பதிகம், 4 செங்குந்தர்மரபுவிளக்கம், சேனைத் தலைவர்மரபுவிளக்கச்சூறாவளி 6 செங்குந்த வேலவர் திருக்கை வழக்கத் தந்தாதி** என்பவை முறையே 1 ஸ்ரீபடம்பக்கநாதன், 2 முத்தமிழ்ச்சூரிகா. வீரபத்திர தேசிகர், 3 திருகுமாரசாமி முதலியார், 4 மாகறல் கார்த்திகேய முதலியார், 5 நரசிங்கபுரம் வீராசாமி முதலியார், 6 திருச்செங்கோடு ஆறுமுகப் பாவலர் முதலியோரால் செய்யப்பட்டனவாம்.

கு. பு. 'செங்குந்த விநாயகர்மாலை' முதல் 'சேனைத் தலைவர் மரபுவிளக்கச் சூறாவளி' ஈறான ஐந்து நூல்களும் பழையபதிப்பைச் சேர்ந்தவை. அச்சுக்கு வராதது 'திருக்கை வழக்கத்தந்தாதி' ஒன்றே

செங்குந்த விநாயகர்மாலை' ஒற்றியூரான் காலத்தில் பாடி அரங்கேற்றிய தென்பர். ஒற்றியூரான் வல்லான் காவியத்துள் வரும் பன்னிரு வீரருள் ஒருவன் என்க.

'செங்குந்த சிலாக்கியர்மாலை'யுள் வரும் சரித்திரங்கள்,பல நூற்கொண்டு உண்மையை ஆராய்ந்தறியவேண்டும். இப்போது கிடைக்கும் 'அவத்தாரண்யதகளம்' என்னும் 'கவனக்குறிப் பட்டவணை'யுள் இவ் விஷயங் கடா விடையுடன் காணப் படுகிறது; எழுதப்பட்டுள்ள விஷயங்களைக் கவனிக்கத் தக்கதாம்.

'செங்குந்த வேற்பதிகம்' இத் தோத்திர நூல் சோழசிங்கபுர நாட்டில் கி. பி. 1901 - ல் அரங்கேற்றியதாகும்.

'செங்குந்தர் மரபுவிளக்கம்' தமிழ் உலகத்திற்கு 'மொழி நூல்' செய்து வைத்த பெரும்புலவர் திரு கார்த்திகேய முதலியார் அவர்கள் செய்தது. அவர் காலத்திலேயே அவரால் இந்நூல் கச்சிக் கச்சாலை நாயனார் சந்நிதியில் காஞ்சி மகாநாட்டார் தலைமையின்கீழ் கி.பி. 1910-ல் அரங்கேற்றிய தாகும். இதன் சிறப்புக்கவி.—



**பேறை செகநாதப்பிள்ளை அவர்கள்**
செய்தது

**சீர்கொண்ட காஞ்சிசூழ் தொண்டைமண் டலமார்ந்த
செங்குந்த ராமரபினோர்
திறலினாற் பெறுவீர ஜெயகுண விசேடமும்
செங்கமல கரவண்மையும்
செப்புதந் தொழிலின்வரு மிழைநகைப் பொருளினாற்
சேர்ந்தநா மச்சிறப்பும்
திகழ்கின்ற கருவிகளின் மகிமையு மியற்கையாம்
சிவபக்தியின் பெருமையும்**

**கார்கொண்ட பொன்மதிற் கச்சபேசாலைய
கயிங்கரிய முதலதொண்டு
கரிவரத னிரதோற்ச வத்திலே தண்மலர்க்
கண்ணிதாங் குறுமாட்சியும்
கண்டவிவை யாவையு மொருங்குணர்ந் தங்கவை
களைத்தமிழினி னாரமாகக்
கட்டளை விராங்கலித் துறையி னனிபலவுங்
கவின்பெறச் செய்தளித்தான்**

**பேர்கொண்ட வெண்ணான் கெனுந்தலந் தனிலரிய
பெரியதிரு மாகறலின்வாய்ப்
பெட்புற்ற வித்யார்த்தி கட்கினிய செந்தமிழ்
பிறங்குவித் திடவெண்ணியே
பெரிதுவப் பாற்கலா சாலைநிலை நாட்டுவான்
பேசுறு முயற்சிகொண்ட
பெருகு தமிழ்வித்துவா னைந்திலக் கணமுமே
பிழைதபுத் தோதுவிப்போன்**

தார்கொண்ட குவளையணி மார்பினான்
றொண்டைமண்
டலமுற்ற வேளாண்மையான்
சலியா முயற்சியான் பொலிவுள்ள சைவசித்
தாந்ததூய்மைய மரபினான்
சத்தியந் தவிராத மொழியினா னருளே
ததைந்தொழுகு தண்விழியினான்
சரவணக் கார்த்திகே யப்பெயரினா லுலகு
சாற்றுநன் னாவலனரோ.'

'சேனைத்தலைவர் மரபு விளக்கச் சூறாவளி' பாடிய வரலாறு அந்நூல் உரைச்செய்யுளாலும், பாச்செய்யுளாலும் அறியற்பாலது. இவ்வாதம் நடந்தகாலம் சாலிவாகன சகவூ 1773. இந்நூலாசிரியர் திருவருட்பிரகாச வள்ளலார் மாணாக்கராவர். இதன் சிறப்புக்கவி,

### காஞ்சி இராமலிங்கதேசிகர் அவர்கள்
செய்தது

'வளங்கொளச்சே னைத்தலைவர் மரபுவிளக் கச்சூறா
வளியென் றோர்நூல்
விளங்குநர சிங்கபுரம் வீராசா மிப்புலவன்
விளம்பி னானாற்
குளங்கொள்விழிப் பெருமான்றன் கோயிலினுட்
பலிபீடக்
குலவைப் புற்றே
உளங்கொளுநற் குணமுடையோர் பிறர்க்கைய
மறவுரைக்கு
முரையின் மாதோ.'

### திருவூறல் விநாயகதேசிகர் அவர்கள்
செய்தது

'பேரார்செங் குந்தர் பெருமை மிகப்பிர காசிக்கவே
தாராருஞ் சேனைத் தலைவர் மரபு விளக்கத்திற்குச்
சீரார்சூ றாவளி செய்தானெழினர சிங்கபுரம்
வீரா சுவாமிக் கவிவாணன் யாரும் வியப்புறவே.'



"செய்க்கமலஞ் சூழுநர சிங்கபுரம்
வாழ்வீரா சாமி வாணன்
மெய்க்கந்தர் புராணமுத லுணர்ந்தறிவாற்
செங்குந்தர் மேன்மை யோங்கத்
தக்கசே னைத்தலைவர் மரபுவிளக்
கச்சூறா வளிதந் தானால்
கைக்கனியா மலகமெனக் கவிஞரெலாங்
கண்டுமனங் களிக்கத் தானே.'

### களந்தை வேதகிரிமுதலியார் அவர்கள்
செய்தது

"பூதலத்திற் செங்குந்தர் நவவீரர்
மரபென்றே புராண வாறா
ஓதுநர சிங்கபுரம் வீராசா
மிப்புலவ னுரைமெய் யென்றே
ஆதிசிவன் மழுவெடுத்தா னணிதிருமா
னெய்யினிற்கை யஞ்சா திட்டான்
போதுரையு நான்முகனு நித்தியமாச்
சத்தியத்திற் புகுந்திட் டானே.'

### சென்னை கேசவ வுபாத்தியாயர் அவர்கள்
செய்தது

"தாட்கொண்மலர்ப் பொய்கைநர சிங்கபுரம்
வாழ்வீரா சாமி வாணன்
வாட்கொள்சே னைத்தலைவர் மரபுவிளக்
கச்சூறா வளியென் றோர்நூல்
ஆட்சியா னனுபவத்தா னறிவுடையோ
ருணர்த்தியவா கமத்தான் மற்றைக்
காட்சியா னுலகரிஃ துண்மையெனச்
சாட்சிபெறக் கூறி னானே.'

'செங்குந்தவேலவர் திருக்கைவழக்கத்தந்தாதி' திருச்செங்கோடு அர்த்தநாதர் சந்நிதியில் கலியுகாதி௵ 4900-ல் அரங்கேற்றியதாம். இவ் வந்தாதி பாடிய ஆறுமுகப் பாவலர் இலக்கியத்தில் வல்லவரென்று அவர்வாக்கால் தெரிய வருகிறது. பாட்டுகள் கூறும் சரித்திரங்களுள் சில சரித்திரம் விளங்கவில்லை. ஆயிரக் கணக்கான பிழைகளுடன் கிடைத்த ஏட்டுச் சுவடி ஒன்று கொண்டு இந்நூல் ஒருவாறு செப்பஞ் செய்யப்பட்டது.

இந் நூற்றிரட்டில் கடைசியாகச் சேர்க்கப்பட்ட **செங்குந்த குலமாட்சி** திருவாரூர் சபாபதி முதலியார் அவர்களால் தொகுக்கப்பட்டது.

கு - பு. 'செங்குந்த குலமாட்சி' பல நூல்களுள் மறைந்து கிடக்கும் பாடற்றொகுதியாம் இப் பதிப்பில் முற்றும் அத்தொகுதி இடம் பெறவில்லை. இதனைத் திரட்டிப் பிரதி செய்து வைத்திருக்கும் 'செங்குந்த வித்துவ ஜனசேகரர்' அவர்கள் அரிய பல சரித்திரக் குறிப்புக்களுடன் அதனைத் தனியாக வெளியிடுவார்களென்று, எதிர்பார்க்கப்படுகிறது.

செங்குந்த மக்கள் பிரிவு வழக்கம் ஒழுக்கம் அறிவு ஆற்றல் கொடைமுதலியவற்றை இந்நூற்றிரட்டு அங்கங்கே சுருக்கியும் விரித்தும் கூறுகின்றது; ஆனால், ஒரு தொகுப்பாக அதனைக் கூறவில்லை. அதனை நான் பல மேற்கோள்களுடன் **செங்குந்தர் சரித்திரத்திரட்டு** என்னும் பெயருடன் எழுதி அச்சிட முயன்று வேலைசெய்து வருகின்றேன். இப் பதிப்புரையில் அச்சரித்திரத் தொகுதியைச் சேர்த்துவிடுவது சாலவும் பொருத்தமாகும்; ஆயினும், கால நீட்டித்தலையும் ஒருவர் கைப்பொருளே இத்திரட்டிற்கும் மிகுதியாக எதிர்பார்க்க நேருதலையும் நோக்கி அவ்வாறு செய்தேனில்லை.

இந்நூற்றிரட்டு அச்சிடத்தொடங்கி வருஷம் ஒன்றுக்கு மேலாயிற்று. அச்சிடும்போது ஏடு சம்பந்தமாகவும், சரித்திர சம்பந்தமாகவும் பல ஊர்கள் சென்று வரவேண்டி யிருந்தது. இந்த யாத்திரைகளில் யான் வேண்டியபடியே எனக்குச் சௌகரியம் செய்துவைத்த சீமான்களுக்குச் செங்குந்தர் என்றென்றும் நன்றி பாராட்டற்பாலர்.



இனி, இங்கே என்னால் எழுதிவந்த தொகுப்புரையுள்ளும், குறிப்புரையுள்ளும் வந்த விஷயங்கள் பல; வாராமல் மறைப்பெனும் பகைவன்' வாரிக்கொண்ட விஷயங்கள் மிகப்பல. பெரும்பாலும் எழுதவேண்டிய விஷயங்கள் முற்றும் எழுதியேயிருக்கக் கூடும்; சிறு பான்மை அதனுள் வரக்கூடிய விஷயங்கள் விடுபட்டிருக்கவும் கூடும். இவ்வளவு தான் நான் அறிவுடைய மக்களுக்குச் சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன்.

இது நிற்க, பலவாறாகப்பரந்து கிடந்த நூல்களை ஒன்று சேர்த்துச் **செங்குந்தர் பிரபந்தத் திரட்டு** என்னும் பெயரோடு அச்சிற் பதிப்பிக்கச் செய்து உலகிற் பரப்பிய 'செங்குந்த வித்துவஜன சேகரர்' ஸ்ரீமான் தி. க. ச. சபாபதி முதலியார் அவர்களும், அவர்கள் தமையனார் ஸ்ரீமான் தி. க ச. கலியாணசுந்தர முதலியார் அவர்களும், இவர்கள் மருகராகிய செல்வச் சிரஞ்சீவி மஞ்சட்கொல்லை தி. மு. அரு. அருணாசலமுதலியார் அவர்களும் தீர்க்காயுளும் அஷ்ட ஐசுவரியமும் பெற்று இது போன்ற அரிய பெரிய செயல்களை மேன்மேலும் செய்துவர எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவானாக.

'காமாட்சி விலாசம்'<br>கீழ்ப்பாக்கம் சென்னை<br>அட்சய௵ ஆவணி௴

இங்ஙனம்

**காஞ்சி நாகலிங்கன்**



கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர்

○ காஞ்சி நாகலிங்க முனிவர் ○

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றம், காஞ்சிபுரம்



உ

சிவமயம்

முருகன் துணை

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் இயற்றிய

# ஈட்டி எழுபது.

(மூலமும் பொழிப்புரையும்)

## கடவுள் வாழ்த்து

நேரிசை வெண்பா

1. நாட்டில்உயர் செங்குந்த நாயகர்மீ தில்சிறந்த
ஈட்டிஎழுப தினைப்பாடக் - கோட்டில்
பருமா வரை அதனில் பாரதநூல் தீட்டும்
கரிமா முகன்கழலே காப்பு.

இதன்பொருள் :

உலகத்தில் உள்ளவர்களால் போற்றப்படுகின்ற மேலான புகழை உடைய செங்குந்தத் தலைவர்கள்மீது, பல சிறப்புக் களும் அமைந்த **ஈட்டி எழுபது** என்னும் நூலினை நான் பாடுதற்கு, தனது ஒரு தந்தத்தினால் பருத்துயர்ந்த மேரு மலையில் பாரதநூலை எழுதிவைத்த அழகிய யானை முகமுடைய விநாயகக்கடவுளின் திருவடிகளே துணையாகும். (கோடு - கொம்பு, தந்தம் )

தற்சிறப்புப் பாயிரம்
கட்டளைக் கலித்துறை

2. பூவார் புவனையில் சோமன் தரும்பழி போனபின்பு
நாவாணர் போற்றிய நாடகம் கேட்ப நலமுடனே
ஆவாணர் செங்குந்தர் ஆயிரத் (து) எண்தலை கொய்திரத்தப்
பாவாடை இட்டது உலகமெல் லாம்புகழ் பாலித்ததே.

(இ. ள்) திருஆவூர் என்னும் தலத்தில் நல்ல வளத்துடன் வாழ்கின்ற செங்குந்தத் தலைவர்கள் அழகமைந்த திரிபுவனம் என்னும் நகரில் **சோமாசியாண்டார்** (சோமன்) என்பவனால் உண்டான **பழி** நீங்கிய பின்னர் பெரும்புலவர்களால் போற்றப் படுகின்ற **'ஈட்டி எழுபது'** என்னும் பிரபந்தத்தைக் (கூத்தன் என்னும் நான் பாடக்) கேட்பதற்காகத் தங்களில் ஆயிரத் தெண்மருடைய தலைகளைக் கொய்து இரத்தப்பாவாடை இட்டது உலகம் முழுவதிலும் புகழப்படுவதாயிற்று.

(குறிப்பு)

பாயிரம் என்பது முன்னுரைபோன்று, நூலின் அமைப்பு, தன்மை போன்ற செய்திகளைக் கூறுவது. நூலாசிரியர் தாமே அதைக்கூறினால் 'தற்சிறப்புப்பாயிரம்' எனப்படும். நூலாசிரியர் அல்லாத பிறர் தருவது 'சிறப்புப் பாயிரம்' எனப் படும். புவனை என்பது திருபுவனம் என்னும் ஊராகும். மூன்றாம் குலோத்துங்கன் சேர பாண்டிய மண்டலங்களை வென்று, சேர சோழ பாண்டிய மண்டலங்களுக்கு அரசன் என்று பொருள்பட 'திரிபுவனச் சக்கரவர்த்தி' என்ற பட்டத் துடன் சோழ நாட்டை ஆண்டுவந்தான். அவன் அமைத்த நகரம் திருபுவனம் ஆகும். ஆனால் மூன்றாம் குலோத்துங்கன் ஒட்டக்கூத்தர் காலத்திற்குப் பின்னால் வாழ்ந்த அரசன். அது பற்றி, 'புவனை' என்பது புவனகிரி என்று சிலர் கூறுவர்.

(ஆவாணர் - ஆவூர் என்னுமிடத்தில் வாழ்ந்தவர். வாழுநர் - வாணர் - மரூஉமொழி)

மங்கல வாழ்த்து

அறுசீர் விருத்தம்

**3. பூதலம் வாழ்க; குந்தர் பொலிவுடன் விளங்க, நான்கு**
**வேதமெந் நாளும் ஓங்க; வேதியர் பசுக்கள் பல்க;**
**மாதவர் வளவன் செங்கோல் வளமைகுன் றாதுநிற்க**
**ஓதமே அறையும் பொன்னி உறந்தையும் சிறக்க; மாதோ.**

(இ. ள்) (மழைவளம், செந்நெல் வளம் பொன் மணி முதலிய நிதிவளம் பெருகி) உலகம் மேன்மேலும் வாழ்ந்திருக்கட்டும். செங்குந்தத் தலைவர்கள் நீடூழி காலம் பொலிவுடன் விளங்கி யிருக்கட்டும். நான்கு வேதங்களும் எக்காலமும் பெருகி இருக் கட்டும். அந்தணர்களும் பசுக்களும் பெருகி வாழட்டும். பெரியோர்கள் எல்லா வளங்களும் பெற்று வறுமையின்றி வாழட்டும். குலோத்துங்கனுடைய செங்கோல் வளத்துடன் குறைவின்றி நிலவட்டும். நீர்ப்பெருக்கத்தில் கடல் போன்று உள்ளது என உவமைகூறும் காவேரி ஆறும், அந்நதி சூழ்ந்த உறையூரும் சிறப்புற்று இருக்கட்டும். (உறந்தை - உறையூர் மாது, ஓ- அசைகள்; மாதவரும், வளவன் செங்கோலும் என ,உம்மை' விரிக்க.) 1



பிரபந்தம் கேட்டோர் சிறப்பு

**4. கோட்கவி கொண்டு மாக்கள் கொடுந்தமிழ் கூற நீத்துத்**
**தாட்கவிப் புதிய ஆட்டம் தலைக்கடை துரந்து சாட**
**வாட்கவி கொண்ட மன்னன் வளவனும் மகிழ நாமே**
**நாட்கவி பாடும் நாள்போல் இருப்பது பெரிய நாடே.**

(இ.ள்) தாம்கொண்டதேகொள்கையாக வைத்துப்பாடல்களைப் பெருமுயற்சி செய்துபாடி அரங்கேற்றும் கொடுந்தமிழை நீக்கி, பின்னும் இது போன்ற புதிய ஆட்டங்கள் இல்லாமல் போகு மாறு, அப்போலிக்கவிகளை தலைவாயில்வரை துரத்திச் சாடுதற்கு வாள்போன்ற எம்மைக் கவிச்சக்கரவர்த்தியாகக் கொண்ட சோழன் குலோத்துங்கன் மகிழ்ந்து கேட்கக் கூத்தனா கிய நாம், நாள்தோறும் காலையில் புதிதாக விளங்கும் பாடல் களைப் பாடுகின்ற நாளைப்போலவே செங்குந்தர் வாழும் பெரிய சோழ நாடானது என்றும் சிறப்புற்று விளங்குவது.

(ஒட்டக்கூத்தர் தம்மை, 'வாள் போன்ற கவி எனக் குறிக் கின்றார். தாள்கவி - பெருமுயற்சியால் பாடும் பாட்டு. நாள்கவி - ஒட்டக்கூத்தர் நாள்தோறும் காலையில் அரசவை யில் பாடிய பாட்டு என்பர்). 2

சிவாலய பரிபாலனச் சிறப்பு

**5. விடங்கம்ஏ ழாதி வீதி விடங்கம்ஆ ரூர்வெண் காடும்**
**நடங்கொளும் தில்லை மூதூர் பஞ்சநன் னதிசாய்க் காடும்**
**இடங்கொள்மா காளம் ஏழும் இடைமரு தூர்செங் காடும்**
**தொடங்கிய தரும ஆட்சித் தொகுதிசெங் குந்தர் வாழி.**

[இ.ள்] வீதிவிடங்கப் பெருமான் என்னும் தியாகராசர் எழுந் தருளியுள்ள தலங்கள் ஏழு. முதலாவது திருவாரூர்; [பிற திருக் காரோணம், திருநள்ளாறு, திருக்காறாயில், திருக்கோளிலி, திருவாய்மூர், திருமறைக்காடு] இவ்ஏழு [சப்த] விடங்கத்

தலங்களையும், திருவெண்காடு, சிதம்பரம், திருவையாறு, திருச்சாய்க்காடு, இடமகன்ற திருவிருப்பைமாகாளம், திருவம்பர்மாகாளம் முதலிய ஏழுமாகாளம், திருவிடைமருதூர், திருச்செங்காட்டங்குடி ஆகிய தலங்களையும் ஆதிமுதல் அறங்காவலர்களாக இருந்து நன்கு பரிபாலனம் [ஆட்சி] செய்துவருகின்ற செங்குந்தர் கூட்டம் என்றும் வாழ்வதாக. 3

வமிசாவளிச் சிறப்பு

6. **பாதநூ புரத்தில் தேவி சாயைகண் டமலன் கொண்ட**
**காதலால் கருப்ப மாகும் கதிர்நவ மணிமா தர்க்கண்**
**மேதகு வீரத் தோடும் மென்மீசை யோடும் வந்த**
**மாதவ வீர வாகுத் தலைவர்இத் தலைவர் மாதோ.**

[இ. ள்] உமாதேவியாரின் பாதச்சிலம்பில் இருந்து உதிர்ந்த நவமணிகளில் அவ்வம்மையாரின் திருவுருவத்தைக் கண்ணுற்றுச் சிவபெருமான் கொண்டருளிய இச்சையால் கருவுற்ற ஒளியுடைய ஒன்பது இரத்தினப் பெண்களிடத்தில், மேன்மையுள்ள வீரத்தன்மையுடனும், மென்மையான மீசையுடனும் உதித்த பெரிய தவத்தை உடைய வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களின் மரபினர் இச்செங்குந்தத் தலைவர்கள்.

(மாணிக்கம், முத்து, புட்பராகம், கோமேதகம், வைடூரியம், வைரம், மரகதம், பவளம், இந்திரநீலம் என்பன நவரத்தினங்கள். இந்த நவரத்தினப்பெயர் கொண்ட மாணிக்கவல்லி முதலியவர்களிடம் முறையே வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரதீரர் ஆகிய ஒன்பது வீரர்களும் தம் அன்னையரின் நிறத்துடன் தோன்றி விளங்கினர்; 'மாது, ஓ - அசைகள்.) 4

குந்தப்படைச் சிறப்பு

7. **பிறந்தஒன் பதின்மர் குந்தப் பெருமையாம் பேச மாட்டோம்;**
**பறந்தன கழுகும், பாறும் பயிரவி காளி அஞ்ச**
**மறந்தகும் அவுணர் ஆட்டம் அடங்கின மகிழ்ச்சி யால்வாய்**
**திறந்தன அலகை ஈட்டம் செய்யவாய்ச் சிறுவ ரோடே.**

(இ.ள்)இவ்வாறு உதித்த வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களுடைய திருக்கரத்தில் இருந்த (உமையவள் அளித்த) குந்தம் என்னும ஈட்டிப்படையின் பெருமையை எம்மால் முழுவதும் சொல்ல இயலாது. அவ்வீரர்கள் செய்த போரைக்கண்டு கழுகுகளும், பருந்துகளும் ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்தன. துர்க்கையும் காளியும் கண்டு அஞ்சும்படி அதர்மத்தில் மிகுந்திருந்த அவுணர்களின் பெருங்கூத்தாட்டம் அழிந்தது. (அந்த அசுரர்களுடைய பிணக்குவியல்களைக் கண்டு) பேய்க்கூட்டங்கள் தங்கள் சிவந்த வாயைஉடைய சிறிய குழந்தைகளுடன் மகிழ்ந்து வாய்திறந்து நின்றன. 5



தகரை வாகனமாக்கிய சிறப்பு

கலி விருத்தம்

8. **ஓதிய வேள்வியின் உவப்ப நாரதன்**
**போதவே தகர்தனைப் பொங்கு தீத்தர**
**வேதனைப் படுப்பதை விரைந்து கட்டியே**
**செய்தனக் (கு) உதவின திருச்செங் குந்தமே.**

(இ. ள்) நாரதமுனிவர் தாம்விரும்பிய பயனைப் பெற்று இன்புறவேண்டும் என்பதற்காக விதிப்படி செய்த யாகத்தீயில் இருந்து ஆட்டுக்கிடாய் ஒன்று தோன்றியது. அது சகல உலகங்களையும் துன்புறுத்துவதைக் கண்டு, (நாரதரும் மற்றைய தேவர்களும் வெள்ளியங்கிரியில் விளையாடும் முருகப்பெருமானிடம் முறையிட்டனர். பெருமான் கட்டளையினால்) அழகிய செங்குந்தத்தை ஏந்திய வீரவாகுத் தேவர் விரைந்து சென்று அவ்வாட்டுக்கிடாயைக் கட்டிக்கொணர்ந்து முருகப்பெருமானுக்கு வாகனமாக உதவினர். 6

பிரமனைச் சிறையிட்ட சிறப்பு

கலிநிலைத்துறை.

9. **பொதிய மால்வரைக் குறுமுனி தேறவும்பொருள் சொன்ன**
**மதியை ஆறென உடையவோர் மூவிரு வதனத்தான்**
**கதியை ஆற்றியும் குணத்தொடு பழகியும் காணாத**
**விதியை மேவலர் நடுங்கிடத் தளையிடும் மிளிர்குந்தம்.**

(இ.ள்) பெரிய பொதிய மலையில் உள்ள அகத்திய முனிவர் மெய்ஞ்ஞானத்தைத் தெளிந்து கொள்ளும்படி உண்மைப் பொருளை உபதேசம் செய்த, ஆறு முழுநிலவு போன்ற ஆறு முகங்களை உடைய முருகக் கடவுள், குந்தப்படை உடைய வீரவாகு தேவர் முதலிய வீரர்களைக் கொண்டு

சத்தியலோகத்திற்குத் தலைவனாய் உள்ள பிரமன் சிருட்டித் தொழில் புரிந்தும், இராசத குணத்தோடு இருந்தும் பிரணவத்திற்குப் பொருள் தெரியாது விழித்தபோது பகைவர் நடுக்கம் கொள்ளுமாறு, விலங்கிட உதவியவர்கள் குந்தப்படையுடைய நவவீரர்கள். (குறுமுனி - அகத்தியர்; கதி - சிருட்டித்தொழில் விதி - பிரமதேவன்; மேவலர் - பகைவர்; குந்தம் ஏந்தியவர்களை, 'குந்தம்' என்றது உபசார வழக்கு; இவ்வாறு பின்னும் வருவன காண்க.) 7

தாரகன் வதைச் சிறப்பு
கலி விருத்தம்

**10 வனமுறு வாசமா வைகல் விட்டியா**
**சனமுற விண்ணிடம் தனிவை குந்தமும்,**
**இனனுறு பங்கய (ம்) மூவர்க்கும், எய்தவே**
**சினமுறு தாரகற் செறும்செங் குந்தமே.**

(இ.ள்) அகத்தியர் முதலிய முனிவர்கள் எல்லாரும் அவுணர்களால் துன்பம் அடைந்து, காட்டில் வாழ்வதை விட்டுத் தங்கள் பூசை முதலியவைகளை நடத்தவும், சுவர்க்கலோகமும், ஒப்பற்ற வைகுந்தமும், சூரியனைக் கண்டு மலரும் தாமரையாகிய ஆசனமும் முறையே இந்திரன், திருமால், பிரமன் ஆகிய மூவர்க்கும் கிடைக்கவும், கோபம் மிக்க தாரகாசுரனைப் போர்க்களத்தில் அழித்தவர்கள் செங்குந்த தலைவர்கள். (பங்கயம் - பங்கஜம் - தாமரை; விட்டியாசனம் உற- என்பதில் 'இ' குற்றியலிகரம் 'யாசனமும்' என உம்மை விரிக்க; சனம்- கூட்டம்.) 8

பானுகோபன் வதைச் சிறப்பு

**11 பூட்டிய தேரொடும் பொலிந்த பானுவை**
**ஈட்டிய தொட்டிலில் இறுக்கும் மைந்தனை**
**மூட்டிய சமரிடை முடித்து மாசறத்**
**தீட்டி வீரர்கைச் சிறந்த குந்தமே.**

(இ.ள்) சூரபதுமனின் மகனாகிய பானுகோபன் குழந்தைப் பருவத்தில் தொட்டிலில் இருந்தபோது, தன்மீது சூரிய ஒளி விழுந்து தாக்குவது கண்டு கோபித்து, ஏழு குதிரைகள் பூட்டிய தேரோடு சூரியனைப் பிடித்துவந்து தன் நவமணித் தொட்டிலோடு சேர்த்துக் கட்டினான். அத்தகைய பானுகோபனைப்



போர்க்களத்தில் அழித்து, அவுணர்களால் ஆகிய குற்றம் நீங்க, புகழை நன்றாக எழுதி வைத்தன நவவீரர் கையில் பிடித்த சிறப்புமிக்க செங்குந்தங்கள். (பானு- சூரியன்) 9

சிங்கமுகனைக் கொன்றுகடப்பமாலை அணிந்த சிறப்பு

**12 பங்கமில் அரிமுகப் பஃற லைக்கிளை**
**மங்கவே நூறிஓர் வாகை மாலையை**
**எங்கள்வேற் படைதனக் கென்று சூட்டிஒண்**
**செங்கடம் (பு) அணியுமால் செய்ய குந்தமே.**

[இ. ள்] இரத்தத்தால் சிவந்த குந்தமானது, பங்கமில்லா வரம்பெற்ற சிங்கமுகனது பல தலைகளாகிய கிளைகள் கெடும்படி அழித்து, வெற்றிமாலையை முருகக்கடவுளின் வேலாயுதத்திற்கே ஏற்றது எனத்தந்து, தான் ஒளிபொருந்திய சிவந்த கடப்பமாலையை அணிந்துகொண்டது.
[அரிமுகன் - சிங்கமுகன்; பஃறலை - பல தலைகள்] 10

சூரபதுமனைக் கொன்று புலிக்கொடி பெற்ற சிறப்பு.

**13 வனப்புறும் இளவலும் வரச்செவ் வேற்குகன்**
**கனப்பகல் ஆறினில் கலாபம் ஏறியே**
**இனப்புகழ் சேவலம் கொடிதற் கேற்றுவெம்**
**சினப்புலிக் கொடிதரச் செறிசெங் குந்தமே.**

[இ.ள்]அழகு பொருந்திய இளவலாகிய வீரவாகுத்தேவர் முதலிய நவவீரர்களும் தம்மைச் சூழ்ந்துவர, சிவந்த வேலாயுதத்தை உடைய முருகப்பெருமாள். ஆறு நாள் போரிட்டுச் சூரபதுமனைச் சங்கரிக்க, [அவன் கடலில் மாமர உருவம் கொள்ள, அதைத்தன் வேலினால் இருபிளவாக்க அந்த இருபிளவுகளும் மயிலும் சேவலுமாகி வர.] மயிலை வாகனகவும், அதன் இனமாகிப் புகழ்பெற்ற சேவலைக் கொடியாகவும் கொள்ள சூரபதுமன், தன் கையில் கொண்டிருந்த புலிக் கொடியை வீரர்கள் வசம் கொடுக்கப் பெற்றுக்கொண்ட சிறப்பினை உடையது செங்குந்தம்.

(பகல் - நாள்; கனப்பகல் - பெருமை பொருந்திய நாள்; கலாபம் - தோகை; இங்கு மயிலை குறித்தது; தற்கு - தனக்கு; செறி -செறியும்; கடைக்குறை) 11

தேவர்கள் சிறையை நீக்கிய சிறப்பு

**14 குறையினைக் கடவுளர் கூறக் கேட்டவர்**
**துறையினை நிறுவியே சூர்த டிந்துநான்**
**மறையினை வழுவற வளர்த்துத் தேவர்தம்**
**சிறையினை மீட்டது திருச்செங் குந்தமே.**

(இ.ள்) தேவர்கள் சூரனால் துன்பப்படும் தம் நிலையை முருகப் பெருமானிடம் எடுத்துரைக்கக் கேட்டுத் திரண்டு சென்று அச்சூரபதுமன் முதலிய அவுணர்களைக் கொன்று, வீரமகேந்திரபுரத்தில் சிறையிருந்த தேவர்களைச் சிறைமீட்டு, அவரவர் செய்யும் தொழிலை மீண்டும் நிலைபெற வைத்து, இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் குற்றமற வளர்வித்த புகழை உடையது அழகிய செங்குந்தமாகும்.

(நிறுவி - நிலைபெறச்செய்து; பாதுகாத்து; தடிந்து - அழித்து) 12

பொன்னகர்ச் சீர்பெறச் செய்த சிறப்பு

**15 தாருவும் சுரபியும் தவள வேழமும்**
**தாருடைப் புரவியும் சசியும் கைம்மிசைப்**
**போருடை வச்சிர வாளும் பொன்னகர்ச்**
**சீருறும் படிஅவுண் செறும்செங் குந்தமே.**

(இ.ள்) பஞ்ச தருக்களும், காமதேனுவும், வெள்ளை யானையாகிய ஐராவதமும், கிண்கிணி மாலை போன்றவைகளை அணிந்த உச்சைச் சிரவம் என்னும் குதிரையும், இந்திராணியும், கையில் உள்ள, பகைவர்களின் போரை அழிக்கின்ற, வச்சிராயுதமும், பொன்னுலகத்தில் அரசிருத்தலும் ஆகிய பல சிறப்புக்களைத் தேவேந்திரன் மீண்டும் அடையும்படி, சூரபதுமனையும் மற்ற அவுணர்களையும் அழித்தது செங்குந்தமாகும்.

(தாரு - தரு - மரம் - தேவலோகத்தில் உள்ள ஐந்து(பஞ்ச) தருக்கள்: அரிச்சந்தனம், கற்பகம், சந்தானம், பாரிஜாதம், மந்தாரம் ஆகியன; தார் - சதங்கை; மணிமாலை என்றும் பொருள் உண்டு; தவளம் - வெண்மை) 13

தேவர் பகை ஒழித்த சிறப்பு

**16 முன்பகை யாவையும் முடித்துக் கூர்எயிற்**
**றன்பகை யாவையும் தடிந்து சந்ததம்**
**பின்பகை இல்லதாம் பெற்றி செய்ததாம்**
**ஒன்பதி னோர்கரத் (து) ஒளிரும் குந்தமே.**



(இ.ள்) தமையனாகிய சூரபதுமனது கொடுமைகளை எல்லாம் போக்கிச் சிங்கமுகன் முதலிய, தேவரது பகைவர்கள் அனைவரையும் அழித்து, பின் எக்காலத்திலும் பகை இல்லாததாக வீரத்தன்மை செய்துவைத்த சிறப்பு வீரவாகுத்தேவர் முதலிய ஒன்பது வீரர்களது கையில் உள்ள செங்குந்தப்படைக்கே உரியதாம்.

(முன் - தமையன்; முன்பகை - தமையனாகிய சூரபதுமனுடைய பகை; இதற்குப் பழம்பகை என்று பொருள் கொள்வது சரியன்று; சந்ததம் - எக்காலத்திலும்; பின்பகை இல்லதாம் பெற்றி - என்பது பிற்காலத்தில் பகை இல்லதாம் வகை எனக் கொள்ளுதலே நேரிது.) 14

திருக்கயிலையாதி காப்புச் சிறப்பு

அறுசீர் விருத்தம்

**17 வெள்ளிமால் வரைசூழ் காப்பும் மிளிர்மணிச் சிகரக் காப்பும்**
**பள்ளிமால் வரையின் காப்பும் பைம்பொன்ஆ பரணக்காப்பும்**
**வள்ளிதாக் கைக்கொள் என்று மகிழ்நீற்றுக் காப்பும் இட்டுத்**
**தெள்ளிதாய் உமையாள் தந்தசெங்குந்தம் போலும் உண்டோ!**

(இ.ள்) 'உயர்ந்த வெள்ளியங்கிரியைச் சூழ்ந்து காக்கின்ற காவலும், உச்சியில் இரத்தினங்கள் இழைத்த கொலுமண்டபக் காவலும், அந்தப்புரத்தை உடைய மகாமேருவின் காவலும், பசிய பொன்னாலும் மணிகளாலும் செய்த ஆபரணக்காவலும் வண்மையாகக் கைக்கொள்ளுங்கள்' என்று உமாதேவியார் நவவீரர்களை அழைத்து மகிழ்ச்சியோடு திருநீற்றுக்காப்பும் இட்டுத் தெளிவாகக் கொடுக்கப்பெற்ற இச் செங்குந்தம்போல இவ்வுலகத்தில் வேறு படைக்கலம் உண்டோ? இல்லை.

(பள்ளி - அந்தப்புரம்; மால்வரை - மேருமலை. வள்ளிதா - வண்மையாக) 15

ஈட்டிப்படைச் சிறப்பு

**18 சலம்பிரி யாத சூட்டுச் சாவற்கே தனம்எஞ் ஞான்றும்**
**வலம்பிரி யாத செவ்வேட்(கு) உறுதுணை யாக மன்உட்**
**குலம்பெற வந்தார் என்றங் கொடியுமை தந்த ஈட்டி**
**நலம்பெறும் இந்தக் குந்தர் பரிசுபோல் நாட்டில் உண்டோ!**

(இ.ள்) தன்னினத்தில் ஒன்றை ஒன்று காணில் பகையால் கொள்ளும் கோபம் நீங்காத உச்சிக்கொண்டையினை உடைய சேவற் கொடியானது எக்காலத்திலும் வலப்பக்கத்தே விட்டுப் பிரியாத சுப்பிரமணியக் கடவுளுக்கு மிகுந்த துணையாக, நிலை பெற்ற கயிலாய பரம்பரைக்குலம் விளக்கம்பெற வந்தனர் என மகிழ்ந்து, அழகிய கொடி போன்ற உமாதேவியார் கொடுத்த கைவேலாகிய ஈட்டியைச் சிறப்புறக் கையில் கொண்ட இச் செங்குந்தர் பெருமைபோல, இந்த நாட்டில் வேறு பெருமை ஏதும் இல்லை.

(சலம் - கோபம்; சேவல் என்பது மோனை நோக்கி சாவல் என வழக்குச் சொல்லாய் வந்தது. மன்உள்குலம் - நிலை பெற்றகயிலாய பரம்பரை. இதனை மனுவின்குலம், சோழகுலம் என்பர்; உட்குலம் - சிவனைச் சார்ந்த குலம்.
பரிசு - பெருமை.) 16

அறுபடை வீட்டின் குந்தச்சிறப்பு
கலி விருத்தம்

19 பருப்பத ஏரகம், பரங்குன் றம்பழம்
பொருப்பதும், ஆவினன் குடி, செந் தில், பொது
விருப்பெனக் குன்றுதோ றாடல் ஆமெனும்
திருப்பதி தனிலமர் செய்வ குந்தமே.

(இ. ள்) முருகப்பெருமானுக்குரிய திருவேரகம் என்னும் மலையும், திருப்பரங்குன்றமும், பழமுதிர்சோலையும், திருஆவினன் குடியும், திருச்செந்தூரும், குன்றுதோறாடலும் என்று சொல்லப்படுகின்ற ஆறு தலங்களிலும் செங்குந்தங்கள் சிறப்புப் பெற்றிருக்கின்றன.

('பருப்பத ஏரகம்' என்பதை 'ஏரகப்பருப்பதம்' என மாற்றுக) 17

குந்த மகிமைச் சிறப்பு
அறுசீர் விருத்தம்

20 தேடுவார்; வலமாய் வந்து தெரிசிப்பார் சென்னி மீது
சூடுவார்; மலரே தூவித் தொழுதகை கூப்பி நிற்பார்;
பாடுவார்; காஎன்று எம்மைப் பரிவின்ஆ னந்தமாக
ஆடுவார்; குகன்கைச் செவ்வேற்(கு) அருந்துணைக் குந்தம் என்றே.



(இ.ள்) (உலகில் உள்ளோர்) 'முருகன் கையிலுள்ள சிவந்த வேலாயுதத்திற்குத் துணையாக நின்றது செங்குந்தம்' என்று கருதி அப்படை எங்குள்ளது என்று தேடுவார். தங்கள் கண்களால் கண்டு வலமாக வந்து வணங்குவார்கள். தலைமீது அணிந்து கொள்ளுவார்கள். மலர்களால் அருச்சனை புரிந்து இருகை கூப்பி எதிரே நிற்பார்கள்; 'எம்மைக் காக்கவேண்டும்'என்று வேண்டி அதன் புகழைப் பாடுவார்கள். பின்னும் ஆசையோடு ஆனந்தமாக ஆடுவார்கள். 18

காளியது கைத்தாளம் பறித்த சிறப்பு
கலிநிலைத் துறை

21 ஆலங் காட்டினில் அரனுடன் அன்றுவா தாடும்
கோலங் காட்டிய காளிதன் கொற்றம் போய்வெள்கப்
பாலங் காட்டிய பன்மணித் தாளமே பறித்துச்
சீலங் காட்டிய குந்தர்நற் பெருமையார் தெரிப்பார்.

[இ.ள்] திருவாலங்காடு என்னும் சிவத்தலத்தில் பரமசிவனோடு அக்காலத்தே வாதாடுகின்ற கோலத்தைக் காட்டியகாளியம்மை தனது வெற்றியிழந்து நாண், அக்காளியின் கையில் இருந்த ஒளிவீசும் இரத்தினங்கள் இழைத்த தாளத்தைப் பறித்துத் தமது மகிமையை உலகம் அறியச்செய்த செங்குந்தர் பெருமையை யாரால் சொல்ல இயலும்?

பாலங்காட்டிய - ஒளிவீசிய, பால் - பக்கம்; காளி கைத் தாளம் பறித்த வரலாறுசெவிவழிச் செய்தியாகத் தெரிகின்றது. காளியுடன் நடனமாடியமை பல (தல) புராணங்களாலும், "அதலசேடனாராட" என்று தொடங்கும் திருப்புகழ்ப்பாடல் போன்றவற்றாலும் விளங்குவதாகும். 19

பகைவரைச் சுவர்க்கம் புகுத்தும் சிறப்பு
கலிவிருத்தம்

22 செங்களம் பொருதிய திருந்த லார்உர
அங்கமே மண்மிசை ஆக்கி ஆவியைச்
செங்கதிர் வழியிடைச் செலுத்தித் தேவர்கள்
தங்களை வான்புகத் தரும்செங் குந்தமே.

[இ.ள்]போர்க்களத்தில் வந்துதம்மோடு எதிர்த்து யுத்தம்செய்த அசுரர்களது வலிய உடலை மண்மீது விழச்செய்து, அவர் உயிரைச் சூரிய மண்டலத்தின் வழியே சுவர்க்கம் புகச்செய்து, தேவர்களையெல்லாம் வானுலகத்தில் என்றும் நிலைபெற்றிருக்கச் செய்த பெருமையுடையது செங்குந்தம்.

பொருதிய என்பது இலக்கிய வழக்கில் இல்லை -'பொருத' என்பதே வழக்கு. திருந்தலார் - பகைவர்; சுவர்க்கம் போகும் உயிர் சூரிய மண்டலம் வழியாகவும், நரகம் போகும் உயிர் பிதிர்லோகம் வழியாகவும் செல்லும் என்பது கொள்கை. 'செங்குந்தம் தரும்' என மாற்றுக. 20

தேவர் தம் மகுடம் பெற்ற சிறப்பு
அறுசீர் விருத்தம்

**23 பரகதி வேள்வி பண்ணும் இருடிதன் பான்மை பாரா**
**வரகதி தந்தை ஏவும் அமரரை மடிய நூறி**
**இரதமோ (டு) இவுளி வேழ மியாகதா னத்துக் கீந்து**
**சிரமணி மகுடம் பெற்ற செங்குந்தர் போலும் உண்டோ?**

(இ.ள்) முருகக் கடவுளால் முத்தி பெறும் பொருட்டு ஒரு முனிவர் யாகம் செய்தார். அவரது வைராக்கியத்தைக் கண்ட பிரமதேவன் தேவர்களை அவரிடம் அனுப்பித் தன் மேலான பிரமபதவியைத் தருவதாகக் கூறினான். முனிவர், 'நாம் விரும்பியது அதுவன்று' என மறுத்தார். அதனால் தேவர்கள் முனிவரை எதிர்த்துப் போரிட்டனர். அத் தேவர்களைப் போர்க்களத்தில் அழித்து அவர்களுடைய தேர் குதிரை யானைகளை யாகதானமாகக் கொடுத்து, அத்தேவர்கள் அணிந்திருந்த இரத்தினக் கிரீடங்களைத் தாம் கைக்கொண்டனர் செங்குந்தர். இவர்களைப் போலச் சிறப்புடையார் இங்கு யாரேனும் உண்டோ?

(வரகதி - மேலான கதி; தந்தை - பிரமதேவன். இவனை 'மண் பொதுத் தந்தை' என நிகண்டு கூறுகிறது. நூறி - அழித்து; இவுளி - குதிரை; யாகதானம் - யாகத்தின் முடிவில் கொடுக்கப்படும் தானம்)

இதில் கூறப்பட்ட கதைக்குறிப்பு ;



மூதண்ட முனிவர் என்பவர் தாம் முத்தியடையக் கருதி ஒரு யாகத்தைச் செய்தார். அவரது வைராக்கியத் தன்மையைக் கண்டு பிரமன் முதலிய தேவர்கள் அந்த யாகம் நடைபெறாமல் இருக்கப் பல சூழ்ச்சிகள் செய்தனர். அவை பலிக்காமல் போகவே, பிரமன் தேவர்களுடன் சேர்ந்து மூதண்டமுனிவர் மீது போர் தொடுத்தான். அது கண்ட முருகப்பெருமான் நவவீரரை ஏவி, போர்க்களத்தில் முனிவருக்கு வெற்றியை உண்டாக்கினார். வீரவாகுதேவர் போர்க்களத்தில் தோல்வியடைந்த தேவர்களின் பொருள்களை, முனிவரின் யாகத்திற்குத் தானமாகக் கொடுத்து, தேவர்கள் அணிந்திருந்த இரத்தினக் கிரீடங்களைத் தமக்குச் சொந்தமாக்கிக் கொண்டார். பின்பு மூதண்ட முனிவர் யாகத்தை முடித்து விரும்பிய பயனைப் பெற்றார். 21

சம்பாதிக்கு அமுது அளிக்கும் சிறப்பு
வேறு

**24 அம்பாழி மூழ்கிஒரு கற்பமெலாம்**
**கிடக்கினுமென்? அழலின் நின்று**
**வெம்பாமே வெளிக்கால்உண்(டு) உட்காலை**
**வெளியில்விடா(து) இருந்தா லென்னே?**
**வம்பாரும் இதழியணி வேணியனார்**
**வேதமலை வலம்வந்(து) ஈண்டும்**
**சம்பாதிக்(கு) அமுதளிக்கும் சயக்குந்தம்**
**போல்வினவத் தாரா அன்றே!**

(இ.ள்) ஒருயுகம் முழுதும் கடலில் மூழ்கித் தவம் செய்து கிடப்பினும் பயன் ஏதும் இல்லை பஞ்சாக்கினி மத்தியில் நின்று உடல் நிலைத்தற் பொருட்டு வெளிக்காற்றை ஆகாரமாகக் கொண்டு, உள்ளிருந்து இடை பிங்கலை வழியாகப் பன்னிரண்டங்குலம் வெளிச் செல்லா நின்ற காற்றைக் கும்பித்துச் (மூச்சடக்கி) சுழிமுனையில் செலுத்தி யோகம்செய்து ஒரு கற்பகாலம் இருந்தாலும் பயன் இல்லை. வாசனை பொருந்திய கொன்றை மாலையை அணிந்த சடைமுடியையுடைய வேதகிரி இறைவர் வாழும் திருக்கழுக்குன்றத்தை வலம் வந்து நெருங்கிய சம்பு, ஆதி என்னும் கழுகுகளுக்குத் தினம் உணவிட்டு நற்கதி தரும் வெற்றி பொருந்திய நவவீரர்களது செங்குந்தம் போலக் கேட்டவுடன் பயனைக் கொடுக்க மாட்டாதன மற்றைத் தவங்கள்.

(அம்பு - தண்ணீர். கற்பம் - பிரமனது ஆயுட்காலம்; வெம்பாமே - வருந்தாமல்; கால் - காற்று; வெளிக்கால், உட்கால் என்பன மூச்சில் வெளிப்பட்டு உள்ளே செல்லும் காற்றுக்கள். வம்பு - வாசனை. சம்பாதி என்பது 'சம்பு, ஆதி' என்று இவ்வாறு பழைய உரையில் கொள்ளப்பட்டுள்ளது. கழுகுகளில் சம்பாதி பெரியவன் எனவும், சடாயு சிறியவன் எனவும் புராணங்களில் கூறப்படுகின்றன.) 22

சைவ சமய பரிபாலனச் சிறப்பு

வேறு

**25 உருக்கொடு பணியா தாரை உளத்திலைந் தெழுத்தை உன்னிப்**
**பெருக்கொடு தவள நீற்றைப் பேணியே அணியாதாரைத்**
**தருக்கொடு நின்று கண்ணீர் ததும்பமுன் ஆடா தாரைத்**
**திருக்கோயில் வலம்வா ரரரைச் சினத்தொடு பொரும்செங்**
**குந்தம்.**

(இ.ள்) சிவபெருமானை உள்ளத்தே உருக்கத்தோடு எண்ணி வணங்காதவரையும், ஐந்தெழுத்தினைத் தமது உள்ளத்தில் தியானித்து வெள்ளிய திருநீற்றை மிக்க விருப்பத்தோடு தம் திருமேனியில் தரித்துக் கொள்ளாதவரையும், மகிழ்ச்சியோடு திருமுன்பில் நின்று ஆனந்தக் கண்ணீர் ததும்பக் கூத்தாடாத வரையும் சிவாலயங்களை வலம் செய்யாதவரையும் கோபத்துடன் சங்காரம் செய்துவிடும் இயல்புடையது செங்குந்தப் பெருமக்களது செங்குந்தம்.

உருக்கு — உருக்கம்; முதனிலைத் தொழிற்பெயர். 23

சிவலோக வாழ்வளிக்கும் சிறப்பு

**26 கூவிளை இதழி தும்பை கொண்டருச் சித்த பேர்க்கும்**
**மூவர்தம் பாடல் ஓதி முன்னின்று பணிந்த பேர்க்கும்**
**ஆவலோ டைந்தெ ழுத்தை அகத்துளே நினைந் தபேர்க்கும்**
**தேவர்நா டாள வைக்கும் திருக்கைவேல் துணைச்செங்குந்தம்**

(இ.ள்) முருகக்கடவுளின் அழகிய திருக்கையில் நிலைபெற்ற வேலாயுதத்திற்குத் துணையாக நின்ற செங்குந்தம், சிவபெருமானை வில்வம், கொன்றை, தும்பை கொண்டு அருச்சனை செய்த அடியார்களையும், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் மொழிந்த திருமுறைப் பாடல்களைப் பாடித் தோத்திரம் செய்து திருமுன் நின்று வணங்கிய அடியார்களையும், ஆசையோடு ஐந்தெழுத்தை உள்ளத்தில் தியானிக்கின்ற அடியார்களையும் தேவர்கள் நாட்டை ஆளச் செய்யும்.



[கூவிளை — வில்வம்; இதழி — கொன்றை] 24

குந்தப்படைக்கு ஒப்பின்மைச் சிறப்பு

**27 ஆலமார் மிடற்றார் ஆடும் ஆடலே ஆடல்; அம்மை**
**ஏலவார் குழலாள் அங்கைத் தாளமே தாளம்; ஏந்தும்**
**சூலமா குவதன் னான்கைச் சூலமே சூலம்; மற்றில்;**
**கோல[ம்] வாழ் வீரர் கையிற் குந்தமே குந்தம் ஆகும்.**

(இ. ள்) விடம்பொருந்திய கண்டத்தை உடைய சிவபெருமான் ஊழிக்காலத்தே செய்யும்நடனமே சிறந்த நடனம். அந்தஊழிக் காலத்தில் மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கூந்தலை உடைய தாயாகிய ஞானசக்தி அந் நடனத்துக்கேற்பத் தன் கையால் கொட்டும் தாளமே சிறந்த தாளமாகும். அச் சிவபெருமான் கையில் கொண்டுள்ள சூலமே சிறந்த சூலமாகும். வேறு சூலம் இல்லை. அதுபோலவே அழகுமிக்குள்ள நவவீரர்கள் (செங்குந்தர்) தம் கையில்கொண்டுள்ள குந்தப்படையே சிறந்த குந்தமாகும். 25

குந்தப்படை செந்தமிழ் நூல் கொண்ட சிறப்பு

கலி விருத்தம்

**28 ஆதிநாள் உமையவள் அளித்த குந்தமே**
**சாதிநால் உவப்புடன் தலைக்கொள் குந்தமே**
**காதிமே வலரையும் கல்லும் குந்தமே**
**கோதி[ல்] நம் பாடலே கொள்ளும் குந்தமே.**

(இ.ள்) நம்மால் கூறப்படும் குற்றமற்ற பாடல்களை ஏற்றுக் கொள்ளும் குந்தம், முன்னாளில் உமாதேவியாரால்வீரவாகு தேவர் முதலிய நவவீரர்களுக்கு வழங்கப்பட்ட குந்தமும், அந்நாளில் கூறப்பட்ட நான்கு வருணத்தவரும் தங்கள் தலை மீது வைத்துப் போற்றிய குந்தமும்' தன்னை வணங்காதவரைக் கோபித்து உலகில் நிலைபெறாது அழிக்கும் குந்தமும் ஆகும்.

(காதி - அழித்து; மேவலர் - பகைவர்; கல்லும் - வேரோடு அழிக்கும்) 26

கொடையாதிச் சிறப்பு

**29 கருதலர் பொடிபடக் கருதும் குந்தமே;**
**விருதுடைச் சூர்முடி வெட்டும் குந்தமே;**
**பொருதனிப் புலிக்கொடி புனையும் குந்தமே;**
**தருதலத் தருவெனத் தரும்செங் குந்தமே.**

(இ.ள்) வீரத்திற்கு அடையாளமாகப் புலிக்கொடியை அலங்காரமாகத் தரித்துக் கொள்ளும் செங்குந்தமானது, பகைவர் முடியினைப் பொடிபடச் செய்யக் கருதும் குந்தமும், விருதுகள் பல பெற்ற சூரபதுமன் முதலிய அவுணர்களின் தலையை வெட்டிய குந்தமும், பிறருக்குக் கொடையில் கற்பகம் முதலிய தேவலோகத் தருக்கள் போலக் கொடுக்கும் குந்தமும் ஆகும்.

(தருதலத் தரு - தருகின்ற தேவலோகத்தில் உள்ள பஞ்ச தருக்கள்) 27

பெறுதற்கரிய துணைச் சிறப்பு

**30 கயிலைமால் வரையையும் காக்கும் குந்தமே**
**அயிலைநல் துணையென ஆக்கும் குந்தமே**
**வெயிலைமன் மணிகளின் மிளிரும் குந்தமே**
**மயிலைவா கனம்என வைக்கும் குந்தமே.**

(இ.ள்) செங்குந்தமானது, உயர்ந்த திருக்கயிலை மலை முதலிய சிவபெருமானின் இடங்களை எல்லாம் காக்கும் குந்தமும், முருகப்பெருமானின் வேலாயுதத்தைத் தனக்குத் துணையாகக் கொள்ளும்குந்தமும், ஒளிபொருந்திய நவரத்தினங்களைப்போல ஒளிரும் குந்தமும், சூரபதுமனாகிய மயிலை முருகக்கடவுளுக்கு வாகனமாக ஆக்கிவைக்கும் குந்தமும் ஆகும்.

(அயில் - வேல்; வெயில் - ஒளி, வெயிலை என்பதில் ஐ சாரியை; வெயில் மன்னிய மணி - ஒளிநிலைபெற்ற மணிகள்.) 28

முதலியர் பட்டச் சிறப்பு

**31 இந்திரன் அயன்மால் தேவர் யாவர்க்கும் முதன்மை யாக**
**வந்தபான் மையினால் சூல மழுப்புடை அத்த னார்க்கு**
**முந்திய நாமம் தானும் முதலியர் ஆகை யால்செங்**
**குந்தர்சந் ததிக்கும் அப்பேர் முதலியர் என்று கூறும்.**



(இ.ள்) இந்திரன், பிரமன், விஷ்ணு முதலிய தேவர்கள் அனைவருக்கும் முதல்வராக ஆதியில் எழுந்தருளி வந்தவர் சூலமும், மழுவும் கொண்ட சிவபெருமான். அதனால் அவருடைய பெயர் முதலியர் என்பது. அவர் வழியில் வந்தமையால், செங்குந்தர்களுக்கு முதலிய(ா)ர் என்ற பெயரைக் கொடுத்து அப்பெயராலேயே அழைக்கின்றது உலகம்.

(முதலியர் - தலைவர், இது சிவபெருமானுக்கு உரியது; சந்ததி - நவமணிகளில் உதித்தவர்களைக் குறிக்கும்) 29

முசுகுந்தன் நவவீரரைப் பெற்ற சிறப்பு

கலி விருத்தம்

**32 முந்தை நோன்பினான் முருக வேள்முசு**
**குந்த னுக்கொன்பான் குமர ரைத்தர**
**வந்த வீரர்இவ் அகிலம் வென்றிசை**
**தந்த குந்தம்இத் தகுசெங் குந்தமே.**

(இ.ள், முசுகுந்தச்சோழன் கந்தசஷ்டி விரதத்தினை முதன்மையாக அனுட்டித்து வர, முருகக்கடவுள் தம் இளவல்களாகிய நவவீரர்களை அவனுக்குப் படைத்துணைவர்களாகத் தந்தார். அவ்வீரர்கள் உலகில் உள்ள அரசர்களை எல்லாம் வெற்றி கொண்டு அம் முசுகுந்தச் சோழனுக்குச் 'சக்கரவர்த்தி' என்னும் பெரும் புகழைத் தேடித் தந்தார்கள். அத்தகைய பெரும்புகழ் தந்தோர் வழிவந்தவர்களே இச்செங்குந்தர்.

(இசை - புகழ்; சக்கரவர்த்தி என்ற பட்டம் முசுகுந்தனுக்கு நவவீரர்களால் வந்தது என்பர்) 30

தியாகரைப் பூமியிற் கொணர்ந்த சிறப்பு

அறுசீர் விருத்தம்

**33 விண்டு மார்பத் திடைஇருத்தி வேலைக் கௌரி பணிமாறப்**
**பண்டு பூசித் திருங்காலை ஆகண் டலன்போய்ப் பாற்கடலின்**
**வண்டு ழாய்மா யனைவணங்கி வானில்பழிச்சும்தியாகரைமேற்**
**கொண்டு போந்து பாரின்முசு குந்தற் குதவும் செங்குந்தம்.**

(இ.ள்) முன்காலத்தில் திருமால் தியாகராசரைத் தம் மார்பின் கண் எழுந்தருளச் செய்ந,பாற்கடலே கௌரிபோல் பணிவிடை செய்திருக்கப் பூசித்திருந்தார். இந்திரன் 'வாற்கலி' என்னும் அசுரனால் துன்பமடைந்து, துளசிமாலை அணிந்த மாயனை வணங்கி, (அவரால் அத்துன்பத்தை நீக்கிக்கொண்டதுடன்) அவரிடமிருந்த தியாகரையும் பெற்றுச் சுவர்க்கத்தில் கொண்டு போய்ப் பூசித்துவந்தான். அப்பொழுது இந்திரனை எதிர்த்த வலன் என்னும் அசுரனை அழிக்க முசுகுந்தன் நவவீரர்களை அனுப்பி உதவினான் வெற்றிபெற்ற இந்திரன் நவவீரர்களை நோக்கித் தன்னிடம் உள்ள பொருள்களுள் எதனைக் கேட்டாலும் பிரதி உபகாரமாகத் தருவதாகக் கூற, அவர்கள் தியாகராசரைக் கேட்டனர். அதைக்கொடுக்க மனமில்லாத இந்திரன் விசுவகர்மாவின் மூலம் ஆறு தியாகர்களைச் செய்து ஒவ்வொன்றாகக் கொடுக்க, 'அதுவன்று அதுவன்று' என மறுத்து மூல விக்கிரகத்தைக் கேட்டனர். மறுக்க முடியாத நிலையால் இந்திரன் தன் ஆன்மார்த்த மூர்த்தியாகிய தியாகரை வழங்கினான். நவவீரர்கள் அதனைக்கொண்டுவந்து முசுகுந்தனிடம் தர அவன் அவைகளைத் திருவாரூர் முதலிய தலங்களில் பிரதிட்டை செய்தான். அச்செயல செய்த பெருமை செங்குந்தத்திற்கே உரியது. (இவ்வரலாறு கந்தபுராணத்தில் சற்று வேறுபட உள்ளது)

(விண்டு - திருமால் (விஷ்ணு); வேலை - கடல்; கௌரி - கௌரநிறம் உடையவள்; பார்வதி; வேலைக்கௌரி உருவகம். ஆகண்டலன் - இந்திரன்; பழிச்சும் - துதிக்கின்ற; வானில் பழிச்சும் தியாகர் - தேவலோகத்தில் இந்திரன் பூசித்த தியாகர்). 31

இயமனுக்குத் திருமுகம் அளித்த சிறப்பு

கலிநிலைத்துறை

**34** **பிள்ளை ஆருயிர்க்[கு] உறுந்துணை யாத்தனிப் பேறெய்தும்**
**கிள்ளை யாரிவன் கொடுவரு கென்(று) உடலங்கீறி**
**கொள்ளை ஆருயிர் எரிநர குறஅடும் கூற்றுயிர் நனிசோர**
**உள்ளியாவரும் நடுங்கத்தன் திருமுக மேசெலுத்தொண்குந்தம்.**



(இ.ள்) உலகில் உள்ள அனைவரும் நினைத்து நடுங்கும்படி வீரம் செலுத்தி உயிர்களை எரிநரகில் சேர்த்துக் கொல்லும் இயமனுக்கு, அவன் உயிர் பதைக்கும்படி, 'முசுகுந்தச் சக்கரவர்த்தியின் மனைவியும், வீரவாகுதேவரின் மகளுமாகிய சித்திரவல்லி வளர்த்த, அவள் உயிர்த்துணையாக இருந்த ஒப்பற்ற தவப்பேற்றை உடைய கிளிப்பிள்ளையை, உமது தூதுவர் திருடிப் போனதாகக் கேள்விப்பட்டோம். அதை உடனே கொணர்க' என்று திருமுகம் அனுப்பியவர் செங்குந்தப் பெருமக்களாவர்.

(இப்பாட்டில் பின் இரண்டு அடிகள் சீர் வேறுபட்டுள்ளன.) 32

கேரள தேசத்தரசனை வென்ற சிறப்பு

அறுசீர் விருத்தம்

**35** **வடிவேல் எடுத்த மனுதுங்க வளவன் தேவி வெதுப்பாற**
**முடிவேள் வியின்செந் தீத்தருகான் முளைமாங் கனிக்காக்**
**குடநாட்டைச்**
**செடிவேர் அறுத்துச்சிறையிட்டுச்சென்றிவியப்பத்திறைபோலக்**
**கொடிவாள் முரசு களிறுபரி இரதம் கொடுக்கும் செங்குந்தம்.**

(இ.ள்) வடித்தெடுத்த வேலைக் கையில் கொண்ட மனுநீதி தவறாத பெருமை பொருந்திய முசுகுந்தச் சோழன் மனைவியாகிய சித்திரவல்லி அம்மையார், கேரள நாட்டரசன் செய்த யாகத்தில் வந்த சந்தான மாங்கனி கிடைக்காததால் கொண்ட கோபம் நீங்க [விருப்பம் நிறைவேற] வீரவாகுதேவரின் தம்பியர் குடநாட்டில் உள்ள அம் மாமரத்தை வேருடன் பிடுங்கிவந்து கொடுத்து, தங்கள் அரசனாகிய சோழன் வியப்படையும்படிச் சேரனையும், சிறையிலிட்டு, அவன் பின்பு தனது கொடி, வாள், பேரிகை, யானை, குதிரை, தேர் இவைகளைத் திறையாகக் கொண்டு வந்து தரும்படிச் செய்தது இச் செங்குந்தமே.

[வெதுப்பாற - கோபம் நீங்க; சென்னி - சோழன்; திறை -கப்பம்; கான் முளை மாங்கனி-சந்தான மாங்கனி.] 33

சுபன் யாழ்ப்பாண தேயம் வென்ற சிறப்பு

வேறு

**36 ஆழநீள் கடற்குள் ஆங்கோர் அம்பிமேல் சென்றேஅப்பால்**
**சூழ்திருச்செந்தூர்உற்ற சுபன்என்பான்துணையாய்க் கொண்டு**

**வாழிரா சாதி ராச மன்னவன் மருவ லான்தன்**
**ஈழநா டொருநாள் தன்னில்திறைகொண் [டு]ஈண்டுற்றகுந்தம்.**

[இ.ள்] திருச்செந்தூரில் வாழ்ந்த சுபன் என்னும் செங்குந்தத் தலைவன் துணையுடன் ஆழமும் நீளமும் உடைய கடலை நாவாய் மூலம் கடந்து, மேலான செல்வத்தோடு வாழ்ந்த இராசாதிராசனாகிய தங்கள் சோழ மன்னனுக்குப் பகைவனான யாழ்ப்பாணத்தேச மன்னனை ஒரே நாளில் வெற்றி கொண்டு, அங்குள்ள பொருள்களைக் கப்பமாகக் கைக் கொண்டு வந்தவர் செங்குந்தராவர்.

[அம்பி - நாவாய் [படகு]; மருவலான்-பகைவன். இதில் குறிக்கப்பட்ட 'இராசாதிராசன்' என்னும சோழன் யாவன் என்பது ஆராயப்பட வேண்டும் ) 34

கௌதன் உச்சயினி வென்ற சிறப்பு

**37 மச்சநா டுடைய கோமேல் வங்கநா டாளு மன்னன்**
**குற்சர அரசற் காகச் சமரவேல் கொண்டு கொற்றக்**
**கைச்சலி யாமல் கொல்லும் காலையில் கௌதன் என்பான்**
**உச்சினி தொடங்கிப் போர்செய்குந்தம்போல்உலகில்உண்டோ!**

(இ.ள்) வங்கநாட்டை ஆளுகின்ற அரசனானவன் குச்சர நாட்டு அரசனுக்காக மச்ச நாட்டு அரசன்மீது போர் தொடுத்துச் சென்று, வெற்றிதரும் தன் கை சலிப்படையாமல் அழிக்கின்ற நேரத்தில், 'கௌதன்' என்னும் சோழதேசத்து அரசனாகிய செங்குந்தத் தலைவன், அதனைக் கேள்வியுற்றுக் கோபம் கொண்டு வங்கநாட்டில் உச்சயினி முதலான நகரங்களையெல்லாம் அழித்து அடங்கச் செய்தான். ஆகவே இக்குந்தம் போலச் சிறப்புடையது உலகில் வேறு எதுவும் இல்லை. 35



படைமருதன் சிறைக்கையானை வென்ற சிறப்பு

**38 இடைமரு தூரில் சாபம் ஏந்திய சிறைக்கை யானைப்**
**புடைமரு தடியில் வீழப் பொருதியே புறம் கொடாது**
**விடைமழு உடையான் பாத மென்கம லத்தில் சேர்த்த**
**படைமரு தன்கைக் குந்தம் போல்இனிப் பாரில் உண்டோ?**

[இ.ள்] திருவிடைமருதூரில் அரசாட்சி செய்துகொண்டிருந்த 'படைமருதன்' என்னும் செங்குந்தத் தலைவன், கையில் வில்லும், அம்பும் ஏந்திப் போருக்கு வந்த 'சிறைக்கையான்' என்னும் பகைவனைப் புறங்காட்டி ஓடாமல் மருதமரத்தினடியில் விழும்படிப் போர்செய்து, இடபவாகனமும் மழுவாயுதமும் உடைய பரமசிவனது மென்மையான தாமரை மலர் போன்ற திருவடிகளில் சேர்த்தான். அந்தப் படை மருதனுக்குத் துணைநின்ற குந்தம்போலச் சிறந்தது உலகில் வேறு எதுவும் இல்லை. 36

[சாபம் - வில்; பொருதி - [பொருது] போரிட்டு]

வங்கதேசம் வென்ற சிறப்பு

கலி விருத்தம்

**39 கூளிபா றினம்இடம் கொண்டு சுற்றவே**
**காளிசா தகர்எலாம் களத்தில் ஆடவே**
**வாளிதொட் டெழுமொரு வங்கக் கோவைமுன்**
**தோள்இணை யால்பொரும் துங்கக் குந்தமே.**

[இ.ள்] கழுகுகளும், பருந்துகளும் இடமும் வலமுமாகச் சுற்றி வரவும், காளியும் அவளது பரிவாரங்களும், போர்க்களத்தில் நடனம் செய்யவும், அம்பு எய்து போரிட்ட வங்கநாட்டு அரசன் ஒருவனை முற்காலத்தில் செங்குந்தத் தலைவர்கள் தமது தோளாற்றலால் போரிட்டு வெற்றிகொள்ள உதவியது பெருமை பொருந்திய செங்குந்தமே ஆகும். [கூளி - கழுகு; பாறு - பருந்து; கூளி - 'பூதம்' எனவும் பொருள்படும்; சாதகர் - பரிவாரம்; வாளி - அம்பு; துங்கம் - பெருமை] 37

செங்குந்தர்க்கு எங்கும் எதிரின்மைச் சிறப்பு

அறுசீர் விருத்தம்

**40 வானைவென்[று] உவரி சூழ்ந்த மண்ணைவென் றவுண ரான**
**கானைவென்[று] அம்பு ராசிக் கடலைவென் றருங்க லிங்கன்**
**சேனைவென்[று] அலங்கல் மார்பம் செறியுமாமடங்கல்வையக்**
**கோனைவென்[று]அரியவாகைக்கொண்டெனத் திரியும்குந்தம்.**

*[இ.ள்] இச்செங்குந்தமானது, வானுலகப் பகைவர்களை வென்று, கடல் சூழ்ந்த உலகில் உள்ள பகைவரையும் வென்று அவுணர்களாகிய காட்டை வென்று, கடலை வென்று, வெல்லு தற்கரிய கலிங்க அரசனை அவனது நால்வகைப்படையுடன் வென்று, மார்பில் வெற்றி மாலை அணிந்த பெரிய சிங்கம் போன்ற 'வையைக்கோன்' என்ற அரசனைவென்று, கிடைத் தற்கரிய அவ்வெற்றி மாலையைக் கொண்டது என்று யாவரும் சொல்ல உலகெங்கிலும் சஞ்சரிக்கும்.*

*[உவரி - கடல்; அம்புராசி- கடல்; அலங்கல் - மாலை; மடங்கல்- சிங்கம்; கொண்டது என்பது கடைக்குறைந்து நின்றது. 38*

திறை வாங்கும் சிறப்பு

வேறு

**41 செங்கோல் நடத்தும் வளவனிட்ட**
**சிங்கா தனத்தில் இனிதிருந்து**
**நங்கோன் கவியே கவியென்று**
**நாட்டிக் கவிபுன் களைகளைந்து**
**வங்கோ[டு] ஈழம் கன்னாடம்,**
**மராட்டி ரங்குச் சரம், சீனம்,**
**கொங்கோ டெங்கும் தரத்திறையே**
**கொள்ளும் மின்னார் செங்குந்தம்.**

*[இ.ள்] [செங்குந்தர் கையில் தாங்கிய]மின்னல்போல் ஒளிவீசும் குந்தமானது மனுநீதி வழுவாது செங்கோல் நடத்திய சோழ மன்னனால் இடப்பட்ட சிங்காதனத்தில் இனிது வீற்றிருந்து கூத்தப்பெயருடைய எம்மால் சொல்லப்பட்ட தலைமை வாய்ந்த கவியே சிறந்த கவி என்று உலகில் நிலைபெற வைத்து, மற்றைப் புன்கவிகளாகிய களைகளை அறவே களைந்து, வங்கம், ஈழம், கன்னடம், மராட்டிரம், குச்சரம், சீனம், கொங்கம் முதலிய ஐம்பத்தாறு தேசங்களும் திறைகொடுக்கப் பெற்று அரசாட்சி செய்தது. 39*



*[கோன் கவி - தலைமை வாய்ந்த கவி]*

செங்குந்தர்க்கும் சோழர்க்கும் உள்ள புலிக்கொடிச் சிறப்பு

கலி விருத்தம்

**42 கலிக்குறும் படுவள வனுக்கும், காதுசூர்**
**வலிக்குறும் படுதனி வாகைக் குந்தர்க்கும்**
**பலிக்குநற் புகழெலாம் பாதி ஆதலால்**
**புலிக்கொடி மரபிரண் டினுக்கும் போந்ததால்.**

*[இ.ள்] இவ்வுலகில் தரித்திரம் என்னும் பொல்லாங்கினை அழிக்கின்ற சோழனுக்கும், போர் செய்கின்ற சூரபதுமனது வல்லமையை அழிக்கின்ற செங்குந்தர்க்கும் கிடைத்திருக்கின்ற நல்ல புகழ் எல்லாம் இருவருக்கும் சமமாக இருக்கின்ற காரணத் தால் புலிக்கொடியும் இவ்விரு மரபில் உள்ளவர்களுக்கும் கிடைத்தது.*

*[கலி - வறுமை; குறும்பு - பகை; காது - அழிக்கின்ற] 40*

செங்குந்தர் சோழனுக்கு உரிமையாம் சிறப்பு

**43 தென்னனைச் சேரனைச் சிறுமை சொல்லவும்,**
**மன்னனை வளவனை மகிழ்ந்து பாடவும்**
**பன்னருஞ் சாரதி படைத்த பான்மைபோல்**
**ஒன்னலர்க் குள்ளினத் [து] உற்ற குந்தமே.**

*[இ.ள்] பாண்டியனையும் சேரனையும் பழித்து அவர்களைச் சிறுமையாகச் சொல்லவும் சோழமன்னனாகிய தன்னை மகிழ்ச் சியோடு புகழ்ந்து பாடவும், சொல்லற்கரிய கீர்த்தியை உடைய 'ஒட்டக்கூத்தன்' என்னும் புலவனாகிய என்னைத் தன்னிடம்*

வைத்துக்கொண்ட தன்மைபோல, பகைவர்களை வெற்றி பெறுவதற்குத் தன் இனத்துள்ளே செங்குந்தர்களைத்தான் கொண்டான் சோழச்சக்கரவர்த்தி.

[ஒன்னலர்க்கு - பகைவர்களை வெல்லுதற்கு; சாரதி - சரஸ்வதியின் தொண்டன்; ஒட்டக்கூத்தர்] 41

வேலும் குந்தமும் வேறில்லை

அறுசீர் விருத்தம்

44 **சேல்வேறு புலிவே றாகும் சேதுவின் அளவாய்ச் சென்னி
கோல்வேறு இல்லாம லோச்சிக் கன்னியும் கொள்வன் என்றே
மால்வேறு சிவன்வே றென்ன வழுத்திடா வண்மை போல
வேல்வேறுகுந்தம்வேறென்(று)இருபொருள்விளம்பார்மேலோர்.**

(இ-ள்) மீன் கொடியும் புலிக்கொடியும் கொண்டு பாண்டியனும் சோழனும் ஆண்ட இமயமுதல் சேது வரையிலான நாட்டை, முசுகுந்தச் சக்கரவர்த்தி தான் தனியே ஆண்டு கன்னியாகுமரியையும் கைக்கொண்டான் என்று அறிந்த பெரியோர், திருமால் வேறு, சிவன் வேறு எனப் பிரித்து வணங்காத தன்மைபோல, முருகக்கடவுள் கையில் தாங்கிய வேலாயுதம் வேறு, நவவீரர்கள் கையில் தாங்கிய குந்தம் வேறு என்று இரண்டாகக் கூறமாட்டார்கள். 42

குந்தப் பெருமை

45 **பூமாலை, கடப்பந் தாமம், பூண்மணித் தெரியல், செய்ய
பாமாலை தன்னைக் கைக்கொள் முதலியர் பங்க தாக்கி,
மாமாலை ஒல்லார் காலின் வழிவழிக் குடரின் மாலை
தேமாலை யாகச் சூடும் செங்குந்தம் போலும் உண்டோ.**

[இ-ள்] பூமாலை, கடப்பமாலை, அழகிய மணிமாலைகள், புலவர்கள் இயற்றும் குற்றமற்ற பாமாலைகள் இவைகளையெல்லாம் தன்னைக் கையில் கொண்ட முதலியர்கள் பக்கம் அடையச் செய்து, மயக்கத்தை உடைய பகைவர்களின் சந்ததிகளின் குடர்மாலைகளைத் தேன் பொருந்திய மலர் மாலையாகத் தான் அணிந்துகொள்ளும் செவ்விய குந்தம்போல உலகத்தில் வேறு உண்டோ?

[தெரியல் - மாலை; கால் - வழித்தோன்றல்; வழிவழி - தொடர் சந்ததி; மால்-மயக்கம்; மாமாலை-ஐ சாரியை] 43



குந்தக் குதுகலச் சிறப்பு

46 **பற்றினும் பற்றும்; சென்னி பறிக்கினும் பறிக்கும்; பாசம்
எற்றினும் எற்றும் கூற்றை; ஈரினும் ஈரும்; வாரிச்
சுற்றினும் சுற்றும்; அண்டம் துகளெழச் செயினும் செய்யும்;
மற்றினுங் குந்தம் போற்றா(து) இருப்பது உளரோ மண்மேல்?**

[இ-ள்] [நவவீரர்கள் படையாகிய] குந்தமானது யமதருமனை அவன் வலியை ஒடுக்கிப் பிடிக்க வேண்டும் என்றாலும் பிடிக்கும்; அவன் தலையைப் பறிக்க வேண்டுமானாலும் பறிக்கும். அவன் பாசத்தைப் பிடுங்கி எறிய வேண்டுமென்றாலும் எறியும். அவனைப் பிளக்க வேண்டுமானாலும் பிளக்கும்; அவனை எடுத்துக் கறகறவென்று சுழற்ற வேண்டுமானாலும் சுழற்றும். இதுவுமன்றி அண்டங்களைத் துகள் எழச்செய்ய வேண்டுமானாலும் செய்யும். என்றால் இவ்வுலகத்தில் இதனைப் போற்றாதிருப்பவரும் உண்டோ? 44

குந்தத்தின் வீரச் சிறப்பு

47 **'போற்றியோ! போற்றி!' என்று புதுமலர் தூவிச் சீற்றம்
ஆற்றியே, வந்தி யாமல் அடையலர் வாழ்ந்தி ருந்தால்
காற்றென ஊழித் தீயில் கடலெனக் கொடிய கோபக்
கூற்றெனத் திரிந்து சோரிக் குளித்துடன் களிக்கும் குந்தம்.**

[இ-ள்] பகைவர்கள் தமது கோபத்தை மாற்றி, புதிய மலர்களால் அர்ச்சித்துப் 'போற்றியோ! போற்றி!' என்று வணங்காது வாழ்ந்து இருந்தால், குந்தப்படை ஊழிக்காலத்துக் காற்றைப் போலவும், தீயைப் போலவும், கடலைப் போலவும், இயமனைப் போலவும் கோபம் கொண்டு 'அவர்கள் எங்குள்ளனர்' என்று தேடி அப்பகைவர்களைக் குத்தி அவருடலில் இருந்து பெருகும் இரத்த வெள்ளத்தில் மூழ்கிக் களிப்படையும். 45

பழுவூர் வீரன் சிறப்பு

வேறு

48 **சூட்டும் வீர வாகுவெனச் சொல்லும் பழுவூர் வீரன்அமர்
மூட்டும் காலம் ஊழிவெள்ளம் மூடும் காலம் ஆகாதோ
வேட்டங் காலில் வீழாதார் மேலும் உளரோ வீதிஉலா
ஈட்டும் காலம் குந்தம்கண் டெழுமே கழுகும் பருந்துகளும்.**

[இ.ள்] 'முடிசூட்டப்படுகின்ற வீரவாகுத் தேவருக்கு ஒப்பான வன்' என்று சொல்லப்படும், பழுவூரில் வாழும் வீரன் என்னும் செங்குந்தத் தலைவன், யுத்தமாகிய நெருப்பை மூட்டும்போது, அது உலகம் ஊழிக்கால வெள்ளத்தினால் மூடப்படுகின்ற சர்வ சங்கார காலம் போல ஆகும். அவனது அழகிய காலில் விரும்பி வந்து வீழ்ந்து வணங்காதவர்கள் பின்னும் உயிரோடு வாழ மாட்டார்கள். அவன் வீதியில் பவனி வரும்பொழுது, அவன் கையில் உள்ள குந்தத்தைக் கண்டு கழுகுகளும், பருந்துகளும் கூட்டமாக ஆகாயத்தில் எழுந்து வட்டமிடும். 46

பழுவை நாராயணன் சிறப்பு

49 காராம்உருவம்ஒழிந்துபொன்னின்கவினார்பழுவைவளம்பதியில்
நாரா யணனே விக்கிரம நாரா யணனாம் என்னாதார்
வாரா வழிவந் தோம்என்றே வாயில் புல்லைக் கவ்விஅந்தச்
சேரார் சேரா நின்றுதொழச் செய்யும் அன்னான் செங்குந்தம்.

(இ.ள்) 'சூல்கொண்ட மேகம் போன்ற நிறமின்றிப் பொன் போன்ற அழகிய உருவம் கொண்டு வளம் பொருந்திய பழுவூர் என்னும் நகரில் வாழ்ந்த நாராயணன் என்னும் செங்குந்தத் தலைவனே, திரிவிக்கிரம அவதாரம் செய்த அந்த நாராயண னாகும்' என்று எண்ணாத பகைவர்கள், 'போருக்கு வரத் தகாத இடத்தில் வந்தோம்' என்று வாயில் புல்லைக் கவ்விக் கொண்டு எதிரில் வந்து தளர்ந்து தொழும்படி அவன் கையில் தாங்கிய குந்தமானது செய்யும். 47

(சேரார் - பகைவர் 'திருமால் மேகநிறம் உடையவன்; பழுவை நாராயணன் பொன்னிறம் உடையவன்; இவையே வேற்றுமை' என்பதாம்.)

கச்சித் தனியன் சிறப்பு

50 இனிமா நிலத்தில் கண்டதில்லை கேட்டே இருத்தல்
அன்றிப்பெரும்
பனிமால் வரையும் மைந்நாகம் முன்பின் படைதான்எடுத்தாலும்
முனிமா றுண்டோ நடுநின்றுமுடிப்பான் கச்சித் தனியன்வட்டத்
தனிமா நிழற்கீழ்ச் செங்குந்தம் சரணா கதிக்கு வைகுந்தம்.

(இ.ள்) எந்த நியாயத்தையும் நடுவுநிலையாக நின்று முடிவு செய்யும் பொருட்டுக் காஞ்சிபுரத்தில் ஒப்பற்ற மாமரத்தின் வட்டமான நிழலின்கண் இருந்து நீதி செலுத்தும் தெய்வ



சிம்மாசன கர்த்தராகிய செங்குந்தத் தலைவர் ஆயிரத்துத் தொள்ளாயிரவரில் ஒருவனாகிய 'கச்சித் தனியன்' என்பவன் கையில் உள்ள சிவந்த குந்தம், பகைவர் யாவரும் கண்டவுடன் சரணடையக் காரணமான கூரிய குந்தப்படையாய் இருப்பத னால், பெரிய பனிமலை எனப்படும் இமயமலையும், மைந்நாக மலையும் முன்பின்னாகப் படை எடுத்து வந்தாலும் அதற்கு எதிராகுமோ? இம்மாவீரனது பெரும்புகழைக் கேட்டிருத்தலே யன்றி இதுபோன்ற புகழை இவ்வுலகத்தில் வேறு யாரிடத்தும் கண்டதில்லை. 48

(வை - கூர்மை; வைகுந்தம் - கூர்மையான குந்தம்.)

ஒற்றியூரன் சிறப்பு

51 உடலே மண்மேல், உயிர் விண்மேல்
ஒல்லார் ஒடுங்க உதிரமொடு
குடரும் கொழுவும் கழுகோடும்
கொள்ளை கொள்ளப் பரிந்தூ ட்டும்
மடல்வெண் தாழை முகம்மலர
வாரி வாரித் திரைக்கரத்தால்
கடல்வெண் தரள மேஎறியும்
ஒற்றி யூரன் கைக்குந்தம்.

[இ.ள்] மடல்கொண்ட வெண்தாழை மலரின் முகம் மலரக் கடலானது, அலைகளாகிய கைகளினால் வெண் முத்துக்களை வாரி வாரி வீசுகின்ற வளம் பொருந்திய ஒற்றியூரனது கையில் உள்ள குந்தமானது, பகைவர்களது உடலை மண்மீதும் உயிரை விண்மீதும் விட்டு, அவர்தம் உதிரத்தையும், குடரையும், கொழுப்பையும் கழுகும் பருந்தும் காக்கையும் கொள்ளை கொண்டு உண்ண ஆசையோடு ஊட்டும்.

இத்திருவொற்றியூரன் ஆதிபுரியில் எழுந்தருளிய விநாயகருக்கு ஆலயம் எழுப்பி தம் குலப்பெயரால் அம் மூர்த்தியை நாளும் வழிபட்டு வந்தவன் என்று தெரிகிறது. [ஒல்லார் - பகைவர்; தரளம் - முத்து; 'கழுகோடும்' என்ற உம்மையால் பிற பறவைகள் கொள்ளப்பட்டன.] 49

களந்தையரசன் சிறப்பு

52 தளர்ந்த வர்க்குத் திருவுருவம்,
தன்னை அடையார்க் கொருசிங்கம்;
இளந்தை யவர்க்குச் சிலைவேள்; நல்
இசையால் பொற்பூ தரமேயாம்;
வளர்ந்த சாலி வரம்பினில்வால்
வளைகண் முத்தம் தரும்வளங்கூர்
களந்தை ஆதி நகரரசன்
கைக்குந் தம்போல் காணோமே.

(இ.ள்) நெற்பயிர் வளர்ந்த வயல்வரப்பில் வெண்சங்கினங்கள் முத்தை ஈனுகின்ற வளம்மிகுந்த களந்தை முதலிய நகரங்களுக்கு அரசனானவன், தளர்ந்து தன்னைவந்து அடைந்தவர்களுக்கு முகமலர்ச்சி தரும் அழகிய உருவம் உடையவன். தன்னை வந்து வணங்காத பகைவர்களுக்கு ஒப்பற்ற சிங்கம் போன்றவன். இளமைப் பருவமுடைய பெண்களுக்கு கரும்பு வில்லையுடைய மன்மதனைப் போன்றவன். நல்ல புகழுக்கு அழகிய பொன் மலையைப் போன்றவன். அவனுடைய கையில் உள்ள குந்தத்தின் புகழைப் போல வேறு எங்கும் காண முடியவில்லை.

[இளந்தையவர் - இளவயதுடைய பெண்கள்; வேள் - மன்மதன்; இசை - புகழ்; பூதரம் - மலை; சாலி - சம்பா நெல்; வளை - சங்கு] 50

புற்றிடங் கொண்டான் சிறப்பு

கலி விருத்தம்

53 **கற்றிடங் கொண்டவர் கவின்சொல் கொள்ளுமே;**
**உற்றிடங் கொண்டபேர்க் குலகை நல்குமே;**
**வெற்றிடங் கொண்டமே வலரை வீட்டுமே;**
**புற்றிடங் கொண்டவன் பொலிகைக் குந்தமே.**

[இ.ள்] புற்றிடங்கொண்டான் என்னும் செங்குந்தத்தலைவன் கையில் தாங்கிய பொலிவுபெற்ற செங்குந்தமானது, நன்கு கற்ற புலவர்களின் அழகிய பாடல்களைச் சூட்டிக்கொள்ளும். சரணடைந்தவர்களுக்கு உலகையே பரிசாகக் கொடுக்கும். மாறுபட்ட பகைவர்களை வென்று அழிக்கும். [இவன் திருவாரூரில் வாழ்ந்தவன். 'புற்றிடங் கொண்டவர்' அத்தலப் பெருமான்.] 51

கோளாந்தகன் சிறப்பு

அறுசீர் விருத்தம்

54 **மூளார் வடவை சிகரகிரி முடிகம் பிக்கும் மாருதம்செங்**
**தாளால் மடங்க ஒருகூற்றம் தனிமும் மதில்காய்ச் சிறுமூரல்;**
**வேளார் உயிரைப் போக்கஅனற் கண்ணும் விளங்கும்**
**உருத்திரனே**
**கோளாந் தகன்ஒண் தேரளான்கைக் குந்தம் வாகைக்குந்தமே.**



(இ.ள்) 'கோளாந்தகன்' என்னும் செங்குந்தத்தலைவன் சதா காலமும் மூண்டெரியும் வடவாமுகாக்கினியும், அட்டகுல மலைகளும் தலைகள் நடுங்கும்படி வீசுகின்ற சண்டமாருதமும் எமனை உதைத்த சிலந்த பாதமும், திரிபுரத்தை எரித்தபுன்முறுவலும், மன்மதனின் உயிர்போக்கிய அக்கினிவிழியும் கொண்ட உருத்திரனும் போன்றவன். அவன் கையிலுள்ள குந்தமே வெற்றி பொருந்திய குந்தமாகும்.

சிகரகிரி - மலையுச்சி; கம்பிக்குமாறு - நடுங்குமாறு; வேள் ஆர் உயிர் - மன்மதனுடைய உயிர். 52

புலியூர்ப் பள்ளிகொண்டான் சிறப்பு

கலிநிலைத்துறை

55 **புண்டரீகமே, குவளையே தளவமே, பூமாவே,**
**பிண்டி யேபெறும் சித்தசன் தன்குணம் பிழையாவென்**
**கண்ட வீரகண் டன்புலி யூர்த்தனிக் காத்தேசீர்**
**கொண்டபள்ளிகொண் டான்கர தலத்திடைக் கொளும்குந்தம்.**

[இ. ள்] பகைவர்களைப் புறமுதுகிடச் செய்த, வீரகண்டா மணியை உடைய, சிதம்பரம் என்னும் நகரைத் தான் ஒருவனே சிறப்புற ஆட்சிசெய்து காத்துப் பல சிறப்புக்களைக் கொண்ட பள்ளிகொண்டான் என்னும் செங்குந்தத் தலைவன் கையில் உள்ள செங்குந்தமானது மன்மதன் கையில் உள்ள தாமரை, குவளை, முல்லை, மாம்பூ, அசோகம் ஆகிய ஐந்து மலரம்புகளும், நினைப்பூட்டல், பசலை செய்தல், உணவை நீக்கல், கிடக்கச் செய்தல், கொல்லுதல் ஆகிய ஐந்து செயல்களைச் செய்தல்போல, போரை நினைப்பூட்டல், தோள்தினவுறுத்தல், துன்புறுத்துதல், மூர்ச்சையுறுவித்தல், கொல்லல் ஆகிய ஐந்து செயல்களையும் தவறாது செய்யும்.

(புண்டரீகம் - தாமரை; குவளை - நீலோற்பல மலர்; தவளம் - முல்லை; பூ மா - மாம்பூ; பிண்டி - அசோகு; சித்தசன் - மன்மதன்; மன்மதன் கையில் உள்ள ஐந்து மலரம்புகள் ஐந்து தொழில்களைச் செய்யும். ஆனால் பள்ளிகொண்டான் கையில் உள்ள ஒரு குந்தமே ஐந்து தொழில்களையும் செய்யும் என்று குந்தத்தின் பெருமை தோன்றக் கூறியதாயிற்று. 'பிழையாது' என்பது ஈறு குறைந்து நின்றது.)

'நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணவும் நீக்கும் அசோகு — வனத்திலுறு
முல்லைக்[கு] இடை காட்டும் மாதே முழுநீலம்
கொல்லுமதன் அம்பின் குணம்'

என்னும் பழம்பாடலால் மன்மதனின் மலரம்புகளும் அவற்றின் செயல்களும் தெரியவரும். 53

பிணவன சிறப்பு

அறுசீர் விருத்தம்

**56 குணமார் தருமத் தெவ்வேந்தர் குலக்கோளரியே,குலத்தருவே**
**தணவா வண்மைச் சகம்பேசச் சகமே தாங்கும் பூதரமே**
**பிணவா என்று பகரார்வாய் பிளந்து சோரிப் பெரும்பூதக்**
**கணம்வாய் நிரப்பும், குந்தம்போல் காணோம்! கேளோம்! கற்றோரே.**

[இ. ள்] (புலவர்களே,) 'திறமையாகப் போரிடுகின்ற குணம் பொருந்திய பகைவர்களாகிய இராச யானைகளுக்குச் சிங்கமே! பிறருக்குக் கொடுத்தலில் கற்பகம், அரிச்சந்தனம் முதலிய பஞ்ச தாருவுக்கு ஒப்பானவனே! எக்காலத்திலும் நீங்காத உன் கொடைத் தன்மையை உலகத்தார் புகழ்ந்து பேசுமாறு இவ்வுலகத்தைத் தாங்குகின்ற குணக்குன்றே! பிணவன் என்னும் அரசனே!' என்று சொல்லிப் போற்றாதவர் வாயைப் பிளந்து, அவற்றில் பெருகும் இரத்தத்தைப் பெரிய பூதகணங்களின் வாயில் நிரப்புகின்ற அந்தச் செங்குந்தத் தலைவனைப் போன்ற வீரனை நாம் கண்ணால் கண்டதுமில்லை; காதால் கேட்டதுமில்லை [அறிந்து கொள்ளுங்கள்].

[தெவ் - பகை; கோளரி - சிங்கம்; தணவா - நீங்காத; வண்மை - கொடை; பூதரம் - பூமியைத்தாங்குவது , மலை] 54

கண்டியூரன் சிறப்பு

சந்தக் கலிவிருத்தம்

**57 மிண்டிடாமல் மேவலீர்! விளம்பிடாமல் ஒருமின்;**
**தொண்டிடாமல் வாழ்வதெங்ஙன்! சூரபன்மன் பட்டிடக்**
**கண்டவீர வாகுதேவர் கால்வரும் குலத்துமன்**
**வண்டுலாவு கண்டியூரன் வயிரவாகு குந்தமே.**

(இ. ள்] பகைவர்களே, சூரபதுமன் முதலியோர் அழியப் போர் செய்த வீரவாகு தேவரின் சந்ததி வழியாக வந்த குலத்தில் சிறந்த அரசனாகிய, வண்டுகள் மொய்க்கும் கடப்பமாலை



அணிந்த 'கண்டியூரன்' என்னும் செங்குந்தத் தலைவன் கையிலுள்ள வச்சிராயுதத்தை ஒத்த அழகிய குந்தத்தோடு எதிர்க்காமலும், வீணான வம்பு வார்த்தைகள் பேசாமலும் உண்மையை ஆராய்ந்து அறியுங்கள். அவனுக்கு நீவிர் அடிமைத் தொழில் செய்யாமல் வாழ்வது எப்படி? முடியாது ஆகையால் அவனை வணங்கிப் பிழையுங்கள்.

[மேவலீர் - பகைவர்களே; ஒருமின் - ஆராயுங்கள்] 55

முதுகுன்றன், மணியன் சிறப்பு

அறுசீர் விருத்தம்

**58 முத்த முதுகுன் றக்குரிசில், முதிரும் மணவைப் பாராளன்**
**பாத்த னென்னும் மணியன்கைக் குந்தம் கொடுத்துப் பகரவே**
**பூத்த மார்பத் தார்பறித்துப் பூழி படவே வீழ்ந்திறைஞ்சிக்**
**கோத்துச் செங்கை மலர்கூப்பிக்குறுகார்சிறுகி வரக்கண்டான்.**

[இ. ள்] முதுகுன்றத்தில் வாழ்ந்த பெரிய மன்னனும், மணவை என்னும் நகரத்தில் வாழ்ந்த பெரிய அரசனுமாகிய இருவரும் பகைவர்களால் துன்பமடைந்து, முதுமையினால் வலிமையில்லாதவர்களாய், அர்ச்சுனனுக்குச் சமமான வன்மை உடையவன் எனப்பட்ட மணியன் என்னும் பிள்ளை கையில் தங்கள் கைக்குந்தத்தைக் கொடுத்துப் பட்டம் கட்டி, வெற்றி பெற்றுவரச் சொன்ன அளவில், பகைவர்கள் தங்கள் மார்பில் உள்ள வெற்றி மாலைகளைக் கழற்றி எறிந்துவிட்டு, புழுதி உடலில் படும்படி மண்ணில் வீழ்ந்து அவனை வணங்கித் தாமரை மலர் போன்ற தம் கைகளைக் குவித்துக் கொள்ள அவன் மிகுந்த வீரத்தைக் காட்டினான்.

[பூழி - மண்; குறுகார் - பகைவர்; சிறுகி - குறுகி; தேய்ந்து] 56

தஞ்சைவேம்பன் சிறப்பு

**59 பஞ்சம் வெம்பத் தரும்பனையை நாவால் மிகவே பாடாது**
**தஞ்சை வேம்ப னைப்புகழ்ந்தேம் அதுமுன் செய்த தவமேயாம்;**
**எஞ்ச எளிதோ ஊழிஉருத் திரன்கைக் கொளுமூ விலைவேலே**
**வஞ்ச மாயை அவதரித்த திவன்கைக் குந்த வரவாமால்.**

(இ. ள்) ஏழைகளின் வறுமை நீங்கப் பொருள் கொடுக்கும் பனை மாலை அணிந்த சேரனை எமது நாவால் அதிகமாகப் பாடாமல், தஞ்சை நகரில் வாழும் வேம்பன் என்னும் தலைவனைப் புகழ்ந்து பாடினோம். அது யாம் முன்னர்ச் செய்த தவத்தினாலேயாம் அத்தவத்தைக் குறைசொல்வது எளிதோ?

இவன் கையில் உள்ள வஞ்சமே உருவான மாயை அவதாரம் செய்து வந்த குந்தத்தின் வரவானது ஊழிக் காலத்து உருத் திரன் கையிலுள்ள முத்தலைச் சூலாயுதத்தின் வரவே ஆகும்.]

மங்கலியப் பிச்சையிட்ட சிறப்பு 57

வேறு

**60 வல்லான்தன் திருத்தேவி மங்கலியம்**
**பிழையாமல் மடிதான் ஏற்றிங் (கு)**
**எல்லோரும் மங்கலியப் பிச்சையிடும்**
**எனத்தாள்வீழ்ந் திரப்ப வேண்டிக்**
**கொல்லாமல் விடுதல்புக ழெனக்கருதி**
**யோகற்பில் கொண்ட வாய்மை**
**நல்லார்கள் இருந்தவையின் புகழ்கைக்கோ**
**காத்ததுகொல் நம்செங் குந்தம்.**

*[இ.ள்]* சோழனுடன் மாறுபட்டு, வீரன் நாராயணன் முதலிய செங்குந்தத் தலைவர்கள் பன்னிருவரால் தோல்வி யடைந்து, அவர்களிடம் தன் உயிரைக்கொடுக்க இருந்த வல் லான் என்னும் அரசனுடைய மனைவியாகிய அனங்கவல்லி என்பவள், அந்த நேரத்தில் முந்தானை ஏற்று நான் அமங்கலி யாகாமல் நீவிர் அனைவரும் மங்கலியப் பிச்சையிடவேண்டும் என்று அவர்கள் பாதத்தில் வீழ்ந்து வேண்ட, செங்குந்தத் தலைவர்கள் அவனுக்கு உயிர்கொடுத்துக் காத்தது, அவனைக் கொல்லாமல் விடுதல் புகழ் என எண்ணியோ, அல்லது கற்பின் உண்மையை மேற்கொண்டு ஒழுகிய மாதர்கள் இருந்த சபை யின்கண் தங்களைத் துதிப்பதற்கோ அறியோம். 58

உயிர்க் கொடைச் சிறப்பு

தரவுக் கொச்சகக் கலிப்பா

**61 எல்லாக்கா லத்தினுமொன் (று)ஏற்பவருக் கில்லையெனும்**
**சொல்லா னதுகற்றும் சொல்லறியார் ஏந்து குந்தம்**
**வல்லானைக் கொல்லாமல் மனைவிக்கு மங்கலியம்**
**உல்லாசத் துடனளிக்கும் உதவியதொன் றறிந்தேமால்.**

(இ.ள்) செங்குந்தத் தலைவர்கள் கொடை கொடுக்க இயன்ற காலத்தும், இல்லாக் காலத்தும் தம்மிடம் ஓர் பொருளை யாசிப்பவருக்குக் கொடுத்தலன்றி, 'இல்லை' என்று சொல்லத்



தெரியுமாயினும் அவ்வாறு சொல்லி அறியாத நாவினை உடையவர். இதனை வல்லான் என்னும் கொடிய துட்டன் பிடிபட்ட போது அவன் மனைவி அனங்கவல்லி இரந்து மங்கலியப் பிச்சை கேட்க, அவனைக் கொல்லாமல் மகிழ்ச்சி யோடு உயிர்ப்பிச்சை கொடுத்த செயலினால் அறிந்து கொள்ளலாம். 59

மெய்த்தலை கொடுத்த சிறப்பு

கலி விருத்தம்.

**62 முத்தமி ழிராசரா சேந்திரன் முன்னமே**
**சுத்தவீ ரத்திறம் துலங்கு தற்கொரு**
**பொய்த்தலை கொடுத்தலில் புகழ்பெ றாதென**
**மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே.**

(இ. ள்) குந்தப்படையை உடைய பழுவூர் வீரன், பழுவூர் நாராயணன் என்னும் செங்குந்தத்தலைவர்கள் முத்தமிழிலும் வல்ல இராசராசேந்திர சோழன் முன்பு, தூய்மையான தங்கள் வீரம் துலங்க வல்லானின் ஒரு பொய்யான தலையைக் கொடுப் பது சிறப்பன்று என்று கருதி, தங்கள் இருவருடைய மெய்யான தலைகளையே கொடுத்தனர்.

(இந்த இராசராசேந்திரனைப் 'பராந்தகச்சோழர்' எனப் பழைய உரை கூறுகின்றது. பொய்த்தலை கொடுத்தகதை 'வல்லான் காவியத்தில்' உள்ளது.) 60

சாவான்கல் சிறப்பு

**63 பைந்தமிழ்க் காவலர் பகரும் பாடலார்**
**கந்தவேள் தான்மகிழ் கைலைக் காவலார்**
**வந்தவீ ரப்படைத் தலைவர் வந்துழிச்**
**சிந்தவே கழுத்துடற் செகுத்த குந்தமே.**

*[இ. ள்]* செந்தமிழ்ப்புலவர்கள் செய்த பாடலில் பொருந்திய முருகக்கடவுள் மகிழ்ந்து எழுந்தருளி இருக்கும் திருக்கைலாய மலைக்குக் காவலராகிய நவ வீரர்கள் சந்ததியினராகிய வீரம் மிக்க செங்குந்தத் தலைவர்கள் சமயம் வந்தபோது தமது உயிரையும் ஒரு பொருளாக எண்ணாமல் கைக்குந்தத்தால் தம் உடலினின்றும் கழுத்துச் சிந்தும்படி அரிந்தவராவர்.

[முதல் அடிக்கு பைந்தமிழ்ப் புலவர்கள் சொல்லுகின்ற பாடலுக்குரியவர்களான செங்குந்தர் எனவும் பொருள் கூறலாம். தாமே தம் கழுத்தரிந்து உயிர்விடுபவர் நினைவாக நடப்படும் கல் சாவான்கல் — நடுகல் — எனப்படும். அதில் அவ்வீரனுடைய உருவம் பொறிக்கப்பட்டிருக்கும். இதுபோன்ற கற்கள் பலவிடங்களில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அக்கற்களில் அவ்வீரன் பெயர், அவனது வீரச்சிறப்பு முதலியனவும் எழுதப்பட்டிருக்கும்.] 61

புலிக்கொடி நிலையிட்ட சிறப்பு

64 தில்லைமூ தூர்நடம் செய்யும் ஆலயத்(து)
ஒல்லையில் பொறித்திடும் உழுவை முத்திரை
எல்லையில் நாவல்ஒன் பதின்மர்க் காக்கியொர்
வல்லையில் துணையொடு மருவும் குந்தமே.

[இ. ள்] நடராசப்பெருமான் திருநடனம் புரிகின்ற சிதம்பரம் நகரத்தில் முதற்கண் நவவீரர்களது கொடியில் தீட்டிய புலி முத்திரையானது அளவிலா விரிவுகொண்ட நாவலந்தீவின் ஒன்பது கண்டத்திலும் செல்லும்படிச் செய்வித்தது எதுவெனில் ஒப்பற்ற வல்லமையுடைய வேலாயுதத்தைத் துணையாகக் கொண்டிருக்கும் செங்குந்தமே.

[உழுவை - புலி; நாவல் - நாவலந்தீவு - பூஉலகம்] சிதம்பரம் கோயிலை நவவீரர் பரிபாலித்ததாகச் சொல்லப்படுகின்றது. 62

பரணிகொண்ட சிறப்பு
அறுசீர் விருத்தம்

65 எந்தையாம் அம்மை பாகத் திறைவனை வணங்கி யாமே
பைந்தமிழ்ப் பரணி செய்த பாடலோ டந்த மாக
அந்தமா மடவார் ஆட அரியணை இருந்த வீரர்
குந்தமே குந்தம் வேறு குந்தமும் உளதோ கூற.

[இ. ள்] உமையொரு பாகத்து இறைவனாம் எந்தையை வணங்கி, யானே பைந்தமிழால் கூறிய பரணி என்னும் பிரபந்தப்பாடலுடன் மற்றப் பாடல்களையும் அபிநய இலக்கணத்தோடு அழகிய மாதர்கள் நர்த்தனஞ்செய்ய, சிங்காதனத்தில் இருந்து கேட்டு மகிழ்ந்த செங்குந்தத் தலைவர்கள் கையிலுள்ள குந்தமே குந்தம். இதற்கு நிகரான வேறு குந்தம் உலகில் உள்ளதோ? 63



சிரச் சிங்காதனச் சிறப்பு
கலி விருத்தம்

66 வரச்சிங் காதன வளவர் தம்பிரான்
தரச்சிங் காதனம் தன்னில் ஏறியே
துரைச்சிங் காதனம் தொழுங்க விக்கிடும்
சிரச்சிங் காதனச் சீர்செங் குந்தமே.

[இ. ள்] பூர்வத்தில் முசுகுந்த மன்னன் பெருந்தவம் செய்து வரமாகப்பெற்ற சிங்காதனத்தை உடைய சோழ மன்னர்களுக்கெல்லாம் தலைவனாகிய குலோத்துங்க சோழன் தந்த சிங்காதனத்தில், சிங்காதனமுடைய அரசர்களெல்லாம் வணங்க வீற்றிருந்த கவியாகிய எனக்கு ஆயிரத்தெட்டுத் தலைகளாகிய சிரச்சிங்காதன மிட்ட சிறப்பினை உடையோர் செங்குந்தத் தலைவர்கள். 64

சிரச் சிங்காதனக் காரணச் சிறப்பு

67 வேட்டுமால் நாடரி தாய வேணியர்
சூட்டுதாள் வாரிசத் துணைகள் ஏத்தியே
ஆட்டுக சென்னியை அலர்த்தி யேஎனக்
காட்டுதற் கேஅரி கவின்கைக் குந்தமே.

[இ. ள்] திருமால் இறைவன் திருவடிகளைக் காணவிரும்பி, வராக அவதாரம் கொண்டு பூமியைப் பிளந்து சென்றும் காணமுடியாத, சடா மகுடத்தை உடைய அப்பரமசிவனது தாமரை மலர்போன்ற இரண்டு திருவடிகளை வணங்கி, உலகினரைப் பார்த்து 'நீங்கள் முகமலர்ந்து சிரக்கம்பம் செய்யுங்கள்' என்று தங்கள் வீரத்தைக் காட்டுதற்கே தலையரிந்து சிங்காதனமிட்டனர் இச்செங்குந்தர்.

(வேணி - சடாமுடி; வாரிசம் - தாமரை) 65

பிரமகத்தி ஒழித்த சிறப்பு
கலிநிலைத்துறை

68 **விண்டு வேதனும் நாடரி தாகிய விமலன்**
**பண்டு தாருகப் பிரமகத் திப்பழி போகக்**
**கொண்டு தாமெனக் கடுகியே குடிவழித் தொன்மை**
**கண்டு தாம்கழுத் தரிந்தது கவின்களின் குந்தம்.**

(இ ள்) திருமாலும் பிரமனும் தேடுதற்கரிய நின்மலனாகிய பரமசிவனுக்கு, முன்பு தாருகா வனத்தில் உண்டான பிரமகத் திப் பழியை அழகிய செங்குந்தத் தலைவர்கள்அறிந்து, அதை நீக்க வந்தவர் நாமே எனக்கருதி விரைந்து சென்று தங்கள் கழுத்தை அரிந்து கொண்டது மிகவும் அற்புதமானதாகும்.
(கவின்கவின் - அழகு விளங்குகின்ற) 66

குந்தப் பூசைச் சிறப்பு
கலிவிருத்தம்.

69 **தவந்தனிச் செய்வதென் தலைச்சிங் காதனம்**
**உவந்துபா வாடையிட் [டு] ஓடும் சோரிமேல்**
**நவந்தனில் பாடிய நம்க வித்திறம்**
**சிவந்திடச் செய்தது திருச்செங் குந்தமே.**

(இ ள்) செங்குந்தத் தலைவர்கள் உவப்போடு ஆயிரத்தெட்டுத் தலைகளை வெட்டிச் சிங்காதனம் செய்து இரத்தப்பாவாடையிட்டு அதனின்று ஓடும் இரத்த வெள்ளத்தின் மீதிருந்து புதுமையாகப் பாடிய நமது கவியினது மகத்துவம் எங்கும் விளங்கச் செய்தது செங்குந்தம். ஆகவே உலகீர், செங்குந் தத்தைப் பூசியாது பாசபந்தம் முதலியன துறந்து தனியாக இருந்து தவம் செய்யவேண்டுவதுஎன்ன? ('சிவந்திட' - என்றது 'இரத்தத்தால் சிவக்க' என்றும், 'எங்கும் ஒளிவீசும்' என்றும் இருபொருள் தந்து சிலேடையாயிற்று.) 67

குந்தத் திறச் சிறப்பு
அறுசீர் விருத்தம்

70 **வீணுக்கே றாத வாய்மை விளம்பிடா வெற்றி யாளர்;**
**ஆணுக்கே றாய்ப்பி றந்தோர்; அடுபுலிப் பதாகை மன்னர்**
**நாணுக்கே றாத சாபம் நாட்டியே இறுத்த மால்தன்**
**மாணுக்கே றாத மாற்றார் அடைந்திட மருவும் குந்தம்.**



(இ. ள்) இல்லாத வல்லமையைத் தம் வாயால் எடுத்துச் சொல்லாத வெற்றியை உடையவரும், ஆண்களுக்கெல்லாம் சிங்கம்போன்ற வலிமையோடு தோன்றிப் புலிக் கொடியைக் கொண்டவரும் ஆகிய செங்குந்த அரசர்கள் கையில் நாணேற்றி வளையாத வில்லை நிறுத்தி ஒடித்த சீராமபிரானது பெருமைக்கு மேற்பட்ட சிங்கம் போலும் வல்லமையுடைய பகைவர்கள் சரணாகதியாக அடையச்செய்யும்படிப் பொருந்தி யிருப்பது செங்குந்தமாகும்.
(ஏறு - சிங்கம்; பதாகை - வெற்றிக்கொடி; சாபம் - வில்; 'மன்னர்' என்பதில் ஏழாம் வேற்றுமை உருபு தொகுக்கப் பட்டது.) 68

உலகம் புகழ்ந்த சிறப்பு
கலி விருத்தம்

71 **வட்டமார் அவையுழை வந்த மேலவர்**
**இட்டபா வாடைகண் (டு) இசைபெ றாதுமண்**
**முட்டவந் துயிர்பெறீஇ மொய்த்து ளேம்எனக்**
**கட்டுள குந்தர்சீர் கழறி ஏத்தினார்.**

[இ ள்] வட்டமான இச்சபையின்கண் வந்த மேன்மக்கள், இச் செங்குந்தத் தலைவர் பிரபந்தம் கேட்க அம்பலக் கூத்த னாகிய நமக்குச் செய்வித்த சிரச்சிங்காதனத்தோடு இரத்தப் பாவாடையைக் கண்டு, நாம் இவ்வுலகம் முழுவதும் பலகுலங் களில் பிறந்துவந்தும் இத்தகைய புகழைக்கொள்ளாது உயிர் பெற்று நெருங்கி இருக்கின்றோம். இது ஏன்? என்று தம்மை இகழ்ந்து, கட்டுப்பாட்டினை உடைய செங்குந்தத் தலைவர் களது சிறப்புக்களை எடுத்துச் சொல்லித் துதித்தனர்.
[அவையுழை - சபையில்; இசை - புகழ்] 69

குந்தத் தலைவர் சிறப்பு
அறுசீர் விருத்தம்

72 **செந்தமிழ்க் காகப் போந்து சிவந்தபா வாடை யாக**
**நந்தமக் கிடுங்கால் எல்லாநகரமும் உளம்வி யந்த;**
**அந்தரத் தமரர் வாழ்த்தி அணிமலர் மாரி பெய்தார்;**
**இந்தச்செங் குந்தர் பெற்ற இசைஎவர் பெற்றார் அம்ம.**

[இ.ள்] குற்றம் நீங்கிச் சிறந்த ஈட்டியெழுபது என்னும் நூலைப் பெறும் பொருட்டு, அம்பலக்கூத்தனாகிய நமக்குச் சிரச்சிங்காதனமும், இரத்தப் பாவாடையும் இட்டதையறிந்த எல்லா நகரத்திலுள்ளாரும் உளம் வியந்து மகிழ்ந்தனர். வானுலகத் தேவர்கள் இவர்களை நீடூழி வாழ்க என வாழ்த்தி அழகிய மலர்மாரி பொழிந்தனர். ஆதலால் இத்தன்மையுடைய செங்குந்தர் பெற்ற புகழினைப்போல உலகத்தில் எக்குலத்தார் பெற்றனர். 70

குந்தப் பெருமை கூறற்பாலார் சிறப்பு

73 அம்பர்நாட் டமர்ந்தகுந்தம் அயனரி அரன்மூன் றென்னும்
உம்பர்தாம் அறிய வேண்டும்; உயர்ந்தமுத் தமிழி னாலே
கும்பசம் பவனே தேர்ந்து கூறவே வேண்டும்; அல்லால்
இம்பர்யாம் கூறவேண்டும், எவர்மற்றும் கூறு வாரே.

[இ. ள்] திருக்கயிலாயத்தில் எழுந்தருளியுள்ள நவவீரர்களின் கையிலுள்ள குந்தத்தின் பெருமையை அயன், அரி, அரன் என்னும் மும்மூர்த்திகள் அறியவேண்டும். அல்லது அகத்தியன் ஆராய்ந்து இயலிசை நாடகம் என்னும் முத்தமிழாற் கூறவேண்டும். இவர்கள் அல்லது இவ்வுலகத்தில் அம்பலக்கூத்தனாகிய யான் சொல்லவேண்டும் மற்று யாவர் கூறவல்லார்

[அம்பர் - அவ்விடம் - தேவலோகம்; கும்ப சம்பவன் - குடத்தில் தோன்றிய அறகத்திய முனிவர்] 71

ஈட்டியெழுபது முற்றியது.



தலங்களையும், திருவெண்காடு, சிதம்பரம், திருவையாறு, திருச்சாய்க்காடு, இடமகன்ற திருவிருப்பைமாகாளம், திருவம்பர்மாகாளம் முதலிய ஏழுமாகாளம், திருவிடைமருதூர், திருச்செங்காட்டங்குடி ஆகிய தலங்களையும் ஆதிமுதல் அறங் காவலர்களாக இருந்து நன்கு பரிபாலனம் [ஆட்சி] செய்து வருகின்ற செங்குந்தர் கூட்டம் என்றும் வாழ்வதாக. 3

வமிசாவளிச் சிறப்பு

6. **பாதநூ புரத்தில் தேவி சாயைகண் டமலன் கொண்ட**
**காதலால் கருப்ப மாகும் கதிர்நவ மணிமா தர்க்கண்**
**மேதகு வீரத் தோடும் மென்மீசை யோடும் வந்த**
**மாதவ வீர வாகுத் தலைவர்இத் தலைவர் மாதோ.**

[இ. ள்] உமாதேவியாரின் பாதச்சிலம்பில் இருந்து உதிர்ந்த நவமணிகளில் அவ்வம்மையாரின் திருவுருவத்தைக் கண்ணுற்றுச் சிவபெருமான் கொண்டருளிய இச்சையால் கருவுற்ற ஒளியுடைய ஒன்பது இரத்தினப் பெண்களிடத்தில், மேன்மையுள்ள வீரத்தன்மையுடனும், மென்மையான மீசையுடனும் உதித்த பெரிய தவத்தை உடைய வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களின் மரபினர் இச்செங்குந்தத் தலைவர்கள்.

(மாணிக்கம், முத்து, புட்பராகம், கோமேதகம், வைடூரியம், வைரம், மரகதம், பவளம், இந்திரநீலம் என்பன நவரத்தினங்கள். இந்த நவரத்தினப்பெயர் கொண்ட மாணிக்க வல்லி முதலியவர்களிடம் முறையே வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுரர், வீரபுரந்தரர், வீரதீரர் ஆகிய ஒன்பது வீரர்களும் தம் அன்னையரின் நிறத்துடன் தோன்றி விளங்கினர்; 'மாது, ஓ - அசைகள்.) 4

குந்தப்படைச் சிறப்பு

7. **பிறந்தஒன் பதின்மர் குந்தப் பெருமையாம் பேச மாட்டோம்;**
**பறந்தன கழுகும், பாறும் பயிரவி காளி அஞ்ச**
**மறந்தகும் அவுணர் ஆட்டம் அடங்கின மகிழ்ச்சி யால்வாய்**
**திறந்தன அலகை ஈட்டம் செய்யவாய்ச் சிறுவ ரோடே.**

(இ.ள்)இவ்வாறு உதித்த வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களுடைய திருக்கரத்தில் இருந்த (உமையவள் அளித்த) குந்தம் என்னும ஈட்டிப்படையின் பெருமையை எம்மால் முழுவதும்



சொல்ல இயலாது. அவ்வீரர்கள் செய்த போரைக்கண்டு கழுகுகளும், பருந்துகளும் ஆகாயத்தில் வட்டமிட்டுப் பறந்தன. துர்க்கையும் காளியும் கண்டு அஞ்சும்படி அதர்மத்தில் மிகுந்திருந்த அவுணர்களின் பெருங்கூத்தாட்டம் அழிந்தது. (அந்த அசுரர்களுடைய பிணக்குவியல்களைக் கண்டு) பேய்க்கூட்டங்கள் தங்கள் சிவந்த வாயைஉடைய சிறிய குழந்தைகளுடன் மகிழ்ந்து வாய்திறந்து நின்றன. 5

தகரை வாகனமாக்கிய சிறப்பு

கலி விருத்தம்

8. **ஓதிய வேள்வியின் உவப்ப நாரதன்**
**போதவே தகர்தனைப் பொங்கு தீத்தர**
**வேதனைப் படுப்பதை விரைந்து கட்டியே**
**செய்தனக் (கு) உதவின திருச்செங் குந்தமே.**

(இ. ள்) நாரதமுனிவர் தாம்விரும்பிய பயனைப் பெற்று இன்புறவேண்டும் என்பதற்காக விதிப்படி செய்த யாகத்தீயில் இருந்து ஆட்டுக்கிடாய் ஒன்று தோன்றியது. அது சகல உலகங்களையும் துன்புறுத்துவதைக் கண்டு, (நாரதரும் மற்றைய தேவர்களும் வெள்ளியங்கிரியில் விளையாடும் முருகப்பெருமானிடம் முறையிட்டனர். பெருமான் கட்டளையினால்) அழகிய செங்குந்தத்தை ஏந்திய வீரவாகுத் தேவர் விரைந்து சென்று அவ்வாட்டுக்கிடாயைக் கட்டிக்கொணர்ந்து முருகப் பெருமானுக்கு வாகனமாக உதவினர். 6

பிரமனைச் சிறையிட்ட சிறப்பு

கலிநிலைத்துறை.

9. **பொதிய மால்வரைக் குறுமுனி தேறவும்பொருள் சொன்ன**
**மதியை ஆறென உடையவோர் மூவிரு வதனத்தான்**
**கதியை ஆற்றியும் குணத்தொடு பழகியும் காணாத**
**விதியை மேவலர் நடுங்கிடத் தளையிடும் மிளிர்குந்தம்.**

(இ.ள்) பெரிய பொதிய மலையில் உள்ள அகத்திய முனிவர் மெய்ஞ்ஞானத்தைத் தெளிந்து கொள்ளும்படி உண்மைப் பொருளை உபதேசம் செய்த, ஆறு முழுநிலவு போன்ற ஆறு முகங்களை உடைய முருகக் கடவுள், குந்தப்படை உடைய வீரவாகு தேவர் முதலிய வீரர்களைக் கொண்டு

கொடையாதிச் சிறப்பு

**29 கருதலர் பொடிபடக் கருதும் குந்தமே;**
**விருதுடைச் சூர்முடி வெட்டும் குந்தமே;**
**பொருதனிப் புலிக்கொடி புனையும் குந்தமே;**
**தருதலத் தருவெனத் தரும்செங் குந்தமே.**

(இ.ள்) வீரத்திற்கு அடையாளமாகப் புலிக்கொடியை அலங்காரமாகத் தரித்துக் கொள்ளும் செங்குந்தமானது, பகைவர் முடியினைப் பொடிபடச் செய்யக் கருதும் குந்தமும், விருதுகள் பல பெற்ற சூரபதுமன் முதலிய அவுணர்களின் தலையை வெட்டிய குந்தமும், பிறருக்குக் கொடையில் கற்பகம் முதலிய தேவலோகத் தருக்கள் போலக் கொடுக்கும் குந்தமும் ஆகும்.

(தருதலத் தரு - தருகின்ற தேவலோகத்தில் உள்ள பஞ்ச தருக்கள்) 27

பெறுதற்கரிய துணைச் சிறப்பு

**30 கயிலைமால் வரையையும் காக்கும் குந்தமே**
**அயிலைநல் துணையென ஆக்கும் குந்தமே**
**வெயிலைமன் மணிகளின் மிளிரும் குந்தமே**
**மயிலைவா கனம்என வைக்கும் குந்தமே.**

(இ.ள்) செங்குந்தமானது, உயர்ந்த திருக்கயிலை மலை முதலிய சிவபெருமானின் இடங்களை எல்லாம் காக்கும் குந்தமும், முருகப்பெருமானின் வேலாயுதத்தைத் தனக்குத் துணையாகக் கொள்ளும்குந்தமும், ஒளிபொருந்திய நவரத்தினங்களைப்போல ஒளிரும் குந்தமும், சூரபதுமனாகிய மயிலை முருகக்கடவுளுக்கு வாகனமாக ஆக்கிவைக்கும் குந்தமும் ஆகும்.

(அயில் - வேல்; வெயில் - ஒளி, வெயிலை என்பதில் ஐ சாரியை; வெயில் மன்னிய மணி - ஒளிநிலைபெற்ற மணிகள்.) 28

முதலியர்பட்டச் சிறப்பு

**31 இந்திரன் அயன்மால் தேவர் யாவர்க்கும் முதன்மை யாக**
**வந்தபான் மையினால் சூல மழுப்புடை அத்த னார்க்கு**
**முந்திய நாமம் தானும் முதலியர் ஆகை யால்செங்**
**குந்தர்சந் ததிக்கும் அப்பேர் முதலியர் என்று கூறும்.**



(இ.ள்) இந்திரன், பிரமன், விஷ்ணு முதலிய தேவர்கள் அனைவருக்கும் முதல்வராக ஆதியில் எழுந்தருளி வந்தவர் சூலமும், மழுவும் கொண்ட சிவபெருமான். அதனால் அவருடைய பெயர் முதலியர் என்பது. அவர் வழியில் வந்தமையால், செங்குந்தர்களுக்கு முதலிய(ா)ர் என்ற பெயரைக் கொடுத்து அப்பெயராலேயே அழைக்கின்றது உலகம்.

(முதலியர் - தலைவர், இது சிவபெருமானுக்கு உரியது; சந்ததி - நவமணிகளில் உதித்தவர்களைக் குறிக்கும்) 29

முசுகுந்தன் நவவீரரைப் பெற்ற சிறப்பு

கலி விருத்தம்

**32 முந்தை நோன்பினான் முருக வேள்முசு**
**குந்த னுக்கொன்பான் குமர ரைத்தர**
**வந்த வீரர்இவ் அகிலம் வென்றிசை**
**தந்த குந்தம்இத் தகுசெங் குந்தமே.**

(இ.ள், முசுகுந்தச்சோழன் கந்தசஷ்டி விரதத்தினை முதன்மையாக அனுட்டித்து வர, முருகக்கடவுள் தம் இளவல்களாகிய நவவீரர்களை அவனுக்குப் படைத்துணைவர்களாகத் தந்தார். அவ்வீரர்கள் உலகில் உள்ள அரசர்களை எல்லாம் வெற்றி கொண்டு அம் முசுகுந்தச் சோழனுக்குச் 'சக்கரவர்த்தி' என்னும் பெரும் புகழைத் தேடித் தந்தார்கள். அத்தகைய பெரும்புகழ் தந்தோர் வழிவந்தவர்களே இச்செங்குந்தர்.

(இசை - புகழ்; சக்கரவர்த்தி என்ற பட்டம் முசுகுந்தனுக்கு நவவீரர்களால் வந்தது என்பர்) 30

தியாகரைப் பூமியிற் கொணர்ந்த சிறப்பு

அறுசீர் விருத்தம்

**33 விண்டு மார்பத் திடைஇருத்தி வேலைக் கௌரி பணிமாறப்**
**பண்டு பூசித் திருங்காலை ஆகண் டலன்போய்ப் பாற்கடலின்**
**வண்டு ழாய்மா யனைவணங்கி வானில்பழிச்சும்தியாகரைமேற்**
**கொண்டு போந்து பாரின்முசு குந்தற் குதவும் செங்குந்தம்.**

வைத்துக்கொண்ட தன்மைபோல, பகைவர்களை வெற்றி பெறுவதற்குத் தன் இனத்துள்ளே செங்குந்தர்களைத்தான் கொண்டான் சோழச்சக்கரவர்த்தி.

[ஒன்னலர்க்கு - பகைவர்களை வெல்லுதற்கு; சாரதி - சரஸ்வதியின் தொண்டன்; ஒட்டக்கூத்தர்] 41

வேலும் குந்தமும் வேறில்லை

அறுசீர் விருத்தம்

**44 சேல்வேறு புலிவே றாகும் சேதுவின் அளவாய்ச் சென்னி**
**கோல்வேறு இல்லாம லோச்சிக் கன்னியும் கொள்வன் என்றே**
**மால்வேறு சிவன்வே றென்ன வழுத்திடா வண்மை போல**
**வேல்வேறுகுந்தம்வேறென்(று)இருபொருள்விளம்பார்மேலோர்.**

(இ-ள்) மீன் கொடியும் புலிக்கொடியும் கொண்டு பாண்டியனும் சோழனும் ஆண்ட இமயமுதல் சேது வரையிலான நாட்டை, முசுகுந்தச் சக்கரவர்த்தி தான் தனியே ஆண்டு கன்னியாகுமரியையும் கைக்கொண்டான் என்று அறிந்த பெரியோர், திருமால் வேறு, சிவன் வேறு எனப் பிரித்து வணங்காத தன்மைபோல, முருகக்கடவுள் கையில் தாங்கிய வேலாயுதம் வேறு, நவவீரர்கள் கையில் தாங்கிய குந்தம் வேறு என்று இரண்டாகக் கூறமாட்டார்கள். 42

குந்தப் பெருமை

**45 பூமாலை, கடப்பந் தாமம், பூண்மணித் தெரியல், செய்ய**
**பாமாலை தன்னைக் கைக்கொள் முதலியர் பங்க தாக்கி,**
**மாமாலை ஒல்லார் காலின் வழிவழிக் குடரின் மாலை**
**தேமாலை யாகச் சூடும் செங்குந்தம் போலும் உண்டோ.**

[இ-ள்] பூமாலை, கடப்பமாலை, அழகிய மணிமாலைகள், புலவர்கள் இயற்றும் குற்றமற்ற பாமாலைகள் இவைகளையெல்லாம் தன்னைக் கையில் கொண்ட முதலியர்கள் பக்கம் அடையச் செய்து, மயக்கத்தை உடைய பகைவர்களின் சந்ததிகளின் குடர்மாலைகளைத் தேன் பொருந்திய மலர் மாலையாகத் தான் அணிந்துகொள்ளும் செவ்விய குந்தம்போல உலகத்தில் வேறு உண்டோ?

[தெரியல் - மாலை; கால் - வழித்தோன்றல்; வழிவழி - தொடர் சந்ததி; மால்-மயக்கம்; மாமாலை-ஐ சாரியை] 43



குந்தக் குதுகலச் சிறப்பு

**46 பற்றினும் பற்றும்; சென்னி பறிக்கினும் பறிக்கும்; பாசம்**
**எற்றினும் எற்றும் கூற்றை; ஈரினும் ஈரும்; வாரிச்**
**சுற்றினும் சுற்றும்; அண்டம் துகளெழச் செயினும் செய்யும்;**
**மற்றினுங் குந்தம் போற்றா(து) இருப்பது உளரோ மண்மேல்?**

[இ-ள்] [நவவீரர்கள் படையாகிய] குந்தமானது யமதருமனை அவன் வலியை ஒடுக்கிப் பிடிக்க வேண்டும் என்றாலும் பிடிக்கும்; அவன் தலையைப் பறிக்க வேண்டுமானாலும் பறிக்கும். அவன் பாசத்தைப் பிடுங்கி எறிய வேண்டுமென்றாலும் எறியும். அவனைப் பிளக்க வேண்டுமானாலும் பிளக்கும்; அவனை எடுத்துக் கறகறவென்று சுழற்ற வேண்டுமானாலும் சுழற்றும். இதுவுமன்றி அண்டங்களைத் துகள் எழச்செய்ய வேண்டுமானாலும் செய்யும். என்றால் இவ்வுலகத்தில் இதனைப் போற்றாதிருப்பவரும் உண்டோ? 44

குந்தத்தின் வீரச் சிறப்பு

**47 'போற்றியோ! போற்றி!' என்று புதுமலர் தூவிச் சீற்றம்**
**ஆற்றியே, வந்தி யாமல் அடையலர் வாழ்ந்தி ருந்தால்**
**காற்றென ஊழித் தீயில் கடலெனக் கொடிய கோபக்**
**கூற்றெனத் திரிந்து சோரிக் குளித்துடன் களிக்கும் குந்தம்.**

[இ-ள்] பகைவர்கள் தமது கோபத்தை மாற்றி, புதிய மலர்களால் அர்ச்சித்துப் 'போற்றியோ! போற்றி!' என்று வணங்காது வாழ்ந்து இருந்தால், குந்தப்படை ஊழிக்காலத்துக் காற்றைப் போலவும், தீயைப் போலவும், கடலைப் போலவும், இயமனைப் போலவும் கோபம் கொண்டு 'அவர்கள் எங்குள்ளனர்' என்று தேடி அப்பகைவர்களைக் குத்தி அவருடலில் இருந்து பெருகும் இரத்த வெள்ளத்தில் மூழ்கிக் களிப்படையும். 45

பழுவூர் வீரன் சிறப்பு

வேறு

**48 சூட்டும் வீர வாகுவெனச் சொல்லும் பழுவூர் வீரன்அமர்**
**மூட்டும் காலம் ஊழிவெள்ளம் மூடும் காலம் ஆகாதோ**
**வேட்டங் காலில் வீழாதார் மேலும் உளரோ வீதிஉலா**
**ஈட்டும் காலம் குந்தம்கண் டெழுமே கழுகும் பருந்துகளும்.**

'நினைக்கும் அரவிந்தம் நீள்பசலை மாம்பூ
அனைத்துணவும் நீக்கும் அசோகு — வனத்திலுறு
முல்லைக்[கு] இடை காட்டும் மாதே முழுநீலம்
கொல்லுமதன் அம்பின் குணம்'

என்னும் பழம்பாடலால் மன்மதனின் மலரம்புகளும் அவற்றின் செயல்களும் தெரியவரும். 53

பிணவன சிறப்பு

அறுசீர் விருத்தம்

56 **குணமார் தருமத் தெவ்வேந்தர் குலக்கோளரியே,குலத்தருவே**
**தணவா வண்மைச் சகம்பேசச் சகமே தாங்கும் பூதரமே**
**பிணவா என்று பகரார்வாய் பிளந்து சோரிப் பெரும்பூதக்**
**கணம்வாய் நிரப்பும், குந்தம்போல் காணோம்! கேளோம்! கற்றோரே.**

*[இ. ள்] (புலவர்களே,) 'திறமையாகப் போரிடுகின்ற குணம் பொருந்திய பகைவர்களாகிய இராச யானைகளுக்குச் சிங்கமே! பிறருக்குக் கொடுத்தலில் கற்பகம், அரிச்சந்தனம் முதலிய பஞ்ச தாருவுக்கு ஒப்பானவனே! எக்காலத்திலும் நீங்காத உன் கொடைத் தன்மையை உலகத்தார் புகழ்ந்து பேசுமாறு இவ் வுலகத்தைத் தாங்குகின்ற குணக்குன்றே! பிணவன் என்னும் அரசனே!' என்று சொல்லிப் போற்றாதவர் வாயைப் பிளந்து, அவற்றில் பெருகும் இரத்தத்தைப் பெரிய பூதகணங்களின் வாயில் நிரப்புகின்ற அந்தச் செங்குந்தத் தலைவனைப் போன்ற வீரனை நாம் கண்ணால் கண்டதுமில்லை; காதால் கேட்டது மில்லை [அறிந்து கொள்ளுங்கள்].*

[தெவ் - பகை; கோளரி - சிங்கம்; தணவா - நீங்காத; வண்மை - கொடை; பூதரம் - பூமியைத்தாங்குவது, மலை] 54

கண்டியூரன் சிறப்பு

சந்தக் கலிவிருத்தம்

57 **மிண்டிடாமல் மேவலீர்! விளம்பிடாமல் ஒருமின்;**
**தொண்டிடாமல் வாழ்வதெங்ஙன்! சூரபன்மன் பட்டிடக்**
**கண்டவீர வாகுதேவர் கால்வரும் குலத்துமன்**
**வண்டுலாவு கண்டியூரன் வயிரவாகு குந்தமே.**

(இ. ள்) பகைவர்களே, சூரபதுமன் முதலியோர் அழியப் போர் செய்த வீரவாகு தேவரின் சந்ததி வழியாக வந்த குலத்தில் சிறந்த அரசனாகிய, வண்டுகள் மொய்க்கும் கடப்பமாலை



அணிந்த 'கண்டியூரன்' என்னும் செங்குந்தத் தலைவன் கையி லுள்ள வச்சிராயுதத்தை ஒத்த அழகிய குந்தத்தோடு எதிர்க்கா மலும், வீணான வம்பு வார்த்தைகள் பேசாமலும் உண்மையை ஆராய்ந்து அறியுங்கள். அவனுக்கு நீவிர் அடிமைத் தொழில் செய்யாமல் வாழ்வது எப்படி? முடியாது ஆகையால் அவனை வணங்கிப் பிழையுங்கள்.

[மேவலீர் - பகைவர்களே; ஒருமின் - ஆராயுங்கள்] 55

முதுகுன்றன், மணியன் சிறப்பு

அறுசீர் விருத்தம்

58 **முத்த முதுகுன் றக்குரிசில், முதிரும் மணவைப் பாராளன்**
**பாத்த னென்னும் மணியன்கைக் குந்தம் கொடுத்துப் பகரவே**
**பூத்த மார்பத் தார்பறித்துப் பூழி படவே வீழ்ந்திறைஞ்சிக்**
**கோத்துச் செங்கை மலர்கூப்பிக்குறுகார்சிறுகி வரக்கண்டான்.**

[இ. ள்] முதுகுன்றத்தில் வாழ்ந்த பெரிய மன்னனும், மணவை என்னும் நகரத்தில் வாழ்ந்த பெரிய அரசனுமாகிய இருவரும் பகைவர்களால் துன்பமடைந்து, முதுமையினால் வலிமை யில்லாதவர்களாய், அர்ச்சுனனுக்குச் சமமான வன்மை உடையவன் எனப்பட்ட மணியன் என்னும் பிள்ளை கையில் தங்கள் கைக்குந்தத்தைக் கொடுத்துப் பட்டம் கட்டி, வெற்றி பெற்றுவரச் சொன்ன அளவில், பகைவர்கள் தங்கள் மார்பில் உள்ள வெற்றி மாலைகளைக் கழற்றி எறிந்துவிட்டு, புழுதி உடலில் படும்படி மண்ணில் வீழ்ந்து அவனை வணங்கித் தாமரை மலர் போன்ற தம் கைகளைக் குவித்துக் கொள்ள அவன் மிகுந்த வீரத்தைக் காட்டினான்.

[பூழி - மண்; குறுகார் - பகைவர்; சிறுகி - குறுகி; தேய்ந்து] 56

தஞ்சைவேம்பன் சிறப்பு

59 **பஞ்சம் வெம்பத் தரும்பனையை நாவால் மிகவே பாடாது**
**தஞ்சை வேம்ப னைப்புகழ்ந்தேம் அதுமுன் செய்த தவமேயாம்;**
**எஞ்ச எளிதோ ஊழிஉருத் திரன்கைக் கொளுமூ விலைவேலே**
**வஞ்ச மாயை அவதரித்த திவன்கைக் குந்த வரவாமால்.**

(இ. ள்) ஏழைகளின் வறுமை நீங்கப் பொருள் கொடுக்கும் பனை மாலை அணிந்த சேரனை எமது நாவால் அதிகமாகப் பாடாமல், தஞ்சை நகரில் வாழும் வேம்பன் என்னும் தலைவ னைப் புகழ்ந்து பாடினோம். அது யாம் முன்னர்ச் செய்த தவத்தினாலேயாம். அத்தவத்தைக் குறைசொல்வது எளிதோ?

இவன் கையில் உள்ள வஞ்சமே உருவான மாயை அவதாரம் செய்து வந்த குந்தத்தின் வரவானது ஊழிக் காலத்து உருத்திரன் கையிலுள்ள முத்தலைச் சூலாயுதத்தின் வரவே ஆகும்.]

மங்கலியப் பிச்சையிட்ட சிறப்பு 57

வேறு

**60 வல்லான்தன் திருத்தேவி மங்கலியம்**
**பிழையாமல் மடிதான் ஏற்றிங் (கு)**
**எல்லோரும் மங்கலியப் பிச்சையிடும்**
**எனத்தாள்வீழ்ந் திரப்ப வேண்டிக்**
**கொல்லாமல் விடுதல்புக ழெனக்கருதி**
**யோகற்பில் கொண்ட வாய்மை**
**நல்லார்கள் இருந்தவையின் புகழ்கைக்கோ**
**காத்ததுகொல் நம்செங் குந்தம்.**

[இ.ள்] சோழனுடன் மாறுபட்டு, வீரன் நாராயணன் முதலிய செங்குந்தத் தலைவர்கள் பன்னிருவரால் தோல்வியடைந்து, அவர்களிடம் தன் உயிரைக்கொடுக்க இருந்த வல்லான் என்னும் அரசனுடைய மனைவியாகிய அனங்கவல்லி என்பவள், அந்த நேரத்தில் முந்தானை ஏற்று நான் அமங்கலியாகாமல் நீவிர் அனைவரும் மங்கலியப் பிச்சையிடவேண்டும் என்று அவர்கள் பாதத்தில் வீழ்ந்து வேண்ட, செங்குந்தத் தலைவர்கள் அவனுக்கு உயிர்கொடுத்துக் காத்தது, அவனைக் கொல்லாமல் விடுதல் புகழ் என எண்ணியோ, அல்லது கற்பின் உண்மையை மேற்கொண்டு ஒழுகிய மாதர்கள் இருந்த சபையின்கண் தங்களைத் துதிப்பதற்கோ அறியோம். 58

உயிர்க் கொடைச் சிறப்பு

தரவுக் கொச்சகக் கலிப்பா

**61 எல்லாக்கா லத்தினுமொன் (று)ஏற்பவருக் கில்லையெனும்**
**சொல்லா னதுகற்றும் சொல்லறியார் ஏந்து குந்தம்**
**வல்லானைக் கொல்லாமல் மனைவிக்கு மங்கலியம்**
**உல்லாசத் துடனளிக்கும் உதவியதொன் றறிந்தேமால்.**

(இ.ள்) செங்குந்தத் தலைவர்கள் கொடை கொடுக்க இயன்ற காலத்தும், இல்லாக் காலத்தும் தம்மிடம் ஓர் பொருளை யாசிப்பவருக்குக் கொடுத்தலன்றி, 'இல்லை' என்று சொல்லத் தெரியுமாயினும் அவ்வாறு சொல்லி அறியாத நாவினை உடையவர். இதனை வல்லான் என்னும் கொடிய துட்டன் பிடிபட்ட போது அவன் மனைவி அனங்கவல்லி இரந்து மங்கலியப் பிச்சை கேட்க, அவனைக் கொல்லாமல் மகிழ்ச்சியோடு உயிர்ப்பிச்சை கொடுத்த செயலினால் அறிந்து கொள்ளலாம். 59



மெய்த்தலை கொடுத்த சிறப்பு

கலி விருத்தம்.

**62 முத்தமி ழிராசரா சேந்திரன் முன்னமே**
**சுத்தவீ ரத்திறம் துலங்கு தற்கொரு**
**பொய்த்தலை கொடுத்தலில் புகழ்பெ றாதென**
**மெய்த்தலை கொடுத்தன வீரக் குந்தமே.**

(இ. ள்) குந்தப்படையை உடைய பழுவூர் வீரன், பழுவூர் நாராயணன் என்னும் செங்குந்தத்தலைவர்கள் முத்தமிழிலும் வல்ல இராசராசேந்திர சோழன் முன்பு, தூய்மையான தங்கள் வீரம் துலங்க வல்லானின் ஒரு பொய்யான தலையைக் கொடுப்பது சிறப்பன்று என்று கருதி, தங்கள் இருவருடைய மெய்யான தலைகளையே கொடுத்தனர்.

(இந்த இராசராசேந்திரனைப் 'பராந்தகச்சோழர்' எனப் பழைய உரை கூறுகின்றது. பொய்த்தலை கொடுத்தகதை 'வல்லான் காவியத்தில்' உள்ளது.) 60

சாவான்கல் சிறப்பு

**63 பைந்தமிழ்க் காவலர் பகரும் பாடலார்**
**கந்தவேள் தான்மகிழ் கைலைக் காவலார்**
**வந்தவீ ரப்படைத் தலைவர் வந்துழிச்**
**சிந்தவே கழுத்துடற் செகுத்த குந்தமே.**

[இ. ள்] செந்தமிழ்ப்புலவர்கள் செய்த பாடலில் பொருந்திய முருகக்கடவுள் மகிழ்ந்து எழுந்தருளி இருக்கும் திருக்கைலாய மலைக்குக் காவலராகிய நவ வீரர்கள் சந்ததியினராகிய வீரம் மிக்க செங்குந்தத் தலைவர்கள் சமயம் வந்தபோது தமது உயிரையும் ஒரு பொருளாக எண்ணாமல் கைக்குந்தத்தால் தம் உடலினின்றும் கழுத்துச் சிந்தும்படி அரிந்தவராவர்.

[முதல் அடிக்கு பைந்தமிழ்ப் புலவர்கள் சொல்லுகின்ற பாடலுக்குரியவர்களான செங்குந்தர் எனவும் பொருள் கூறலாம். தாமே தம் கழுத்தரிந்து உயிர்விடுபவர் நினைவாக நடப்படும் கல் சாவான்கல் — நடுகல் — எனப்படும். அதில் அவ்வீரனுடைய உருவம் பொறிக்கப்பட்டிருக்கும். இதுபோன்ற கற்கள் பலவிடங்களில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அக்கற்களில் அவ்வீரன் பெயர், அவனது வீரச்சிறப்பு முதலியனவும் எழுதப்பட்டிருக்கும்.] 61

புலிக்கொடி நிலையிட்ட சிறப்பு

64 தில்லைமூ தூர்நடம் செய்யும் ஆலயத்(து)
ஒல்லையில் பொறித்திடும் உழுவை முத்திரை
எல்லையில் நாவல்ஒன் பதின்மர்க் காக்கியொர்
வல்லையில் துணையொடு மருவும் குந்தமே.

[இ. ள்] நடராசப்பெருமான் திருநடனம் புரிகின்ற சிதம்பரம் நகரத்தில் முதற்கண் நவவீரர்களது கொடியில் தீட்டிய புலி முத்திரையானது அளவிலா விரிவுகொண்ட நாவலந்தீவின் ஒன்பது கண்டத்திலும் செல்லும்படிச் செய்வித்தது எதுவெனில் ஒப்பற்ற வல்லமையுடைய வேலாயுதத்தைத் துணையாகக் கொண்டிருக்கும் செங்குந்தமே.

[உழுவை - புலி; நாவல் - நாவலந்தீவு - பூஉலகம்] சிதம்பரம் கோயிலை நவவீரர் பரிபாலித்ததாகச் சொல்லப்படுகின்றது. 62

பரணிகொண்ட சிறப்பு
அறுசீர் விருத்தம்

65 எந்தையாம் அம்மை பாகத் திறைவனை வணங்கி யாமே
பைந்தமிழ்ப் பரணி செய்த பாடலோ டந்த மாக
அந்தமா மடவார் ஆட அரியணை இருந்த வீரர்
குந்தமே குந்தம் வேறு குந்தமும் உளதோ கூற.

[இ. ள்] உமையொரு பாகத்து இறைவனாம் எந்தையை வணங்கி, யானே பைந்தமிழால் கூறிய பரணி என்னும் பிரபந்தப்பாடலுடன் மற்றப் பாடல்களையும் அபிநய இலக்கணத்தோடு அழகிய மாதர்கள் நர்த்தனஞ்செய்ய, சிங்காதனத்தில் இருந்து கேட்டு மகிழ்ந்த செங்குந்தத் தலைவர்கள் கையிலுள்ள குந்தமே குந்தம். இதற்கு நிகரான வேறு குந்தம் உலகில் உள்ளதோ? 63



சிரச் சிங்காதனச் சிறப்பு
கலி விருத்தம்

66 வரச்சிங் காதன வளவர் தம்பிரான்
தரச்சிங் காதனம் தன்னில் ஏறியே
துரைச்சிங் காதனம் தொழுங்க விக்கிடும்
சிரச்சிங் காதனச் சீர்செங் குந்தமே.

[இ. ள்] பூர்வத்தில் முசுகுந்த மன்னன் பெருந்தவம் செய்து வரமாகப்பெற்ற சிங்காதனத்தை உடைய சோழ மன்னர்களுக்கெல்லாம் தலைவனாகிய குலோத்துங்க சோழன் தந்த சிங்காதனத்தில், சிங்காதனமுடைய அரசர்களெல்லாம் வணங்க வீற்றிருந்த கவியாகிய எனக்கு ஆயிரத்தெட்டுத் தலைகளாகிய சிரச்சிங்காதன மிட்ட சிறப்பினை உடையோர் செங்குந்தத் தலைவர்கள். 64

சிரச் சிங்காதனக் காரணச் சிறப்பு

67 வேட்டுமால் நாடரி தாய வேணியர்
சூட்டுதாள் வாரிசத் துணைகள் ஏத்தியே
ஆட்டுக சென்னியை அலர்த்தி யேஎனக்
காட்டுதற் கேஅரி கவின்கைக் குந்தமே.

[இ. ள்] திருமால் இறைவன் திருவடிகளைக் காணவிரும்பி, வராக அவதாரம் கொண்டு பூமியைப் பிளந்து சென்றும் காணமுடியாத, சடா மகுடத்தை உடைய அப்பரமசிவனது தாமரை மலர்போன்ற இரண்டு திருவடிகளை வணங்கி, உலகினரைப் பார்த்து 'நீங்கள் முகமலர்ந்து சிரக்கம்பம் செய்யுங்கள்' என்று தங்கள் வீரத்தைக் காட்டுதற்கே தலையரிந்து சிங்காதனமிட்டனர் இச்செங்குந்தர்.

(வேணி - சடாமுடி; வாரிசம் - தாமரை) 65

பிரமகத்தி ஒழித்த சிறப்பு
கலிநிலைத்துறை

68 **விண்டு வேதனும் நாடரி தாகிய விமலன்**
**பண்டு தாருகப் பிரமகத் திப்பழி போகக்**
**கொண்டு தாமெனக் கடுகியே குடிவழித் தொன்மை**
**கண்டு தாம்கழுத் தரிந்தது கவின்களின் குந்தம்.**

(இ ள்) திருமாலும் பிரமனும் தேடுதற்கரிய நின்மலனாகிய பரமசிவனுக்கு, முன்பு தாருகா வனத்தில் உண்டான பிரமகத் திப் பழியை அழகிய செங்குந்தத் தலைவர்கள் அறிந்து, அதை நீக்க வந்தவர் நாமே எனக்கருதி விரைந்து சென்று தங்கள் கழுத்தை அரிந்து கொண்டது மிகவும் அற்புதமானதாகும்.

(கவின்கவின் - அழகு விளங்குகின்ற) 66

குந்தப் பூசைச் சிறப்பு
கலிவிருத்தம்.

69 **தவந்தனிச் செய்வதென் தலைச்சிங் காதனம்**
**உவந்துபா வாடையிட் [டு] ஓடும் சோரிமேல்**
**நவந்தனில் பாடிய நம்க வித்திறம்**
**சிவந்திடச் செய்தது திருச்செங் குந்தமே.**

(இ ள்) செங்குந்தத் தலைவர்கள் உவப்போடு ஆயிரத்தெட்டுத் தலைகளை வெட்டிச் சிங்காதனம் செய்து இரத்தப்பாவாடை யிட்டு அதனினின்று ஓடும் இரத்த வெள்ளத்தின் மீதிருந்து புதுமையாகப் பாடிய நமது கவியினது மகத்துவம் எங்கும் விளங்கச் செய்தது செங்குந்தம். ஆகவே உலகீர், செங்குந் தத்தைப் பூசியாது பாசபந்தம் முதலியன துறந்து தனியாக இருந்து தவம் செய்யவேண்டுவதுஎன்ன? ('சிவந்திட' - என்றது 'இரத்தத்தால் சிவக்க' என்றும், 'எங்கும் ஒளிவீசும்' என்றும் இருபொருள் தந்து சிலேடையாயிற்று.) 67

குந்தத் திறச் சிறப்பு
அறுசீர் விருத்தம்

70 **வீணுக்கே றாத வாய்மை விளம்பிடா வெற்றி யாளர்;**
**ஆணுக்கே றாய்ப்பி றந்தோர்; அடுபுலிப் பதாகை மன்னர்**
**நாணுக்கே றாத சாபம் நாட்டியே இறுத்த மால்தன்**
**மாணுக்கே றாத மாற்றார் அடைந்திட மருவும் குந்தம்.**



(இ. ள்) இல்லாத வல்லமையைத் தம் வாயால் எடுத்துச் சொல்லாத வெற்றியை உடையவரும், ஆண்களுக்கெல்லாம் சிங்கம்போன்ற வலிமையோடு தோன்றிப் புலிக் கொடியைக் கொண்டவரும் ஆகிய செங்குந்த அரசர்கள் கையில் நாணேற்றி வளையாத வில்லை நிறுத்தி ஒடித்த சீராமபிரானது பெருமைக்கு மேற்பட்ட சிங்கம் போலும் வல்லமையுடைய பகைவர்கள் சரணாகதியாக அடையச்செய்யும்படிப் பொருந்தி யிருப்பது செங்குந்தமாகும்.

(ஏறு - சிங்கம்; பதாகை - வெற்றிக்கொடி; சாபம் - வில்; 'மன்னர்' என்பதில் ஏழாம் வேற்றுமை உருபு தொகுக்கப் பட்டது.) 68

உலகம் புகழ்ந்த சிறப்பு
கலி விருத்தம்

71 **வட்டமார் அவையுழை வந்த மேலவர்**
**இட்டபா வாடைகண் (டு) இசைபெ றாதுமண்**
**முட்டவந் துயிர்பெறீஇ மொய்த்து ளேம்எனக்**
**கட்டுள குந்தர்சீர் கழறி ஏத்தினார்.**

[இ ள்] வட்டமான இச்சபையின்கண் வந்த மேன்மக்கள், இச் செங்குந்தத் தலைவர் பிரபந்தம் கேட்க அம்பலக் கூத்த னாகிய நமக்குச் செய்வித்த சிரச்சிங்காதனத்தோடு இரத்தப் பாவாடையைக் கண்டு, நாம் இவ்வுலகம் முழுவதும் பலகுலங் களில் பிறந்துவந்தும் இத்தகைய புகழைக்கொள்ளாது உயிர் பெற்று நெருங்கி இருக்கின்றோம். இது ஏன்? என்று தம்மை இகழ்ந்து, கட்டுப்பாட்டினை உடைய செங்குந்தத் தலைவர் களது சிறப்புக்களை எடுத்துச் சொல்லித் துதித்தனர்.

[அவையுழை - சபையில்; இசை - புகழ்] 69

குந்தத் தலைவர் சிறப்பு
அறுசீர் விருத்தம்

72 **செந்தமிழ்க் காகப் போந்து சிவந்தபா வாடை யாக**
**நந்தமக் கிடுங்கால் எல்லாநகரமும் உளம்வி யந்த;**
**அந்தரத் தமரர் வாழ்த்தி அணிமலர் மாரி பெய்தார்;**
**இந்தச்செங் குந்தர் பெற்ற இசைஎவர் பெற்றார் அம்ம.**

[இ-ள்] குற்றம் நீங்கிச் சிறந்த ஈட்டியெழுபது என்னும் நூலைப் பெறும் பொருட்டு, அம்பலக்கூத்தனாகிய நமக்குச் சிரச்சிங்காதனமும், இரத்தப் பாவாடையும் இட்டதையறிந்த எல்லா நகரத்திலுள்ளாரும் உளம் வியந்து மகிழ்ந்தனர். வானுலகத் தேவர்கள் இவர்களை நீடூழி வாழ்க என வாழ்த்தி அழகிய மலர்மாரி பொழிந்தனர். ஆதலால் இத்தன்மையுடைய செங்குந்தர் பெற்ற புகழினைப்போல உலகத்தில் எக்குலத்தார் பெற்றனர். 70

குந்தப் பெருமை கூறற்பாலார் சிறப்பு

73 அம்பர்நாட் டமர்ந்தகுந்தம் அயனரி அரன்மூன் றென்னும்
உம்பர்தாம் அறிய வேண்டும்; உயர்ந்தமுத் தமிழி னாலே
கும்பசம் பவனே தேர்ந்து கூறவே வேண்டும்; அல்லால்
இம்பர்யாம் கூறவேண்டும், எவர்மற்றும் கூறு வாரே.

[இ-ள்] திருக்கயிலாயத்தில் எழுந்தருளியுள்ள நவவீரர்களின் கையிலுள்ள குந்தத்தின் பெருமையை அயன், அரி, அரன் என்னும் மும்மூர்த்திகள் அறியவேண்டும். அல்லது அகத்தியன் ஆராய்ந்து இயலிசை நாடகம் என்னும் முத்தமிழாற் கூற வேண்டும். இவர்கள் அல்லது இவ்வுலகத்தில் அம்பலக்கூத்தனாகிய யான் சொல்லவேண்டும் மற்று யாவர் கூறவல்லார்

[அம்பர் - அவ்விடம் - தேவலோகம்; கும்ப சம்பவன் - குடத்தில் தோன்றிய அகத்திய முனிவர்] 71

ஈட்டியெழுபது முற்றியது.



உ

சிவமயம்

முருகக்கடவுள் துணை

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் இயற்றிய

# எழுப்பெழுபது

(மூலமும் பொழிப்புரையும்)

ஒட்டக்கூத்தர் ஈட்டி எழுபது பாட விலையாகத் தம் தலையை அரிந்து இரத்தப் பாவாடையில் சிரச்சிம்மாசனம் இட்ட செங்குந்தர்களின் சிரமும் உடலும் ஒன்று சேர்ந்து உயிர்பெற்றெழக் கலைமகளை வேண்டிப் பாடிய நூல் இது.

இந்நூல் முழுமையாகக் கிடைத்திலது. 13 பாடல்களே கிடைத்துள்ளன.

இந்நூல் ஒட்டக்கூத்தரால் பாடப்பட்டது எனவும், வெட்டிய தலைகள் ஒட்டப்பாடிய காரணத்தினாலேயே அவர் இப்பெயர் பெற்றார் எனவும் கூறுவர்.

காப்பு - நேரிசை வெண்பா

**74 தங்கச் சிலைஏட்டில் தந்த எழுத் தாணிகொடு**
**துங்கப் பெருநூலைத் தூய்மையுடன் - சங்கையற**
**வேதமுனி சொல்ல விளக்கினான் பாதமலர்**
**போதமெனப் போற்றுவோம் புக்கு.**

பொருள்:

தங்கமயமான எழுதும் ஏடாகிய மேருமலையில் தனது தந்தமாகிய 'எழுத்தாணியினால், உயர்ந்த பெருநூலாகிய ஐந்தாம் வேதம் எனப்படுகின்ற மகாபாரதத்தை, மனத்தூய்மையுடன் சந்தேகத்துக்கிடனின்றி வேதவியாச முனிவர் கூற எழுதிய யானை முகக்கடவுளாகிய விநாயகன்

திருவடிகளே நமக்கு அறிவு தரும் என எண்ணிப் போற்று வோமாக. [திருவடியே ஞானம் தரும் என்றவாறு].

வேண்டுகோள்

அறுசீர் விருத்தம்

75 **கலைவாணி நீயுலகில் இருப்பதுவும்,**
**கல்வியுணர் கவிவல் லோரை**
**நிலையாகப் புரப்பதுவும். அவர்நாவில்**
**வாழ்வதுவும் நிசமே அன்றோ!**
**சிலைவாண னாஇருந்தா யிரம்புயங்கள்**
**துணிந்துமுயர் சீவன் உற்றான்**
**தலையாவி கொடுத்திடும்செங் குந்தருயிர்**
**பெற்றிடவும் தயைசெய் வாயே.**

பொருள் :

கலைகளுக்கு எல்லாம் உறைவிடமாகிய சரஸ்வதித் தாயே, நீ உலகில் உள்ளமையும், கல்வியை நன்குணர்ந்து கவிபாட வல்லவர்களின் நாவில் அமர்ந்து அவர்கள் அழியாமல் நிலைக்கச்செய்து காப்பதும் சத்தியம் அல்லவா? வில்தொழிலில் வல்ல வாணாசுரனுடைய ஆயிரம் கைகள் வெட்டப்பட்டும் அவன் உயிர்பெற்று இருந்தான். அதுபோல் என் பாடல் பெறுவதற்காகத் தலையரிந்து உயிர்விட்ட செங்குந்தர்கள் மீண்டும் உயிர்பெற்று உலகில் வாழக் கருணை செய்வாயாக.

[சிலை - வில்; துணிந்தும் - வெட்டப்பட்டும்] 1

வேறு

76 **பலபல மதங்கள் தோறும் பற்பல வடிவ மாகி**
**அலகிலா விளையாட் டென்றும் ஆடிடும் முருக வேட்கு**
**நலமுறும் அனுச ரான நம்குல முதலி தங்கள்**
**தலைதனை உடலிற் கூட்டித் தந்தருள் வாணித் தாயே.**

பொருள்:

சரஸ்வதித் தாயே! எவரெவர் எந்த எந்த மதங்களை மேற்கொண்டு எந்த எந்த வடிவில் தெய்வத்தை வழிபடு கின்றார்களோ அந்தந்த வடிவில் காட்சியளித்து அளவற்ற திருவிளையாடல்களைச் செய்துவரும் முருகப்பெருமானுக்குப் பின்பிறந்த நன்மைபெறும் தம்பியரான நமது செங்குந்தத் தலைவர்களுடைய அறுபட்ட தலைகளை உடலில் சேர்த்து அவர்கள் உயிர் பெற்றெழ அருள் செய்வாயாக.

(அலகிலா - அளவற்ற; அனுசர் - பின்பிறந்தவர்) 2



77 **தோற்றமும் ஈறும் அற்ற தோம்இலா உருவம் கொண்டு**
**மாற்றலர் சூரன் ஆதி மன்னரை மதித்துக் காய்ந்த**
**நாற்றிசை போற்றும் எங்கள் நாமவேல் குமரன் பின்னே**
**சாற்றரும் குலர்க்குள் ஆவி தந்தருள் வாணித் தாயே.**

பொருள் :

கலைவாணித்தாயே! என்றும் தோன்றுதலும் அழிதலும் இல்லாத குற்றமற்ற நிலைத்த உருவம்கொண்டு, சூரபதுமன் முதலாய அசுரர்களையும் பகையரசர்களையும் அழித்த, எல்லாத்திசையிலும் உள்ளவர்களால் புகழப்படுகின்ற, அச்சம் தருகின்ற வேலைக் கையில் கொண்ட எங்கள் முருகப் பெருமானுக்குப் பின்பிறந்தவர்களாகிய, சொலற்கரிய புகழ்படைத்த குலத்தினர் உடலுள் உயிர்பெறுமாறு அருள் செய்வாயாக.

(தோம் - குற்றம்; காய்ந்த - கோபித்துஅழித்த; நாமவேல் - அச்சம் தருகின்ற வேல்) 3

78 **உரைசெயும் வேத கோடி உட்பொருள் ஆகி நின்ற**
**பரசிவன் இவனே என்று பன்முறை ஏத்த நிற்கும்**
**ஒருபொரு ளான கந்தன் உடன்வரு மரபார் இன்று**
**தருதலை ஆவி கொள்ளத் தந்தருள் வாணித் தாயே.**

பொருள் :

கலைவாணித் தாயே! கற்று வல்லவர்கள் பகுத்து உரைக் கின்ற வேதத்தின் கோடிக்கணக்கான உட்பொருளாய் விளங் கும் பரமசிவன் இவனே என்று கூறிப் பலமுறையும் தேவர்கள் புகழ்ந்து வழிபட நின்ற ஒப்பற்ற பரம்பொருளாகிய கந்தனுடன் பிறந்து வரும் செங்குந்த மரபினர், இன்று எனக்குச் சிரச்சிங்காதனம் அமைப்பதற்காகக் கொடுத்த தலைகள் உடலுடன் பொருந்தி உயிர் பெற அருள் செய்வாயாக.

முருகனும், பரமசிவனும் தம்மில் வேறல்லர் என்பது,

**''ஆதலின் நமது சக்தி அறுமுகன் அவனும் யாமும்**
**பேதகம் அன்றால் ...........''**

*எனவரும் கந்தபுராணப் பாடலால் விளங்கும்.* 4

**79 பண்டொரு நாளில் மேருப் பருப்பத முடியில் நின்றே**
**அண்டங்கள் எல்லாம் தன்னில் அடக்கியே காட்சி தந்த**
**முண்டக முளரித் தாளான் முருகவேள் துணைவர் தந்த**
**தண்தலை ஆவி சேரத் தந்தருள் வாணித் தாயே.**

*பொருள் :*

*கலைவாணித் தாயே! முன்னொரு காலத்தில் மகாமேரு மலையின் உச்சியில் பேருருவம் கொண்டு நின்றருளித் தன் திருமேனியில், எல்லா அண்டங்களையும் அவற்றில் உள்ள எல்லா அசையும் பொருள் அசையாப் பொருள் (சராசரங்) களையும் அடக்கிக் காட்சி தந்த தாமரை மலர் போன்ற அழகிய திருவடிகளை உடைய முருகவேளுக்குத் துணைவர் களான இந்தச் செங்குந்தத் தலைவர்கள் வெட்டிய தலைகள் உடல்களுடன் சேர்ந்து உயிர் பெற்றெழத் திருவருள் புரிவா யாக.*

*[முண்டக முளரி - ஒரு பொருட் பன்மொழி]* 5

**80 ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலகம் எல்லாந்**
**தருபவன் ஆகிஅன்று தாமரைக் கிழவோன் தன்னைப்**
**பெரும்பகல் சிறையில் வைத்த பீடுசேர் முருகன் பின்னே**
**வருங்குலர் ஆவி கொள்ள வைத்தருள் வாணித் தாயே.**

*[இ.ள்] கலைவாணித் தாயே, இவ்வுலகத்தில் ஒருவன் என்று ஆணாகவும், ஒருத்தி என்று பெண்ணாகவும் ஒன்று என்று உயிர் உள்ள உயிரற்ற அஃறிணைப் பொருளாகவும் சொல்லப்படுகின்ற எல்லாப் பொருள்களையும் படைக்கும் படைப்புக்கடவுளாகத் தானே விளங்கி, [படைப்புத் தொழிலை இறைவன் ஆணைப்படி செய்துவந்த] பிரமதேவனைச் சிறையிலிட்ட பெருமையை உடைய முருகப்பெருமானுக்குப் பின்பிறந்து வந்த செங்குந்த குலத்தவர் உயிர்பெற்று எழுமாறு அருள் செய்வாயாக.*

*[தாமரைக்கிழவோன் - பிரமதேவன்; கிழவன் - உரிமை உடையவன்]* 6



**81 தேவரும் போற்ற மேல்நாள் தெய்வத யானைத் தோளை**
**மேவியே இந்தி ரற்கு வேண்டிய வரங்கள் ஈந்த**
**தேவர்கள் தேவ னான செய்யவேட் கனுசர் ஈந்த**
**தாவரும் தலைக்குள் ஆவி தந்தருள் வாணித் தாயே.**

*பொருள் :*

*கலைவாணி அம்மையே! தேவர்களுக்கெல்லாம் உயர்ந்த தேவனான, சிவந்த வேலைக் கையிலே கொண்ட முருகப் பெருமான், முற்காலத்தில் தேவர்கள் அனைவரும் வணங்கி நிற்குமாறு இந்திரனுடைய வளர்ப்பு மகளான தெய்வயானையைத் திருமணம் புரிந்துகொண்டு, அவ்விந் திரனுக்கு அவன் வேண்டிய வரங்களையும், தேவலோக அரசாட்சியையும் அளித்தவன் அம் முருகப் பெருமானுக்குப் பின்பிறந்தவர்களான இச்செங்குந்தர்களின் வெட்டப்பட்ட தலைகளைச் சேர்த்து உயிர்பெற்றெழ அருள் செய்வாயாக.* 7

**82 தெள்ளிய சீர்த்தி கொண்ட சிவமுனி வரனால் கண்ட**
**வள்ளியைத் தொண்டை நாட்டு வரைதனில் வதுவை செய்த**
**எள்ளிலை வடிவேற் கையன் இடத்தவர் எனக்குத் தந்த**
**தள்ளரும் தலைக்குள் ஆவி தந்தருள் வாணித் தாயே.**

*பொருள்:*

*கலைவாணித் தாயே! திருமாலின் அம்சமான மேலான புகழை உடைய சிவமுனிவரது பார்வையால் மானின் இட மாகத் தோன்றி வள்ளியம்மையாரைத் தொண்டை நாட்டில் உள்ள வள்ளிமலையில் திருமணம் செய்து கொண்டருளிய புகழ் பொருந்திய, அழகிய வேலைக் கையில் கொண்ட முருகப் பெருமானின் துணைவர்கள், என் கவிக்கு விலையாகத் தந்த குற்றமற்ற தலைகள் உடல்களில் பொருந்தி உயிர் பெற்று எழு மாறு திருவருள் புரிவாயாக!* 8

**83 வேண்டிய போகம் எல்லாம் விருப்புடன் உலகுக் (கு) ஆக்கும்**
**ஆண்டியாம் பழனி மேய ஆண்டிதன் வழியில் வந்த**
**காண்டகு குந்தர் இன்னே காட்டிய தலைகள் எல்லாம்**
**மீண்டவர் பெற்று வாழ விழைந்தருள் வாணித் தாயே.**

பொருள் :

கலைவாணி அம்மையே! உலகத்தில் உள்ளவர்கள் எந்த இன்பத்தை விரும்புகின்றார்களோ அவற்றையெல்லாம் தவறாமல் கொடுத்து அருள் செய்கின்ற, பழனிமலையில் ஆண்டிக் கோலத்துடன் நின்று திருவருள் பாலிக்கின்ற, பழனியாண்டியின் வழியில் வந்தவர்களான காட்சிக்கு இனிமையான குந்தப் படையைக் கையில் கொண்ட செங்குந்தர்கள் வெட்டிக் கொடுத்த தலைகள் எல்லாம் மீண்டும் அவரவர் உடலிற் சேர்ந்து உயிர்பெற்று வாழ விருப்பத்தோடு அருள்புரிவாயாக!

**''வேண்டினர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட**
**ஆண்டாண்டு உறைதலும் அறிந்தவாறே''**

என்பது நக்கீரர் அருளிய திருமுருகாற்றுப்படை. 9

84 **மோனமா முனிவர் தேற முப்பொருள் கையால் காட்டி**
**ஞானமாம் சத்தி தன்னை நற்கரத் (து) அமைத்தே எங்கள்**
**கானமான் குறத்தி மாதைக் கடிமண விழவில் கண்ட**
**வானவேள் அனுசர்க் (கு) ஆவி வழங்கருள் வாணித் தாயே.**

பொருள்:

அருள்மிக்க கலைவாணியே, பேச்சொழித்து சிந்தையை அடக்கி, உலகப் பற்றினை ஒழித்து இறைவனை அடைய முயலுகின்ற முனிவர்கள் தங்கள் மனம் தெளிவடையுமாறு, பதி பசு பாசம் என்னும் முப்பொருள் உண்மையை, வாய்பேசாமல் கையினாற் சுட்டி அறிவித்து, ஞானசக்தி என்னும் வேலினைக் கையில் கொண்டு, காட்டில் மான் வயிற்றில் தோன்றிய குறவள்ளியை முறைப்படிப் புதுமணம் புரிந்தருளிய முருகப் பெருமானுக்குப் பின்பிறந்தவர்களாகிய இச் செங்குந்தர்கள் உயிரினை அவர்களது உடல் பெற்றெழத் திருவருள் செய்வாயாக! 10

85 **முந்தொரு பகலில் தேவர் முனைப்பினை ஒழிப்பான் புக்குச்**
**சந்திர சூட னாகித் தனிப்பெரு வெளியில் வந்தோர்**
**மந்திரத் துரும்பை நாட்டி வலிகெடச் செய்த எங்கள்**
**கந்தனுக் கிளையர்க் காவி கண்டருள் வாணித் தாயே.**



பொருள்:

கலைவாணித் தாயே! முன்னொரு காலத்தில், தாமே எல்லா வல்லமையும் படைத்தவர்கள் என்று இறுமாந்திருந்த தேவர்களின் கருவத்தை அடக்குவதற்காக, சந்திரனைத் தலையில் சூடிய சிவபெருமான், யட்ச வடிவம் கொண்டு பெருவெளியில் நின்று, மந்திரம் போலும் துரும்பு ஒன்றை நட்டு அதை அசைக்கச் சொல்லி, அசைக்கமுடியாமல் தேவர்கள் வலியிழந்து கருவம் அடங்கி நிற்குமாறு செய்தார். அச்சிவ பெருமான் ஆகிய கந்தவேளுக்கு இளையவர்களான இச் செங்குந்தர் உயிர் பெற்றெழத் திருவருள் புரிவாயாக!

[இந்த வரலாறு காஞ்சிப்புராணம் அமரேசப் படலத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது] 11

86 **பிஞ்ஞகன் வேண்டி நிற்கப் பிரணவப் பொருளைக் கூறிக்**
**கஞ்சனைத் தளையில் நீக்கிக் காணரும் கோலம் கொண்ட**
**மஞ்ஞையில் இவர்ந்து கந்த மாதனத் திருந்தான் பின்னோர்**
**உஞ்சிட ஆவி சேர உவந்தருள் வாணித் தாயே.**

பொருள்:

கலைவாணித் தாயே, தலைக்கோலம் உடையவனாகிய சிவபெருமான், பிரணவத்தின் பொருளைத் தனக்குக் கூறுமாறு வினவ அப்பொருளை உணர்த்தி, 'ஓம்' என்னும் அப்பிரணவத்தின் பொருளைச் சரியாக அறிந்து கொள்ளாமையால் சிறையிலிடப்பட்ட பிரமனைச் சிறைவீடு செய்து, படைப்புத் தொழில் செய்ய நான்கு திருக்கரங்களுடன் காணுதற்கரிய கோலம் கொண்டு கந்தமாதன மலையில் மயில்மீது அமர்ந்தருளிய முருகப் பெருமானின் பின்னவர்கள் உயிர்பெற்று எழத் திருவருள் புரிவாயாக.

(கந்தகிரி, இங்கு 'கந்தமாதனம்' எனப்பட்டது. 'மஞ்ஞை' என்பது எதுகை நோக்கித் திரிந்தது. 'உஞ்சிட' - 'உயந்திட' என்பதன் போலி) 12

## குந்தர் குணமாட்சி

87 நிலைதந்தார் புவியினுக்கு; யாவருக்கும்
அபிமானம் நிலைக்கத் தந்தார்;
கலைதந்தார் வணிகருக்குச்; சீவனம்செய்
திடவென்றே கையில் யாண்டும்
விலைதந்தார் தமிழினுக்குச் செங்குந்தர்;
என்கவிக்கு விலையா கத்தான்
தலைதந்தார்; எனக்கொட்டக் கூத்தனெனும்
பெயரினையும் தாம்தந் தாரே.

பொருள்:

செங்குந்த குலத் தலைவர்கள் உலகம் நிலைபெற்று வாழ வழி செய்தனர். அனைவரிடத்தும் நிலையான அன்பு பெருகுமாறு செய்தனர். அனைவருக்கும் மானம் காக்கும் ஆடை நெய்து தந்தனர். அவ்வாடையைக் கொண்டு வாணிகர் தொழில் செய்து வாழ வழி செய்து தந்தனர். என்னால் பாடப்பட்ட ஈட்டியெழுபது என்னும் நூலுக்கு விலையாகத் தங்கள் தலைகளைக் கொடுத்தனர். கலைவாணியின் திருவருள் துணையில், தலைகள் தத்தம் உடல்களோடு ஒட்டச்செய்து உயிர் பெறச் செய்ததால் எனக்கு ஒட்டக்கூத்தன் என்னும் பெயரையும் கொடுத்தார்கள். 13

எழுப்பெழுபது
மூலமும் உரையும் முற்றிற்று.

சிவமயம

முருகக்கடவுள் துணை

புகழேந்திப்புலவர் இயற்றிய

# திருக்கை வழக்கம்

## (மூலமும் உரையும்)

### காப்பு

#### நேரிசை வெண்பா

98 சோணாடுந் தொண்டைவளத்தொன்னாடுமாளுடைச்செவ்
வேணாடுந் தம்பியர்கை வீறுரைப்பச் - சேணாடு
காப்பான் பதம்புரப்பான் கைம்மா முகம்படைத்துக்
காப்பான் பதம்புரப்பான் காப்பு.

#### கலிவெண்பா

99 திருமான்முன் னாயபல தேவரவுண் சூரால்
உருமாறிக் கைலைவரை யுற்றே - பெருமாரிப்
பெய்யலென வோலமிடப் பெம்மா னிரங்கிநுதற்
செய்யவிழி யாறுந் திறந்தருளி - வெய்ய
அனற்பொறியா லாறா னனைத் தரவக்
கனற்பொறிக்கஞ் சுற்றெழுந்த கௌரி - புனைச்சிலம்பின்
ஒன்பான் மணிசிதற வொன்பா னுமையுருக்கள்
அன்பா யவற்றூ டவதரித்தே - யின்பாயவ்

வண்ண லருள்பெறலு மவ்வவர்பா னந்திகணப்
பண்ணவர்சூ லாகவுமை பார்த்துறுக்கி - நண்ணுறுசூல்
தோற்றா வகைசபிக்கத் தோமினவ சத்திகணா
மேற்நாராய் வேர்ப்பவதி வேயிலக்க - ராற்றலொடு
பொன்னுடையும் வாளுமுறப் போந்தமலற் போற்றியவன்



மன்னுடைய தொண்டில் வயங்கமினார் — துன்னுறுசூல்
பன்னாளு மாற்றாராய்ப் பாண்டரங்க னாற்பரைதன்
இன்னா ரருள்பெறலும் யோகுவிடுத் - தன்னார்
நிறங்கொடுபொன் னாடையொடு நீளாயுண் மீசைத்
திறங்கொடொருங் கேயொன்ப தின்ம - ரறங்குலவப்

பண்டுமா லுந்திப் பதுமத் தவதரித்த
எண்டிருக்க ணான்போ லினிதுதித்துத் - தண்டைபுனை
அம்மையப்பர் தாடொழலு மாங்கவர்மற் றீங்கிவர்தஞ்
செம்மையறி வாற்றலிசை சேர்மானக் - கொம்மையினைக்
கண்டிவரே கைக்கோட்கலனுடையா ரென்றமலைக்
கண்டர்பிரா னோரநவவ ளக்கணத்தே - மண்டு
நெடும்போர் களைகுந்த நீட்ட வவனுங்
கடும்போர் களைவாள் கைதந்து - தொடும்பணியுஞ்
சாற்றவிலக் கத்தவர்பாற் சார்ந்தவரோ டண்டரெலாம்
போற்றப் பரமனுறூஉம் பொற்பதியி - லாற்றன்மிகு

மெய்க்காவல் கொண்டுசெவ்வேள் வீறுகந்த வெற்பணுகிக்
கைக்கா வலராய்ச்சீர் காட்டுங்கை - யெய்க்காச்சீர்
வித்தகனாம் யாழ்முனிசெய் வேள்வி வருந்தகரைப்
பற்றிமுனோற் கூர்தியெனப் பண்ணுங்கை - யிற்றென்
றரும்பிரண வப்பொருளை யாயா வயற்குப்
பெருந்தளைச்சிக் கஞ்செய் பெருமைக்கை - யிருங்கபட
அன்றிற் பெயரோ னகம்பிளப்பத் தாரகன்பால்
வென்றிகொடு வீட்டுவித்த வீரக்கை - துன்றியவன்
விட்டடையும் பாசுபத வெம்படையைக்'கந்தவேள்
தொட்டடையு மாறளித்த தூய்மைக்கை - மட்டில்பல

வோதனங்க ளாலறவோர்க் குற்றதுணை யாங்கந்த
மாதனத்திற் றோடட்டி மாண்செறிகை - யோதரும்பன்
மாணோங் குதத்தியின்மேன் மாருதிபோ லேவிரைந்து
சேணோங்கித் தாவுபெருந் தீரக்கை - யேணோங்கு
நாரசிங்கன் போன்றெண்ணி னாகரைவெந் கண்டடக்கும்
வீரசிங்க னாருயிரை வீட்டுங்கை - கோரசிங்கம்
பல்லாக வாழிலங்கைப் பாதவத்தைப் பாதலத்திற்

செல்லாதிற் பச்சினந்த சேவகக்கை - யெல்லாகுஞ்
சூரன் றனைநேர் சுடர்முடியோ னென்னுமதி
வீரன் றனைவதைத்த வென்றிக்கை - தீரமுறு
25 காவலரா மெண்ணிற் கனவசுர வீரருயிர்
மேவலற மாயேந்த்ர மீதமர்கை - தாவல்
தசமுகமுங் கொண்டமரர் தம்மையெலா மோட்டுங்
கசமுகனைத் தேய்த்துவிறல் காண்கை - நிசமுனிவர்
ஆனோர்க்கு மெட்டா வருஞ்சிறையி னூடுபடூஉம்
வானோர்க் கபயம் வழங்கியகை - கானோர்க்கும்
எண்ணிழியக் கோலோச்சு மேந்தல்சூ ரன்சபையில்
விண்ணிழிச்சிங் காதனத்தில் வீறுங்கை - யண்ணலன்கோன்
முந்தெதிர்ந்தோர் நீதி மொழிந்தவனின் றேயகல
வந்தெதிர்ந்தோர் தம்மையெலாம் வாட்டியகை - சிந்து
30 கதமுகனென் றொன்னார் கவன்று புறங்காட்டுஞ்
சதமுகனைச் சாய்த்தவடல் சால்கை - யிதமணுவுங்
காணாத சூரன்பற் காவலரைக் கட்டழித்துச்
சேணாட விட்டெறிந்த திப்பியக்கை - கோணாய்த்
துடித்துயிர்கண் மாளச்சீர் துன்னுநகர் யாவும்
இடித்ததர்க ளாக்குமிடி யேய்கை - பிடித்தல்விடாச்
சோகுகளைப் பல்விதித்த தோற்றமெனச் சார்சகத்ர
வாகுகளை யோர்நொடியுண் மாய்த்திடுகை - யூகன்
கடைக்கால்வெந் நென்பைமேற் கான்சிகரி நாட்டி
நடைக்கா லனினடிக்கு நன்கை - படைக்கால்வெவ்
35 வாளிமுகம் பல்கோடி வந்துறினு மஞ்சாத
ஆளிமுகனைச்செற்ற வாட்சிக்கை - பாளியுறு
பந்தரிற்சிங் கானனற்கும் பாகடுதோ லானனற்கு
மைந்தரிரு வோரை மடிக்குங்கை - சிந்துவினில்
வாகா ரிரணியனை வாட்டித் துரத்தியுக்ர
மாகாளி யைத்தொண்டில் வைத்திடுகை - தீகான்
முகனனுப்ப வந்தவையை முன்னேத்தி நிற்ப
இகலவனை வாட்டிவைத்த வேண்கை - துகளிற்
புகலுடைய தம்பியரைப் பொன்றுவித்த கூற்றன்
விகலமுற வோலை விடுகை - பகலவர்பல்



40 லாயிரவர் போலமரேற் றாடுஞ்சூர் மைந்தர்கண்மூ
வாயிரவர் தம்முயிரு ணாற்றற்கை - மாவிரவு
கொண்டரிகண் டற்குமறக் கோபனைக்கொன் றிட்டவன்பாற்
புண்டரிகந் தன்னைக்கா புண்ணியக்கை - யண்டரிய
பாபனைவாட் கொண்டழிக்கும் பான்மையென வேபானு
கோபனைவாட் போரிலொழி கொற்றக்கை - சோபமுறு
நாட்கு விருந்தாயசிங்க னன்மகார் நூற்றுவரை
வாட்குவிருந் தாக்குவித்த வாகைக்கை - கோட்குரிய
சூரன் பதுமன் றுதிமயிலுஞ் சேவலுமாச்
சாரவேட் கூர்திதுவ சம்புரிகை - கோரஞ்செய்
45 தீங்கைப் பறித்தலெனத் திண்சூர் விமானமிசை
வேங்கைக் கொடிபறித்து வேயுங்கை - மூங்கையரின்
மன்னு சிறையிருந்த வானவரைப் பெண்டிரொடும்
பொன்னுலகி லேற்று புனிதக்கை - தன்னிகரின்
மாமனுவின் றன்குலத்து வண்டமிழு நல்லறமுஞ்
சேமமுற வந்துலகாள் செம்பொற்கை - யேமவுல
காயிழையா ராதித்த னார்குடியிற் றோன்றிடவச்
சேயிழையா ரைமணந்த செல்வக்கை - நோயிழையாச்
சீரோ டுலகாள் சிறைமுகற்குத் தம்படைகொள்
பேரோடு பெண்கொடுத்துப் பேணுங்கை - போரோடு
50 கொள்ளையினாற் காலன் குடும்பினிகொண் டுற்றிருந்த
கிள்ளையினை மீட்டபெருங் கீர்த்திக்கை - பிள்ளையினைத்
தந்தான கம்போற் றழையுங் குடநாட்டுச்
சந்தான மாமகட்குத் தந்திடுகை - யுந்து
சிலையாற் கனிகாய்க டேடிப் பதினெண்
மலையாளம் வென்றுகொணர் மாண்கை - தலைநின்
றுலாசுரர்கோன் றுன்பை யொழித்தவற்கு வெற்றி
வலாசுரனை வென்றளித்த வன்கை - யெலாசுரரும்
வீசனமாட் டிப்பணியின் மேவவினா வியமுதப்
போசனமாட் டுற்றருந்தும் பொற்புக்கை - மாசனங்கள்

55 ஓத்தவிட மென்றறவோ ரோதுமா ரூர்முதலாஞ்
சத்தவிடங் கங்கள் சமைத்திடுகை - யித்தரையில்
எண்ணில் சிவாலயங்க ளெண்ணில் குகாலயங்கள்
எண்ணில் சுராலயங்க ளேற்றமைகை - விண்ணினலார்
தம்பாலோர் நூறு தவிருமீ ராயிரவர்
பம்பாநிற் பப்பயந்த பாக்கியக்கை - சம்பாவார்
தோன்றி வதிதருஞ்சீர்த் தொண்டைநா டாதியபல்
லான்றபெரு நாடனைத்து மாளுங்கை - சான்றவராற்
போற்றப் படுங்காஞ்சிப் பொன்னகர்முன் னாப்பலவாச்
சாற்றப் படும்புரங்க டாங்கியகை - யாற்றலொடு
60 மூவேந்த ரும்புகழ மொய்யேழெண் டேயம்வென்று
வேவேவி யேதிறைகொள் வீமக்கை - தூவேறு
வேதண்ட மாதியவெண் வெற்பிற்றங் கீர்த்தியினை
மூதண்ட மெட்டவிடு மொய்ம்புக்கை - தீதண்டா
வாறு புவிமுழுதும் வாழ்விப்பா னெண்டிக்கும்
மாறுபடாச் செங்கோலை வாங்குங்கை - வீறுறுநாற்
சேனைத் தலைமை திகழ்மந்தி ரத்தலைமை
யேனைத் தலைமைபல வெய்தியகை - வானை
வசாங்க மெனவாக்கி மனுகுலத்து மோங்கித்
தசாங்க மிருவகையுஞ் சார்கை - நிசாங்கர்
65 பரவும் வடவனத்தெம் பண்ணவனோ டாடும்
உரவையைப் பொற் றாளமுரி யொண்கை - விரவுகொடு
மாலு மயனு மருவறியான் பாற்பழிக்குச்
சாலச் சிரமளித்த சால்புறுகை - வேலன்
கழல்பரவு மோர்முனியைக் கைதவஞ்செய் வேதற்
றொழலுரியா ரைக்கடிந்த தொல்கை - யுழலகிலா
நேரமுறு சம்பாதி நீண்முத்தி வீடுபெற
ஆரமுத மீந்தளித்த வாரருட்கை - யீரமுறு
சோழரா சேந்திரன்றன் றொல்பகையாய் நின்றமர்செய்
ஈழரா சன்றனைவென் றின்புறுகை - வேழம்
70 தரணியிற்பல் சூழ்கலிங்கஞ் சார்ந்தமரேற் றான்றோர்
பரணிசொலச் செற்றொழித்தல் பண்கை- யிரணியநேர்
செய்யக்கோ மாடங்கள் சேர்தேய மாளுடைய



வையக்கோன் றன்னை வதைக்குங்கை - துய்யர்செறி
குச்சரனை மச்சமுறு கோனைவெங்கண் டாங்கவர்தம்
உச்சினிமுன் னாம்பதிக ளூற்றிடுகை - நச்சரவக்
கையானி லோங்கிப்பல் காதுசெயும் வெய்யசிறைக்
கையா னுயிர்தொலைத்த கங்கணக்கை - நெய்யாடிக்
கங்க முமிழ்கணைகள் கைக்கொண் டமரில்வரும்
வங்க வரையனுயிர் வாட்டுங்கை - யெங்குநிகர்
75 இல்லா வுரங்கொண் டிறுமாந் தடல்கொளுமோர்
வல்லானை வென்றிங்பால் வைத்தருள்கை - யெல்லார்ந்த
வம்பரநே ரம்பலமா டார்தில்லை மாகாளிச்
செம்பலநேர் தேரோடச் செய்திடுகை - யும்பர்தொழு
நாவலூர் நம்பியெனா நாரையூர் நம்பியெனா
மேவுமிரு நம்பியரான் மெச்சுங்கை - சேவினன்றன்
ஆதிரைநோ றெண்ணி லடியவர்க்குப் பொன்னூறு
தீதிரிய வேயளிக்குந் தேசிகக்கை - கோதிறமிழ்க்
கோவைபல தம்பெயராற் கூறிமூ வேந்தரிடந்
தேவைபொருள் கொண்டுபணி தேடுங்கை - பூவைகர
80 வன்றொண்டன் வேதண்ட மன்னுமுனே யோகாற்ற
மன்றொண்டை யாங்குகைத்த மாண்புறுகை- யொன்றான்
பொரவிளைத்து வஞ்சவாட் புத்தகம்போ திப்பான்
வரவிளைக்கா தாருயிரீ வண்கை - யிரவிகுல
மன்னா யுலகோம்பி மாநிதியச் சாலைதிறந்
தென்னாதன் றொண்டர்கொளைக் கிட்டிடுகை
-மின்னார்பொன்
அம்பலவன் றாட்டுணையை யாயுமணி முடியாய்
நம்பியணிந் தேயுலகா ணாயகக்கை - யம்புவியில்
வெள்விடையோற் காமலரை வீழ்த்தியதும் பிக்கையறக்
கொள்விடைகூ ரும்பரசாற் கொய்திடுகை -
யெள்ளிடைநெய்
85 வாக்கி விளக்கெரிக்கும் வான்பணிமுட் டச்சிகையைத்
தேக்கி விளக்கெரித்த திண்மைக்கை - நோக்கில்
குறையை யமணர்கொளக் குண்ட மெடுத்து
நிறைபுனல்செய் திட்ட நிமலக்கை - மறைநெறியின்

மூவா யிரநூலை முல்லையா னாக்கைபுக்கு
நாவா லினிதுரைத்த நன்னயக்கை - யோவாமல்
உப்தொழிலே தென்ன வுயர்குறள்சொல் வள்ளுவற்குச்
செய்தொழில்கற்பித்தமைத்தசேட்டக்கை-மெய்தொழிற்சீர்
எய்த்தலையாச் செம்மைகொளு மேலேல சிங்கற்கோர்
மெய்த்தலைதந் தாதரித்த மேன்மைக்கை- பொய்த்தலிலார்
90 ஏத்தலைச்செய் பாண்டி யெழினாட்டுச் சங்கமுறாஉஞ்
சீத்தலைச்சாத் தற்கு நவு செம்மைக்கை- நாத்திகஞ்சொல்
திக்கார் வெருளச் சினவாளை யேந்தியொற்றிச்
செக்காருக் குற்றபழி தீர்க்குங்கை - பொய்க்காவல்
கொண்டறங்கை விட்டவ்வயன் கூருறுப்பி லுற்பனஞ்செய்
அண்டர்முனோர் போலா தமைந்துறுகை - கண்டம்
இருளனையான் வாண்முகத்தோ ரேய்ப்பவவ னுள்ளப்
பொருளனையா ரெண்புகழ்கொள் பொற்கை
-தெருள்பெருகு
விண்டலமு மண்டலமு மேனாட்செய் திட்டதவப்
பிண்ட மெனவுலகு பேசுங்கை — பண்டனைத்தும்
95 ஈகையறா மூவேந்த ரேத்தப் பனையிற்கோல்
ஓகையொடு கட்டிநட் டோ டோங்குங்கை — சாகை
உருமாறிப் பொய்யாத வொண்காஞ்சி யூடே
கருமாறிப் பாய்கற்ப கக்கை — திருமாறிப்
போவான் குலவழக்கிற் பொய்ப்பாரா ரேனுமன்றே
சாவானா யாவிவிடுந் தாட்டிகக்கை — நோவான்
மிகத்தூண்டத் தங்குலச்சீர் விட்டவரை யுந்திண்
நுகத்தூண்பாய்ச் சிக்கொல்லு நோன்கை — யகத்தூடு
வற்பழியாப் பெண்டிர் வயதா மளவுந்தங்
கற்பழியாச் சீரில்வைக்குங் கண்ணியக்கை — யிற்பழிக்கும்
100 நாண்பண்ண லன்றியெம நம்பன் றிருத்தொண்டை
யாண்பெண்ணடங்கலுஞ்செயம்பொற்கை—மாண்பண்ணு
சோதிக் கறுமுகற்குத் தோன்றா லயத்தரும
ஆதிக்கம் பெற்றே யமையுங்கை — வீதிக்குட்
சார்பாதா ரக்காட்சி தந்தருளும் போழ்தெல்லாஞ்
சீர்பாதந் தாங்கு சிரேட்டக்கை — நேர்பாத



தாடனத்தா லெம்மான் றனையவன்றன் சின்னத்தைத்
தூடனத்தாற் காய்வாற்காய் துங்கக்கை — பீடனமொன்
றில்லாச் சிவாலயச்சார் பெங்கேயங் கேமடமென்
சொல்லார் வளாகமதிற் றுன்னுங்கை — யொல்லை
105 யிருவகையி னாடு மிழிவருணர் போலா
தொருவகையி னாடு முயர்கை - தருவகையிற்
றேவரில னென்றெடுத்துச் செப்புமுற்பா வைம்பொருளுந்
தாவநெறி யாற்றருஉந் தங்கக்கை - மேவு
பிறவியினா டேகுலச்சீர் பேணி யிருமைப்
பிறவியினா டொல்காப் பெருங்கை - மறைமுதல
ஓதுவித்த கத்தொழிலை யுற்றுமடைந் தார்க்கவற்றை
ஓதுவித்து மந்தணச்சீ ரொன் றுங்கை-பூதமுனாய்
வேட்டுவித்த கத்தொழலை வேட்டுமடைந் தார்க்கவற்றை
வேட்டுவித்து நல்லிசைகொள் வேதனக்கை-சேட்டமுறும்
110 உத்தரசை வத்தீக்கை யோடுசம யாதியவாம்
முத்திறத்தீக் கைப்பரவு முத்திரைக்கை-யொத்துவரும்
ஆதுலர்பா லீத லறப்புரிந்து மற்றவர்பால்
ஏதுகொடேற் றேந்தல்கொளு மேகக்கை - போதுகொடு
வாதவூ ரெந்தைமணி வாசகமுன் னாயதமிழ்
வேதபா ராயணஞ்செய் விற்பனக்கை - யோதுபுறச்
சட்சமயம் பாறவெணில் சார்சமயம் வீதலுற
உட்சமய மாறினையு மோம்புங்கை - தட்சணமெண்
பின்னங் களையுமணி பீடுறுநீ றாதிசிவச்
சின்னங் களைவிருத்தி செய்யுங்கை - மன்னுபரற்
115 போற்று சரியைமுனாம் பொய்தீ ரொழுக்கமெனச்
சாற்றுநெறி நான்கினுளுந் தாழ்விற்கை - தேற்றமுறு
தேமங்க ளாற்றேவர் நேர்தேசிகர் முன்னாம்
நாமங்க ளையணிந்த நான்மறைக்கை - வாமவிருக்
கோதிவேட் டாகுலகை யோம்பிப் பகைகளைந்து
நீதி யரசச்சீர் நிறுத்துங்கை - மாதவர்பால்
ஒரொன்பான் புண்ணியங்க ளோயா தியற்றியமர்க்

கிரொன்பா னாயுதங்க ளேந்துறுகை - சாருங்
குடைகொடிதேர் பீலிநரை கொள்தோ ரணமுன்
படையுடையுஞ்செம்மையிற்கொள்பைங்கை-யடையலர்தம்

120 கோரக் கலிக்களத்திற் கூறுபுலித் தண்டையொடு
வீரக் கழற்கால்கொள் வெற்றிக்கை - நேரும்
அறமாதி நாற்பொருளு மாய்கலனாப் பூண்டு
மறமா தியவொழிக்கு மாக்கை - திறமாக்கோ
பாலெட்டுங் கண்ணோடப் பார்த்தருளி மன்பதைக்கோர்
நாலெட்டு மாந்தரும நாட்டுங்கை - சால
வெருணாச் சிரமமென மெய்யோம்பி யாண்டும்
வருணாச் சிரமமதி வான்கை - தெருணாடாத்.
துட்டசன ரெப்பாலுந் துன்னா தழித்தகற்றிச்
சிட்டசன ரைக்காக்குஞ் சீர்சால்கை - யட்டதிக்கும்

125 தேறுமன்ன ரென்பெயருந் தேர்தலைவ ரென்பெயரும்
கூறுமுறை யாலணிசெங் குந்தக்கை - பேறுதரு
வேதமொடு வேள்வி விழைந்தபொரு ளீட்டியான்
நீதமொடு காத்தீத னேருங்கை - பாதகநேர்
வெய்யதொழி லாமுழுதல் வேண்டா தறம்வளர்க்கும்
துய்யதொழி லாநெய்த றோயுங்கை - யுய்யநிதம்
முக்காற் பொருநியம முட்டா வகைநிறுத்தி
எக்காலு மெய்ப்பிறொழி லேற்குங்கை - சொக்கை
உரியார்க்கு மேனை யுறுகணா ளர்க்குஞ்
சரியா நெறித்தொழலுட் டாழ்கை - கரியாய்வீ

130 ஊனங்காக் கும்முயிரை யோம்புதொழ னாணவபி
மானங்காக் குந்தொழிலே மன்னுங்கை - யீனமுறு
தீண்டார்த நேயச் செறிவின்றி மெய்யறவு
பூண்டாரோ டாடுதொழில் பூணுங்கை - சேண்டருதீ
வெய்யின் மழைபனிகால் வீசான் மெலியாமே
துய்ய நிழறொழிறோய் சுத்தக்கை - யையமில்சீர்க்
கல்விபெருங் கேள்வி கனந்தனநற் றானதன்மம்
வில்விஞா னஞ்செய்தொழின் மேவுங்கை-புல்சருகால்
அங்கிகொள லன்றியுயிர்க் கண்ணாரிற்கோடெறிந்தூண்
பொங்கியுண லாந்தொழிறீர் புங்கக்கை - துங்கமில்புன்;



135 சூழ்மாந்து வோர்க்குங் குறைவிலாக் கொற்றவர்க்கும்
சூழ்மானக் காவறொழிற் சூழுங்கை - தாழ்வின்மிகு
கட்பணத்தி னுஞ்சசியாற் காண்பணமே மிக்கதெனப்
பெட்பினொடு மேற்றதொழில் பெற்றுயுங்கை - நட்பிலுறு
தென்புலத்தா ராதியர்க்குச் செய்மகமோ ரைந்தினைத்தம்
இன்புகொடு செய்தே யிமைக்குங்கை - துன்பில்
தயாவிருத்தி யெட்டாற் றகுபோக மெட்டும்
வியாதமின்றி யோங்கு விமலக்கை - நியாதமுறு
நற்குணமோர் பத்தினையு நாடிமற்றோர் பத்தாகும்
துற்குணத்தை நாடாத தொன்மைக்கை - நிற்கும்

140 உபகார மீரே ழுயிர்க்குடற்கு மோம்பி
அபகாரம் யாண்டுமெணா வங்கை — சுபகாரம்
மொய்செயற்சீர் மாறாத மொய்ம்பு கொடோர் பத்தாகும்
வைசியர்ச்சீர் மாறாத வண்மைக்கை - மெய்சிரவர்
ஏத்து முதலியரென் றேதலைமை நாமத்தாற்
றேற்றியெணாந்திக்கினுஞ்சொல்சேட்டிமைக்கை
-யாற்றலுறு
காந்த மிரண்டிற் கதிரிற் பொலிவுறூஉம்
ஏந்தல்கொடு நின்றோங்கு மேமக்கை - வேந்தனென
எண்ணி லிலக்கணங்க ளெண்ணி லிலக்கியங்கள்
எண்ணில்பிர பந்தங்க ளேய்ந்திசைகை-நண்ணெண்ணில்

145 ஆசுகவி யேமுதலா யாய்புலவ ரேத்துபுகழ்
வீசுகவி நான்கியற்றும் வித்தகக்கை - மாசின்மனக்
கண்ணெண்ணற் பாலவாங் காரியங்கள் பல்லோதும்
எண்ணெண் கலையனைத்து மேற்றுணர்கை-நண்ணுசுப
மோடுபமா யோங்கிநா லொன்பான் றனிலோதக்
கூடுகதை யைக்கவியுட் கூட்டுங்கை - நீடு
சிவாகமங்க ணாலேழுந் திண்டவரோ தவ்வெண்
நவாகமங்க ளும்பெயர்த்தீ நற்கை - திவாகரரில்
எச்சங் கமுமேத் திடைமுன் கடையெனவாம்
முச்சங்கத் தூடு முளைக்குங்கை - யுச்சமிலா

தாக்கிழாச் சிவகசிந் தாமணியை யன்றொறுத்த
சேக்கிழா னாற்பரவு தெய்வதக்கை-மாக்கீழ்முன்
கச்சியப்ப னாறிருச கத்ரகவி யுட்டமசீர்
மெச்சியொப்பின் றாகச்செய் மேட்டிமைக்கை-யுச்சிதமாம்
காவியத்திற் றீங்குபுரி கம்பன் கொடிகாளம்
ஆவியற்றுப் போகச்செ யாண்மைக்கை-மேவுபல
வன்கவிஞ ராரேனும் வாகோடு வாழுவித்துப்
புன்கவிஞப் பூடுகளை போதக்கை - யென்கவிஞத்
தன்மையிற்றென் றோர்ந்துமருட் டந்தைபோ லுள்ளுவந்து
வன்மைவெளி காட்டியாள் வாஞ்சனைக்கை
-யின்மைசொலா

தாற்றலொடு மிட்டசிர வாதனத்தி லான்றோர்கள்
போற்றவிருந் தீட்டிபுகழ் பூரணக்கை-வீற்றுசிரம்
யாவுந்தத் தம்முடலோ டாகியுயிர்ப் பான்புரிந்து
கூவுமொட்டக் கூத்தனென்பேர் கொள்ளுங்கை-மேவு
குலோத்துங்க னெங்கோன் கொடுத்தவிரு தெல்லாம்
தலோத்துங்க மாக்கொள் தருமக்கை-கலோத்துங்கம்
கண்டவெனா லின்றக் கவினீட்டிக் கைவளநூல்
கொண்டலர்தூ விச்செயச்சீர் கொட்டுங்கை-லிண்டலமேன்
மைக்கோள ரும்வாழி வாழியென வேத்திசைக்கும்
கைக்கோள ரற்புதப்பூங் கை.,





## குறிப்புரை

'திருக்கை' என்பது, 'அழகிய கை' எனவும், 'தெய்வத் தன்மை பொருந்திய கை' எனவும் பொருள்படும். 'முருகப் பெருமானுக்குத் துணைவராக வந்த நவவீரர்களாகிய வீரவாகு தேவர் முதலியோர் வழிவந்தவர்கள் செங்குந்த குலப் பெரு மக்கள் என்பதால் அவர்கள் கை, 'திருக்கை' எனப்பட்டது. அக்குல இயல்புகளையும், அவர்கள் செய்த அருஞ்செயல் களையும் புகழ்ந்து கூறுவது இந்நூல்

'பழக்க வழக்கம்' என்று உலக வழக்கு உள்ளமை அனை வரும் அறிந்தது. பழக்கம் என்பது தன்னுடைய விருப்பம் (இச்சை) இன்றியும், பிறர் அருகில் உள்ளதை நோக்காமலும் தானே நடைபெறும் செயல் ஆகும். இதனை அனிச்சைச்செயல் எனவும் கூறுவர். இது இயற்கையாகவே ஒருவரிடத்தே காணப் படுவதாம்.

வழக்கம் என்பது ஒரு கொள்கை பற்றியோ, மன உறுதி கொண்டோ, தாம் மேற்கொண்ட செயலை எந்த நாளும் விடாமல் கடைப்பிடிப்பது. செங்குந்தர் தாம் பிறர் பொருட்டு உறுதியுடன் மேற்கொண்ட செயல்கள் (வழக்கம்) இந்நூலின் கண் சிறப்பித்துக் கூறப் பெறுகின்றது.

இதன்கண் முருகப்பெருமான், வீரவாகுதேவர் முதலியோர் செய்த செயல்களும் செங்குந்தர்கள் செயல்களாகவே கூறப் படுகின்றன இந்நூலைச் செய்தவர் புகழேந்திப்புலவர் ஆவர். இவர் நளவெண்பா இயற்றியவரா? அல்லது வேறொருவரா? என்பது தெரியவில்லை. இந்நூல் கலிவெண்பாவினால் இயற்றப்பட்டதாகும்.

### காப்பு
### நேரிசை வெண்பா

**சோணாடும் தொண்டைவளத் தொல்நாடும் ஆளுடைச்செவ்
வேணாடும் தம்பியர்கை வீறுரைப்பச் - சேணாடு
காப்பான் பதம்புரப்பான் கைம்மா முகம்படைத்துக்
காப்பான் பதம்புரப்பான் காப்பு.**

பொருள்:

சோழநாட்டையும், வளம் பொருந்திய தொண்டை நாடு என்னும் பழைமையான நாட்டையும் தன் ஆளுகைக்குள் உடைய, செவ்வேள் எனும் முருகப்பெருமான் விரும்பும் தம்பியர்களாகிய செங்குந்தர்களுடைய கைகளின் தனிச் சிறப்பை எடுத்து உரைப்பதற்கு, தேவலோகத்தைக் காக்கும் இந்திரனுடைய பதவியை நிலைநிறுத்திக் காப்பவரும், மற்றும் அனைவரையும் யானைமுகம் படைத்துக் காப்பவருமாகிய விநாயகப் பெருமானுடைய திருவடிகளே எனக்குப் பாது காவலாகும். (வீறு - மற்றவர், மற்றவைகளுக்கு இல்லாத சிறப்பு)

### கலிவெண்பா

1 முதல் 14 கண்ணிகள் வரை, திருமால் முதலிய தேவர்கள் கயிலையில் இறைவன்முன் சென்று சூரபதுமனுடைய கொடுமைகளை எடுத்துரைத்து முறையிட, பெருமான் திருவருள்புரிந்து முருகப்பெருமானையும், நவவீரர்களையும் தோற்றுவித்தது முதலிய கந்தபுராணச் செய்திகள் கூறப் படுகின்றன.

மங்கலச் சொல்லால் நூல் தொடங்குதல் வேண்டும் என்னும் பண்டையோர் மரபின்படி இந்நூல் 'திரு' என்று தொடங்குகிறது.

### நூல்

1. **திருமால்முன் னாயபல தேவர்அவுண் சூரால்**
   **உருமாறிக் கைலைவரை உற்றே.**

திருமால் பிரமன் இந்திரன் முதலிய தேவர்கள் அனைவரும், அவுணனாகிய சூரபதுமனால் பட்ட துன்பத்தால் மிகவும் வருத்தமடைந்து இளைத்து உருவம்வேறுபட்டு, சிவபெருமான் வாழுகின்ற கயிலைமலைக்குச் சென்று,

**— பெருமாரி**

2. **பெய்யலென ஓலமிடப் பெம்மான் இரங்கிநுதல்**
   **செய்யவிழி ஆறும் திறந்தருளி.**



இறைவனிடம் மழை பெய்வது போலக் கூக்குரலிட்டுத் தம் குறைகளைச் சொல்ல, அப்பெருமான் கருணையுடன் தான் ஆறுமுகம் உடையவனாகி, அந்த ஆறுமுகங்களிலும் உள்ள சிவந்த நெற்றிக்கண்களைத் திறந்தருளி,

(ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோ ஜாதம் என்னும் ஐந்து முகங்களுடன் 'அதோமுகம்' என்ற ஆறாவது திருமுகத்தையும் கொண்டனர் என்பது தோன்ற ஆறும் என்றார். ஆறும் - உம்மை முற்றும்மை)

3. **— வெய்ய**
   **அனற்பொறியால் ஆறா னனனைத் தரஅக்**
   **கனற்பொறிக்கஞ் சுற்றெழுந்த கௌரி.**

வெப்பம் மிகுந்த நெருப்புப்பொறிகளால் ஆறுமுகனைத் தோற்றுவித்தருள, அந்த நெருப்புப் பொறிகளின் வெம்மைக்கு ஆற்றாது எழுந்து ஓடிய உமையம்மை,

(ஆனனம் - முகம்; ஆறு - ஆனன் ஆறுமுகக் கடவுள்)

4. **—புனைச் சிலம்பின்**
   **ஒன்பான் மணிசிதற, ஒன்பான் உமைஉருக்கள்**
   **அன்பாய் அவற்றா(டு) அவதரித்தே.**

கால்களில் அணிந்திருந்த அழகிய சிலம்புகள் மோதியதனால் அவை உடைந்து அவற்றினின்றும் முத்து, பவளம், மாணிக்கம், முதலிய நவமணிகள் சிந்த, அம்மணிகளில் உமாதேவியின் சாயல் பொருந்தியதனால், அவைகளிலிருந்து ஒன்பது பெண்கள் தோன்றி, (புனை - புனைவு; புனைவை உடையது சிலம்பு என்க. 'அவற்றாடு' என்பதை, 'சிதற' என்பதன் பின்னே கூட்டுக.)

5. **—இன்பாய்அவ்**
   **அண்ணல் அருள்பெறலும் அவ்வவர்பால் நந்திகணப்**
   **பண்ணவர்கூ லாகஉமை பார்த்துறுக்கி**

சிவபெருமானுடைய திருநோக்கால் அருள்பெற்றவுடன், சிவகணத்தவர் அப்பெண்களின் கருவில்சென்று சேர, அதைக் கண்ட உமாதேவியார் கோபித்து,

(பண்ணவர் - தேவர்; உறுக்கி - கோபித்து;)

6. —நண்ணுறுசூல்
**தோற்றா வகைசபிக்கத் தோமில்நவ சக்திகள், நாம்**
**ஏற்றாராய் வேர்ப்பஅதி லேஇலக்கர்.**

'நீவிர் கருவுயிர்க்காமல் பலநாள் இருக்கக் கடவீர்' எனச் சபிக்க, அச்சாபத்தை ஏற்ற குற்றமற்ற அவ்வொன்பது மகளிரும் அச்சம் கொண்டதனால் உடல்வியர்க்க, அவ் வியர்வையிலிருந்து ஓர் இலட்சம் வீரர்கள்,

(சூல் - கருப்பம்; தோம் இல்- குற்றமற்ற; நாம்-அச்சம்; நாம் ஏற்றாராய்-அச்சம்கொண்டவர்களாய்)

7. — ஆற்றலொடு
**பொன்னுடையும் வாகுமுறப் போந்(து)அமலற் போற்றிஅவன்**
**மன்னுடைய தொண்டில் வயங்க.**

வீரம் மிக்கவர்களாய் பொன்னாடை தரித்துக் கையில் வாளுடன் தோன்றிச் சிவபெருமானை வணங்கி, அவன் கட்டளைப்படி முருகப்பெருமானுக்குரிய தொண்டுகள் செய்து நிற்க,

(அமலன் - மலம் (குற்றம்) அற்ற இறைவன்; 'மகன்' என்பது இடைக்குறைந்து, 'மன்' என நின்றது)

8. மினார் — துன்னுறுசூல்
**பன்னாளும் ஆற்றாராய்ப் பாண்டரங்க னால்பரைதன்**
**இன்னார் அருள்பெறலும், யோகுவிடுத்(து),**

மின்னற் கொடிபோன்ற அப்பெண்கள், நீண்ட நாட்கள் கருவினைச் சுமக்கமாட்டாராய் வருந்த, சிவபெருமான் கூறியத னால் இறைவி அவர்களுக்கருள் புரிய, கருவிலே யோகத்தில் இருந்த அச்சிவகணத்தவர் யோகம்நீங்கி,



9. —அன்னார்
**நிறங்கொடுபொன் ஆடையொடு நீளாயுள் மீசைத்**
**திறங்கொடு(ஒ)ருங் கேஒன்ப தின்மர்,**

தங்களைக் கருவில் தாங்கிய வைரம்,முத்து, பவழம் முதலிய தாயரின் நிறத்தைத் தாம் பெற்று, நீடிய வாழ்நாளும் பொன்னாடையும், மீசையும், ஆற்றலும் பெற்று வீரவாகு முதலிய ஒன்பதின்மர் (நவவீரர்கள்)

10 — அறங்குலவப்
**பண்டுமால் உந்திப் பதுமத் தவதரித்த**
**எண்திருக் கணான்போல் இனிதுதித்து,**

தருமம் செழிக்க, முன்னொருகாலத்தில் திருமாலின் உந்தித் தாமரையில் தோன்றிய பிரமதேவன்போல் (மானிடர் தோற்றம் போலன்றி) அப்பெண்களின் உந்திவழியே ஒருங்கே நன்கு அவதரித்து. (முன்கண்ணியில் உள்ள 'ஒருங்கே' என்பதை இங்குச்சேர்க்க).

11 —தண்டை புனை
**அம்மையப்பர் தாள்தொழலும் ஆங்கவர்மற்(று) ஈங்குஇவர்தம்**
**செம்மைஅறி(வு) ஆற்றல்இசை சேர்மானக் -கொம்மையினைக்**

வீரக்கழலணிந்த அம்மையப்பராகிய சிவபெருமான்திருவடி களை வணங்கியவுடன், அப்பெருமான் இவர்களுடைய அறிவு, திறமை, புகழ், மானம் இவற்றின் பெருமைகளை, (இசை - புகழ்; மானம் - பெருமை; தன்மதிப்பு; கொம்மை - பெருமை)

12 **கண்(டு)இவரே கைக்கோள் கலனுடையார்என்(று)அமலைக்கு**
**அண்டர்பிரான் ஓதஅவள் அக்கணத்தே.**

'இவர்களே படைக்கலன்களை (ஆயுதங்களைக்) கைக் கொள்ளுதற்குரியவர்' என்று உமாதேவியிடம் சிவபெருமான் எடுத்துரைக்க, அப்பெருமாட்டி அப்பொழுதே (அமலை - இறைவி; அமலன் × அமலை; அண்டர்பிரான் - தேவர் தலைவன்)

13 —மண்டு

**நெடும்போர் களைகுந்தம் நீட்ட அவனும்**
**கடும்போர் களைவாள்கை தந்து.**

நெருங்கிய போரை வெல்லுகின்ற செங்குந்தப் படையை எடுத்துக் கொடுக்க, இறைவனும் பகையைப் போக்குகின்ற வாளாயுதத்தைத்தந்து,

14 — தொடும் பணியும்

**சாற்றஇலக் கத்தவர்பால் சார்ந்தவரோ[டு] அண்டரெலாம்**
**போற்றப் பரமன்உறூஉம் பொற்பதியில்.**

செய்யவேண்டிய பணிகள் இவை எனக்கூறவும், முன்பே உள்ள இலக்கம் வீரருடன் சேர்ந்து, தேவர்கள் அனைவரும் போற்றும் படி சிவபெருமான் தங்கியுள்ள கயிலையில் (தொடும்பணி - செய்யவேண்டிய செயல்கள்; அண்டர் - தேவர்)

15 —ஆற்றல்மிகு

**மெய்க்காவல் கொண்டுசெவ்வேள் வீறுகந்த வெற்பணுகிக்**
**கைக்கா வலராய்ச்சீர் காட்டுங்கை.**

(இதுமுதல் கைகள் செய்த செயல்கள் கூறப்படுகின்றன).

வீரம்மிக்க வலிமையோடு முருகன், தனிச்சிறப்போடு அமர்ந்திருக்கும் கந்த வெற்பில் எப்பக்கத்துக்கும் காவல்புரியும் பணியைச் சிறப்பாகச் செய்துவிளங்கும் கை. (தனிச்சீரை லகர ஒற்று நீக்கி அலகிடுக).

16 — எய்க்காச்சீர்

**வித்தகனாம் யாழ்முனிசெய் வேள்வி வருந்தகரைப்**
**பற்றிமுனோர்க்[கு] ஊர்தியெனப் பண்ணும்கை.**

குறையாத இசையில் வல்ல நாரதமுனிவர் செய்த யாகத்தில் தோன்றிய ஆட்டினைப் பிடித்துவந்து தங்கள் முன்னவனாகிய முருகனுக்கு வாகனமாக ஆக்கிய கை,

(இச் செயல் வீரவாகுதேவர் செய்தது; கந்தபுராணத்தில் சொல்லப்பட்டது.)



17 —இற்(று) என்(று)

**அரும்பிரண வப்பொருளை ஆயா அயற்குப்**
**பெருந்தளைச்சிக் கஞ்செய்பெரு மைக்கை.**

'ஓம்' என்னும்பிரணவத்தின் பொருள் இன்னது என்று ஆய்ந்தறியாத பிரமதேவனை விலங்கிட்டுச் சிறையில் அடைத்த பெருமையுடைய கை.

(ஆயா - ஆராயாத; அயன் - பிரமன்; இற்று - இத்தன்மையுடையது. கஞ்செய்பெரு' என்னும் சீரினை யகர ஒற்று நீக்கி அலகிடுக.)

18 — இருங்கபட

**அன்றில் பெயரோன் அகம்பிளப்பத் தாரகன்பால்**
**வென்றிகொடு வீட்டுவித்த வீரக்கை.**

பெரிய வஞ்சனையுடைய 'கிரவுஞ்சன்' என்னும் பெயரை உடைய அசுரன் கொண்டிருந்த மலைவடிவத்தைப் பிளந்து, அதனருகில் இருந்த மாயாபுரியில் வாழ்ந்த தாராகாசுரனை வெற்றிகொண்டு அவனை அழித்த வீரம் பொருந்திய கை.

('அன்றில்' — என்பது கிரவுஞ்சம் என்னும் பறவையாக இங்குச் சொல்லப்பட்டது.)

19 — துன்றிஅவன்

**விட்டடையும் பாசுபத வெம்படையைக்கந்தவேள்**
**தொட்டடையு மா[று] அளித்த தூய்மைக்கை.**

அத் தாருகாசுரன் போர்க்களத்தில் முருகன் மேலேவிய பாசுபதாஸ்திரத்தைப்பற்றி முருகப்பெருமானிடம் அளித்த தூய்மையுடைய கை. ('விட்டு' என்பதை 'விட' எனத்திரிக்க; துன்றி - நெருங்கி)

20 — மட்டில்பல

**ஓதனங்க ளால்அறவோர்க்(கு) உற்றதுணை யாம்கந்த**
**மாதனத்தில் தோள்தட்டி மாண்செறிகை.**

அளவில்லாத பலஉணவு வகைகளை முனிவர்களுக்கு அளித்து அவர்களுக்குத் துணையாக இருந்த கந்தமாதன மலையில், தோள் தட்டி ஆரவாரம் செய்திருந்த பெருமை பொருந்திய கை.

(மட்டில் - மட்டுஇல் - அளவுஇல்லாத; ஓதனம் - சோறு; அறவோர் - முனிவர்; 'மட்டில்பல' — என்பதையும் 'ஆற்றல் மிகு என்றதுபோலக் காய்ச்சீராக்குக )

21 —ஓதரும்பல்

**மாணோங்(கு) உததியின்மேல் மாருதிபோ லேவிரைந்து**
**சேணோங்கித் தாவுபெருந் தீரக்கை.**

சொலற்கரிய பல சிறப்புக்களையுடைய கடல்மீது அனுமனைப் போல விரைந்து ஆகாயவழியாகத் தாவிச்சென்ற மன வலிமையுடைய கை.

(மாண் - சிறப்பு; உததி - கடல்; மாருதி - அனுமன்; இது வீரவாகுதேவர் கந்தமாதனத்திலிருந்து கடல் தாவி வீரமகேந்திரபுரம் சென்றதைக் குறித்ததாகும். இதைப்பாடிய ஆசிரியர் அனுமனிடம் பக்தியுள்ளவர் போலும்! 'இராமாயாணம் காலத்தால் பிற்பட்டது.' என்பதே புராணங்கள் கூறுவது).

22 —ஏண்ஒங்கு

**நாரசிங்கன் போன்றெண்ணில் நாகரைவெந் கண்டடக்கும்**
**வீரசிங்கன் ஆருயிரை வீட்டும்கை.**

வலிமை மிகுந்த நரசிங்க வடிவுகொண்ட திருமால்போல, அளவற்ற தேவர்களை புறகிடச்செய்து அடக்கிய சூரபதுமனுடைய சேனைத்தலைவனும் இலங்கையைக் காவல் செய்திருந்தவனும் ஆகிய வீரசிங்கனுடைய உயிரைப்போக்கிய கை.

(ஏண் - வலிமை; நாகர் - தேவர்; வெந் கண்டு - முதுகிடச்செய்து இங்கும் வீரவாகுதேவருக்கு நரசிங்கத்தை உவமையாகக் கூறினார்)

23 —கோரசிங்கம்

**பல்லாக வாழிலங்கைப் பாதவத்தைப் பாதலத்தில்**
**செல்லாநிற் பச்சினந்த சேவகக்கை.**

கொடிய பல சிங்கங்கள் வாழ்வதற்கிடமான, இலங்கையிலுள்ள மலையைக் கோபத்துடன் கடலில் ஆழ்த்திச்சென்ற ஆண்மையுடைய கை.



(பாதவம் - மரம். கீழ்நோக்கி வேர் விடுவது என்பது பொருள். அஃது இங்கு மலையைக் குறித்தது )

24 —எல்லாரும்

**சூரன் தனைநேர் சுடர்முடியோன் என்னும்அதி**
**வீரன் தனைவதைத்த வென்றிக்கை.**

பெருமைநிறைந்த சூரியனை நிகர்த்த, ஒளிபொருந்திய மகுடம் தரித்த அதிவீரனை அழித்த வெற்றியுடைய கை. (அதிவீரன் யாளிமுகனுடைய குமாரன். இவன் இலங்கை வீரவாகுதேவரால் கடலில் ஆழ்வது கண்டுஅவருடன் போரிட்டு உயிரிழந்தவன்)

25 — தீரம்உறு

**காவலராம் எண்ணில் கனஅசுர வீரர்உயிர்**
**மேவலற மாயேந்த்ர மீதமர்கை.**

மகேந்திரபுரியைக் காவல்செய்த பெருமையுடைய எண்ணற்ற அசுர வீரர்களுடைய உயிரை மாய்த்து அந்த நகரத்தின்மேல் அமர்ந்து நோக்கிய கை. (இதுவும் வீரவாகுதேவர் செய்தது. மேவல்அற - பொருந்துதல் நீங்க, விட்டுப்போக)

26 —தாவல்

**தசமுகம் கொண்டமரர் தம்மைஎலாம் ஓட்டும்**
**கசமுகனைத் தேய்த்துவிறல் காண்கை.**

பரந்திருக்கின்ற பத்துத்திசைகளிலும் பார்த்துத் தேவர்களையெல்லாம் வெருட்டி ஓட்டுகின்ற கயமுகாசுரனை அழித்து வெற்றி பொருந்திய கை.

(தாவல் - பரத்தல்; தசமுகம் - (எட்டுத்திசைகளுடன் மேல் (வானம்) கீழ் (பூமி) என்பவை சேரப்) பத்துத்திசை; விறல் - வெற்றி)

27 —நிசமுனிவர்

**ஆனோர்க்கும் எட்டா அருஞ்சிறையி னூடு படுஉம்**
**வானோர்க்(கு) அபயம் வழங்கிய கை.**

உண்மையான முனிவர்களும் தம் ஞானப் பார்வையால் அறிந்துகொள்ள இயலாதபடி கொடுஞ்சிறையில் வருந்தியிருந்த

தேவர்களைக் கண்டு அவர்களுக்கு அபயம் (ஆறுதல்) அளித்த கை.

(அபயம் அளித்தவர் வீரவாகுதேவர்)

28 —கானோர்க்கும்

எண்இழியக் கோலோச்சும் ஏந்தல்சூ ரன்சபையில்
விண்இழி சிங் காதனத்தில் வீறும்கை.

காட்டில்தவம்செய்யும் முனிவர்களும் தம்எண்ணத்தில்தாழ்வு படுமாறு கொடுங்கோல் செலுத்தும் சூரபதுமன் சபையில், கண்டோர் வியக்குமாறு வானிலிருந்து ஒளிமயமாக வந்த அரியணையில் சிறப்புடன் வீற்றிருந்த கை.

(கானோர் - காட்டில் தவம்செய்யும் முனிவர்; எண் - எண்ணம்; வீரவாகுதேவர் தூதில் சிங்காதனம் விண்ணில் இருந்து இறங்கியது. விண்இழி - வானத்திலிருந்து இறங்கிய)

29 — அண்ணலன்கோன்

முந்தெதிர்ந்தோர் நீதி மொழிந்[து]அவண்நின் றேஅகல
வந்தெதிர்ந்தோர் தம்மையெலாம் வாட்டிய கை.

பகைவனும் அரசனுமாகிய சூரபதுமனுக்கு முன்னின்று நீதிகளைச் சொல்லி, அங்கிருந்து புறப்பட, தம்மை எதிர்த்தவர்களையெல்லாம் அழித்த வீரமுடைய கை.

(அண்ணல் - அண்ணுதல் - நெருங்குதல்; அண்ணலன் - நெருங்காதவன், பகைவன்; அவண்நின்று - அவ்விடத்தை விட்டு)

30 — சிந்து

கதமுகன்என்[று] ஒன்னார் கவன்றுபுறம் காட்டும்
சதமுகனைச் சாய்த்தஅடல் சால்கை

'கோபம் பொழியும் முகத்தை உடையவன்' என்று பகைவர்கள் வருந்திப் புறங்கொடுத்து ஓடுகின்ற 'சதமுகன்' என்னும் அசுரனை அழித்த வெற்றியுடைய கை. (வீரவாகுதேவர் சூரபதுமன் அவையிலிருந்து வெளியேறியபோது, அவரைக் கட்டிக்கொணருமாறு சூரனால் அனுப்பப்பட்டவன் சதமுகன் என்பவன்)



(சிந்து(தல்) - பொழிதல்; கதம்-கோபம்; கவன்று-வருந்தி; அடல் - வெற்றி;)

31 — இதம்அணுவும்

காணாத சூரன்பல் காவலரைக் கட்டழித்துச்
சேணாட விட்டெறிந்த திப்பியக்கை.

நன்மை என்பது அணுவளவும் அறியா சூரபதுமனுடைய எண்ணற்ற காவலர்களின் உறுதியைக் குலைத்து அவர்களை வானத்தில் சுழலுமாறு எடுத்து வீசிய மேலான கை.

(இதம் - நன்மை; சேண்ஆட - ஆகாயத்தில் சுழல; திப்பிய - திவ்விய - மேலான)

32 —கோணாய்த்

துடித்துயிர்கள் மாளச்சீர் துன்னுநகர் யாவும்
இடித்ததர்கள் ஆக்குமிடி ஏய்கை.

உயிர்கள் மாறுபட்டுத் துடித்து இறக்குமாறு சிறப்புப் பொருந்திய வீரமகேந்திரபுரி முழுவதையும் இடித்து வழியாக (சமநிலமாக) ஆக்கிய இடிமுழக்கத்தை ஒத்திருக்கும் கை.

(கோணாய் - மாறுபட்டு; சீர் துன்னு-சிறப்புப்பொருந்திய; அதர் - வழி)

33 —பிடித்தல் விடாச்

சோகுகளைப் பல்விதித்த தோற்றமெனச் சார்சகத்ர
வாகுகளை ஓர்நொடியுள் மாய்த்திடுகை.

பற்றிக்கொண்டவர்களை விட்டு நீங்காத பேய்களுக்குப் பல் அமைத்தது போலத் தோற்றம்கொண்டு வந்த சகத்திரவாகுகளை இமைப்பொழுதில் அழித்த கை.

(சோகு - பேய்; சார் - வந்த; இத்தனிச்சீரிலும் லகர ஒற்று அலகு பெறாது நின்றது; சகத்திரள் - ஆயிரம் தோள்களை உடைய அசுரர்கள்.

34 —பூகன்

கடைக்கால்வெந் நென்பைமேற் காண்சிகரிநாட்டி
நடைக்கா லனில்நடிக்கும் நன்கை.

படைத்தலைவர்களாக வந்து போரிட்டவர்களுடைய முதுகு எலும்பை எடுத்துப் பலரும் காணுமாறு மாளிகைக் கோபுரத்தில் பொருத்திவைத்து, எமனைப்போல நின்று ஆனந்தக் கூத்தாடிய நற்கை.

(யூகன் - படைத்தலைவன்; கடைக்கால் - கடைசிநேரம்; வெந்-வெரிந் முதுகு; சிகரி - கோபுரம்; காலனில் - எமனைப் போல)

35 — படைக்கால்வெவ்

**வாளிமுகம் பல்கோடி வந்துறினும் அஞ்சாத**
**யாளிமுக னைச்செற்ற ஆட்சிக்கை.**

போர்க்களத்தில்கோடிக்கணக்கான அம்புகள் தன்மீது வந்து தைத்தாலும் அதற்கு அஞ்சாத யாளிமுகன் (சூரபதுமன் கட்டளைப்படி இலங்கையை ஆண்டவன்) என்பவனையழித்த ஆண்மை உடைய கை.

(வாளிமுகம் - அம்பின் முனை; செற்ற - அழித்த)

36 —பாளியுறு

**பந்தரிற்சிங் கானனற்கும் பாகடுதோ லானனற்கும்**
**மைந்தரிரு வோரை மடிக்குங்கை.**

விதானச்சீலை கட்டிய பந்தரில் சிங்கமுகன், தாரகன் ஆகிய இருவரது மைந்தர்களையும் மாய்த்த கை.

(பாளி - மேல்கட்டு; விதானத்துணி; சிங்கானனன் - சிங்கமுகன்; பாகடு - பாகனை அழிக்கும்; தோல் - யானை; தோல் ஆனனன் - யானை முகமுடைய தாருகாசுரன்)

37 —சிந்துவினில்

**வாகா ரிரணியனை வாட்டித் துரத்திஉக்ர**
**மாகாளி யைத்தொண்டில் வைத்திடுங்கை.**

போர்க்களத்தில் எதிர்த்துப் போரிட்ட சூரபதுமன் மகனான அழகுமிக்க இரணியனைத் துன்புறுத்திக் கடலில் ஒளிந்து கொள்ளுமாறு செய்து, அவன் வழிபட்ட கோபமுடைய காளி தேவியைத் தனக்கு ஏவலாகத் தொண்டு செய்யுமாறு ஆக்கிக் கொண்ட கை.



சிந்து - கடல்; வாகார் - அழகுமிகுந்த; உக்ர - கோபமுடைய)

38 — தீகால்

**முகனனுப்ப வந்தஐயை முன்னேத்தி நிற்ப**
**இகலவனை வாட்டிவைத்த ஏண்கை.**

அக்னிமுகன் கட்டளைப்படி போரிட வந்த துர்க்கையை அடக்கி அவள் தனக்கு முன்னே அடங்கிப் புகழ்ந்து நிற்குமாறு செய்து, மாறுபாடுகொண்ட அவ்வக்கினி முகனைத்துன்புறுத்தி அழித்த பெருமையுடைய கை.

(தீகால் முகன் - நெருப்பை உமிழும் அக்கினிமுகன்; ஐயை -துர்க்கை; ஏத்திநிற்ப - புகழ்ந்து நிற்க; ஏண் - பெருமை)

39 —துகளில்

**புகலுடைய தம்பியரைப் பொன்றுவித்த கூற்றன்**
**விகலமுற ஓலை விடுங்கை.**

குற்றமற்ற, புகழ்ந்து சொல்லுதற்குரிய தம்பியராகிய இலட்சம் வீரர்களது உயிர்களைக்கொண்டு சென்ற இயமன் வருத்தப் படுமாறு அவனுக்கு ஓலையெழுதி அனுப்பிய கை.

(துகள்இல் - குற்றமற்ற; புகல் - புகழ்ந்து சொல்லுதல் (வெற்றி) பொன்றுவித்த - அழித்த; விகலமுற - வருத்தமடையும்படி)

40 —பகலவர்பல்

**லாயிரவர் போல்அமர்ஏற் றாடுஞ்சூர் மைந்தர்கள்மூ**
**வாயிரவர் தம்முயிர்உண் ஆற்றற்கை.**

பலசூரியர்கள் ஒன்று சேர்ந்து வந்ததுபோல ஒன்றாகக்கூடி வந்து போரிட்ட சூரபதுமனுடைய மைந்தர்கள் மூவாயிரவர் உயிரையும் போக்கிய வலிமையுடைய கை.

41 —மாவிரவு

**கொண்டரிகண்டாற்கும்அறக்கோபனைக்கொன்றிட்டவன்பால்**
**புண்டரிகம் தன்னைக்கா புண்ணியக்கை.**

குதிரைகளைக்கொண்டு போர் நடத்தி அக்கினிமுகனுக்குத் துணையாக வந்த தருமகோபனைக் கொன்று, அவனிடத்தில்

இருந்த புண்டரிகம் என்னும் கிழக்குத்திசைக் காவல் யானையைக் காத்துப் புண்ணியம் செய்த கை.

(மா-குதிரை; அரி-அக்னி; அரிகண்டன்-அக்கினிமுகன்; புண்டரிகம்—கீழ்த்திசை யானையின் பெயர். அறக்கோபன்-தருமகோபன் (சூரனின் அமைச்சன்)

42 —அண்டரிய

**பாபனைவாள் கொண்டழிக்கும் பான்மையென வேபானு**
**கோபனை வாட் போரிலொழி கொற்றக்கை.**

மிகக்கொடியபாவம் செய்பவனை வாளால் அழிப்பது போல, பானுகோபனை வாட்போரில் அழித்த வெற்றியுடைய கை.

(அண்டரிய - நெருங்க இயலாத; பாபன் - பாவம் செய்பவன்; பான்மை - தன்மை;)

43 —சோபமுறு

**நாட்குவிருந் தாயசிங்கன் நன்மகார் நூற்றுவரை**
**வாட்குவிருந் தாக்குவித்த வாகைக்கை.**

ஒளிபொருந்திய ஒருநாளில் (காலனுக்கு) விருந்தான சிங்கமுகனுடைய புதல்வர்கள் நூறுபேரை வாளால் மடியச் செய்து வெற்றி பெற்ற கை.

(சோபம் - ஒளி; மகார் - பிள்ளைகள்; வாகை- வெற்றி.)

44 — கோட்குரிய

**சூரன் பதுமன் துதிமயிலும் சேவலுமாய்ச்**
**சாரவேட் கூர்திதுவ சம்புரிகை.**

சூரன்,பதுமன் இருவரும் இரு பிரிவுகளாகப் பிரிந்து சேவலும் மயிலும் ஆகிவர மயிலை முருகப்பெருமான் ஏற்றுக்கொள்ளக் கூடிய வாகனமாகவும், சேவலைக் கொடியாகவும் செய்தளித்த கை.

(கோட்கு - கொள்ளுவதற்கு; ஊர்தி - வாகனம்; துவசம் - கொடி.)

45 — கோரம்செய்

**தீங்கைப் பறித்தலெனத் திண்சூர் விமானமிசை**
**வேங்கைக் கொடிபறித்து வேயும்கை.**



அழிவுசெய்கின்ற தீமையைக் களைவதுபோல, வல்லமை உடைய சூரபதுமன் தேர்மேல் இருந்த புலிக்கொடியைப் பறித்துத் தங்களுடையதாக்கிக் கொண்ட கை.

(கோரம் - அழிவு; வேயும் - அணியும்:)

46 —மூங்கையரின்

**மன்னு சிறையிருந்த வானவரைப் பெண்டிரொடும்**
**பொன்னுலகில் ஏற்றும் புனிதக்கை.**

ஊமைகளைப் போன்று (எதையும் எதிர்த்துப் பேசாமல்) சூரபன்மனது சிறையில் இருந்த தேவர்களைச் சிறைமீட்டு அவர்தம் மகளிருடன் மீண்டும் தேவலோகத்தில் குடியேற்றிய தூய்மையான கை.

(மூங்கை - ஊமை;)

47 —தன்னிகரில்

**மாமனுவின் தன்குலத்து வண்தமிழும் நல்லறமும்**
**சேமுற வந்துலகாள் செம்பொற்கை.**

மனுமரபாகிய சோழகுலத்தில், வளப்பமுள்ள தமிழ் மொழியும்நல்ல தருமங்களும் நிலைக்குமாறு தோன்றி இந்த உலகத்தை ஆளுகின்ற சிவந்த பொன் போன்ற கை.

(மாமனுவின் குலம் - சோழகுலம்; சேமமுற - பாதுகாப்பாக இருக்க; இந்த 47 கண்ணிகளிலும் கந்தபுராண வரலாறுகளே கூறப்பட்டன.)

48 —ஏமஉல[கு]

**ஆயிழையார் ஆதித்த னார்குடியில் தோன்றிடஅச்**
**சேயிழையா ரைமணந்த செல்வக்கை.**

பொன்னுலகப்பெண்கள் சோழர்குலத்தில் பிறந்துவர, அப்பெண்களை மணந்துகொண்ட செல்வம் பொருந்திய கை.

(ஏமம் - பொன்; ஏமஉலகு - பொன்னுலகு; தேவர் உலகம்; ஆயிழையார், சேயிழையார் - பெண்கள்; ஆதித்தன் - சூரியன்; சோழர்கள் 'சூரியகுலம்' என்றும், 'அக்குலத்தில் முசுகுந்தன் முதலானவர் தோன்றினர்' என்றும் வரலாறு கூறப்படும்)

49 —நோய்இழையாச்

**சீரோ டுலகாள் சிறைமுகற்குத் தம்படைகொள்**
**பேரோடு பெண்கொடுத்துப் பேணுங்கை.**

உலகத்திற்குத் துன்பம் செய்யாது சிறப்புடன் ஆண்டுவந்த முசுகுந்தச் சக்கரவர்த்திக்குக் 'குந்தன்' என்ற பெயரோடு வீரவாகுதேவரின் மகள் சித்திரவல்லியை மணம் செய்து கொடுத்துக் காப்பாற்றிய கை.

(நோய் - துன்பம்; இழைத்தல் - செய்தல்; சிரை - குரங்கு; சிரைமுகன் - முசுகுந்தன்; தம் படைகொள்பேர் 'குந்தம்' என்பது.)

50 —போரோடு

**கொள்ளையினால் காலன் குடும்பினிகொண் டுற்றிருந்த**
**கிள்ளையினை மீட்டபெருங் கீர்த்திக்கை.**

உயிர்களைக் கொள்ளை கொள்ளும் இயமன் மனைவி கொண்டு சென்றிருந்த, சித்திரவல்லி வளர்த்த கிளியை, போர் செய்து மீட்டுக் கொடுத்த புகழுடைய கை.

(காலன் - இயமன்; குடும்பினி - மனைவி; கிள்ளை - கிளி; 'போரோடுமீட்ட' - எனக்கூட்டுக.)

51 —பிள்ளையினைத்

**தந்தான் அகம்போல் தழையும் குடநாட்டுச்**
**சந்தான மா, மகட்குத் தந்திடும்கை.**

சித்திரவல்லிக்கு மகம்பேற்றைஅளித்த முசுகுந்தச்சக்கரவர்த்தி யின் விருப்பப்படி சேரநாட்டில் இருந்த சந்தான மாங்கனியைக் கொண்டு வந்து இராசமாதேவியாகிய அவளுக்கு மகிழ்ச்சி யுடன் அளித்த கை.

(தழையும் - களிக்கின்ற; குடநாடு - சேரநாடு; சந்தான மா - பிள்ளைப் பேற்றினைத் தருகின்ற மாங்கனி. இக்கனி தரும் மரம் சேரநாட்டில் மிக்க காவலுடன் இருந்தது எனவும், அதனை அரிதின் முயன்று, வீரவாகு தேவருடையமகள் பொருட்டு கொண்டுவந்து கொடுத்த சிறப்பு இக்கைக்கு உண்டு எனவும் கூறப்பட்டது )



52 —உந்து

**சிலையால் கனிகாய்கள் தேடிப் பதினென்**
**மலையாளம் வென்று கொணர் மாண்கை.**

அம்பைச் செலுத்துகின்ற வில்லாற்றலினால் சித்திரவல்லி விரும்பிய மற்ற காய்கனிகளைக் கொடுந் தமிழ்நாடு பதினெட்டில் மலையாள நாடுகளை வென்று கொண்டுவந்து கொடுத்த பெருமையுடைய கை.

(உந்து - செலுத்தும்; சிலை - வில்; மாண் - பெருமை; சேரநாடு, பிற்காலத்தில் கொடுந்தமிழ் நாடாயிற்று.)

53 —தலைநின்று

**உலாசுரர்கோன் துன்பை ஒழித்தவற்கு வெற்றி**
**வலாசுரனை வென்றளித்த வன்கை.**

(தேவர்கள் அனைவருக்கும்) தலைவனாக நின்று உலவி வருகின்ற இந்திரனுக்கு நேர்ந்த துன்பத்தை நீக்கி, அவனுக்:காக 'வலன்' என்ற அசுரனைப் போரிட்டு வென்ற வலிமை யுடைய திருக்கை.

(இது முசுகுந்தன் செய்த செயல். கந்த புராணத்தில் உள்ளது. உலா-வினைத்தொகை.)

54 —எலாசுரரும்

**வீசனமாட் டிப்பணியின் மேவலிணா வீயமுதப்**
**போசனமாட் டுற்றருந்தும் பொற்புக்கை.**

எல்லாத்தேவர்களும் என்றும்இறவாது தத்தம் பணியில்நிற்ப, அவர்களுக்கு தேவலோகத்துப் புத்தமுதம் வீணாகாதபடி அருந்தக்கொடுத்து உடன்இருந்து உண்ட அழகிய கை.

('எலாச் சுரரும், என்பதில் சகர ஒற்று தொகுக்கப்பட்டது' வீதல் — இறத்தல்; சனம் — குடிகள்; மாட்டுதல் — போக்கு தல்; மாடு — பக்கம். மேவ — பொருந்திநிற்ப (ஈடுபட) பொற்பு — அழகு; 'வீணா' என்பது குறுகி 'விணா' என வந்தது. இந்நிகழ்ச்சி சூரபதுமனால் தேவர் சிறைப்பட்டிருந்து மீண்டபின் நிகழ்ந்ததாகும்.

55 — மாசங்னகள்

**ஒத்தவிடம் என்றறவோர் ஓதும்ஆ ரூர்முதலாம்**
**சத்தவிடங் கங்கள் சமைத்திடும்கை.**

இந்த உலகம் முழுவதிலும் தீமை சேராதவாறு, மக்களை வாழ வைப்பதற்காக, எட்டுத் திக்கிலும் நியாயத்திலிருந்து மாறாத செங்கோலைப் பிடித்து ஆளுகின்ற கை.

63 — வீறுறுநால்

**சேனைத் தலைமை திகழ்மந் திரத்தலைமை**
**ஏனைத் தலைமைபல எய்தியகை.**

பெருமைபொருந்திய நால்வகைப் படைகளுக்கும் தலைமை தாங்குவதுடன், அரசனது மந்திராலோசனைக்குத் தலைமை போன்ற பிற தலைமைகளையும் பெற்றிருக்கும் சிறந்த கை.

*(வீறு— பிறருக்கில்லாத சிறப்பு. (வீற்றிருத்தல்) மந்திரம் — மந்திரிகள் கூடி ஆராய்தல்; (சேனைகளுக்குத் தலைமை தாங்கும் காரணத்தால் செங்குந்தர்களுக்குச் சேனைத் தலைவர் என்ற பட்டமும் உள்ளமை காண்க.)*

64 — வானை

**வசாங்கமென ஆக்கி மனுகுலத்தும் ஓங்கித்**
**தசாங்கம் இருவகையும் சார்கை.**

வானுலகத்தைத் தம் வசப்படுத்திச், சோழர்குலத்திலும் புகழ்பெற்று ஓங்கி, அதனால் இருவகைத் தசாங்கங்களையும் பெற்றிருக்கின்ற கை.

*(வசாங்கம்—வச அங்கம் — (தன்) வசமான உறுப்பு; இருவகைத் தசாங்கம் என்பது, ஒன்று வானுலகில் தேவர்களாக இருந்தபோது பெற்றதையும், மற்றொன்று சோழர் குலத்துத் தோன்றிப் புவியில் வாழ்ந்தபோது பெற்றதையும் குறிக்கும். இதனை இப்பிரபந்தத்தில் உள்ள 'தசாங்கம்' என்ற பகுதியில் விளங்கக் காணலாம்.)*

65 — நிசாங்கர்

**பரவும் வடவனத்தெம் பண்ணவனோ டாடும்**
**உரலவையைப்பொன் தாளம்உரி ஒண்கை.**

மெய்யடியார்கள் வழிபடுகின்ற திருவாலங்காட்டு இறைவனுடன் கருவம்கொண்டு நடனமாடிய காளியின் கையில் இருந்த பொற்றாளத்தைப் பறித்துக்கொண்ட ஒளிபெற்ற கை.



*(நிசம் அங்கம் — நிசாங்கம் — உண்மையை உறுப்பாக உடையவர் (மெய்யடியார்) வட வனம் — திருவாலங்காடு; உரவை — காளி.)*

66 — விரவுகொடு

**மாலும் அயனும் மருவரியான்பால் பழிக்குச்**
**சாலச் சிரமளித்த சால்புறுகை.**

தங்களுக்குள் மாறுபட்டு, திருமாலும் பிரமனும் அடிமுடியைத் தேடிக்காண இயலாத சிவபெருமானிடத்தே தமக்கு உண்டான பழியைப்போக்கிக் கொள்ளுவதற்குத் தம் சிரத்தை அரிந்து கொடுத்த தன்மையை உடைய கை.

*(இதில் குறித்த வரலாறு விளங்கவில்லை; ஈட்டி எழுபது —61 ஆம் பாட்டிலும் இச்செய்தி வந்துள்ளது.)*

67 —வேலன்

**கழல்பரவும் ஓர்முனியைக் கைதவம்செய் வேதற்**
**றொழலுரியா ரைக்கடிந்த தொல்கை.**

முருகப்பெருமானுடைய திருவடிகளை வணங்கும் முனிவராகிய மூதண்ட முனிவரை அவமதித்த, பிரமனை வணங்குகின்றவர்களை ஓடுமாறு விரட்டிய பழமையான கை.

*[கைதவம் — வஞ்சனை; கடிதல் — நீக்குதல், விரட்டுதல். இதில் கூறப்பட்டவரலாறு, ஈட்டி எழுபது பாடல் 21 இல் (தேவர்மகுடம் பெற்றசிறப்பு) உள்ளது.]*

68 —உழலகிலா

**நேரமுறு சம்பாதி நீள்முத்தி வீடுபெற**
**ஆரமுதம் ஈந்தளித்த ஆரருட்கை**

நடக்க இயலாமல் இருந்த (இறுதிக்) காலத்தில் சம்பாதி முத்தி பெறும் பொருட்டு விண்ணுலகத்திலிருந்து அமுதம் பெற்றுவந்து கருணையுடன் கொடுத்த அருள்நிரம்பிய கை.

*(உழலகிலா — நடக்க (உழல) இயலாத; கில் — ஆற்றல் உணர்த்தும் இடைச்சொல்.) (இவ்வரலாறு ஈட்டி எழுபது பாடல் 24 இல் கூறப்பட்டுள்ளது.)*

69 — ஈரமுறு
**சோழரா சேந்திரன்தன் தொல்பகையாய் நின்றமர்செய்**
**ஈழரா சன்றனைவென் றின்புறுகை.**

கருணையுடைய சோழமன்னன் ஒருவனுக்கு நெடுநாள் பகையாக இருந்து போரிட்டுக் கொண்டிருந்த சிங்களதேசத்து அரசனைப் போரில் வென்று சோழன் இன்பம்பெற உதவிய கை.

(இதில் குறித்த சோழன் யார் என்பது விளங்கவில்லை.)

70 — வேழம்
**தரணியில்பல் சூழ்கலிங்கம் சார்ந்தமரேற் றான்றோர்**
**பரணிசொலச் செற்றொழித்தல் பண்கை.**

பூமியின்மேல், யானைகள்பல உள்ள கலிங்க நாட்டின்மீது படைகொண்டு சென்று, போரில் பெரு வெற்றி பெற்று, சான்றோர் பரணிபாடுமாறு செய்த பண்புடைய கை. [இப் பரணி ஒட்டக்கூத்தர் செய்ததாகத் தெரிகின்றது. அது கிடைக்க வில்லை.]

71 — இரணியம்நேர்
**செய்யக்கோ மாடங்கள் சேர்தேயம் ஆளுடைய**
**வையைக்கோன் தன்னை வதைக்கும்கை.**

பொன்னை ஒத்த சிவந்த மாளிகைகள் நிறைந்த நாட்டை ஆண்ட வையைக்கோன் என்னும் அரசனை அழிக்கும் வீரக்கை.

(இரணியம் — பொன்; நேர்செய்ய — உவமைகூற; வையைக்கோன், பாண்டியன் ஆதல் கூடும். வதைக்கும்— அழிக்கும்.)

72 - துய்யர்செறி
**குச்சரனை மச்சமுறு கோனைவெங்கண் டாங்கவகதம்**
**உச்சிமுன் னாம்பதிகள் உற்றிடுகை.**

உயர்ந்தோர்கள் நிறைந்து வாழும் குச்சர நாட்டு அரசன், மச்ச நாட்டரசன் ஆகியோரைப் புறமுதுகிட்டு ஓடச்செய்து, அவர்களுடைய உச்சயினி முதலான நகரங்களைத் தம்முடையன ஆக்கிக்கொண்ட கை.



(துய்யர் — உயர்ந்தோர்; வெந் கண்டு — புறமுதுகிடச் செய்து; வெந் — முதுகு; தனிச்சீரில் ரகர ஒற்றை நீக்கி அலகிடுக)

73 — நச்சரவக்
**கையானில் ஓங்கிப்பல் காதுசெயும் வெய்யசிறைக்**
**கையான் உயிர்தொலைத்த கங்கணக்கை.**

விஷமுள்ள பாம்பைக் கையில்கொண்ட சிவபெருமானைப் போல் உயர்ந்து நின்று, மக்களை அழித்துத் துன்புறுத்தும் கொடியவனான 'சிறைக்கையான்' என்பவனது உயிரைப் போக்கிய காப்பு அணிந்த கை.

[காதுசெயும் — அழிக்கும்; வெய்ய— கொடிய; கங்கணம்— முன் கையிலணியும் அணி.]

74 — எங்குநிகர்
**இல்லா உரங்கொண்(டு) இறுமாந்[து] அடல்கொளும்ஓர்**
**வல்லானை வென்றின்பால் வைத்தருள்கை.**

'எவ்விடத்தும் எனக்கு வலிமையில் நிகராவார் யாரு மில்லை' என்று கருவம்கொண்டு திரிந்த 'வல்லான்' என்ப வனை வெற்றி கொண்டு, அவனால் துன்பம் அடைந்த மக்களை இன்பம் கொள்ளுமாறு வைத்த அருளுடைய கை.

(உரம்— வலிமை; அடல்— வலிமை; இன்பால் —இன்பத்தில்.)

76 -எல்லார்ந்த
**அம்பரம்நேர் அம்பலம்ஆ டார்தில்லை மாகாளி**
**செம்பலம்நேர் தேர்ஓடச் செய்திடுகை.**

ஒளிநிறைந்த ஆகாயத்தை ஒத்த அம்பலம் (பெருவெளி) ஆகிய தில்லையில் காளியின் செம்பலம் போன்ற தேரினை ஓடச்செய்த கை.

(எல்லார்ந்த-(சூரியன்)ஒளி நிறைந்த; அம்பரம் - ஆகாயம்; செம்பலம் -சிவந்த பழம்.)

77 —உம்பர்தொழு
**நாவலூர் நம்பியெனா நாரையூர் நம்பியெனா**
**மேவுமிரு நம்பியரால் மெச்சும்கை.**

தேவர்கள் வணங்குகின்ற சுந்தரர், நம்பியாண்டார் நம்பிகள் ஆகிய இருவரால் போற்றிப்புகழ்ந்து பாடப்பட்ட கை

(உம்பர் - தேவர்கள்; நாவலூர் நம்பி - சுந்தரர்; நாரையூர் நம்பி - நம்பியாண்டார் நம்பி; மெச்சும் - புகழும். இவர்கள் இருவரும் நேசநாயனாரைப் புகழ்ந்தமை இங்குக் குறிக்கப் பட்டது. 'உம்பர் தொழு' என்பதிலும் ரகர ஒற்று அலகு பெறாது நின்றது.)

78 — சேவினன்தன்

**ஆதிரைதோ றெண்ணில் அடியவர்க்குப் பொன்நூறு**
**தீதிரிய வேஅளிக்கும் தேசிகக்கை.**

எருதினைக் கொடியாகவும், வாகனமாகவும் கொண்ட சிவபெருமானுக்கு உரிய திருவாதிரை நாள்தோறும் எண்ணற்ற அடியவர்கள் ஒவ்வொருவருக்கும் அவர்கள் துன்பம் நீங்குமாறு நூறு பொற்காசுகள் தருகின்ற குருவருளாகிய கை ]

(சே. - எருது; சேவினன் - சிவபெருமான்; தீது - துன்பம்; இரிய-நீங்குமாறு. இவ்வாறு அளித்தவர் நரசிங்க முனையரைய நாயனார். இவர் இங்குச் செங்குந்தராகக் குறிக்கப்படுகிறார்.)

79 — கோதில்தமிழ்க்

**கோவைபல தம்பெயரால் கூறிமூ வேந்தரிடம்**
**தேவைபொருள் கொண்டுபணி தேடும்கை.**

குற்றமற்ற தமிழில், மூவேந்தர்பேரில் கோவை நூல்சொல்லி, அவர்களிடம் தம் தேவைக்கேற்பப் பொருள்கொண்டு சிவப் பணிகளைத் தேடிச்செய்த கை.

(இவ்வாறு செய்தவர் காரி நாயனார். கோவை - 400 பாடல்கள் அமைந்த அகத்திணை நூல்; பணி - செயல்.)

80 — பூவைகர

**வன்தொண்டன் வேதண்டம் மன்னுமுன்னே யோகால்தம்**
**மன்தொண்டை ஆங்குகைத்த மாண்புறுகை.**

பூமியில் வாழ்ந்த சிவராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் கயிலாயம் சென்று சேருவதற்குள் தம்முடைய யோகசக்தியால் அவருக்கு முன்னே தமது பணியைக் கயிலையை அடையச் செய்த பெருமையுடைய கை.



[பூவைகு அரன் - பூமியில் வாழ்ந்த சிவன்; வேதண்டம் - கயிலை; மன்னுதல் - அடைதல்; யோகு - யோகநிலை; மன் தொண்டு - நிலையான பணி; உகைத்த - செலுத்திய; இச் செயலைச் செய்தவர் பெருமிழலைக் குறும்ப நாயனார்.]

81 —ஒன்றால்

**பொரவிளைத்து வஞ்சவாட் புத்தகம்போ திப்பான்**
**வரவிளைக்கா தாருயிரீ வண்கை.**

சண்டைசெய்துவெல்ல இயலாமையால் வஞ்சகம் பொருந்திய வாளை மறைத்து வைத்து ஒரு புத்தகத்தை உபதேசிப்பது போலத் (தன் பகையை முடித்துக்கொள்ள) வந்த அவனுடன் போரிடாமல் தன் அருமையான உயிரைக் கொடுத்த வளப்ப முடைய கை.

(பொர — போரிட; ஆருயிர் — அருமை உயிர் — பண்புத் தொகை; இவ்வரலாற்றைப் பெரியபுராணம் மெய்ப்பொருள் நாயனார் புராணத்துள் காண்க.)

82 — இரவிகுல

**மன்னாய் உலகோம்பி மாநிதியச் சாலைதிறந்து**
**என்நாதன் தொண்டர்கொளைக்(கு) இட்டிடுகை.**

சூரியகுலத்து அரசனாக முடிசூடி உலகாண்டு, தன் பொருட் சாலையை (பொக்கிஷத்தை)த் திறந்துவிட்டு, 'எம் சிவ பெருமானுடைய அடியார்கள் கொள்ளையாக (வாரிக்) கொண்டு போக' என அளித்த கை.

(கொள்ளை என்பது கொளை என இடைக்குறைந்து நின்றது இடங்கழி நாயனார் வரலாறு இதில் குறிக்கப் பட்டது.)

83 — மின்னார்பொன்

**அம்பலவன் தாள்துணையை ஆயு(ம்) அணிமுடியாய்**
**கம்பிஅணிந் தேஉலகாள் நாயகக்கை.**

மின்னலைப்போன்று ஒளிவீசும் பொன்னம்பலத்திலுள்ள நடராசப்பெருமானின் திருவடிகளையே தம் மணிமுடியாகக் கொண்டு அணிந்து உலகத்தை ஆண்ட தலைமை உடைய கை.

(தாள் — திருவடி; நாயகம் — தலைமை: இது பெரிய புராணம் கூற்றுவநாயனார் வரலாற்றில் உள்ளது.)

84 —அம்புவியில்

**வெள்விடையோற் காம்மலரை வீழ்த்தியதும் பிக்கையறக்**
**கொல்விடைகூ ரும்பரசால் கொய்திடுகை.**

இவ்வுலகில் சிவபெருமானுக்குச் சாத்தச் சிவகாமியாண்டார் என்னும் அடியவர் பறித்துவந்த மலர்கள் அடங்கிய பூக்குடலையைப் பறித்து வீசிய அரசனது பட்டத்து யானையின் தும்பிக்கையை, 'பரசு' என்னும் ஆயுதத்தால் வெட்டிய (வீரமுடைய) கை.

[வெள்விடையோன் — வெண்மையான எருதினை வாகனமாக உடைய சிவபெருமான்; பரசு — கோடரி; இந்த வரலாறு பெரிய புராணத்துள் எறிபத்த நாயனார், புகழ்ச்சோழ நாயனார் வரலாறுகளில் உள்ளது.]

85 — எள்ளிடை நெய்

**வாக்கி விளக்கெரிக்கும் வான்பணிமுட் டச்சிகையைத்**
**தேக்கி விளக்கெரித்த திண்மைக்கை.**

(தில்லைநகரில் உள்ள திருப்புலீச்சரப் பெருமான் திருக்கோயிலில்) எண்ணெயைக் கொண்டு திருவிளக்கு எரித்துவந்த சிறந்த திருப்பணி தடைப்பட்டபோது, தம் தலை மயிரையே எரித்து ஒளிவீசுமாறு செய்த வலிமையுடைய கை.

(எள் நெய் —எண்ணெய்; வான்பணி — உயர்ந்ததிருப்பணி; முட்ட — தடைப்பட; சிகை — தலைமயிர்; இது பெரிய புராணத்துள் உள்ள கணம்புல்ல நாயனார் வரலாறு கூறுவது.)

86 —நோக்(கு)இல்

**குறையை அமணர்கொளக் குண்டம் எடுத்து**
**நிறைபுனல்செய் திட்ட நிமலக்கை.**

திருவாரூர்க் குளத்தில் நீரின்மையால் ஏற்பட்ட நிலைமையை மாற்ற முயன்று, 'தாம் பார்வையற்றவர்' என்பதைக் குறித்து அமணர்கள் கேலியாகப் பேச, அதைப்பொருட்படுத்தாமல் குளத்தைத்தோண்டி அக்குளத்தில் புதுநீர் நிறையவும் அமணர் பார்வையிழக்கவும் செய்து கண் பெற்ற நிர்மலமான கை.



(குண்டம் — குளம்; நோக்குஇல் — பார்வை இல்லாத; குறையை — அவமானத்தை; இவ்வரலாறு பெரியபுராணத்துள் தண்டியடிகள் நாயனார் வரலாற்றில் உள்ளது )

87 — மறைநெறியின்

**மூவாயி ரம்மநுவை முல்லையான் ஆக்கைபுக்கு**
**நாவால் இனிதுரைத்த நன்னயக்கை**

வேதநெறியில் அமைந்த மூவாயிரம் மந்திரங்களை முல்லை நிலத்தவனாகிய இடையன் ஒருவனது உடம்பினுட் பாய்ந்தெழுந்து, அரியநாவினால் தமிழில் பாடிய நல்ல இனிமை மிக்க கை.

(இவ்வரலாறு பெரியபுராணம் திருமூலநாயனார் புராணத்தில் உள்ளது.)

88 —ஓவாமல்

**உய்தொழில்ஏ(து) என்ன உயர்குறள்சொல் வள்ளுவற்குச்**
**செய்தொழில்கற் பித்தமைத்த சேட்டக்கை.**

தடையில்லாமல் பிழைப்பதற்கு உரிய தொழில் எதுவென்று வினவிய உயர்ந்த திருக்குறளை இயற்றிய திருவள்ளுவருக்குத் தாம்செய்யும் தொழிலான நெய்யுந்தொழிலைக் கற்பித்துக் கொடுத்த மேலான கை.

(ஓவாமல் — தடைப்படாமல்; சேட்டம் சிரேட்டம், மேன்மை.)

89 —மெய்தொழிற்சீர்

**எய்த்(து)அலையாச் செம்மைகொளும் ஏலேல சிங்கற்கோர்**
**மெய்த்தலைதந்(து) ஆதரித்த மேன்மைக்கை.**

சிறப்புடைய உண்மையானதொழிலாகிய நெசவுத்தொழிலை இளைப்புற்று அலையாமல் செய்து சிறப்புடன் வாழ்ந்த (திருவள்ளுவரின் மாணவராகிய) ஏலேலசிங்கருடைய துன்பத்தை மாற்றுவதற்கு (அவர் தலைக்குப் பதிலாக) ஓர் உண்மையான தலையைக் கொடுத்து ஆதரித்த சிறப்புடைய கை.

[எய்த்து — இளைப்புற்று; செம்மை — சிறப்பு. இவர் பொருட்டு மெய்த்தலை கொடுத்த வரலாறு விளங்கவில்லை.]

90. - பொய்த்தல்இலார்

**ஏத்தலைச்செய் பாண்டி எழில்நாட்டுச் சங்கம்உறு உம்**
**சீத்தலைச்சாத் தற்குதவும் செம்மைக்கை.**

பொய்யாமையை உடையவர்கள் போற்றுகின்ற, பாண்டிய நாட்டு மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் இருந்த சீத்தலைச் சாத்தனார் என்னும் புலவருக்கு உதவிசெய்த கை.

(பொய்த்தல் இலார் - உண்மைபேசுவோர். ஏத்தல் ஏத்துதல் - போற்றுதல். இதில் குறித்து வரலாறு விளங்கவில்லை.)

91. —நாத்திகம் சொல்

**திக்கார் வெருளச் சினவாளை ஏந்திஒற்றிச்**
**செக்காருக்(கு) உற்றபழி தீர்க்குங்கை.**

நாத்திகம் பேசுகின்ற வேற்றுத்திசையினர் அச்சம் கொள்ளுமாறு கோபத்துடன் வாளாயுதத்தைக் கையில் ஏந்தி, திருவொற்றியூரில்இருந்த வாணியர்களுக்கு ஏற்பட்ட பழியைப் போக்கியுதவிய கை.

(வெருள —அஞ்சுமாறு ஒற்றி — திருவொற்றியூர், செக்கார்— செக்காடுபவர் (வாணியர்). இவ்வரலாறு விளங்கவில்லை.)

92. — பொய்க்காவல்

**கொண்(டு)அறம்கை விட்டஅயன் கூர்உறுப்பில் உற்பனம்செய்**
**அண்டர்முனோர் போலா(து) அமைந்துறுகை.**

இறைவன் திருமுடியிலிருந்து வந்த தாழம்பூவைத் தனக்கு ஆதரவாகப் பொய்கூறும் காவலாக்கி, தருமநெறியை விட்டு விலகிய பிரமதேவனின் முகத்தில் தோன்றிய முன்னோர்களாகிய தேவர்கள் போன்று இல்லாமல் சிவபெருமான் அருளால் தோன்றிய தேவர்களாக நன்கு அமையப் பெற்றஅழகிய கை.

(அயன் — பிரமன். உற்பனம் —உற்பத்தி; அண்டர்முனோர் —அண்டராகிய முன்னோர்.)

93. —கண்டம்

**இருளனையான் வான்முகத்தோர் ஏய்ப்பஅவன் உள்ளப்**
**பொருளனையார் என்புகழ்கொள் பொற்கை.**



'இருள்போன்ற கண்டத்தையுடைய சிவபெருமானது முகத்தில் விளங்குகின்ற சந்திர சூரியனை ஒத்தன' —என்று அப்பெருமானுடைய திருவுள்ளம் விரும்புகின்றதன்மையையுடைய பெரியோர்கள் நினைந்து சொல்லும் புகழைக்கொண்ட அழகியகை. (எண் புகழ்— நினைக்கின்ற புகழ் )

94 — தெருள்பெருகு

**விண்தலமும் மண்தலமும் மேல்நாள் செய் திட்டதவப்**
**பிண்டம் எனஉலகு பேசும்கை.**

'அறிவுநிறைந்த வானுலகமும், மண்ணுலகமும் முன்புசெய்த தவத்தின் பயனே இச் செங்குந்தர்கள் வந்து தோன்றியது' என்று உலகினர் அனைவரும் பாராட்டிப் பேசுகின்ற கை.

(தவப் பிண்டம் — தவத் திரட்சி.)

95 — பண்டனைத்தும்

**ஈகைஅறா மூவேந்தர் ஏத்தப் பனையிற்கோல்**
**ஓகையொடு கட்டிநட்டோ (டு) ஓங்கும்கை.**

பழங்காலம் தொட்டே எப்பொருளையும் இடைவிடாமல் கொடையாக வழங்கும் சேர சோழ பாண்டிய மன்னர்கள் மூவரும் போற்றுமாறு, பனைமரத்தின் உச்சியில் உவகையுடன் கொடி நட்டு (வல்லானை வெல்லுவதற்குச் சென்று) உயர்கின்ற கை.

96 — சாகை

**உருமாறிப்பொய்யாத ஒண்காஞ்சி ஊடே**
**கருமாறிப் பாய்கற்ப கக்கை.**

வேதப்பிரிவுகள் கிளைகளாக மாற்றமடைந்து பொய்யின்றி விளங்குகின்ற ஒளி மிகுந்த காஞ்சிப்பதியில் கருமாறிப் பாய்கின்ற கொடைத்தன்மை உடைய கை.

(சாகை — வேதத்தின் உட்பிரிவு; கருமாறிப் பாய்தல் — திருக்காமாட்சி அம்மையார் கோயிலினுள் உள்ள உலகாணித் தீர்த்தம் என்னும் திருக்குளத்தின் கீழ்க் கரையில் அமைந்துள்ள ஆண்பெண் பூதவடிவங்களின் இடையில், அருகில் உள்ள பூத நிக்கிரகப்பெருமாள் கோயில் மீதிருந்து தலைகீழாக நீரிற்பாய்ந்து உயிர்விடுதல்; இவ்வாறு செய்வோர்க்கு மறுபிறப்பில்லை என்பது வழக்கு).

97 — திருமாறிப்

**போவான் குலவழக்கில் பொய்ப்பா(ர்)ஆ ரேனு(ம்)அன்றே**
**சாவானாய் ஆவிவிடும் தாட்டிகக்கை.**

செல்வமிழந்து வறியவனாகி குலவழக்கத்தில் இல்லாத பொய் கூறும்படி எவருக்கேனும் நேருமானால், அப்பொழுதே இறக்க எண்ணி உயிர்விடுகின்ற ஆண்மை நிறைந்தகை.

(திரு — செல்வம்; மாறி — மாறு பட்டு; குலவழக்கு இல் — குலத்தில் வழக்கம் இல்லாத; தாட்டிகம் — ஆண்மை, பலம்; (இச்சொல் இலக்கிய வழக்கில் இல்லை. 'சாவான்கல்' — என்று ஒன்று சொல்லப்படுகிறது. அது வீரன் ஒருவன் தன் வீரம் விளங்குமாறு செயலாற்றித் தானே தன் தலையைக் கொய்து கொண்டு இறப்பது இது நடுகல் எனவும் கூறப்படும். இங்குக் குறிக்கப்படுவது இதுவாகலாம்.)

98 — நோவான்

**மிகத்தூ ண்டத் தம்குலச்சீர் விட்டவரை யும்திண்**
**நுகத்தூ ண்பாய்ச் சிக்கொல்லும் நோன்கை.**

தம்செங்குந்த குலத்துக்குரிய சிறப்பிலிருந்து மாறியவர்களை மிகவும் துன்புறுத்தி வலிய நுகத்தடியைப் பாய்ச்சிக் கொல்லுகின்ற வலிமையை உடைய கை.

(நுகத்தடி பாய்ச்சிக் கொல்லுகின்ற வழக்கம் முன்பு இருந்தது போலும்).

99 —அகத்தூடு

**வற்பறியாப் பெண்டிர் வயதாம் அளவும்தம்**
**கற்பழியாச் சீரில்வைக்கும் கண்ணியக்கை.**

மனத்தில் 'கொடுமை' என்பதை அறியாத பெண்கள் தாம் உற்ற வயது அடைந்து வாழும்வரையில் அவர்களது கற்பு நிலைக்குக் கேடுவாராத சிறப்புடன் காப்பாற்றுகின்ற நேர்மை யுடைய கை.

(அகத்தூடு — மனத்தில்; வற்பு — வன்பு; கொடுமை; கண்ணியம் — பெருமை, கௌரவம்.)



100 - இற்பழிக்கும்

**நாண்பண்ண லன்றியெம் நம்பன் திருத் தொண்டை**
**ஆண்பெண்அ டங்கலும்செய் அம்பொற்கை.**

இல்லத்திற்குப் பழிசேராமல் இருக்க நாணம் கொள்வார் களேயன்றி, சிவபெருமான் திருத்தொண்டில் நாணமின்றி ஆண்பெண் அனைவரும் சேர்ந்து செயலாற்றும் அழகிய பொன்மயமான கை.

[நாண்பண்ணல் — வெட்கப்படுதல்; நம்பன்— சிவபெருமான்.]

101 - மாண்பண்ணு

**சோதிக்[கு] அறுமுகற்குத் தோன்றால யத்தரும**
**ஆதிக்கம் பெற்றே அமையும்கை.**

பெருமையை உடைய சோதிவடிவமான சிவபெருமானுக் கும் ஆறுமுகனுக்கும் கட்டப்படுகின்ற திருக்கோயில் ஆதிக்கம் செலுத்துவதை இயல்பிலேயே பெற்றுள்ள கை.

(மாண்புஅண்ணு — பெருமை சேரும்; சோதி — ஒளிவடி வினனாய சிவபெருமான்; ஆதிக்கம் — ஆட்சி.)

102 —வீதிக்குள்

**சார்பு[ஆ]தா ரக்காட்சி தந்தருளும் போழ்தெல்லாம்**
**சீர்பாதம் தாங்கும் சிரேட்டக்கை.**

(இறைவன்) வீதிகள்தோறும் எழுந்தருளி திருவடி தரிசனம் வழங்கியருளும் காலங்களில் எல்லாம் அப்பெருமானுடைய திருவடிகளைத் தாங்கிவரும் உயர்ந்த கை.

[சார்புஆதாரக் காட்சி—விக்கிரகம் எழுந்தருளும் காட்சி.]

103 -நேர்பாத

**தாடனத்தால் எம்மான் தனைஅவன்தன் சின்னத்தைத்**
**தூடணத்தால் காய்வார்க்காய் துங்கக்கை.**

எம் தலைவனாகிய சிவபெருமானையும், அவனுடைய அடையாளங்களையும் தூஷித்துக் காலால் மிதிப்பவரைக் கோபித்துத் தண்டிக்கும் பரிசுத்தமான கை.

(தாடனம் - தட்டுதல், தூடணம் - பழிப்பு. காய்வார் கோபிப்பவர். துங்கம் - தூய்மை.)

104 — பீடனம்ஒன்(று)

**இல்லாச் சிவாலயச்சார்(பு) எங்கேஅங் கேமடமென்**
**சொல்லார் வளாகமதில் துன்னும்கை.**

எங்கெல்லாம் துன்பம் இல்லாத சிவாலயங்கள் உள்ளனவோ அங்கெல்லாம் இனிய சொற்கள் பேசும் பெண்கள் வாழுகின்ற மடவளாகம் மதில் முதலியவைகளை அமைக்கும் கை.

(பீடனம் —துன்பம்; மடவளாகம் —கோயிலை அடுத்துள்ள இடம்; துன்னும் — நெருங்கும்; நிரம்ப அமைக்கும்.)

105 —ஒல்லை

**இருவகையி(ல்) நாடும் இழிவருணர் போலா(து)**
**ஒருவகையில் நாடும் உயர்கை.**

'அநுலோமர், பிரதிலோமர்' என்னும் இழிந்த வருணத்தார்போல இல்லாமல், ஒரு வருணத்தை நாடுகின்ற உயர்ச்சி வாய்ந்த கை.

[உயர்ந்த சாதி, தாழ்ந்த சாதி இரண்டின்கலப்புமணத்தால் பிறந்தவர்கள் அநுலோமரும் பிரதிலோமரும். 'செங்குந்தர்கள் கலப்பு மணம் இல்லாதவர்கள்' என்பதாம்.]

106 -தருவகையில்

**தேவரிலன் என்றெடுத்துச் செப்முற்பா ஐம் பொருளும்**
**தாவநெறி யால்தருஉம் தங்கக்கை.**

'பஞ்சதருக்கள் உள்ள தேவலோகத்தில் வாழாமல் மண்ணுலகில் வாழ்ந்த தேவர்' என்று புகழும்படி முதற்பாவாகிய வெண்பா யாப்பில், இல்லறம், துறவறம், பொருள், இன்பம், வீடு என்னும் ஐந்து பொருள்களையும் பற்றுதற்கு முறையாக நூலைச் செய்துகொடுத்த தங்கம் போன்ற கை.

[இச்செய்தி திருவள்ளுவரைக் குறித்தது. தரு- மரம்; தாவ- பற்றுதற்கு. நெறியால்- முறையாக. முற்பா- பாவகையில் முதலாவதாகிய வெண்பா.]

107 -மேவும்

**பிறவியினூ டேகுலச்சீர் பேணி இருமைப்**
**பிறவியினூ(டு) ஒல்காப் பெருங்கை.**



இருபிறப்பு எடுத்துத் துன்பப்படாமல் எடுத்த ஒரு பிறப்பிலே குல ஒழுக்கம் குன்றாது பேணும் பெருமையுடைய கை.

பூணூல் அணிபவர் இருபிறப்பு எடுத்துக் குலஒழுக்கம் கொள்வார்.

108 -மறைமுதல்

**ஓதுவித்த கத்தொழிலை உற்று(ம்)அடைந் தார்க்கவற்றை**
**ஓதுவித்தும் அந்தணச்சீர் ஒன்றும்கை.**

வேதம் முதலாகிய கலைகளைக் கற்கும் அறிவுத்திறன் உடைய தொழிலைச் செய்தும், தம்மை வந்தடைந்தவர்களுக்கு அவைகளைக் கற்பித்தும் அந்தணர்க்குரிய பெருமை படைத்த கை.

(வித்தகம் — திறமை [சாமர்த்தியம்] — ஓதல்-ஓதுவித்தல் அந்தணர் தொழில்.)

109 —பூதம்முனாய்

**வேட்டுவித்த கத்தொழிலை வேட்டு(ம்)அடைந் தார்க்கவற்றை**
**வேட்டுவித்து நல்லிசைகொள் வேதனக்கை.**

பூதயக்ஞம் முதலாகிய ஐவகை யாகங்களைத் தாம் செய்தும், செய்து வைக்குமாறு வேண்டித் தம்மையடைந்தவர்களுக்காகச் செய்துவைத்தும் நல்ல புகழையும் சன்மானத்தையும் பெறுகின்ற கை.

(பூதம்முனாய் — பூதயக்கும் முதலாகிய பஞ்சயக்ஞங்கள்; ஐவகை யாகமாவன: பூதயக்ஞம், பிரமயக்ஞம், தேவயக்ஞம், மனுஷ யக்ஞம், பிதிர்யக்ஞம் என்பன. இசை — புகழ்; வேதனம் — பொருள், சன்மானம்; வேட்டல்- விரும்புதல், வேள்வி செய்தல். இரு பொருளும் இங்கு வந்தன. வேட்டல், வேட்பித்தல் அந்தணர்தொழில்.

110 —சேட்டமுறும்

**உத்தரசை வத்தீக்கை யோடுசம யாதியவாம்**
**முத்திறத்தீக் கைப்பரவும் முத்திரைக்கை.**

சிறப்புப் பெறுகின்ற இறுதிக் கிரியையாகிய உத்தர சைவ தீட்சையுடன், சமயம் முதலாகிய மூன்று தீட்சைகளிலும் முத்திரை பதிக்கும் கை.

(சேட்டம்- சிரேட்டம் [சிறப்பு]; உத்தர சைவத்தீக்கை— அந்தியேஷ்டி எனும் இறுதிச் சடங்கு. சமயமாகிய தீக்கை- சமயம், விசேடம், நிர்வாணம் என்னும் மூவகைத் தீக்கை.)

— ஒத்துவரும்

111 **ஆதுலர்பால் ஈதல் அறப்புரிந்து மற்றவர்பால்**
**ஏதுகொடு ஏற்று ஏந்தல்கொளும் ஏகக்கை.**

பொருந்தி வருகின்ற வறியவர்களுக்கு வேண்டியவைகளை மிகக் கொடுத்து, (செல்வம் உள்ள) பிறரிடத்தில் காரணம் கூறிப் பொருள்களைப் பெற்றுக்கொள்ளும் ஒப்பற்ற கை.

(ஆதுலர்- வறியவர். ஆதுரர் —நோய் உடையவர். 'ஆதுலர்க்கு அன்னம் கொடுத்தவர்களே தெய்வம்' என்பது குமரேச சதகம். ஏது காரணம். ஏற்று—பொருளைப்பெற்று ஏந்தல்-கையேந்துதல். ஏகக்கை-தனித்தன்மையுடைய கை.)

(கண்ணி 108 இல் ஓதல், ஓதுவித்தல், கண்ணி 109இல் வேட்டல், வேட்டுவித்தல், கண்ணி 111இல் ஈதல் ஏற்றல் ஆகிய அந்தணர்க்குரிய ஆறு செயல்களும், கண்ணி 110இல் தீக்கை செய்வித்தலும் செங்குந்தர்கட்குரியன என்பது கூறப்பட்டது.)

—போதுகொடு

112 **வாதவூர் எந்தைமணி வாசகமுன் னாயதமிழ்**
**வேதபா ராயணம்செய் விற்பனக்கை.**

மலர்களைத்தூவி, திருவாதவூரடிகள் அருளிய திருவாசகம் முதலாய தமிழ் வேதங்களைப் பாராயணம் செய்கின்ற விவேகம் உடைய கை.

(விற்பனம் — விவேகம், அறிவு. வேதபாராயணம் செய்தலும் அந்தணர் தொழில். இவர்கள் தமிழ்வேத பாராயணம் செய்வர் என்பதாம்.)

- ஓதுபுறச்

113 **சட்சமயம் பாறஎணில் சார்சமயம் வீதலுற**
**உட்சமயம் ஆறினையும் ஓம்புங்கை.**

சொல்லப்படுகின்ற ஆறு புறச்சமயங்கள் அழியவும், எண்ணற்ற சார்புசமயங்கள் அழிந்துபடவும், அகச்சமயங்களான சைவம், வைணவம், கௌமாரம், காணாபத்தியம், சௌரம், சாத்தம் என்னும் ஆறினையும் வளர்க்கும் கை.



(சட்சமயம் — ஆறுசமயம்; பாற — அழிய; வீதல் — அழிதல்; ஓம்பும் — காப்பாற்றும். புறச்சமயம் ஆறாவன — உலகாயதம், நால்வகைப் பௌத்தம், சமணம். சார்பு சமயங்களாவன — சௌமியம், இரணிய கர்ப்பம், காளாமுகம் முதலியன.)

- தட்சணம்எண்

114 **பின்னங் களையும்மணி பீடுறு நீ (று) ஆதிசிவச்**
**சின்னங் களைவிருத்தி செய்யும்கை.**

எண்வகைக் குற்றங்களையும் உடனே நீக்கும் உருத்திராக்க மணி, பெருமை பொருந்திய திருநீறு முதலாகிய சிவச்சின்னங்களை அபிவிருத்தி செய்கின்ற கை.

(தட்சணம் - உடனே; எண்பின்னம் - எட்டுவகைக் குற்றம்; பீடு - பெருமை; சிவச்சின்னம் - உருத்திராக்கம், திருநீறு, பஞ்சாட்சரம், சடைமுடி முதலியன. உருத்திராக்கம் தன்னை அணிந்து கொண்டவர்களுக்கு உள்ள எட்டுவகையான குற்றங்களைப் போக்கும். அக்குற்றங்களாவன...

'சிறப்பின் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனும் குறளும், ஊமும், செவிடும்
மாவும், மருளும் உளப்பட வாழ்நர்க்கு
எண்குபே ரெச்சம். (புறம்-28)

சிதடு - குருடு; மா - விலங்கு; மருள் - மூளையில்லாதது.

- மன்னுபரற்

115 **போற்று சரியைமுன் ஆம் பொய்தீர் ஒழுக்கமெனச்**
**சாற்றுநெறி நான்கினுளும் தாழ்வில்கை.**

நிலைபெற்ற சிவபெருமானைப் போற்றுகின்ற சரியை, கிரியை, யோகம், ஞானம் என்று கூறப்பெறுகின்ற குற்றமற்ற ஒழுக்கநெறி நான்கிலும் தாழாமல் நிற்கின்ற கை.

(பரன் போற்று - பரற்போற்று -பரனைப் போற்றுகின்ற.)

- தேற்றம்உறு

116 **நேமங்க ளால்தேவர் நேர்தேசிகர் முன்னாம்**
**நாமங்க ளைஅணிந்த நான்மறைக்கை.**

நிலையாகச் செய்கின்ற செயல்களால் தேவர்களுக்கு நிகரான தேசிகர் முதலிய பெயர்களைச் சூடிக்கொள்ளும், நான்கு வேதங்களையும் உணர்ந்த கை.

(நேமம் - நியமம் (செயல்) ; தேவர் நேர் - தேவர்களுக்கு இணையான.)

**117** —வாமஇருக்(கு)

**ஓதிவேட்(டு) ஆர்உலகை ஓம்பிப் பகைகளைந்து**
**நீதி அரசச்சீர் நிறுத்துங்கை.**

அழகிய இருக்கு வேதமந்திரம் சொல்லி வேள்வி செய்து நிறைந்த உலகை (உலக மக்களை)ப் பாதுகாத்து, பகைவர்களை ஒழித்து நீதியுடன் அரசர்களுடைய சிறப்பினை நிலைநிறுத்து கின்ற கை.

[வாமம் - அழகு; வேட்டு - வேள்விசெய்து; ஓம்பி - பாதுகாத்து. 'செங்குந்தர்கள் அரசை நிலைநிறுத்துபவர்' என்பது இதன் கருத்து]

**118** — மாதவர்பால்

**ஒரொன்பான் புண்ணியங்கள் ஓயா(து), இயற்றிஅமர்க்(கு)**
**ஈரொன்பான் ஆயுதங்கள் ஏந்துறுகை.**

பெருந்தவத்தை உடைய தவசிகளிடத்தில் ஒன்பது வகையான புண்ணியங்களைச் செய்து, போர்மேற் செல்லுங் காலத்துப் பதினெட்டுவகைப் போர்க்கருவிகளையும் ஏந்திச் செல்லுகின்ற வலிமை பெற்ற கை.

(புண்ணியங்கள் ஒன்பதாவன - பெரியோரைஎதிர்கொளல், பணிதல், ஆசனத்திருத்துதல், திருவடி விளக்கல், மலர் தூவிப் போற்றல், நறும்புகை காட்டல், ஆரத்தி எடுத்தல், தோத்திரம் செய்தல், அமுதளித்தல் )

**119** —சாரும்

**குடைகொடிதேர் பீலிநரை கொள்தோ ரணமுன்**
**படைஉடையும் செம்மையில்கொள் பைங்கை**

பொருந்துகின்ற கொற்றக்குடை, கொடி, தேர், மயிற்பீலியாலான குடை, வெண்மை பொருந்திய தோரணம், போர்



வீரர்கள் அணியும் சீருடை ஆகியவைகளை (சிவபெருமான் உமாதேவியார் முதலியோர் அளிப்ப)ச் சிறப்புடன் அவற்றை ஏற்றுக்கொண்ட கை.

(பீலி - பீலிக் குடை; நரை - வெண்மை; படைஉடை - போர்வீரர் அணியும் உடை.)

**120** — அடையலர்தம்

**கோரக் கலிக்களத்தில் கூறுபுலித் தண்டையொடு**
**வீரக் கழற்கால்கொள் வெற்றிக்கை.**

பகைவர்களுடைய கொடுமை நிறைந்த போர்க்களத்தில் புலிக்கொடி கட்டிய தண்டேந்தி, வீரக்கழல் அணிந்து சென்று வெற்றிபெறும் கை.

(அடையலர் - பகைவர். கோரம்- கொடுமை. தண்டை - தண்டு. ஐகாரம் சாரியை.)

**121** — நேரும்

**அறமாதி நாற்பொருளும் ஆய்கலனாப் பூண்டு**
**மறம்ஆ தியஒழிக்கும் மாக்கை.**

நிகழ்கின்ற அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கினையும் ஆராய்வதை அணியாகக் கொண்டு, கொலைத் தொழில் முதலியவற்றை நீக்குகின்ற சிறப்புடைய கை.

(மறம் — கொலைத் தொழில்; அறம் × மறம்.)

**122** — திறமாக்கோ

**பால்எட்டும் கண்ணோடப் பார்த்தருளி மன்பதைக்கோர்**
**நாலெட்டும் ஆம்தருமம் காட்டுங்கை.**

திறமையுடன் தம் கண்ணை எட்டுத் திக்கிலும் செல்லவிட்டு, உலகமக்களை அருளுடன் நோக்கி அவர்களுக்கு முப்பத்திரண்டு தருமங்களையும் செய்து நிலைநிறுத்தும் கை.

(கோ — கண்; பால் — பக்கம்; பால்எட்டும் — எட்டுத்திக்கிலும்; மன்பதை — உலகுயிர்; நாலெட்டு — முப்பத்திரண்டு)

123 — சால

**வெருணாச் சிரமமென மெய்ஓம்பி யாண்டும்**
**வருணாச் சிரமம்மதி வான்கை.**

மிகவும் உறுதியுடன் நாவினால் வரும் சிரமம் பாராது சத்தியத்தைக் காத்து எவ்விடத்திலும் குலதருமத்தை மதித்து நடக்கும் உயர்ந்த கை.

(சால — மிகவும்; வெருணாச் சிரமம் - வெருள் நா சிரமம். வெருள் நா - துன்பத்திற்கு அஞ்சுகின்ற நாக்கு மெய் ஓம்பி - சத்தியத்தை (உண்மையை) ப் பாதுகாத்து; யாண்டும் - எவ் விடத்திலும்; வான் - உயர்ந்த.)

124 — தெருள்நாடாத்

**துட்டசனர் எப்பாலும் துன்னா (து) அழித்தகற்றிச்**
**சிட்டசன ரைக்காக்கும் சீர்சால்கை.**

தெளிவை எண்ணாத தீயவர்கள் எந்தத் திசையிலும் நெருங்கி வராதபடி அழித்து அவர்களை நீக்கி, காத்தற்குரிய மேன் மக்களை என்றும் காப்பாற்றும் சிறப்பு மிகுந்த கை.

(தெருள் - தெளிவு; துட்டசனர் - தீயவர்கள்; துன்னாது - நெருங்காமல்; சிட்டசனர் - மேன்மையுடையவர்; மேன்மக் கள்; நல்லோர்.)

125 — அட்டதிக்கும்

**தேறுமன்னர் என்பெயரும் தேர்தலைவர் என்பெயரும்**
**கூறுமுறை யாலணிசெங் குந்தக்கை.**

எட்டுத்திசைகளிலும் இவர்கள் மன்னவர்கள், இவர்கள் போரில் கைதேர்ந்த சேனைத்தலைவர்கள் என்று கூறப்படும் பெயர்களை முறையாகக் கொண்டுள்ள, செங்குந்தம் ஏந்திய கை.

(தலைவர் - சேனைத்தலைவர்.)

126 — பேறுதரும்

**வேதமொடு வேள்வி விழைந்து பொருள் ஈட்டியால்**
**நீதமொடு காத்(து) ஈதல் நேருங்கை.**



முத்திப்பேறு அளிக்கவல்ல வேதங்களையும், வேதத்தில் கூறியபடி செய்யப்படும் யாகங்களையும் விரும்பி ஏற்று, உலகில் உள்ள பொருள்களைத் தாம் விரும்பி ஈட்டுதலால் அதனை நீதியுடன் காப்பாற்றிப் பிறருக்குக் கொடுக்கும் கை.

(நீதம் — நீதி; ஈதல் நேரும் — பிறருக்குக் கொடுக்க இசை கின்ற; 'ஈட்டி' — என்பது இரட்டுற மொழிதலாய் வந்தது. ஈட்டுதல், 'ஈட்டி' என்னும் படைக்கலம்.)

127 — பாதகம்நேர்

**வெய்யதொழி லாம்உழுதல் வேண்டா(து) அறம்வளர்க்கும்**
**துய்யதொழி லாம்நெய்தல் தோயுங்கை.**

பாதகத்தை ஏற்றுக்கொள்ளுகின்ற கொடிய தொழிலாகிய உழவுத்தொழிலை விரும்பாமல், தருமத்தை வளர்க்கின்ற தூய தொழிலாகிய நெசவுத்தொழிலில் தோய்ந்திருக்கும் கை.

(பாதகம் நேர் — பாதகத்தை ஏற்றுக்கொள்ளுகின்ற; வெய்ய — கொடிய; துய்ய — தூய்மையான )

(உழவுத்தொழில் சில உயிர்கள் அழிதற்கிடனாக உள்ளமை யின் அதனை, 'வெய்ய தொழில்' என்றும், உயிர் (மனிதர்) களின் மானம்காக்க நெய்தல்தொழில் உதவுதலின் அதனைத் 'துய்ய தொழில்' என்றும் கூறினார் என்க )

128 — உய்யாநிதம்

**முக்கால் பொருநியமம் முட்டாவகை நிறுத்தி**
**எக்காலும் எய்ப்பில்தொழில் ஏற்குங்கை.**

குறையற்றுவாழ நாள்தோறும் மூன்றுமுறை ஒப்பற்ற அனுஷ்டானங்களைத் தடைப் படாமல் செய்து நிலைநிறுத்தி எந்தக்காலத்திலும் இளைப்பில்லா(நெசவு)த் தொழிலைஏற்றுக் கொண்டுள்ள கை.

(உய்ய — பிழைக்க, வாழ; நியமம் - நியதி; அனுஷ்டானம்; எய்ப்பு - இளைப்பு. 'எய்ப்பில் தொழில்' என்பதை லகர ஒற்று நீக்கி அலகிடுக.)

129 — சொக்கை

**உரியார்க்கும் ஏனை உறுகணா ளர்க்கும்**
**சரியா நெறித்தொழிலுன் தாழ்கை.**

பொன்னை உடையவர்களுக்கும், மற்றும் வறுமை உடையவர்களுக்கும் ஏற்கும் முறையில் தொழில்செய்து தங்கும் கை.

(சொக்கு - பொன்; சொக்கை உரியார் - பொன்னுடையவர்; உறுகணாளர் - வறியவர்; சரியா - ஏற்புடைத்தாக; தாழ்கை - தங்கும் கை. 'விலை உயர்ந்தனவும், உயர்வில்லாதனவுமான ஆடைகளை நெய்வர்' என்பது கருத்து.)

130 — கரியாய்வீ

**ஊனங்காக் கும்முயிரை ஓம்புதொழில் நாணஅபி**
**மானங்காக் குந்தொழிலே மன்னும்கை.**

கரியாக எரிந்து அழிகின்ற உடம்பைக் காக்கும் உடம்பில் தங்கியுள்ள உயிரைக் காப்பாற்றும் உழவுத்தொழில் நாணங் கொள்ளுமாறு, மானத்தைக் காக்கும் நெசவுத் தொழிலிலேயே நிலைத்திருக்கும் கை.

(வீ - அழிகின்ற; ஊனங் காக்கும் - உடம்பைக் காப்பாற்றும். உயிரை ஓம்பும் தொழில்நாண - உழவுத் தொழில் வெட்கப்பட. அபிமானம் - மானம். இதில் 'அபி' என்பது உபசர்க்கம். விர்த்தி - அபிவிர்த்தி என்பது போல. இக்கண்ணி உழவுத் தொழிலைக் குறை கூறியதாம். 127ஆம் கண்ணியில் விளக்கம் காண்க.)

131 —ஈனமுறு

**தீண்டார்தம் நேயச் செறிவின்றி மெய்யுறவு**
**பூண்டாரோ(டு) ஆடு தொழில் பூணுங்கை.**

தீண்டத்தகாதவர்களோடு உறவு இல்லாமல், உண்மை உறவு (உடலுறவு) கொண்டவர்களோடு செய்யும் தொழிலைக் கொண்டுள்ள கை.

(ஈனம்- இழிவு. நேயம் - அன்பு. செறிவு-நெருக்கம். 'மெய்யுறவு பூண்டார்' என்பது உண்மை உறவு கொண்டோர் - உடல்உறவு கொண்டோர் (மனைவி மக்கள் முதலியோர்) என இரு பொருள் தந்தது. ஆடு - இயங்குகின்ற.)

132 — சேண்தருதீ

**வெய்யில் மழைபனிகால் வீச்சால் மெலியாமே**
**துய்ய நிழல்தொழில்தோய் சுத்தக்கை.**



ஆகாயத்திலிருந்து தோன்றும் நெருப்பு, வெயில், மழை, பனி, காற்று முதலியவைகளின் வீச்சினால் வருந்தாமல், தூய நிழலிலேயே இருந்து செய்யும் (நெசவுத்) தொழிலில் தோய்ந்திருக்கும் தூய்மையான கை.

(சேண் - ஆகாயம். மெலிதல் - வருந்துதல்.)

133 — ஐயமில்சீர்க்

**கல்வி, பெருங் கேள்வி, கனதனம்நல் தானதன்மம்**
**வில்லிஞா னம்செய்தொழில் மேவும் கை.**

சந்தேகமில்லாத சிறந்த கல்வி, பெருமையையுடைய கேள்வி, பெருஞ்செல்வம், தானம், தருமம், வில்வித்தை முதலியவற்றில் ஈடுபடும் கை.

[கனதனம் - பெருஞ்செல்வம். வில்லிஞானம்-வில்வித்தை. 'செய்தொழில்' என்பதில் உள்ள யகர ஒற்றை நீக்கி அலகிடுக.]

134. — புல்சருகால்

**அங்கிகொள(ல்) அன்றி,உயிர்க்(கு) அண்ணாரில்**
**கோடெரிந்தூண்**
**பொங்கியுண லாம்தொழில்தீர் புங்கக்கை.**

தருப்பைப் புல்லைக்கொண்டு தீ வளர்ப்பதன்றி, உயிருக்கு ஆசைப்பட்டு, விறகுகளை இட்டு அவை எரிய உணவைச் சமைக்கும் தொழிலைத் தவிர்த்த உயர்ச்சி உடைய கை.

(புல்சருகு - தருப்பைப்புல்; அங்கி - நெருப்பு; அண்ணார் இல் - அயலார், வீட்டில்; கோடு - கொம்பு, விறகு; புங்கம் - உயர்ச்சி)

185 — துங்கமில்புன்

**கூழ்மாந்து வோர்க்கும் குறைவிலாக் கொற்றவர்க்கும்**
**சூழ்மானக் காவல்தொழில் சூழுங்கை.**

உயர்வில்லாத எளிய கூழ்உணவை உண்ணுபவர்க்கும், குறைவில்லாத அரசர்களுக்கும் மானத்தைக் காக்கும் ஆடை நெய்யும் தொழிலைச் செய்கின்ற கை.

'துங்கம் - உயர்ச்சி; புன் - எளிய, அற்ப; மாந்துதல் - குடித்தல், உண்ணுதல்; மானக்காவல் - மானத்தை ஆடையால்

காப்பது; சூழ்தல் - ஆராய்தல். 'காவல்தொழில்' என்பதில் லகர ஒற்றை நீக்கி அலகிடுக.)

136 — தாழ்வின்மிகு

**கட்பணத்தி னும்சுசியால் காண்பணமே மிக்கதெனப்**
**பெட்பினொடு(ம்) ஏற்றதொழில் பெற்[று]உயும்கை.**

'மிக்க இழிவினை உடைய கள் விற்று வரும் அதிகப் பணத்தினைக் காட்டிலும், சுத்தமான நெசவுத்தொழிலால் வரும் குறைவான பணமே போதுமானது' என்று விருப்பத்துடன் அத்தொழிலைச் செய்து ஈடேறும் கை.

(தாழ்வு- இழிவு; கட்பணம் - கள்ளைவிற்று வரும்பொருள்; சுசி - தூய்மை; சுத்தம்; பெட்பு - விருப்பம்; உயும் - உய்யும், ஈடேறும். 'தாழ்வின்மிகு' என்பதில் னகர ஒற்றை நீக்கி அலகிடுக.)

137 — நட்பி(ல்)உறு

**தென்புலத்தா[ர்] ஆதியர்க்குச் செய்மகமோர் ஐந்தினைத்தம்**
**இன்புகொடு செய்தே இமைக்கும்கை.**

நட்புக்கொண்டு இருந்து இறந்தவர்களான தென்புலத்தார் முதலியவர்களுக்குச் செய்யப்படுகின்ற ஐந்து யாகங்களையும் விருப்பத்துடன் செய்து வைக்கின்ற கை.

(தென்புலத்தார் - பிதிரர்; மகம் ஓர் ஐந்து-ஐந்து யாகங்கள் (கண்ணி 109 காண்க.) இமைத்தல் - ஒளிவிடல்.)

138 — துன்பில்

**தயாவிருத்தி எட்டால் தருபோகம் எட்டும்**
**வியாதம்இன்றி ஓங்கு விமலக்கை.**

துன்பம் இல்லாத, தயவுபொருந்திய எட்டுத் தொழில்கள் செய்து அதனால் உண்டாகும் எண்வகைச் செல்வங்களையும் இடையூறு இன்றிப்பெற்று உயர்கின்ற தூய்மையான கை.

(துன்புஇல் - துன்பமற்ற; தயா-தயவுடன்கூடிய; விருத்தி- தொழில்; போகம் எட்டு - அஷ்ட ஐசுவரியம்; அஷ்டமா சித்தி; வியாதம் - வியாஜம் - இடையீடு; விமலம் - தூய்மை. நெசவுத் தொழிலில் உள்ள உபதொழில்கள் இங்கே குறிக்கப்பட்டன.)



139 — நியாத (ம்) உறு

**நற்குணம்ஓர் பத்தினையும் நாடிமற்றோர் பத்தாகும்**
**துற்குணத்தை நாடாத தொன்மைக்கை.**

நியதியுடைய பத்து நற்குணங்களையும் ஆராய்ந்து கைக்கொண்டு, தீயகுணங்கள் பத்தினை மனத்திலும் கருதிப்பார்க்காத பழமையான கை.

(நியதம் - 'நியாதம்' என நீண்டது; துற்குணம் பத்து - துர்க்குணம் என்பதில் குறிற்கீழ் ரகரமெய் றகர மெய்யாகத் திரிந்தது.)

1. நற்குணம் பத்தாவன- வாய்மை, நல்லன கூறல், இன்சொல், பயனுள மொழிதல் என மொழிநலம் நான்கு.

   கோயில் வலம்வரல், தவம் புரிதல், தானம் செய்தல் - என மெய்ந்நலம் மூன்று.

   அருளுடைமை, அவா அறுத்தல் தவம் விரும்பல் - என மனநலம் மூன்று, ஆகபத்து.

2. தீக்குணம் பத்தாவன - பொய்ம்மை, கோள்சொல்லல், கடுஞ்சொல், பயனில மொழிதல் - என மொழிக்குற்றம் நான்கு.

   களவு, கொலை, பயனில செய்தல் - என மெய்க்குற்றம் மூன்று.

   பகைமை, காமம், பேரவா - என மனக்குற்றம் மூன்று. ஆக பத்து.

140 — நிற்கும்

**உபகாரம் ஈரேழும் உயிர்க்குடற்கும் ஓம்பி**
**அபகாரம் யாண்டு (ம்) எணா அங்கை.**

நிலைத்துநிற்கும் பதினான்கு உபகாரங்களையும் உயிருக்கும் உடலுக்கும் செய்து பாதுகாத்து, எந்த இடத்திலும் யாருக்கும் தீமை என்பதையே எண்ணாத அழகிய கை.

(உபகாரம் - உதவி; அபகாரம் - தீமை; ஓம்பி - பாதுகாத்து; எணா - எண்ணா - நினையாத; உபகாரம் ஈரேழு - வறியவர்க்கு அன்னமிடல், நோயாளர்க்கு மருந்தளித்தல் முதலியன.)

141 — சுபகாரம்

**மொய்செயற்சீர் மாறாத மொய்ம்புகொ(டு)ஓர் பத்தாகும்**
**வைசியச்சீர் மாறாத வண்மைக்கை.**

நன்மை செய்வதற்கு வலிமை உடைய செயற்பெருமை மாறாத தன்மையுடன் வைசியர்க்குரிய பத்துக் குணங்களி லிருந்தும் குறையாத வள்ளன்மை உடைய கை.

(கரம் என்பது காரம் என நீண்டது. சுபகரம் - நன்மை (சுபம்) செய்வது; கரம் - செய்வது; பயங்கரம் முதலியன காண்க; வைசியச்சீர் பத்து - வணிகர்களுக்குரிய பொறுமை, இனிமை, நன்மொழி பேசுதல் முதலிய பத்துக்குணங்கள். வணிகர் இயல்பு பற்றி, 'கொண்டபடி போலும் விலைபேசி' என்று தொடங்கும் குமரேச சதகப்பாடல் கூறுவதும் காண்க.)

142 — மெய்சிரவர்

**ஏத்து முதலிய[ர்] என் றேதலைமை நாமத்தால்**
**தேற்றிஎட்டாம் திக்கினும் சொல் சேட்டிமைக்கை.**

உண்மையான தலைவர்கள் போற்றுகின்ற 'முதலியர்கள்' என்னும் தலைமைப் பெயரினால் தெளிவுறுத்தி, எட்டுத்திசை யிலும் புகழுகின்ற உயர்வுடைய கை.

(சிரம் - தலை; சிரவர்-தலைவர்; சேட்டிமை - உயர்வு )

143 — ஆற்றல்உறு

**காந்தம் இரண்டில் கதிரில் பொலிவுறூஉம்**
**ஏந்தல்கொடு நின்றோங்கும் ஏமக்கை.**

வலிமைபெற்ற சூரியகாந்தம், சந்திரகாந்தம் என்று கூறப்படும் இரண்டினுள்ளும் சூரியனால் விளக்கம்பெறும் சூரிய காந்தக் கல் போன்ற முசுகுந்தச் சக்கரவர்த்தியினால் உயர்ந்து நிற்கும் பாதுகாவலுடைய கை.

(ஆற்றலுறு - வலிமையுடைய. காந்தம்- ஒளி. கதிரில் பொலிவுறும் - சூரியனால் (சூரிய குலத்தில்) விளக்கம்பெறும். ஏந்தல் - உயர்ந்தவன்; (முசுகுந்தன்); ஏமம் - பாதுகாவல். 'ஏந்தல்கொடு' - என்பதில் லகர ஒற்று நீக்கி அலகிடுக.)



144 — வேந்தனென

**எண்ணில் இலக்கணங்கள் எண்ணில் இலக்கியங்கள்**
**எண்ணில்பிர பந்தங்கள் ஏய்ந்[து] இசைகை.**

அரசச் சீர்பெற்று எண்ணற்ற இலக்கணம், இலக்கியம், பிரபந்தம் முதலியன பெற்று புகழ்படைத்த கை. (செங்குந்தம் தன்மீது பிறரால் செய்யப்பட்ட பல நூல்களைப் பெற்றது என்பது கருத்து.)

(ஏய்ந்து - பொருந்தி. இசை - பெருமை, புகழ். 'எண்ணில் பிர' என்பதில் லகர ஒற்று நீக்கி அலகிடுக.)

145 — நண்எண்ணில்

**ஆசுகவி யேமுதலா ஆய்புலவர் ஏத்துபுகழ்**
**வீசுகவி நான்கியற்றும் வித்தகக்கை.**

பொருந்துகின்ற எண்ணில் அடங்காது ஆராய்கின்ற புலவர்கள் போற்றிப் புகழுகின்ற ஆசுகவி முதலிய நால்வகைக் கவிகளையும் விரைந்து இயற்றுகின்ற அறிவமைந்த கை.

(கவிநான்கு- ஆசுகவி, மதுரகவி சித்திரகவி, வித்தாரகவி.)

146 — மாசில்மனக்

**கண்ணெண்ணற் பாலவாம் காரியங்கள் பல்லோதும்**
**எண்ணெண் கலையனைத்தும் ஏற்றுணர்கை.**

குற்றமற்ற மனத்தில் எண்ணப்படுகின்ற பல செயல் களைச் சொல்கின்ற அறுபத்து நான்கு கலைகளையும் அறிந்து வைத்துள்ள கை.

('மனத்துக்கண்' என்பதில் சாரியை தொகுத்தல். மாசில் மன - என்பதில் லகர ஒற்று நீக்கி அலகிடுக. 'பல' என்பதில் ஈற்று அகரம் தொகுக்கப்பட்டது.)

147 — நண்ணுசுப

**மோ[டு]உபமா ஓங்கிநா லொன்பான் தனில்ஓதக்**
**கூடுகதை யைக்கவியுள் கூட்டுங்கை.**

பொருந்துகின்ற மங்கலத்தோடு உபமானம் கூறி உயர்ந்து நிற்கின்ற முப்பத்தாறு கதைகள் என்று ஓதப்படுகின்றவைகளை கவியாக எழுதுகின்ற கை.

[இக்கதைகள் செங்குந்தர்களிடை முன்பு வழங்கியவை போலும். அவை யாவையென அறிய இயலவில்லை.]

**148** — **நீடு**

**சிவாகமங்கள் நாலேழும் திண்தவ[ர்]ஓ தவ்வெண்**
**நவாகமங்க ளும்பெயர்த்தீ நற்கை.**

திரண்ட தவத்தைச் செய்த முனிவர்கள் உயர்ந்த இருபத்தெட்டு சிவாகமங்களையும் உபதேசிக்க, அவற்றை மீண்டு ஒன்பது ஆகமங்களாகச்செய்து தந்த நன்மையுடைய கை.

[திண்தவர் - திரண்ட [வலிய] தவமுடையவர். 'ஒன்பது ஆகமம்' என்றது திருமூலர் திருமந்திரத்தில் உள்ள ஒன்பது தந்திரங்களை.]

**149** — **திவாகரரில்**

**எச்சங்க மும்ஏத்(து) இடைமுன் கடையெனஆம்**
**முச்சங்கத் தூடும் முளைக்கும்கை.**

எல்லாச் சங்கங்களும் போற்றிப் புகழுகின்ற தலை, இடை, கடை, என்ற தமிழ்ச்சங்கம் மூன்றினுள்ளும் சூரியனைப்போல ஒளிவீசித் தோன்றும் கை.

[திவாகரன் - சூரியன். செங்குந்தர்கள் முச்சங்கப் புலவரிலும் இருந்தனர் என்பது கருத்து.]

**150** — **உச்சமிலா**

**தாக்கீழாச் சீவகசிந் தாமணியை அன்றொறுத்த**
**சேக்கீழா னால்பரவும் தெய்வதக்கை.**

சீவகசிந்தாமணிக் காப்பியத்தை, 'உயர்வில்லாத, பெருமை குறைந்த நூல்' எனச்சொல்லி சோழ மன்னன் படிக்கவிடாத படி செய்து [திருத்தொண்டர் புராணம் பாடிய] சேக்கிழார் பெருமானால் போற்றப்படுகின்ற தெய்வத்தன்மை உடைய கை.

சேக்கிழார் பாடிய புராணத்துள் பலர் செங்குந்தர் என்பது கருத்து. சோழன் ஜைன சமயக் காப்பியமான சீவகசிந்தாமணியை நாள்தோறும் விரும்பிப் படிக்கக் கண்ட தலைமை



அமைச்சர் சேக்கிழார் அதனைத் தடுத்து, 'சிற்றின்பம் கூறும் அக்கதையை விட்டுப் பேரின்பம்தரும் அடியார் வரலாறுகளைக் கேட்க' எனத் தாம் திருத்தொண்டர்கள் வரலாறு கூறிவர, அவ்வரலாற்றினைக் கேட்ட மன்னன் மகிழ்ந்து அதனை நூலாக இயற்றித்தருமாறு வேண்டினான் எனவும், அவ்வாறே சேக்கிழார் திருத்தொண்டர் புராணம் பாடினார் எனவும் கூறுப.

(சேக்கிழார் என்பது சேக்கீழார் என நீண்டது,விகாரம்.)

**151** — **மாக்கீழ்முன்**

**கச்சியப்பன் ஆறிருச கத்ரகவி யுள்தமசீர்**
**மெச்சியொப்பின் றாகச்செய் மேட்டிமைக்கை.**

முன்னொருகால் மாவடிநிழலில் இருந்து கச்சியப்ப சிவாசாரியார் பன்னிரண்டாயிரம் கவிகள் பாட, அக்கவிகளுள் தம்முடைய சிறப்பைப் புகழ்ந்து ஒப்பற்றதாகச் செய்த தலைமைச் சிறப்புடைய கை.

(மாக்கீழ் - மாவடியின் கீழ்—என்பது பொது வகையால் கச்சியைக் குறித்தது). ஆறிரு சகத்திரம் - பன்னிரண்டாயிரம். தமசீர் - தம்முடைய புகழ்; ஒப்பின்றாக - உவமையில்லாததாக. மேட்டிமை - தலைமை. கந்த புராணச் செய்யுள் தொகை 12 ஆயிரம் என்பது எதுபற்றி என விளங்கவில்லை.)

**152** — **உச்சிதமாம்**

**காவியத்தில் தீங்குபுரி கம்பன் கொடிகாளம்**
**ஆவியற்றுப் போகச்செய் ஆண்மைக்கை.**

உயர்ந்த காவியமான இராமாயணத்தில் சில பொருந்தாத செய்திகளைக் கூறிக் குறைவுபடுத்திய கம்பநாடருக்கு அளிக்கப்பட்டிருந்த, கொடி, எக்காளம் என்னும் கருவி முதலியவைகளைப் பயனற்றுப்போகுமாறு செய்த ஆண்மையுடைய கை.

(கம்பர் தாம் இயற்றிய இராமாயணத்தில், மந்திரப் படலத்தில் இந்திரஜித் கூறுவதாகஉள்ள, செருப்படியிற் படியொவ்வா மானுடர், என்ற தொடரும், இந்திரஜித் வதைப் படலத்தில் 'வில்லெடுக்க' என்ற சொல்லுக்கு இணையாக 'கல்லெடுக்க' என்று கூறியுள்ளதும், பிறிதோரிடத்தில் 'அறுபதினாயிரம்' என்ற பிரயோகம், அறுக்கப் படுகின்ற பத்தாயிரம் (ஐந்தாயிரம்) எனவும், அறுபதாயிரம் எனவும் பொருள்

வேறுபட நிற்றலையும் இவ்வாறான பிறவற்றையும் காட்டிக் குறைகூறுவர். மாதவச் சிவஞான சுவாமிகளும், கம்பராமாயண முதற் பாடலுக்குப் பல குறைகள் காட்டிக் குற்றம் கூற, வைணவர்கள் வேண்ட அவற்றை நிறைவுபடுத்தி உரைகூறினர் என்பதும் இங்கே நினைவுகூரத் தக்கது.

எனினும் 'ஒட்டக்கூத்தர் வயது மிக முதிர்ந்த காலத்தில் கம்பர் மிக இளைஞராய் இருந்தார்' - என்பது முதலிய பல காரணங்களால், 'கம்பர். ஒட்டக்கூத்தரிடையே பகைமை உண்டாகக் காரணமே இல்லை' என்றும், கம்பருடைய சினத்துக்கு ஆளாய் இருந்தவன் வாணியன்தாதன் என்றும், 'வாணியன்தாதன்' என்பதை 'வாணிதாதன்' என்று தவறாகக் கொண்டு, அத்தாதனை ஒட்டக்கூத்தராகக்கருதி வரலாற்றைச் சிலர் பிழைபட எழுதினர்' - என்றும் திரு மு. இராகவையங்கார் இத்திரட்டின் முன்னுரையிற் கூறியுள்ளார். மற்ற ஆராய்ச்சியாளர்களும் அங்ஙனமே கருதுகின்றனர்.

153 — மேவுபல

**வன்கவிஞர் ஆரேனும் வாகோடு வாழுவித்துப்**
**புன்கவிஞப் பூடுகளை போதக்கை.**

பொருத்தமுடைய வல்லமைமிக்க கவிஞர் யாராக இருப்பினும் அவர்களை அழகாக (சிறப்பாக) வாழவைத்து, அவர்களுக்கு எதிரான கீழ்மைக்குணமுடைய கவிஞர்களை அடியோடு அழிக்கும் அறிவுடைய கை.

(வன்கவிஞர் - வல்லமையுடைய புலவர்கள்; வாகு - அழகு (ஒழுங்கு). கவிஞப்பூடு - கவிஞர்களாகிய களைகள்; பூடு களை - களைகளை அழிக்கின்ற; போதக் கை. போதம்- அறிவு. ஒட்டக்கூத்தர் வரலாறுபற்றி இவ்வாறு கூறப்பட்டது.)

154 — என்கவிஞத்

**தன்மைஇற்(று)என்றோர்ந்தும்அருள்தந்தைபோல் உள்ளுவந்து**
**வன்மைவெளி காட்டிஆள் வாஞ்சனைக்கை.**

என்னுடைய கவிதைகள் இப்படிப்பட்டவை (சிறப்பற்றவை) என்று ஆராய்ந்தறிந்தும், என்னை அருள் தந்தையைப்போல ஏற்று மனம்மகிழ்ந்து என் வல்லமையைப் பிறர் அறியுமாறு செய்து ஆளுகின்ற அன்புடைய கை.



(ஓர்ந்தும் - ஆராய்ந்து அறிந்தும்; இற்று - இன்ன தன்மையுடையது; உள் உவந்து - மனம் மகிழ்ந்து; வாஞ்சனை - விருப்பம். இது புகழேந்திப் புலவர் கூற்றாக உள்ளது.)

155 — இன்மை சொலா (து)

**ஆற்றலொடும் இட்டசிர ஆதனத்தில் ஆன்றோர்கள்**
**போற்றஇருந் (து) ஈட்டிபுகழ் பூரணக்கை.**

(ஒட்டக்கூத்தர் செங்குந்தர்மீது பிரபந்தம் பாடத் தமக்குச் சிரச் சிங்காதனம் அமைத்துத்தரவேண்டும் என்றுகூற, அதற்கு) 'இல்லை'யென்று கூறாமல், துணிவுடன் தலைகளை வெட்டி அமைத்து அதில் உயர்ந்தவர்கள் புகழுமாறு இருந்து கூத்தர் இயற்றிய 'ஈட்டி எழுபது' என்னும் நூலில் புகழ்ந்து பேசப் பெற்ற முழுமையான கை.

(ஆதனம் - ஆசனம்; ஈட்டி - ஈட்டி எழுபது நூல்.)

156 — வீற்றுசிரம்

**யாவும்தத் தம்முடலோ(டு) ஆகிஉயிர்ப் பான்புரிந்து**
**கூவும்ஒட்டக் கூத்த னென்பேர் கொள்ளும்கை.**

உடலைவிட்டு வேறாகிய தலைகள் யாவும் தத்தம் உடல்களோடு பொருந்தி உயிர்பெற்றெழுமாறு (தலைகள் ஒட்டி எழ) எழுப்பெழுது பாடி அதனால் ஒட்டக் கூத்தன் என்று பெயர் பெற்ற கை.

(வீற்று - வேறுபட்ட; 'வீற்றுச்சிரம்' - என்பதில் சந்தி ஒற்றுத் தொகுத்தலாயிற்று. புரிந்து - செய்து; கூவும்-அழைக்கப் படுகின்ற.)

157 — மேவும்

**குலோத்துங்கன் எங்கோன் கொடுத்த விருதெல்லாம்**
**தலோத்துங்க மாக்கொள் தருமக் கை.**

பொருந்திய குலோத்துங்கசோழன் என்னும் எம்மரசன் கொடுத்த சிறப்புக்களை யெல்லாம், 'பூமியிலேயே மிக உயர்ந்தது' என்று ஏற்றுக் கொண்ட தருமம் மிகுந்த கை.

(விருது - பட்டம் முதலிய சிறப்புக்கள். தலோத்துங்கம் - தலம் உத்துங்கம் - வடசொற்புணர்ச்சி. தலம் - ஸ்தலம் - உலகம், பூமி. உத்துங்கம் - உயர்ந்தது. தலோத்துங்கம்-உலகில் உயர்ந்தது.)

158 — கலோத்துங்கம்

**கண்டஎனால் இன்(று) அக் கவின்ஈட்டிக் கைவளநூல்**
**கொண்(டு) அலர்தூ விச்செயச்சீர் கொட்டும்கை.**

கலைகளில் உயர்ச்சிகண்ட என்னால் அந்த அழகிய ஈட்டி எழுபது என்னும் நூலைப்பெற்ற கையின்வளப்பத்தைப் பாடிய இந்நூலை மலர் தூவி வாழ்த்தி ஏற்று இதன் வெற்றிச் சிறப்பைப் பாடிக் கொட்டும் கை.

(கலை உத்துங்கம் - கலோத்துங்கம். கைவள நூல் - செங்குந்தர்களது கைகளின் வண்மையைப் பாடிய நூல். அலர் - மலர். செயச் சீர் - வெற்றிச் சிறப்பு.)

159 — விண்டலர்மேன்

**மைக்கோள ரும்வாழி வாழிஎன ஏத்திசைக்கும்**
**கைக்கோளர் அற்புதப்பூங் கை.**

திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவனும் மற்றும் தேவர்கள் அனைவரும் 'வாழ்க வாழ்க' என்று போற்றிப் புகழும் ஒழுக்கத்தைக் கைக்கொண்டவர்களாகிய செங்குந்தர்களுடைய அற்புதமான இனிய கைகள் இச்சிறப்புக்களையெல்லாம் உடையனவாகும்.

(விண்டு - விட்டுணு, திருமால். மேன்மைக்கோளர் - மேன்மையைக் கொண்டவர்; தேவர்கள்.)

குறிப்பு: பின்வரும் கண்ணியைப் பக்கம் 85 இல் கண்ணி 73 இன் பின் சேர்த்துப் படித்துக் கொள்க.

— நெய்யாடிக்

**கங்கம் உமிழ்கணைகள் கைக்கொண்(டு) அமரில்வைகும்**
**வங்க அரையனுயிர் வாட்டுங்கை.**

நெய்யில் தோய்ந்து தீப்பொறிகளைச் சிந்துகின்ற அம்புகளைக் கொண்டு போரில் ஈடுபட்ட வங்கதேசத்து அரசனுடைய உயிரை வதைத்த கை.

(கங்கம் - தீப்பொறி; அமர் - போர்; அரையன் - அரசன்; போர்க்களக்தில் அம்புகளின் நுனியில் துணிசுற்றி நெய்யில் தோய்த்துத் தீக்கொளுவிச் செலுத்தும் வழக்கம் இருந்தமை இதனால் அறியலாகும்.)

இறுதியில் உள்ள 'அற்புதப் பூங்கை' என்னும் தொடரே திருக்கை வழக்கம் என்னும் இந்நூலுக்கு எழுவாயாகும். முன் வந்த 'கை' என்பன பலவும் பயனிலைகள். ('வழக்கம்' என்பது, விடாமல் கடைப்பிடிப்பது. 'பழக்கம்' என்பது அனிச்சைச் செயல்போல்தானாகச் செய்வது.)

திருக்கை வழக்கம் மூலமும் உரையும்
முற்றுப்பெற்றது.

செங்குந்தப்படையோன் சேவடி வாழ்க.

கலைகளில் உயர்ச்சிகண்ட என்னால் அந்த அழகிய ஈட்டி எழுபது என்னும் நூலைப்பெற்ற கையின்வளப்பத்தைப் பாடிய இந்நூலை மலர் தூவி வாழ்த்தி ஏற்று இதன் வெற்றிச் சிறப்பைப் பாடிக் கொட்டும் கை.

(கலை உத்துங்கம் - கலோத்துங்கம். கைவள நூல் - செங்குந்தர்களது கைகளின் வண்மையைப் பாடிய நூல். அலர் - மலர். செயச் சீர் - வெற்றிச் சிறப்பு.)

**159** — **விண்டலர்மேன்**

**மைக்கோள ரும்வாழி வாழிஎன ஏத்திசைக்கும்**
**கைக்கோளர் அற்புதப்பூங் கை.**

திருமாலும், தாமரை மலரில் வீற்றிருக்கின்ற பிரமதேவனும் மற்றும் தேவர்கள் அனைவரும் 'வாழ்க வாழ்க' என்று போற்றிப் புகழும் ஒழுக்கத்தைக் கைக்கொண்டவர்களாகிய செங்குந்தர்களுடைய அற்புதமான இனிய கைகள் இச்சிறப்புக்களையெல்லாம் உடையனவாகும்.

(விண்டு - விட்டுணு, திருமால். மேன்மைக்கோளர் - மேன்மையைக் கொண்டவர்; தேவர்கள்.)

குறிப்பு: பின்வரும் கண்ணியைப் பக்கம் 85 இல் கண்ணி 73 இன் பின் சேர்த்துப் படித்துக் கொள்க.

— **நெய்யாடிக்**

**கங்கம் உமிழ்கணைகள் கைக்கொண்(டு) அமரில்வைகும்**
**வங்க அரையனுயிர் வாட்டுங்கை.**

நெய்யில் தோய்ந்து தீப்பொறிகளைச் சிந்துகின்ற அம்புகளைக் கொண்டு போரில் ஈடுபட்ட வங்கதேசத்து அரசனுடைய உயிரை வதைத்த கை.

(கங்கம் - தீப்பொறி; அமர் - போர்; அரையன் - அரசன்; போர்க்களத்தில் அம்புகளின் நுனியில் துணிசுற்றி நெய்யில் தோய்த்துத் தீக்கொளுவிச் செலுத்தும் வழக்கம் இருந்தமை இதனால் அறியலாகும்.)

இறுதியில் உள்ள 'அற்புதப் பூங்கை' என்னும் தொடரே திருக்கை வழக்கம் என்னும் இந்நூலுக்கு எழுவாயாகும். முன் வந்த 'கை' என்பன பலவும் பயனிலைகள். ('வழக்கம்' என்பது, விடாமல் கடைப்பிடிப்பது. 'பழக்கம்' என்பது அனிச்சைச் செயல்போல்தானாகச் செய்வது.)

திருக்கை வழக்கம் மூலமும் உரையும்
முற்றுப்பெற்றது.

செங்குந்தப்படையோன் சேவடி வாழ்க.

சிவமயம்

முருகக்கடவுள் துணை

ஸ்ரீஞானப்பிரகாச முனிவர் அருளிய

# செங்குந்தர் பிள்ளைத்தமிழ்

## (மூலமும் உரையும்)

'பிள்ளைத்தமிழ்' என்பது தமிழில் வழங்கும் சிற்றிலக்கியங்களாகிய தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்று. இது தாம் வழிபடும் தெய்வங்களையாவது, தம்மால் பாராட்டப்படும் அரசர்கள், வள்ளல்கள், பெரியோர்களை யாவது குழந்தையாக வைத்துத் தம் அன்பு வெளிப்படுமாறு பத்துப்பருவங்களில், நூறு ஆசிரியவிருத்தத்தால் பாடப்படுவது ஆகும்.

இது ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இரண்டு வகைப்படும். பத்துப்பருவங்களில் முதல் ஏழு பருவங்கள் இருபாற் பிள்ளைத்தமிழுக்கும் பொதுவாக வரும். இறுதி மூன்று பருவங்கள் ஆண்பாற் பிள்ளைத்தமிழில் சிற்றில், சிறுபறை, சிறுதேர்ப் பருவங்களாகவும், பெண்பாற் பிள்ளைத் தமிழில் அம்மானை, நீராடல், ஊசல் பருவங்களாகவும் வரும்.

பொதுவாகப் பிள்ளைத்தமிழ் நூல் ஒருவர்மீது பாடப்படுதலே வழக்கு. ஆனால் செங்குந்தர் பிள்ளைத்தமிழாகிய இந்நூல் செங்குந்தத் தலைவர்கள் பலர் மீது பன்மையில் பாடப்பட்டுள்ளது. இந்நூலில் சில பருவங்களில் பாடல்கள் பத்திற்குக் குறைந்தும் உள்ளன. பாடல்கள் ஆற்றொழுக்காக அமைந்து கற்போர்க்கு இன்பந் தருவன ஆகும்.

காப்பு

வேற்றொலி வெண்டுறை

**மன்னுதிருக் காஞ்சிநகர் வாழுஞ்செங் குந்தர்மிசைப்**
**பன்னும்பின் ளைத்தமிழைப் பாடவே — மின்னின்**
**குழலிமைந்தன் புழைநெடுங்கைக் குஞ்சரச்செம் பொன்னவிர்க்கும்**
**கழலிலென்றன் சென்னிவைப்பன் காண்.**

பொழிப்புரை:

உலகத்தில் என்றும் நிலைபெற்று வளரும் அழகிய காஞ்சிமா நகரத்தில் வாழும் செங்குந்தர்கள்மீது புகழ்பொருந்திய பிள்ளைத்தமிழ் நூலை இடையூறு இல்லாமல் பாடி முடித்தற்பொருட்டு, மேகம் போன்ற கூந்தலை உடைய உமா தேவியின் மைந்தனும், துளையுடைய நீண்ட துதிக்கையினை உடைய யானைமுகத்தினை உடையவனுமாகிய விநாயகப் பெருமானது பொன்போல் ஒளிவீசுகின்ற திருவடிகளில் என் தலையை வைத்து வணங்குகின்றேன்.

(பன்னுதல் - புகழ்தல்; மின் - மின்னல். அஃது ஆகு பெயராய் மேகத்தைக் குறித்தது. புழை - துளை. அவிர்க்கும் - ஒளியை வீசும்; இன் - வேண்டாவழிச் சாரியை.)

1. காப்புப் பருவம்.

பிள்ளைத்தமிழ் பாடும்போது அக்குழந்தையின் இரண்டாம் மாதத்தில் 'பிள்ளையைக் காப்பாற்றுக' என்று, காக்கும் கடவுளாகிய திருமால் முதலாய தேவர்களை வணங்கி வேண்டுவது காப்புப்பருவமாகும்.

திருமால்

பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

**101 சீர்மேவு தெண்டிரைப் பாலாழி மீதினில்**
**சேடசய னத்தின்மிசையே**
**செங்கண் துயின்றுபதி னாலுலோ கத்தையும்**
**சீர்பெற வளர்க்குமுகிலைத்,**



**தார்மேவு பச்சைப் பசுந்துழாய் மாலைபுனை**
**சங்கேந்து செங்கையரசைச்,**
**சததளக் கோவிலுறை திருமலைக் கிரியில்வளர்**
**சக்ரமா லைத்துதிப்பாம்;**

**தேர்மேவு திருவீதி ஏகம்பர் கச்சியுறை**
**தேவிகா மாட்சியுமையாள்**
**செய்யசெங் தாமரைப் பாதச் சிலம்பில்வரு**
**தீரவி ரியர்கள்தம்மைக்,**

**கார்மேவு கைத்தல வசந்தத் தியாகரைக்,**
**கந்தவே ளின்துணைவரைக்,**
**கனமான செங்குந்த முதலிமா ரைத்தினக**
**காத்துரட் சித்தருளவே. 1**

பொழிப்புரை :

திருவேகம்பப் பெருமானுறைவதும், தேர்கள் பொருந்தி ஓடுகின்ற அழகான வீதிகளை உடையதுமான காஞ்சிமாநகரத்தில் வாழும் காமாட்சியம்மையினுடைய சிவந்த தாமரைமலர் போன்ற திருவடியிலணிந்த சிலம்பில் இருந்து சிதறிய நவமணிகளிலிருந்து தோன்றிய வீரதீரம் உடையவர்களும், மேகம் போன்று பலன்கருதாமல் வழங்கும் கைகளை உடையவராய்த் தியாகம் செய்பவர்களும், கந்தவேளுக்குத் துணைவராக அவருடைய அருகில் இருப்பவர்களும், புகழ் உடையவர்களும் ஆகிய செங்குந்தர்களை நாள்தோறும் காப்பாற்றி அருள்செய்யும்படி, சிறப்புமிக்க தெளிந்தஅலைகளை உடைய பாற்கடலில் பாம்புப் படுக்கையில் துயின்றருளி, பதினான்கு உலகங்களையும் சிறப்புடன் காக்கும் கருமேக நிறமுடையவரும், பசிய துளசிமாலை அணிந்தவரும், வெண்சங்கைச் சிவந்த கையில் உடையவரும், தாமரை மலரில் உள்ள திருமகள் வாழும் திருப்பதி மலையில் உறைபவரும், சக்கரப் படையைத் தரித்தவருமான திருமாலைப் போற்றி வணங்குவோமாக.

அருஞ்சொற்பொருள்.

சேடசயனம் - ஆதிசேடனாகிய பாம்புப்படுக்கை; முகில்— மேகம் (இங்கு மேகநிறமுடைய திருமால்); சததளம் - தாமரை

மலர். தார் - ஒழுங்கு. கனம் - பெருமை. காத்துரட்சிதல் - காப்பாற்றுதல்(மீமிசைச் சொல்), தாமரை மலரில் இருத்தலால் திருமகள் 'அலர்மேல் மங்கை' எனப்படுகின்றாள். அவள் வாழும் மலை அலர்மேல்மங்கை மலை எனப்படும்.

நடராசர்

102 வடிகொண்ட வெண்சுதை யணிந்தகோ புரசிகர
மாடமா ளிகைசிறந்த
வளமருவு தில்லைச் சிதம்பர மகாதேவ
வள்ளலைத், தெள்ளுநறவைக்,

கடிகொண்ட கொன்றையந் தார்முடிப் பரமனைக்,
கமலமல ரடிசிவப்பக்
கனகசபை நடனமிடு சிவகாமி நண்பனைக்
கண்குளிர நின்று தொழுவாம்;

அடிகொண்ட செந்தமிழ்க் கவிஞர்கள் சகாயரை,
அடைந்தோரை இகழாமலே
அன்னதா னஞ்சொர்ண தானம்நல் கும்பெரிய
அருள்தங்கு சிந்தையோரைத்,

துடிகொண்ட புகழ்மருவு செங்குந்த வீரரைச்,
சுரிகைநா ராயணர்தமைத்
தோகைமயி லேறிநட மாடிவரு கந்தவேள்
துணைவரைக் காக்க வென்றே. 2

பொழிப்புரை :

குறளடி, சிந்தடி முதலிய பலவகையான அடிகளையுடைய செந்தமிழ்ப்பாடல்களைத் தமது செல்வமாகக் கொண்டுவாழும் கவிஞர்களுக்கு எந்நாளும் உதவிசெய்பவர்களும், தம்மை அண்டி வந்தவர்களை இகழாமல் அவர்களுக்கு உணவும் பொன்னும் பொருளும் வழங்குகின்ற அருள்நிறைந்த மனம் உடையவர்களும், முருகனுக்குரிய குறிஞ்சிப்பறையைத் தரித்த புகழ் பொருந்தியவர்களும், உடைவாள் தரித்தவர்களும்,



தோகையையுடைய மயிலின்மீது ஏறி நர்த்தனம் செய்கின்ற கந்தவேளுக்குத் துணைவர்களும் ஆகிய செங்குந்த வீரர்களைக் காப்பாற்றி அருள்செய்யவேண்டி, நன்கு அமைத்த வெண்சுதை முதலியவற்றால் அழகு செய்யப்பட்ட பதுமைகளை அணி கலனாகக்கொண்ட உயர்ந்த கோபுரங்களும், மாடமாளிகைகளும் நிறைந்து வளப்பொருந்திய தில்லைச் சிற்சபையில் உள்ள மகாதேவரும், வரையாது அருள்பொழியும் வள்ளலாரும் தெளிந்த சிவானந்தத் தேனாய் உள்ளவரும், மணம் மிகுந்த கொன்றைமாலையை அணிந்தவரும, பொற்சபையில் தாமரை மலர் போன்ற திருவடிகள் சிவக்கும்படித் திருநடனம் செய்கின்றவரும், சிவகாமியம்மையார்க்குத் துணைவருமாகிய நடராசப்பெருமானைக் கண்குளிரக் கண்டு நின்று தொழுவோமாக.

அருஞ்சொற்பொருள் :

வடி - வடித்தல், செம்மைப்படுத்தல்; நறவு - தேன்; கடி - மணம்; துடி - குறிஞ்சிப்பறை; சுரிகை - உடைவாள்.

அண்ணாமலைநாதர்

103 மிக்கநற வக்கொன்றை தும்பைகூ விளம்அறுகு
விரிபுனற் குழவிமதியம்
மேவுகோ டீரப்ப ராபரனை, இறையவனை,
வேளைவென் றிடுகண்ணனைத்,

தக்கதவ மிக்கஉண் ணாமுலைத் திருமருவு
சங்கரனை, அண்ணாமலைச்
சம்புவை அடிக்கமலம் நம்பிநம் பித்தினம்
தாழ்வுகொடு முடியில்வைப்பாம்;

உக்ரமிகு வரதுங்க வல்லானை வென்றவரை,
உண்மைநெறி வண்மைமாறா
உள்ளம் படைத்தவரை, எள்ளாமல் வள்ளலடி
ஓதித்து திக்குமவரை,

இக்கனைய மொழிமாதர் மதனர்செங் குந்தர்தமை
இலகுமென் மீசைஉடைய
எழில்கொண்ட செஞ்சயரை, வீரநா ராயணரை
ஈண்டுரட் சித்தருளவே. 3

பொழிப்புரை:

மிகுந்த கோபமுடைய, வரபலம் பெற்ற 'வல்லான்' என்னும் கொடியவனை அழித்தவர்களும், உண்மை நெறியில் இருந்தும், வள்ளல் தன்மையிலிருந்தும் என்றும் மாறாத மனம் உடையவர்களும், எந்த இகழ்ச்சியும் இல்லாமல் பெருவள்ளலாகிய இறைவனுடைய திருவடிகளை நாள்தோறும் பாடிப் பரவுபவர்களும், கரும்பு போன்ற இனிய சொற்களைப் பேசுகின்ற அழகிய பெண்களுக்கு இன்பம் தரும் மன்மதனைப் போன்றவர்களும், விளங்குகின்ற மெல்லிய மீசையுடன் அழகு பெற்று விளங்கிச்சிறந்தவெற்றி உடையவர்களும் ஆகிய வீரன், நாராயணன் முதலிய செங்குந்தத்தலைவர்களைக் காப்பாற்றி அருள்புரிவதற்காக, மிகுந்த தேனை உடைய கொன்றை; தும்பை, வில்வம், அறுகு ஆகியவற்றோடு, எங்கும் பரந்த நீராகிய கங்கையையும் பிறைச்சந்திரனையும் சடாமுடியில் தரித்துள்ளவரும், மன்மதனை அழித்த நெற்றிக்கண் உடையவரும் மேலான தவத்தினைச் செய்த உண்ணாமுலையம்மை தழுவப்பெறுகின்ற சங்கரரும் ஆகிய, திருவண்ணாமலையில் உள்ள அண்ணாமலையாராகிய அப்பெருமானது திருவடித் தாமரைகளை மிகவும் விரும்பி, நாள்தோறும் வணங்கித் தலைமேற்கொள்வோமாக.

அருஞ்சொற் பொருள் :

கூவிளம் - வில்வம். கு ழ வி ம தி ய ம் - பிறைச்சந்திரன். கோடீரம் - சடைமுடி. வேள் -மன்மதன்; சம்பு சிவபெருமான். இக்கு - கரும்பு. செஞ்சயம் - சிறந்த வெற்றி.

தியாகராசர்

104 ஐம்புலப் பற்றொழித் துட்கரண வாதனை
அடக்கிக் கடக்கஅரிதாம்
அந்தர சுழுத்திதுரி யாதீத வெளியிலே
ஆனந்த நித்திரை செயும்

தம்பமிகும் அறிவுடையர் இதயநீள் செய்யசெந்
தாமரைக் கோயில்புக்க
தையல்கம லாலயத் தேவிஆ ரூரில்
தனிக்கடவு ளைப்பணிகுவாம்;



'வெம்புபகை யாகவரு சூரசங் காரஞ்செய்
வெற்றிசேர் செங்குந்தரை,
மேவுமிகு விருதுடைய வீராதி வீரியரை,
வேளனைய வடிவாளரை,

நம்பினர்கள் தம்பமென நின்றருள் தியாகரை,
நரேந்திரர் மதிக்க வந்த
நாட்டிய வேவிலங் கினும் விலங்காத
நல்லோர்க ளைக்காக்கவே. 4

பொழிப்புரை :

கோபத்துடன்கூடிய பெரும்பகையாக வந்த சூரபதுமனை அழித்து வெற்றி பெற்றவர்களும், பொருந்துகின்ற பலபட்டங்களைப் பெற்று வீரத்தில் சிறந்தவர்களும், மன்மதனுக்கிணையான அழகிய வடிவம் கொண்டவர்களும், தம்மை நம்பி அடைக்கலமாக வந்தவர்களுக்குப் பற்றுக்கோடாக இருந்து பல தியாகங்களைச் செய்பவர்களும், பூவுலக மன்னவர்கள் மதித்துப்போற்றுமாறு உள்ளவர்களும், உலகமே நிலைமாறினாலும் தாம் சொன்ன சொல்லை மாற்றியறியாத நல்லவர்களுமாகிய செங்குந்தப் பெருமக்களைக் காத்தருள் செய்ய வேண்டி, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும் ஐம்புலன்களால் வரும் ஆசையை ஒழித்து, மனம் முதலிய அந்தக் கரணங்களால் வரும் இடர்ப்பாடுகளை அடக்கிச் சுத்த சுழுத்தி, சுத்த துரியய இவைகளைக் கடந்து சுத்த துரியாதீதமாகிய பரவெளிமை அடைந்து, சிவானந்த அனுபவமாகிய உறக்கத்தில் ஆழ்ந்து அசைவின்றி யிருக்கும் மெய்யுணர்வுடையவர்களது உள்ளமாகிய தாமரைக்கோயிலில் இருந்தலுடன், திருமகள் வழிபட்ட கமலாலயமாகிய திருவாரூர்ப் பூங்கோயிலிலும் விளங்குகின்ற ஒப்பற்ற கடவுளாகிய தியாகராசரை வணங்குவோமாக.

அருஞ்சொற்பொருள்:

உட்கரணம் - அந்தக்கரணம்; வாதனை - துன்பம் (ஆசை); கமலாலயம் - திருவாரூரில் உள்ள திருக்குளம்; வெம்புபகை - கொடியபகை; வடிவாளர் - அழகுடையவர்; நரேந்திரர் - பூவுலக அரசர்கள்.

சொக்கநாதர்

105 திரைமருவு கடலுலகம் எல்லாம் மதிக்கவே
சேணமரர் கொண்டாடவே
செய்யசெந் தாமரைப் பாதம் சிவந்திடத்
தித்திமித் திமிதிஎனவே

வரைமருவு குமரிகவு மாரிமீ னாட்சிமா
மாதங்கி பங்கினுடனே
மாமதுரை அறுபத்து நாலுதிரு விளையாடல்
மகிழ்சொக்க ரைப்பணிகுவாம்;

உரைமருவு செந்தமிழ் இலக்கிய இலக்கணம்
உணர்ந்துகரை கண்டோர்களை,
ஓடியா டும்புரவி நகுலப் பிரதாபரை,
உத்தமக் குணசுத்தரை,

விரைமருவு செங்கடம் பணியும் புயாசலரை,
வெல்சமய முதலியர்தமை,
மிக்கான செங்குந்த வீரநா ராயணரை
வேண்டிரட் சித்தருளவே. 5

பொழிப்புரை :

செவ்விய தமிழில் உள்ள, உரையோடு பொருந்திய இலக்கியங்களையும், அவற்றிற்கு வரையறை கூறும் இலக்கணங்களையும் நன்றாகக் கற்றுணர்ந்து அவைகளின் கரையைக் கண்டவர்களும், விரைந்து செல்லுகின்ற குதிரைகளைக் கதியறிந்து செலுத்துவதில் பாண்டவருள் அர்ச்சுனனுக்கிளைய நகுலனைப் போன்ற புகழ உடையவர்களும், உயர்ந்த தூய குணம் உடையவர்களும், மணம் பொருந்திய சிவந்த கடப்ப மாலை அணியும் மலைபோன்ற தோள்களை உடையவர்களும், பிற சமயங்களை வெல்லுகின்ற சைவ சமயத்தைக் கொண்ட முதலியர்களும், வீரநாராயணர்கள் எனப்படுகின்றவருமான செங்குந்தத் தலைவர்களைக் காப்பாற்றியருள வேண்டி, அலைகடல் சூழ்ந்த பூவுலகத்தினர் மதித்துப் போற்றவும் வானுலகிலுள்ள தேவர்கள் பாராட்டிப் போற்றவும், சிவந்த தாமரை மலர்போலும் பாதங்கள் மேலும் சிவக்குமாறு நடனமாடுகின்றவரும், மலைமகளாகிய பார்வதி, மீனாட்சி, காளி என்று பல்வேறு பெயர்பெறும் சக்தியைப் பங்கில் உடையவரும், அழகிய மதுரை நகரத்தில் அறுபத்துநான்கு திருவிளையாடல்களை மகிழ்ந்து செய்தவருமாகிய சொக்கநாதப் பெருமானைப் பணிவோமாக.



அருஞ்சொற்பொருள் :

திரை - அலை; 'திமிதி என நடித்து' என ஒரு சொல் வருவிக்க; சேண் அமரர் வானுலகத்திலுள்ள தேவர்கள்; வரை - மலை; மாதங்கி - காளி; பிரதாபர் - புகழ் உடையவர்; புயாசலர் - புயஅசலர் - அசலம் - அசையாதது, மலை; மலை போன்ற தோள்களை உடையவர்.

திருவேகம்பநாதர்

106 முத்திக்கு வித்தைச், செழுங்கருணை வள்ளலை,
முழங்குசங் கேந்துகுரவன்
முன்னமொரு காலத் தறிந்திடா நின்றதோர்
முதல்வனைக், கரசூலனைப்,

பத்திக்கு வித்தான காமாட்சி அம்மைஉமை
பாகமக லாதிருக்கும்
பரமனே கம்பகா தன்தன்னை விரைமலர்ப்
பாதம்நாம் அஞ்சலிப்பாம்;

தத்திக்கு லாவுமயில் வாகனக் குமரவேள்
தம்பிலட் சத்தொன்பரைத்
தாமரைக் கண்ணனைத் தாமரைப் போதனைத்
தாமரைத் தாளாளரோ(டு)

எத்திக்கு ளுண்டான பாலர்முனி வோர்தமை
இரவுபக லும்துதிக்கும்
இனியபுகழ் சேர்கின்ற செங்குந்த முதலியர்கள்
எல்லோரை யும்காக்கவே. 6

பொழிப்புரை :

தாவிச் செல்லுகிற மயிலை வாகனமாக உடைய முருகவேளுக்குத் தம்பியர்களாக விளங்குகின்ற வீரவாகு முதலிய இலக்கத்து ஒன்பதின்மரையும். திருமால், பிரமன், அஷ்டவசுக்கள், எட்டுதிக்குப் பாலகர்கள், சிறந்த முனிவர்கள் முதலிய அனைவரையும் இரவு பகல் எந்நேரமும் வழிபடுகின்ற இனிமை

யான புகழை உடைய செங்குந்த முதலியர்கள் என்றுபுகழப் படுகின்ற எல்லோரையும் காப்பாற்றி அருளுவதற்காக, மேலான வீடுபேற்றிற்கு வித்தாக உள்ளவரும், உலக உயிர்களிடத்துக் கருணை உடைய வள்ளலாக விளங்குபவரும், முன்னொரு காலத்தில் ஒலிக்கின்ற பாஞ்ச சன்னியம் என்ற சங்கினைத் தரித்த திருமால், திருவடிகளைத் தேடியறியாதவாறு பேருருவம் கொண்ட முதல்வரும், சூலாயுதத்தைக் கரத்திலே தரித்தவரும், உலக உயிர்கள் இறைவனிடம் பக்தி செய்யுமாறு பூசைசெய்து காட்டியருளிய காமாட்சியம்மையைத் தம் இடப் பாகத்தில் என்றும் கொண்டிருப்பவருமாகிய திருவேகம்பப் பெருமானுடைய மணம் பொருந்திய திருவடி மலர்களை நாம் தொழுவோமாக.

அருஞ்சொற் பொருள் :

விரை - வாசனை; தாமரைக்கண்ணன் - திருமால்; தாமரைப்போதன் - பிரமன்; தாமரைத்தாளாளர் - அஷ்ட வசுக்கள்.

காமாட்சியம்மையார்

107 ஆரண நான்முகன் மாலவன் இச்சைக்கோர்
வேட்கையைத் தருவாழ்க்கையள்,
ஆதி மகேசுரர் பாதபது மத்தினோர்க்(கு)
அகமெய்க்க அருள்தேக்குவாள்,

காரண காரிய நாதர்பக் கத்திற்சேர்
காட்சியைத் தருசூட்சியாள்,
காவெனும் மாவடி மாதவக் கச்சிகா
மாட்சியைத் தொழுதேத்துவாம்;

பூரண மாமுலை மாதர்இச் சிக்கவே
பூட்டுமால் விளையாட்டினோர்,
போதகம் ஆகிய ஞானஉற் பத்திக்கோர்
போக்குசித மெய்வாக்கினோர்,

தாரணி நீபமொய் மார்பர்சுத் தத்தினோர்,
தரற்குநல் அறமீக் கொள்வோர்,
தாருகா சுரனைவன் மார்பிடைக் குத்திப்போர்
தாக்குவீ ரர்க்காக்கவே.





பொழிப்புரை :

அழகிய நகில்களை உடைய மகளிர் விருப்பம் கொள்ளும்படி மயக்கத்தைச்செய்யும் செயல்களை உடையவர்களும், மெய் அறிவாகிய ஞானம் கைவருதற்குப் பொருத்தமான உண்மையே பேசுபவர்களும், கடப்பமாலை அணிந்தவர்களும், தூய்மையானவர்களும், நல்ல அறச் செயல்களைக் கைக்கொண்டவர்களும், தாருகாசுரனை நேர்நின்று மார்பில் குத்திப் போர் செய்த வலிமை உடைய வீரர்களுமாகிய செங்குந்தரைக் காத்தருள் செய்யுமாறு.

வேதமுதல்வனான பிரமதேவன், திருமால் ஆகியோரின் விருப்பத்தை நிறைவேற்றுபவளும், முதற்கடவுளான மகேசுவரனுடைய திருவடித்தாமரைகளைத் தமது உள்ளத்தில் கொண்டுள்ள அடியவர்களது உள்ளக்கருத்துக்கள் மெய்யாகப் பூரண அருளைத்தருபவளும், உலகத்தில் நடைபெறும் எல்லாச் செயல்களுக்கும் காரணமாகவும் அச் செயல்களாகவும் (காரியமாகவும்) உள்ள தலைவராகிய திருவேகம்பப் பெருமானின் இடப்பக்கத்தில் காட்சிதருபவளும், சோலைபோன்று நிழல் தரும் மாமரத்தினடியில் பெரிய தவத்தைச் செய்பவளும் ஆகிய காமாட்சியம்மையாரைப் போற்றித் துதிப்போமாக.

அருஞ்சொற் பொருள் :

ஆரணம் - வேதம்; பதுமம் - தாமரை; பூட்டுமால் - மால்பூட்டு; மயக்கத்தைச் செய்யும்; போதகம் - உபதேசம்; உசிதம் - பொருத்தம்; உசிதம் X அனுசிதம்; நீபம் - கடப்ப மாலை. 'கச்சிக் காமாட்சி என்பதில் ஒற்றுத் தொகுத்தல்.

விகடசக்கர விநாயகர்

108 பூமேவு நறவம் புனைந்தகோ டீரப்
புராந்தகன் தருபாலனைப்,
பொன்னனைப் பொன்னவள் முராரிதிரு மருகனைப்,
புங்கவன் கங்கைமகனைக்,

காமேவு சேனாடர் தொழுதெய்வ மும்மதக்
கரிமுகனை, மறைமுழங்கும்
கச்சியம் பதிவிகட சக்கரவி நாயகன்
கமலபா தம்துதிப்பாம்

மாமேவு புனிதத் திருக்கம்பை ஆற்றினில்
வருந்தித் தவம்செய்கையால்
வந்தருளி ஏகம்பர் பாகம்கொ டுக்கின்ற
வல்லிஅபி ராமிகுமரி

தேமேவு பாலுடைய காமாட்சி பாதத்
திருச்சிலம் பதிலுதிக்கும்
செங்குந்தர் பிள்ளைத் தமிழ்க்கவி தழைக்கத்
தினந்தினம் காத்தருளவே. 8

பொழிப்புரை :

தேன்பொருந்திய கொன்றை மாலையணிந்த சடாமுடியுடையவனும் திரிபுரங்களை அழித்தவனுமாகிய சிவபெருமான் தன் திருமகனும், பொன்போன்ற நிறமுடையவனும், திருமகட்கும், முரன் என்னும் அசுரனை அழித்தமையால் முராரி எனப்படும் திருமாலுக்கும் திருமருகனும், உயர்ச்சியுடைய வளமிக்க கங்கா தேவியின் திருமகனும், கற்பகச்சோலை பொருந்திய வானுலகத்தவர் வணங்குகின்ற தெய்வத்தன்மை பொருந்திய கன்னமதம் கபோலமதம் கோசமதம் என்னும் மும்மதங்களையுடைய யானையின் முகமுடையவனும், வேதங்கள் ஒலிக்கின்ற கச்சியம்பதியின் தலைவிநாயகனும் ஆகிய விகடசக்கர விநாயகனை,அவனுடைய தாமரைமலர் போன்ற திருவடிகளை நினைந்து, மாமரத்தைப் பொருந்தி ஓடுகின்ற கம்பையாற்றின் கரையினில் உடல் இளைக்கத் தவம் செய்த காரணத்தால் வெளிப்பட்டு அருள்செய்த திருவேகம்பப் பெருமானுடைய இடப்பாகம் பிரியாதிருக்கின்ற மிக்க அழகுடைய என்றும் கன்னித் தன்மை நீங்காத காமாட்சியம்மை, தன் திருவடிகளில் அணிந்த சிலம்பிலிருந்து சிதறிய நவமணிகளிலிருந்து தோன்றிய செங்குந்தத் தலைவர்கள்மீது இயற்றும் பிள்ளைத்தமிழ் நூல்



சிறக்குமாறும், அவர்களை நாள்தோறும் காத்தருள் செய்யுமாறும் வேண்டித் துதிப்போமாக

அருஞ்சொற் பொருள் :

நறவம் - தேன்; புராந்தகன் - புர அந்தகன் - முப்புரங்களை அழித்த சிவபெருமான்; புங்கம் - உயர்ச்சி; சரி - யானை; வல்லி - கொடி (போன்றவள்); அபிராமி - மிக்க அழகுடையவள்.

முருகக்கடவுள்

109 செஞ்சடைப் பரமனுக் கருள்ஞானம் அருள்செயும்
சிவஞான குருநாதனைச்,
சேவற் பதாகைச் செழுங்கருணை வள்ளலைத்
தெய்வயா னைக்கரசனை

அஞ்சுகக் குறவள்ளி யம்மைமண வாளனை,
அடுத்தசுரை வென்றகுகனை,
ஆதிவே தாவையும் சிறைகொண்ட சரவணத்(து)
அறுமுகனை அஞ்சலிப்பாம்;

பஞ்சவண் ணவ்விருது புலிக்கொடி மலாரியும்
பார்புகழ வேபடைத்த
பாக்கியசம் பன்னரைத், தேக்குதிறல் வீரரைப்,
பரமங்கை யவள்பங்கனும்

கஞ்சமலர் வேதனும் கண்ணன்வின் நாடரும்
கண்டுகொண் டாடவந்த
கச்சியம் பதியில்வரு வீரசெங்குந்தரைக்
காத்துரட் சித்தருளவே. 9

பொழிப்புரை :

சிவந்த சடாமகுடத்தையுடைய சிவபெருமானுக்குப் பிரணவத்தின் பொருளைக் கூறியருளிய சிவஞானகுருநாதன் எனப் புகழப்படுபவனும்,சேவற் கொடியை உயர்த்திய கருணை வள்ளலாகவும், தெய்வயானையை மணந்து ஆட்சி செய்பவனாகவும் அழகிய கிளி போன்ற குறப் பெண்ணான வள்ளியம்மை

யின் அழகிய கணவனாகவும் உள்ளவனும், பகைகொண்டு போர்செய்த சூரன் முதலியவர்களை வெற்றிகொண்டவனும், பிரமதேவனைச்சிறைசெய்து படைப்புத்தொழில் செய்தவனும், சரவணப் பொய்கையில் தோன்றியருளிய ஆறுமுகவனுமாகிய முருகப்பெருமானை, ஐந்து நிறம் பொருந்திய வெற்றிக் கொடியையும், அடையாளக் கொடியாகிய புலிக்கொடியையும், 'மலாரி' என்னும் பறை(வாத்தியம்)யையும் உலகத்தோர் புகழுமாறுகைக் கொண்டிருப்பவர்களும், செல்வம் உடையவர் களும், மிக்க வீரம் உடையவர்களும், உருத்திரன், பிரமன், திருமால் முதலியோர் கண்டு புகழுமாறு பெருமை உடையவர் களும், ஆகிய கச்சிப்பதியில் தோன்றி வளர்கின்றவீரம்பொருந் திய செங்குந்த குலத்தவரைக் காத்தருள் புரியுமாறு நாள் தோறும் வணங்குவோமாக.

அருஞ்சொற்பொருள் :

*பதாகை- பெருங்கொடி; அம்சுகம் - அழகிய கிளி; வேதா - வேதன் - பிரமன்; சம்பன்னர் - உடையவர்: கஞ்சமலர் - தாமரைமலர்; காத்துரட்சித்தல் - மீமிசைச்சொல்.*

முப்பத்து முக்கோடி தேவர்

**110 தாரணி மதிக்கவே முப்பத்தி ரண்டறம்**
**சகலஉயி ரும்தழைக்கச்**
**சங்கரன் அளந்துதரும் இருநாழி நெல்கொண்டு**
**தவிராம லேவளர்த்த**

**சீரணி பயோதரி, கவுமாரி, மகமாயி,**
**தேவிபா தச்சிலம்பில்**
**செம்மையுட னேவந்து பூமிதலை ஆளுமோர்**
**செங்குந்த ரைப்புரக்க;**

**காரனைய திருமேனி மாயாவி கோதனும்**
**கஞ்சா சனக்கடவுளும்**
**கரிமுகக் கணபதியும் முருகாற் றேவனும்**
**கன்னிமார் ஒரெழுவரும்**



**மூரல்விரி செய்யசெவ் வாய்க்கலை மடந்தையும்**
**முளரிஆ லயகங்கையும்**
**மோதுமலர் சூழ்கற்ப காடவியில் முப்பத்து**
**முக்கோடி தேவர்களுமே.** 10

பொழிப்புரை :

*கருநிறமுடைய மேகம் போலும் அழகிய திருமேனியை யுடைய திருமாலும் தாமரை மலரை இருப்பிடமாக உடைய பிரமதேவனும், யானை முகமுடைய விநாயகப்பெருமானும், முருகப்பெருமானும், சப்தமாதர்கள் எனப்படும் கன்னியர் எழுவரும், புன்னகை தவழுகின்ற சிவந்த வாயினை உடைய கலைமகளும், செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளும், நெருங்குகின்ற பூக்களையுடைய கற்பக மரங்கள் சூழ்ந்த வானுலகில் வாழ்கின்ற முப்பத்து முக்கோடி தேவர்களும், ஆகிய அனைவரையும்.*

*சிவபெருமான் தன்னிடம் அளந்துகொடுத்த இரண்டுநாழி நெல்லைக் கொண்டு பூவலகில் உள்ள எல்லா உயிரினங்களும் தழைத்துப் பெருகும்படியும், உலகிலுள்ளோர் மதித்துப் போற்றும்படியும் முப்பத்திரண்டு தருமங்களையும் குறை வில்லாமல் செய்து வளர்த்துவந்த, சிறந்த கச்சணிந்த மார் பினை உடையவளும், கௌமாரி, மகமாயி முதலிய திருப் பெயர்களை உடையவளுமான உமாதேவி தன் திருவடியி லணிந்த சிலம்பின் மணிகளிலிருந்து உருக்கொண்டுவந்து, இப்பூவுலகத்தைக் காத்து ஆட்சி செய்கின்ற செங்குந்தத் தலை வர்களை நாள்தோறும் காப்பாற்றி யருளுவாராக.*

அருஞ்சொற்பொருள் :

*நாழி - முகத்தலளவைப் பெயர்; பயோதரம் - நகில்; கார்- கருமை; கஞ்சாசனம் - தாமரைத்தவிசு; மூரல்- நகைப்பு; செய்யசெவ்வாய்- மீமிசைச்சொல்; முளரி- தாமரை; மோதும் —நெருங்குகின்ற.*

காப்புப்பருவம் முற்றிற்று.

## 2. செங்கீரைப்பருவம்

இது குழந்தையின் ஐந்தாம் திங்களில் சொல்லப்பெறுவது. ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி இரண்டு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலைநிமிர்ந்து முகம் அசைய ஆடுவது செங்கீரை எனப்படும்.

'கிர் - சொல் என்றும், 'சில சொல்லாடி ஆடுதல் செங்கீரை யாடுதல்' என்றும் கூறுவர்.

**111 புங்கமிகு தருமன்நதி கெஞ்சியோ டத்,தங்கு**
**புனிதைச் சினம்பிறக்கப்,**
**பூவுழக் கியவண்டு கானொதுங் கிட, நின்ற**
**புள்ளினத் தள்ளியோடச்,**

**சங்கினஞ் சூழ்பழன மள்ளர்தள் ளாடத்,**
**தயங்கிடைக் கடைசியர்குழாம்**
**தங்கள்செங் கைந்நெறித் தென்செய்வோ மென்னத்,**
**தனித்தனி கடாக்கள் வெருள,**

**அங்கணவர் தங்களுடை ஆலைவா யுட்புகுத,**
**அம்புயங் கொய்யுமின்னார்**
**அஞ்சியோ டக்கமல மிஞ்சியோ டக்கங்கை**
**அனையகம் பாநதியினில்**

**செங்கயல்கள் உகள்கச்சி மங்கையுமை வரபுத்ரர்!**
**செங்கீரை யாடியருளே!**
**சேவலங் கொடியாளர்! மேவிடுந் தயவாளர்!**
**செங்கீரை யாடியருளே. 1**

பொழிப்புரை :

இப்பாடல் மருதநில வருணனை ஆகும். (மீன்கள் துள்ளும் காட்சி.)

உயர்ச்சியை உடைய யமுனைநதி தாழ்ந்து அடங்கிச் செல்லவும், கங்காநதி கோபம் கொள்ளவும், பூக்களில் தேனைக் குடித்துக் கலக்கிய வண்டுகள் சோலையில் ஒதுங்கி நிற்கவும், பறவைக்கூட்டங்கள் விலகிச் செல்லவும்,சங்குகள் நிறைந்துள்ள நீர்வளம் பொருந்திய வயல்களில் வேலைசெய்யும் உழவர்கள் நிலை தடுமாறவும், மெலிந்த இடையையுடைய உழத்தியர்கூட்டம் செய்வது அறியாது தம் கைகளை நெறித்து, 'நாம் என்ன செய்வோம்' என்று கலங்கி நிற்கவும்,வயல்களில் உள்ளஎருமைக் கடாக்கள் வெருண்டு ஓடவும், வயல்களில் கூடி நின்றவர்கள் அருகிருந்த கரும்பாலை யிடத்தில்சென்று சேரவும், வயல்களில் பூக்களைப் பறிக்க வந்த மின்னற் கொடி போன்ற பெண்கள் பயந்து ஓடுதலால், அவர்களது தாமரை மலரை வென்ற பாதங்களும் தாமரை மலர்களைவிட்டு ஒதுங்கிச் செல்லவும், பெருக்கெடுத்துப் பாய்கின்ற கங்கைநதிக்கு நிகரான கம்பாநதியில் கயல்மீன்கள் புரள்கின்ற வளப்பமுடைய கச்சியம்பதியில் இருந்து தவம்செய்த உமாதேவியின் குமாரர்களாகிய செங்குந்தர்களே! நீவிர் செங்கீரையாடி அருள்வீர்களாக. சேவற் கொடியையுடைய, கருணை பொருந்தியவர்களே செங்கீரை யாடி யருள்வீர்களாக!

அருஞ்சொற்பொருள் :

புங்கம் — உயர்ச்சி. தருமன்நதி — எமதருமன் மகளாகிய யமுனை ஆறு. புனிதை — கங்கை. இதன் பின் உள்ள சகர ஒற்று விரித்தல். பழனம் – கழனி. மள்ளர் —உழவர். கடைசியர் உழத்தியர். ஆலைவாய் — கரும்பாலை உள்ள இடம். அம்புயம் — தாமரை. உகள் — புரளுகின்ற.

'வரபுத்திரர்' என்ற பன்மை 'அருளே' என ஒருமை முடிபு கொண்டுள்ளது, பன்மையொருமை மயக்கம்; அதனால், பன்மையாகவே உரை எழுதப்பட்டுள்ளது. வேறு சில பருவங்களிலும் இம்முறை கொள்ளப்பட்டமை காணத்தக்கது.

**112 இந்திரன் முதல்தேவர் யாவரும் கயிலைமலை**
**இறைவன்முன் நின்றுசூரன்**
**இகலில் படும்பா(டு) அனைத்தையும் மொழிந்திடநம்**
**ஈசனார் உளமிரங்கித்**
**தந்திடு நுதற்கண்ணி னழல்எழுப் பும்சுடர்**
**தனைக்கண்டு பார்வதிஉளம்**
**தனில்அஞ்சி ஓடஅவள் பாதச் சிலம்பினிணை**
**தாக்கநவ மணிகள்சிதறப்**

பைந்தொடி மடந்தையர்கள் ஒன்பதின் மர்கள் ஆகிப்
பரமனைக் கண்டவுடனே
பரிவுகொடு கெர்ப்பமாய் வீரவா குவினுடன்
பண்பாக வந்துதோன்றிச்

செந்திரு விளங்கவே வந்தலட் சம்வீரர்!
செங்கீரை யாடியருளே!
சேவலங் கொடியாளர்; மேவிடுந் தயவாளர்!
செங்கீரை யாடியருளே! 2

பொழிப்புரை :

வானுலகில் உள்ள தேவர்கள் தலைவனாகிய இந்திரனும், மற்ற திக்குப்பாலகர் முதலிய அனைவரும் ஒன்று சேர்ந்து சிவபெருமான் உறையும் கயிலைமலைக்குச் சென்று அப்பெருமானது திருமுன்னர் வணங்கி நின்று, தம்மிடம் பகைகொண்டுள்ள சூரபதுமன் செய்கைகளால் தாம் அனுபவிக்கின்ற துன்பங்களை எடுத்துரைக்கவும், பரமேஸ்வரன் திருவுள்ளத்தில் இரக்கம்கொண்டு, தன் நெற்றிக் கண்ணைத்திறக்க, அதிலிருந்து வெளிப்பட்ட நெருப்பின் வெம்மையைக் கண்டு பார்வதிதேவி, மனத்தில் நடுக்கம்கொண்டு, அவ்விடத்தைவிட்டு விரைவாக அகன்று அஞ்சி ஓடும்போது, அவள் திருவடிகளில் அணிந்திருந்த சிலம்புகள் ஒன்றோடொன்று மோதியதனால், அச்சிலம்புகள் உடைந்து சிதறிய நவமணிகளில் உமையம்மையின் சாயல்விழ, இறைவன் திருக்கருணையினால் அந்த நிழல்கள் ஒன்பது பெண்களாக உருவம்கொண்டு தோன்றி, இறைவனை அன்புடன் நோக்கியதால் கருக்கொள்ளத் தோன்றிய வீரவாகு முதலிய நவவீரர்களுடன், தோன்றியருளிய ஒரு இலக்கம் வீரர்களே! நீவிர் செங்கீரையாடி யருள்வீராக.

குறிப்பு :

உமாதேவியின் காற்சிலப்பில் இருந்து சிதறிய நவமணிகளின் பெயரைத் தாங்கிய மாணிக்கவல்லி, முத்துவல்லி, புட்பராகவல்லி, கோமேதகவல்லி, வைடூர்யவல்லி, வைரவல்லி, மரகதவல்லி, பவளவல்லி, இந்திரநீலவல்லி என்ற ஒன்பது பெண்களிடத்தில் முறையே வீரவாகு, வீரகேசரி, வீரமகேந்திரர், வீரமகேச்சுவர், வீரபுரந்தரர், வீரராக்கதர், வீரமாத்தாண்டர், வீராந்தகர், வீரதீரர் ஆகிய நவவீரர்களும், அப்பெண்களிடமிருந்து வெளிப்பட்ட வியர்வையில் ஒரு லட்சம் வீரர்களும் தோன்றினர் என்பது கந்தபுராணம் கூறும் வரலாறு.



113 பாரமா கியநெடுங் கிரவுஞ்ச கிரியிலே
பயில்தாரு காசூரனைப்
பங்கப் படுத்திஅவ னைச்சயங் கொண்டபின்
பார்தொழு மயேந்த்ரபுரியில்

கோரமா கியஏம கூடத்தி னிற்சென்று
குழுவினொடு பாதவீரன்
கொக்கரித் தங்கண்அசை யாதகம் பந்தனைக்
கொட்டமிட் டுப்பிடுங்கி

ஆரவா ரத்துடன் மீளவந் தக்கணத்
தடர்பூத படைகூட்டியே
அறுமுகக் கடவுள்முன் னேறுமவர் சேனைகள்
அடங்கலும் அடங்கவென்றே

தீரனா கியசூர சங்கார வீரியர்கள்!
செங்கீரை யாடியருளே!
சேவலங் கொடியாளர்; மேவிடுந் தயவாளர்!
செங்கீரை யாடியருளே. 3

பொழிப்புரை :

பருத்த நெடிய கிரவுஞ்ச மலையைத் தன் இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்துவந்த சூரபதுமனின் தம்பியாகிய தாருகாசுரன் அவமானப்படும்படி அவனை வெற்றிகொண்ட பிறகு, உலகமே வியந்து தொழும் தன்மையில் அமைந்துள்ள வீரமகேந்திரபுரிக்கு, அச்சம்தரும் பாசறையாகிய ஏமகூடம் என்னுமிடத்திலிருந்து சென்று, வீரக்கழலணிந்த பெருவீரனாகிய வீரவாகு தன் கணத்தவருடன், பெரு முழக்கமிட்டுச் சூரபன்மனால் அமைக்கப்பட்டிருந்த வெற்றித்தம்பத்தைப்

பெயர்த்தெடுத்துப், பேரொலியுடன் அங்கிருந்து மீண்டுவந்து, உடனே தமது பூதப்படையைத் திரட்டிச் சென்று, ஆறுமுகப் பெருமான் திருமுன்னர் போருக்கு வரும் அசுர சேனைகள் முழுமையும் அடங்கி ஒழியுமாறு வெற்றிபெற்று பெருவீரனாக விளங்கிய சூரபதுமன் முதலியவர்களைச் சங்காரம் செய்த வீரமுடைய செங்குந்த குலத்தோரே! செங்கீரையாடியருளுவீர்களாக.

அருஞ்சொற் பொருள்:

அடங்கலும் — முழுவதையும்.

114 முழுமதித் திருமுகக் கலைவாணி கேள்வனும்,
முராரிநெடு மாமாயனும்,
முட்டஎட் டுத்திக்கி லுண்டான பாலரொடு,
முனிவோர்கள் ஒர்எழுவரும்

பழுதில்ஆ தித்தர்பன் னிருவரும் சோமனும்
பகர்கருட காந்தருவரும்
பங்கய முதல்தெய்வ மங்கையர்கள் அனைவரும்
பன்னுகன் னியர்எழுவரும்

தொழுதகை மாறாது சூரனுக்(கு) இவ்வகைத்
தொழில்புரிந்(து) அறமெலிந்தே
துக்கப் பெருங்கடலில் மூழ்கிவெகு காலஞ்
சுழன் (று) உழன் (று) அயர்வோருடன்

செழுந்தருவின் நீழல்வாழ் தேவர்சிறை மீட்டோர்கள்!
செங்கீரை யாடியருளே!
சேவலங் கொடியாளர்! மேவிடும் தயவாளர்!
செங்கீரை யாடியருளே. 4

பொழிப்புரை:

முழுநிலவு போல ஒளிவீசுகின்ற அழகிய முகத்தை உடைய கலைமகள் துணைவனான பிரமதேவனும், 'முரன்' என்னும் அசுரனை அழித்த நெடிய மாயவனாகிய திருமாலும், எட்டுத் திசைகளிலும் பொருந்தி இருக்கின்ற திக்குப்பாலகர்களும், 'சப்தரிஷிகள்' எனப்படும் ஏழு முனிவர்களும், 'குற்றமற்ற துவாதச ஆதித்தர்' என்னும் பன்னிரண்டு சூரியர்களும், சந்திரன், கருடகாந்தருவர் முதலியவர்களும், செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் முதலான தெய்வப்பெண்கள் அனைவரும், வாராகி முதலிய கன்னியர் எழுவரும் சூரனால் தத்தமக்கிடப்பட்ட பணியைக் கூப்பிய கரங்களை எடுக்காமல் நடுங்கிச்செய்து, உடலும் உள்ளமும் மிகவும் வருந்தி, துன்பமாகிய பெருங்கடலில் மூழ்கி அதிலேயே நெடுநாள் உழன்று வருந்தித் துன்பப்படும் நிலையை மாற்றி, செழுமையான கற்பகமர நிழலில் வாழ்கின்ற தேவர்களுடைய சிறையையும் மீட்டு, இன்ப வாழ்வை வழங்கிய செங்குந்தத் தலைவர்களே' செங்கீரையாடி யருள்வீர்களாக.



அருஞ்சொற்பொருள்:

கேள்வன் — துணைவன்; ஆதித்தர் — சூரியர்; சோமன்— சந்திரன்: கருடகாந்தருவர் — பதினென் கணத்தாருள் சில பிரிவினர். செழுந்தரு — கற்பகமரம்.

115 வீறான செல்வமும், கல்வியும், கேள்வியும்,
மிக்க பொறை யும்தருமமும்,
விதரணிக ஆண்மையும், பெருமையும், சீலமும்,
மேவலரை மிகவெல்வதும்,

பேறான காரியம் செய்வதும், மாதவப்
பெரியோரை நேசிப்பதும்,
பேருலகில் நாலுகவி வாணர்புகழ் கொள்வதும்
பிரியாத மனவலிமையும்,

பாறான வேல்தொட்ட முருகனைப் பரமனைப்
பங்கயன் முதல்தேவரைப்
பல்காலும் வலம்வந்து திரிவதும், பணிவதும்,
பல்லுயிர்க்(கு) இதமுறுவதும்,

சீறான கருணையும் பெற்றுமிக் கானவர்கள்!
செங்கீரை யாடியருளே!
சேவலங் கொடியாளர்! மேவிடுந் தயவாளர்!
செங்கீரை யாடியருளே. 5

பொழிப்புரை :

பெருமைமிக்க செல்வமும், உயர்ந்த கல்வியும், நல்லநூற் கேள்வியும், மிகுந்த பொறுமையும், தருமகுணமும், திறமையுடன்கூடிய வலிமையும் பெருமையும், சிறந்த ஒழுக்கமும், பகைவர்களை வெல்லும் தன்மையும், பயன்தரும் செயல்களைச் செய்கையும், மிக்க தவத்தினை உடைய தவசிகள் (உயர்ந்தோர்கள்) இடத்தே அன்புகாட்டுவதும், பேர்பெற்ற இந்நிலவுலகில் ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்னும் நாற்கவிகளையும் எளிதில் இயற்றுகின்ற கவிவாணர்கள் வாயிலாகப் பாடல்பெற்று அதனால் புகழ் அடைவதும், பகை அழிவதற்குக் காரணமாகிய வெற்றிவேலைக் கையில் ஏந்திய முருகப் பெருமானையும், சிவபெருமானையும், பிரமதேவன் முதலிய தேவர்களையும் பன்முறையும் வலம்வந்து பணிந்து நிற்றலும், உலகில் உள்ள எல்லா உயிரினங்களுக்கும் இன்பம் தரும் செயல்களைச் செய்வதும், சிறந்த கருணை(இரக்கம்) மனமும்பெற்று, அதனால் மிக்க புகழுடையவர்களான செங்குந்தர்களே! செங்கிரையாடி யருள்வீராக.

அருஞ்சொற்பொருள்:

வீறு - பெருமை. விதரணிகம் - திறமை. மேவலர் - பகைவர். பேறு - பயன். பாறானவேல் - பகையை அழிக்கும் வேல். 'சீரான' என்பது எதுகைநோக்கி 'சிறான' என்று திரிந்தது.

**116 கந்தர மேடையில் உந்தலு மாமயில்**
**கண்டே நின்றாடும்**
**கஞ்சமு லாவிய நீள்வயல் மேவு**
**கரும்பொ டிரும்பானல்**

**கொந்தலர் வாழையும் மாவொடு பாகல்**
**கொளுங்கனி யின்தேறல்**
**கொண்டு மலர்த்திரி வண்டுகள் பாடிக்**
**கொம்பா ருஞ்சோலை**

**அந்தர மேவிய உம்பர்கள் ஊர்புக**
**அண்டர்கள் கொண்டாட**
**அம்புய மேலனம் நின்று குலாவி**
**அசைந்தாடுஞ் சீரார்**



**செந்திரு மேவிய தொண்டைநல் நாடர்கள்!**
**செங்கோ! செங்கீரை!**
**சேவக வேலவ னார்துணை யானவர்!**
**செங்கோ செங்கீரை.** 6

பொழிப்புரை:

மேகம் மேல்மாடங்களில் வருவதுகண்டு அழகிய மயில் தன் பசுந்தோகையை விரித்து ஆடும் மாளிகைகளை அடுத்துத் தாமரைகள் நெருங்கியுள்ள வயல்களில் பொருந்தி வளர்கின்ற கரும்பும், கருங்குவளையும், குலைகளை உடைய வாழையும், மாவும், பலாவும் தேனைச் சொரிய, அத்தேனை உண்டு, மலர்தோறும் பாடித்திரியும் வண்டுகள் பாடி மகிழ்ந்து தங்குகின்ற பூங்கொம்புகள் நிறைந்த அந்தச் சோலையானது, ஆகாயமளவும் உயர்ந்து சென்று தேவர்நாடு அடைய, அதைக் கண்ட தேவர்கள் மகிழ்ந்து போற்றிக் கொண்டாடுகிறார்கள். அவ்வாறு பெருவளம் உடைய வயல்களில் உள்ள தாமரைப் பூக்களில் அன்னங்கள் நின்று மகிழ்கின்ற, செல்வத்திற் கதிபதியான திருமகள் பொருந்தியிருக்கின்ற தொண்டை நாட்டிற்கு உரிய செங்குந்தர்களே! செங்கீரையாடியருள்க. வீரம் பொருந்திய வேலைக்கையில் தரித்த முருகப்பெருமானுக்குத் துணைவர்களாக வந்தவர்களே! செங்கீரையாடி யருள்க.

அருஞ்சொற்பொருள்:

கந்தரம் - மேகம்; கஞ்சம் - தாமரை; பானல் - குவளை; நீலோற்பலம் பாகல் - பலா; தேறல் - தேன். சேவகம் - வீரம். 'செங்கீரையோ! செங்கீரை' - என்பது 'செங்கோ செங்கீரை' - என மருவி வந்தது.

**117 உச்சித நாவலர் இச்சைகொள் நீள்பொருள்**
**இந்தா என்றேதான்**
**ஒப்பொடு நீடிய கைத்தல மேன்மையர்**
**ஒண்கா வின்சீரார்**

**அச்சமில் மேவலர் கைச்சிலை வாளொடும்**
**அங்கை திரண்டாட**
**அக்கண மேபொரு மிக்கவல் ஆண்மையர்**
**அன்பார் நண்பாளர்**

**வச்சிர மாமணி உச்சித தோளினர்**
**வம்பா ரும்போதார்**
**மைக்கண்மின் னார்தொழு மிக்கவில் வேளென**
**வந்தோர்! அம்தாதார்**

**செச்சைகள் மேவிய கச்சிவ ரோதயர்**
**செங்கோ செங்கீரை!**
**சேவக வேலவ னார்துணை யானவர்!**
**செங்கோ செங்கீரை.** 7

பொழிப்புரை :

பொருத்தமான நாவன்மை உடையவர்களும், எந்தப் பொருளையும் விரும்பி வந்து கேட்போருக்கு, 'இல்லை'யென்னாமல் உடனே மகிழ்ச்சியுடன் தருகின்ற கைகள் பெற்ற மேன்மை உடையவர்களும், அதனால் ஒளி வீசுகின்ற கற்பகச் சோலை போன்று இன்பம் தருபவர்களும், தங்கள் முன் பயமின்றி வரும் பகைவர் வில் வாள் முதலியவைகளோடு கூடிய கைகள் துணிபட்டுத் திரண்டு கீழே விழுமாறு, தாமதமின்றி அப்பொழுதே சண்டையிடும் ஆண்மையுடையவர்களும், அன்பு நிறைந்த நட்புத்தன்மை யுடையவர்களும், வயிரமணிமாலையும் புதிய மலர் மாலைகளையும் அணிந்த உயர்ந்த தோளினை உடையவர்களும், மையுண்ட கண்களை உடைய மின்னற் கொடி போன்ற பெண்கள் விரும்பித் தொழுகின்ற பேலான மன்பதன் போன்ற அழகுடையவர்களும், அழகிய மகரந்தம் நிறைந்த வெட்சி மலர்மாலைகள் அணிந்தவரும் கச்சிப் பதியினில் மேன்மையோடு பிறந்தவர்களுமான செங்குந்தர்களே! செங்கீரை யாடியருள்க. வீரம் பொருந்திய வேலவனுக்குத் துணையாக வந்தவர்களே! செங்கீரையாடியருள்க.

அருஞ்சொற்பொருள்:

உச்சிதம் - உசிதம் — பொருத்தம்; (உச்சிதம் விரித்தல் விகாரப்) சிலை - வில்; வம்பு - புதுமை; தாது -மகரந்தத் தூள், செச்சை - வெட்சி.



**118 அயிலைப் பொருவிழி மயிலொப் பனையவர்**
**அன்பாம் இன்பூறல்**
**அதனைப் பருகிய மதனொப் பெனவரும்**
**அஞ்சா வெஞ்சூரர்,**

**எயில்முப் புரம்எரி நகையற் கினியவர்**
**என்றே கொண்டாட**
**எழில்பெற் றிடுபல திறமைத் தயிரியர்,**
**அஞ்சா நெஞ்சாளர்,**

**பயில்வித் தைகள்பல முயல்வித் தகர்மலர்**
**பண்பா ருந்தாதார்**
**பழகிப் புனைபுயம் அழகுற் றவர்உமை**
**பங்கார் நண்பானோர்**

**செயல்பெற் றுயரிய கயிலைக் குரியவர்**
**செங்கோ செங்கீரை**
**சேவக வேலவ னார்துணை யானவர்**
**செங்கோ செங்கீரை.** 8

பொழிப்புரை :

வேல்போன்ற கூரிய கண்களை உடையவரும், மயிலைப் போன்ற அழகிய சாயலை உடையவருமாகிய பெண்களின் அன்பாகிய இன்ப ஊற்றைப் பருகி மகிழ்கின்ற, மன்மதனை ஒத்த அழகுடையவராய், அஞ்சாமையை உடைய சூரத்தனம் உடையவர்கள் என்றும், மதிலை உடைய முப்புரங்களைச் சிரிப்பால் அழித்த சிவபெருமானுக்கு இனிமையுடையவர்கள் என்றும்உலகம் புகழுமாறுள்ள அழகும்திறமும்தயிரியமும்கூடிய அஞ்சா நெஞ்சுடையவர்களும், பலவகைக் கல்விகளையும் முயன்று கற்கும் பேறிவு உடையவர்களும், மலரும் தன்மையுடைய மகரந்தம் பொருந்திய ஆத்திமாலையைத் தோள்கள் அழகுறுமாறு அணிந்தவர்களும். உமைபங்கராகிய சிவபிரானிடத்தே நட்புரிமை உடையவர்களும், தம் நற்செயல்களால்கயிலை மலைக்கு உரிமை உடையவர்களுமான செங்குந்த வீரர்களே! செங்கீரையாடி அருள்க வீரம் பொருந்திய வேலவனுக்குத் துணையாக வந்தவர்களே! செங்கீரையாடியருள்க.

அருஞ்சொற் பொருள் :

அயில் - வேல்; எயில்- மதில்; தாது-மகரந்தம்; ஆர்-ஆத்தி

119 மாலா கியமட மானார் விரகினர்,
மற்புய சற்காரர்,
வாரா நீபமொய் தாரார் மார்பினர்,
வச்ர மணித்தோளர்,

மேலா மறிவினர், நாலா கலைவலர்,
வித்வ சனர்க்கானோர்.
வீறாய் மருவலர்மார்பா ணியர்,நெடு
மிக்கவ னப்பானோர்,

பாலா கியகுண மேகூ ரறிவினர்,
பத்தி மிகுத்தோர்கள்,
பார்மே லரசெதிர் தோலா விருதினர்,
பற்குனன் ஒப்பானோர்,

சேலார் வயன்மலி பிரமா புரியவர்
செங்கோ செங்கிரை!
சேவக வேலவ னார்துணை யானவர்!
செங்கோ செங்கீரை. 9

பொழிப்புரை:

மான் போன்ற அழகிய பெண்கள் தம்மைக் கண்டு காதல் கொள்ளுகின்ற நிலைமை உடையவர்களும், மற்போருக்குரிய வலிய தோள்களைப் பெற்றவர்களும், கிடைத்தற்கு அருமையான கடப்ப மலர்கள் நெருங்கியுள்ள மாலையணிந்த மார்பினை உடையவர்களும், வைரம் போன்ற உறுதியான அழகிய தோள்களை உடையவர்களும், சிறந்த அறிவுடையவர்களும், பலவிதமான கலைகளிலும் வல்லமை உடையவர்களும், கல்விமான்களுக்கு ஏற்ற பண்புடையவர்களும். பகைவர்களுடைய மார்பினை இருப்புலக்கைபோல் குத்துகின்ற பெருமைமிக்க கையினை உடையவர்களும். மிக்க அழகுடையவர்களும், நன்மை திமைகளைப் பகுத்து அறிகின்ற கூர்மையான அறிவுடையவர்களும், பக்தியிற் சிறந்தவர்களும், பூவுலகத்தில்



அரசர்களுக்கெதிரே தோல்வி என்பதறியாத விருது உடையவர்களும், அர்ச்சுனனுக்கு இணையான வீரம் உடையவர்களும் ஆகிய கெண்டை மீன்கள் நிறைந்த வயல்கள் சூழ்ந்த காஞ்சியம் பதியில் வாழ்கின்ற செங்குந்தர்களே! செங்கீரையாடியருள்க. வீரம் பொருந்திய வேலவனுக்குத் துணையாக வந்தவர்களே செங்கீரையாடியருள்க.

அருஞ்சொற்பொருள்:

மால் - மயக்கம்; விரகு - விரகம், காதல்; வீறு - பெருமை; பால் - பகுப்பு; தோலா - தோல்வியடையாத; பற்குனன் - அர்ச்சுனன்; பிரமாபுரி காஞ்சிநகர் (பிரமன் வழிபட்டதனால் உண்டான பெயர்) 'நாலா கலை' வழக்கச்சொல்.

120 பாடக மேவிய தாளால் நாட்டிய
பைம்புய மலையாடப்
பங்கய மாமுக வெங்கதிர் வேர்வது
பனிமுத் தெனவாட

நாடக மாடிய தாளணி கிண்கிணி
நற்குர லிசைபாட
நறுமலர் நீபமொய் தெரியல்பொன் மார்பினில்
நறவு பொழிந்தாட

நீடிய குழைஅணி குண்டல மணிஅதில்
நிகழ்கதி ரொளிஆட
நிலைபெறும் அழகிய மணிதிகழ் அரைஞாண்
நிலவொளி எனஆட

ஆடக மாமலை யேநிக ரானவர்!
ஆடுக செங்கீரை!
யாவரு மாமென நாவில காதவர்!
ஆடுக செங்கீரை. 10

பொழிப்புரை:

பாடகம் என்னும் ஆபரணமணிந்த கால்களினால் தாங்கப் படுகின்ற அழகிய தோள்களாகிய மலைகளாடவும், தாமரை

போன்ற சிவந்த முகத்தில் சூரியஒளியால் எழுந்த வெள்ளிய வியர்வைத்துளிகள் குளிர்ந்த முத்துக்களைப்போல ஆடவும், நடித்தல் தொழிலிற் பழகிய கால்களில் அணிந்த சதங்கை இனிய இசையோசை எழுப்பவும், மணம் வீசுகின்ற கடப்ப மலர்மாலை அழகிய மார்பினில் தேன் சிந்துமாறு புரண்டாட வும், நீண்ட காதணியாகிய குண்டலத்தில் உள்ள மணி ஒளிவீசி யாடவும், இடுப்பில் நிலைபெற்றுத் திகழும் மணிகள் பொருத்தப்பெற்ற அரைஞாண் நிலவுபோன்று குளிர்ந்த ஒளி வீசி ஆடவும், பொன்மலைக்கு நிகரான பெருமையை உடைய செங்குந்தர்களே! செங்கீரையாடியருள்க. அனைவரும் 'உண்மைதான்' என்று கூறும்படி சொன்ன சொல் மாறாத வர்களே! செங்கீரையாடியருள்க.

அருஞ்சொற் பொருள்:

பாடகம் - பெண்கள் காலில் அணியும் ஆபரணம்; அஃது இங்குப் பொதுவாக ஆடவர்களுக்குச் சொல்லப்பட்டது. பனிமுத்து - குளிர்ந்த முத்து; தெரியல் - மாலை; நறவு - தேன் ஆடகம்-பொன்; ஆடகமாமலை-பொன்மயமான மலை(மேரு);

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

○

தாலப்பருவம்

குழந்தைக்குத் தாலாட்டைக் கூறும் பருவம். தால் - நாக்கு. தாலாட்டு - ஒருவகை நாவசைப்பு. இது ஏழாம் திங்களில் நிகழ்வது எனவும், எட்டாம் திங்களில் நிகழ்வது எனவும் கூறுவர்.

**121** பொருநீர் வயலில் வரிவாளை
பூகமடலிற் குதித்தேறிப்
பொற்பார் பழுக்காய் குலையூடே
பூமிமிசையிற் பலகோடி

சொரிமா ரிகள்போ லுதிர்படுத்தும்
துள்ளி முகிலைப் பொள்ளெனவே
துதைத்துக் கிழித்து விளையாடிச்
சுரர்பொன்உலகில் அனைவோரும்



வெருவாய் மருளப் பாய்ந்துபின்னும்
வேரி மலர்க்கற் பகமுழக்கி
மீண்டும் கழனிப் புனல்மூழ்கி
மேவும் புகழ்சேர் கச்சிநகர்

வருமா மதவே ளெனச்சிறந்த
வல்லோர் தாலோ! தாலேலோ!
வணங்கா முடிவல் லானைவென்ற
வல்லோர்! தாலோ! தாலேலோ. 1

பொழிப்புரை:

அலைவீசுகின்ற நீர் நிரம்பிய வளம்மிகுந்த வயலில் உள்ள வரிகளையுடைய வாளைமீனானது அங்கிருந்து துள்ளி எழும் பிப் பாக்குமரத்தின் பாளையிற்சென்று தாக்கி, அப்பாளையின் குலைகளில் உள்ள பழுத்த காய்கள் பூமியின்மீது, மழை பெய்வதுபோல எண்ணற்றனவாக வீழச்செய்தும், பின்பு அங் கிருந்து மேலும்தாவி மேகத்தைக்கிழித்துச் சென்று விளையாடி யும், தேவருலகமாகிய பொன்னுலகில் உள்ளவர்கள் அச்சம் கொள்ளுமாறு பாய்ந்து அங்குள்ள தேன் நிறைந்த மலர்கள் நிரம்பிய கற்பக மரங்களை அசைத்தும், அங்கிருந்து மீண்டு தான் புறப்பட்ட இடமாகிய கழனியில் வந்து நீரில் மூழ்கி வாழ்கின்ற புகழ்சேர்ந்த கச்சியம்பதியில் தோன்றிய, மன் மதனுக்கு நிகரான அழகையுடைய சிறந்த திறமையுடையவர் களே! தாலோ! தாலேலோ! யாருக்கும் தலைவணங்காத வல்லமை மிக்க வல்லான் என்பவனை வென்ற வீரம் உடையவர் களே! தாலோ! தாலேலோ!

அருஞ்சொற்பொருள்:

பூகம் - பாக்குமரம். மடல் - பாளை. பழுக்காய்- பாக்கு, பொள்ளென - விரைவாக, வேரி - தேன். மதவேள் - மன்மதன். தால்ஏல் - தாலாட்டை ஏற்றுக்கொள்க. 'தால்' என்பது முதற்கண் ஓகாரம் பெற்று வந்தது.

**122** சிந்தும் திரைநீர் ஓடைதொறும்
திரளும் கருமே திகள்கோடி
திமிதி எனச்சென் றடைபோதில்
சிறுகன் றெனவே வரிவாளை

**முந்தி முடுகி மடிதடவி**
**முலைப்பால் குடிக்கில் அம்முலைப்பால்**
**மோதும் கடல்போல் பெருகிநறு**
**முளரி வயலில் கால்பாயக்**

**கொந்து மலர்ச்செண் பகவனத்தில்**
**குலாவிப் பலமா மரத்தேறிக்**
**கொம்பிற் கனியைக் கவர்ந்திளநீர்க்**
**குலைகள் உதிரப் பாய்ந்தேறி**

**மந்தி குதிக்கும் திருக்காஞ்சி**
**வாழ்வோர்! தாலோ! தாலேலோ!**
**வணங்கா முடிவல் லானைவென்ற**
**வல்லோர்! தாலோ! தாலேலோ!** 2

பொழிப்புரை:

புரளுகின்ற அலைகளையுடைய நீரோடைகளில் திரண்டு வருகின்ற கருநிற எருமைகள் (மிகப்பலவாக) எண்ணற்றுச் சேரும் பொழுதில் அந்த நீரோடைகளில் உள்ள வரிகளை யுடைய வாளைமீன்கள் விரைந்து சென்று மோதி அந்த எருமைகளின் மடியைத்தடவிஉள்ள (அவ்வெருமைகள் தங்கள் கன்றுகள் தாய் பாலுண்ண வந்துள்ளன எனவெண்ணிப் பாலைச் சுரக்க அவ்வாறு) சுரந்தபால் கடல்போல் பெருக் கெடுத்து, நறுமணம் மிக்க தரமரை பூத்துள்ள வயல்களில் கால்வாய்களாய்ப் பாய்கிறது ஒரு பக்கம். மற்றொரு பக்கத்தில் கொத்தாக மலர்ந்துள்ள செண்பக வனத்தில் பெண் குரங்குகள் ஏறி மாமரங்களில் பாய்ந்து கிளைகளில் உள்ள பழங்களை உதிர்த்து. தென்னை மரத்தில் உள்ள இளநீர்க் குலைகளில் உள்ள காய்களை வீழ்த்தி விளையாடுகின்றன. இத்தகைய வளம் பொருந்திய அழகிய காஞ்சி நகரில் வாழ்கின்ற செங்குந் தர்களே! தாலோ! தாலேலோ. யாருக்கும் தலைவணங்காத வல்லமை மிக்க வல்லான் என்பவனை வென்ற வீரம் உடைய வர்களே! தாலோ! தாலேலோ!

அருஞ்சொற் பொருள்:

மேதி - எருமை. முளரி - தாமரை. கால்பாய - வாய்க் காலாய்ப் பாய்ந்து செல்ல.



123 **கானக் குயில்சேர் மொழிமாதர்**
**கனகமணிமா மேடையின்மேல்**
**கதிர்சூழ் மணிக்கோ புரமுடிமேல்**
**காரார் அசரர் செச்சைகள்மேல்**

**மீனத் திரள்போல் முத்துமணி**
**மிளிரும் புரிசைத் தலையதின்மேல்**
**விளங்கும் பளிங்கு மண்டபமேல்**
**வீதித் திருத்தே ருச்சியின்மேல்**

**தானத் தருமச் சாலைகள்மேல்**
**தங்கு மறையோர் மாளிகைமேல்**
**சங்கத் தமிழோர் மாமனைமேல்**
**தரிக்கும் துகிற்பூங் கொடிகள்சென்று**

**வானத் தளவும் வளர்காஞ்சி**
**வாழ்வோர்! தாலோ! தாலேலோ!**
**மயில்வா கனத்தோன் துணையாக**
**வந்தோர்! தாலோ! தாலேலோ.** 3

பொழிப்புரை :

இனிமையான குரலை உடைய குயிலைப்போன்று இன் மொழி பேசுகின்ற பெண்கள் விளையாடுகின்ற பொன்மய மான அழகிய மேல்மாடங்களின் மீதும், ஒளிவீசுகின்ற மணிகள் பதிக்கப்பட்ட சோபுரங்களின் உச்சியிலும், மேகம் நிகர்த்த கொடை வழங்கும் மன்னர்களின் அரண்மனைகளின் மேலும், விண்மீன் கூட்டங்கள்போல் முத்துக்கள் பதிக்கப்பெற்று ஒளி வீசுகின்ற மதிற்சுவர்களின் உச்சியிலும், பளிங்குகொண்டு அமைக்சப்பட்டு ஒளிவிடும் மண்டபங்களின் மீதும், வீதியில் செல்லுகின்ற அழகிய தேர்களின் சிகரத்தின்மேலும், எளி யோர்க்குத் தான தருமங்கள் செய்யப்படுகின்ற அறச்சாலை களின் உச்சியிலும், வேதம் வல்ல அந்தணர்கள் தங்கியிருக்கின்ற மாளிகைகளின் மேலும், சங்கத்தமிழில் வல்ல புலவர்கள் இருந்து தமிழை ஆராயும் இல்லங்களின் மேலும் ஏற்றி வைக்கப் பட்ட அழகிய துகிற்கொடிகள் ஆகாயபளவும் சென்று பறக் கின்ற. புகழ் வளரும் காஞ்சி நகர்க்கண் வாழ்பவர்களே!

தாலோ! தாலேலோ! மயிலை வாகனமாக உடைய முருகப் பெருமான் துணைவர்களாக வந்தவர்களே! தாலோ; தாலேலோ.

அருஞ்சொற் பொருள் :

கனகம் - பொன்; முடி - உச்சி; செச்சை - வீட்டின் மேற் பக்கம்; மீனத்திரள் - நட்சத்திரக்கூட்டம். மிளிரும் - ஒளிவீடும். புரிசை - மதில்; துகிற் கொடி - துணிக்கொடி.

124 வீசுந் திரைத்தெண் ணீர்க்கமலம்
விரிக்கும் கடல்சேர் புதுப்பூவும்,
விரைசேர் செந்தா மரைப்பூவும்
மிகுந்த வனச்செண் பகப்பூவும்

தேசு வளர்குங் குமப்பூவும்
செழிக்கும் குடமல் லிகைப்பூவும்
தேனார் சாதி மருப்பூவும்
செறிமட் டவிழ்முல் லையின்பூவும்

காசு மடற்கே தகைப்பூவும்
கழுநீர்ப் பூவும் பலபூவும்
கைக்கொண் டேந்திச் சிறியதென்றல்
கனக மணிமா ளிகைதோறும்

வாசம் பரப்புந் திருக்காஞ்சி
வாழ்வோர்! தாலோ! தாலேலோ!
மயில்வா கனத்தோன் துணையாக
வந்தோர்! தாலோ! தாலேலோ. 4

பொழிப்புரை :

கடல்போலப் பரந்து, அலைகள் வீசும் தெளிந்த (குளம், வயல் போன்ற) நீர்ப்பரப்பில் மலர்ந்துள்ள புதிய மலர்கள், மணம்பொருந்திய செந்தாமரை மலர்கள், செண்பகவகனத்தில் உள்ள செண்பக மலர்கள், நிறம் விளங்குகின்ற குங்கும மலர்கள், செழுமையை உடைய குடமல்லிகை மலர்கள், தேன் நிறைந்து மணம் வீசும் சாதிமல்லிகை மலர்கள், தேன்செறிந்த



முல்லை மலர்கள், ஒளிவீசும் பெரிய இதழ்களை உடைய செந் தாழை மலர்கள், நீலோற்பல மலர்கள், இன்னும் இவை போல் வனவாகிய பலவகை மலர்களின் மீது தென்றல் காற்றானது படிந்து அம்மலர்களின் வாசனையைத தான் கைக்கொண்டு, பொன்மயமான அழகிய மாளிகைகள் தோறும் அந்த வாசனை யைப் பரப்புகின்ற சிறந்த கச்சியப்பதயில் வாழ்கின்ற செங்குந் தர்களே! தாலோ தாலேலோ. மயிலை வாகனமாக உடைய முருகப் பெருமானின் துணைவர்களாக வந்தவர்களே தாலோ தாலேலோ.

அருஞ்சொற் பொருள்:

விரை - வாசனை; தேசு - ஒளி; தேனார் - தேன்நிறைந்த; மரு - வாசனை; மட்டு - தேன்; மடல் - மலரின் இதழ்; கேதகை- செந்தாழை (கைதை - வெண்தாழை) கழுநீர்ப்பூ - நீலோற்பல மலர்.

125 உளமா தவனப் பெருவரைபோல்
ஒற்றைத் திகிரித் திருத்தேர்மேல்
ஓட்டி நடத்தி வரும்போதில்
ஓங்குதிருமே னியின்வெயர்வின்

களங்கு தெளியத் துகிலேந்திக்
கையால்வீசுந் துகிற்கொடிகள்
கமுகு பழுக்காய்க் குலையேந்திக்
காணப் புதிய தெங்கிளநீர்

கொளுதற் கமரர் எதிரேந்திக்
கொடுப்பத்திருப்பூ வனங்களெலாம்
கொய்யு மலர்கள் தினந்தினமும்
குலவிச் சொரியும் புவியில் இந்த

வளம்பெற் றுயரும் கச்சிநகர்
வாழ்வோர்! தாலோ! தாலேலோ!
மயில்வா கனத்தோன் துணையாக
வந்தோர் தாலோ! தாலேலோ. 5

பொழிப்புரை:

பாடலின் முதலடியை, 'பெருவரை (போல்) ஒற்றைத் திகிரித் திருத்தேர் ஆதவன் உளம்போல், மேல்ஓட்டி நடத்தி வரும் போதில்' என மாற்றி இலயத்துப் பொருள் கொள்க.

பெருமையுடைய மகாமேரு மலைபோன்ற, ஒற்றைச் சக்கரம் அமைந்த அழகிய தேரினை, சூரியன் தன் மனோவேகத் திறகு ஏற்ப விரைந்து செலுத்தி வரும்போது, அத்தேர்ப் பாகனது உடலில் ஏற்பட்ட வியர்வை அடையாளம் நீங்குமாறு துணிக்கொடியை ஏந்தி அக்கொடிக் கழிகள்வீச, பாக்குமரங்கள் பழுத்த குலைகளை ஏந்தி நிற்க, புதிய இளநீரைத் தேவர்கள் ஏற்கும்படி தென்னை மரங்கள் வந்துகொடுக்க, உயர்ந்த பூ மரங்களில் உள்ள பூக்கள் நாள்தோறும் நிறைந்து சொரிய நல்ல வளங்களைப்பெற்று உலகில் உயர்வடைகின்ற காஞ்சி நகரில் வாழ்கின்ற செங்குந்தர்களே! தாலோ! தாலேலோ. மயிலை வாகனமாக உடைய முருகப்பெருமானின் துணைவர் களாக வந்தவர்களே! தாலோ தாலேலோ.

அருஞ்சொற்பொருள்:

ஆதவன் - சூரியன்; பெருவரை - பெருமைமிக்க மேருமலை; வெயர்வின் களங்கு - வியர்வை அடையாளம்; கமுகு - பாக்கு மரம்; பழுக்காய் - பாக்கு மரத்தின் பழுத்த காய் (பாக்கு); தெங்கு - தென்னை.

வேறு

126 செங்கம லாலய மங்கை யுலாவிய
தேரூர் சீர்வீதி,
செண்பக மேவிய விண்படர் சோலைகள்
சேர்பூ வார்பானல்

குங்கும மாமுலை தங்கிய மாதர்கள்
கூர்வேல் சேர்பார்வை
கொண்டவர் நாடுதல் கண்டடர் சேல்பல
கூடா தேயோடும்



பொங்கிய நீர்மடு வெங்கணு மேவிய
பூநீ ரேபாயும்
பொன்கன மாமணி தண்டிரை யாலெறி
பூமா தேசேருஞ்

சங்கரி பூசைசெய் கம்பைநல் லாறினர்
தாலோ! தாலேலோ!
தரணியுண் மால்திரு மருகசமேதர்கள்!
தாலோ! தாலேலோ.

பொழிப்புரை:

செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் உலா வரு வனவும் தேரோடும் பெருமை பொருந்தியனவும் ஆகிய அகன்ற வீதிகளையும் செண்பக மரங்களையுடைய வானளாவ உயர்ந்த மரங்களும் பூக்கள் நிறைந்த சோலைகளையும், நெருங்கிய மருதநிலத்தையும்உடைய காஞ்சியில், குங்குமத்தால் தொய்யில் எழுதிய அழகிய நகில்களையும், வேல்போலும் கூர்மையுடைய கண்களையும் உடைய பெண்கள் நீராடுவதற்கு வருதல் கண்டு, அவர்களுடையகண்களைத் தங்கள் பகை என எண்ணி நெருங்கி யுள்ள சேல் மீன்கள் அஞ்சி ஓடுகின்ற நீர்நிலைகளையும், அந்த நீர்தங்கும் மடுக்கள் வீசுகின்ற குளிர்ந்த அலைகள் பொன்னை யும் மணிகளையும் குவியலாக வாரிவீசுகின்ற செல்வவளத்தை உடையதும், சங்கரியாகிய உமாதேவி சங்கரனைப் பூசை செய்ததுமான கம்பாநதிக்கு உரிமையுடையவர்களே! தாலோ! தாலேலோ பூவுலகில், திருமாலின் மருமகனாகிய முருகப் பெருமானோடு உடன் உறைபவர்களே! தாலோ தாலேலோ.

அருஞ்சொற்பொருள்:

விண்படர் - வானத்தைத்தொடும்; பூவார் - பூக்கள் நிறைந்த; பானல் - மருதநிலம்; நாடுதல் - நெருங்கிவருதல்; அடர்சேல் - நெருக்கமாக உள்ள மீன் கூட்டம்; கூடாதே ஓடும்- அஞ்சி விலகிச் செல்லும்; சமேதர் - உடன் உறைபவர்கள்.

**127** துதிசெயு நாவலர் விதிமுறை பாடல்கொள்
தூயோர் மாயாதார்
துகளறு நீபமென் மலரணி தோளினர்
தோலா மேலாளர்

சதிதரு தாரணை முதிர்சிவ யோகியர்
கார்போல் ஈவோர்கள்
கனபெரு வாழ்வினர் அனகனை நேர்பவர்
காணா மாணாளர்

மதனவ சீகரர் இதமுறு வாசகர்
மாறா வீறாளர்
வலியகை வேலவர் இலகுச கோதரர்
மாதவ ரானோர்கள்

சததன மாதுறை நிதிதிகழ் மார்பினர்!
தாலோ! தாலேலோ!
தரணியுண் மால்திரு மருக சமேதர்கள்!
தாலோ! தாலேலோ.

பொழிப்புரை:

இறைவனையும் நல்லோர்களையும் புகழும் நாவன்மை யுடைய புலவர்கள் விதிமுறையாகத் தம்மைப்புகழ்ந்து பாடும் பாடல்களைக்கொண்ட தூயவர்களும், அழியாத புகழினை யுடையவர்களும், குற்றமற்ற கடப்ப மாலையணிந்த தோள் யுடையவர்களும், என்றும் தோல்வியடையாத மேன்மை களை யுடையவர்களும், முத்திநிலையைத் தருகின்ற யோகநிலையில் யுடையவர்களும், முதிர்ந்த சிவயோகநிலையைக் கொண்டவர் தாரணையாகிய களும், மேகம் போல வரையாது சொடுப்பவர்களும், பெருமை மிக்க வாழ்க்கையை உடையவர்களும், முருகனுக்கு நிகரான பெருமை உடையவர்களும், மற்றவர்களுக்கில்லாத பெருமை உடையவர்களும், மன்மதனைப்போன்ற அழகுடையவர்களும், இனிய சொற்களைக் கூறுபவர்களும் நிலையான பெருமை (வெற்றி) உடையவர்களும், வல்லமை மிக்க வேலாயுதத்தைக் கையிற்கொண்ட முருகனின் உடன்பிறந்தோர்களும் மிக்க தவத்தைச் செய்தவர்களும், நூறு இதழ்கள் கொண்ட தாமரை



மலரில் வாழும்திருமகளைமார்பில்தாங்கியவர்களும்,(திருவுடை யோர்களும்) ஆகிய செங்குந்தர்களே! தாலோ தாலேலோ. பூவுலகில் திருமாலின் மருகனாகிய முருகப் பெருமானோடு உடன் உறைபவர்களே தாலோ! தாலேலோ.

அருஞ்சொற்பொருள்:

மாயாதார் - அழியாத (புகழுடைய)வர். துகள் - குற்றம். சதி - முத்தி. மோட்சம். தாரணை - அட்டாங்க யோகத்தில் ஒன்று. கார் — மேகம். அனகன் — குற்றம் இல்லாதவன். வீறு — வெற்றி. பெருமை, சததளம் — நூறு இதழ்கள் கொண்ட தாமரை மலர்.

**128** புகலுறு வாய்மையர், தவறுசெய் யாதவர்,
போரே றானோர்கள்,
புகர்முக ஆனையின் உதயம தானவர்,
பூமே லாள்மார்பர்,

நகைமுக மேவிய சுமுகனை நேர்பவர்,
நாணா மாணாளர்,
நமனைவெல் தாளினர் தமைமற வாதவர்,
நாகார் நாடாள்வோர்,

சுகமொழி மாதர்கள் வெகுமயல் கூர்பவர்,
சூர்மா வேரோடே
சுருள்பட வேல்விடு முருகசகோதரர்,
தோலா மாவீரர்

சகலக லாதிபர் முககம லாலயர்
தாலோ! தாலேலோ!
தரணியுண் மால்திரு மருக சமேதர்கள்!
தாலோ! தாலேலோ. 8

பொழிப்புரை:

விரும்புகின்ற வாய்மையை உடையவர்களும், எந்தத் தவற்றிலையும் புரியாதவர்களும், போர்க்களத்தில் சிங்கம் போல்வோர்களும், புள்ளிகள் கொண்ட முகத்தை உடைய யானைபோல வலிமையுடன் போரில் தோன்றுபவர்களும்,

திருமகள் தங்கிய மார்பினை (செல்வத்தை) உடையவர்களும், சிரிப்புடன் கூடிய இனிய முகமுடைய விநாயகப்பெருமானுக்கு ஒப்பானவர்களும், நாணம் மிக்க பெருமையுடையவர்களும், எமனை உதைத்த திருவடிகளை உடைய சிவபெருமானை என்றும் மறவாது வழிபடுகின்றவர்களும், சுவர்க்க லோகத்தை ஆள்பவர்களும், கிளி போன்ற மொழி பேசும் பெண்கள் மிக்க மயக்கம் கொள்ளுகின்ற பேரழகுடையவர்களும். சூரபது மனாகிய மாமரம் வேரோடு விழுந்து அழியுமாறு வெற்றி பொருந்திய வேலைச்செலுத்துகின்ற முருகக் கடவுளின் துணைவர்களும், தோற்காத பெரிய வீரர்களும், சகல கலை களுக்கும் அதிபதிகளானவர்களும், தாமரை போன்ற அழகிய முகமுடையவர்களுமாகிய செங்குந்தர்களே! தாலோ தாலேலோ. பூவுலகில் திருமாவின் மருகனாகிய முருகப்பெரு மானோடு உடன் உறைகின்றவர்களே தாலோ, தாலேலோ.

அருஞ்சொற்பொருள் :

புகல் — விருப்பம். புகர் — புள்ளி. சுமுகன் — விநாயகப் பெருமான். நமனைவெல்தாளினர் —சிவபெருமான். நாக (ர)ர் நாடு — சுவர்க்கலோகம்.

129 மருமலர் நீபமொய் திருமணி மார்பினர்,
மாறே கூறாதார்,
வலதமிழ் வாணர்கள் புகழதுமேவிய
மாவீ ரியதீரர்,

திருவளர் வேதியர் கலிகெட நீடிய
தீரா வீறாளர்,
சிவகண பூசைகள் மனதய வோடுசெய்
சீமா னார்மார்பர்,

விருதர சாள்பவர், சமுகவ சீகரர்,
வேள்போ லேரூபர்,
விகடவொன் னார்முடி மகுடம தேறிய
மாமே லூர்தீரர்,



தரும தயாபரர், குருவடி நேசிகர்
தாலோ! தாலேலோ!
தரணியுண் மால்திரு மருக சமேதர்கள்
தாலோ! தாலேலோ! 9

பொழிப்புரை:

மணம்மிகுந்த கடப்பமாலையணிந்த அழகிய மார்பினை யுடையவர்களும், (பெரியோர் சொல்லுக்கு) எதிர்பேசாதவர் களும், நன்கு கற்று வல்ல தமிழ்வாணர்கள் பாடும், புகழ் பொருந்திய பெரிய வீரதீரம் உடையவர்களும், புகழ் வளர்க் கின்ற வேதம்வல்ல அந்தணர்களின் வறுமை நீங்குமாறு செய்யும் நெடிய செல்வம் தரும் தனிப்பட்ட சிறப்புடையவர் களும் சிவபெருமானுக்குரிய பூசைகளைத் தவறாமல் ஆன் மார்த்தமாகவும் பரார்த்தமாகவும் மனத்தில் கொண்ட அன்போடு செய்பவர்களும், திருமகளை மார்பில் உடையவர் களும், பட்டங்கட்டி ஆள்பவர்களும், சமூகத்தில் உள்ளவர் களைத் தம் வசப்படுத்துபவர்களும, மன்மதன் போன்ற அழகுடையவர்களும், மாறுபாடு கொண்ட பகைவர்களுடைய தலைக்கிரீடங்களின்மேல் பாய்கின்ற குதிரைமீதிலமர்ந்து செல்லும் தீரம் உடையவர்களும், தருமம் செய்யும் அருளுடை யவர்களும், தம் குருவின் திருவடிகளை என்றும் மறவாமல் நேசித்து அன்பு செலுத்துகின்றவர்களுமாகிய செங்குந்தர்களே தாலோ! தாலேலோ. பூவுலகில் திருமாலின் மருமகனாகிய முருகப்பெருமானோடு உடன் உறைபவர்களே! தாலோ! தாலேலோ.

அருஞ்சொற்பொருள் :

மாறுகூறாதார் - எதிர்த்துப்பேசாதவர்கள்; கலி- வறுமை; சீமானார் - செல்வர்கள்; விருது - பட்டம்; வசீகரர் - வசப் படுத்துவோர்; ரூபம் - அழகு; விகடம் - வேறுபாடு, மாறுபாடு; ஏறுதல் - பாய்தல்; மா - குதிரை; தயாபரர் - அருள்மிகுந்தவர் கள்; சீமான் - ஸ்ரீமான் - திருமகள் கேள்வன்.

தாலப்பருவம் முற்றிற்று.

## சப்பாணிப் பருவம்

பாணி என்பது 'கை' எனப் பொருள்படும். குழந்தை இரண்டு கைகளையும், ஒன்றாகச் சேர்த்துக்கொட்டும் பருவம். இஃது குழந்தையின் ஒன்பதாம் திங்களில் நிகழ்வது என்று கூறுவர். (சஹபாணி - சப்பாணி)

**130** செங்கடம் பணிகுடுமி உச்சிக்கும்நாசிச்
செழுங்குவளை இருவிழிக்கும்
சீர்கொண்ட மெய்க்கும்நெய்க் காப்பிட்டு வளரத்
திருத்தாள்கை நீவிவிட்டுக்

குங்குமப் புனலாட்டி மிருகமத புனலொடுங்
கோதிலா அளகமாட்டிக்
கூறரிய பட்டாடை யாலுடல் புலர்த்திக்
குலாவிமடி மீதிருத்திப்

புங்கநீ றிட்டுத் தரைக்காப்பு மிட்டினிய
புழுகுசவ் வாதுமிட்டுப்
போதவெண் சங்கில்நெய் பால்விட்டுள் அன்புகொடு
பூரிக்க வேபுகட்டிச்

சங்கரி எடுத்துமுத் தாடவளர் கெம்பீரர்!
சப்பாணி கொட்டியருளே!
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்!
சப்பாணி கொட்டியருளே. 1

பொழிப்புரை :

சிவந்த கடப்ப மலர்களை அணிகின்ற தலைமுடிக்கும், மூக்கிற்கும், குவளை மலர் போன்ற இருகண்களுக்கும், சிறப்புடைய திருமேனிக்கும் எண்ணெய்க் காப்பிட்டு, வளர்கின்ற அந்தக் கால்களுக்கும் கைகளுக்கும் எண்ணெய் தடவிவிட்டு, குங்குமப்பூக் கலந்த நீராட்டி, கத்தூரி கலந்த வாச நீரால் குற்றமற்ற தலைமுடியைக் கழுவி, சொல்லுதற்கரிய சிறப்புடைய பட்டாடையினால் உடலின் ஈரத்தைப் போக்கித்தன் கரங்களில் எடுத்துக் குலாவி, மடிமீதில் அமரவைத்து, தூயதிருநீற்றை நெற்றியில் அணிவித்து, காப்பாக நெற்றியில் நீறிட்டு, தரையைத் தேய்த்து மண் பொட்டு இட்டு, இனிய மணம் வீசுகின்ற புனுகு சவ்வாது பூசி, மிகுந்த வெண்ணிறமுடைய சங்கினால் எண்ணெயும் தாய்ப்பாலும் எடுத்து உள்ளத்தில் ஊறும் அதிக அன்புடன் புகட்டி, உமையம்மை எடுத்துமனமகிழ்வுடன் முத்தமிட்டு வளர்க்க வளர்ந்த நலவீரர் வழிவந்த பெருமிதம் உடையவர்களே! சப்பாணி கொட்டி அருள்வீர்களாக! சங்குகள் நெருங்கியிருக்கின்ற நீர்வளம் பொருந்திய வயல்களை உடைய செங்குந்த வளநாட்டிற்குரியவர்களே! சப்பாணி கொட்டியருள்வீர்களாக!



அருஞ்சொற் பொருள்:

நீவி - பூசி, தடவி; மிருகமதம் - கத்தூரி; புலர்த்தி - துடைத்து; ஈரத்தைப்போக்கி; தரைக்காப்பு - பூமி மண்ணை நீர்விட்டுத் தேய்த்து நெற்றியில் திலகம்போல் இடுவது (இவ்வாறு செய்வதால் மண் முதலிய ஐம்பூதங்களாலும் தீங்கு வாராது என்பது, முற்காலத்தே கடைப்பிடித்து வந்த வழக்கம்) கெம்பீரர் - பெருமிதம் உடையவர்கள்.

**131** விரிமடல்கள் செறிகின்ற தென்னைவளம் ஒருகோடி
மேல்வளர்ந் தேகிவிண்ணின்
மேவிஅட ருந்தருப் பூமலர் சொரிந்துமணம்
வீசுகொலு வேந்தன்மகிழும்

பிரசமொழி உறுகச்சி, பெண்ணரசி உடன்நின்று
பெருமைகொடு நடனஞ்செயும்
பேடைமயில் வானரம் பையரிளைப் பாறவே
பிரியமோ(டு) இளநீர்தர

இரவிரத சாரதி செழுங்கமல கரமதும்
இளைப்பாற நல்துகில்களால்
ஏந்துகொடி வீசியவ னும்பரி நடத்திட
இருக்கும் திருக்காஞ்சியார்

**தருவனைய கரசுமுகர்! வரகுமரி தருபாலர்!**
**சப்பாணி கொட்டியருளே!**
**சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்!**
**சப்பாணி கொட்டியருளே.**

பொழிப்புரை :

மிகவிரிகின்ற பாளைகள் நெருகியுள்ள, தென்னஞ்சோலையில் உள்ள கோடிக்கணக்கான தென்னை மரங்கள் மிக உயரமாக வளர்ந்து வானுலகுவரை சென்று அங்கு நெருங்கியுள்ள தேவலோக மரங்களின் பூக்களை உதிரச்செய்து மணத்தைப் பரப்ப, கொலுவீற்றிருக்கும் இறைவன் மகிழ்ந்திருக்க, தேன் போன்ற இனிய மொழிபேசும் கச்சிப் பெண்ணரசியாகிய காமாட்சியம்மை பக்கமாகச் சென்று சிறப்பாக ஆடுகின்ற பெண் மயில்களைப்போல நடனமாடும் தேவலோகத்து அரம்பையர்கள் களைப்பைப் போக்கிக்கொள்ள அத்தென்னை மரங்கள் அவர்களுக்குத் தம்மிடம் உள்ள இளநீர்களைத் தர, சூரியனுடைய தேர்ச் சாரதியாகிய அருணனுடைய, செந்தாமரை மலர்போலும் சிவந்த கைகள் இளைப்பாற, துகிற்கொடிகள் துகிலை ஏந்தி வீசி அவன் புரவிகளைச் செலுத்து மாறு செய்கின்ற மிக்க வளமுடைய அழகிய காஞ்சி நகரை உடையவர்களும், கற்பகத் தருவைப்போலக் கொடுக்கின்ற கரங்களைக் கொள்வோர்களும், இனிய முக மண்டலங்களை உடையவர்களும் ஆகிய செங்குந்தர்களே! இமயமலைக் குமரியாகிய பார்வதியிடத்தே தோன்றியவர்களே! சப்பாணி கொட்டி அருள்வீர்களாக. சங்குகள் . . . . . அருள்வீர்களாக.

அருஞ்சொற் பொருள் :

மடல் - பாளை; பிரசம் - தேன்; வான் அரம்பையர் - தேவலோகத்திலுள்ள நடன மாதர்கள்; இரவி ரத சாரதி-சூரியனுடைய தேர்ப்பாகனாகிய அருணன்; பரி - குதிரை:

**132 பகலவன் உதிக்குமொளி கண்டுவிண் டொருகோடி**
**பங்கயம் முறுக்கவிழவே**
**பச்சைப் பசுந்தேன் அதிற்பெருக் கோடியே**
**பன்னுசெந் நெற்பணைதொறும்**



**அகல்கடல் எனப்பெருகி ஓடஅரு கேநிற்கும்**
**அன்னப்பெ ரும்பெடையெலாம்**
**அழகுபெறு சங்கினைக் குழவியென வேஅணைத்**
**தணிகொள்சிற கால்மூடவும்**

**புகலரிய கடைசியர்கள் கண்களைத் கண்டுதண்**
**புனல்வளர்த் திடுகயலெலொம்**
**பொருகெண்டை யாமெனவு மொருகோடி திரியுமப்**
**புதுமைகண்(டு) அதிசயித்துச்**

**சகமதிக் குங்கச்சி யம்பதிச் செங்குந்தர்**
**சப்பாணி கொட்டியருளே!**
**சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்**
**சப்பாணி கொட்டியருளே.** 3

பொழிப்புரை :

சூரியன் உதித்து வருகின்றபோது அவனுடைய ஒளியைக் கண்டு கோடிக்கணக்கான தாமரை மொட்டுக்கள் இதழ்விரித்து மலர்கின்றன. அம்மலர்களில் இருந்த பசுமையான தேன் பெருக்கெடுத்து வழிந்தோடி செந்நெல் விளையும்வயல்களில் அகன்ற கடல்போலப் பாய்கின்றது. அவ்வயல்களினருகில் நின்று கொண்டிருக்கும் பெரிய அன்னப்பேடுகள், அழகிய வெண்சங்குகளைத் 'தம் குஞ்சுகள்' என்று எண்ணிக் காப்பாற்றுவதற்காக அவற்றை அணைத்துக்கொண்டு சிறகுகளால் மூடிக்கொள்கின்றன. குளிர்ந்த நீர்நிலைகளில் உள்ள கயல்மீன்கள், சிறந்த உழத்தியர்களுடைய கண்களைக்கண்டு 'இவைகள் கொண்டை மீன்கள்' என்று எண்ணி நீர்நிலைகளின் ஓரத்தில் ஒதுங்கிச் சென்று திரிகின்றன. இப்படிப்பட்ட புதுமைகளைக்கண்டு உலகத்திலுள்ளவர்கள் அதிசயித்து மதித்துப் போற்றுகின்ற கச்சிப் பதியில் வாழுகின்ற செங்குந்தர்களே! சப்பாணி கொட்டியருள்வீர்களாக.

அருஞ்சொற் பொருள் :

பகலவன் - சூரியன்; நெற்பணை - நெல்வயல்; அன்னப் பெடை - பெண் அன்னம்; கடைசியர் - உழத்தியர்; சகம் மதிக்கும் - உலகிலுள்ளார் பாராட்டும்.

133 வடமறுத் துத்தனது நிழலினைக் கருவியே
வட்டமிட் டுப்பொருதுவன்
வானப் பிறைக்கோடு கொண்டுதிண் டாடநெடு
மாமலை களைத்துளைத்தும்

இடர்முகில் திரளைப் பெருந்துதிக் கையினால்
எட்டிப் பிடித்(து) அதிர்க்கும்
இடிப்பெருங் குரல்முழக் கத்தினைப் பிளிறியே
இடிசத்த மதில்அடக்கிப்

படவரும் பகையரசர் சேனையும் பொடிபடப்
படியடிப் படமிதித்துப்
படர்குருதி வெள்ளப் பெருக்கெடுத்(து) ஓடவே
பதறிவெண் கண்சிவக்கும்

தடமும் மதக்களிற்(று) உலவிவரு விதரணிகர்
சப்பாணி கொட்டியருளே!
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்
சப்பாணி கொட்டியருளே. 4

பொழிப்புரை :

தன்னைக் கட்டியிருக்கின்ற காற்சங்கிலியை அறுத்துக் கொண்டு, தன்னுடைய நிழலினையே எதிரிப்படை யானை என்று எண்ணிக் கோபித்து அதனுடன் சுழன்று சண்டையிட்டும், வானத்தில் உள்ள நிலவுபோன்ற வலிமையுடைய வளைந்த தன் தந்தங்களால் பெரிய மலைகளைக் குத்தித் துளையிட்டும், வானில் உள்ள மேகக்கூட்டங்களைத் தன் துதிக்கையினால் பிடித்து இழுத்தும், இடியினால் வானில் உண்டாகும் பெரிய முழக்கத்தினைத் தன்னுடைய பிளிறல் செய்கின்றஓசையினால் கேட்காதவாறு அடக்கியும், போர்புரிந்து அழிவதற்காக வருகின்ற பகை மன்னர்களுடைய சேனைகள் அழிந்து துகள்களாகுமாறு பூமியில் இட்டுத் தேய்த்து இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடுமாறு செய்தும், வெளுத்த கண்கள் கோபத்தினால் சிவக்கின்ற தன்மையுடைய, பெருத்த மும்மதங்



கொண்ட யானைமீதேறி உலவிவருகின்ற திறமைசாலிகளான செங்குந்தர்களே! சப்பாணி கொட்டி அருள்வீர்களாக. சங்குகள் . . . . . அருள்வீர்களாக.

அருஞ்சொற் பொருள்:

வடம் - கயிறு; சங்கிலி; கறுவி- கோபித்து; முகில்திரள் - மேகக்கூட்டம்; அதிர்க்கும் - ஒலிக்கின்ற; பட வரும் - அழிவதற்கு வரும்; படி - பூமி; தட - பெரிய (உரிச்சொல்); களிற்று உலாவி - களிற்றின்கண் ஏறி உலவி - ஏழாம் வேற்றுமைத் தொகை; விதரணிகர் - திறமைசாலிகள்.

134 மிக்கவே தியர்பரவு சீகாழி யம்பதியில்
வேதியன் புதல்வனாகி
வேதாக மம்புரா ணங்கற்றுணர்ந்(து) உதவும்
விஞ்சையர் மதிக்குமதுரைச்

சொக்கநா தன்முனஞ் சமணர்எண் ணாயிரர்த்
தொகுதிகூட் டிப்பகைஞராய்ச்
சுந்தர சௌந்தரிய பாண் டியன் சபைதனிற்
சொற்றமிழ்க் கவிதைபாடித்

திக்குள்ள பேரென்ன வைகையால் எதிரேடு
செலவிடுத்(து) அமணைவென்ற
செந்தழ்ச் சம்பந்த வடிவமா கியகுமரர்
சேடசய னத்தில் வளருஞ்

சக்ரபா ணிக்குரிசில் மருகருக்(கு) இளையவர்கள்!
சப்பாணி கொட்டியருளே!
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்
சப்பாணி கொட்டியருளே. 5

பொழிப்புரை ::

பெருமைமிக்க அந்தணர்கள் புகழ்ந்து துதிக்கின்ற சீகாழிப் பதியில் அந்தணர்குலத்தில் சிவபாத இருதயருக்குப் புதல்வராய் அவதாரம் செய்தருளி, வேதங்களையும், ஆகமம், புராணம் முதலியவைகளையும் கற்றுத் தெளிந்த புலவர்கள் உயர்வாக

எண்ணுகின்ற மதுரையில் கோயில் கொண்டெழுந்தருளியுள்ள சொக்கேசப் பெருமான் திருமுன்னர்ச் சென்று வணங்கி, தம்முடன் வாதம் செய்ய வந்த சமணர்கள் எண்ணாயிரம்பேரை அழகிய பாண்டிய அரசனது அவையில் ஒன்றாகச் சேர்த்து இறைவன் திருவருளால் பதிகம்பாடி, எல்லாத்திசைகளிலும் உள்ளவர்கள் (சமணர்கள்) இகழ, வைகையாற்று நீரில் பதிகம் எழுதப்பட்ட ஏடு நீரோட்டத்தை எதிர்த்துச் செல்லுமாறு விடுத்து அவர்களது பகையை வென்ற தமிழ் ஞானசம்பந்தராக அவதாரம் செய்தருளியவரும் பாம்பணையில் பள்ளிகொள்ளும் சக்கரப்படையைக் கையில் தரித்ததனால் 'சக்கரபாணி எனப் பெயர் பூண்ட சிறந்த திருமாலின் மருகராகவுள்ளவரும் ஆகிய முருகப்பெருமானுக்கு இளைய செங்குந்தர்களே! சப்பாணி கொட்டியருள்வீர்களாக சங்குகள் ...... ... அருள்வீர்களாக.

குறிப்பு :

கூன் பாண்டியன், திருஞான சம்பந்தரால் நோய் நீங்கப் பெற்று, நின்றசீர்நெடுமாறன் எனப்பெயர் பெற்றதால் சௌந்தரிய பாண்டியன் எனப்பட்டான். இப்பாடலின் வரலாற்று விரிவினைப் பெரியபுராணம் திருஞானசம்பந்கர் புராணத்தில் காண்க. முருகனே திருஞானசம்பந்தராக அவதரித்தார்என்பது தக்கயாகப் பரணியில் சொல்லப்பட்டது.

அருஞ்சொற்பொருள்:

பரவு — துதிக்கின்ற; விஞ்சையர் — புலவர் (வித்தியாதரர்); சுந்தரம், சௌந்தரியம்—அழகு; சேடன் — ஆதிசேடன்; வளரும் — கண்வளரும்; உறங்கும்; பாணி — கை; குரிசில் — உயர்ந்தவன்.

135 முருகுவிரி செங்காவி மலர்களைக் களைகளையும்
மோகனக் கடைசிய ரெலாம்
முதிரவிளை செந்நெல்வயல் வாய்தொறுங் கூடியே
முத்துமணி களைவாரியே

பருகுமது விலைதனைக்(கு) அனுதினம் அளக்கும்அவர்
பரவியிடு குரவையோசை
படர்கடல் திரையொலி அடங்கலும் அடங்கவிரி
பங்கயப் பொய்கைஎல்லாம்



திரிதரும் பவளமென மின்னுகால் அன்னங்கள்
சேவலொடு கூடிமருவும்
சிறகால் அணைத்துவெண் பணிலங்க ளைத்தனது
சிறுகுழவி எனவளர்க்கும்

தருதிரு வணாமலையில் வருசைவ முதலியர்கள்!
சப்பாணி கொட்டியருளே!
சங்குந்து வயல்மேவு செங்குந்த வளநாடர்!
சப்பாணி கொட்டியருளே. 6

பொழிப்புரை:

மணம் பரப்புகின்ற செங்குவளை மலர்களை வயல்களில் களைகளாகப் பிடுங்கி எறிகின்ற, அழகால் மன மயக்கத்தைத் தருகின்ற உழத்தியர்கள், நன்றாக முற்றி விளைந்திருக்கின்ற செந்நெலின் ஊடே தோன்றிய முத்துமணிகளை வாரி, அவற்றைத் தாம் உண்கின்ற மதுவுக்கு விலையாகக் கொடுப்பார்கள். அத்தகைய அவர்கள் நாள்தோறும் குரவையாகப் பாடும் பெரிய ஓசையானது, விரிந்து பரந்துள்ள கடல்அலைகள் உண்டாக்கும் ஓசையை முழுவதுமாக அடக்கித் தான் மேலெழுந்து ஒலிக்கும்; அஃதன்றித் தாமரை மலர்ந்துள்ள குளங்கள்தோறும் பவளம்போன்ற சிவந்த கால்களை உடைய அன்னப்பறவைகள் தம் சேவல் (ஆண்பறவை) களுடன் கூடி மகிழ்ந்து, அக்குளத்தில் உலவும் வெண்மையான சங்குகளைத் தம் சிறு குழந்தைகள் என எண்ணிச் சிறகுகளால் அணைத்து வளர்க்கும். இத்தகைய நிலவளம் நீர்வளம் உடைய திருவண்ணாமலையில் வாழுகின்ற சைவசமயநெறியில் தவறாது நிற்கும் முதலியர்கள் எனப்படும் செங்குந்தர்களே! சப்பாணி கொட்டியருள்வீர்களாக. சங்குகள்...... அருள்வீர்களாக.

அருஞ்சொற் பொருள்:

முருகு — வாசனை; காவி — நீலோற்பலம்; குவளை; மோகனம் — மயக்சம் தருவது; முதிரவிளை — முற்றிவிளைந்த; குரவை — மகளிர் ஆடும் ஒருவகை விளையாட்டு; பணிலம் — சங்கு.

136 தீதொன்று நினையாத சிந்தையது பெற்றோர்கள்
செங்கடப் பந்தாரினோர்,
சேவலங் கொடியினோர், நாவிலங் காதவர்கள்,
செஞ்சவர மதுபடைத்தோர்,

மூதண்ட மளவுமர சாளுமச் சூரன்முன்
முடுகுமுத் தண்டமொழிய
மூவிரு முகத்தவன் துணையாக வந்தவர்கள்,
முச்சக மதிக்குமறிவோர்,

தாதொன்று மலரளக பாரமங் கையர்கொள்வேள்
தன்னைநிக ரானவடிவோர்,
தறுகண் புலித்தண்டை மல்லாரி சேகண்டி
சகலவிரு தும்படைத்தோர்

கோதண்ட மால்மருக ராய்வந்த ரணசூரர்!
கொட்டியருள் சப்பாணியே!
குருபூசை சிவபூசை மறவாத தயவாளர்!
கொட்டியருள் சப்பாணியே. 7

*பொழிப்புரை :*

*எந்தக்காலத்தும் எவரொருவருக்கும் தீமைசெய்ய எண்ணாத மனம் உடையவர்களும், செங்கடப்ப மாலை அணிந்தவர்களும், அழகிய சேவற் கொடியினை உடையவர்களும், சொன்ன சொல் தவறாதவர்களும், நிறைந்த செல்வம் உடையவர்களும், பெரிய அண்டங்களுக்கு உட்பட்ட உலகங்களையெல்லாம் அரசாளுகின்ற சூரபதுமனுக்கு முன்னாக விரைந்து வரும் தேர்ப்படை, யானைப்படை, குதிரைப்படை என்னும் முப்படைகளும் அழிந்தொழியுமாறு ஆறுமுகப் பெருமானுக்குத் துணைவர்களாகப் போரிட வந்தவர்களும், மூவுலகத்திலுள்ளவர்களும் புகழுகின்ற அறிவுத்திறம் உடையவர்களும், தேன்பொருந்திய மலர்களைச் சூடிய கூந்தலையுடைய இளமங்கையர் விரும்புகின்ற மன்மதனுக்கு ஒப்பான அழகுடையவர்களும், அஞ்சாமையுடையவர்களும், புலிக்கொடி கட்டிய கழிகளை உடையவர்களும், மல்லாரி, சேகண்டி முதலிய எல்லா வாத்திய விருதுகளையும் பெற்றவர்களும், கோதண்டம் என்னும் வில்லேந்திய திருமாலுக்கு மருகராக வந்த, போர் வல்லவர்களுமாகிய செங்குந்தர்களே! சப்பாணி கொட்டியருளுக. எந்தக்காலத்தும் குருவைப் பூசிப்பதையும், சிவபூசை செய்வதையும் மறவாத அன்புடைவர்களே! சப்பாணி கொட்டியருளுக.*



*அருஞ்சொற்பொருள் :*

*செஞ்சவரம் — நிறைந்த செல்வம்; சவரம் — பொன்; முடுகுதல் — விரைந்துசெல்லுதல், தண்டம் — தண்டு, சேனை; முத்தண்டம் — மூவகைப்படை; அளகபாரம் — கூந்தல்; தறுகண் — அஞ்சாமை; மல்லாரி — பம்பைமேளம்; சேகண்டி - சேமக்கலம். (இ)ரணசூரர் — போரிடுவதில் வல்லவர்கள். குருபூசை — குருவை வணங்குவது (பொதுவாக சப்த குருக்களை வணங்குவதும், தனியாக தாதார குருவை வணங்குவதும் சிவபூசைக்கு முன் செய்யப் பெறுவது என்பர்).*

137 நூபுர முழங்குதிரு வடியரம் பையரெலாம்
நுண்ணிடை அசைந்துமெலிய
நுவலரிய கற்பகா டவிமலர் சொரிந்தொரு
நொடிப்பொழுதும் அகலாமலே

மூபுரம் எரித்தநகை ஏகம்ப வாணர்தம்
முழுவழகு திகழநின்ற
முடுகுதூ லப்பெரிய சிவலிங்க மென்னவே,
முத்திநெறி யைக்குறித்து

மாபுரங் கொண்டதிரு மேனிமா லயனும்அவ்
வானவர் குழாத்தினுடனே
வந்துவந்(து) அனுதினம் அருச்சனை புரிந்துநல்
வரமுதவு கெனவழுத்தும்

கோபுரம் வானளவும் வளர்கச்சி நகரதிபர்!
கொட்டியருள் சப்பாணியே!
குருபூசை சிவபூசை மறவாத தயவாளர்
கொட்டியருள் சப்பாணியே. 8

பொழிப்புரை:

சிலம்புகள் ஒலிக்கின்ற அழகிய கால்களை உடைய தேவ லோகத்துப் பெண்கள் தங்கள் நுண்ணிய இடை அசைந்து வருந்துமாறு, சொல்லுதற்கரிய புகழ்மிக்க கற்பகக்காவில் உள்ள மலர்களைத் தூவிக் கண நேரமும் விட்டுப் பிரியாமல், 'திரிபுரத்தைத் தம் சிரிப்பினால் எரித்தழித்த திருவேகம்பப் பெருமானுடைய, அழகுபொலியும், தூலலிங்கம் இது' என்று வணங்க, வீடுபேறடைய எண்ணி வைகுந்தத்தையும், திருமகளை மார்பில் தாங்கிய அழகிய மேனியையும் உடைய திருமாலும், பிரமதேவனும் தேவர்கள் கூட்டம் தம்மைச் சூழ்ந்துவர நாள்தோறும் வந்து அப்பெருமானை வழிபாடு செய்து எங்களுக்கு நல்ல வரங்களையருளவேண்டும் என்று போற்றி நிற்கும் கோபுரம் ஆகாயத்தையளாவ வளர்ந்து நிற்கின்ற காஞ்சி நகரக்குரியவர்களே! சப்பாணி கொட்டியருளுக. எந்தக்காலத்தும் ...... சப்பாணி கொட்டியருளுக.

குறிப்பு:

'திருமாலாம் அவன் விருப்பெய்தவும், மலரவன் ஆசைப் படவும், நின் அலர்ந்த மெய்க்கருணையும் நீயும் அவனியிற் புகுந்தெமை ஆட்கொள்ள வல்லாய்' என்ற மணிவாசகரின் திருப்பள்ளி எழுச்சி இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

அருஞ்சொற்பொருள்:

நூபுரம் — சிலம்பு. அரம்பையர் — தேவ கணிகையர். கற்பகாடவி — கற்பகச்சோலை. கோபுரம் — தூலலிங்கமாகும். மாபுரம் — பரமபதம்; (கோபுரம் தூலலிங்கம் எனவும், பலி பீடம் பத்ரலிங்கம் எனவும் கூறப்படும்).

**138 செந்திரு மடந்தையுறை மார்பர்சோ ழேந்திரன்**
**சீர்கொண்ட சமுகமதனிற்**
**சென்றுவிடை கொண்டுகண் டோர்கள்கொண் டாடவே**
**தீரவீ ரியமதாக**

**வந்துமக மாயிதிரி சூலிமா காளிமுன்**
**வலியவர மதுவினவியே**
**வாங்கிக்கொண் டப்பொழுது வீரதத் துவமுடன்**
**வலியதூண் மிசையேறியே**



**தந்திரவல் லானுடைய புரிசையுட் சென்றவன்**
**தலையறுக் கும்பொழுதினில்**
**தையலவன் மனைவிமங் கிலியமுத வென்னவே**
**தந்துபொற் றலைகொணர்ந்தோர்**

**கொந்தலர் கடம்பணி புயாசலர்கள் மகிபாலர்**
**கொட்டியருள் சப்பாணியே!**
**கோதற்ற செங்குந்தர் வீரநா ராயணர்கள்!**
**கொட்டியருள் சப்பாணியே.** 9

பொழிப்புரை:

திருமகளை மார்பில் தரித்த திருமாலுக்கு நிகரான சோழ மன்னனுடைய சிறப்பு மிகுந்த அரச சபையில் சென்று (வல்லான் என்னும் கொடியவனை அழித்து வருவதாகக் கூறி) விடை பெற்றுக்கொண்டு, தம்மைக் கண்டவர்கள் புகழ்ந்து கொண்டாடுமாறு படைகொண்டு வீரதீரத்துடன் சென்று, மகமாயி, திரிசூலி, மாகாளி என்று பலவாறு புகழ்பெற்ற துற்கையின் முன்னர்ச்சென்று வரங்கள் கேட்டுப்பெற்று, மிக்க வீரத்துடன் சென்று அவ்வல்லான் (நீர் அரண் சூழ) நிறுவியிருந்த வலிய கம்பத்தின் மேலேறிச் சென்று சூழ்ச்சிமிக்க வல்லானுடைய கோட்டை மதிலினுட்சென்று அவனுடைய சிரமறுக்கத்துணிந்த போது, அவன் மனைவியாகிய அணங்கவல்லி, மாங்கல்யப்பிச்சை தந்தருள வேண்டுமென வேண்டிநிற்ப, அவ்வாறே அருள்செய்து, வல்லான் தலைபோன்று ஒரு பொய்யான (பொன்னாலாகிய) தலையைக்கொண்டுவந்து சோழனுக்குக் காட்டிய வீரம் உடையவர்களும், கொத்தாகிய கடப்ப மலர்மாலையணிந்த மலைபோன்ற தோள்களை உடையவர்களும், பூவுலகைக் காப்பவர்களுமாகிய செங்குந்தர்களே! சப்பாணி கொட்டியருளுக. குற்றமற்ற செங்குந்தர்களாகிய வீரநாராயணர்களே! சப்பாணி கொட்டியருளுக.

(இந்த வரலாறு விரிவாக ஈட்டி எழுபதில் கூறப் பட்டுள்ளது)

அருஞ்சொற்பொருள்:

தந்திரம் — சூழ்ச்சி. புரிசை — (கோட்டை) மதில். புயம் — தோள். அசலம் — மலை. புயாசலர் — மலைபோன்ற தோள் களுடையவர். மகி — பெரிய பூமி. பாலர் — காப்பவர்.

139 வளர்தா ழிசையுலாநன் னெறிசேர் பரணிகோவை
குற்றமில் நல்தூது
வகைசேர் மடல்கள்சார மியல்சேர் கவிதைமாலை
யின்னிசை யிற்கூறும்

ஒளிசே ரகவலாசு கவியோ டினியபாவை
கற்றவர் சொற்றபாடல்
உடனே புனைசெய்தானை நவமா மணிபொன்னாடை
பொற்பணி நற்சீர்மை

வளமார் கடையநீடு விரலா ழிகள்மதானி
முத்தணி நட்போடே
வகையா யுதவுவோர்கள் நயவா சகநன்மேலர்
சற்குண மிக்கோர்கள்

குளிர்சேர் கயிலைகாவ லுடையோர் பரிவினோர்கள்
கொட்டுக சப்பாணி!
குருபூ சையுமெய்ஞ்ஞான சிவபூசை யும்உள்ளோர்கள்
கொட்டுக சப்பாணி.

பொழிப்புரை:

பாக்களின் இனமாகப் பாடப்படும் தாழிசை; பிரபந்த வகைகளான உலா, பரணி. கோவை, குற்றமற்ற தூது, மடல் போன்றவை சேர்ந்த நல்ல தன்மைகளை உடைய கவிதை மாலைகள், இசை கூட்டிக் கூறப்படுகின்ற புகழ்மிக்க அகவற் பாட்டு, நாற்கவிகளில ஒன்றான விரைந்து பாடும் ஆசுகவி முதலிய இனிய பாடல்களடங்கிய நல்ல நூல்களைக் கற்றவர் கூறுகின்ற பாடலுக்குரியவர்களும், அழகிய ஆடை, நவமணி கள் பதித்த பொன்னாபரணங்களையணிந்தவர்களும், நல்ல சிறப்புடைய வளம்மிக்க கடகம், விரலாழி (மோதிரம்) மார்பு பதக்கம், முத்தாரம் முதலியன அணிந்தவர்களும், நட்புணர் வுடன் உதவி செய்பவர்களும், நல்ல வாக்கு உடைய மேலோர் களும், நற்குணமுடையவர்களும், குளிர்ச்சி பொருந்திய கயிலை மலையைக் காவல் பூண்டவர்களும், மிக்க அன்புடையவர்களும் ஆகிய செங்குந்தர்களே! சப்பாணி கொட்டியருள்க. குருபூசை யும் குற்றமற்ற உண்மையறிவாகிய சிவபூசையும் உடையவர் களே! சப்பாணி கொட்டியருள்க.



அருஞ்சொற்பொருள்

ஒளி - புகழ்; ஆசுகவி - விரைந்துபாடும் பாட்டு; இது நாற்கவியுள் ஒன்று (நாற்கவிகளாவன ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி; வித்தாரகவி) பொற்பணி - பொன்னாபரணம்; மதாணி - மார்பு பதக்கம், பரிவு - அன்பு, இரக்கம்.

(சப்பாணிப்பருவம் முற்றிற்று)

## முத்தப் பருவம்

(குழந்தையை முத்தம் தருமாறு தாய் தந்தையர் முதலானோர் வேண்டுவது. இது பதினொன்றாம் திங்களில் நிகழ்வதாகக் கூறப்பெறும்)

140 விம்மும் கடலிற் பணிலமுத்தும்,
விரவுங் கரைசே ரிப்பிமுத்தும்,
மேகத் துதிக்கு மணிமுத்தும்,
வேயி னிடத்து விளைமுத்தும்,

கொம்மை முலையார் களத்தின்முத்தும்,
குளிர்மா மதியம் தருமுத்தும்,
கோக னகத்தின் மலர்முத்தும்,
குரண்டத் தலையின் விளைமுத்தும்

செம்மை திகழுங் கரும்பின் முத்தும்,
சீதப் பனிசூழ் செந்நெல்முத்தும்
சிறக்கும் பவளம் அனையவுங்கள்
செவ்வாய் முத்துக் கிணையாமோ !

மும்மண் டலமும் புகழவந்தோர் !
முத்தம் தருக முத்தமே !
மொழிநா விலகா முதலியர்கள் !
முத்தம் தருக முத்தமே

பொழிப்புரை

சேர, சோழ, பாண்டிய மண்டலங்கள் யாவும் புகழுமாறு தோன்றிய செங்குந்தர்களே! நிறைந்த அலைகளை உடைய கடலில் உண்டாகும் சங்கில் பிறக்கும் முத்தும், கரையில் கலந்து வந்து ஒதுங்கும் சிப்பியில இருந்து தோன்றும் முத்தும், மேகத்தில் தோன்றும் முத்தும், மூங்கிலில் உண்டாகும் முத்தும், திரண்ட நகில்களை உடைய பெண்களின் கழுத்தில் பிறக்கின்ற முத்தும், குளிர்ந்த நிலவில் தோன்றுகின்ற முத்தும், தாமரை மலரில் விளைகின்ற முத்தும், கொக்குத்தலையில் உண்டாகும் முத்தும், செழுமையுடைய கரும்பில் தோன்றும் முத்தும், குளிர்ந்த செந்நெற்பயிரில் விளையும் முத்தும், ஆகிய இவைகள் எல்லாம், பவளம் போன்று சிவந்த உங்கள் வாய்முத்துக்கு இணையாகுமோ! (ஆகமாட்டா. ஆகவே) அந்த முத்தத்தை எங்களுக்குத் தாருங்கள். சொன்னசொல் தவறாத நாவை உடைய முதலியர்களே முத்தம் தாருங்கள்.

அருஞ்சொற்பொருள்

இப்பி - சிப்பி; வேய் - மூங்கில்: களம் - கழுத்து; கோகனகம் - தாமரை; குரண்டத்தலை - கொக்கின் தலை.

முத்துப்பிறக்கும் இடங்கள் இருபது (20) என்று கூறும் பழம் பாடல்

தந்தி வராக மருப்பிப்பி பூகம் தனிக்கதலி
நந்து சலஞ்சலம் மீன்தலை கொக்கு நளினமின்னார்
கந்தரம் சாலி கழைகன்னல் ஆவின்பல் கட்செவிகார்
இந்து உடும்பு கரா முத்தம்ஈனும் இருபதுமே.

1) யானைத்தந்தம், 2) பன்றிக் கொம்பு, 3) சிப்பி, 4)பாக்குமரம் 5) வாழை. 6) நத்தை 7,)சலஞ்சலச்சங்கு, 8)மீன்தலை 9,)கொக்குத்தலை. 10)தாமரை மலர், 11) பெண்களின் கழுத்து, 12) செந்நெற்பயிர், 13)மூங்கில், 14 கரும்பு, 15) பசுவின் பல், 16) பாம்புத்தலை, 17)மேகம், 18)சந்திரன், 19)உடும்பு, 20)முதலை.

141 படிக்கும் புலவோர் தங்களுக்கும்,
பழமா மறையோர் தங்களுக்கும்,
பாரி லுயர்ந்த தவத்தினர்க்கும்,
பசியால் மெலியும் வறிஞர்க்கும்.



வடித்த புகழ்சேர் அரசருக்கும்,
மலரோன் முதலாம் தேவருக்கும்,
மகிமைக் குருவா சிரியருக்கும்,
வளர்சங் கீத விஞ்சையர்க்கும்

கொடிப்பொன் இடையார் தங்களுக்கும்,
குலையா நிலைமை உடையார்க்கும்,
கொண்ட வறுமை குலைந்தோடக்
குளிர்பொன் கொடுத்தே அவர்விரதம்

முடிக்கும் திறமை உடையார்கள் !
முத்தந் தருக முத்தமே !
மொழிநா விலகா முதலியர்கள் !
முத்தந் தருக முத்தமே. 2

பொழிப்புரை:

நல்ல நூல்களைப் படிக்கும் அறிவுடையோர், பழமையான வேதத்தை ஓதும் அந்தணர், உலகில் உயர்ந்த தவத்தினைச் செய்வோர், பசியினால் வருந்தும் ஏழைகள், சிறந்த புகழுடைய அரசர்கள், பிரமன் முதலாய தேவர்கள், பெருமை பொருந்திய ஆசிரியர்கள், நல்ல சங்கீத விற்பன்னர்கள், பொற்கொடி போன்ற இடையை உடைய பெண்கள், (வறுமையிலும்) மனந்தளராத மானம் உடையவர்கள் ஆகியோர்க்கு ஏற்பட்ட இல்லாமை நில்லாது அழிந்து ஓடுமாறு, அவர் உள்ளம்குளிரும் பொன்னை வேண்டும் அளவு கொடுத்து அவர்கள் மேற்கொண்ட செயலை (விரதம்) முடிக்கும் திறமை உடையவர்களே! முத்தம் தருக. சொன்ன சொல் ......... முத்தம் தருக.

அருஞ்சொற்பொருள்: வடித்த புகழ் — சாரமான புகழ்; மலரோன் — பிரமன்; குலைந்து — நிலைகெட்டு.

142 கடிகொள் கமலப் பசுந்தேனும்,
காமர் குமுதச் செழுந்தேனும்,
கனமுன் றியகொம் பில்தேனுங்
கருதும் கொடிமல் லிகைத்தேனும்

வடிகொள் மலர்ச்செண் பகத்தேனும்
வாசப் பசுந்தா ழையின்தேனும்
வண்டு கூடி உழக்குபுன்னை
மலரிற் சொரியும் பசுந்தேனும்,

மடல்விண் டலர்முல் லையில் தேனும்
வாய்த்த மலர்ச்சா தியின்தேனும்
வழிந்துதிரண்டு பெருக்காறாய்
வயல்கள்தோறும் பாய்ந்துதிரை

முடுகுங் திருக்கச் சியில்அரசர் !
முத்தங் தருக முத்தமே !
மொழிநா விலகா முதலியர்கள்
முத்தந்தருக முத்தமே. 3

பொழிப்புரை:

வாசனை நிறைந்த தாமரை மலரில் உள்ள தேன், அழகிய அல்லிமலரில் உள்ள தேன், பெருமை மிகுந்த கொம்புத்தேன், கொடிமல்லிகைப் பூவில் உள்ள தேன், அழகிய செண்பகப்பூவில் உள்ள தேன், மணம் பொருந்திய தாழை மலரில் உள்ள தேன், வண்டுகள் கூடிக் கலக்கும் புன்னை மலரிலிருந்து வழிகின்ற புதிய தேன், இதழ் விரிந்து மலர்கின்ற முல்லைப்பூவில் உள்ள தேன், பல மலரினங்களில் உள்ள தேன் ஆகிய எல்லாமும் ஒன்று சேர்ந்து பெருக்கெடுத்து ஆறுபோலப் பெருகி வயல்களில் பாய்ந்து அலைபெருகும் வளமுடைய அழகிய கச்சிப்பதிக்கு உரிமையுடையவர்களே! முத்தம் தருக. சொன்ன சொல் ...... முத்தம் தருக.

அருஞ்சொற்பொருள்:

கடி — மணம்; காமர் — அழகு; குமுதம் — அல்லி; கனம் ஊன்றிய — பெருமை மிக்க; கொம்புத்தேன் — மரக்கொம்புகளில் அடைகளாகச் சேர்க்கப்படுகின்ற தேன். [கொம்புத் தேன் மிக்க சிறப்புடையது; பொந்துதேன் குறைந்த சிறப்புடையது] முடுகும் — விரைந்து ஓடும்.

143 தொல்லை மருவார் போர்க்களத்தில்
துதிக்கை வலிய மால்யானை
சுரத நடனப் பரித்திரள்கள்
சூழு மிரதங் காலாள்கள்



வில்லும் வாகைக் கணைத்திரளும்
வீசும் திரள்வாள் வல்லையமும்
வெடியும் துடிப்பீ ரங்கிகளும்
மிக்க முனைக்கட் டாரிகளும்

ஒல்லை யுடன்கை விட்டயர
உடல்கால் தலைமூ ளைகள்சிதறி
ஓடி உதிரம் பெருக வெல்லும்
உயர்வீ ரியர் கை ரகுராமர் !

முல்லை நகைச்செங் கனிவாயர் !
முத்தங் தருக முத்தமே
மொழிநா விலகா முதலியர்கள் !
முத்தங் தருக முத்தமே. 4

பொழிப்புரை :

பழமையான [நெடிய] பகைவர்கள் போர் மேற்கொண்டு எதிர்க்கின்ற போர்க்களத்தில், தங்களிடம் உள்ள பெரிய தும்பிக்கையை உடைய மதம் பொருந்திய யானைகள், கூட்டமாக உள்ள இன்ப நடையுடைய குதிரைகள், சூழ்ந்துள்ள தேர்கள், காலாள் வீரர்கள், மற்றும் வில், வெற்றி தரும் அம்புக்கூட்டம், வீசுகின்ற வாள், ஈட்டி, வெடிப்பொருள்கள், பீரங்கிகள், கூரிய முனைகள் கொண்ட எறிவாள் [கட்டாரிகள்] முதலிய அனைத்தையும் விரைவில்தோற்று நிற்க, அப்பகைவர்களுடைய உடம்பு, கால், தலை, மூளை முதலியவை தனித் தனியே சிதறி ஓடவும், அவர் தம் உடலிலிருந்து வெளிப்படும் இரத்தம் ஆறாக ஓடுமாறும் சண்டையிட்டு வெல்லும் உயர்ந்த வீரமுடையவர்களும், ஒழுக்கத்தினை யுடையவர்களும், சூரிய குலத்தில் தோன்றிய இரகுராமனைப் போன்றவர்களும் ஆகிய, முல்லைப்பூப் போன்ற சிரிப்பினையும் சிவந்த கனி போன்ற வாயையும் உடைய செங்குந்தர்களே! முத்தம் தருக. சொன்ன சொல்...முத்தம் தருக.

(வெடிப்பொருள், பீரங்கி, முதலிய ஆயுதங்கள் சமீப காலத்தில் தோன்றியவைகளாகும். முல்லை நகைச் செங்கனி வாயர் என்பது பொதுவாகப் பெண்களைக் குறித்து வரும். இங்கு ஆண்களுக்குக் கூறப்பட்டுள்ளது.)

அருஞ்சொற்பொருள் :

தொல்லை - பழமையான; மருவார் - சேராதவர்கள் [பகைவர்கள்]; சுரதம் - இன்பம்; கணைத்திரள் - அம்புக் கூட்டம்; வல்லையம்—ஈட்டி. ஒல்லை- விரைவாக. வீரியர் - வீரமுடையவர். [செங்குந்தர்களும் சோழர் குலத்தினர் எனப் படும் வழக்கு பற்றி. சூரிய குலத்தில் தோன்றிய இரகுராமனை இங்கே உவமை கூறினார்].

**144** இந்தும் கதிருந் திசைமாறி
எழினுங் கடல்நீர் சுவறிடினும்
ஈட்ட வளர்ந்த மகமேரு
இடிந்து பெயர்ந்து விழுந்திடினும்

வந்து பொழியும் மழைமாரி
மறுத்துத் துளிகள் வறண்டிடினும்
வானத் தமரர்க் கரியதெய்வ
மறைமா மொழிபொய் வழங்கிடினும்

சந்தம் மிகுந்த திருமாலின்
தனதுகமலக் கரத்தில் வைத்துத்
தரிக்குங் கணைகள் தவறிடினுஞ்
சாற்றும் மொழிகள் தப்பாது

முந்து புகழ்க்கச் சியிலரசர்
முத்தந் தருக முத்தமே!
மொழிநா விலகா முதலியர்கள்
முத்தந்தருக முத்தமே. 5

பொழிப்புரை:

'சந்திரனும் சூரியனும் தாம் உதிக்கின்ற திசையிலிருந்து மாறி உதித்தாலும், கடல்நீர் வற்றினாலும், உயர்ந்து வளர்ந் துள்ள மேருமலை இடிபட்டுப் பெயர்ந்து விழுந்தாலும், தவறாமல் பெய்யும் மழை பொய்த்துப் பெய்யாமல் போனா லும் தேவர்களுக்கும் அருமையான வேத மொழிகள் பொய் யாகிப் போனாலும். திருமாலின் கரத்தில் உள்ள சார்ங்கம்



என்னும் வில்லில் வைத்துப் பூட்டுகின்ற அம்புகள் குறிதவறி னாலும், நீங்கள் சொல்லுகின்ற வார்த்தைகள் ஒரு போதும் தவறாது' என்று சொல்லி யாவராலும் புகழப்படுகின்ற, பெருமை உடைய கச்சி நகருக்கு உரிமையுடையவர்களே! முத்தம் தருக. சொன்ன சொல்.........முத்தம் தருக.

அருஞ்சொற்பொருள்:

இந்து - சந்திரன். கதிர் - கதிர்களையுடைய சூரியன். சுவறுதல்- வற்றுதல்.

வேறு

**145** பத்தி கொடுக்குந் தமிழ்நூ லைப்
படித்துப் படரும் பேரறிவைப்
பால்போல் கருதிப் பலகாலும்
பழகிப் பழகிப் பரிந்தோடச்

சித்தி கொடுக்குந் தவத்தோரைச்
சேர்ந்தும் அவர்கள் திருவாக்கைச்
செம்மைப் பொருளாம் எனக்கருதித்
திரியுங் கரணத் தினைஅடக்கி

அத்து விதத்தில் ஒருமைகொண்டங்(கு)
அசைவற் றிருக்கும் ஒருபொருளை
அணுகிப் பெருகு மானந்த
அருள்சேர் கடலில் அமிழ்கின்ற

முத்தி கொடுக்குந் திருக்காஞ்சி
முதல்வோர்! முத்தந் தருகவே!
மோதுங் கரவல் லானைவென்றோர்!
முத்தந் தருக முத்தமே. 6

பொழிப்புரை:

இறைனிடத்தே செலுத்தும் பக்தியைத் தரவல்ல உயர்ந்த தமிழ் நூல்களைப் படித்து, அதனால் உண்டாகும் பெருமை

மிகுந்த அறிவினை, இனிய பாலாக உண்டு அட்டமா சித்தி களை மிகவும் சித்திக்கச் செய்யும் தவம் உடையவர்களுடன் உறவுகொண்டு, அவர்களுடைய உபதேசத்தை உயர்ந்த பொருள் என்று சிரமேற்கொண்டு, கட்டற்று அலைகின்ற மனம் முதலிய உட்கரணங்களை அடக்கிவைத்து, இரண்டற்ற ஒன்றாகிய சுத்தாத்துவித நிலையில் ஈடுபட்டு, என்றும் நிலைத்த பொருளாகிய இறைவனைச்சேர்ந்து, அதனால் உண்டாகின்ற ஆனந்தமாகிய அருட்கடலில் முழ்குகின்ற, முத்திபைத்தரவல்ல அழகிய திருநகரமான காஞ்சிக்கு முதல்வர் களே! முத்தம் தருக. அழிக்கின்ற கைகளையுடைய வல்லானை வென்றவர்களே! முத்தம் தருக.

அருஞ்சொற் பொருள் :

செம்மைப்பொருள் - மாற்றம் இல்பொருள்; கரணம்- கருவி.

146 மன்னுங் கிரியை யோர்தமக்கும்,
மாசற் றுயர்ந்த தவத்தோர்க்கும்,
மணக்கும்மறைவே தியர்தமக்கும்,
வாரி யுடுத்த புவியோர்க்கும்,

பன்னுந் தமிழைப் படித்தோர்க்கும்,
பசித்த வர்க்கும், பகையோர்க்கும்,
பாரில் கடன்பட்(டு) அடைந்தவர்க்கும்,
பகருஞ் சமய வாதியர்க்கும்,

மின்னுங் கிரீட அரசருக்கும்,
வேண்டித் தமைவந்(து) அடைந்தோர்க்கும்
வேளை யெரித்த முக்கண்ணன்
முதலாந் தேவர் பூசனைக்கும்

முன்னின்(று) அருளும் கனகமழை
முகிலோர் முத்தந் தருகவே!
மோதுங் கரவல் லானைவென்றோர்
முத்தந் தருக முத்தமே.





பொழிப்புரை:

நிலைத்த பூசை முதலிய செய்தொழில் உடையவர்கள், குற்றமற்ற உயர்ந்த யோகத்தை உடையவர்கள், வேதத்தை ஓதுதலால் அதன் மனம் கமழ்கின்ற வேதியர்கள், கடல் சூழ்ந்த உலகத்தவர், தமிழை ஆய்ந்து கற்றவர்கள், பசித்து வந்தவர்கள் பகை கொண்டவர்கள், உலகில் கடன்பட்டு வருந்தி வந்த வர்கள். தமக்குள் வாதம்புரியும் சமய வாதிகள், ஒளிவீசுகின்ற மணிமுடி அணிந்த அரசர்கள், தம்மிடத்தே உதவிதேடி வந்த வர்கள் ஆகியவர்களுக்கும் மன்மதனை எரித்த, முக்கண்களை யுடையசிவபொருமான் முதலிய கடவுளர்பூசை செய்வதற்கும் முன்வந்து உதவிப் பொன் மழை பொழிகின்ற மேகம் போன்ற கைகளை உடையவர்களே! முத்தம் தருக. அழிக்கின்ற ......... முத்தம் தருக.

அருஞ்சொற் பொருள்

மன்னும் - நிலைபெற்ற; கிரியை - செயல்; வாரி - கடல்; கிரீடம் - முடி; கனகம் - பொன்.

இப்பருவத்தில் ஏழு பாடல்களே உள்ளன.

முத்தப்பருவம் முற்றிற்று.

O

## வருகைப்பருவம்

(குழந்தையைத் தம்மிடம் வருமாறு தாயர் முதலியோர் அழைப்பது. இது பன்னிரண்டு அல்லது பதின்மூன்றாம் திங் களில் நிகழும் என்று கூறுவர்.)

147 குளமே வியசெந் திலதமின்னார்
குவளைக் களைகள் பலகளைந்து
குரவை இடும்பூங் கழனிதொறுங்
குதித்து மடைதோய் கயல்வெருள

இளமே திகள்வந் தொருகோடி
இறங்கிப் படிய வரிவாளை
எழுந்து குதித்துக் கமுகவனத்
திலகு மடலின் திரள்கிழித்துத்

தளமே வியசெங் கழனிவயற்
றலைகள் தோறும் விளையாடித்
தத்திக் கயல்முக் கனிகளெல்லாந்
தானே உழக்கித் திரும்பிவரும்

வளமே வியதென் கச்சிநகர்
வந்தோர் வருக! வருகவே!
மாக ளியைக்கால் விலங்குதைத்தோர்!
வருக! வருக! வருகவே. 1

பொழிப்புரை :

நெற்றியில் சிவந்த திலகம் அணிந்த, மின்னற்கொடி போன்ற பெண்கள் வயலில் உள்ள குவளைமலர்களைக் களைக ளாகப் பிடுங்கி எறிந்து குரவை ஆடும் கழனிகளில் எல்லாம், மடையில் உள்ள கயல்மீன்கள் அஞ்சி ஓடுமாறு நாகெருமைகள் எண்ணற்றன வந்து பொருந்த, அதனால் அங்குள்ள வாளை மீன்கள் குதித்தெழுந்து பாய்ந்து, பாக்கு மரம் வரை சென்று பாக்கு மடல்களைக் கிழித்துத் திரும்பி, வயல்கள் தோறும் விளையாடுவதும், கயல் மீன்கள் மா, பலா, வாழையெனும் முச்கனிகளும் உதிருமாறு அம்மரங்களைக் தாக்கிவந்து வயல் களில் விளையாடுவதும் ஆகிய நீர்வளம் நிறைந்த அழகிய கச்சி நகரிலுள்ளோர்களே! வருக. அக்கினி முகனுக்குத் துணையாகப் போர்க்களத்திற்கு வந்து போரிட்ட மாகாளியை விலங்கிட்டு ஆற்றலழித்தவர்களே! வருக! வருக!

'வரும்' என்பதை 'விளையாடி' என்பதற்கும் சேர்க்க வேண்டும்.

(சூரபதுமன் மகனான அக்கினிமுகன் தனக்கு ஆபத்துவரும் காலத்தில் உதவிசெய்ய வேண்டி ஒரு காளியை வழிபட்டிருந் தான். வீரவாகுவுடன் போர்செய்து உயிர்போகும் தருவாயில் காளியை அழைக்க, அவள்வந்து போரிட்டபோது வீரவாகு தேவர் அவளாற்றலை அழித்து அடக்கினார் என்பது கந்த புராண வரலாறு.)

அருஞ்சொற்பொருள்:

குளம் - நெற்றி; குரவை - மகளிர் ஆடும் விளையாட்டு திரள் - கூட்டம்.



148 நலமா கியமல் லிகைவனத்தில்
நறும்பூ அருந்திச் சுரும்பினங்கள்
நயந்து விதஞ்சேர் இசைபாட
நத்துங் கவிகள் தாளமொத்தக்

குலமா மயில்கள் ஒருகோடிக்
குலவி நடன மதுபுரியக்
கோக னகச்செந் திருஇருந்து
கூத்துப் பார்க்க முத்துவனம்

பலமா மணிகள் கொடைகொடுப்பப்
பசும்பூ வனங்கள் மலர்சொரியப்
பாராள் அரசர் கண்டுமெச்சும்
பான்மை தவிராப் புகழ்மேவும்

மலைமா துமையாள் தவம்செய்கச்சி
வாழ்வோர் வருக! வருகவே!
வளச் செங்குந்த குலத்தில்வந்தோர்
வருக! வருக! வருகவே. 2

பொழிப்புரை:

நன்மை பொருந்திய மல்லிகைச் சோலையில் உள்ள நல்ல பூக்களின் தேனை உண்ட வண்டினங்கள் மகிழ்ந்து பலவிதமான இசை எழுப்ப அவ் இசையை விரும்பும் குரங்குகள் தாளம் கொட்ட, அத்தாளத்திற்கு ஏற்ப மயில்கூட்டம் இனிய நடனம் புரிய, தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் கண்டின்புற, முத்துக்களை உடைய கருப்பந்தோட்டம் மணிகளைத் தான மாக வழங்க, பசிய மலர்வனங்கள் பூக்களைச் சொரிய, உலகத்தையாளும் அரசர்கள் கண்டுபுகழும் தன்மை மாறாமல் இருக்கின்ற, மலையரசன் மகளாகிய உமையம்மை தவம் செய்தற்கிடனான கச்சிநகரில் வாழ்வோர்களே! வருக! வளமுடைய செங்குந்த குலத்தில் வந்தோர்களே! வருக, வருக.

அருஞ்சொற்பொருள்:

பூஅருந்தி - பூவில் உள்ள தேனை உண்டு; சுரும்பு - வண்டு; விதம் - வகை: கோகனகம் - தாமரை; மெச்சும் - புகழும்.

149 நட்டார் இரவோர் மறையோர்க்கும்,
நாட்டும் தமிழ்நல் நாவலர்க்கும்,
நம்பி, 'மிகுநீர் தம்பம்' என
நாடி அடைந்தோர் தங்களுக்கும்,

பட்டார் கொடிசேர் இடையார்க்கும்,
பான்மை உடைய தவத்தோர்க்கும்,
பசித்தோர் தமக்கும் பாருலகில்
பலரும் மதிக்கப் பான்மையுடன்

இட்டார் பெரியோர் எனக்கேட்டிங்(கு)
இரவும் பகலும் அருள்புரியும்
ஈகை உடைய பெரியோர்கள்
ஏமக் களபம் பரிமளிக்கும்

மட்டார் கடப்பப் புயவீர
வாகுத் தலைவர்! வருகவே!
வளஞ்சேர் அருணா புரியில்வந்தோர்
வருக! வருக! வருகவே. 3

பொழிப்புரை:

[இவ் வுலகில் தம்முடன்] நட்புக் கொண்டவர்கள், இரவலர்கள், வேதியர்கள், தமிழ்கற்று பற்றுக் நாவன்மை உடைய புலவர்கள், 'நீங்களே எமக்குப் கோடு [ஆதரவு]' என்று எண்ணி நம்பிவந்து சேர்ந்தவர்கள், பட்டு உடுத்திய கொடி போன்ற இடையை உடைய பெண்கள், நல்வினைப் பயனால் தவம் செய்யும் உயர்ந்தவர்கள், பசியால் வருந்தியவர்கள் ஆகிய எல்லார்க்கும் உலகில் உள்ளார் யாவரும் பாராட்டுகின்ற வகையில், 'தம்மிடம் உள்ள பொருளைப் பிறர்க்கு வழங்குபவர்களே பெரியோர்' என்று கூறும் அற உரையை மதித்து இரவு பகல் எந்தநேரமும் கருணையுடன் ஈவதை மேற்கொண்டுள்ள பெருமக்களும், பொன்மயமான கலவைச் சந்தனம் மணம் கமழ, தேன்நிறைந்த கடப்ப மாலையணிந்த வீரத்தோள்களையுடையவர்களும் ஆகிய செங்குந்தத் தலைவர்களே! வருக! வளம் நிறைந்த திருவண்ணாமலையில் வாழ்பவர்களே! வருக! வருக!



அருஞ்சொற்பொருள்:

நட்டார் - நட்புடையவர்கள்; தம்பம் - பற்றுக்கோடு; பட்டுஆர் - பட்டுடுத்திய; ஏமம் - பொன்; களபம் - கலவைச் சாந்து; சந்தனம்; மட்டு ஆர் - தேன்நிறைந்த; அருணாபுரி - திருவண்ணாமலை. 'இட்டார் பெரியோர்; இடாதார் இழி குலத்தோர்' என்பது ஔவையார் 'நல்வழி' நூலில் கூறியது

150 சத்தம் பயிலும் மழைமுகிலும்,
தழைக்கும் சீதக் கமுகினமும்,
தந்தி மருப்பும், மலைவேயும்,
சசியும், பனித்தண் தாமரையும்.

கத்துங் கடல்வாய் இப்பிகளும்,
கரும்பும் கனிப்பொன் திருப்புயலும்,
கன்னி மடவார் பொன்கழுத்தும்,
கருஞ்சூ கரத்தின் இருமருப்பும்,

சுத்தம் பயிலும் பசுத்தந்தம்,
தோயும் தூய சங்கினமும்
துகள்தீர் குரண்ட மணிச்சிரமும்,
துள்ளும் புனல்சேர் மீன்தலையும்

முத்தஞ் சொரியும் திருக்காஞ்சி
மூதூர்க்(கு) இறையோர் வருகவே!
முனைசேர் பஞ்ச வணவிருது
முடிக்குந் திறலோர் வருகவே! 4

பொழிப்புரை:

இடியோசையை உண்டாக்கும் மேகம், தழைத்து வளரும் குளிர்ந்த பாக்குமரம், யானைத்தந்தம், மலையில் விளையும் மூங்கில், சந்திரன், குளிர்ச்சி பொருந்திய தாமரை மலர், ஓசை மிகுந்த கடலில் தோன்றும் சிப்பிகள், இனிய கரும்பு, கனி தரும் வாழை, இளமையுடைய பெண்களின் அழகிய கழுத்து, கரிய காட்டுப் பன்றியின் வலிய கொம்பு, தூய்மையான பசுவின் பல், தூய்மையுள்ள வலம்புரிச்சங்கு, குற்றமற்ற கொக்கின் தலை, நீரில் துள்ளியாடும் மீனின் தலை இவைகள் எல்லாப்

முத்துக்களைச் சொரிகின்ற பழமையான அழகிய கச்சியம் பதிக்குத் தலைவர்களே! வருக! ஐவகை நிறமுடைய விருது கட்டிய வல்லமையுடையவர்களே! வருக! வருக!

அருஞ்சொற்பொருள்:

சீதம் - குளிர்ச்சி. மருப்பு - தந்தம்; வேய் - மூங்கில். சசி - சந்திரன். புயல் - புய்த்தல், பறித்தல். இது வாழை மரத்தைக் குறித்தது. பொன்கழுத்து - அழகிய கழுத்து. சூகரம் - பன்றி. குரண்டம் - கொக்கு. மணிச்சிரசு - அழகிய தலை. பசுத்தந்தம் பசுவின் பல்.

[முத்துப்பிறக்கும் இடங்கள் பற்றி முத்தப்பருவம் முதற் பாடலிற் காண்க.]

151 செச்சை மணிமா மேடையினுந்,
தேரோ டியநல் தெருத்தோறும்,
செந்நெல் பசும்பூங் கழனியினும்,
தீட்டும் சுதைமா ளிகைமீதும்,

பச்சென்(று) ஒளிரும் மரகதமும்
பரிகை மேடைக் கொடிகளிலும்
பால்போல் எரிக்குந் தரளமணிப்
பணிக்கோ புரத்தின் முடிமிசையும்

உச்சந் திகழ்வெண் மதிதிகழும்
ஓங்கும் பளிங்கு மாடத்தும்
உம்பர் தொழுமா லயந்தோறும்
ஒண்பூங் கமல மாதிருந்து

மெச்சும் புகழ்சேர் கச்சிநகர்,
விளங்குந் திறலோர்! வருகவே!
வெண்மா மதிநற் குடைநிழற்றும்
வேள்மைத் துனமார் வருகவே.

பொழிப்புரை :

வெட்சி மலர்களால் அலங்கரிக்கப்பட்ட அழகிய மேடைகளிலும், தேரோடுகின்ற அகன்றுள்ள அனைத்து வீதிகளிலும், செஞ்சாலி நெல்விளையும் பசுமைமிக்க கழனிகளிலும், சுதையால் அழகு செய்யப்பட்ட மாளிகைகளிலும், பசுமை நிறத்துடன் ஒளிவீசும் மரகதக் கல் பதிக்கப்பட்ட உப்பரிகை மேடையில் உள்ள கொடிகளிலும், பால்போன்று வெள்ளிய ஒளிவீசும் முத்துமணிகளால் அலங்கரிக்கப்பட்ட வேலைப்பாடமைந்த கோபுரத்தின் உச்சியிலும், சந்திரன் தவழுகின்ற கலசங்களையுடைய உயர்ந்த பளிங்கு மாளிகைகளிலும், வானுலகத்தவர் வந்து வணங்குகின்ற ஆலயங்களிலும், ஒளிபெற்ற தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகள் வீற்றிருப்பதனால் உலகத்தவர் போற்றுகின்ற காஞ்சி நகரத்தில் வாழும் ஆண்மையுடையவர்களே! வருக! சந்திரனாகிய குளிர்ந்த வெண் கொற்றக்குடை நிழற்றுகின்ற மன்மதனுக்கு மைத்துனராகியவர்களே! வருக! வருக!



அருஞ்சொற்பொருள்:

சுதை - சுண்ணம். முடிமிசை - உச்சியில். ஒண்பூங்கமலம் - ஒளிவீசும் தாமரை மலர், தரளம் - முத்து. திறல் - ஆண்மை நிழற்றும் - நிழலைச் செய்கின்ற. வேள் - மன்மதன்.

வேறு

152 திலத நுதலில் எழுதியழகு
சேர்க்க வருக! வருகவே!
செவ்வாய்க் கனிமுத் தாடிமடியில்
சேர்த்த ணைத்திட வருகவே!

முலைகொ டுத்துடல் புழுதிதுடைத்து
முத்தா டிக்கொள வருகவே!
முழங்குஞ் சிலம்புங் கலின்கலீனென
முன்னே ஓடி வருகவே!

நிலவெ னும்இள நகை உலாவி
நில்லா தோடி வருகவே!
நித்தி லச்சுட்டி பொன்கதிர் பரப்பிட
நிறைபொன் அணிய வருகவே!

**மலைம டந்தை சுதர்! கரமுகில்!**
**மன்னர் வருக! வருகவே!**
**விண்ணோர் சிறையை விடுவித்தவரை**
**மேன்மை செய்தவர் வருகவே. 6**

பொழிப்புரை:

மலையரசன் மகளான உமாதேவியின் பிள்ளைகளும், கொடுப்பதில் மேகத்தை நிகர்த்த கையை உடையவர்களுமான செங்குந்தர்களே! உங்கட்கு நெற்றியில் பொட்டிட்டு அழகு சேர்ப்பதற்காக இங்கே வருக. சிவந்த இதழில் இனிய முத்த மிட்டு, மடிமீது சேர்த்து அணைப்பதற்காக வருக. மேனியில் உள்ள புழுதியைத் துடைத்து முலைப்பால் ஊட்டி முத்தமிட வருக. கால்களில் அணிந்துள்ள சிலம்பு 'கலீர் கலீர்' என ஒலிக்குமாறு முன்னே வருக. நிலவு போன்று அழகிய புன்முறுவல் பூத்து, உலவித் திரிந்து அங்கே நில்லாமல் ஓடி வருக! முத்தால் இயன்ற நெற்றிச்சுட்டி பொன்னொளி வீசுமாறு, நிறைந்த பொன்னாபரணங்களை அணிந்து கொள்ள வருக. வருக! சூரபதுமனால் தேவர்களுக்கு உண்டான சிறை வாழ்வை நீக்கி, அவர்களுக்கு மேன்மையளித்தவர்களே! வருக! வருக!

அருஞ்சொற் பொருள்:

நிலதம் - திலகப், பொட்டு. முழங்கும் - ஒலிக்கும் நித்திலம் - முத்து. சுட்டி - குழந்தைகள் நெற்றியணி. கரமுகில் - கைகளாகிய மேகம். உருவகம். மேன்மை - சிறப்பு.

153 **விதரண மிகுநிபுண செங்குந்த**
**வீரர் வருக! வருகவே!**
**விண்ணோர் சிறையை விடுத்தவரை**
**மேன்மை செய்தவர்! வருகவே!**

**சதுரு பாய தருமநெறிகொள்**
**சத்யரிச் சந்திரர்! வருகவே!**
**தாதவிழ் பூமலர் நீபமாலிகை**
**தரிக்கு மன்னவர்! வருகவே!**



**அதிரு மொன்னலர் பணிபதாம்புயர்!**
**ஆடுந் தாளவர்! வருகவே!**
**அட்டதிக்(கு) எங்கணும் புகழ் படைத்திடும்**
**அதுலர்! வருக! வருகவே!**

**மதுரை நகரில் அரசுபுரியும்**
**மன்னர்! வருக! வருகவே!**
**வல்லான் உயிர்கொல் லாதவீர**
**வாகுத் தலைவர்! வருகவே. 7**

பொழிப்புரை:

திறமை மிகுந்த வல்லமைசாலிகளான செங்குந்த வீரர்களே வருக! தேவர்களுடைய சிறைக்காப்பை நீக்குவித்து அவர்களுக்குச் சிறப்பளித்தவர்களே வருக. சாம பேத தான தண்டம் என்னும் நால்வகை உபாயங்களையும், தருமவழிச் செல்கையும், அரிச்சந்திரன் போன்று உண்மை பேசுதலையும் கைக்கொண்டவர்களே! வருக. இதழ்விரிந்து தேன் சொரியும் கடப்ப மாலையணியும் மன்னர்களே! வருக. ஆரவாரம் செய்யும் பகைவர்கள் வந்து பணிகின்ற தாமரை மலர் போலும் பாதங்களுடையவர்களும், அப்பாதங்களைப் பெயர்த்து ஆடல் புரிகின்றவர்களுமான வீரர்களே! வருக. எட்டுத் திக்கிலும் புகழ் படைத்து மற்றொருவர் ஒப்பில்லாதவர்களே! வருக. மதுரை மாநகரில் அரசாட்சி புரிகின்ற மன்னர்களே! வருக. கொடியவனாகிய வல்லான் என்பவனைக் கொல்லாமல் கருணையுடன் அவனுக்கு வாழ்வளித்தவர்களும், வீரவாகுவைத் தலைவராகக் கொண்டவர்களுமான செங்குந்தர்களே! வருக! வருக!

அருஞ்சொற் பொருள்:

விதரணம் - திறமை. நிபுணர் - வல்லவர்கள். சதுர் உபாயம் - நால்வகை முறைமை. நீபம் - கடம்பு. மாலிகை - மாலை. ஒன்னலர் - பகைவர். அதுலர் - ஒப்பற்றவர் [துலன் - ஒப்பானவன். துலன் × அதுலன் - வடசொல்]

154 **சேலார் விழிகளெனச் சொல்மாதர்கள்**
**தேடுந் திண்புயர்! வருகவே!**
**சிரச்சிங் காதனம் கவிக்குதவிய**
**தீர வீரியர்! வருகவே!**

நாலா கலைகற்(று) உலகில் பரந்த
நல்லோர்! வருக! வருகவே!
நம்பின பேரைத் தம்பமென வைத்து
நடத்தும் நாதர்! வருகவே!

சூலா யுதனைச் செயித்த வானவர்
துணையடிக் கன்பர்! வருகவே
சுருதி நிலைமை மனத்தினிறுவும்
தூய நேயர்! வருகவே!

மாலோன் மருகர்! கந்தன் சோதரர்!
வரிசை யாளர் வருகவே!
வல்லான் உயிர்கொல் லாதவீர
வாகுத் தலைவர் வருகவே. 8

பொழிப்புரை:

சேல்மீன் போன்ற கண்களையுடையவர்கள் என்று புகழப்படுகின்ற அழகிய பெண்கள் தேடுகின்ற வலிய தோள்களையுடையவர்களே வருக! சிரச் சிங்காதனம் இட்டு ஒட்டக்கூத்தர் கவி பாடுவதற்குத் துணைபுரிந்த வீரதீரம் மிக்கவர்களே! வருக! பலவகையான கலைகளையும் கற்றுத்தேர்ந்து உலகில் பரவியுள்ள நல்லவர்களே! வருக! தம்மை நம்பி வந்தவர்களைப் பற்றுக்கோடாக இருந்து ஆதரித்து வருபவர்களே! வருக! சூலப்படையை உடைய எமனை வென்ற சிவபெருமானது இணையடிகளுக்கு அன்புடையவர்களே! வருக! வேத நெறியை மனத்தில் நிலைநிறுத்தி நடக்கும் தூய அன்புடையவர்களே! வருக! திருமாலின் மருகரும், கந்தவேளுக்குச் சகோதரர்களுமான பெருமையுடையவர்களே! வருக! கொடியவனாகிய வல்லான் என்பவனைக் கொல்லாமல் கருணையுடன் அவனுக்கு வாழ்வளித்தவர்களும், வீரவாகுவைத் தலைவராகக் கொண்டவர்களுமான செங்குந்தர்களே! வருக வருக!

அருஞ்சொற்பொருள்:

திண்புயர் - வலியதோள்களை உடையவர். நாலாகலை - பலவிதமான கலைகள் (பேச்சு வழக்கில் உள்ள சொல் செய்யுளில் ஆளப்பட்டுள்ளது.) சூலாயுதன்- எமன். துணையடி - இரண்டு திருவடிகள். சுருதி - வேதம். நிறுவும் - நிலைநிறுத்தும். நேயர் - அன்புடையவர். இவ் இறுதிப் பாடல்கள் மூன்றும் தனி ஒரு சந்தமாக உள்ளன.



[வருகைப் பருவம் முற்றிற்று]

O

## அம்புலிப் பருவம்

வானத்தில் உள்ள நிலவைக் குழந்தையுடன் விளையாடுவதற்கு வருமாறு செவிலித்தாயர் முதலியோர் அழைக்கின்ற பருவம் இது பதினைந்து அல்லது பதினெட்டாம் திங்களில் நிகழ்வதென்பர். இதில் சாம, பேத, தான, தண்டம் என்ற சதுர்வித உபாயங்களால் நிலவை அழைப்பதைக் காணலாம்.

பிள்ளைத்தமிழில் 'அம்புலிப்பருவம் பாடுவது கடினம் என்பர். அதனாலேயே காசினியில் பிள்ளைக்கவிக்கு அம்புலி புலியாம்' என்று ஒரு பழைய வெண்பா கூறுகின்றது. அம்புலி - சந்திரன்.

155 விண்ணிலுடு மங்கையர்க் கரசுநீ; இவர்கள்புவி
மேல்மங்கை யர்க்கரசராம்;
விரவுமா காயவிருள் நீயொழிப் பாய்; இவர்கள்
மிடியர்கலி யிருளொழிப்பார்;

மண்ணுலகி னிற்பயிர்க் கினியைநீ; இவர்கள்பல
வான்பயிர்க் கினிமையர்களாம்;
மாமதி யெனும்பெருமை யுடையைநீ; இவர்புத்தி
மதியெனும் பெருமையுடையார்;

தண்ணொளி பரப்புவாய் நீ; இவர்கள் மடவார்கள்
தண்ணொளி பரப்பியருள்வார்;
தண்குமுத நண்பன்நீ; இவர்கள்மட வார்கள்வாய்த்
தண்குமுத நண்பராவார்!

**அண்ணலா கியவுனக் கிவர்களொப் பாவர்காண்;**
**அம்புலீ! ஆடவாவே!**
**ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருடன்**
**அம்புலீ யாடவாவே!** 1

பொழிப்புரை :

சந்திரனே! ஆகாயத்தில் உள்ள விண்மீன்களாகிய பெண்களுக்கு நீ அரசன் ஆவாய்; இவர்கள் உலகில் உள்ள பெண்களுக்கு அரசராவர். நீ வானத்தில் பரவியுள்ள இருளைப் போக்குவாய்; இவர்கள் வறியவர்களுடைய துன்பமாகிய இருட்டை ஒழிப்பார்கள். மண்ணுலகத்தில் வளர்கின்ற பயிர்களுக்கு நீ இன்பம் செய்வாய். இவர்கள் வானவர்களாகிய பயிர்களுக்கு இனிமையானவர்கள். நீ அழகிய மாமதி [நிலவு] என்னும் பெருமையை உடையவன். இவர் புத்திமதி கூறுவதில் வல்லவர்கள். நீ குளிர்ந்த ஒளியைப் பரப்புவாய். இவர்கள் பெண்களிடத்தே அன்பாகிய ஒளியைப்பரப்பி அருள் செய்வார்கள்.குளிர்ச்சியையுடைய அல்லி மலருக்கு நீ நண்பன். இவர்கள் பெண்களின் குளிர்ந்த வாயிதழாகிய அல்லி மலருக்கு நட்பானவர்கள். இவ்வாறு இவர்கள் பலவகையில் உனக்கு ஒப்பாக [சமமாக] இருப்பதனால், நீ இவர்களுடன் விளையாட வருவாயாக! முதற்கண் செங்குந்தப் படையைக் கையில் கொண்டவர்களும் சோதிமயமான சிவபெருமானுடைய மைந்தர்களும் ஆகிய இவர்களுடன் சந்திரனே! நீ விளையாட வருவாயாக!

இது சந்திரனுக்கும் செங்குந்தர்களுக்கும் உள்ள ஒப்புமை கூறி, 'விளையாட வருக' என, சாமம் என்ற உபாயத்தால் அழைத்தது. சாமம்- சமமாயினாரிடத்துச் செய்யப்படுவது.

அருஞ்சொற் பொருள்:

உடு- விண்மீன் (நட்சத்திரம்) மிடியர்கலி- வறியோர்கள் துன்பம், குமுதம்- அல்லிமலர் அம்புலீ- விளி.

156 **போதருவ தாயுனது கலைகள்பதி னாறலால்**
**புகலில்வே றிலை; இவர்க்குப்**
**பூரணம தானகலை அறுபத்து நாலுண்டு;**
**பொய்யில்லை; மெய்யுண்மைகாண்;**



**சீதமிகு முனதெழி லிராக்கால மல்லாது**
**செய்யும் பகற்போ திலை;**
**செப்புமிவர் கீர்த்திப்பிர காசமெண் திக்கினுந்**
**திகழிரவு பகலுமுளதாம்;**

**ஏதமில் லாமலே யிவர்களுட னின்னைநிகர்**
**இடினுநீ நிகரில்லையால்;**
**எங்கள்பெரு மான்முடிக் காபரண மாமென்ன**
**எண்ணியே மிகவுநண்ணி**

**ஆதரவ தாயுன்னை வரஅழைத் தாரிவர்கள்;**
**அம்புலீ! ஆடவாவே!**
**ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருடன்**
**அம்புலி ஆடவாவே!** 2

பொழிப்புரை :

சந்திரனே! உனக்கு வளரத்தக்கனவாய்ப் பதினாறு கலைகள் உள்ளனவே தவிர, வேறு கலைகள் இல்லை. ஆனால் இவர்கள் அறுபத்து நான்கு கலைகளைக் கற்ற (பெருமை உடைய) வர்கள். இது பொய்யில்லை; உண்மை ஆகும். குளிர்ச்சி உடைய உன்னுடைய அழகிய ஒளி இரவுக்காலத்தில் தவிர பகற்போதில் இல்லை. ஆனால் இவர்களுடைய புகழாகிய ஒளி எட்டுத்திசைகளிலும் இரவுபகல் எந்த நேரத்திலும் பரவுகின்றது. குற்றமற்ற இவர்களுடன் உன்னை ஒரு வகையில் ஒப்பிட்டாலும் நீ இவர்களுக்கு ஒப்பாக மாட்டாய் இருப்பினும் எங்கள் தலைவனாகிய சிவபெருமானுடைய திருமுடிக்கு நீ அணிகலனாக இருக்கின்றாய் என்ற ஒன்றை எண்ணி. உன் முன்னே வந்து அன்புடன் உன்னை இவர்கள் விளையாட அழைத்தார்கள். அதனால் நீ இவர்களுடன் விளையாட வருவாயாக! முதற்கண்...... வருவாயாக!

இது பேதம் (வேறுபாடு) என்னும் உபாயம் பற்றிப் பாடப்பட்டது.

அருஞ்சொற் பொருள்:

புகலில்-கூறினால் பூரணம்- நிறைவு. **சீதம்- குளிர்ச்சி. கீர்த்தி- புகழ். ஏதம்- குற்றம்.**

157 அம்பரம துனதிடத் தரவினால் மிகவுநீ
அல்லல்பட் டயர்வதெல்லாம்
அம்பிகை இடத்துநம் பெருமா னுடன்சொல்லி
அவ்வா தனைப்போக்குவார்;

உம்பர்வந் துனதுடலி லமுதகலை யைப்பறித்(து)
உண்ணநீ மெலிவதெல்லாம்
ஓங்குமயில் வாகனத் தண்ணலுட னேசொல்லி
உம்பரணு காமற்செய்வார்;

நம்பிநீ யுறைகின்ற தானமும் தானமல;
நாடியிவர் பாலடைந்தால்
நமதம்மை உமையெனும் தாயுடன் சொல்லியே
நற்கதியில் ஈடேற்றுவார்;

அம்புவியில் இவர்களைச் சேரு; நல்துணையுனக்(கு)
அம்புலீ! ஆடவாவே!
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருடன்
அம்புலீ ஆடவாவே! 3

பொழிப்புரை :

சந்திரனே! உன் இருப்பிடமாகிய ஆகாயத்தில் நீ பாம்பி னால் துன்பப்பட்டுத் தளர்ந்துபோவதை, அம்பிகையை இடப் பாகத்தில் கொண்ட இறைவனாகிய சிவபெருமானிடத்தில் இவர்கள் எடுத்துக் கூறி, அத்துன்பத்தைப் போக்குவார்கள். தேவர்கள் உன்னை நெருங்கி வந்து உன் உடலில் உள்ள அமுத கலைகளைப் பறித்து உண்பதால் நீ மெலிந்துபோவதை,மயிலை வாகனமாக உடைய முருகப்பெருமானிடம் சொல்லி,தேவர்கள் உன்னை நெருங்க ஒட்டாமல் செய்வார்கள். நீ வாழுகின்ற பன்னிரண்டு ராசிகளும் உனக்கு நிலையான இடங்கள் அல்ல; நீ இவர்களை வந்தடைந்தால், உலக அன்னையான உமாதேவி யிடம் எடுத்துக்கூறி,உன்னை நல்ல கதியில் ஈடேற்றம் பெறச் செய்வார்கள். ஆகையால், இந்த உலகத்தில் இவர்களே உனக்கு நல்ல துணையாவார்கள். ஆகவே இவர்களுடன் சேர்ந்து, நீ விளையாட வருவாயாக! முதற்கண்.............. வருவாயாக!



இப்பாடல் 'தானம்' என்ற முறை பற்றிக் கூறப்பட்டது தானம் - கொடுத்தல்

அருஞ்சொற் பொருள்:

அம்பரம் - ஆகாயம். அரவு - பாம்பு. வாதனை- துன்பம் 'வாதனையை' என்னும் இரண்டன் உருபு தொகுக்கப்பட்டது. உம்பர் - தேவர். அணுகாமல் - நெருங்காமல். தானம்- இடம். 'சேர்'என்னும் ஏவல் வினைமுற்று, ஈற்றில் உகரம் பெற்றது.

158 மிசையான தேவருடன் நீயும்அச் சூரனால்
வெஞ்சிறைப் படும்அந்தநாள்
வீரமயில் வாகனன் துணைவராய் வந்துன்னை
விடுவித்த(து) அறிகிலாயோ?

திசைநான்மு கன்தனது மைந்தன்செய் வேள்வியிற்
சிக்கிவிண் ணவர் ஓடிடச்
சிவனான வீரமா வீரனடி யால்உனைத்
தேய்த்துவிட் டதைஅறியையோ!

பசியாமல் எந்நாளும் முப்பத்தி ரண்டறம்
பாலிக்கும் அம்மைஉமையாள்
பாதச் சிலம்பில் பிறந்தார் அழைத்தாற்
பயப்படேல்; இவர்முனிந்தால்

அசையாத எண்திக்கில் ஒரு திக்கும் இலையுனக் (கு);
அம்புலீ! ஆடவாவே!
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருடன்
அம்புலீ ஆடவாவே! 4

பொழிப்புரை :

சந்திரனே! வானுலகில் உள்ள தேவர்களுடன், சூரபதுமன் உன்னைச் சிறையில் அடைத்தபோது, வீரம்கொண்ட மயில் வாகனத்தவனாகிய முருகப் பெருமானுக்குத் துணையாக வந்து இவர்கள் உன்னைச் சிறைவீடு செய்ததை அறியமாட்டாயா? திசை முகனாகிய பிரமனுடைய மகனான தக்கன்செய்த சிவநிந் தனையான யாகத்தில சென்று இருந்தபோது, வீரபத்திரர் அவ்வியாகத்தை அழிக்கவந்தவுடன், தேவர்களெல்லாம் அஞ்சி ஓடியபோது, நீ அவ்வீரபத்திரருடைய காலில் மிதிபட்டுத்

தேய்ந்து போனதை அறிய மாட்டாயா? உலக உயிர்களின் பசித்துன்பம் போக்க, நாள்தோறும் முப்பத்திரண்டு அறங்களையும் குறையாமல் செய்துகாப்பாற்றி வரும் உமையம்மையின் பாதச்சிலம்பில் தோன்றிய இவர்கள் உன்னை அழைத்தால் நீ அச்சமின்றி இவர்களருகே வா. இவர்கள் கோபித்தால் எட்டுத்திசையிலும் செல்லுமிடம் உனக்கு எதுவும் இல்லை. ஆகவே நீ இவர்களுடன் விளையாட வருவாயாக. முதற்கண்... ...வருவாயாக.

இப்பாடல் 'தண்டம்' என்னும் முறைகொண்டு பாடப்பட்டது. சூரபதுமன், சந்திர சூரியனைச் சிறையில் அடைத்ததாகப் புராணம் கூறவில்லை.

'ஒருதிக்கும் இலை உனக்கு' என்பதில் 'திக்கு' என்பது திசை, ஆதரவு என இருபொருள் படநின்று 'திக்கில்லை' என்ற தொனிப் பொருள் தருவது நயமானதாகும்.

அருஞ்சொற் பொருள்

மிசை - மேல் (வானுலகு). நான்முகன் மைந்தன் —தக்கன். வீரமாவீரன் - வீரபத்திரர். பாலிக்கும் - காப்பாற்றும். முனிவு - கோபம். 'பயப்படேல்' என்னும் பாடம் 'பயந்திலாய்' என்று இருப்பின் சிறப்பாக இருக்கும்.

159 சாரசமிகுந்தமறை யாவையுந் தருகின்ற
தாமரைத் தவிசனுமவன்
தந்தையா கியதிரு முகுந்தனோ டேஇனித்
தக்கதிக் குப்பாலரும்

மூரிவெற் பனையவெள் ளானையும் முப்பத்து
முக்கோடி தேவர்பலரும்
முடிஅடியும் அறியாத சிவனுடைய சீர்பாதம்
முறைமையில் தாங்கும் உரவோர்

காரைநிக ரானகுழல் மடமாதர் நடமாடு
கனகமய மேடைதோறும்
கங்குல்பகல் என்னவே ஒளிவிளக் கம்செயக்
கதிரொளிப் பிரபையெனவே

ஆரமுத் தணிகச்சி மாநகர்க்(கு) இறைவருடன்
அம்புலீ! ஆடவாவே!
ஆதிசெங் குந்தர்சிவ சோதிதன் மைந்தருடன்
அம்புலீ ஆடவாவே!





பொழிப்புரை :

சந்திரனே! இனிமை மிகுந்த வேதப்பொருள் அனைத்தையும் வழங்கியுதவும் தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும், அவனுக்குத் தந்தையாகிய திருமாலும், எட்டுத் திசைகளையும் காப்பாற்றும் திக்குப்பாலகர்களும், பெருமையுடைய வெள்ளிமலை போன்ற ஐராவதமாகிய வெள்ளை யானையும், முப்பத்து முக்கோடி தேவர் முதலியவர்களும் தேடிக்காண இயலாத திருமுடியும் திருவடியுமுடைய சிவபெருமானுடைய திருவடிகளை முறையாகத் தாங்கிநிற்கும் ஆற்றலுடையவர்கள், இவர்கள் ஆகையால் மேகம்போன்ற கருங்குழலுடைய பெண்கள் நடனமாடுகின்ற பொன்மயமான மேடைகள் தோறும், இரவு பகல் எந்நேரமும் மிகுந்த ஒளி வட்டம் போல ஒளிவீசுமாறு முத்துமணி மாலைகளைத் தாங்கியிருக்கின்ற அழகிய கச்சிநகருக்கு உரிய இவர்களுடன் நீ விளையாட வருவாயாக! முதற்கண்.......... வருவாயாக!

இப்பாடல் 'தானம்' என்னும் உபாயம் பற்றிக் கூறப்பட்டது

'சிவபெருமான் திருவடியைத் தாங்குவதால் எந்த நலத்தையும் தருவர்' என்பதாம்.

அருஞ்சொற் பொருள்:

சாரசம் - இனிமை. (சுவாரஸ்யம் என்னும் வடசொல் தமிழில் சாரசம் என்றாகியது.) முகுந்தன் - திருமால். மூரி - பெருமை. கார் - மேகம். கனகம் - பொன். பிரபை - வட்டம். ஒளிப்பிரபை - ஒளிவட்டம்.

160 கம்பலை புரிவிரி கடலே ழும்குல
கனகிரி ஒரேழும்,
கருணை பெறுந்தவர் எழுவரும், அருள்தரு
கன்னியர் எழுவோரும்,

தம்பம தாகிய குலகிரி எட்டும்,
தருமிகு திசையெட்டும்,
தந்திகள் எட்டுடன் நாகமதெட்டும்
தகுபா லகர்எட்டும்,

செம்பது மாலய மலர்மா தும், தமிழ்
செப்பிய கலைமாதும்,
திசைமுகன் முதலிய விண்ணோ ரும்தொழு
தேவி பராபரையாள்

அம்பிகை தந்திடு மைந்தரோ(டு) ஆடுற
அம்புலி! வருவாயே!
அறுமுக வேலவர் துணைவரோ(டு) ஆடுற 6
அம்புலி! வருவாயே!

பொழிப்புரை :

சந்திரனே! பேரொலி செய்கின்ற ஏழு கடல்களும், தீப மலைகள் எனப்படும் ஏழுமலைகளும் மனத்தில் இரக்கம் கொண்ட சப்தரிஷிகள் என்னும் ஏழு முனிவரும், அருளைத் தருகின்ற கன்னியர் எழுவரும், அசையாமல் உலகைத்தாங்கும் 'அஷ்ட குலாசலம்' எனும் எட்டு மலைகளும், சோலைகள் வளர்ந்துள்ள எட்டுத் திக்குகளும், எட்டு யானைகளும் அட்டமா நாகங்களும், திக்குப் பாலகர் எண்மரும், செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளும், தமிழ் மொழி கூறும் கலைமகளும், பிரமன் முதலிய தேவர்களும் போற்றி வணங்குகின்ற பாரபரையாகிய அம்பிகையிடத்தே தோன்றிய மைந்தர்களான இவர்களுடன் விளையாடுவதற்குச் சந்திரனே நீ வருவாயாக! ஆறுமுகம்படைத்த வேலாயுதனாகிய பரமனுக்குத்துணையாக வந்தவர்களுடன் சந்திரனே நீ விளையாட வருவாயாக!

செங்குந்தர் உயர்வு சொல்லி, சந்திரனை விளையாட அழைத்தமையின் இப்பாடல் 'பேதம்' என்னும் முறை பற்றியதாயிற்று.

அருஞ்சொற் பொருள்:

கம்பலை -.ஒலி. ஆரவாரம். கனகிரி— பெருமையுடைய மலை. தவர்- தவம்மேற்கொண்ட முனிவர். தம்பம்- தாங்குவது தந்தி- யானை. செம்பதுமம்- செம்மை பதுமம்- செந்தாமரை. பதுமாலயம்- (பதும ஆலயம் வடசொற்புணர்ச்சி) தாமரைக் கோயில்.



பரா+ அபரை பராபரை. முன்னையுமாய்ப் பின்னையுமாய் இருப்பவள். 'மேலோடு கீழானவள்' எனலுமாம்.' 'மேலோடு கீழாய் விரிந்தோன் காண்க' என்பது திருவாசகம். [திருவண்டப் பகுதி 50]' 'பாலகர் எட்டும்'·என்பதில் 'எட்டு' என்பது எண்ணாகு பெயராய், 'எண்மர்' எனப் பொருள் தந்தது.

கடல் ஏழு:

உப்புக்கடல், பாற்கடல், தயிர்க் கடல், நெய்க்கடல், கருப்பஞ்சாற்றுக் கடல், தேன்கடல், நன்னீர்க்கடல் என்பன.

மலை ஏழு:

இமயம், ஏமகூடம், கந்தமாதனம் கயிலை, நிடதம், இந்திர நீலம், மந்தரம் எஸ பன. இவற்றுடன் விந்தியம் ஒன்றைக் கூட்டி 'அஷ்டகுலாசலம்' (எட்டு மலைகள்) என்றும் கூறுவர்.

ஏழுமுனிவர் :

அத்திரி, குற்சன், வசிட்டன், பிருகு, கௌதமன், காசிபன், அங்கிரசன் என்போர்.

கன்னியர் எழுவர்:

அகல்யை அருந்ததி, நளாயினி, சீதை, மண்டோதரி, தாரை, திரௌபதி ஆகியோர்.

திசை எட்டு :

கிழக்கு முதலாயின.

யானைகள் எட்டு :

ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்பன, இவை 'அஷ்டதிக்கஜங்கள்' என்றும் கூறப்படும்.

பாம்பு எட்டு :

அனந்தன், ஆதிசேடன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன் தட்சன், வாசுகி, பதுமன் என்பன. இவற்றுடன்மகாபதுமன் என்பதையும் சேர்த்து ஒன்பது என்பர்.

திக்குப்பாலகர் எண்மர் :

இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகியோர்.

161 உலவிய திரைவிரி பாலா ழியில்வளர்
உரகபணா டவிமேல்
உம்பர் தொழுஞ்சல சத்திரு மகளுடன்
உறவிழி துயில்கூரும்

கலவியில் மருவிடு பொழுதொரு மதகரி
கஞ்சமென் மலர்கொய்யக்
கண்டொரு முதலை பிடித்திட வெருவிக்
கரிகோ மூலமென

உலகொடு வானுல கறியக் கதறிப
ஒருகுரல் அதிரவிடுத்(து)
உள்ளம் துள்ளித் தள்ளா டிக்கொண்(டு)
உயிர்போ மெனஅஞ்சி

அலறிய போதே அருள்மால் மருகரோ(டு)
அம்புலி! வருவாயே,
அறுமுக வேலவர் துணைவரோ(டு) ஆடுற
அம்புலி! வருவாயே. 7

பொழிப்புரை :

சந்திரனே! அலைகள் உலவுகின்ற பாற்கடலில் விரிக்கப்பட்ட ஆதிசேடனாகிய படங்களாகிய காட்டை யுடைய சேடசயனத்தின்மேல் தேவர்கள் வணங்குகின்ற, தாமரையில் வீற்றிருப்பளவாகிய திருமகளுடன் பொருந்திக் கலந்து இணைந்திருக்கும் சமயத்தில், மதம் பொருந்திய ஒரு யானை [மடுவில்] தாமரை மலர் கொய்வதைக்கண்ட முதலை ஒன்று அந்த யானையின் காலைக் கௌவிக்கொள்ள, அதனால் அஞ்சிய அக் 'கஜேந்திரன்' என்னும் யானை, தன் உயிர் போய்விடும் என்று பயந்து மனநடுக்கத்துடன் தள்ளாடி, பூவுலகமும் வானுலகமும் கேட்குமாறு 'ஆதிமூலமே' என்று ஓசையெழுப்ப, திருமகளைவிட்டு உடனே ஓடிச்சென்று முதலையைக் கொன்று



யானைக்கு அருள்செய்த திருமாலுக்கு மருகர்களான செங்குந்தர்களுடன் நீ விளையாட வருவாயாக. ஆறுமுகம் படைத்த... ...வருவாயாக!

இப்பாடலும் 'யானைக்கு அருள்புரிந்தவன் மருகர் உனக்கு அருள்புரிவர்' என்னும் குறிப்பினால் தானோபாயம் பற்றியதாம்.

அருஞ்சொற் பொருள் :

திரைவிரி - அலைவீசும்; பாலாழி - பாற்கடல்; உரகபணாடவி - உரகம் - பாம்பு; பணம் - படம்; அடவி - காடு; சலசம்- ஜலசம் - (தண்ணீரில் தோன்றுவது) தாமரை; (ஜலஜா என்ற பெயர் வழங்குவது காண்க). கலவி - கலப்பு; மருவுதல்- பொருந்துதல்; கஞ்சம் - தாமரை; கரிகோ - யானையரசு. கஜேந்திரன்; 'கரி' வட சொல்லாதலின் ஒற்று மிகாதே வந்தது. மூலம்—ஆதிமூலம்; அதிர — நடுங்கும்படி.

162 முரச மலாடம், கொங்கு, தெலுங்கு
முடுகிய கருநாடம்
மோதிய முனையிடு, மொட்டியம், ஈழம்,
முதிர்குகு ரம், துளுவம்,

உரைசெறி சிங்களம், வங்காளம், புகழ்
உயர்கரு மலையாளம்,
ஓதிய வங்கம் கலியாணந்திரு
உயர்சோ ழம், குடகம்.

கருதிய மகதம், மராடஞ், சிந்தொடு
கமலம் செறிசீனம்,
கவினுறு ஐம்பத் தறுதே சத்துள
கதிர்முடி உடையமகா

அரசர் மதித்திடு மன்னவ ரிவருடன்
ஆடுக, அம்புலியே!
அறுமுக வேலவர் துணைவரோ(டு) இன்புற
ஆடுக, அம்புலியே! 8

பொழிப்புரை :

சந்திரனே! முரசு முழங்கும் மலையமான் நாடு, கொங்கம், தெலுங்கம், வலிமையுடை கருநடம், போர்க்களத்தில் மோதுகின்ற ஒட்டியம், ஈழம், பழமையான கூர்ச்சரம், துளுவநாடு, சிங்களம், வங்காளம், உயர்ந்த மலையாளம், வங்கம், கலியாண புரி, செல்வம் உயரும் சோழநாடு, குடகு (சேர) நாடு, மகதம், மராடம் சிந்து, சீனம் முதலிய அழகு நிறைந்த ஐம்பத்தாறு தேசங்களிலும் உள்ள ஒளி வீசும் மகுடமணிந்த அரசர்களால் மதித்துப் போற்றப்படுகின்ற மன்னர்க்குச் சமமான இச் செங்குந்தர்களுடன் வந்து விளையாடுவாயாக. ஆறுமுகம் படைத்த ... ... ...வருவாயாக!

செங்குந்தர் உயர்வு கூறினமையின் இப்பாடலும் 'பேதம்' என்ற உபாயம் பற்றிக் கூறப்பட்டதாம்.

அருஞ்சொற்பொருள் :

முனை - போர்க்களம்; குகுரம் - குற்சர தேசம்; சிங்களம் - ஈழத்தின் தென்பகுதி. கலியாணம் - சாளுவ நாட்டின் தலை நகர்; கவின் - அழகு; கதிர்முடி - ஒளிவீசும் மகுடம்.

அம்புலிப்பருவம் முற்றுப்பெற்றது.

O

சிறுபறைப் பருவம்

(குழந்தையை நோக்கித் தாயர் முதலியோர் 'பறை முழக்கி அருள்க' என வேண்டுவது. இது இரண்டாமாண்டில் நிகழும் என்பர்.) இப்பருவம் பல பிள்ளைத் தமிழ்நூல்களில் சிற்றிற்பருவத்தை அடுத்துக் காணப்படுவது. அஃ்தே இலக்கணமாகவும் உள்ளது.

163 சந்திரக் கவிவாணர் இசைமுழக் கப்,பெருகு
சதுர்வேத மறைமுழக்கத்,
தண்காவின் மலரளிகள் குமுறொலி முழக்கிடத்,
தந்திவீ ணைகள்முழக்கப்,

பந்திமத கரிகள்குர லொலிமுழக் கத்,திருப்
பரதமட வார்முழக்கப்,
பன்னுசுர மண்டலம் முழக்க, மும் முரசமும்
பரிவுகொடும் எதிர்முழக்கத்,



திந்திமிதி என ஆடு பரியின்மே லரசரும்
திரையிடும் தொனிமுழக்கத்,
திகழுமுலை மடமாதர் ஆலத்தி ஏந்தியவர்
திருமொழிகள் பலமுழக்கச்

செந்திருப் புயவீர வாகுதே வத்தலைவர்!
சிறுபறை முழக்கியருளே!
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்!
சிறுபறை முழக்கியருளே! 1

பொழிப்புரை :

சந்திரனைப் போலக் குளிர்ச்சியைத் தரும் இனிய கவிவாணர்கள் இசைப் பாடல்களைப் பாடவும், பெருகிய நால்வேதங்கள் மந்திரங்களை முழக்கவும், குளிர்ந்த சோலையில் உள்ள மலர்களில் உள்ள வண்டுகள் இனிய ரீங்கார ஒலி முழக்கவும், தந்திகள் அமைந்த வீணைகள் இசைகளை முழக்கவும், வரிசையாக உள்ள யானைகள் பிளிறல் ஒலியை முழக்கவும், அழகிய நாட்டியப்பெண்கள் நடனமாடி ஒலியை எழுப்பவும், இந்த ஒலிகளுடன் வானுலகத்தில் உள்ளார் தேவ வாத்தியம் முழக்கவும், அலைகளுக்கு எதிராக வீரமுரசு, வெற்றி முரசு, கொடை முரசு என்ற மூன்று முரசுகள் மண்ணுலகில் முழங்கவும், 'திந்திமி' என்று ஆடுகின்ற குதிரையின் மேல் வரும் அரசர்கள் கப்பம் அளக்கின்ற முழக்கத்தைச் செய்யவும், அழகிய நகில்களை உடைய பெண்கள், ஆலத்தி எடுத்து பலவாகிய வாழ்த்துப் பாடல்களை முழக்கவும், திருமகள் தங்கிய தோள்களையுடைய வீரவாகுத்தேவரின் வழிவந்த தலைவர்களே! சிறுபறை முழக்கியருள்வீர்களாக சிவந்த கடப்ப மாலையணிந்த மலைபோன்ற தோள்களை உடையவர்களே! சிறுபறை முழக்கியருள்வீர்களாக.

அருஞ்சொற்பொருள்:

தண் கா - குளிர்ந்த சோலை; அளிகள் - வண்டுகள்; குமுறொலி - பேரொலி; தந்தி — நரம்பு; பந்தி - வரிசை; பரதமடவார் - நாட்டியப்பெண்கள்; சுரமண்டலம் -தேவலோகம்; பரிவு - அன்பு, துங்கம் - உயர்ச்சி; வெற்பு - மலை; புயம் - தோள்.

164 வீறாடும் ஒன்னலர்கள் மகுடம் பிளக்கவே
வெட்டும் பரிக்குநகுலர்,
மென்மீசை உடையவர்கள், அபிமான பூடணர்கள்,
வீரசூ ரனைவென் றவர்

மாறாடு பாவகோ டிகளெலாம் ஓடிட
வழங்கிடும் பிச்சையுடையார்,
மாகாளி கையைப் பிடித்தவர்கள், முசுகுந்தன்
மல்லாரி யைப்பரித்தோர்,

தாறாடுக தலியும் பாகலுஞ் சூதமுஞ்
தண்கனி சுமந்துநிற்கும்
தண்டலையில் விண்தழுவு வாளைபாய்ந் தக்கனிச்
சாறுபாய்ந் தோடுவெள் ளம்

சேறாடு கழனிசூழ் கச்சிநக ருக்கதிபர்!
சிறுபறை முழக்கியருளே!
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்!
சிறுபறை முழக்கியருளே! 2

பொழிப்புரை :

வீரத்துடன் போரிடும் பகைவர்கள் தலையில் அணிந்துள்ள முடிகள் உடையுமாறு வெட்டுகின்றவர்களும், குதிரைகளைச் செலுத்துவதில் நகுலனைப் போன்றவர்களும், மெல்லிய மீசை உடையவர்களும், சுற்றத்தவர்மேல் அன்பு பூண்டவர்களும், வீரமுடைய சூரபதுமனை வென்றவர்களும், மாறுபட்டு உழல்கின்ற எண்ணற்ற பாவங்கள் தொலைந்து ஓடும்படி பெரியோர்களுக்குத் தானம் செய்கின்றவர்களும், சிவபெருமானுடன் நடனமாடியபோது, தோற்ற காளியின் கையைப் பிடித்து அவமானம்செய்தவர்களும், முசுகுந்தனிடமிருந்துபம்பைமேளத்தைக் கைக்கொண்டவர்களும், குலைகள் தொங்கும் வாழை, பலா, மா முதலிய குளிர்ந்த பழங்களைச் சுமந்துள்ள மரங்கள் நிறைந்த சோலையில் வான்வரை வாளைமீன் பாய்ந்து அக்கனிகளைத் தாக்குவதனால் அவற்றின் சாறு பாய்ந்து சேறான கழனிகளை உடைய காஞ்சி நகருக்கு உரியவர்களும் ஆகிய செங்குந்தர்களே! சிறுபறை முழக்கியருள்வீர்களாக. சிவந்த ............ சிறுபறை முழக்கியருள்வீர்களாக.



அருஞ்சொற்பொருள் :

ஒன்னலர் - பகைவர்; மல்லாரி - பம்பைமேளம்; தாறு-குலை; கதலி - வாழை: பாகல் - பலா; சூதம் - மாமரம்; தண்டலை - சோலை; சேறாடு - சேறு நிரம்பிய.

165 பூவகைத் தளிர்களொரு கோடிதண் டலைதொறும்
பொருவிலிசை பலமுழக்கப்,
புண்டரீ கக்கழனி வாய்தொறுங் கடைசியர்கள்
புகல்குரவை ஒலிமுழக்க,

மாதவத் துமைஅரிய தவமுயலு மருகிலும்
வருகம்பை அலைமுழக்க,
வாசமல ரோடைதொறு முக்கோடி சங்கினம்
வளமைகொளும் ஒலிமுழக்கப்,

பாவகத் தவமுனிவர் பூசைவே ளைக்கினிய
பன்மணித் தொனிமுழக்கப்
பன்னாளும் இந்தவகை மாறா முழக்கமே
பயில்கச்சி யம்பதியினோர்

சேவகக் கந்தன் சகோதரப் பிரபுடிகர்!
சிறுபறை முழக்கியருளே!
செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்!
சிறுபறை முழக்கியருளே! 3

பொழிப்புரை :

கோடிக்கணக்கான சோலைகளில் உள்ள பூக்களும் தளிர்களும் (வண்டு ஊதுவதனாலும், காற்றில் அசைவதனாலும்) ஒப்பற்ற பல இசை முழக்கங்களைச் செய்யவும், தாமரை மலர்கள் மலர்ந்துள்ள வயல்களில் உழத்தியர் மகிழ்ந்து பாடும் ஆரவார ஒலி முழக்கவும், பெருமையுடைய உமாதேவி தவம் செய்கின்ற இடத்தில் பெருகிவரும் கம்பையாறு அலைஓசையை முழக்கவும், மணம்மிக்க மலர்கள் மலர்ந்துள்ள நீரோடைகளில் உள்ள எண்ணற்ற சங்குக்கூட்டம் நிறைந்த ஒலியை முழக்கவும், தீ வளர்த்து வேள்வி செய்யும் தவமுனிவர்கள் தங்கள் பூசை நேரத்தில் இனிய பலமணிகளை முழக்கி ஓசை உண்டாக்கவும் இவ்வகை முழக்கங்கள் எந்த நாளிலும் மாறாமல் நிரம்ப ஒலிக்கின்ற கச்சிப்பதிக்குரியவர்களும், வீரத்தை உடைய கந்தவேளுக்கு உடன்பிறந்த செல்வர்களும் ஆகிய செங்குந்தர்களே!

சிறுபறை முழக்கியருள்வீர்களாக. சிவந்த ... ... ... முழக்கி யருள்வீர்களாக!

அருஞ்சொற்பொருள்:

புண்டரீகம் - தாமரை; குரவை - மகளிர் கூடிஆடிப்பாடும் பாட்டு; சங்குஇனம் - சங்குக்கூட்டம்; பாவகத்தவ முனிவர்- நெருப்பு மூட்டித் தவம் செய்வோர்; தொனி - ஓசை; சேவகம்- வீரம்; பிரபுடீகர் - செல்வர்கள்.

**166 தம்பமெனு மகமேரு வில்லுடைய மகதேவர்**
**தம்புதல்வர், அம்புய மலர்த்**
**தையன்முலை மீதிலே துயில்புரியும் நெடியமால்**
**தயவுபுரி திருமருகர், பூங்**

**கொம்புடைய மதயானை மேலுதய மதரூபர்,**
**குருவின்மொழி தவிராதவர்,**
**கோலமிகு சிவபூசை மேலதிக தயவாளர்,**
**குலபுரவி நகுலன்அனையார்,**

**அம்புவி மதிக்கவரு வீரசெங் குந்தர்பே**
**ரபிமான பூடணமுளோர்,**
**ஆதிகயி லாயகிரி நாதரருள் பெற்றவர்கள்,**
**அகிலம் புரக்கும்நிபுணர்.**

**செம்பவள மடமாதர் கும்பவிள முலைநேயர்!**
**சிறுபறை முழக்கியருளே!**
**செங்கடப் பங்தொடைத் துங்கவெற் பனையபுயர்!**
**சிறுபறை முழக்கியருளே!** 4

பொழிப்புரை :

நிலத்தைத் தாங்கும் தூண் போன்ற மகாமேரு மலையை வில்லாகவுடைய, யாகத்தலைவராகிய சிவபெருமானுடைய குமாரர்களும், தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளின் நகில் களில் துயில்கொளும், திரிவிக்ரமனாக வளர்ந்த நெடிய திரு மாலின் கருணை பெற்ற அழகிய மருகர்களும், அழகிய தந்தங் களை உடைய மதயானைகளின் மீது ஆரோகணிக்கின்ற பெருமிதத்தோற்றம் உடையவர்களும், தாம் ஏற்றுக்கொண்ட குருநாதருடைய வார்த்தைகளைச் சிரமேற்கொள்பவர்களும்,



அழகு மிகுந்த சிவபூசை செய்வதில் மிக்க ஆர்வம் உடையவர் களும், கூட்டமாகிய குதிரைகளைச் செலுத்துவதில் அர்ச்சுன னுக்கிளைய நகுலனைப் போன்றவர்களும், நிலை தாழாத பெருமையை ஆபரணமாகக் கொண்டவர்களும், கயிலாய மலையில் வாழும் ஆதிப்பிரானான சிவபெருமான் அருள் பெற்றவர்களும் உலகையாளும் வல்லமை படைத்தவர்களும், சிவந்த பவளம் போன்ற இதழ்களையுடைய இளமை பொருந்திய பெண்களின் குடம் போன்ற இளநகில்கள் மீது விருப்பம் உடையவர்களும் ஆகிய, அழகிய பூவுலகம் மதிக்கு மாறு உதித்த, வீரமுடைய செங்குந்தர்களே! சிறுபறை முழக்கி யருள்வீர்களாக! சிவந்த ... ... ... சிறுபறை முழக்கியருள் வீர்களாக.

அருஞ்சொற் பொருள்:

தம்பம் -தூண் (ஆதாரம்) மகம் - யாகம்; மகதேவர்- யாகத்திற்குத் தலைவர்; அம்புயம் - அம்புஜம் - நீரில் உண்டாவது - தாமரை; அபிமானம்- நிலை தாழாத பெருமை, கும்பம் - குடம்.

**167 புகழ்பெற்ற சூரன்மா மரமதா யுருவுகொடு**
**புக்குநிற் குங்கடலிடைப்**
**போந்துவடி வேல்விட்(டு) எறிந்துமுடி சிதறிடப்**
**பொருதுவரு முருகர்துணைவர்,**

**நகைமுத்த மனையசெந் திருமகளை அகலாத**
**நாகரிக மாலின்மருகர்,**
**நாடறிய வேபட்ட மானமுங் காத்தவனை**
**ரட்சித்த கருணையுடையார்,**

**தொகைபெற்ற அறுபத்து நாலுகலை கற்றவர்கள்,**
**சொல்வாண ருக்கினியவர்,**
**துட்டவல் லானுடைய பட்டங் குலைத்தவர்கள்**
**சுரிகைமல் லாரியுடையார்**

**செகமெச்சு பஞ்சவண விருதுடைய மகராசர்!**
**சிறுபறை முழக்கியருளே!**
**செங்கடப் பங்தொடைத் துங்கவெற் பனையபுயர்!**
**சிறுபறை முழக்கியருளே!** 5

பொழிப்புரை:

[எல்லா அண்டங்களிலும்] புகழைப் பெற்ற சூரபதுமன் போரிட்டு வெல்ல இயலாமல் இறுதியில் கடலிடைப் புகுந்து மாமர வடிவு கொண்டுநிற்க, அங்குச் சென்று கூர்மையுடைய வேலைச் செலுத்தி அவன் அழியுமாறு போரிட்டு மீண்ட முருகப்பெருமானுக்குத் துணையாக வந்தவர்களும், முத்துப் போன்ற பற்களையுடைய இலக்குமியைப் பிரியாத கருணை யுடைய திருமாலுக்கு மருகரானவர்களும், உலகறியப் பாஞ் சாலிக்குக் கெட இருந்த மானத்தைத் திருமால் சம்ரட்சணம் செய்தபோது, அத்திருமாலின் பெருமையைக் காக்கத் தாங்கள் நெய்த ஆடையை அவருக்குத் தந்துதவிய கருணையை உடைய வர்களும், தொகுத்துச் சொல்லப்படுகின்ற அறுபத்து நான்கு கலைகளையும் கற்றுணர்ந்தவர்களும், சொலல்வல்ல கற்றோர் களுக்கு இனிமையானவர்களும், கொடிய வல்லானுடைய ஆட்சியை அழித்தவர்களும். சுரிகை முதலிய படைகளைக் கைக்கொண்டவர்களும், உலகம் புகழுமாறு பஞ்சவண்ண விருதுக் கொடியுடைய பெருஞ்செல்வம் உடையவர்களும் ஆகிய செங்குந்தர்களே! சிறு பறை முழக்கியருள்வீர்களாக. சிவந்த ... ... ... சிறுபறை முழக்கியருள்வீர்களாக.

அருஞ்சொற்பொருள்:

போந்து - வந்து. நகை - பல். நாகரிகம் - கண்ணோட்டம் [கருணை] தொகை-கூட்டம். சுரிகை-உடைவாள். மல்ல [ா]ரி- பம்பை மேளம். மகராசர் - பேரரசர் போன்ற செல்வத்தை உடையவர்கள்.

**168 பரிவுடைய முப்பத்து முக்கோடி தேவரும்**
**படர்முடித் தேராகவும்,**
**பரிதிமதி இருவருந் தருமுருளை யாகவும்,**
**பகருமறை வடமாகவும்,**

**விரிகமல மலரயன் ஊர்பாக னாகவும்,**
**மேருகிரி சிலையாகவும்,**
**மிக்கவா சுகிநெடிய நாணாகவும். கருணை**
**மேவுமால் கணையாகவும்**



**தருமணத் தக்கினிக் கிடுசமித் தாகவே**
**சமர்செய நினைக்கு மந்நாள்**
**தக்கஇவர் மனவலிமை கண்டுதே ரடியிடத்**
**தான்முரிந் திடநகைத்தே**

**திரிபுர மெரித்தவொரு பரமசிவ னருள்மைந்தர்!**
**சிறுபறை முழக்கியருளே!**
**செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்!**
**சிறுபறை முழக்கியருளே!** 6

பொழிப்புரை:

[இறைவனிடத்தில்] அன்புகொண்ட, 'முப்பத்து மூன்று கோடி' என்ற தொகை பெற்ற தேவர்கள் அனைவோரும் உயர்ந்த உச்சியையுடைய தேராகவும், அத்தேருக்குச் சூரிய சந்திரர்களிருவரும் சக்கரமாகவும் நான்கு வேதங்களும் கயிறு [வடம்]களாகவும், தாமரை மலரில் உறையும் பிரமன் தேரோட்டும் பாகனாகவும், மகாமேருமலை வில்லாகவும், பெருமை மிக்க வாசுகி என்னும் பாம்பு அந்நீண்ட வில்லின் நாணாகவும். உயிர்களிடம் கருணையுடைய திருமால் அம்பாகவும் அமைய முப்புரம் சினமாகிய நெருப் புக்கு இடும் சமித்தாக ஆகும்படி அத்தேரேறிச் செல்ல எண்ணுகையில், திருமால் முதலியவர்கள் இச்செயல் நம் வல்லமையாலேயே முடியும் என மனத்துள் எண்ணியதை உணர்ந்து, தனது திருவடியினை அத்தேர்மீது வைக்க அத் தேரானது முரிந்து வீழவும், தனது புன்சிரிப்பினாலேயே திரிபுரங்களையும் அழித்தருளியவராகிய பரமேசுவரனது அருளால் தோன்றியவர்களே! சிறுபறை முழக்கியருள்வீர் களாக! சிவந்த ... ......சிறுபறை முழக்கியருள்வீர்களாக.

[குறிப்பு] இறைவன் சென்று செயத்தக்க தில்லை. இருந்த படியே நினைத்துச் [சங்கற்ப மாத்திரையானே]செய்ய வல்ல வர் என்பது 'நகைத்தே திரிபுரம எரித்த வொரு பரமசிவன்' என்ற தொடரால் விளங்கும்.

அருஞ்சொற்பொருள்:

பரிவு — அன்பு. பரிதிமதி — சூரியசந்திரர். உருளை — தேர்ச்சக்கரம். மறை — வேதம். (வேதங்கள் குதிரைகளானதா கவே புராணம் உள்ளது) ஊர்பாகன் — தேரோட்டி. சமித்து

— யாகத்தீயில் இடும் சுள்ளி. அடியிட — திருவடியை ஊன்ற. ருத்திரர் — 11; ஆதித்தர் — 12. வசுக்கள்—8, அசுவினிதேவர் — 2 ஆக 33 பேர். இவர் ஒவ்வொருவருக்கும் ஒரு கோடியாகக் கணக்கிட்டு முப்பத்து முக்கோடி தேவர் என்பது மரபு.

**169 கோமேவு வதனக் குறச்சிறுமி உறைகின்ற**
**குளிர்தினைப் புனவனத்தில்**
**கோல்பிடித் துச்சிமயிர் மேல்வெளுத் 'துக்கிழக்**
**கோலமுட னேகிஅவள்முன்**

**நாமேவும் இதமுரைத் தினியதினை மாவுண்டு,**
**நாவுலரு தெனமயக்கி,**
**நற்புனச் சுனைவழியில் அற்புத மணம்புரியும்**
**நற்றணிகை முருகர்துணைவர்**

**பாமேவு மதுரவிசை பாடிச் சுரும்பினம்**
**பைந்தேனின் அமுதநுகரப்**
**பசுமுகை முறுக்கவிழ்ந்(து) அலர்விரிந்(து) ஒழுகுமவிர்**
**பண்புபுனை மல்லிகைப்பூந்**

**தேமேவு தண்தருத் தொண்டைவள நாடதிபர்!**
**சிறுபறை முழக்கியருளே!**
**செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்!**
**சிறுபறை முழக்கியருளே!** 7

பொழிப்புரை:

அழகிய கண்கள் பொருந்திய முகத்தையுடைய குறப் பெண்ணாகிய வள்ளியம்மை உறைகின்ற, குளிர்ச்சி பொருந்திய தினைப் புனத்தையுடைய காட்டில், நரைத்த தலை முடியுடன், கையில் ஊன்றுகோல் பிடித்து முதுமைக்கோலம் கொண்டு அப்பெருமாட்டி முன்னர்ச்சென்று, இனிய வார்த்தைகளைப் பேசி, அவள் கொடுத்த தேன்கலந்த இனிய தினை மாவை உட்கொண்டு, 'நீர்வேட்கையால் நா வறள்கின்றது' என்று கூறி, அவ்வம்மையை நல்ல நீருற்றைத் தேடி அழைத்துச் செல்லும்போது (விநாயகப் பெருமானுடைய) அதிசயத்துணை கொண்டு களவு மணம் புரிந்துகொண்ட தணிகையிலமர்ந்த முருகவேளுக்குத் துணைவர்களாக வந்தவர்களாகிய பண்



பொருந்திய இனிமையான இசையை வண்டினங்கள் பாடித் திரிந்து பசிய தேன் உண்ணுமாறு மொட்டு விரிந்து தேன் சுரக்கும் மல்லிகைப் பூக்களைக் கொண்ட சோலைகளையும், தேன்பொருந்திய குளிர்ந்த மரங்களையும் உடைய தொண்டை நாட்டிற்கதிபர்களே! சிறுபறை முழக்கி அருள்வீர்களாக! சிவந்த ...... ...சிறுபறை முழக்கியருள்வீர்களாக.

அருஞ்சொற்பொருள்:

கோ — கண், வதனம் — முகம், இதம்— இனிய வார்த்தை. மதுரம் — இனிமை. சுரும்பு — வண்டு. முகை — மொட்டு. முறுக்கவிழ்ந்து — இதழ் விரிந்து. தேமேவு — தேன்பொருந்திய. சுனையில் நீர் பருகித் தாகம் தீர்ந்த பின்பே மோகம் தீர மணம் புரிந்ததாகப் புராணம உள்ளது. 'உலருது' — வழக்குத் தமிழ், பிற்காலச் செய்யுட்களில் இவைபோல்வன வரும்.

**170 அச்சமாய் ஓடிவந்(து) அபயமென் றவர்தம்மை**
**ஆதரிக்கின்ற பெரியோர்,**
**அஞ்சாத பகைவரிடம் நெஞ்சாணி யாகவே**
**அடல்செய்படை கொண்டபெரியோர்,**

**வச்சிரபா ணிக்கடவுள் மெச்சவே சூரரை**
**வதைத்துதவி செய்த பெரியோர்,**
**வானவர்கள் சஞ்சலந் தீர்த்தருளி வானுலகம்**
**வாழ்விக்க வந்த பெரியோர்,**

**உச்சமா மதியமுங் கதிரவனும் மாறாடி**
**ஓங்குதென் திசைவடதிசைக் (கு)**
**உதயமாய் வருகினும் ஒல்காத மெய்வசனம்**
**உற்றுரைக் கின்றபெரியோர்,**

**செச்சைமா லிகைமேவு கச்சிநகர் வீரர்கள்!**
**சிறுபறை முழக்கியருளே!**
**செங்கடப் பந்தொடைத் துங்கவெற் பனையபுயர்**
**சிறுபறை முழக்கியருளே!** 8

பொழிப்புரை:

பகைவரிடம் கொண்ட பயத்தினால், ஓடி வந்து, 'எங்களைக் காப்பாற்றுங்கள்' என்று தம்மை அடைந்தவர்

களை ஆதரவு காட்டி வாழவைக்கும் உயர்ந்தவர்கள்; அஞ்சாத பகைவர்பால் இருதயத்தில் அழுந்தப்பதியும் ஆணி போன்று அடர்க்கின்ற படையைக் கையில் கொண்டவர்கள்; இந்திரன் புகழ்ந்து கொண்டாடுமாறு சூரபதுமனைக்கொன்று அவனுக்கு உதவிய பெருமையுடையவர்கள்; தேவர்களுடைய மனக்குறையைப் போக்கியருள் செய்து தேவலோகத்தை முன்புபோல வாழச்செய்தவர்கள்; உயர்ந்த வானிலுள்ள சூரியனும் சந்திரனும் கிழக்கிலும் மேற்கிலும் தோன்றுதற்கு மாறாக வடக்குத் தெற்கில் தோன்றினாலும் குறையாத உண்மை பேசுவதில் மாறாத தன்மை உடையவர்கள்; உதயசந்திரன் பொருந்துகின்ற உயர்ந்த மாளிகைகளையுடைய கச்சிநகரில் உறைகின்ற வீரமுடையவர்கள் ஆகிய செங்குந்தர்களே! சிறுபறை முழக்கியருள்வீர்களாக! சிவந்த ...... ...சிறுபறை முழக்கியருள்வீர்களாக.

பெரியோர் என்னும் இச்சொல் ஒரே பொருளில் பலமுறை வந்தது சொற்பொருட் பின்வரு நிலையணி.

அருஞ்சொற்பொருள்:

பெரியோர் — பெருமை உடையவர். வச்சிரபாணி — வச்சிராயுதத்தைக் கையில் கொண்டவன் (இந்திரன்). சஞ்சலம் — மனக் கவலை. மாறா'டி — மாறுபட்டு. ஒல்காத — தளராத. செச்சை — உதயசந்திரன்.

சிறுபறைப் பருவம் முற்றிற்று

ⓞ

சிற்றிற் பருவம்

சிறுமியர் மணல்வீடு கட்டி விளையாடும்போது சிறுவர்கள் அவ்வீட்டினைக் காலால் உதைத்து அழிப்பது சிற்றில் சிதைத்தல் எனப்படும். சிறுமை + இல் — சிற்றில். பாட்டுடைத் தலைவனைச், சிறுமியர் 'எம் வீட்டினை அழிக்காதீர்' என வேண்டுவது இப்பருவப் பாடல்களின் கருத்து அம்புலிப்பருவத்தினையடுத்து சிற்றிற்பருவம் பாடுவது வழக்கமாய் உள்ளது. இலக்கணமும் அதுவே. இப்பிள்ளைத்தமிழில் அம்முறை மாறியுள்ளது.



171 பூவிற் சிறந்த திருமாதும்,
புகல்நால் வேதக் கலைமாதும்,
பொன்னாட் டுயர்ந்த சசிமாதும்
போற்றும் உமையாள் திருச்சிலம்பில்

மேவிப் பிறந்து காலனுடன்
பெரும்போர் விளைத்த விறலோர்கள்,
விளங்கு முகத்தில் மென்மீசை
மிகவே படைத்த பெரியோர்கள்,

நாவிற் சொலின்நா விலங்காத
நல்லோர், வல்லான் மனைக்கன்று
நன்மங் கிலியங் கொடுத்தருளி
நாட்டிற் புகழைப் படைத்தோர்கள்,

சேவற் கொடிநல் விருதுடையோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே!
சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே! 1

பொழிப்புரை :

தாமரை மலரில் வாழும் சிறந்த திருமகளும், உயர்ந்த நால் வேதம் வல்ல கலைமகளாகிய சரசுவதியும், தேவலோகத்தில் வாழும் சிறந்த இந்திராணியும், போற்றுகின்ற உமையம்மையாரின் திருவடிச்சிலம்பில் உதித்தவர்களும், சூரபதுமனுடன் நிகழ்ந்த போரில் இலக்கம் வீரர் உயிர் கவர்ந்தமைக்காக எமனுடன் போரிட்ட வெற்றியை உடையவர்களும், அழகிய முகத்தில் மெல்லிய மீசை உடையவர்களும், தம்வாயால் ஒன்று கூறினால் அதிலிருந்து என்றும் மாறாத உறுதியுடையவர்களும் கொடிய வல்லானுடைய அரண்மனைக்குச் சென்று அவனையழிக்கப் புகும்போது, அவனுடைய மனைவி இரந்து கேட்ப அவளுக்கு மாங்கல்யப் பிச்சை கொடுத்து நல்ல புகழடைந்தவர்களும், சேவலைக் கொடியில் கொண்ட விருது பெற்றவர்களும் ஆகிய உயர்ந்த தன்மைஉடையவர்களே! அறியாமைஉடையவர்களாகிய எங்கள் சிறிய மணல்வீட்டை அழிக்காதீர்கள்! வானுலகத்திலுள்ள தேவர்களின் சிறை நீக்கியவர்களே! எங்கள் சிறிய மணல் வீட்டை அழிக்காதீர்கள்!

அருஞ்சொற்பொருள் :

சசி - இந்திராணி; விறல் - வெற்றி.

172 காரார் சோலைக் கரையிடத்தில்,
கமலஞ் சிறந்த நறுநிலத்தில்
களவன் தரள வண்டல்செய்து
கருதிக் கருதி விளையாடி

நேராய் மலர்பூங் குழல்முடிக்க
நிறைந்த மதியொன்(று) அறியாது
நிற்கு மடப்பே தையர்உமது
நிகர்வில் முகத்தை அறியோமால்;

ஆராய் புலவர் கவியலவே!
அடல்சேர் வல்லான் தலையலவே;
அஞ்சாச் சூரன் புரமலவே!
அழகார் அடிகள் வருந்தாவோ!

சேரா அரசர் முடியலவே!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே!
சேணாட்(டு) அமரர் சிறைவிடுத்தோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே! 2

பொழிப்புரை :

மேகம் தன்னைத் தழுவுமாறு உயர்ந்துள்ள மரங்கள் நிறைந்த சோலையின் ஓரத்திலும், தாமரைமலர் நிறைந்துள்ள நன்செய் நிலத்திலும் முத்துக்களால் மணல் வீடு கட்டிப் பல நினைப்புகளுடன் விளையாடிக் கூந்தலில் மலர்களைச் சரியாக முடிக்கவும் அறியாத சிறு பெண்களாகிய நாங்கள் உங்கள் ஒப்பற்ற முகத்தைக்கூட ஏறிட்டுப் பார்த்தறியோம். எங்கள் சிற்றில்களை நீங்கள் அழித்தற்கு அவை ஆராய்ச்சியில்லாத அரை குறைக் கவிஞர்களது பாடல்கள் அல்லவே. வலிமை பொருந்திய வல்லான் தலை அல்லவே. அஞ்சாமையுடைய சூரபதுமனுடைய வீரமகேந்திரபுரம் அல்லவே. பகையரசர்கள் தலையில் அணியும் முடிகள் அல்லவே. இவைகளைச் சிதைத்தால் உங்கள் அழகான பாதங்கள் வருத்தமடையாவோ?(அடையும்) ஆகவே எங்கள் சிறிய மணல் வீட்டைச் சிதைக்காதீர்கள்! வானுலகத்திலுள்ள ... ... ... அழிக்காதீர்கள்!



அருஞ்சொற்பொருள் :

தரளம் - முத்து; வண்டல் - சிறுமியர் விளையாடும் விளையாட்டு; மடம்- அறியாமை; அறியோமால் - ஆல்-அசை; (கவிதைகள், சூரன் நகரம், பகையரசர்முடி முதலியன சிதைப்பதற்கு உரியன. எங்கள் சிற்றில் சிதைப்பதற்கு உரியன அல்ல' என்று கூறிய நயம் உணர்ந்து இன்புறத்தக்கது).

173 காண்டற் கரிய மணவாளர்
கருத்தைத் திருத்தும் விழியாலே
காட்டி மயக்கி வரவழைக்கக்
கருத்தொன் றறியாப் பேதையர்கள்

வேண்டற் குரிய சிற்றில் முற்றும்
வேண்டா(து) அழிப்ப துங்களுக்கு
விருப்போ? கருப்ப நீர்பயில்சொல்
மெய்த்தாய் மார்கள் பத்தியுடன்

பூண்டற் கரிய பணிதிருத்திப்
புகழ்ந்து விளையா டெனவிடுத்தால்
பொன்னார் சிலம்பு கலின்கலினப்
போந்து விளையா டாமல்,ஒன்னார்

தீண்டச் சிவந்த மலர்த்தாளால்
சிறியோஞ் சிற்றில் சிதையேலே!
சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே! 3

பொழிப்புரை :

கிடைத்தற்கு அரிய மாப்பிள்ளைகள் எதிரே வந்தாலும் உள்ளக்கருத்தை வெளிப்படுத்தும் கண்களாலே அதை வெளிப்படுத்தி அவர்கள் உள்ளங்களில் ஆசையை எழுப்பி அவர்கள் எங்களை நாடி வரும்படிச் செய்யத் தெரியாத பேதைப்பருவத்தினர் நாங்கள்; எங்கள் விருப்பத்திற்கு ஏற்ப இழைத்த சிற்றில்களை நீங்கள் விரும்பாமையால் முற்றிலும் அழித்துப் போவது உங்கட்கு அழகாகுமோ? இதுதான் உங்கள் ஆசையோ? கருப்பஞ் சாற்றைப் போன்ற இனிய மொழிகளையுடைய உங்கள் நல்ல தாய்மார்கள் உங்களை அன்புடன் அழைத்து (நீராட்டி)ஆடை ஆபரணங்களால் அழகு

செய்து, உங்களை மெச்சிப் பாராட்டி, ‘வெளியில் சிறிது நேரம் சென்று விளையாடி விட்டு வருக - என்று சொல்லி அனுப்பினால், அவர்கள் சொற்படி உங்கள் காலில் அணிந்த பொற்சிலம்புகள் ‘கலீர்! கலீர்’ என ஒலிக்குப்படி எங்கேயாவது சென்று ஓடி ஆடி விளையாடாமல், பகைவர்கள் தொட்டு வணங்குவதற்குத் தங்கள் கைகளினால் தீண்டினால் சிவக்கின்ற மெல்லிய மலர்போன்ற உங்கள் பாதங்களால் சிறியோங்களுடைய சிற்றிலை அழிக்காதீர்கள். வானுலகத்தில் ... ... ... அழிக்காதீர்கள்.

அருஞ்சொற்பொருள் :

கரும்பு நீர் - ‘கருப்ப நீர்’ என வந்தது.

174 மேவுந் திசையிற் கிரிகளெட்டும்
விளங்கு மணித்தா ளெனநிறுவி
மிளிர்சேர் சக்ர வாளநெடு
வெற்பைச் சுவராய் ஒப்பமிட்டுத்

தாவும் வெளிஆ காயமெனத்
தனிவீ டாக்கி மணிவிளக்காய்ச்
சசியோ(டு) இரவி தனையேற்றித்
தகைசேர் அண்டம் அடுக்கடுக்கிப்

பூவின் மகளும் கலைமகளும்
புகலும் சசியும் அரம்பையரும்
பொருந்தி இழைக்கும் மணிச்சிற்றில்
புதுச்சோ றாக்க அறம்வளர்க்கும்

தேவி உமையாள் சிலம்பில்வந்தோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே!
சேணாட் டமரர் சிறைவிடுததோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே! 4

பொழிப்புரை :

எட்டுத்திசைகளிலும் பொருந்தி நிற்கும் எட்டு மலைகளையும் விளக்கமுடைய தூண்களாக நிறுத்தி, உலகைச்சுற்றியுள்ள சக்கரவாளக் கிரியைச் சுவராக அமைத்து, ஆகாயத்தை மேற்கூரையாக ஆக்கி ஒப்பற்ற வீடமைத்து, அதில் ஒளி தருவதற்குச் சூரியன் சந்திரன் ஆகிய இருவரையும் விளக்காக ஏற்றி



வைத்து, தகுதியுடைய அண்டங்களை ஒன்றன்மேல் ஒன்றாக அடுக்கி வைத்து, திருமகளும் கலைமகளும்இந்திராணியும் தேவமாதர்களும் ஒளிவிடும் மணிகளால் பொருத்தமாக அமைக்கின்ற அந்தச் சிறிய வீட்டில் புத்தமுது அமைக்க, உலகில் தருமத்தை வளர்க்கின்ற உமாதேவியின் பாதச்சிலம்பில் தோன்றியவர்களே! சிறியவர்களாகிய எங்கள் மணல் வீட்டை அழிக்காதீர்கள்! வானுலகத்தில் உள்ள ... ... ... அழிக்காதீர்கள்.

அருஞ்சொற்பொருள் :

மணித்தாள்- அழகிய தூண்; வெற்பு - மலை; மிளிர்- ஒளிவிடுகின்ற; சசி முன்னது ‘சந்திரன்’ எனவும், பின்னது இந்திராணி எனவும் பொருள்படும். தகைசேர் -தகுதியுடைய; வெளி - மேற்புறத்தில் வேயப்படும் கூரை.

175 பெருவா ரிதியிற் படவரவம்
பிறங்கு திருப்பள் ளியிற்கமலப்
பீடத் திருந்து விளையாடும்
பெரிய புகழ்சேர் திருமாதோ(டு)

ஒருவா(து) இரவும் பகலுமிருந்(து)
ஒண்பொற் கமல விழிகள்துயின்(று)
உலகில் உளபல் உயிர்களுக்கும்
உண்ணும் படிகள் அளவாகப்

பரிவாய் அளந்து காத்தருளிப்
படைக்கும் அயனை மன்மதனைப்
பாலர் இவர்கள் எனக்கருதிப்
பார்எ ழையும்உண் டுஉமிழ்ந்தருளும்

திருமால் மருகர்! உமது அடியார்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே!
சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே. 5

பொழிப்புரை:

பெருமை உடைய பாற்கடலில், படங்களை உடைய ஆதிசேடனாகிய படுக்கையிலும், தாமரையாகிய ஆசனத்திலும் விளையாடுகின்ற புகழுடைய திருமகளுடன் இரவும், பகலும் விட்டு நீங்காமல் இருந்து, ஒளி பொருந்திய தாமரை போன்ற கண்களை மூடித் துயின்று, உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் அவரவர்க்கு ஏற்ற அளவின்படி உணவை அளந்து கொடுத்துக் காப்பாற்றியும், உலகைப்படைக்கும் பிரமனையும், மன்மதனையும் தனக்குப் புதல்வர்கள் என எண்ணி ஒதுக்கி வைத்து, இந்த ஏழு உலகங்களையும் உண்டு உமிழுகின்ற திருமாலுக்கு மருகராக வந்தவர்களே! உங்களுக்கு அடியவர்களான சிறியவர்களாகிய எங்கள் மணல் வீட்டை அழிக்காதீர்கள்! வானுலகத்திலுள்ள ... ... ... ... அழிக்காதீர்கள்!

அருஞ்சொற்பொருள்:

வாரிதி — கடல். பிறங்கு — விளங்கும். ஒருவாது — நீங்காது ஒண் பொற்கமலவிழி — ஒளிவீசும் தாமரை போன்ற கண் (கமலக்கண்ணன் என்பதறிக). அயன் — பிரமன். (பிரமனும் மன்மதனும் திருமாலின் பிள்ளைகள் என்பது புராண வழக்கு).

176 பருவ முதிர்செங் கரும்பின்முத்தும்,
பங்கே ருகத்தின் விளைமுத்தும்,
பால்போல் எறிக்கும் நிலாமுத்தும்,
பசும்பூங் கமுகு தருமுத்தும்

அரிசி யெனவே கழுவியெடுத்
தரித்துப் பணில நீர்பரப்பி
அடுப்பா யிளநீர்க் காய்கூட்டி
அமுதப் பசுந்தேன் நீர்தேக்கி

விரிசந் தனக்கட் டையைப் பிளந்தே
விறகாய் அடுக்கிச் செம்மணியை
வீசிப் புகையா(து) எரிமூட்டி
வெண்சோ றாக்கி அமுதருந்தித்



தெருவில் விளையா டும்பேதைச்]
சிறியோஞ் சிற்றில் சிதையேலே!
சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்!
சிறியோஞ் சிற்றில் சிதையேலே! 6

பொழிப்புரை:

நன்றாக முற்றிய கரும்பு, தாமரை மலர், பால்போன்று வெள்ளிய ஒளிவீசும் நிலவு, பசுமையான அழகிய பாக்குமரம் ஆகியவற்றில் உண்டாகும் முத்துக்களை அரிசியாக எடுத்து வெண்சங்கில் நீரூற்றிக் கழுவி அரித்து, இளநீர்க்காய்களை அடுப்பாக அமைத்து, உலை நீராக இனிய தேனை வைத்து, மணம் விரியும் சந்தனக் கட்டையைப் பிளந்து அடுப்பில் விறகாக அடுக்கி, சிவந்த பவள மணிகளை அடுப்பினுள்ளிட்டு, புகை உண்டாகாமல் எரியவைத்து வெண்மையான சோறு சமைத்து உண்டு தெருவில் விளையாடும் அறியாப் பெண்களாகிய எங்கள் மணல் வீட்டை அழிக்காதீர்கள். வானுலகத்தில் உள்ள ... ... ... அழிக்காதீர்கள்!

அருஞ்சொற்பொருள்:

பங்கேருகம் — தாமரை. பணிலம் — சங்கு. தேனீர் - தேன் ஆகிய உலை நீர்.

177 நிறக்குங் கமலக் கரையிடத்தில்
நெடிதாய் வளைத்த வண்டலத்தில்
நிரைத்த தரளம்மலர்ப் பதத்தில்
நேர்பட் டிடில்ஒன் னார்பணிந்து

மறுக்கொண் டிருக்கு மறுவேயிம்
மறுவா மெனஎண் ணியநினைவோர்
வார்கோ கனக முலைத்தாயார்
வருந்தி அழைத்து மடியிருத்தி

வெறிக்கொண் டிருக்குந் திலதநுதல்
வியர்வே(து) இருபொற் பதப்புழுதி
மிகுதி இதுஏ தெனஉரைத்தால்,
மெய்வா சகமென் விளம்புவீர்காள்?

**சிறக்கும் புகழைப் படைத்தோர்கள்!**
**சிறியோஞ் சிற்றில் சிதையேலே!**
**சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்!**
**சிறியோஞ் சிற்றில் சிதையேலே!** 7

பொழிப்புரை:

ஒளிவீசும் தாமரை மலர்கள் நிறைந்த பொய்கைக் கரையில் நீண்டு வளைந்துள்ள சேற்றில் நிறைந்துள்ள முத்துக்கள் உம் அழகிய மலர்போன்ற திருவடிகளில் பட்டு வடுப்படுத்துமானால், அவைகளை பகைவர் உம் திருவடியில் பணிவதனால் அவர்களுடைய மணிமுடிகள் பட்டு உண்டான அடையாளமே என்று, எண்ணுகின்ற, கச்சணிந்த தாமரை மொட்டுப்போன்ற நகில்களை உடைய தாய்மார் உம்மை அழைத்து மடிமேல் வைத்து, மணம் பொருந்திய பொட்டணிந்த நெற்றியில் வியர் வையை ஏன் வந்தது? அழகிய பொன் போன்ற இரண்டு பாதங்களில் இப்புழுதி எதனால் வந்தது? என்று கேட்டால் அதற்கு உண்மையாக நீங்கள் என்ன விடை கூறுவீர்கள்? பொய் கூறாத சிறந்த புகழை உடையவர்களே! சிறுவர்களாகிய எங்கள் மணல் வீட்டைச் சிதைக்காதீர்கள். வானுலகத்தில் உள்ள ... ... ... ... அழிக்காதீர்கள்!

அருஞ்சொற்பொருள்:

நிறக்கும் — ஒளி வீசும். நெடிதாய் — நீண்டுள்ளதாய். வண்டல் — சேறு. 'வண்டல் அதில்' என்பது 'வண்டல் அத்தில்' என வந்தது. தரளம் — முத்து. ஒன்னார் — பகைவர். மறு — அடையாளம். கோகனகம் — தாமரை. முலைத்தாயர் — பாலூட்டி வளர்ப்போர். வெறி — வாசனை.

178 **நேச மிகுந்த சோழேந்த்ரன்**
**நிறைந்த கொலுவில் வரிசைபெற்றோர்,**
**நெடிய வலிவல் லான்மனைவி**
**நினைவின் படிமங் கலமளித்தோர்,**

**ஓசை மிகுந்த கடலுலகில்**
**ஒட்டக் கூத்தன் தமிழ்கேட்டோர்,**
**உதவி புரியென்(று) அடைந்தோருக்(கு)**



**வீசுங் கரவொன் னலர்அவுணர்**
**வெற்றிக் கொடியைப் பறித்துவந்து,**
**வேலா யுதர்கண் மனங்களிக்க**
**மிக்கபுகழை நாட்டும் வல்லோர்**

**தேசம் புகழக் கீர்த்தி பெற்றோர்!**
**சிறியோஞ் சிற்றில் சிதையேலே!**
**சேணாட் டமரர் சிறைவிடுத்தோர்!**
**சிறியோஞ் சிற்றில் சிதையேலே!** 8

பொழிப்புரை:

அன்பு நிறைந்த சோழமன்னனுடைய அரச சபையில் பல பரிசுகளைப் பெற்றவர்கள்; பேராற்றல் உடைய வல்லானுடைய மனைவி இரந்து கேட்க, அவள் விரும்பியபடி மாங்கல்யப் பிச்சையளித்தவர்கள்; ஆரவாரம் மிகுந்த கடலால் சூழப்பட்ட உலகில் ஒட்டக்கூத்தர் இயற்றிய ஈட்டியெழுபது போன்ற நூல்களைக் கேட்டு மகிழ்ந்தவர்கள்; உதவி வேண்டும் என்று கேட்டுத் தம்மை அடைந்தவர்களுக்கு உயர்ந்த கருணையாகிய அருள் புரிகின்றவர்கள்; வலிமையோடு தாக்குகின்ற கரங்களை உடைய அவுணர்கள் வெற்றிபெற்று நாட்டியிருந்த வெற்றிக் கொடியைப் பறித்து எடுத்துவந்து, முருகப்பெருமானுடைய கண்ணும் மனமும் களிக்கும்படிக் காட்டிப் புகழை நிலைநிறுத்திய வல்லமை உடையர்வர்கள்; உலகமே வியக்குமாறு புகழை உடையவர்கள் ஆகிய செங்குந்தர்களே! சிறியவர்களாகிய எங்கள் மணல் வீட்டைச் சிதைக்காதீர்கள்! வானுலகத்தில் உள்ள ........... அழிக்காதீர்கள்!

அருஞ்சொற்பொருள்:

கொலு - அரச சபை. 'கருணை அருள்' - ஒரு பொருட் பன்மொழி. வீசுதல் - தாக்குதல் கண் மனங்களிக்க - கண்ணும் மனமும் மகிழ (உம்மைத் தொகை) கீர்த்தி - புகழ். வேலாயுதர் - உயர்வுப்பன்மை.

சிற்றிற் பருவம் முற்றிற்று.

## சிறுதேர்ப்பருவம்

*பிள்ளைகள் நடைவண்டி ஓட்டி விளையாடுதலைத் தாய்மார் முதலியோர் விரும்பி கேட்கும் பருவம்.*

179 காரேறு கிரவுஞ்ச மலையுருள, நினையாத
கசடர்அசு ரேசர்உருளக்,
கண்டுதுதி செய்கின்ற தண்டமிழ்ப் புலவோர்கள்
கலியகன் றோடியுருளத்,

தாரேறு குழல்மா தரைப்புணர்ந் தவர்கள்மேற்
றங்குமயல் ஏகியுருளத்,
தர்க்கமிடு துட்டவல் லான்முடியும் உருள்படச்,
சதகோடி வரையும்உருள,

வாரேறு கனகமுலை மாகாளி தன்னுடைய
வலியுருள, முசுகுந்தனாம்
மன்னவன் பலமுருள, வலைவீசு கூற்றுவன்
வஞ்சநெஞ் சகமுருளவே

சீரேறு கஞ்சமலர் வஞ்சியுறை மணிமார்பர்!
சிறுதே ருருட்டி யருளே!
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்!
சிறுதே ருருட்டியருளே! 1

பொழிப்புரை:

மேகங்கள் பொருந்துகின்ற உச்சியை உடைய கிரவுஞ்ச மலை உருண்டு புரளுமாறும், பகைவர்களாகிய குற்றமுடைய அசுரர்கள் உயிர்நீங்கி உருளும்படியும், வந்து வணங்கிப் போற்றுகின்ற தமிழ் வல்ல புலவர்களின் வறுமை நில்லாமல் உருண்டோடுமாறும், மாலையணிந்த கூந்தலைஉடைய விலை மாதரைச் சேர்ந்து மயங்குபவர்களுடைய மயக்கம் உருண் டோடுமாறும், வாதம் செய்கின்ற வல்லானுடைய மணிமுடி உருளுமாறும், கோடிக்கணக்கான மலைகள் உருளுமாறும், பொன்னிறக் கச்சணிந்த காளியின் வலியுருளுமாறும், முசுகுந் தனாகிய அரசனது வலிமை நீங்குமாறும், பாசம் வீசுகின்ற எமதருமனுடைய வஞ்சகமனம் உடைந்து ஓடும்படியும், சிறப்பு மிகுந்த தாமரை மலரில் உறையும் திருமகள் தங்கிய மார்பை உடைய செங்குந்தர்களே! நீவிர் சிறுதேர் உருட்டி



அருள்வீர்களாக! உமாதேவியின் திருவடிச் சிலம்பு மணியில் தோன்றியவர்களும் வீரம் உடையவர்களுமான செங்குந்தர் களே! நீவிர் சிறிய தேர் உருட்டி அருள்வீர்களாக.

அருஞ்சொற்பொருள்:

கார் - மேகம். கசடர் - குற்றமுடையவர். கலி - வறுமை. தார் - மாலை. மயல் - மயக்கம். [மாகாளி வலி யுருண்டது. இறைவனுடன் நடனமாடியபொழுது நிகழ்ந்தது. முசுகுந்தன் பலம் உருண்டது. அவன் தனக்குத்துணையை நாடிநின்றது].

180 வில்வச் சடாடவிச் சிவனுறையு மாரூரும்,
வெண்காடு, பஞ்ச நதியும்,
விரைமருவு தண்டலைத் திருவிடை மருதூரும்,
மிக்கபுகழ் சேர்தில்லையும்,

மல்வைத்த முலைபங்க ருறைகின்ற சீகாழி
மாநகரும், ஞானமேவும்
வளமிக்க செங்கோடு, சாய்க்காடும், ஒற்றியூர்,
வானளவும் அருணகிரியும்,

சொல்வைத்த காளத்தி, காசிரா மேசுரம்,
தொழுதிருத் தணிமலையுடன்
சோதிதிகழ் கயிலாய கிரியும்,மா கச்சிமுதல்
தொகுசத்த புரியிவையெலாம்

செல்வப் பெருங்காணி கொண்டசெங் குந்தர்கள்!
சிறுதே ருருட்டியருளே.
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்!
சிறுதே ருருட்டியருளே. 2

பொழிப்புரை :

வில்வம் பொருந்திய சடைக்காட்டை உடையவரும், உமா தேவியை ஒரு பாகத்தில் உடையவருமான சிவபெருமான் வாழுகின்ற திருவாரூர், திருவெண்காடு, திருவையாறு, மணம் பொருந்திய சோலைகளை உடைய திருவிடை மருதூர், மிகுந்த புகழ் உடைய சிதம்பரம், சீகாழி, ஞானமும் வளமும்

பொருந்திய திருச்செங்கோடு, திருச்சாய்க்காடு, திருவொற்றியூர், வானையளாவிய திருவண்ணாமலை, புகழ் படைத்த திருக்காளத்தி, காசி, இராமேசுவரம், அனைவரும் வணங்குகின்ற திருத்தணிகைமலை ஆகியவற்றுடன்ஒளிவீசுகின்ற கயிலைமலை, பெருமையுடைய காஞ்சி முதலாகத் தொகுத்துச் சொல்லப் படுகின்ற நகரங்கள் இவைகளிலெல்லாம் செல்வத்துடன் கூடிய உரிமையுடைய செங்குந்தர்களே! சிறுதேர் உருட்டி அருள்வீர்களாக! உமாதேவியின் ... ... உருட்டி அருள்வீர்களாக!

அருஞ்சொற்பொருள் :

சடாடவி - சடா அடவி - சடையாகிய காடு, (வடசொற் புணர்ச்சி); பஞ்சநதி - (திரு) ஐயாறு; மல் - பருமை.

181 கொந்தார் மலர்ப்பொன்னின் அடியிலணி நூபுரம்
குமுறுமொலி மிகவுமாடக்,
குளிருமலர் முன்கையின் முகுதாரி யாடக்,
குதம்பையுங் காதிலாட,

நந்தா விளக்கெனத் துப்பின் பதக்கமொடு
நவமணியும் மார்பிலாட,
நலமுலவு நெற்றியிற் சுட்டியா டக்,கையின்
நவரத்தின பணிகளாடப்,

பந்தாடு முலைமாதர் தழுவுதிண் புயமிசைப்
படர்நீப மாலையாடப்
பங்கய முகத்தினில் தரளவெயர் வாடப்,
பசும்பொன்அரை ஞாணுமாடச்,

செந்தா மரைப்பொய்கை சூழ்தொண்டை வளநாடர்!
சிறுதேர் உருட்டியருளே!
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்!
சிறுதேர் உருட்டியருளே! 3

பொழிப்புரை :

பொன்மலரைக் கொத்தாக அணிந்ததுபோன்று ஒளி வீசுகின்ற அழகிய பாதங்களில் அணிந்த காற்சிலம்பு மிக்க ஓசை உண்டாக ஆடவும், குளிர்ச்சி பொருந்திய மலர்போன்ற முன் கையில் அணிந்துள்ள 'முகுதாரி' என்ற ஆபரணம் அசைந்தாடவும், காதுகளில் அணிந்துள்ள குதம்பைகள் அசைந்தாடவும், ஒளி குறையாத விளக்குப்போன்று மார்பில் அணிந்துள்ள பவளப் பதக்கமும், நவமணி மாலைகளும் புரண்டாடவும், அழகிய நெற்றியில் அணிந்துள்ள சுட்டியும், கைகளில் அணிந்துள்ள நவமணிகளால் ஆன அணிகலன்களும் ஆடவும், மெல் விரல்களில் பந்தைச் சேர்த்து ஆடுகின்ற பெண்கள் மகிழ்ந்து தழுவுகின்ற தோள்களில் அணிந்துள்ள கடப்ப மாலை அசைந்தாடவும், தாமரை மலர் போன்ற முகத்தில் முத்துப்போல் துளிக்கும் வியர்வைத் துளிகள் ஆடவும், பொன்னாலியன்ற அரைஞாண் இடுப்பில் அசைந்தாடவும், செந்தாமரை மலர் பூத்த பொய்கைகள் சூழ்ந்த வளமுடைய தொண்டை நாட்டிற் குரியவர்களே! சிறிய அழகிய தேரினை உருட்டியருள்வீர்களாக! உமாதேவியின்......... உருட்டியருள்வீர்களாக!



அருஞ்சொற்பொருள் :

கொந்து - கொத்து; பொன்னின்அடி - பொன்போலும்; பாதம் - உவமைத்தொகை; குமுறுதல் - ஒலித்தல், முழங்குதல்; முகுதாரி - கடகம் போன்ற ஓர் ஆபரணத்தின் பெயர்; துப்பு - பவளம்; நீபமாலை - கடப்பமாலை; குதம்பை - நெட்டிபோல்வது; குத்திய காதின் துளை வளரக் காதிலிடுவது.

182 பைம்பொன்ஆ லிலையுதர வெண்டரள நகைமாதர்
பனிமலர்க் கூந்தலிருளைப்
படர்முகில் இனங்கவர, வந்துதண் டலைதொறும்
படிய,வா ணுதலின்அழகை

நம்பிவா னில்நிலவு பின்சென்று கவரவே
நறியமே டையில்ஊரவும்,
நாகரிக மயிலினஞ் சாயல்கண் டிவர்கள்பின்
நாடிஆ டித்திரிதர

அம்புயஞ் சூழ்புனல் குடைந்தாடி மீளில்அவர்
ஆளுநடை கண்டுபழக,
அன்னங்கள் ஒருகோடி சேவலொடு பின்செல்ல,
அரியபல் வனமேவிடும்

**செம்பொன்ஆ லயமேவு கச்சியம் பதியதிபர்!**
**சிறுதேர் உருட்டியருளே**
**தேவியுமை பாதச்சி லம்பில்வரு வீரியர்கள்!**
**சிறுதேர் உருட்டியருளே!** 4

பொழிப்புரை :

பசியபொன் ஆலிலை போன்ற வயிற்றினையும், வெள்ளிய முத்துப்போன்ற பற்களையுமுடைய பெண்களின் குளிர்ச்சி பொருந்திய மலர்களணிந்த கூந்தலின் கருமையைப் படர்ந்து செல்லுகின்றமேகக்கூட்டங்கள்தாம்கவர்ந்துகொள்ள வேண்டி, சோலைகள் தோறும் வந்து படியவும், அப்பெண்களின் ஒளி பெற்ற நெற்றியழகைக் கவர்ந்து கொள்ளலாம் என்று நம்பி வான்நிலவு அப்பெண்கள் பின்சென்று அவர்கள் விளையாடும் மேடைகளில் ஊர்ந்து செல்லவும், அழகிய மயில்கூட்டம் அப் பெண்களின் சாயலைக் கண்டு இவர்கள் நம்மினமோ என்று ஆராய்ந்து அவர்கள் பின்னே திரியவும், தாமரைப் பொய்கை களில் அப்பெண்கள் நீராடித்திரும்பினால் அவர்களுடைய நடையினைத் தாம் பழகுவதற்காக எண்ணற்ற அன்னப்பறவை கள் தங்கள் துணையோடு அவர்கள் பின்னே செல்லவும், இவ்வாறாகிய அளவற்ற பலவகை வளங்கள் சிறந்து, பொன் மயமான திருக்கோயில்கள் நிறைந்துள்ள கச்சியம்பதியில் வாழ் பவர்களே! சிறிய தேருருட்டியருள்வீர்களாக! உமாதேவியின்... ... ...உருட்டியருள்வீர்களாக!

அருஞ்சொற்பொருள் :

ஆலிலையைப் பெண்கள் வயிற்றுக்கு உவமை கூறுதல் மரபு. வாணுதல் — வாள்நுதல் — ஒளிபொருந்திய நெற்றி; நறியமேடை — மணங் கமழும் மேடை; (மேடையில் நிலவு உலவும் என்பது, மேடைகளின் உயர்ச்சியைக் குறித்தது), மீளில் — திரும்பினால்; 'படிய, திரிதர, பின்செல்ல' என்பவற் றிலும் உம்மை விரிக்க.

**183 மேவிவளர் பூகத்தின் முத்தத்தை யும்,கன்னல்**
**விளைகின்ற முத்தத்தையும்,**
**விரியும் புனற்சங்கு முத்தத்தையும் கழனி**
**விளைநெல்லின் முத்தத்தையும்,**



**தாவியெழு கின்றவேய் முத்தத்தை யும்கலைத்**
**தண்ணிலா முத்தத்தையும்,**
**தாமரைப் பூவில்வளர் முத்தத்தை யும்,கார்கள்**
**தந்தமணி முத்தத்தையும்,**

**பூவையர்கள் கந்தரநன் முத்தத்தை யும்,கரிப்**
**பொற்கொம்பின் முதத்தையும்**
**புகழ்கின்ற வயல்மாதர் மதுவுக் களக்கின்ற**
**புதுமைசேர் கச்சிநகரில்**

**தேவர்தொழு கருமாறிப் பாய்கின்ற திறல்வீரர்!**
**சிறுதேர் உருட்டியருளே!**
**தேவியுமை பாதச்சிலம் பில்வரு வீரியர்கள்;**
**சிறுதேர் உருட்டியருளே!** 5

பொழிப்புரை :

பாக்கு மரத்தில் உண்டாகும் முத்து, கரும்பில் உண்டாகும் முத்து, நீரில் உள்ள சங்கில் உண்டாகும் முத்து, கழனியில் விளையும் நெல்லில் தோன்றும் முத்து, உயர்ந்த மூங்கிலில் தோன்றும் முத்து, கலைகளை உடைய குளிர்ந்த நிலவில் தோன்றும் முத்து, தாமரைப் பூவில் தோன்றும் முத்து, மேகத் தில் உண்டாகும் முத்து, பெண்கள் கழுத்தில் தோன்றும் முத்து, யானைத் தந்தத்தில் உண்டாகும் முத்து ஆகிய எல்லா வகை யான முத்துக்களையும், வயலில் வேலைசெய்யும் உழத்தியர் தாங்கள் உண்ணும் மதுவுக்கு விலையாக அளந்து கொடுக்கும் புதுமை நிறைந்த கச்சி நகரில் வாழ்கின்றவர்களும், தேவர்கள் போற்றி வணங்குகின்ற 'கருமாறிப் பாய்ச்சல்' என்னும் பிறவி வேண்டாது உயிர்விடும் செயலைக்கொண்ட ஆண்மையுடைய வீரர்களுமான செங்குந்தர்களே! சிறுதேர் உருட்டியருள்வீர் களாக! உமாதேவியின்... ... ... உருட்டியருள்வீர்களாக!

அருஞ்சொற்பொருள் :

வேய் — மூங்கில்; தண்ணிலா — தண்மை நிலா; குளிர்ந்த நிலவு; கார் — மேகம்; கந்தரம் — கழுத்து; கரிப்பொற் கொம்பு — யானைத் தந்தம். (இப்பாடலில் வரும் 'கருமாறிப் பாய்ச்சல் கதைக்குறிப்பினைத் 'திருக்கை வழக்கம்' 96 ஆம் கண்ணியில் காண்க.)

184 அசைதரும் செண்பக வனங்கோடி வேலியாய்
அதன்நடுவில் விளைகழனியில்
அடர்கமுகு வனமெலா முத்தங்கள் சொரியவே
அதன்நடுவில் ஒருகோடிநீள்

பசியமட லேந்தியொரு பொன்னுருவ மாகியப்
பண்பாளை இளநீர்தரும்
பரிவுடைய தென்னைவனம் எதிர்நின்று தொழுகின்ற
பான்மையும், அதன்றிமற்றும்

ஒசியுமிடை மாதரொரு கொடிபோல மேடைமேல்
உலவிநகை நிலவொளியினால்
உம்பரை மயக்கிடும் புதுமையும் புதுமையாய்
உள்ளத்தில் அறியும் அமரர்

திசைதொறும் பூமாரி பொழிகச்சி நகரதிபர்!
சிறுதேர் உருட்டியருளே!
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்!
சிறுதேர் உருட்டியருளே.

பொழிப்புரை :

அசைந்தாடுகின்ற எண்ணற்ற செண்பக மரங்களை வேலியாகக் கொண்டு, அதன் நடுவில் நிறைந்து வளர்ந்துள்ள பாக்கு மரங்கள் முத்துக்களைச் சொரியவும், அப்பாக்கு மரங்களுக்கிடையில் வளர்ந்துள்ள கணக்கிலடங்காத தென்னைமரங்கள் பசுமையான மடல்விரித்து அழகிய தோற்றம் உடைய ஈளநீர்க் குலைகளைச் சுமந்து தேவர்கள் எதிர்சென்று தொழுவது போன்று நிற்கவும். மிகவும் நுண்ணிய இடையை உடைய பெண்கள் ஒப்பற்ற கொடிகள் போல மேடை மீது உலவி, தங்கள் புன்சிரிப்பின் அழகால் தேவர்கள் மனத்தை மயங்கச் செய்கின்ற அற்புதத்தையும் தேவர்கள் தங்கள் மனத்தில் புதுமையாக உணர்ந்து, எட்டுத்திசைகளிலும் மலர்மழையைப் பொழிகின்ற கச்சிநகரத்துக்கு உரிமையுடையவர்களே! சிறுதேர் உருட்டியருள்வீர்களாக! உமாதேவியின்... அருள்வீர்களாக!



அருஞ்சொற் பொருள்:

அடர் - நிறைந்துள்ள; மடல் - பாளை; பொன் - அழகு; பரிவு- அன்பு; பான்மை - தன்மை; ஒசியும் - தளர்கின்ற; நகை - பல், சிரிப்பு; உம்பர் - வானுலகத்தவர்; புதுமை - அற்புதம்.

185 அவ்வான இந்த்ரனொடு முப்பத்து முக்கோடி
அமரரும் தொழுதிறைஞ்சும்
அழகிய திருப்பரங் குன்று, சீ ரலைவாய், பொன்
ஆவினன் குடி, ஏரகம்,

வெவ்வாதை அணுகாத பலமலைகள், மதயானை
மேவுதென் சோலைமலையும்
மேதினியில் ஆறுதலம்அகலாது குடிகொண்டு
மெய்யடி யரைப்புரக்கத்

தவ்வாது மயிலேறி விண்ணோர்கள் சூழவே
தாட்சிலம் பொலிமுழக்கத்
தகுதிதிகு திகுதியென நடனமுட னேவந்து
தயவுபுரி கருணைமேவச்

செவ்வேள் திருத்தம்பி மார்! கச்சி நகரதிபர்!
சிறுதேர் உருட்டியருளே!
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்!
சிறுதேர் உருட்டியருளே! 7

பொழிப்புரை :

வானுலகத்தில் உள்ள இந்திரனுடன் முப்பத்து முக்கோடி தேவர்களும் போற்றி வணங்குகின்ற திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், ஆவினன்குடி (பழநி), சுவாமிமலை, கொடிய பிறவி நோய் அணுகாமல் காக்கும் பலகுன்றுகள் (குன்றுதோறாடல்), மத யானைகள் உலவுகின்ற சோலைமலை ஆகிய ஆறுபடை வீடுகளிலும் நீங்காமல் பொருந்தி வாழ்ந்து, உண்மையான அடியவர்களைக் காப்பதற்குத் தேவர்கள் புடைசூழ மயிலேறி வந்து, திருவடிகளில் அணிந்துள்ள சிலம்புகள் சப்திக்குமாறு

'தகுதி திகு திகுதி' என்றுநடனமாடிவந்துநலம்புரிகின்றகருணையுடைய முருகப்பெருமானுக்குத் தம்பிமார்களே! கச்சி நகரத்துக்கு உரிமையுடைய செங்குந்தர்களே! சிறுதேர் உருட்டியருள்வீர்களாக! உமாதேவியின்......... உருட்டியருள்வீர்களாக!

அருஞ்சொற் பொருள் :

அவ்வானம் - 'அ' சுட்டு - வானலோகம்; சீர் அலைவாய் - சிறப்புடைய திருச்செந்தூர்; ஏரகம் - சுவாமிமலை (மலைநாட்டுப்பதி என்பர் நச்சினார்க்கினியர்) வாதை - (பிறவித்) துன்பம்; பலமலை - குன்றுதோறாடல்; சோலைமலை - பழமுதிர்சேலை; புரக்க - காப்பாற்ற; 'தவாது' - என்பது 'தவ்வாது' என வந்தது - தவறாமல்; தாட்சிலம்பு - தாள் சிலம்பு; செவ்வேள் - முருகன்; (கருவேள் - மன்மதன்).

('அடியார்கள் அழைக்கும்போதும். அடியவர்களை எமபயம் நெருங்கும்போதும் முருகன் மயிலேறி வருகின்றான்' என்பதை அருணகிரியார் வாக்குப் பலவிடங்களில் உணர்த்துவதைக் காணலாம்.)

186 கொங்குலா வியசோலை மேவிய அயோத்தியிற்
கொண்டதச ரதன்எனும்மகாக்
கொற்றவன் சேயெனத் தோன்றிவிசு வாமித்ரர்
கூடஏ சித்தாடகை

துங்கமா கச்சயங் கொண்டுமிதி லாபுரித்
துரைசனகன் மகளைவேட்டுத்
தோலா திருக்கும் அயோத்தியில் வந்தபின்
தொல்லைவன வாசமெய்திப்

பங்கமில் இராவணன் தலைகள்ஈ ரைந்தையும்
பறிகொடுத் தோடவென்று
பரிவுகொடு வீடணற் பட்டமுங் கட்டிப்
பரித்தரா மாவதாரச்

செங்கண்மால் மருகரென வந்தசெங் குந்தர்கள்!
சிறுதேர் உருட்டியருளே!
தேவியுமை பாதச் சிலம்பில்வரு வீரியர்கள்!
சிறுதேர் உருட்டியருளே.





பொழிப்புரை :

தேன்நிறைந்த மலர்கள்கொண்ட சோலைகள் நிறைந்த அயோத்தி நகரில் புகழ்பெற்ற தசரதன் என்னும் பேரரசனுக்கு மகனாகத் தோன்றி. விசுவாமித்திர முனிவருடன் காட்டிற்குச் சென்று 'தாடகை' என்னும் அரக்கியைக் கொன்று [அவருடைய வேள்வியைக் காத்துப்] பெருமையுடைய வெற்றி பெற்று, மிதிலையரசனாகிய சனகன் மகள் சானகியை மணம்புரிந்து, பகைவரால் ஈடழியாதிருக்கும் அயோத்தியை அடைந்து. பிறகு [கைகேயியால்] துன்பந்தரும் வனவாசம் பெற்று, தோல்வி என்பதையறியாத இராவணன். தன்னுடைய பத்துத் தலைகளையும் இழந்து விண்ணுலகம் புக அழித்து, அன்புடன் வீடணனுக்கு முடிசூட்டி, இவ்வுலகைத் தாங்கிய இராமாவதாரம் கொண்ட சிவந்த தாமரை மலர் போன்ற கண்களை உடைய திருமாலுக்கு மருகர் என்ற உறவு பூண்ட செங்குந்தர்களே! சிறுதேர் உருட்டியருள்வீர்களாக! உமாதேவியின்......
...உருட்டியருள்வீர்களாக!

அருஞ்சொற் பொருள் :

கொங்கு - தேன் (மகரந்தம்); துங்கம் - உயர்ச்சி; துரை - அரசன்; வேட்டு- மணங்கொண்டு; தோலாமை - ஈடழியாமை; பங்கம் - தோல்வி; பரிவு - அன்பு; பரித்த - தாங்கிய, காப்பாற்றிய. 'வீடணனுக்கு' என்பது உருபு தொகுத்தலாயிற்று.

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

○

அரங்கேற்றிய காலம் முதலியன

பன்னிரு சீர்க்கழிநெடில் ஆசிரிய விருத்தம்

187 அருள்பெறு சகாத்தமதொ ராயிரத் தறுநூற்றொ
டைம்பஃது மேழுக்குமேல்
அச்சுதனன் நாளினிற் கதிர்வார மதுதன்னில்
அதிசயக் கச்சி அதிபர்

பெருமைபெறு மாயிரத் தொள்ளா யிரத்தவர்
பிரபந்தத் தமிழ்க்கேட்டிடும்
பேசரிய வல்லானை வென்றசெங் குப்தர்தம்
பெருமையாங் கண்ணின்மணியோர்,

தருமதுணை யானபேர், தாட்டீக முள்ளபேர்,
தருவைநிக ரானபெரியோர்,
தந்தபொன் னாடைகரி பரிவா கனத்தோடு
தங்கப் பதக்கம்முதலா

வருபொரு ளிராசியாய் வரையாமல் ஈந்தபேர்
வளர்பஞ்ச வண்ணவிருதோர்
வளமையாம் நவவீர வுயர்சிங்க மானபேர்
வனபுலிக் கொடிவாழியே.

பொழிப்புரை :

•சாலிவாகன சகாப்தம் 1657 ஆம் ஆண்டு [கி. பி. 1735] திருமாலுக்குரிய திருவோண நட்சத்திரம், ஞாயிற்றுக்கிழமையில் கச்சியில் வந்த செங்குந்தர்களில் முதற்சந்ததியர் என்று புகழப்பெறும் ஆயிரத்துத் தொள்ளாயிரவர்களுடைய வரலாறு கூறக்கேட்டு, வல்லான் என்னும் கொடியவனை வென்றவர்களாகிய பெருமையுடைய கண்மணி போன்றவர்களும், தருமத்திற்குத் துணைநிற்பவர்களும், வலிமை உடையவர்களும், கற்பகத்தருவைப் போன்று வழங்குபவர்களும் ஆகிய செங்குந்தர்கள் கொடுத்து உதவிய பொன், ஆடை, யானை, குதிரை முதலியவற்றுடன் தங்கப்பதக்கம் முதலிய பொருட் குவியல்களைத் தலைவராயுள்ளவர்கள் எனக்குக் கணக்கற்று வழங்கினார்கள்.

பஞ்சவண்ண விருது உடையவர்களும், வளமை உடையவர்களும் நவவீரர்களுக்கு இணையானவர்களும் சிங்கம் போன்ற ஆண்மை உடையவர்களுமான செங்குந்தர்களும் வாழ்க! அவர்களுக்கு அடையாளமான புலிக்கொடியும் என்றும் நின்று நிலைத்து வாழ்வதாக. 'வாழிய' என்பதனை 'உயர் சிங்கமானபேர்' என்பதனோடும் கூட்டுக.



குறிப்பு :

(சாலிவாகன சகாப்தம் என்பதுகிறித்து பிறந்து 78 ஆண்டுகளுக்குப் பின் கணக்கிடப்படுவது. சகாப்த ஆண்டுடன் 78 ஐக் கூட்டினால் கி. பி, ஆண்டு வரும்.) அச்சுதன்—திருமால், கதிர் வாரம் — சூரியனுக்குரிய ஞாயிற்றுக் கிழமை; தாட்டீகம்—வலிமை; இராசி—குவியல்.

வாழ்த்து

அறுசீர்க் கழிநெடில் ஆசிரியவிருத்தம்

மாதவ முடைய தேவி மலரடிச் சிலம்(பு)உதித்த
தீதிலா வீர வாகு முதலிய தீரர் தந்த
பூதம் என்ன வோங்கு புயமுடையக் குந்தர் வாழ்க!
நீதிசேகர் புகழி னோங்கு நெடுந்தொண்டை நாடும் வாழ்க.

கருத்து :

பெருமைமிக்க தவத்தைச் செய்தவளாகிய உமாதேவியின் மலர் போன்ற திருவடியில் அணிந்த சிலம்பு மணிகளில் இருந்து தோன்றிய குற்றமற்ற வீரவாகு முதலிய நவவீரர்கள் வழியில்வந்த வலிமை உடையவர்களும், உலகைத் தாங்கும் மலைபோன்ற உயர்ந்த தோள்களை உடையவர்களுமான செங்குந்தர்கள் நெடிது வாழ்வார்களாக! நீதியுடன் கூடிய புகழில் உயர்ந்து விளங்கும் தொண்டைநாடும் நிலைத்து வாழ்வதாக!

செங்குந்தர் பிள்ளைத் தமிழ் முற்றியது.
வேலு மயிலுந்துணை.
செங்குந்தப் படையோன் திருவடி வாழ்க.



சிவமயம்

முருகக்கடவுள் துணை

நாகை முத்துக்குமாரதேசிகர் இயற்றிய

# கலித்துறை மாலை

(மூலமும் உரையும்)

'கலித்துறை' என்பது கலிப்பாவுக்கு இனமாக வருவதொரு பாவினம். இது ஒவ்வோர் அடியிலும் ஐந்து சீர்களைப் பெற்று வரும். இவ்வினத்தில் முதல் நான்கு சீர்கள் வெண்பா இலக்கணத்துடனும், ஐந்தாவது சீர் விளங்காய்ச் சீராகவும் வந்து எழுத்தளவு பெறுவது 'கட்டளை கலித்துறை' எனப்படும். கலித்துறைப்பாடல் எழுத்தெண்ணிப் பாடுவது. பாட்டு எழுத்தளவு நேரசையில் தொடங்கினால் ஓரடியில் ஒற்றொழித்துப் பதினாறு: நிரையசையில் தொடங்கினால் ஓரடியில் ஒற்றொழித்துப் பதினேழு; நான்கடியாய் வந்து ஈற்றில் ஏகாரம் பெறும்.

'அடியடி தோறும் ஐஞ்சீ ராகி
முதலொரு நான்கும் வெண்டளை பிழையாக்
கடையொரு சீரும் விளங்கா யாகி
நேர்பதி னாறே நிரைபதி னேழென்(று)
ஓதினர் கலித்துறை ஓரடிக் கெழுத்தே'

என்பது இதன் இலக்கணம் (இலக்கண விளக்கம்). 'மாலை' என்பது (பொதுவாக) நூறு பாடல்களைக் கொண்டமைவது. இப்பிரபந்தத்தில் உள்ளன யாவும் கட்டளைக் கலித்துறைகளே.

'நாகை முத்துக்குமார தேசிகர்' என்பவரால் இயற்றப்பட்ட இந்நூல் செங்குந்தர்களது தன்மை, சிறப்பு வீரதீரச்செயல்கள் முதலியவைகளை விரிவாக எடுத்தியம்புகின்றது.



தற்சிறப்புப் பாயிரம்

விநாயகர்

188 பூராய மாம்கவி நான்கையும் ஓர்ந்த புலவர்செவிக்(கு)
ஆரா அமுத மெனச்சோழ மண்டல வாணர்க்குச்சொல்
நேரான மாலைக் கொருவிக் கினமுமென் னெஞ்சகத்தே
வாராமற் கா,கச்சி வாழ்விக டச்சக்ர வாரணமே.

பொழிப்புரை :

காஞ்சியம்பதியில் வாழும் விகடசக்கர விநாயகப் பெருமானே! அரிய உண்மைகளைக் கூறும் நாற்கவிகளையும் உணர்ந்த கவிவாணர்களுடைய செவிக்குத் தெவிட்டாத அமுதம்போல, சோழமண்டலத்தில் வாழ்பவர்களாகிய செங்குந்தர்கள் மீது பாடப்படும் இனிய 'கலித்துறை மாலை' என்னும் இந்த நூலை இயற்றுவதற்கு எந்த இடையூறும் வாராமல் என் மனத்தினுள் நின்று காத்தருள்வாயாக!

அருஞ்சொற்பொருள் :

பூராயம் — அறிதற்கரிய உண்மை; இச்சொல் பிற்கால வழக்காய் உள்ளது. தாயுமானவர் பாடலில் இது வந்துள்ளது; ஓர்ந்த — உணர்ந்து அறிந்து; ஆரா— நிரம்பாத, தெவிட்டாத; விக்கினம் — இடையூறு.

சுப்பிரமணியர்

189 எத்திக்கும் கீர்த்தி படைத்தசெங் குந்தர் இயல்பனைத்தும்
புத்திக்குள் ஓர்ந்த படியுற் றுரைக்கஇப் பூவுலகில்
சித்திக்கும் புள்ளமர் வேளூர் வயித்தியன் சேயெனச்சொல்
முத்துக் குமரன் முருகனெம் ஆறு முகன்துணையே.

பொழிப்புரை :

எல்லாத் திசைகளிலும் புகழ் படைத்து விளங்குகின்ற செங்குந்தர்களுடைய தன்மைகள் அனைத்தையும் நான் ஆராய்ந்து அறிந்த அளவில் பாடுவதற்கு இவ்வுலகில் நினைத்தவற்றைச் சித்திக்கச் செய்கின்ற, புள்ளிருக்கு வேளூரில் உள்ள வயித்தியநாதப் பெருமான் திருமகனாகச் சொல்லப்படுகின்ற

'முத்துக்குமரன்' எனப்படும் முருகனாகிய ஆறுமுகப்பெருமான் எனக்குத் துணை புரிவானாக!

(இந்நூலின் ஆசிரியர் பெயரும் 'முத்துக்குமாரர்' என்றிருத்தல் இங்கு நினைக்கத்தக்கது)

நவவீரர்

190 சந்ததம் வாணர் சவைநடு வேதமி யேனுயர்செங்
குந்தர்தம் மாலை கலித்துறை யால்மிகக் கூறுதற்கு
நந்தலில் அக்குல நாயகரென்ன நவிலுமொன்பான்
கந்தன் அனுசரை நான்மற வேனெந்தக் காலமுமே.

(பொ. ரை)

கற்றோர் கூடிய சபையில் 'செங்குந்தர் கலித்துறைமாலை' எனப் பெயரிய இந்த நூலினைச் சொல்ல அடியேனுக்குத் துணையாகவேண்டி 'கெடுதல் இல்லாத செங்குந்தகுலத் தலைவர்கள்' என்று கூறப்படும், கந்தனுக்கு இளையவர்களான நவவீரர்களை எந்தக் காலத்திலும் நான் மறவாது போற்றுவேன்.

(அ.ள்)

சந்ததம் — எப்பொழுதும்; வாணர் — தமிழ்வாணர்; நந்தல் — கெடுதல்; அனுசர் — பின்பிறந்தவர்.

ஒட்டக்கூத்தர்

191 கல்விக் கரசு, கவிராச சிங்கம், கலைச்சலதி,
வில்விக்கும் வாட்கை அபயர்சஞ் சீவி, விமலமுத்தி
புல்விக்கும் ஆகமப் பொக்கசம், வேதப் புயல், கமலச்
செல்விக்குச் சேய்ஒட்டக் கூத்த னல்லாற்புவி செப்பரிதே.

(பொ.ரை)

கல்விகற்றவர்களுக்கு அரசாகவும், கவிஞர்களாகிய யானைகட்கு அரச சிங்கமாகவும், கலைகளின் கடலாகவும், ஒளியை உண்டாக்கும் வாளைக் கையில் தரித்த சோழர்களுக்குச் சஞ்சீவி மருந்தாகவும், உயர்ந்த மோட்சத்தை அடைவிக்கும் ஆகமக் கருவூலமாகவும், வேதங்களின் மேகமாகவும், 'கமலச் செல்வி' எனப்படும் சரஸ்வதிக்குப் புதல்வராகவும்உள்ளஒட்டக் கூத்தரைத் தவிர வேறு யாரையும் இவ்வுலகம் புகழ்ந்து கூற இயலாது. ('அதனால் யானும் அவரைத்தான் புகழ்ந்தேன்' — என்பதாம்.)



(அ.ள்)

சலதி — கடல்; வில்விக்கும் — ஒளி உண்டாக்கும்; புல்விக்கும் — சேர்க்கும்; இஃது எதுகை நோக்கி 'புல்விக்கும்' என நின்றது.

ஆக்கியோன்பெயர் முதலியன

192 நாகைப் பதிவரு முத்துக் குமாரன் நயந்துசெழிப்
பாகப் புனைதரு செங்குந்தர் மாலையைப் பாரிலுள்ளோர்
தாகத் துடன்வி னவக்கச்சி யேகம்பர் சந்நிதிக்கண்
ஏகத் தவிசில் தியாகையன் உற்றரங் கேற்றினனே.

(பொ.ரை)

நாகப்பட்டினத்தில் தோன்றிய 'முத்துக்குமார தேசிகர்' என்னும் ஆசிரியர் விரும்பி இனிமையாகச் செங்குந்தர்மீது பாடிய இக்கலித்துறை மாலையை, உலகத்தவர் விரும்பிக் கேட்க, காஞ்சிபுரத்தில் உள்ள திருவேகம்பப்பெருமான் சந்நிதியில், ஒப்பற்ற ஓர் ஆசனத்தில் தியாகையர் வீற்றிருந்து, அரங்கேற்றினார்.

(அ.ள்)

தாகம் — வேட்கை (விருப்பம்); தவிசு — ஆசனம்.

இதிற்குறித்த தியாகையர் யாரென விளங்கவில்லை. நூலாசிரியர் வேறாயினும் அரங்கேற்றியவர் வேறு ஒருவர் எனத் தெரிகின்றது.

இஃது இந்நூலின் சிறப்புப் பாயிரம். ஆதலின் இதனை வேறு ஒருவரே செய்திருத்தல் வேண்டும். சிறப்புப் பாயிரத்தை வேறு ஒருவர் செய்வதே மரபு.

நூற்பயன்

193 எங்குந்த மோசை யிலங்காதி பத்தியம் ஏற்றதனிச்
செங்குந்தர் மாலை யொன்றோடுறு நூற்றையுஞ் சிந்தித்தபேர்
சங்கும்வளையுந் தரித்த பிரான்மனை தன்னருளால்
பொங்குமெண் பாக்கிய போகமுந் துய்த்துளம் பூரிப்பரே.

(பொ.ரை)

எல்லா இடங்களிலும் தம் புகழ் விளங்குமாறு, உரிமை பெற்று ஆட்சி நடத்தும் ஒப்பற்ற செங்குந்தர்மீது பாடப் பெற்ற, நூற்றொரு பாடல்களடங்கிய 'செங்குந்தர் கலித்துறை மாலை' என்னும் இந்நூலைக் கருத்து ஊன்றிப் படித்தவர்கள், சங்கு சக்கரத்தைக் கையில் தரித்த திருமாலின் மனைவியாகிய திருமகள் அருளால், நிரம்பிய எட்டு வகையான செல்வங்களை யும் பெற்று இன்புற்று உள்ளம் மகிழ்வார்கள்.

(அ.ள்)

ஓசை — புகழ்; ஆதிபத்தியம்— தலைமை; வளை — இங்குச் சக்கரம்; எண்பாக்கியம் — அஷ்டமா சித்திகள். (அணிமா, மகிமா, இலகிமா, கரிமா, பிராத்தி, பிராகாமியம், ஈசத்துவம் வசித்துவம்—இவை 'அஷ்ட ஐசுவரியம்' என்றும் சொல்லப் படும்.

வாழ்த்து

194 கனம்வாழ்க; எத்திக்குங் கார்பெய்தல் வாழ்க;கவின்மணிநீ(று)
இனம்வாழ்க; மன்ன ரெழில்வாழ்க; சைவ இருடியர்தம்
மனம்வாழ்க; வைதிக மாமறை வாழ்க; சண் மாமுகன்சீர்
தினம்வாழ்க; வாழ்கநங் கைக்கோள ராகிய செங்குந்தரே.

(பொ.ரை)

(இவ்வுலகில் செங்குந்தர்களுக்குரிய) பெருமை நிலைத்து வாழ்வதாக; எல்லாத் திசைகளிலும் மழை பெய்து உயிர்கள் வாழ்வனவாக. அழகிய திருக்கண்மணி, வெண்ணீறு போன் றவை வாழ்வனவாக; அரசர்களுடைய அழகு [புகழ்] வாழ்வ தாக; சைவத்துறவியர் மனம் நன்னெறியில் வாழ்வனவாக. வேதஒழுக்கங்களைச் சொல்லும் நூல்கள் நிலைத்து வாழ்வன



வாக; ஆறுமுகப்பெருமானுடைய புகழ் என்றும் வாழ்வதாக; ஒழுக்கத்தைக் கைக்கொண்டவர்களாகிய செங்குந்தர்கள் நிலைத்து வாழ்வார்களாக.

(அ.ள்)

கனம் — பெருமை; கார் — மேகம்; மழை; கவின்—அழகு.

நூல்

195 காராரு மேனித்திருமால் மருகர்,இக் காசினியில்
ஏராருங் கச்சி யிடைமா வடியி லிருந்துலகாள்
சூராதி சூரர், சுகந்தமும் தாதும் துலங்குகின்ற
சீரார் கடம்பணி தாரார்திண் மார்பினர் செங்குந்தரே.

[பொ.ரை ]

நல்ல மணமும், தேனும் பொருந்தியிருக்கின்ற சிறப்புடைய கடப்ப மாலையை அணிந்த வலிய மார்பையுடைய செங்குந்தர் களாகிய இவர்கள், கரிய தருமேனியுடைய திருமாலுக்கு மருகரானவர்கள்; இந்த உலகத்தில் அழகு மிகுந்த திருநகர மாகிய கச்சியம்பதியில் மாவடியின் கீழிருந்து நீதிசெலுத்தி உலகத்தை ஆட்செய்கின்ற மிக்க சூரத்தன்மை உடையவர்கள்.

(அ.ள் )

கார் — கருமை; 'மேகம்' என்றும் கொள்ளலாம். காசினி —உலகம் (காசிபரிடத்திலிருந்து தோன்றியது); ஏர் — அழகு; கந்தம் — மணம்; சுகந்தம் — நறுமணம்; தாது — மகரந்தம்; தார் — மாலை. 1

196 சலம்பெற்ற செஞ்சடை யார்கயி லாசர் தமதுநெற்றி
நலம்பெற்ற மூவிரு கட்பொறிக் கஞ்சிய நாயகிபின்
புலம்பிப் பெயர்ந்தஅங் நாளவள் பாதத்திற் பூட்டியபொற்
சிலம்பிற் பிறந்தவர் கைக்கோள ராகிய செங்குந்தரே.

[பொ.ரை]

கங்கைநீரைச் சிவந்த சடையில் தாங்கிய, கயிலைமலையி லுறையும் சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணில் தோன்றிய ஆறு தீப்பொறிகளின் வெம்மைக்கு அஞ்சிய உமையவள்

ஆற்றாது ஓடியபோது, அவள் திருவடிகளில் அணிந்திருந்த அழகிய சிலம்பிலிருந்து வெளிப்பட்ட நவமணிகளினிடமாகத் தோன்றியவர்கள் இந்தக் கைக்கோளர் எனப்படும் செங்குந்தர்கள்.

[அ.ள்`

சலம் - கங்கைநீர்; கட்பொறி — கண் பொறி — கண்ணில் தோன்றிய தீப்பொறி: புலம்பிப்பெயர்ந்த— ஆற்றாது தனித்து ஓடிய. 2

**197 பூமா துறைமணி மார்பற்கும், வெண்கஞ்சப் போதிலுறை**
**நாமாது கேள்வற்கும், நற்சசி காந்தன்முன் னாகருக்கும்**
**தாமாதி யாம்தந்தை போலும் முதலியர் தண்டலைப்பூந்**
**தேமா உருச்செறி கச்சியி லுச்சிதச் செங்குந்தரே.**

[பொ.ரை]

சோலைகள் சூழ்ந்ததும், வேதம் இனிய மாமர உருவாய் உள்ளதுமான கச்சியில் உள்ள உயர்ந்த இச் செங்குந்தர்கள், திருமகள் தங்கிய அழகிய மார்பினை உடைய திருமாலுக்கும், வெண்டாமரை மலரில் வாழும் கலைமகள் தலைவனான பிரமனுக்கும் இந்திராணி கணவனாகிய தேவேந்திரன் முதலிய வானவர்களுக்கும் முதல்வராகிய 'தந்தை' எனப்படும் சிவ பெருமானைப் போன்ற தலைவர்களாவார்கள்.

('முதலியர் எனச் சொல்லப் படுதலால் சிவபெருமானுக்கு நிகரான பெருமை உடையவர்கள் செங்குந்தர்கள் என்பது கருத்து).

(அ.ள்)

வெண்கஞ்சம் - வெண்டாமரை: நாமாது - கலைமகள்; சசி - இந்திராணி: நாகர் - தேவர்; தாம் ஆதியாம் தந்தை- தாமே முதல்வராகிய சிவபெருமான்; தண்டலை -சோலை. 3

**198 கந்த வரையொடு, கைலையும் மேருவும் காவல்கொளீஇ**
**முந்திய நீபத் தொடைநட னப்பரி, மும்ம தம்சேர்**
**தந்திசெஞ் சேவற் கொடியும் முரசொடு சண்முகன்தன்**
**செந்திருக் கோயில் தசாங்கமும் பெற்றவர் செங்குந்தரே.**



(பொ.ரை)

கந்தவெற்பு, கயிலாய மலை, மேருமலை முதலியவற்றைக் காவல் பூண்டு, சிறந்த கடம்பமாலை, நடமிடும் மயில், மும் மதங்களையுடைய யானை, சிவந்த சேவற்கொடி, (வீரம், வெற்றி, கொடை ஆகிய) மூன்று முரசுகள் ஆகியவைகளைக் கொண்டு முருகப் பெருமானுடைய கோயிற்காவலும், அரசர் களுக்குரிய தசாங்கமும் பூண்டவர்கள் இச்செங்குந்தர்களாவர்.

(அ.ள்)

நீபம்- கடம்பு; நடனப்பரி - மயில்; தந்தி - யானை; தசாங்கம் - மலை; ஆறு, நாடு, நகர் முதலிய பத்து உறுப்புகள் தசாங்கம் என்னும் பகுதியில் விளக்கமாகக் காண்க). 4

**199 வாரா நிதிக்குள் மகேந்திரம் தன்னிடை வாழ்ந்திருந்த**
**சூராதி சூரனை வென்[று]அவன் ஊகத் துவசங்கொண்ட**
**வீராதிவீரர் விசயப்ர தாபர், விருதுபெற்ற**
**தீராதிதீரர், துரைவீர ராகிய செங்குந்தரே;**

(பொ.ரை)

பிறருக்குக் கிடைக்காத பெருஞ் செல்வத்துடன் வீர மகேந்திர புரியில் வாழ்ந்த வீரம் மிக்கவனாகிய சூரபதுமனை வென்று அவனுடைய புலிக்கொடியைப் பறித்துக் கொண்டவர் களும், வீரம் மிக்குடையவர்களும், வெற்றிப்பெருமை உடையவர்களும், பலவிருதுகள் பெற்ற தீரம் உடையவர்களும், அரசாளும் வீரர்களும் ஆகியவர்கள் இந்தச் செங்குந்தர்க ளாவர்.

[அ.ள்]

ஊகம் - புலி; பிரதாபம் - புகழ்; துரை - அரசன். 5

**200 காணாநின் றார்க்கரு ளுங்கயி லைப்பரற் கானபல**
**பூணார மாளிகை மெய்க்காவல் பூண்டவர் பூதலத்தில்**
**ஆணாள ராகிச்செவ் வேளுக்குத் தம்பிய ராகிநின்றோர்**
**சேணாடு தன்னைக் குடியேற்றி வைத்தஇச் செங்குந்தரே.**

(பொ ரை)

தன்னைக்கண்டு வணங்கி நிற்பவர்களுக்குத் திருவருள் புரியும் கயிலை மலைப் பெருமானுக்குரிய ஆபரணங்கள் நிறைந்த பலமாளிகைகளைக் காவல் செய்பவர்களும், இவ்வுலகில் ஆண்மையை ஆள்பவர்களாகி முருகப்பெருமானுக்குத் தம்பியர் என்ற உரிமை பூண்டவர்களும் தேவர்களை வானுலகில் குடியேற்றுவித்த இந்தச் செங்குந்தர்களேயாவார்கள்.

(அ.ள்)

ஆணாளர் - ஆண்மையை ஆள்பவர்; சேணாடு - வானுலகம். 6

201 மெய்யுளுக் காதநன் னாவைப் படைத்தவர், மெய்மிற்சற்றும்
மையுளுக் காநமற் கோலைவிட் டோர், வெற்றி வாள்கொடுச்சி
கொய்யுளுக் காவண மென்றே கவியொட்டக் கூத்தன்சொன்ன
செய்யுளுக் காச்சிரப் பாவாடை யிட்டவர் செங்குந்தரே.

(பொ.ரை)

உண்மை பேசுவதில் தளராத (விலகாத) நாவுடையவர்களும், நடுவு நிலைமையில் இருந்த பிறழ்தலாகிய குற்றம் இல்லாத எமதருமனுக்கு (பிழையைச் சுட்டிக்காட்டி) ஓலை விட்டவர்களும், வெற்றிபொருந்திய வாளைக் கொண்டு தலையைச் சிறிதும் நடுங்காமல் வெட்டி, ஒட்டக்கூத்தரிடம் செய்யுள் பெறும் பொருட்டு சிரப்பாவாடை இட்டவர்களும் இச் செங்குந்தர்களேயாவர்.

(அ ள்)

உளுக்காத - தளர்ச்சி இல்லாத; நமற்கு - நமனுக்கு, இயமனுக்கு; கொய் - வெட்டுதல். முதனிலைத் தொழிற்பெயர். 7

202 காவே கரப்பினும் கார்பெய்தல் பொய்ப்பினும், கட்கமலப்
பூவே மலையின் நுனியிடை பூப்பினும், பூதலத்தின்
மாவே முடையவெய் யோன்வடக் குந்தெற்கும் மாறினும்மெய்த்
தேவே விலகினும், நாவிலங் காதவர் செங்குந்தரே.



(பொ.ரை)

கற்பகத் தரு உலோபத்தன்மையை உடையதாயினும் மழை பெய்வது பொய்த்துவிட்டாலும், தேனை உடைய தாமரைப்பூ மலையுச்சியில் பூத்தாலும், ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் வரும் சூரியன் இவ்வுலகில் (கிழக்கு மேற்குத் திசைக்குப் பதிலாக) வடக்குத் தெற்காக மாறி உதித்து வந்தாலும், தெய்வமே மாறி நின்றாலும், தாம் சொன்ன சொல்லிலிருந்து மாறாதவர்கள் இச்செங்குந்தர்களேயாவார்கள்.

(அ.ள்)

கட்கமலம் - கள் கமலம் - தேனை உடைய தாமரை; மா- குதிரை; வெய்யோன் - சூரியன். 8

203 அருவாய் உருவமும் ஆய்அண்ட மாய்அண்டர் அண்டமுமாய்
மருவாய் மருவின் மருவிட மாய்ச்சது மாமறையின்
தருவாய் விளங்கிய காமாட்சி யம்மையின் சந்நிதிக்கண்
திருவாழுங் கச்சிக் கருமாறிப் பாய்பவர் செங்குந்தரே.

(பொ ரை)

அருவமாகவும், உருவமாகவும், உயிர்கள் அனைத்தும் வாழுகின்ற அண்டமாகவும், தேவர்கள் வாழுகின்ற உலகமாகவும், மணமாகவும் மணத்திற்கு இடமாகிய மலராகவும் நான்கு வேதங்களின் உருவாகிய மா மரமாகவும் விளங்கி நிற்கும் திருக்காமாட்சியம்மை கோயிலிலுள்ள தலத்தில் உள்ள உலகாணித் தீர்த்தத்தில் (தலைகீழாகப் பாயும்) கருமாறிப் பாய்ச்சலை மேற்கொண்டு உயிர்விடுபவர்கள் இச் செங்குந்தர்களேயாவர்.

(அ.ள்)

அண்டம் - தேவர் தவிர்த்த பிற ஏழு உயிர்கள்வாழுமிடம், அண்டரண்டம் - அண்டர் அண்டம் - தேவர் வாழுமிடம்; பகிரண்டம் என்பது அண்டங்களுக்கு வெளியே எனப் பொருள்படும்; மரு - வாசனை; மருவின் மருவிடம் - வாசனை தங்குமிடம், மலர்; (கருமாறிப் பாய்ச்சல் என்பது செங்குந்தர் பிள்ளைத் தமிழிலும் திருக்கை வழக்கத்திலும் முன்பே விளக்கப்பட்டுள்ளது.) 9

204 பேரா யிரமுடை யார்கச்சி யேகம்பர் பேண்விழவில்
ஏராரும் வீதிக் கெழுந்தருள்தோறும் இரவுபகல்
பாராம லேநிதம் சீர்பாதம் தாங்கும் பணிவிடைக்குச்
சேரா யிரத்துத் தொளாயிரம் பேர்களுஞ் செங்குந்தரே.

(பொ.ரை)

ஆயிரம் திருநாமங்களையுடைய கச்சியேகம்பர் விரும்பிக் கொள்ளுகின்ற திருவிழாவில், அப்பெருமான் அழகிய திருவீதிகளில் உலா வருங்கால், இரவென்றும் பகலென்றும பாராமல் நாள்தோறும் அப்பெருமானது திருவடிகளைத் தாங்கிவரும் தொண்டிற்குச் சேருகின்றவர்கள் 'முதற் சந்ததியினர்' எனப் படும் செங்குந்தர்கள் ஆயிரத்துத் தொள்ளாயிரவர்களேயாவர். (அபிதான சிந்தாமணி காண்க).

(அ.ள்)

பேண் - பேணும்; விழவு - திருவிழா; ஏராரும் வீதி - அழகு நிறைந்த தெரு; (பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மான்! என்ற திருமுறைத்தொடர் இங்கு நினைவு கூரத் தக்கது). 10

204 முகத்தில்மென் மீசை மிளிர்வோர், மறைதெரி மூதறிவோர்,
அகத்தில் தயவுகொண்[டு]ஆர்வந்தி ரக்கினும் அன்னமிட்டுத்
திகத்திசை தோறும் திறைகொள் கரதலச் செம்மையினால்
செகத்தினிற் செம்பியர்க் காதார மானவர் செங்குந்தரே.

(பொ.ரை)

முகத்தில் (வீரத்திற்கறிகுறியாக) அரும்புகின்ற மெல்லிய மீசையை உடையவர்களும், வேதநெறி அறிந்தநல்ல அறிவு உடையவர்களும், உள்ளத்தில் கருணை கொண்டு யார் வந்து யாசித்தாலும் அவர்களுக்குச் சோறிட்டு உதவிசெய்பவர்களும், எல்லாத் திசைகளிலும் தம் வெற்றியால் கப்பம் பெறுகின்ற கைகளை உடைமையால் சோழமன்னர்களுக்கு உற்ற துணையாக நிற்பவர்களும் இச் செங்குந்தர்களேயாவர்.



(அ.ள்)

தயவு - கருணை; திகத்திசை - எல்லாத்திசைளிகலும் (திக் - அத்திசை; திகத்திசை - 'திக்' என்பதுவடசொல்; தமிழில் திக்கு என வரும்). 11

205 நடுக்கண்ட காரி யமேசொல்லு வார்பொய்யெந் நாளுஞ் சொலார்,
துடுக்குற்றொ ராடல் துணிந்துசெய் யார்தங்கள் தொல்குலத்தில்
வடுக்கொண்ட பேரைச் சினத்தோ டவர்தம் மணிமிடற்றில்
திடுக்கென் றலற நுகத்தூணைப் பாய்ச்சுவர் செங்குந்தரே.

(பொ.ரை)

நீதி என்று தாம் உணர்ந்த செயலையே சொல்லுபவர்களும், எப்பொழுதும் பொய் சொல்லாதவர்களும், நிதானமின்றி எந்தச் செயலையும் துணிந்து செய்யாதவர்களுமாகிய இச் செங்குந்சர்கள், தங்கள் பழமையான குலத்தில் எவரேனும் தவறான செயல் செய்து பழிபூண்டால் அவர்களைக் கோபித்து அவர்களது கழுத்தில் நுகத்தடியைப் பாய்ச்சித் தண்டம் செய்வார்கள். (பழி பொறாதவர் என்பது கருத்து.

(அ.ள்)

நடு - நேர்மை, நீதி; துடுக்குற்று - அவசரப்பட்டு; ஆடல் - செயல்; வடு - குற்றம்; மணிமிடறு - அழகிய கழுத்து; நுகத்தூண் - நுகத்தடி. (இவ்வாறு தண்டிப்பது முற்காலத்தில் இருந்தது எனத் தெரிகின்றது). 12

206 படமுட னேவரு பாந்தளொப் பாம்அல்குற் பாவையர்க்கும்,
அடலுட னேதிரி யானையொப் பாம்வலி யாடவர்க்கும்
குடதிசை யோடுகுணக்கும் வடக்குங் குலாவுதெற்கும்
திடமுட னேபட்ட மானமுங் காத்தவர் செங்குந்தரே.

(பொ.ரை)

பாம்பினது படம் போலும் அல்குற் பரப்பை உடைய மகளிர்க்கும், வலிமையுடன் யானை போன்று உலவுகின்ற ஆண்மையுடைய ஆடவர்க்கும் ஏற்பட்ட அவமானத்தை

நான்கு திசைகளிலும் சென்று நீக்கிக் காத்தவர்கள் இச் செங்குந்தர்கள்.

(அ.ள்)

பாந்தள் — பாம்பு; பாவையர் — பெண்கள்; ஆடல்— வலிமை; குடதிசை — மேற்கு; குணக்கு — கிழக்கு; பட்டமானம் —ஏற்பட்ட அவமானம் (மானம் காத்த செய்தி பிள்ளைத் தமிழில் சிறுபறைப் பருவம் 5ஆம் பாடலில் விளக்கப் பட்டுள்ளது ) 13

206 அக்கால் சடையனுக் கன்பான பேருக்கன் பாகியபேர்,
திக்கானை யெட்டும் திகைக்கச் சமர்புரி தீரர்சிவ
மிக்கான சைவ விதிவளர்ப் போர்பலர் மெச்ச வந்து
செக்காருக் குற்ற பழிக்குயிர் ஈந்தவர் செங்குந்தரே.

(பொ.ரை)

முற்காலம் முதல் சிவபெருமானுக்கு அன்பர்களாக இருந்தவர்களுக்கு அன்புடையவர்களும், திசையானைகள் எட்டும் திகைத்து நிற்குமாறு பெருவலியுடன் போர் புரிபவர்களும், உயர்ந்த சைவ நெறியில் நின்று அதனை வளர்ப்பவர்களும், எண்ணெய் வாணிகர்களாகிய செக்கார்களுக்கு ஏற்பட்ட பழியைப்போக்க, எல்லோரும் புகழுமாறு தம் உயிரை ஈந்தவர்களும் இந்தச் செங்குந்தர்களேயாவர்.

(அ. ள்)

சடையன் - சடைமுடியுடைய சிவபெருமான்; திக்கு ஆனை- திக்கானை - திசைகளில் உள்ள யானை, (செக்கார் பழிக்கு உயிர் ஈந்த வரலாறு விளங்கவில்லை.) 14

207 நெல்லைப் பதி,மது ராபுரி, காஞ்சி நெடுங்கழுக்குன்(று),
எல்லைக் கடங்கருங் காசி,ஐயாறொ[டு] இடைமருதூர்,
அல்லைப் பொருங்கம லாலயம், காழி அதிகைமுதல்
தில்லைத் தலந்தொறும் மெய்க்காவல் பூண்டவர்செங்குந்தரே.

(பொ ரை)

திருநெல்வேலி, மதுரை, காஞ்சிபுரம், திருக்கழுக்குன்றம், எல்லைக்கடங்காத (புகழுடைய) காசி, திருவையாறு, திருவிடைமருதூர், இருண்ட நீர்நிறை கமலாலய தீர்த்தத்தை உடைய திருவாரூர், சீர்காழி, திருவதிகை, தில்லை முதலிய திருத்தலங்களில் இறைவனுக்கு மெய்க்காவல் பூண்டவர் இச் செங்குந்தர்களாவர். 15



208 மேயசெம் பாக்கம்,நெற் குன்றம், படப்பை, வியன்புவனை,
நேயநா கேச்சுரம். மானாம்பதி, சண்பைநீடகரம்
தூயநன் னாகை,முன் மாப்பிளைக் குப்பம்,சீர் சேர்கமலை
சீயபுரம்,சே ரலமாதி நாட்டினர் செங்குந்தரே.

(பொ. ரை)

வளம்பொருந்திய செம்பாக்கம், நெற்குன்றம், படப்பை, புவனகிரி, திருநாகேஸ்வரம், மானாம்பதி, சீர்காழி, அகரம், நாகப்பட்டினம். மாப்பிள்ளைக்குப்பம், சிறப்புடைய திருவாரூர், (சோழ) சிங்கபுரம், சேரநாடு முதலிய 72 நாடுகளுக்கு உரிமையுடையவர்கள் இச்செங்குந்தர்களாவார்கள்.

(அ. ள்)

கமலை - திருவாரூர்; சேரலம் - சேரலர் நாடு. 16

209 பக்கத் தெழுந்து வருஞ்சூர னஞ்சப் படையெடுத்து
நெக்குப் பொருந்தொறுஞ் செஞ்சோரிவெள்ளம் நெடுங்கடல் போல்
கொக்கொத்த வெண்குடை மேலே யலைஎறிகொள்கையினர்
செக்கச் சிவந்த கவிகையுள் ளோர்கள்இச் செங்குந்தரே.

(பொ. ரை)

அருகில் ஆர்ப்பரிதது எழுந்து வரும் சூரன் அச்சம் கொள்ளப் படை எடுத்து வந்து வீரர்களது உடல் பிளக்கும் தோறும் உண்டாகும் இரத்தவெள்ளம், பெரிய கடல்போல் பெருகிக் கொக்கின் நிறம் போன்ற வெண்கொற்றக் குடையின் மீது அலை வீசும் தன்மையுண்டாக்கப் போரிடும் வல்லமை உடையவர்களும், செந்நிறம் உடைய குடை பிடித்தவர்களும் இச் செங்குந்தரே ஆவர்.

(அ. ள்)

'நெக்குவிட' என ஒரு சொல் வருவிக்க. பொரும்தொறும்-சண்டையிடும் போதெல்லாம்; சோரி - இரத்தம்; கவிகை - குடை. 17

210 பாவிக் குறும்பருக் கும்பழு வூரன்முன் பன்னிருவர்
மேவிக் குளத்துற்ற கம்பத்தி லேறிஊன் வீசிக்கொண்டே
ஆவிக் கிறுதிசெய் யாமல்வல் லானை அடக்கியபின்
தேவிக்கு மாங்க லியப்பிச்சை யிட்டவர் செங்குந்தரே.

(பொ. ரை.)

பாவம் செய்யும் குறும்பர்களை அழிக்கின்ற பழுவூரன் முதலிய பன்னிரண்டு வீரர்கள், (கொடியவனான) வல்லான் இருக்குமிடம் சென்று அவன் வீரநாராயணபுரத்து ஏரியில் கம்பத்தின்மீதுகட்டியிருந்த கயிற்றில் ஏறி, நீர்வாழ் முதலைகள் தங்களைத் தாக்காதிருப்பதற்காக அவற்றிற்கு உணவிட்டுக் கொண்டே சென்று, அவ்வல்லானை அழிக்காமல் அடக்கி, அவன் மனைவி வேண்டிக் கொள்ள அவனுக்கு மாங்கல்யப் பிச்சை கொடுத்துக் காப்பாற்றியவர்கள் இச் செங்குந்தர்கள் ஆவார்கள். (இவ்வரலாற்று விரிவு ஈட்டி எழுபதில் உள்ளது.)

(அ. ள்)

ஊன் — மாமிசம். ஆவிக்கு இறுதி — உயிருக்கு முடிவு. 18

211 குக்குக் குகுவெனக் கூகைகள் பாடக் குறுங்குறளி
நக்குச் சிரங்கோட்டி நின்றாட வெட்டி நடுச்சமரிற்
புக்குக் கொடுஞ்சிங்க மாமுகன் பல்சிரம் போழ்ந்துடலச்
செக்குக் கொருசிரம் வைத்தொழித் திட்டவர் செங்குந்தரே.

(பொ. ரை)

போர்க்களத்தில் கூகைகள்'குக்குக் குகு' என்றுஒலியெழுப்பி மகிழவும், குறிய உருவத்தை உடைய பூதங்கள் சிரித்து மகிழ்ந்து தலையை அசைத்து ஆடவும், போர்க்களத்தின் இடையிலே சென்று கொடிய சிங்கமுகாசுரனுடைய ஆயிரம் தலைகளில் ஒன்றை மட்டும் அவனுடைய செக்குப் போன்ற உடம்பிலே திற்க, விட்டு வைத்த மற்ற தலைகளை வெட்டிப் பிளந்து ஒழித்தவர்கள் இச் செங்குந்தராவர்.



(அ. ள்)

கூகை — கோட்டான்; குறளி — பூதம்; போழ்ந்து — பிளந்து. 19

212 சக்திக் கொருபுடை தந்தருள் ஈசன், தமிழ்ப்புலவர்
பத்திக் கிரங்கும் பரமேட்டி வேதப் பருப்பதத்தில்
எத்திக்கும் போற்றிடுஞ் சம்பாதி சம்பரற் கிச்சையுடன்
தித்திக்க வேநிதம் அன்னம் படைப்பவர் செங்குந்தரே.

(பொ. ரை)

சக்தியாகிய உமாதேவிக்குத் தன் இடப்பாகத்தைத் தந்தருளியவனும், தமிழ்ப்புலவர்களுடைய பத்திக்கு இரங்கி அருள் செய்பவனும் ஆகிய சிவபெருமான் வீற்றிருக்கின்ற வேதமே வடிவான திருக்கழுக்குன்ற மலையில் எந்தத்திசையில் உள்ளவர்களாலும் போற்றப்படுகின்ற 'சம்பாதி, சம்பரன்' என்னும் இரண்டு கழுகுகளுக்கு நாள்தோறும் இனிய உணவு படைப்பவர்களும் இச்செங்குந்தரேயாவர்.

(அ. ள்)

புடை — பக்கம்; பரமேட்டி — பரமேசுவரன்; பருப்பதம் - மலை; (இந்த வரலாறு ஈட்டி எழுபது 22 ஆம் பாடலில் கூறப்பட்டது. இதன் விரிவை திருக்கழுக்குன்றத் தலபுராணத்தில் காணலாம்.) 20

213 நேசச் செழியனும் சேரனும் சோழனும் நின்றுமெச்ச
வாசத் தவண்டைமல் லாரிகள் கொட்டிவந் தேசவையிற்
பாசத்தி னாற்பனை மேற்கம்பம் வீக்கி அப்பார்த்திபர்தம்
தேசத்தி லேநட்டுக் கட்டியு மாடுவர் செங்குந்தரே.

(பொ. ரை)

அன்புடைய சேர சோழ பாண்டிய மன்னர்கள் போற்ற மணம் பொருந்திய மாலையணிந்த மல்லாரி முதலிய இசைக்

(அ.ன்)

முந்து இக்கு வேள்ஐ — முந்து — முற்காலத்தில்; இக்கு — கரும்பு; வேள் — மன்மதன்; முனிந்தோன் — கோபித்த சிவ பெருமான், நிந்திக்கும் — பழிக்கும். 90

**283 ஒப்புயர் வற்ற கயிலாய வெற்பில்வல் லோங்கவுணர்**
**துப்பற ஆறு முகனோ டுதித்துப்பின் தொல்லுலகின்**
**வெப்பற வெய்யோன் குலத்திவர்ந் தோங்கிவிற் பன்னர்மிகச்**
**செப்பு தசாங்கம் இருவகைப் பெற்றவர் செங்குந்தரே.**

(பொ. ரை)

தனக்கு ஒப்பதும், மிக்கதும் இல்லாததாகிய கயிலைமலை யில், வலிமையினால் உயர்ந்த அவுணர்களினுடைய வலிமை நீங்குமாறு, ஆறுமுகப் பெருமானோடு தோன்றி, பின்னர் நிலவுலகில் கொடுமை நீங்குமாறு சூரிய குலத்தில் தோன்றி உயர்ந்து, கல்வியறிவுடையவர்கள் உயர்த்திச் சொல்லுகின்ற 'தசாங்கம்' என்னும் பிரபந்தத்தை இரண்டு வகையில் பெற்ற வர்கள் செங்குந்தர்கள் ஆவர்.

(அ. ன்)

வல்லோங்கு — வலிமையினால் உயர்ந்த; துப்பு — வலிமை; வெப்பு — கொடுமை; இவர்ந்து — உயர்ந்து; விற்பன்னர் — கல்வியில் சிறந்தவர்கள்; தசாங்கம் — அரசர்க்குரிய ஆறு, நாடு, நகர், மலை முதலிய பத்து உறுப்புக்கள்; இருவகைத் தசாங்கம்- கைலையில் தோன்றி ஆறுமுகனுடன் வாழ்ந்தபோது கொண் டிருந்த ஒரு தசாங்கம், பூமியில் சோழ மரபில் தோன்றிய பின் பெற்ற ஒரு தசாங்கம் என்பன. 91

**284 பாவல ரான்மெச்சும் ஏழ்தீவத் துள்ளும் பவித்திரமாம்**
**நாவலந் தீவில் நடராசன் கோயில்முன் னாகநவின்(று)**
**ஆவல்செய் ஆயிரத் தெண்தலந் தோறும்நல் லாட்சியராய்ச்**
**சேவலற் போற்றி எனில்நா டுறைபவர், செங்குந்தரே.**

(பொ. ரை)

பாவாணர்களால் புகழப்படுகின்ற ஏழு தீவுகளுக்குள்ளும், புனிதமான நாவலந்தீவு எனப்படும் பரத கண்டத்தில், நடராசப்பெருமான் கோயில் கொண்டுள்ள சிதம்பரம் முதலாகச் சொல்லப்படுகின்ற விருப்பம் தரும் ஆயிரத்தெட்டுத் தலங்களில் நல்ல அரசாட்சி செய்பவர்களாய், சேவற்கொடி யுடைய முருகனை வணங்கி, எண்ணற்ற நாடுகளில் வாழ் பவர்கள் இச் செங்குந்தர்களாவர்.



(அ. ன்)

மெச்சும் — புகழப்படும்; தீவம் — தீவு; பவித்திரம் — புனிதம், தூய்மை; முன்னாக — முதலாக; நவின்று — சொல்லி; ஆயிரத்தெண் தலம் — 1008 சிவாலயங்கள்; 'சேவலற் போற்றி' என்பதற்கு சே — எருது எனப் பொருள் கொண்டு 'எருதுக் கொடியை வலத்தில் உடைய சிவபெருமானை வணங்கி' எனவும் கொள்ளலாம்.) எணில் நாடு — அளவற்ற நாடுகள். 92

**285 ஆர்ந்தஅக் ராரம் அரண்மன்றம், ஆவணக் கூடம், அயல்**
**சேர்ந்தநத் தம்இவை தற்சூழ நாப்பண் செழுமணிபோல்**
**நேர்ந்த இடம்தம் மடவளா கம்மென வேநிறுவிச்**
**சேர்ந்த சுற்றத் தொடும்வைகுவர் காண்இந்தச் செங்குந்தரே.**

(பொ. ரை)

இந்தச் செங்குந்தர்கள், நிறைந்துள்ள அக்ரஹாரம், மதில், மன்று, கடைத்தெரு, அருகில் சேர உள்ள நத்தம் ஆகியவைகள் சூழ்ந்திருக்க நடுவில் செம்மணிபோல் கிடைத்த இடத்தை மடவளாகம்' என்று அமைத்து, தம்முடைய சுற்றத்தார் களுடன் கூடிவாழ்பவர்கள் ஆவார்கள்.

(அ. ன்)

ஆர்ந்த — நிறைந்த; அக்ரஹாரம் — அந்தணர் தெரு; மன்றம் — கூடம்; சபை; ஆவணக் கூடம் — கடைத்தெரு; நத்தம் — வேளாளர் வாழும் ஊர்; தற்சூழ — தன்னைச் சுற்றியிருக்க; நாப்பண் — நடுவில்; நேர்ந்த — கிடைத்த; மடவளாகம் — செங்குந்தர்வாழிடம்; நிறுவி — அமைத்து; வைகுவர் — வாழ்வர். 93

**286 தகர்இவர் வேள்விடத் தூதாய் மகேந்திரம் தன்னிற்புக்கு
அகலரும் வெஞ்சிறைக் கண்படும் உம்பரை ஆதரித்தே
இகல்செயும் சூர்கடைச் சேய்முது கென்பைத்தம் ஈட்டியெனச்
சிகரியி னாட்டிநின் றாடிய வீரியர் செங்குந்தரே.**

[பொ. ரை]

ஆட்டுக்கிடாயை வாகனமாகக் கொண்டு செல்லும் முருகப் பெருமான் அனுப்பத் தூதாக வீரமகேந்திரபுரிக்குச் சென்று, வெளியில் அகலுவதற்கு அரிதான கொடிய சிறையில் வாடும் தேவர்களுக்கு ஆறுதல்கூறி, பகைகொண்ட சூரபதுமனுடைய கடைசி மகனான வச்சிரவாகுவினுடைய முதுகெலும்பை எடுத்து, 'தங்களுக்குரிய ஆயுதமாகிய ஈட்டி இதுவாகும்' என்று உயர்ந்த கோபுரத்தில் நிறுத்திவைத்து, ஆனந்தக்கூத்தாடிய வீரம் உடையவர்கள் செங்குந்தர்களாவார்கள்.

[அ ள்]

தகர் — ஆடு; இவர்தல் — ஏறிச் செல்லுதல்; அகல்அரு — நீங்கமுடியாத; உம்பர் — தேவர்; இகல் — மாறுபாடு, பகை; சிகரி — கோபுரம். இதிற் சொல்லப்பட்ட செயல் வீரவாகு தேவர் செய்தது. 94

**287 மூவகைத் தீக்கையுள் தந்தை சமயம் முயன்றளிப்பத்
தாவில் விசேட நிருவாணம் தங்குலத் தந்தனர்கைப்
பாவபி டேகத்தர் பன்முறை யாய்ந்து பரிந்தளிப்பத்
தேவரும் மெச்சப்பெற் றோங்கிநிற் பார்களிச் செங்குந்தரே.**

[பொ. ரை]

(சமயம், விசேடம், நிருவாணம் என்னும்) மூன்று வகையான தீட்சைகளில் சமய தீட்சையைத் தந்தையார் செய்து வைக்க, விசேடம், நிருவாணம் ஆகிய இரண்டினையும் தம் குலத்தில் உள்ள அந்தணர்களிடம் பரவியுள்ள அபிடேகம் பெற்ற தேசிகர்கள் [குருமார்கள்] நன்கு பலமுறை ஆராய்ந்து அன்போடு செய்விக்க, அத்தீட்சைகளைப் பெற்றதனால தேவர்களாலும் புகழப்பெற்று உயர்ந்து நிற்பவர்கள் இச் செங்குந்தர்களாவர்.



(அ. ள்)

தாஇல்—கெடுதல் இல்லாத; பா—பரந்துபட்ட; அபிடேகத்தர்—ஆசாரிய அபிடேகம் பெற்ற தேசிகர்; பரிந்து—அன்பு கொண்டு. 95

**288 அங்கம், அருணம், அமவந்தி,சவ் வீரமொ(டு), ஆந்த்ரம்,எழில்
தெங்கணம், வங்கம், கலிங்கம், குடகம், திகழ்துளுவம்,
கொங்கணம், மச்சம், மலையாளம், மாளவம், கோதில்சிந்து,
சிங்கள மாதிய பல்தேயம் வென்றவர் செங்குந்தரே.**

(பொ. ரை)

அங்கம், அருணம், அவந்தி, சவ்வீரம், ஆந்திரம், தெக்கணம், வங்கம், கலிங்கம், குடகம், துளுவம், கொங்கணம், மச்சம், மலையாளம், மாளவம், சிந்து, சிங்களம் முதலாக உள்ள பல தேசங்களை வென்றவர்கள் செங்குந்தர்களாவார்கள்.

(அ ள்)

எழில்—அழகு; தெக்கணம் என்பது எதுகை நோக்கித் 'தெங்கணம்' எனத் திரிந்தது; திகழ் — விளங்குகின்ற; கோதில்- குற்றமற்ற. 96

**289 அப்பணி வேணியர், ஆலால கண்டர்,அன் பர்க்கெளியர்,
ஒப்புயர் வற்றவர் தம்சிறு பாலரென் றொண்கவிகள்
தப்பில் புராணம் பரணி, யுலா,பிள்ளைத் தண்டமிழ்முன்
செப்பும் பிரபந்தம் எண்ணில பெற்றவர் செங்குந்தரே.**

(பொ. ரை)

கங்கையைத் தாங்கிய சடையை உடையவரும், விஷத்தைக் கழுத்தில் தங்கவைத்தவரும், அன்பர்களுக்கு எளிமையாக அருள்செய்பவரும், தமக்கு இணையும் உயர்வும் இல்லாதவரும் ஆகிய சிவபெருமானுடைய குமாரர்கள் என்று கூறி, புகழ் பெற்ற பாவலர்கள் எண்ணிலவாகப்பாடிய புராணம், பரணி, உலா, பிள்ளைத்தமிழ் முதலாகச் சொல்லப்படுகின்ற நூல்களைப் பெற்றவர்கள் செங்குந்தர்களாவர்.

[அ. ள்]

அப்பு அணி — (கங்கை) நீரைத் தலையில் அணிந்த; ஆலால கண்டம்—விஷம் பொருந்திய கழுத்து; கவிகள்—புலவர்கள்; (செங்குந்தர்கள் சிவபெருமானுடைய குமாரர்கள் என்று நூல்கள் கூறுகின்றன என்பது கருத்து). 97

**290 காத்திரம் கொண்டழி தேவர் இருடியர் கற்பனையாம்**
**சூத்திர கோத்திரம் போலாது உலகங்கள் துஞ்சிடினும்**
**சாத்திர மாறினும் தான்மாறி டாச்சிவ சண்முகன்றன்**
**சேத்திர கோத்திர ரென்னப் பொலிபவர் செங்குந்தரே**

[பொ. ரை]

உடம்பைப்பெற்றுப் பிறந்து பின்பு இறக்கின்ற தேவர்கள், இருடிகள் முதலியோரின் பிரிவான கற்பனைக் கோத்திரம் போலல்லாமல், உலகமெல்லாம் அழிந்து போனாலும், சாத்திரம் நிலைமாறினாலும், தான் என்றும் மாறாது நிலைத்துநிற்கும் சண்முகன் உறைவிடத்தில் விளங்குகின்ற கோத்திரத்தினர் என்று புகழோடு விளங்குபவர்கள் செங்குந்தர் களேயாவர்.

[அ. ள்]

காத்திரம் - உடம்பு; சூத்திரம் - நூலில் சொல்லப்பட்ட பிரிவு; துஞ்சிடினும் - அழிந்தாலும்; சேத்திரம் - உறைவிடம்; பொலிதல் - விளங்குதல். (செங்குந்தர்களுடைய கோத்திரம் பொதுவகையால் 'சிவகோத்திரம்' என்று சொல்லப்பெறினும், 'உபசுப்ரமணிய கோத்திரம்' என்பதே பொருந்துவது ஆம்.) 98

**291 அந்தமும் ஆதியு மில்லான் பணிகொண் டறுமுகன்பால்**
**வந்தனை யாற்றித் தமைவரப் பெற்ற மனுகுலத்தோன்**
**சொந்தம தாம்முசுப் பேரரு கேதங்கள் தொல்படைப்பேர்**
**செந்தமிழ் நாவலர் கொண்டாட வைத்தவர் செங்குந்தரே.**

[பொ.ரை]

முடிவும் தோற்றமும் இல்லாத சிவபெருமானுக்குரிய பணிவிடைகளை ஏற்றுக்கொண்டு, ஆறுமுகனிடத்தில் வணங்கி நின்று, தம் குலத்தில் வந்து தோன்றிய மனுகுலத்தரசனை 'முசு' என்னும் பெயருக்கருகே தங்களுடைய பழமையான படைக் கருவியாகிய குந்தம் எனும் பெயரையும் சேர்த்து தமிழ்வல்ல புலவர்கள் எல்லாம் 'முசுகுந்தன்' எனக் கொண்டாடுமாறு செய்தவர்கள் செங்குந்தர்களேயாவர்.



(அ.ள்)

(சிவபெருமானை, 'ஆதியும் அந்தமும் இல்லா அருப்பெரும் சோதி' என்பார் மணிவாசகர்) மனுகுலம் - சோழகுலம்; முசுப் பேரருகே படைப்பேர் - 'முசு குந்தன்' என்பது. தொல்படை - பழமையான 'குந்தம்' எனும் படை. 99

**292 நாமா புகல்வ திவர்வீரம்! அம்மம்ம! நான்முகனால்**
**ஆமா? இதற்குக் கரிகே ரளஇறை அஞ்சவைத்துத்**
**தாமாகத் தங்குலக் கோதைஇச் சித்தசந் தானமெனும்**
**தேமாங் கனியைக் கொணர்ந்தளித் தார்கள்இச் செங்குந்தரே**

(பொ.ரை)

இச் செங்குந்தர்களின் வீரத்தை அம்மம்ம, பிரமதேவனாலும் எடுத்துச் சொல்ல இயலாது என்றால், நம்மாலா கூற இயலும்? இயலாது. கேரள நாட்டு மன்னன் அஞ்சுமாறு போரிட்டு, இவர்தம் குலக்கொழுந்தான சித்திரவல்லி விரும்பிக் கேட்ட 'சந்தான மாங்கனி' எனும் உயர்ந்த மாம்பழத்தைக் கொண்டுவந்து கொடுத்ததே இவர்களுடைய வீரத்திற்குச் சான்று ஆகும்.

(அ.ள்)

அம்ம - வியப்பிடைச்சொல்; கரி - சாட்சி; கேரள இறை - கேரள அரசன்; குலக்கோதை - குலத்தில் தோன்றிய பெண், சித்திரவல்லி; இச்சித்த - விரும்பிய. இச் செய்தி 'ஈட்டி எழுபது' பாடல் 33, மற்றும் 'திருக்கை வழக்கம்' கண்ணி 51 ஆகியவற்றிலும் கூறப்பட்டுள்ளது. 100

**293 பொய்வீகம் ஏற்ற புலவர்முன் னேபல புன்கவிஞர்**
**மொய்வீகம் ஒத்தபி மானத்தி னால்பொருள் மோகத்தினால்**
**மெய்வீகம் மாட்டிக் குலவன்மை கூறல் வியப்பன்றெனத்**
**தெய்வீகம் நாட்டிஅவ் வண்மையைப் பெற்றவர் செங்குந்தரே.**

(பொ.ரை)

பொய்யான பெருமை கொண்டிருக்கின்ற புலவர்களுக்கு முன், அற்ப நூலறிவுடைய கவிஞர் பலர் புற்றீசல் போல நெருங்கி அபிமானத்தினாலும், பொருள்மீது கொண்ட பற்றினாலும் மெய்ம்மையுடைய நம் குலத்தின் வண்மையைக் கூறுவதில் வியப்பு ஏதுமில்லை' என்று கருதி, தம்மிடத்தில் உள்ள தெய்வத் தன்மையை (ஒட்டக்கூத்தர் பாட) ஏற்றுக் கொண்டவர்கள் செங்குந்தர்களாவார்கள்.

(அ.ள்)

வீகம் - வீக்கம் - மிகுதி; புன்கவிஞர் - குறையறிவுடைய புலவர். மொய் - நெருங்கிய; அபிமானம் பற்று; குலவண்மை— குலத்தினரின் கொடைக்குணம். நாட்டி-நிலைநிறுத்தி. தெய்வீகம், தலைகளை வெட்டிக்கொடுத்துப் பின்னும் அவைகள் வந்து பொருந்த உயிர்பெற்றெழுந்தமை. 101

வாழ்த்து
அறுசீர் விருத்தம்

294 காணருங் கைலைக் கந்தக் கனவரை யாதி வாழ்க!
பேணுறு சைவச் சின்னம் பெருகுக! பிழையில் கீர்த்தி
பூணும்ஒன் பானென் வீரர் பொலிகுலம் விளைக! தேவர்
சேணுல காள வைத்த செங்குந்தஞ் சிறக்க மாதோ!

(பொ.ரை)

கண்ணால் காணுதற்கரிய கைலைமலை, கந்தமாதனம் முதலிய பெருமைபெற்ற மலைகள் வாழ்க. போற்றப்படுகின்ற (விபூதி, உருத்திராக்கம், திருவைந்தெழுத்து முதலிய) சிவ சின்னங்கள் எங்கும் பெருகி வளர்க. குற்றமற்ற புகழ்படைத்த 'ஒன்பதின்மர்' எனப்படும் நவவீரர் தோன்றிய செங்குந்த குலம் தழைத்து ஓங்குக. தேவர்கள் பழையபடியே விண்ணுலகத்தை ஆளுவதற்குத் துணை புரிந்த செங்குந்தப்படை எங்கும் சிறந்தோங்குவதாக.

(அ.ள்)

கனவரை - பெருமையுடைய மலை. பேணுறு - போற்றப் படுகின்ற. பிழைஇல் - குற்றமற்ற. 102



[பின்பு கிடைத்த பிரதிகளில் உள்ள மிகைப்பாடல்கள்]

295 பார்பெற்ற உத்தமி காமாட்சி யம்மை பரிபுரத்தில்
பேர்பெற்ற கீர்த்தி யுடன்பிறந் தோர்,கற்ற பேர்துதிக்க
நேர்பெற்ற நாடக மெல்லாம் நடிக்கும் நிபுணர்,பல
சீர்பெற்ற வா(று)இயல் வல்லானை வென்றவர் செங்குந்தரே.

(பொ.ரை)

உலகத்தை ஈன்றெடுத்த தாயாகிய காமாட்சியம்மையாரின் சிலம்பிலிருந்து பெரிய புகழுடன் தோன்றியவர்களும், கல்வியில் வல்லவர்கள் புகழும்படி சீரான நாடகங்கள் அனைத்தையும் நடித்துக்காட்டுவதில் வல்லவர்களும், பல சிறப்புக்களைப் பெற்ற வல்லான் என்னும் அரக்கனை வென்றவர்களும் இச் செங்குந்தர்களேயாவர்.

(அ.ள்)

பரிபுரம்-காற்சிலம்பு. நேர்-நேர்மை. நிபுணர்-வல்லவர். 103

296 விரகாக வே, தம்கை வேலைவிட் டேபல வெற்றிகொண்டோர்
பரகாரி யங்களிற் பாவாடஞ் செய்யப் பயன்கருதார்
நரகாதி பாநின்முன் நாம்வரு வேம்,சமர் நாளைக்கென்று
திரமாக வேநமற் கோலைவிட் டோர்களும் செங்குந்தரே

(பொ.ரை)

ஒத்த தந்திரப்படி தம் கைவேலைச் செலுத்திப் பல செயல்களில் வெற்றிகொண்டவர்களும், மற்றவர்களுக்காகச் செய்யும் உதவிச் செயல்களில் எந்தப் பிரதிபலனையும் எதிர்பார்க்காதவர்களும், முன்னொரு காலத்தில், 'இயம தருமனே! நாளைக்கு நாங்கள் உனக்கு முன்னே சண்டையிட வருகின்றோம்' என்று இயமனுக்கு ஓலைவிட்ட உறுதி உடையவர்களும் இச் செங்குந்தர்களேயாவர்.

(அ.ள்)

விரகு - தந்திரம்; கைவேல்— குந்தம் பரகாரியம் - பிறருக்காகச் செய்யும் செயல்; நரகாதிபன்- இயமன். நமன் என்பதும்

அவனுக்குரியபெயர். (இறந்தவர்களின் பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப உயிர்களை நரக சொர்க்க லோகங்களில் சேர்ப்பவன் என்பதால் அவன் நரகாதிபன் எனப்பட்டான்.)

'பாவாடம்' என்பது ஒரு புதிய சொல்லாய் உள்ளது. 104

297 மருவுக்கு நல்ல கடம்பணி மார்பர்நல் வாகையுள்ளோர்,
தருவுக்கு நல்ல கொடையுடை யோர்,இந்தத் தாரணியில்
வெருவுக்கு நல்ல கொடுஞ்சூர பன்மனை வெல்லுகின்ற
செருவுக்கு நல்லவர், தேவ சிகாமணிச் செங்குந்தரே.

(பொ.ரை)

நறுமணத்தை விரும்பிக் கடப்ப மாலையை அணிந்த மார்பினை உடையவர்களும், வெற்றி உடையவர்களும், கற்பகத்தருவுக்கு மேலாக நல்ல கொடை வழங்குபவர்களும், இவ்வுலகில் கொடுமை மிக்க சூரபன்மனை வெல்லும் போருக்குத் தகுதி உடையவர்களுமாகி தேவர்களின் முடிமணியாக உள்ளவர் செங்குந்தர்களேயாவர்.

(அ. ள்)

மரு — வாசனை; வாகை — வெற்றி; தரு — [கற்பக] மரம் 'தருவுக்கு' என்னும் நான்கன் உருபு ஐந்தன் உருபின் பொருள் பட வந்தது. வெருவுதல் — அஞ்சுதல்; செரு — போர்; சிகாமணி — சிகைமணி — முடியில் அணியும் ரத்தினம். 105

298 மருக்கும் குமப்புய மாயேந்த்ர சூரன் மனவலியின்
பெருக்குங் கெடவிட்ட பேர்கள்கண் டீர்,எழிற் பேதையர்நெஞ்
சுருக்குங் கலவிக் குகந்தசிங் காரர், உதாரகுணச்
செருக்கும் பெருமையு மெந்நாளும் உள்ளவர் செங்குந்தரே.

(பொ. ரை)

மணம்பொருந்திய குங்குமம் அணிந்த தோள்களையுடையவனாகிய, மகேந்திரபுரியில் அரசாண்ட சூரபதுமனுடைய மனவலிமை கெடுமாறு செய்தவர்களும், அழகமைந்த இளம்பெண்களின் மனத்தை உருக்கும் சேர்க்கைக்குத் தகுந்த அழகுடையவர்களும், பிறருக்கு உபகாரம் செய்யும் உயர்வும் பெருமையும்



எந்நாளும் குறையாமல், உள்ளவர்களும் செங்குந்தர்களே யாவர்.

(அ. ள்)

பெருக்கு — மிகுதி; கண்டீர் — முன்னிலை அசை: பேதையர் — இளம்பெண்கள்; உதாரகுணம் — கொடைப் பண்பு. 106

299 ஆலசெங் குந்தர்; அமுதசெங் குந்தர்;தம் அண்டலர்க்குக்
காலசெங் குந்தர்; கடம்பணி செங்குந்தர்; கௌரிதரு
பாலசெங் குந்தர்; பழிதீர்க்கும் செங்குந்தர்; பற்றுதவ
சீலசெங் குந்தர்; சிவானந்த ராகுமிச் செங்குந்தரே.

(பொ. ரை)

சிவபெருமானுக்குத் தொண்டு செய்து அதனால் இன்பம் அடைகின்ற இச் செங்குந்தர்கள் சிலவேளைகளில் விஷம் போலவும் சிலவேளைகளில் அமுதம் போலவும் இருப்பார்கள்; தம் பகைவர்களுக்கு இயமனைப் போன்றிருப்பார்கள்; கடப்ப மாலை அணிந்தவர்கள்; உமாதேவி ஈன்ற பிள்ளைகளானவர்கள்; (தமக்கு ஏற்பட்ட பழியேயன்றிப்) பிறர்க்கு உண்டாகும் பழியையும் நீக்குபவர்கள்; தவ ஒழுக்கத்தைப் பற்றி நடப்பவர்களுமாவர்.

(அ. ள்)

ஆலம் X அமுதம்; ஆலம்— நஞ்சு; அண்டுதல்—நெருங்குதல்; அண்டலர் — நெருங்காதவர்; பகைவர்; காலர் — எமனைப் போன்றவர்; சீலம் — ஆசாரம். 107

300 அல்வைத்த பூங்குழ லார்க்கு(இ)த மேசெயும் ஆணழகர்,
கல்வைத்த சிந்தைக் கயவரை என்றுங் கருத்திலெண்ணார்,
வெல்வைத்த கைத்தலர், வீராதிவீரர், விளங்கிநிற்கும்
செல்வத்தை நாளு முடையார்கள் யாரெனிற் செங்குந்தரே.

(பொ. ரை)

கரியநிறமுடைய, அழகிய மலர்களை அணிந்த, கூந்தலையுடைய பெண்களுக்கு இன்பம் தருகின்ற ஆணழகர்களும்,

கல்லைப்போன்ற (இரக்கமற்ற) குணமுடைய கீழ் மக்களை என்றும் நினைத்துப் பாராதவர்களும், வெற்றியைக் கையில் கொண்டவர்களும், வீராதி வீரர்களும், திகழ்கின்ற பொருட் செல்வத்தில் எந்த நாளும் குறைவில்லாதவர்களும் யார் என்று கேட்டால், இச் செங்குந்தர்களேயாவர்.

(அ. ள்)

அல்—இருட்டு, கருமை; இதம்– இன்பம், நன்மை; 108

301 **துறப்புடை யாருக்குத்தொண்டுடையார், சுகம் தோய்வுடையார்,**
**மறப்புடை யாருக்கு மாமதி கூறும் வளமுடையார்;**
**அறப்புடை யார்கட் பருகுடையார்; எங்கும் ஆண்மைகொளும்**
**சிறப்புடை யார்செல்வ மெல்லா முடையவர் செங்குந்தரே.**

(பொ ரை)

செங்குந்தர்கள் முற்றும் துறந்த முனிவர்களுக்குத் தொண்டு செய்பவர்கள்; (எந்நாளும்) சுகத்தில் மூழ்கியிருப்பவர்கள்; மறதி உடையவர்களுக்கு அறிவுரை கூறும் கல்வி வளம் உடையவர்கள், அறவழி நிற்பவர்களுடன் அருகிருந்து பழகுகின்றவர்கள், ஆண்மை மிகுந்த சிறப்புடையவர்கள், எல்லாச் செல்வ வளங்களும் உடையவர்கள்.

(அ ள்)

துறப்பு — துறவு; தோய்வு — பொருந்துதல், மூழ்குதல்; மறப்பு — மறதி; புடை — பக்கம்; அறப்புடை — அறத்தின் பக்கம், அறவழி.

துறப்பு, மறப்பு என்பன தொழிற் பெயர்கள். 109

302 **'தாதா'என் றேற்பவர்க் கில்லையென் னாது தமக்குளதில்**
**ஏதாகிலும்பகிர்ந் தீவர்பன் னாள்சுமந் தீன்றளித்த**
**மாதாவி னும்தயை வாய்ந்தவ ராய்அமர் வாய்களத்தும்**
**சேதா வெனநல் லிரக்கமுள் ளார்கள்இச் செங்குந்தரே.**



(பொ. ரை)

இச் செங்குந்தர்கள் 'கொடை வள்ளலே! எங்களுக்கு ஏதாகிலும் கொடுங்கள்' என்று பிச்சையேற்பவர்க்கு 'இல்லை' என்று கூறாமல், தமக்காக வைக்கப் பட்டவற்றுள் ஏதேனும் பங்கிட்டுக் கொடுப்பார்கள்; பன்னாள் வருந்திச் சுமந்துபெற்ற தாயைக்காட்டிலும் மிகக் கருணை உடையவர்கள், போர்க்களமாயினும் அங்கும் தாய்ப்பசு தன் கன்றினிடத்து இரக்கம் காட்டி உதவுவது போன்ற இரக்கத்தைப் பகைவரிடத்தும் உடையவர்கள்.

(அ. ள்)

'தாதா'—வள்ளல். இதை இரப்பவர் கூறும் அடுக்குத் தொடராகவும் கொள்ளலாம். பகிர்ந்து—பிரித்து; அமர்வாய் களத்தும்—சண்டை நேரும் போர்க் களத்திலும்; சேதா = செம்மை + ஆ; சிவந்த பசு—பண்புத்தொகை; 'ஈ, தா, கொடு எனும் மூன்றும் முறையே இழிந்தோன், ஒப்போன், மிக்கோன் இரப்புரை' என்பது நன்னூல்: சேதா — பசு; காரா-எருமை.

303 **ஆருடை யார்க்கென்றும் அன்புடை யார்;அணி யார்கடப்பம்**
**தாருடை யார்,தம் தயவுடை யார்;எணில் தைத்தியர்தம்**
**போருடை யார்,வெற்றிப் பூணுடை யார்;எங்கும்போற்றும்அறச்**
**சீருடை யாரெனுஞ் செப்புடை யார்இந்தச் செங்குந்தரே.**

(பொ. ரை)

இச் செங்குந்தர்கள் ஆத்திமாலை அணிந்த சிவபெருமானிடத்து என்றும் அன்பு கொண்டவர்கள்; அழகுநிறைந்த கடப்ப மாலை அணிந்த முருகப்பெருமானுடைய அன்பைப் பெற்றவர்கள்; அளவற்ற அவுணர்களுடன்போர் செய்தவர்கள்; வெற்றியை ஆபரணமாக உடையவர்கள்; எவ்விடத்திலும் புகழப்படுகின்ற தருமவழியினர் என்ற வார்த்தையுடையவர்கள்.

(அ. ள்)

ஆர் — ஆத்தி; தார் — மாலை; எணில் — எண்ணில் இடைக்குறை; தைத்தியர் — அவுணர்; பூண்—ஆபரணம்.

**304 மாவைக்கைக் கொள்வர்; வரிசைகைக் கொள்வர்; வளரும்அணிக்**
**கோவைக்கைக் கொள்வர்; கொடையைக்கைக் கொள்வர்; பொற்கோயிலின் மெய்க்**
**காவல்கைக் கொள்வர்; கருணைகைக் கொள்வர்; கடம்பணியும்**
**தேவைக்கைக் கொள்வர்; சிவநாமம் கைக்கொள்வர் செங்குந்தரே.**

*(பொ. ரை)*

யானை, குதிரை முதலிய விலங்குகளை ஊர்தியாகக் கொள்பவர்களும், சிறப்பைக் கொள்பவர்களும், அணிகள் நிறைந்த கோவை நூல்களைப் பெற்றுடையவர்களும், கொடைத் தன்மையைக் கைக்கொள்பவர்களும், அழகிய தேவாலயங்களின் மெய்க்காவல் பணியை மேற்கொள்பவர்களும், இரக்கம் உடையவர்களும், கடப்ப மாலையணிந்த முருகப் பெருமானைத் துணையாகக் கொள்பவர்களும், எந்தக் காலத்திலும் சிவநாமத்தைச் சொல்பவர்களும் இந்தச் செங்குந்தர்களேயாவார்கள்.

(அ. வி)

மா — விலங்கு; மணிக்கோவை — மணிமாலை (கோவை முதலிய நூல்); 'கோவை' என்பதன் பின் ககர ஒற்று எதுகை நோக்கி வந்தது. கடம்பணியும் தே — முருகன். இச் செய்யுள் 'கைக்கோளர்' என்னும் பெயரின் சிறப்பை விளக்கியது.

கலித்துறை மாலை

மூலமும் உரையும் முற்றிற்று.

வேலும் மயிலும் துணை.

சிவமயம்

முருகக்கடவுள் துணை

ஸ்ரீ சத்தியசந்தர் இயற்றிய

# தசாங்கம்

## மூலமும் உரையும்

தச + அங்கம்: தசாங்கம். அங்கம் என்பது உறுப்பு. ஒரு நாட்டை ஆளும் அரசனுக்கு, அவனுடைய நாடு, நகர், மலை, ஆறு, மாலை, குதிரை, யானை, முரசு, கொடி, செங்கோல் ஆகிய பத்தும் உறுப்புக்களாக அமைந்து பெருமையும், அழகும் சேர்ப்பன. இவற்றை 'நாட்டிற்கு அணி' என்று ஆன்றோர் கூறுவர். இவையே 'தசாங்கம்' எனப்படும்,

செங்குந்தர்கள் முருகப்பெருமானுடைய துணைவர்களாகத் தோன்றித் தேவலோகத்தில் வாழ்ந்தவர்கள். பிறகு சோழ வம்சத்து அரசனாகிய முசுகுந்தச் சக்கரவர்த்தியின் வழியில் வந்து அரசர்களாகவும், அரசர்களுக்கு இணையானவர்களாகவும் விளங்கியவர்கள். ஆகையால் அவர்களுக்குத் 'தசாங்கம்' கூறப்பட்டது.

தேவலோகத்தில் தேவர்களாக வாழ்ந்தமை கருதி ஒரு தசாங்கமும், மண்ணுலகில் சோழர் மரபில் தோன்றி வாழ்ந்தமைகருதி ஒரு தசாங்கமும் ஆக இருவகைத் தசாங்கம் இங்குக் கூறப்படுகின்றன. எனவே தசாங்கத்தில் வரும் மலை, ஆறு முதலியன இதில் இரண்டிரண்டாகக் கூறப் பெறுதலைக் காணலாம். இது 'திருக்கை வழக்கம்' 64 ஆம் கண்ணியில்

— 'வானை
வசாங்கம் என ஆக்கி மனுகுலத்தும் ஓங்கித்
தசாங்கம் இருவகையும் சார்கை'

என்று கூறப்பட்டிருப்பதனாலும், வேறு நூல்களிலும் இச் செய்தி கூறப்பட்டிருப்பதனாலும் அறியலாம்.

இத்தலைப்பில் அமைந்துள்ள பாடல்கள் யாவும் நேரிசை வெண்பாவினால் இயன்றவை. இவை அனைத்தும் குயில்,

கிளி, அன்னம் போன்ற பறவையினங்களை முன்னிலைப் படுத்தி வினவ, அவை விடையிறுப்பது போன்ற அமைப்பு உடையன.

காப்பு

வஞ்சித் துறை

305 **நிசாங்க ஈட்டியர்**
**தசாங்கம் உரைசெயக்**
**கசாங்கன் அடியிணை**
**வசாங்கம் ஆம்அரோ!**

(இதன் பொருள்)

ஈட்டியை (செங்குந்தத்தை)ததம் உண்மையான உறுப் பாகக் (ஆயுதமாகக்)கொண்டுள்ள செங்குந்தர் மீது 'தசாங்கம்' என்னும் நூலைப் பாடுவதற்கு, யானை முகத்தை உடைய விநாயகப் பெருமானின் திருவடியிணைகள் எனக்கு வசப்பட்ட தாகும். (வணங்குவேன்.)

(குறிப்புரை) நிச அங்கம், தச சங்கம், கச (கஜ) அங்கம், வச அங்கம் என்பன வடமொழிப் புணர்ச்சிவிதியை ஏற்றன. கச அங்கம் — யானை (முகம்) உறுப்பு. வச அங்கம் — வசப் பட்ட உறுப்பு; அரோ-அசை.

1. மலை

306 **பொன் அவிரும் பைங்குரல் பூவையே செங்குந்த**
**மன்னர் உறையும் மலைபகராய் — இன்ன(ல்) அற**
**வந்தவரை ஆதரித்தும் வாழ்வித்தும் ஓங்கிவளர்**
**கந்தவரை நேரிவரை காண்.**

(இ. ள்) பொன் போன்று ஒளிவீசும் நிறமும், பசுமையான குரலும் உடைய நாகணவாய்ப் பறவையே, செங்குந்த மன்னர்கள் மலை எது என்று கூறுவாயாக.

தம்மை அடைக்கலமாக வந்து சேர்ந்தவர்களுடைய துன்பம் நீங்குமாறு அவர்களை ஆதரித்தும், வாழவைத்தும், உயர்ந்து வளர்கின்ற கந்தவெற்பும் நேரிமலையுமே அவர்க ளுடைய மலையாகும்.

(கு. பு) பூவை என்பது மைனா என்பர் சிலர்; வரை — மலை; நேரிவரை — நேரி மலை; இது சோழர்களுக்கு உரிமை யுடையது.



2. ஆறு

307 **செம்பொன் சிறைஅனமே செல்வச்செங் குந்தமன்னர்**
**அம்பொன் கொழித்திடும்நல் ஆறியம்பாய் — எம்பரையைத்**
**தங்கையெனக் கொண்டுவிணைத் தாங்கிமணைப்போற்றுசிவ**
**கங்கையு(ம்)ஒண் காவிரியும் காண்.**

(இ. ள்) சிவந்த பொன்னிறமான சிறகுகளை உடைய அன்னப்பறவையே, செல்வ வளம் மிக்க செங்குந்த அரசர்களுக் குரிய, அழகிய பொன் கொழிக்கும் ஆறு எது என்று கூறு வாயாக!

எங்கள் பராசத்தியான உமாதேவியைத் தங்கையாகப் பாவித்து, ஆகாயததைக் காத்தும், மண்ணுலகை வாழ்வித்தும் வருகின்ற சிவகங்கை நதியும், காவிரியாறுமே அவர்களுக்கு உரிமை உடையவையாம்.

[கு. பு]. சிறை – சிறகு; 'பரா' என்னும் வடசொல் தமிழில் 'பரை' என வரும். விணை, மணை என்பன, விண்ணை மண்ணை என்பன வற்றின் இடைக்குறைகள்.

3. நாடு

308 **கீதமிசைக் கும்குயிலே கேடில்செங் குந்தமன்னர்**
**நாதமொடு வாழ்தரும்நன் நா(டு) உரையாய்—நீத(ம்) எனும்**
**பூண்ஆரும் பல்கலைதேர் புண்ணியரும் கொண்டாடும்**
**சேணாடும் சோணாடும் தேர்.**

(இ ள்) இனிய இசைபாடும் குயிலே, அழிவில்லாத செங் குந்தத் தலைவர்கள் புகழுடன் வாழ்கின்ற நன்மை பொருந் திய நாடு எது என்று கூறுவாயாக!

நீதி என்கின்ற ஆபரணங்களைக் கொண்ட, பலகலைகளை யும் ஆராய்கின்ற தருமவான்கள் கொண்டாடுகின்ற தேவலோ கமும், சோழநாடுமே அவர்களுடைய நாடு என்பதைத் தேர்ந் தறிவாயாக!

[கு. பு கேடு + இல் — கேடில் — அழிவற்ற; நாதம்—ஒ லி புகழ்; நீதம் — நீதி; சேணாடு — மேலுலகம்.

4. நகர்

309 ஆடும் தொழில்மயிலே அங்கையில்செங் குந்தமன்னர்
நாடும் புனித நகர்கூறாய் — பாடுபுரி
மந்தன் செருக்ககற்றி மாட்சியொடு காட்சிதரும்
கந்த(ன்)அப யன்பதிகள் காண்.

(இ. ள்) நாட்டியமாடுவதைத் தொழிலாகக் கொண்ட (அழகிய) மயிலே! அழகான கையில் செங்குந்தப்படையை ஏந்திய தலைவர்கள் தேடுகின்ற புண்ணிய நகரம் எது என்று கூறுவாயாக!

துன்பத்தைச் செய்கின்ற இயமனுடைய செருக்கினை அடக்கிப் பெருமையுடன் முருகப்பெருமான் காட்சிதரும் கந்த புரியும் சோழனுடைய தலைநகரங்களும் ஆகும்.

(கு. பு)படு என்பது பாடு என நீண்டது, முதனிலை திரிந்த தொழிற்பெயர்; பாடு — துன்பம்; புரி — செய்யும். மந்தன் — இயமன். (நவவீரர் உயிர்கவர்ந்து சென்ற யமனுக்கு ஓலை அனுப்பி அவர்தம் உயிரை மீட்ட செய்தியும் இந்திராணி வீரவாகு தேவர் மகளுக்கு அளித்த கிளிப்பிள்ளையை யமதூதர் கவர்ந்து சென்றமைஅறிந்து,இயமனுடன் போரிட்டு, அக் கிளிப் பிள்ளையை மீட்ட செய்தியும் இங்கே குறிக்கப்படுகிறது.) மாட்சி — பெருமை; அபயன் — சோழன்; சோழமன்னர்கள் முடிசூட்டிக்கொள்ளும் பதிகள் பழையாறை, கரூர், உறையூர், காவிரிப்பூம்படினம், தஞ்சை என்னும் ஐந்து ஆதலின் அபயன் பதிகள் எனப் பன்மையால் கூறப்பட்டது.

5. மாலை

310 போ(து)ஏறித் தேன்நுகரும் புள்ளே,செங் குந்தமன்னர்
தா(து)ஏறித் தேன்பிலிற்றும் தார்மிழற்றாய் — ஏதும்
இரத்தல்செயா தியார்க்கும் இருமைநலம் நல்கும்
அரத்தமும்நல் ஆத்தியுமே யாம்.

(இ. ள்) மலர்மீது அமர்ந்து தேனை உண்ணும் (சிறிய) பறவையே! (வண்டே) செங்குந்த அரசர்கள் அணிந்து



கொள்ளுகின்ற மகரந்தம் நிறைந்து தேன் சொரிகின்ற மாலை எது என்று கூறுவாயாக!

எந்த ஒரு பொருளையும் யாரிடமும் சென்று யாசித்துப் பெறாமல், எல்லாருக்கும் தாம் பொருள் கொடுத்து இம்மை மறுமை ஆகிய இரண்டினுக்கும் நன்மை தருகின்ற செங்குந்தர்களுக்கு வெட்சி மாலையும், ஆத்திமாலையுமே மாலைஆகும்.

(கு. பு) போது — பேரரும்பு, தாது — மகரந்தம்; தார் — மாலை; மிழற்றாய் — கூறுவாயாக; இருமை — இம்மை, மறுமை; அரத்தம் — வெட்சி. ஆத்தி — ஆத்திமலர்.

6. குதிரை

311 தாலக் கிழங்கின் தழைவாய்க் குருகே! செங்
கோலக்கை வேலர்ஊர் கொக்(கு) இசையாய் — ஞாலமிசை
மைச்சிரவர்க்(கு) எட்டாத வானவர்கோன் ஊர்தரும்உச்
சைச்சிரவம் கோரமெனச் சாற்று.

[இ. ள்] பிளந்த பனங்கிழங்கினைப்போன்ற வாயினை உடைய நாரையே, சிவந்த அழகிய கையில் செங்குந்தப் படையைக் கொண்டவர்கள் ஊர்ந்து செல்லுகின்ற குதிரை எது என்று கூறுவாயாக.

உலகில் கறுத்த முகத்தை உடைய அசுரர்களுக்கு நெருங்க முடியாதவனாகிய தேவேந்திரன் ஏறிநடாத்தும் உச்சைச்சிரவம் என்னும் வெள்ளைக் குதிரையும், சோழ மன்னர்களுடைய 'கோரம்' எனப்படும் குதிரையுமே ஆகும்.

(கு. பு) தாலம் — பனை; குருகு-நாரை; கோலம் — அழகு; கைவேலர் — கையில் குந்தப்படை உடையவர்; ஊர் — ஊர்ந்து செல்லும்; கொக்கு — குதிரை; சிரவர் — [சிரம் — தலை] தலையை யுடையவர். தலை, ஆகு பெயராய் முகத்தைக் குறித்தது.

7. யானை

312 அன்பில் பிரிவுஅரிய அன்றிலே, செங்குந்தர்
இன்புற்று(று) இவரும் இபம்ஓதாய்—வன்புற்(று)எண்
காவதப்போ ரேனும் கடிப்பொழுதில் தேய்க்குறும்ஐ
ராவதம்ஆ றார்சரமும் ஆம்.

(இ. ள்) அன்பில் தலைப்பட்டுச் சேர்ந்து வாழ்தலன்றித் துணையைப் பிரிதற்கு அருமையான அன்றில் பறவையே, செங்குந்தர்கள் மகிழ்ச்சியுடன் ஏறிச்செல்லுகின்ற யானை எது என்று சொல்லுவாயாக!

எட்டுக்காவத தூரத்தில் உள்ள போராக இருப்பினும் கோபம் கொண்டு சென்று ஒரு நாழிகைப் பொழுதில் அப்போரில் ஈடுபட்டவர்களைத் தேய்த்து அழிக்கின்ற தேவலோகத்து ஐராவதம் என்னும் வெள்ளையானையும், சோழனுடைய ஆறார்சரம் என்னும் பட்டத்து யானையுமே ஆகும். (சோழனுடைய யானை 'ஆறார்சரம்' என்பதற்கு ஆதாரம் எது என விளங்கவில்லை )

(கு. ரை) இவரும் — ஏறிச்செல்லும்; இபம் — யானை; ('இபமாமுகன் தனக்கு இளையோனே' என்பது திருப்புகழ்.) வன்பு — பகை; காவதம் — பத்துமைல் தூரம்; இது 'காதம்' என்றும் வழங்கும். கடி — கடிகை; நாழிகை.

8. முரசு.

313 கேதம் சிறிதுமிலாக் கேகயமே, செங்குந்த
காதர் முரசு நனிவிளம்பாய் — ஓதமெலாம்
சீதமொடு கூடித் திகழுங்கால் ஓங்கொலிகொள்
வேதமொடு வென்றியும்ஆம் விள்.

(இ. ள்) குற்றம் என்பது சிறிதும் இல்லாத மயிலே, செங்குந்தத் தலைவர்களுக்குரிய முரசு எது என்பதை நன்கு எடுத்து இயம்புவாயாக.

கடல்கள் எல்லாம் குளிர்ந்து விளங்கும் போதும் (ஊழிக் காலத்திலும்) ஓங்கி ஒலிக்கின்ற வேதமுரசும் வெற்றி முரசுமே அவர்களது முரசுகளாம்.

(கு. ரை) கேதம் — குற்றம்; கேகயம் — மயில்; ஓதம்-கடல்; சீதம் — குளிர்ச்சி; விள்; சொல்.



9. கொடி

314 நங்கையர்வேய்த் தோள்பழகு நாகணவா யே குந்த
அங்கையர்தம் கேதனம்நீ ஆய்ந்(து)அறையாய்—துங்கமிகு
காவலொடு வைகித்தம் காவலர்மெய் காக்கும்எழில்
சேவலொடு வேங்கையுமாம் தேர்.

(இ. ள்) இளம்பெண்களின் மூங்கில் போன்ற தோள்களில் பழகி வாழும் நாகணவாய்ப் பறவையே, குந்தப்படையை அழகிய கைகளில் கொண்டுள்ளவர்களின் கொடி எதுவென நீ ஆராய்ந்து கூறுவாயாக!

உயர்ந்த காவலுடன் பொருந்தியிருந்து, தம் அரசர்களது உடம்பைக் காப்பாற்றுகின்ற, அழகுமிகுந்த சேவற்கொடியும் புலிக்கொடியுமே அவர்களது கொடி ஆகும்.

(கு. ரை) வேய் — மூங்கில்; வேய்த்தோள் — மூங்கிலைப் போன்ற தோள்; கேதனம் — கொடி; துங்கம் — உயர்ச்சி; காவலர் — அரசர்கள் மெய்காக்கும் — உடம்பைக் காப்பாற்றும். செங்குந்தர் மெய்காக்கும் செயல் அவர்களது கொடிக்குக் கூறப்பட்டது.

10. செங்கோல்

315 தீதில்அருங் கற்பில் திகழ்புறவே செங்குந்தர்
நீதிதரு செங்கோல் நிலைபுகலாய்—கோதில்பல
வானவரை மானவரை வாழ்விப்பான் எங்கு(ம்)ஒன்றே
ஆனதனிச் செங்கோல் அறி.

(இ. ள்) குற்றம் நீங்கிய அரிய கற்புத் தன்மையில் விளங்குகின்ற புறாவே, செங்குந்தர்கள் ஆட்சியில் நீதியைச் செய்து ஆளுகின்ற செங்கோலின் தன்மையைக் கூறுவாயாக.

மனமாசு அகன்ற அளவற்ற தேவர்களையும், மனிதர்களையும் வாழ்விப்பதற்காக எல்லா இடங்களிலும் ஒரே தன்மையுடன் அரசாட்சி நடத்தும் ஒப்பற்ற செங்கோல் அது என்று அறிவாயாக.

(கு. ரை) திகழ் — விளங்குகின்ற: புறவு— புறா.

'குறியதன் கீழ்'ஆ' குறுகலும் அதனோடு
உகரம் ஏற்றலும் இயல்புமாம் தூக்கின்'—

என்ற நன்னூல் விதிப்படி, புறா என்பது புற எனக் குறுகி உகரம் ஏற்றுப் 'புறவு' எனச் செய்யுளில் வந்தது. (தூக்கு — — செய்யுள்.) இதுபோலவே நிலா — நிலவு, பலா — பலவு, உலா— உலவு என வருவன காண்க. கோது — குற்றம்; வானவர் — தேவர்; மானவர் — மனிதர். தனி — ஒப்பற்ற. 'கோதில்பல'— என்னும் சீரினை லகர ஒற்று நீக்கி அலகிடுக.

தசாங்கம்

மூலமும் உரையும் முற்றிற்று.
வேலும் மயிலும் துணை.

திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ மயிலைநாதர் இயற்றிய ஊசல் முதலியவை

# 1. ஊசல்

காப்பு

கூத்தாடும் பிள்ளையார்

எண்சீர்க் கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

316 நீருலவும் சடைப்பரமன் உபய பாதம்
நெஞ்சில்மற வாத்துதிசெய் நேயர் ஆன
பேருலவும் செங்குந்தர் தங்கள் மீது
பிரபலமுடன் ஊசற்பாட்(டு) உரைக்க வேண்டிக்
காருலவும் மணிமதில்சூழ் மயிலை வாசன்
கபாலீசர் அருள்கயமா முகத்து நாதன்
சீருலவக் கூத்தாடும் விநாய கன்தாள்
சிந்தைதனில் குடியிருத்திச் செப்புவோமே.

எடுத்துக் கொண்ட செயல் இனிது முடிவடைவதற்காகக் காப்புச் செய்யுள் இயற்றுவது மரபாகலின், முந்தையோர் வழிநின்று விநாயகக் கடவுளை வணங்குகின்றார் இந்நூலாசிரியர்

ஊசல் என்பது தெய்வங்களையும்/ மன்னர்களையும் ஊசலில் அமர வைத்து அவர்களது புகழையும் பெருமையையும், அவர்தம் செயல்களையும் கூறி அவ்வூசலை அசைத்து ஆடுமாறு செய்வது. பிள்ளைத் தமிழ் நூல்களில் வரும் ஊசற் பருவமும் இத்தன்மையதே.

பொழிப்புரை

கங்கை நீரைச் சடாமுடியில் தாங்கியுள்ள பரமேசுவரனுடைய இரண்டு திருவடிகளையும் எப்பொழுதும் மறவாமல் மனத்தில் எண்ணித் துதிக்கின்ற அன்பர்களும், புகழ் பெற்ற

வர்களும் ஆகிய செங்குந்தத் தலைவர்கள் மீது சிறப்பாக ஊசற்பாட்டு முதலியவைகளைப் பாடுவதற்கு, மேகங்கள் தங்குகின்ற அழகிய மதில்கள் சூழ்ந்த திருமயிலையில் வாழுகின்ற கபாலீசசரப் பெருமானின் திருவருளினால் தோன்றிய, யானைமுகம் உடையவரும், சிறப்புடன் நடனம் செய்பவரும் ஆகிய கூத்தாடும் பிள்ளையாரை மனத்தில் நிலைநிறுத்திப் புகழ்ந்து போற்றுவோமாக.

அருஞ் சொற்பொருள்:

உபயபாதம் — இரண்டுதிருவடி; நேயர் — அன்புடையவர்; மணிமதில் — அழகிமயதில்.

'மணிமதிற்கச்சி ஏகம்பர்' என்பது காஞ்சிப்புராணம்.

317 திருவிளங்கு நவவீரர் குலத்தில் வாழும்
செல்வர்,சொன்ன நாவிலங்கா இயல்பை உள்ளோர்,
மருவிளங்கும் செங்கடப்ப மாலை பூண்ட
மன்னவர்கள், சிவநீதி மறவா மைந்தர்,]
தருவிளங்கும் தேவர்புவி தழைக்க வாழ்வு
தருவோர்கள், ஊசலெனும் தமிழைப் பாடச்
செருவிளங்கும் ஆனைமுக விநாய கன்தாள்
சென்னியில்லவத்(து) அநுதினமும் சிந்தைசேர்ப்பாம்.

காப்புச் செய்யுளில் விநாயகக் கடவுளை வணங்கிய ஆசிரியர், கடவுள் வணக்கமாக அறநெறியும், அருள் நெறியும் பிறழாமல் மீண்டும் விநாயகரையே வணங்குகிறார்.

(பொ. ரை)

அழகு பொருந்திய நவவீரர்களை முன்னோர்களாகக் கொண்ட குலத்தில் தோன்றி வாழ்கின்ற செல்வர்களும், எந்தக்காலத்திலும் சொன்ன சொல்லில் இருந்து மாறாதவர்களும், மணம்வீசுகின்ற சிவந்த கடப்ப மாலையை அணிந்துள்ள அரசர்களும், சைவசமயத்தை மறவாமல் போற்றுபவர்களும், கற்பகத்தரு அமைந்த தேவர் நாடு செழிக்குமாறு தேவர்களுக்கு வாழ்வு தந்தவர்களும் ஆகிய செங்குதத் தலைவர்கள்மீது ஊசல் பாட்டுப் பாடுவதற்கு, போரில் விளக்கம் பெற்ற யானையின் முகமுடைய விநாயகப் பெருமானுடைய திருவடிகளைத் தலையில் சூடி நாள்தோறும் தியானிப்போமாக.



(அ. ள்)

மரு - வாசனை, மணம்; தேவர்புவி - தேவலோகம்; செரு - போர். 'செருவிளங்கும்' — என்பது யானைக்கு அடை.

நூல்

318 பொன்னுலவு வாசவன்மால் பிரமன் விண்ணோர்
போரசுரர் வாதை,வெள்ளிப் பொருப்பில் ஈசன்
தன்னுடனே உரைக்க,நுதல் விழியில் வீசும்
தழற்பொறியில் அறுமுகவன் தனைவா என்று
பன்னுமசு ரேசர்குழாம் நாச மாகப்
படைசிதறத் தேவர்கள் தம்பயங்கள் தீர,
மின்னுதனி வேல்கொடுத்து வெல்வாயென்ன
வென்றகுகன் பின்னவரே! ஆடி ' ஊசல். 1

நூலின் தொடக்கம் மங்கலச் சொல்லால் அமைய வேண்டும் என்னும் முன்னோர் மரபின்படி, 'பொன் என்னும் சொல்லால் நூலைத் தொடங்குகின்றார் ஆசிரியர்.

(பொ. ரை)

தேவலோகத்தில் வாழும் இந்திரன், திருமால், பிரமன், மற்றைய தேவர்கள் அனைவரும் போர்த் தொழிலை மேற்கொண்ட அசுரர்களால் உண்டான துன்பத்தை வெள்ளி மலையில் வாழும் சிவபெருமானிடத்து எடுத்துரைக்க, அப்பெருமான் தம் திருநெற்றிக் கண்ணிலிருந்து அறுமுகப் பெருமானை உதிக்குமாறு செய்து, 'அசுரேந்திரனாகிய சூரபதுமனும, அவனுடைய கூட்டத்தினரும் அழியவும், தேவர்களுடைய பயம் தீரவும் நீ இந்த ஒப்பற்ற ஒளிவீசும் வேலைக் கொண்டு போரிட்டு வெல்வாயாக' என்றுகொடுத்து விடைதர, அவ்வாறே சென்று போரிட்டு வென்ற முருகப் பெருமானுக்குப் பின்பிறந்தவர்களே! நீவிர் ஊசல் ஆடியருள்வீர்களாக.

[அ. ள்]

பொன் - பொன்னுலகம்; வாசவன் - இந்திரன்; வாதை - துன்பம்; மின்னும் - ஒளிவீசும். போரசுரர் வாதை - 'போரசுரரால் உண்டான வாதை' என மூன்றன் உருபும் பயனும் விரிக்க.

319 வச்ரமணி யால்கடைந்த கால்கள் நாட்டி,
வைடூரி யத்திலுயர் விட்டம் போட்டு,
பச்சைநிற மரகதத்தால் கொடுங்கை சேர்த்துப்,
பருநீல மணிப்பலகைத் தொட்டில் பூட்டி,
நிச்சயச்செம் பொன்னின்வடக் கயிறு தூக்கி,
நிலையாகச் சோடித்த ஊசல் மீதே,
கச்சிமா வடிக்கம்பர் பங்கில் வாழுங்
கௌரியுமை புத்திரரே! ஆடீர் ஊசல். 2

(இப்பாடல் ஊசலின் அழகிய அமைப்பைக் கூறுவது.)

[பொ. ரை]

அழகாகக் கடைந்த வயிரத் தூண்களை நட்டு, தூண்களை இணைக்கும் விட்டத்தை வயிடூரியத்தில் அமைத்து, பசிய மரகதக் கற்களால் முன்வளைவு (கொடுங்கை) அமைத்து, நீல மணியினால் இழைக்கப்பட்ட ஊசல் பலகையை அமைத்து, செம்பொன்னால் இயன்ற ஊசற் கயிற்றைத் தூங்க விட்டு நிலையாக அழகுறச் செய்யப் பட்ட ஊசலில், கச்சியம்பதியில் மாவடி நிழலில் வீற்றிருக்கும் திருவேகம்பர் இடப்பாகங் கொண்ட பசிய நிறமுடைய உமாதேவியின் குமாரர்களே! ஆடி அருள்வீர்களாக!

(அ. ள்)

கொடுங்கை - தூணின் மேல்பகுதியில் வளைவாக நீண்டு தொங்கும் உறுப்பு; சோடித்த - அலங்கரிக்கப்பட்ட. இஃது இக்காலத்து வழக்கச் சொல். (செங்குந்தர்களின் செல்வப் பெருக்கும் பெருமிதமும் தோன்ற ஊசல் அமைந்துள்ளது என்பது கருத்து.)

320 சந்திரகாந் தியின்ஒளிசேர் பட்டினாலுந்
தபனன்ஒளிப் பட்டாலும் அழகு சேர
அந்தமிகு சவரிகள்சல் லிகளுந் தூக்கி,
அலங்காரக் கண்ணாடி ஒளிகள் வீசச்,
சுந்தரமா கியசெம்பொற் குடங்கள் மின்ன,
தூய்மணிமா ணிக்கவிளக் கெங்கும் மன்ன
இந்த(அ)டைவாய் அலங்கரித்த ஊசல் மீதே
இயல்முருகன் துணைவர்களே! ஆடீர் ஊசல். 3



(பொ. ரை)

சந்திரனைப் போலவும், சூரியனைப் போலவும், ஒளிவீசுகின்ற பட்டாடைகள் அழகு செய்யவும், அழகிய சாமரங்களும்' தொங்கல்களும் அசையவும். அலங்காரமாக அமைக்கப் பட்டுள்ள கண்ணாடிகள் ஒளிவீசவும், அழகான பொற் குடங்கள் ஒளிசெய்யவும், தூய அழகமைந்த மாணிக்கத் தாலான விளக்குகள் பொருந்தியிருக்கவும் இவ்வாறான முறையில் அலங்கரிக்கப்பட்ட ஊசலில். முருகப் பெருமானுக் குத் துணையாக வந்தவர்களே! ஊசல் ஆடி அருள்வீர்களாக!

(அ. ள்)

சந்திரகாந்தி — சந்திரன் ஒளி; தபனன் - சூரியன்; சவரி சாமரம்; சல்லி - தொங்கல், குஞ்சம்; மன்ன- பொருந்தியிருக்க 'இந்த' என்பதன் ஈற்று அகரம் தொகுத்தல்.

321 தருசின்னத் தோல்துடிக்க, மேள மோதத்,
தவண்டையொலி கறங்க, மிகு வேணு நாதம்
வருசின்னம் எக்காளை ருத்ர வீணை
மகிழ்சுரமண் டலநாத ஒலிகள் ஆர்ப்ப,
ஒருவருக்கும் உலகிலிந்தப் பெருமை வாரா(து)
உரைக்கிலெனச் சகலவாத் தியம்முழங்க
குருபரன்தா ளிணைமலரைப் போற்றி நாளும்
குடிபெறுஞ்செங் குந்தர்களே! ஆடீர் ஊசல். 4

(பொ. ரை)

வெற்றிமுரசு ஒலிக்கவும், மேளம் கொட்டவும் பேருடுக்கை ஒலிக்கவும், புல்லாங்குழல், திருச்சின்னம், எக்காளம் இவை ஊதவும், ருத்திரவீணை முதலியவை இசைக் கவும், தேவலோகத்து இசைக்கருவிகள் ஒலிக்கவும், 'இந்த உலகில் வேறு எவருக்கும் இது போன்ற பெருமைகள் கிடைக்க மாட்டா' என்று கூறுவன போலச் சகலவிதமான இசைக் கருவிகளும் முழங்கவும், குருபரனாகிய முருகப் பெருமா னுடைய திருவடிகளை நாள்தோறும் வழிபட்டுக்குடிப்பெருமை யில் சிறக்கும் செங்குந்தர்களே! ஊசல் ஆடி அருள்வீர்களாக!

(அ. ன்)

சின்னத்தோல் — வெற்றி முரசு; தவண்டை - பேருடுக்கை; கறங்க - ஒலிக்க; சுரமண்டலம் - தேவலோகம்; ஆர்ப்ப —ஆரவாரிக்க.

**322 சந்தனம்குங் குமம்புனுகு களபம், பன்னீர்,**
**சவ்வாது கூட்டிவட்டில் தன்னில் மொண்டு**
**கந்தமிகு தோகையர்கள் நிறைந்து பூசக்**
**கனசுகந்தக் கார்க்குழலார் வசந்த மாட**
**இந்துநுதல் மடவார்கள் பூப்பந் தால்விட்**
**டெறிந்துகையால் மருக்கொழுந்தும் மலரும் வாரிச்**
**சிந்துமழை போல்பொழியக் களித்த வீரச்**
**செங்குந்த மன்னவரே! ஆடீர் ஊசல் 5**

(பொ. ரை)

சந்தனம், குங்குமம், புனுகுஇவை கலந்த கலவைச் சாந்து, பன்னீர், சவ்வாது இவற்றைக் கிண்ணத்தில் முகந்து சில பெண்கள் உடலில் பூசவும், உயர்ந்த மணம் வீசுகின்ற மேகம் போலும் கூந்தலை உடைய சில பெண்கள் தங்கள் மணம் எங்கும் வீசும்படி ஆடவும், சந்திரனைப் போன்ற அழகிய நெற்றியை உடைய சில பெண்கள் மென்மையான பூப்பந்தை எறிந்து மணம் வீசும் மருக்கொழுந்தையும். மலர்களையும்வாரி மழைபோல் சொரியவும் ஆன இச் செயல்களால் மகிழ்ச்சியுறும் வீரத்தில் சிறந்த. அரசர்களுக்கு ஒப்பான செங்குந்தர்களே! ஊசல் ஆடி அருள்வீர்களாக.

(அ. ன்)

களபம் - கலவைச்சாந்து; வட்டில் - கிண்ணம்; கந்தம் - வாசனை; தோகையர் - பெண்கள்; சுகந்தம்- நறுமணம்.

**323 பெண்கள் பொன்னின் ஆலத்தி செங்கை ஏந்திப்**
**பிரபலமுடன் சோபனமங் களமுங் கூறப்**
**பண்புடனே தியாகவசந் தங்கள் மீதிற்**
**பரவிஇளங் கன்னியர்கள் வடந்தொட்(டு) ஆட்ட**



**எண்சுருதி இராகமும் எண் திசையும் ஓங்க**
**எழில்தாள மிகுதிசைகள் எங்கும் ஆர்ப்பக்**
**கொன்றைமுடிச் சடைப்பரமன் தாள்வணங்கும்**
**கொற்றநவ வீரர்களே! ஆடீர் ஊசல் 6**

(பொ. ரை)

பொன் மயமான ஆலத்தித்தட்டைப் பருவப் பெண்கள் தம் அழகிய கைகளில் தாங்கிச் சோபனமும் மங்களமும் சொல்லி வாழ்த்துக்களைக் கூறவும், இளம்பெண்கள் செங்குந்த வீரர்களின் தியாகச் செயல்தனைக்கூறி ஊசற் கயிறுகளைப் பிடித்து அசைக்கவும். எண்ணப்படுகின்ற சுருதியோடு கூடிய இராகமும், தாளமும் எல்லாத் திசைகளிலும் ஒலிக்கவும், கொன்றை மலரைச் சடையில் தாங்கிய இறைவனுடைய திருவடிகளை மறவாமல் வணங்குகின்ற வெற்றியையுடைய நவ வீரர்களே! ஊசல் ஆடி அருள்வீர்களாக.

(அ ன்)

சோபனம், மங்களம் - இவை வாழ்த்து மொழிகள். வடம்- கயிறு; கொற்றம் - வெற்றி.

**324 மாதவரும் மறையோரும் ஆசி கூற**
**வண்டமிழோர் செந்தமிழால் மகிழ்ந்து வாழ்த்த**
**ஓதுபட் டுவர்ஒருபால் புகழ்ந்து போற்ற**
**உகந்துகட்டி யக்காரர் எச்ச ரிக்க**
**ஆதிபஞ்ச வாத்தியத்தின் தொனிகள் எங்கும்**
**அதிர்ந்துபெருங் கடலொலிபோல் முழங்கி ஆர்ப்பச்**
**சீதமதிச் சடைப்பரமன் சிறுவ ரான**
**செங்குந்த மன்னவரே! ஆடீர் ஊசல். 7**

(பொ.ரை)

பெருந்தவத்தைச் செய்கின்ற முனிவர்களும், வேதம் வல்லவர்களும் ஆசி கூறவும், தமிழில் வல்ல நாவலர் மகிழ்ந்து செம்மையான தமிழால் வாழ்த்திசைக்கவும், ஒருபுறம் புகழ் கூறுவோர் புகழ் பாடவும், கட்டியக்காரர் பெருமைகள் கூறி எச்சரிக்கை செய்யவும், பழமையான பஞ்சவாத்தியங்களின் ஒலி கடலொலி போல எங்கும் பரவி ஒலிக்கவும், குளிர்ந்த

*நிலவைச் சடையில் சூடிய பரமசிவனின் குமாரர்களான செங் குந்த மன்னவர்களே! ஊசல் ஆடி அருள்வீர்களாக!*

*(அ.ள்)*

*பட்டுவர்—புகழ்பாடுவோர்; கட்டியக்காரர் — பெருமை களை எடுத்துரைத்து அறிவிப்போர்; பஞ்சவாத்தியம்— தோல் கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக் கருவி என்னும் ஐவகை இசைக்கருவிகள்; (வாய்ப்பாட்டே மிடற்றுக் கருவி) தொனி—சத்தம். (த்வனி என்னும் வடசொல் திரிபு) சீதமதி — குளிர்நிலவு*

**325 பழுதில்மொழித் தமிழொட்டக் கூத்தன் முன்னாள்**
**பகர்வளவன் சமூகத்தில் பரிவாய் ஈட்டி**
**எழுபதுபாட் டுரைக்கமனம் ஒருமை யாக**
**இசைசிரச்சிங் காதனத்தை இட்டு நாளும்**
**வழுவில்தமி ழுரைகேட்டும் பெருமை கொண்ட**
**வண்மையுள்ள நவவீர மன்ன ரான**
**உழைமழுப்பா ணியரடியைத் துதித்தே ஞானம்**
**உயர்செங்குந் தாதிபரே! ஆடீர் ஊசல்.** *8*

*(பொ.ரை)*

*குற்றமற்ற தமிழ்மொழியில் கவிபாடுவதில் வல்ல புலவ ராகிய ஒட்டக்கூத்தர், முற்காலத்தில் சோழமன்னனுடைய அவையில் 'ஈட்டி எழுபது' என்னும் நூலை உரைப்பதற்காக, தாமே முன்வந்து தம் தலைகளை அரிந்து சிரச்சிங்காதனம் அமைத்துத்தந்து அதன்மீது அவர் அமர்ந்து நாள்தோறும்கூறிய குற்றமற்ற பாடலைக் கேட்டுப் பெருமைபெற்ற, வள்ளல் தன்மை கொண்ட மன்னவர்களாகவும், மானையும், மழுவை யும் திருக்கரங்களில் கொண்ட சிவபெருமானைத் துதித்து உயர்ந்த ஞானம் பெறுபவர்களாகவும் உள்ள செங்குந்த அதிபர்களே! ஊசல் ஆடி அருள்வீர்களாக.*

*(அ.ள்)*

*பகர்- கூறுகின்ற; பரிவு - அன்பு; இசை - இசைந்து, சம் மதித்து; உழை - மான்; மழு - மழுவாயுதம்; பாணி - கை; செங்குந்தாதிபர் - செங்குந்த + அதிபர் = செங்குந்தத் தலைவர்கள்.*



**326 அஞ்செழுத்து மந்திரத்தை உன்னா தாரை**
**அரியமுத்தி தரும்வெண்ணீ றணியா தாரைத்**
**தஞ்சமெனச் சிவனடியைப் பணிசெய் யாரைத்**
**தருக்குடனே சிவாலயத்தை வலம்வா ராரை**
**வஞ்சனைபொய் யுரைநெஞ்சின் மறவா தாரை**
**வளர்சடையோன் தாள்மனத்தில் வையாதாரை**
**வெஞ்சம்அறச் சிரந்துணித்து மகிழ்ந்து வாழும்**
**வீரசெங்குந் தாதிபரே! ஆடீர் ஊசல்.** *9*

*[பொ.ரை]*

*'சிவாயநம' என்னும் பஞ்சாட்சர மந்திரத்தை மனத்தில் எண்ணாதவர், கிடைத்தற்கரிய முத்திப் பேற்றைத் தருகின்ற திருநீற்றை அணியாதவர், சிவபெருமானின் திருவடிகளே நமக்குப் புகலிடம் என்று எண்ணி அவைகளைப் போற்றாதவர் தம் உள்ளச் செருக்கினால் சிவபெருமான் உறையும் கோயிலை வலம் வாராதவர், வஞ்சனை செய்வதையும் பொய் கூறுவதை யும் மனத்தில் மறவாமல் கொண்டிருப்பவர், சிவபெருமான் திருவடியை மனத்தில் எண்ணாதவர் ஆகிய இவர்களைக் கொடிய போரில் தலையைக் கொய்து மகிழ்ச்சியுடன் வாழு கின்ற வீரசெங்குந்தத் தலைவர்களே! ஊசல் ஆடி அருள் வீர்களாக!*

*[அ.ள்]*

*உன்னாதார் - நினைக்காதவர்; தஞ்சம் - அடைக்கலம்; பணி- பணிதல், முதனிலைத் தொழிற் பெயர்; தருக்கு -செருக்கு, கருவம்; வெஞ்சமம் - கொடிய போர். இஃது இடைக்குறைந்து வந்தது.*

**327 அரிவையர்கள் பரதநட னங்கள் ஆட**
**அணிகொள்புவி யோர்களெல்லாம் மகிழ்ந்து பார்க்கப்**
**பரிவுடனே கவரியிரு பாலும் வீசப்**
**பகைவரெலாம் வணங்கிநலம் பாரித்தார்ப்ப**
**வரிசைமலர்ச் செங்கடப்ப மாலை பூண்ட**
**வையமெலாம் மிகமணக்கும் வளமையுள்ள**
**குருகருணை தழைத்தவரே! உயர்ந்த கோழிக்**
**கொடிவிருது படைத்தவரே! ஆடீர் ஊசல்.** *10*

[பொ.ரை]

பெண்கள் பரதநாட்டியம் ஆடவும், அதனைப் புவியில் உள்ளவர்கள் மகிழ்ந்து காணவும், அன்புடனே இருபுறமும்கவரி வீசவும், பகைவர் வந்து வணங்கி நலம் பாராட்டவும் அழகான கடப்பமாலை அணிந்தவர்களும், உலகில் நிறைந்த வளம் உள்ளவர்களும் குருநாதரின் கருணையை நிரம்பப் பெற்றவர் களும் உயர்ந்த கோழிக்கொடியாகிய விருதைப் பெற்றவர்களும் ஆகிய செங்குந்தர்களே! ஊசல் ஆடி அருள்வீர்களாக!

[அ.ள்]

அரிவையர் -பெண்கள்; பரிவு - அன்பு; வையம் — பூமி, உலகம்; பாரித்தல் — பரப்புதல்; ஆர்ப்ப — ஒலி செய்ய.

**328 பட்டாடை அசைந்தாட, மார்பில் இட்ட**
**பதக்கம்பொன் சரப்பளிமுத் தாரம் ஆட,**
**இட்டரத்தி னக்கடுக்கன் காதில்ஆட,**
**எழில்வீசும் செங்கடப்ப மாலை ஆடச்,**
**சுட்டிகண்ட சாமணப்பூ மாலை ஆடத்,**
**தொடுத்தநிறை பூடணத்தின் நிழல்கள் ஆட**
**மட்டவிழ்மா மலர்நிறைந்த ஊசல் மீதே**
**வல்லாளை வென்றவரே! ஆடீர் ஊசல்.** 11

[பொ.ரை]

மேலே அணிந்துள்ள பட்டாடை அசைந்து ஆடவும், மார்பில் அணிந்துள்ள பதக்கம், சரப்பளி, முத்துமாலை முதலியன ஆடவும், காதில் உள்ள சிவந்த இரத்தினக் கடுக்கன் அசையவும், அழகிய செங்கடப்பமாலை ஆடவும், தலையில் சுட்டியோடு இணைந்த சாமணப்பூ ஆடவும், வரிசையாக அணிந்துள்ள ஆபரணங்களின் நிழல் அசையவும், மணம் நிறைந்த மலர்கள் பரப்பியுள்ள ஊசலில், வல்லான் என்னும் கொடியவனை வென்ற வீரம் உடையவர்களே! ஆடியருள் வீர்களாக!

[அ ள்]

சரப்பளி - மார்பில் அணியும் பொன் ஆபரணம்; சாமணப் பூ— தலையில் அணியும் ஆபரணம்; பூடணம் - பூஷணம் - ஆபரணம்; மட்டு - மணம், தேன்.



**329 வாசமலர் முடித்தளக பாரம் பூண்ட**
**வனிதையர்கள் திருத்தியநல் விரல்கள் தம்மில்**
**தேசுறுபொன் பவித்திரமும், அப்பொன் னாலே**
**திகழுநுதற் பட்டமும்சுட் டியும்முன் துன்னக்,**
**காசுமுத்து நவரத்னக் கடுக்கன் சோடு**
**காதிலணிந் தவ்வவற்றின் ஒளிகள் மின்ன**
**வாசவன்விண் ணோர்கள்சிறை மீட்டிந் த்ராணி**
**மங்கிலியந் தந்தவரே! ஆடீர் ஊசல்** 12

[பொ.ரை]

இந்திரன் முதலியதேவர்களின்சிறையைமீட்டு இந்திராணிக்கு மாங்கல்யம் நிலைக்கச்செய்த செங்குந்த வீரர்களே! மணம்மிக்க மலர்களை அணிந்த கூந்தலை உடைய பெண்களால், அழகு செய்யப்பட்ட விரல்களில் அணிந்துள்ள ஒளிவிடும் பொன் மோதிரங்களும், தலையில் அணிந்துள்ள நெற்றிப்பட்டம் சுட்டி ஆகியவைகளும் நெருங்கிஒளிவீசவும்,பிரகாசமான முத்து மாலை, காதில் அணிந்துள்ள இரு நவரத்தினக் கடுக்கன் ஆகியவை ஒளிவீசவும் ஊசல் ஆடி அருள்வீர்களாக!

[அ ள்]

அளகபாரம் - கூந்தல்; வனிதையர் - பெண்கள்; திருத்திய- அழகு செய்த; தேசு - ஒளி; துன்ன — நெருங்க; சோடு - சோடி, இணை, இக்கால வழக்கு.

**330 நாவிலங்கா மைந்தர்பட்ட மானங் காத்த**
**நவவீர நாயகரே! ஆடீர் ஊசல்;**
**பாவிசைக்கும் புலவோர்கள் மிடிகள் தீரப்**
**பரிசளிக்கும் பார்த்திபரே! ஆடீர் ஊசல்;**
**தாவுமயில் மீதேறுஞ் சுப்ர மண்யச்**
**சாமிதுணை யானவரே! ஆடீர் ஊசல்;**
**கூவிமுப்போ தினையும்நிதம் அழைக்கும் கோழிக்**
**கொடிவிருது படைத்தவரே! ஆடீர் ஊசல்.** 13

[பொ.ரை]

சொன்ன சொல் மாறாத பாண்டவர் தேவி திரௌபதிக்கு ஏற்பட்ட அவமானத்தைக் காத்த நவ வீரநாயகர்களே! ஊசல்

ஆடியருள்க! செய்யுள் இயற்றும் கவிஞர்களின் வறுமை தீருமாறு பரிசுகள் வழங்கும் தன்மை உடையவர்களே! ஊசல் ஆடியருள்க! நடனமாடுகின்ற மயிலை வாகனமாக உடைய சுப்பிரமணியனுக்குத் துணையாக நின்றவர்களே! ஊசல் ஆடியருள்க! காலை நண்பகல், மாலை என்னும் மூன்று வேளைகளையும் கூவி அழைக்கின்ற கோழியினைக் கொடியில் விருதாகப் பெற்றவர்களே! ஊசல் ஆடி அருள்க!

[அ ள்]

பட்ட மானம் — அழிந்த மானம்; மிடி — வறுமை; பார்த்திபர் — அரசர்; விருது — வெற்றிச் சின்னம்.

**331 காலன்முறி படஎழுதி ஒலை விட்ட**
**காளைநவ வீரர்களே! ஆடீர் ஊசல்;**
**சூல(ம்)மழு மான்கொள் அரன் மைந்தர் என்று**
**சொல்லுயர்ந்த நாயகரே! ஆடீர் ஊசல்;**
**சீலமுடன் அஞ்செழுத்தைத் துதித்தெந் நாளும்**
**சிவபூசை துரந்தரரே! ஆடீர் ஊசல்;**
**ஆலகண்ட னாம்பரன்அம் பிகையைப் போல**
**அவரவர்தம் மனைவியரோ(டு) ஆடீர் ஊசல்** 14

(பொ.ரை)

இயமனுடைய மனம் அஞ்சிநடுங்கி முறிவு அடையும்படி, அவனுக்கு ஓலையெழுதி அனுப்பிய வீரம்மிகுந்த நவவீரர்கயே! தம் திருக்கரங்களில் சூலம், மான், மழுவினைத் தரித்த சிவபெருமானின் திருக்குமாரர்கள் என்று புகழ்ந்து பேசப்படு கின்ற தலைவர்களே! நாள்தோறும் நல்ல ஒழுக்கத்துடன் ஐந்தெழுத்து மந்திரத்தைச் சொல்லி வணங்கிச் சிவபூசை செய்பவர்களே! நீவிர் ஆலகால விடத்தைத் தாங்கிய சிவபெருமானும் உமாதேவியும் போல உங்கள் துணை வியருடன் அமர்ந்து ஊசல் ஆடி அருளவீர்களாக!

குறிப்பு:

சூரபதுமனுடன் நிகழ்ந்த போரில் நவவீரர்களின் தம்பி யராகிய இலட்சம் வீரர்களின் உயிர்களை இயமன் கவர்ந்து செல்ல, வீரவாகுத்தேவர் அவனுக்கு ஓலையெழுதி அனுப்ப



அவன் நடுங்கி அறியாமல் செய்த பிழை என்று அவர்தம் உயிரை திருப்பிக் கொடுத்தான் என்ற கந்தபுராண வரலாறு இங்கே கூறப்பட்டது. திருக்கைவழக்கம் 39 ஆம் கண்ணியிலும் இது கூறப்பட்டுள்ளது.

[அ.ள்]

முறிபட — மனம் நடுங்குமாறு; மழு — சிவபெருமான் கரத்துள்ள ஆயுதம், கோடரி; துரந்தரர் தாங்குபவர், தரித் தவர்; ஆலம் — விடம்; பரன் — உயர்ந்தவன் [சிவபெருமான்].

**332 கயிலையொடு மேருவினைச் சூழ வேமெய்க்**
**காவல்கொண்ட காவலரே! ஆடீர் ஊசல்;**
**பயனறிந்தே அடைக்கலமென் றடைந்த பேரைப்**
**பரிவுடன்ஆ தரிப்பவரே! ஆடீர் ஊசல்;**
**தயவுதரும் பதவியில்எந் நாளும் வாழும்**
**சற்குணமுண் டானவரே! ஆடீர் ஊசல்;**
**அயனொடுநா மகள் அரியோ(டு) ஆக்கம் போல**
**அவரவர்கள் மனைவியரோ டாடீர் ஊசல்.** 15

(பொ.ரை)

கயிலைமலை மேருமலை முதலியவற்றைச் சூழ்ந்து நின்று மெய்க்காவல் பூண்டவர்களும், தம்மை அடைக்கலமாக வந்து அடைந்தவர்களை அன்புடன் ஆதரிப்பவர்களும், கருணை யுடன்கூடிய அதிகாரத்தில் என்றும் விளங்கி நற்குணம் கொண் டவர்களும் ஆகிய செங்குந்தர்களே! பிரமனும், சரஸ்வதியும் — திருமாலும் இலக்குமியும் இணைந்துள்ளமை போன்று நீவிர் உம் மனைவியரோடு அமர்ந்து ஊசல் ஆடியருள்வீராக!

[அ.ள்]

அயன் — பிரமன்; நாமகள் — சரசுவதி; அரி — திருமால்; ஆக்கம் — செல்வம்; இங்கு இலக்குமியைக் குறித்தது.

## 2. வாழ்த்து

**333 திருமாலும், திருவும்போல் வாழி! வாழி!**
**சித்தசனும், ரதியும்போல் வாழி! வாழி!**
**புருகுதனும், சசியும்போல் வாழி! வாழி!**
**பூவுலகில் அனைவோரும் வாழி! வாழி!**

**மருவுறுநற் செங்கடப்ப மாலை பூண்ட**
**மன்னரெ னும் செங்குந்தர் வாழி! வாழி!**
**அருமறையும், செங்கோலும் வாழி! வாழி!**
**அவரவர்கள் மனைவியுடன் வாழி! வாழி!**

*[பொ.ரை]*

மணம்பொருந்திய சிவந்த கடப்பமாலையணிந்த அரசர்களெனப்படும் செங்குந்தர்களே! நீவிர் திருமாலும் திருமகளும் போலவும், மன்மதனும் இரதிதேவியும் போலவும், இந்திரனும் இந்திராணியும் போலவும் உம் மனைவியருடன் வாழ்வீராக! உலகில் உள்ள எல்லோரும் வாழ்வார்களாக! வேதங்களும் அரசனுடையசெங்கோலும் என்றும் வாழ் வதாக! அனைவரும் அவரவர் மனைவியருடன் இன்புற்றுவாழ்வாராக!

*[அ.ள்]*

திரு — திருமகள், இலக்குமி; சித்தசன் — மன்மதன் [திருமாலின் மனத்திலிருந்து தோன்றியவன்] புருகூதன் — இந்திரன்; இது குறுக்கல் விகாரம் பெற்றது; சசி —இந்திராணி.

3. இலாலி

**334 இலாலிஅய னாலுலகம் நாட்டி, அதைப் புரக்க**
**நாரணனைக் கூட்டி,அர னால்வினைகள் வீட்டிச்**
**சீலமொடு நின்றருள்செய் சிற்பரைநின் பாதச்**
**சிலம்பில்வரு மைந்தர்குலஞ் சிறக்க அருள்வாயே! (லாலி)**
**இலாலிமயி டாசுரன்செ யும்நலிவை அகற்றி**
**நானிலத்தைக் காத்தநின்றன் நளினபதச் சிலம்பில்**
**கோலமொடும் வந்தநவ வீரரெனும் மன்னர்**
**குலம்விளங்க வேயருள்கூர் தல்செய்யும் அம்மா! [லாலி]**

குறிப்பு:

'இலாலி' என்பது தாலாட்டில் 'ஆராரோ' போல ஆரத்தி எடுத்தலில் சொல்லப்படுவது. 'ல' கரம் மொழிக்கு முதலாகாதாயினும் பேச்சு வழக்கு இச்செய்யுளில் ஆளப்பட்டுள்ளது.



*[பொ.ரை]*

உலகினைப் பிரமதேவனால் படைப்பித்து, திருமாலால் காப்பாற்றச் செய்தும், உருத்திரனைக் கொண்டு அழித்து அதனாலே உலக உயிர்களின் வினைகளையும் போக்கி உயர் நெறியில நின்று அருளைப் புரியும் சிற்சக்தியாகிய உமா தேவியே! உன்திருவடிச் சிலம்பில்தோன்றிய வீரவாகு முதலியோர் வழியில் வந்த செங்குந்தர்குலம் சிறந்து விளங்க அருள் புரிவாயாக! — லாலி.

மகிடாசுரன் உலக உயிர்களுக்குச் செய்த கொடுமைகளை நீக்கி, (அவனைக் கொன்று ) உலகத்தைக் காப்பாற்றியஉன்னுடைய அழகிய திருவடிச் சிலம் பிலிருந்து அழகாகத் தோன்றிய 'நவவீரர்' எனப்படும் வீரவாகுத்தேவர் வழிவந்தோர் குலம் சிறப்படையத் தாயே! நிறைந்த அருள் செய்வாயாக! — லாலி.

*[அ.ள்]*

நாட்டி — நிலை நிறுத்தி; புரக்க — காப்பாற்ற; வீட்டி — அழித்து. சீலம் — ஒழுக்கம், உயர் நெறி. சிற்பரை — அறிவு வடிவான மேலான இறைவி. நலிவு — துன்பம், கொடுமை. நளினம் — அழகு. கோலம் — அழகு. கூர்தல் — அதிகரித்தல்.

4. எச்சரிக்கை

**335 தேரூர்திருத் தணிகாசல தேவனுடன்வந்த**
**சீரூர்திரு வாரூர்குந்தத் திறலோர் (1) எச்சரிக்கை.**
**காரார்திரு மடற்றார்வழி கண்டோர் புவிபோற்றும்**
**தாரார்திருத் தோளார்,சிவ சார்பார் (2) எச்சரிக்கை,**
**செந்தார்திரு மார்பார்குக சேனா பதியம்மை**
**நந்தாய்திரு கச்சிப்பதி நாட்டார் (3) எச்சரிக்கை.**

குறிப்பு:

எச்சரிக்கை என்பது, முன்னே நிற்கும் பணியாளர் தம் தலைவர் தம்மை விட்டு உள்ளே செல்லும் பொழுது விழிப்புடன் இருக்க வேண்டுதல் ஆகும். பாடப்படுபவர்களுடைய பெருமைகளைக் கூறி, இறுதியில் 'எச்சரிக்கை' என்று முடிப்பது இப்பாடலின் மரபாகும்,

[பொ.ரை]

1. தேர்கள் ஊர்ந்து செல்லும் திருத்தணிகையில் உள்ள முருகப் பெருமானுடன் தோன்றியவர்களும், சிறப்புடைய திருவாரூருக்கு உரிமை உடையவர்களுமாகிய செங்குந்தத்தை கையில்கொண்ட வலலமைகொண்டவர்களே! எச்சரிக்கை (யாய் இருக்க.)

2. கரிய விடம் தங்கிய கழுத்தினை உடைய சிவபெருமானின் வழியில் வந்தவர்களும், உலகம் போற்றும் கடப்ப மாலை அணிந்த அழகிய தோள்களை உடையவர்களும், சிவசமயச் சார்புடைய வர்களுமான செங்குந்தர்களே! எச்சரிக்கை (யாய்இருக்க.)

சிவந்த கடப்ப மாலை அணிந்த அழகிய மார்புடைய வார்களும், குகனுக்குச் சேனாதிபதிகளானவர்களும் ஆகிய, நம்தாயாகிய காமாட்சியம்மைக்குரிய காஞ்சிரத்துக்கு உரிமையுடைய செங்குந்தர்களே! எச்சரிக்கை (யாய்இருக்க.)

5. பெரிய கட்டியம்

**336 அருளோங்கு கயிலையங் கிரியில் அரன் அருள்குகற்(கு)**
**அநுசர்கை ஏந்துகுந்தம்,**
**அம்பிகை அகங்களித் துலகுய்ய அவர்கரத் (து)**
**அங்கைகொடு தந்தகுந்தம்,**
**அண்ணரிய வெள்ளிவரை பொன்வரை இடைக்குரவர்**
**அருள்காவல் ஏற்றகுந்தம்,**
**அமரர்துயர் கெடஅவுண வேட்டஞ் செயக்கருதி**
**அறுமுகனொ டேகுகுந்தம்,**
**அந்தமிகு கந்தமா தனமெனும் வரைமீதில்**
**ஆண்மைகொடு நின்றகுந்தம்,**
**அலைஎனுங் கரம்வீசி ஒலிகொண் டெழும் பெரிய**
**ஆழ்கடல் தாவுகுந்தம்,**
**அடலவுண சேனைகட[கு] அதிபர்வாழ் வங்கைகடல்**
**ஆழ,மேல் ஓங்குகுந்தம்,**
**அணிமிகு மயேந்த்ரபுரி அண்மிசிறை யிடைபடுஉம்**
**அமரரைத் தேற்றுகுந்தம்**

குறிப்பு:

கட்டியம் என்றால் 'புகழ் கூறுதல்' என்று பொருள். அரசர்கள் வள்ளல்கள் முதலியோரது புகழை விளக்கும் பெருமைகளைக்கூறி, கையில் கோல் கொண்டு முன் செல்லும்



ஒருவனைக் '**கட்டியக்காரன்**' என்று கூறுவர். இன்றும் நாடகங்களில் இவ்வகைப் பாத்திரத்தினைக் காணலாம். (தற்காலத்தில் இது நகைச்சுவைப் பாத்திரமாக மாற்றப்பட்டுள்ளமை அறிக.)

கட்டியக்காரன் தலைமை ஏற்றோர் பெருமைகளை விவரித்து அதிகஅளவில் கூறுதல் '**பெரிய கட்டியம்**' எனவும், குறைவாக, சுருங்கிய அளவில் கூறுவது '**சின்னகட்டியம்**' எனவும் கூறப்படும் செங்குந்தர் கையில் உள்ள ஈட்டியின் [குந்தத்தின்] பெருமையை விளங்க உரைப்பது பெரிய கட்டியம் என்னும் இப் பகுதியாகும்.

[பொழிப்புரை]

அருள் மிகுந்த கயிலை மலை இறைவனாகிய சிவபெருமான் தோற்றுவித்தருளிய முருகப்பெருமானுடைய தம்பியர்கைகளில் தாங்குவதும், உமாதேவி மனம் மகிழ்ந்து உலகம் வாழுமாறு நவவீரர் கையில் கொடுத்ததும், உயர்ந்த கயிலைமலை மேரு மலைகளைக் காவல் செய்வதும், தேவர்களின் துயரம் நீங்குமாறு அவுணர்களை அழிக்க ஆறுமுகப் பெருமானுடன் துணையாகச் சென்றதும் அழகிய கந்தமாதன மலைமீது வீரத் தன்மையுடன் (வீரவாகு தேவர்) நின்றதும், அலைகளாகிய கைகளை வீசிப் பேரொலியுடன் விளங்கும் பெரிய கடலைத் தாவிக் கடந்ததும், வலிமை உடைய அவுணர்களின் சேனாதிபதிகள் வாழ்ந்த இலங்கை கடலில் ஆழ்ந்து போகும்படி அதன் மீது சென்றதும், அழகிய மகேந்திரபுரியின் மீது நெருங்கிச் சென்று சிறையில் வாடிய தேவர்களின் துயர் நீங்குமாறு ஆறுதல் செய்ததும்-

[அ ள்]

அநுசர் — பின்பிறந்தவர், தம்பியர்; அண்ணரிய—நெருங்க இயலாத; வெள்ளிமலை — கயிலைமலை; பொன்மலை—பொன் மயமான மேருமலை; குரவர் — வழிபடத்தக்க பெரியோர். (இங்கு இறைவனையும் இறைவியையும் குறித்தது.) வேட்டம்— அழித்தல்; அண்மி— நெருங்கி, அருகில் சென்று.

**337 இருளோங்கும் வன்மனச் சூரனவை ஏறிமேல்**
**இழிஆ தனங்கொள்குந்தம்,**
**இகலவன் உளந்தெரிந்[து] ஓங்கிஅமர் ஏற்றவரை**
**ஈர்த்தழித் திட்டகுந்தம்,**

இன்னாமை புரிஇராக் கதர்சூழும் நகரினை
இடித்து துகள்ஆக்கு குந்தம்
இளையசுதன் வச்ரவா குவைவதைத் தவன்முத[கு]
என்பில்நின் றாடுகுந்தம்,
இரணியனை வெங்கண்டொர் எரிமுகன்மூ வாயிரவர்
இன்னுயிரை வீட்டுகுந்தம்,
இடியே றெனத்தரும கோபனா தியஅமைச்[சு]
எண்ணிலரை வாட்டுகுந்தம்,
இரவிபகை வனைமாய்த்துச் சிங்கமுக னைச்செகுத் [து]
இணையிலா தோங்கு குந்தம்,
இனிஅமர்க ளிலையெனாச் சூரன் புலிக்கொடியை
எய்திப் பறித்தகுந்தம் ½

(பொழிப்புரை)

வஞ்சகம் நிறைந்த கொடியமனம் கொண்ட சூரபதுமனுடைய சபைக்குச் சென்று, ஆகாயத்தில் இருந்து இறங்கி வந்த ஒளிமயமான ஆசனத்தில் அமர்ந்து இருந்ததும், பகைவனாகிய அச்சூரபதுமன் உள்ளக் கருத்தை அறிந்து கொண்டு, போர் மேற்கொண்டு அவுணர்களை அழித்ததும், அவர்கள் நகரத்தை இடித்துத் தூளாக்கியதும், சூரனின் மகன் வச்சிரவாகுவைக் கொன்று ஆனந்தக் கூத்தாடியதும், இரணியனைப் புறமுதுகிட செய்து அக்கினி முகன் மூவாயிரவர்முதலியோர் உயிரை அழித்ததும், பேரிடி போலச் சென்று தருமகோபன் முதலிய அமைச்சர்கள் அளவற்றவர்களையும் பானுகோபன், சிங்கமுகன் முதலியவர்களையும் கொன்று தனக்கு இணையில்லை என உயர்ந்துநின்றதும், இனிமேல் போர்த் தொழில் இல்லையென்று சூரபதுமன் கையில் கொண்டிருந்த புலிக்கொடியைப் பறித்துத் தனதாக்கிக் கொண்டதும்—

(அ. ள்)

இருள் - வஞ்சனை; மேல்இழி ஆதனம்- விண்ணில் இருந்து இறங்கி வந்த சிம்மானம். இகலவன் பகைவன். வெந்கண்டு- புற முதுகிடச்செய்து. வெந் (வெரிந்) முதுகு; எரிமுகன்-அக்கினி முகன். இரவிபகை வன்- பானுகோபன்.



338 பொருளோங்கு தண்டமிழ்ப் புகழோங்க மநுகுலம்
போந்துலகை ஆண்டகுந்தம்,
பொன்னுலகர் பரவுமுசு முகமந்த னாதுபெயர்
போற்றஉற(வு) ஏற்றகுந்தம்,
பொங்கிள மனுக்கோலை போக்கிஅவன் மனைவவ்வு
பொற்கிள்ளை பெற்றகுந்தம்,
பொருவில்சந் தானமாங் கனியினுக் காக்குடம்
புக்குவிறல் கொண்டகுந்தம்,
பொதுநீக்கி யாடுமா காளிகைத் தாளம்
பொருக்கெனக் களைசெய்குந்தம்,
பொற்பாரும் வேதகிரி உற்றசம் பாதிவினை
போக்கிஅமு(து) ஈந்தகுந்தம்,
பொய்த்தா லயம்பெறா அயனைஒரு முனிவன்
பொருட்டால் முனிந்தகுந்தம்,
பொடிதலில் வலிகொள்வல் லானைவென்[று]
அவன் மனைவி
போற்றஉயிர் தந்தகுந்தம். ¾

(பொ . ரை)

பொருள்நிறைந்த இனிய தமிழின் புகழ் உயரும்படி மனுகுலத்தில் தோன்றி உலகை ஆட்சி செய்ததும், தேவலோகம் புகழும் முசுகுந்தனுடன் உறவு கொண்டதும், இயமனுக்கு ஓலை அனுப்பி, அவன் மனைவிக்காகக் கவர்ந்து சென்ற அழகிய கிளியை மீட்டதும், சேரநாடு சென்று சந்தான மாங்கனி பெற்றதும், நடனப்போரில் காளியின் கையில் இருந்த தாளத்தைப் பறித்ததும், அழகிய திருக்கழுக்குன்ற மலையில் சம்பாதி என்னும் கழுகுக்கு அதன் தீவினையை நீக்கி நாள்தோறும் உணவளித்ததும், பொய் கூறிய காரணத்தால் தனக்குக் கோயில் அமையப் பெறாத பிரமனை மூதண்ட முனிவருக்காகச் சினந்ததும், வலிமை வாய்ந்த வல்லானை வென்று, அவன் மனைவி வேண்டிக்கொண்டதால் அவனுக்கு உயிர்ப் பிச்சை அளித்ததும்—

(அ.ள்)

முசு — குரங்கு; முசு முகமன் — குரங்கு முகம் கொண்ட அரசன், முசுகுந்தன்; வேதகிரி — வேதமலை, திருக்கழுச் குன்றம்; பொடிதல் இல் — அழிவு இல்லாத.

339 தெருவோங்கு தில்லைமா காளிநிலை கொண்டாழ்ந்த
தேரோட விட்டகுந்தம்,
தெரிவருந் தேயம்எண் ணிலவென்று திறை தரத்
தேய்த்திடா(து) ஆண்டகுந்தம்,
தெளிகொள் ஆ ருயிரெலாம் சிந்தித்த எய்தபல்
சிவாலயம் அமைத்தகுந்தம்,
தெற்றியினும், இல்லினும் தன்னை வழிபடுவோர்க்கெண்
சித்திதந் தாள்செங்குந்தம்,
தெய்வமறை யோதுபஞ் சாக்கரம் செபியாத
தீயர்வாய் சீச்செய்குந்தம்,
தெண்மைதரு வெண்ணீறோ டக்கமணி புனைகலாச்
சிதடர்மெய் சிதைசெய்குந்தம்,
தெறிதராச் சிந்தையொடு தனைஅருச் சிப்பவரைச்
சிவபதத் தேற்றுகுந்தம்
தெண்டிரைக் கடல்சூழும் உலகில்கைக் கோளர்தம்
செயவீர செங்குந்தமே. 1

(பொ ரை)

தெளிவமைந்த தில்லை நகரில் காளி தேவியின் தேர் ஆழ்ந்துவிட்டபோது அதனை ஓடச் செய்ததும், பல நாடுகளை வென்று அந்நாட்டவர் திறைப்பொருள் தரப் பெற்று ஆண்டதும், உயிர்கள் வழிபட்டுத் தாங்கள் நினைத்தவற்றைப் பெற அளவற்ற சிவாலயங்களை அமைத்ததும், தங்கள் இல்லங்களிலும் திண்ணைகளிலும் வந்து தங்கித் தம்மை வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுதது (அட்டமாசித்தி பெற) உதவுவதும், வேதத்தில் சொல்லப்படுகின்ற பஞ்சாட்சரம் ஜெபித்தலைச் செய்யாதவர்களைத் தண்டிப்பதும், திருவெண்ணீறு, உருத்திராக்கம் அணியாத தீயர்களை அழிப்பதும், நிலைத்த சிந்தையுடன் தன்னை வழிபடுபவர்களைச் சிவகதியில் சேர்ப்பதும், தெளிந்த அலைகளை உடைய கடலால் சூழப்பட்ட



இவ்வுலகில், கைக்கோளர் எனப்படும் செங்குந்தர்கையில் உள்ள, வெற்றியும் வீரமும் உடைய செங்குந்தமே ஆகும்.

'கைக் கோளர்தம் செயவீர செங்குந்தம்' என்பது எழுவாயாகும்.

இப்பெரிய கட்டியத்தில் கூறப்பட்ட வரலாறுகள் முன்பே பல இடங்களில் விரிவாகக் கூறப் பட்டுள்ளன.

[அ.ள்]

தெருள் — அறிவு, தெளிவு; திறை — கப்பப்பொருள்; தெற்றி-திண்ணை; தெண்மை — தெளிவு; சிதடர் — அறிவற்றவர்; தெறிதரா — சிதறாத, சிதையாத, நிலைத்த.

6 சின்ன கட்டியம்

குறிப்பு :

'சின்னகட்டியம்' என்னும் இப்பகுதி, மிக்கவலிமை உள்ளவனாகவும், பிறரைத்துன்புறுத்தியும் வாழ்ந்த 'வல்லான்' என்பவனை வெற்றி கொண்ட செங்குந்தர்களின் பெருமையைக் கூறுகிறது. இதில் சுருக்கமாகக் கூறப்பட்ட செய்திகள் 'வல்லான் காவியம்; 'வீரநாராயண விஜயம்'போன்ற நூல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

340 வஞ்சகம தாகவீ ராணமெனும் ஏரியிடை
வகைபெறத் தூண்கள்நிறுவி
மண்டபம் கட்டிமற் றதிலிருந்[து] எண்திக்கின்
மன்னரை வதைத்த வல்லான்
செஞ்சிலைத் திறமும்வாள் தீமையுங் கண்டமால்
தீவினைகள் வந்தளனவே
சிந்தைகொட வன்தனைச் சிதைசெய்வகை ஆய்ந்தினித்
தினையளவு போதும்உவனை, 1/4

341 விஞ்சவிட லாகாதெ னச்செவ்வேள் துணைவர்தம்
விழுக்குலத் தவர்கள்அல்லால்
வேறொருவ ரால்அணுவும் ஆகா தெனத்தேறி
விண்ணவர் வியப்பஇலகும்
பஞ்சவன மேயவிரு துக்கொடி முனாஞ்சீர்
படைத்தசெங் குந்தர்கள்தமிற்
பன்னிருவர் கையிலே வெற்றிலைப் பாக்கினைப்
பரிவாக வேஅளிக்கக், 1/2

**342** **கொஞ்சிகை கொட்டிக் குதித்தோடி வழியில்நேர்**
**குமரியிரு வர்க்கிவருங்**
**கூவுபரி யாப்பினுக் கொருவனும் உயிர்தந்து**
**குரைசெய்நாய் புலிகரடிகள்**
**மிஞ்சிடா வண்ணநால் வர்கள்துணிய, அழல்மீது**
**மீறியொரு வன்படுக்க!**
**மேலேறி அகழ்முதலை வாய்க்கொருவ னும்வயிரம்**
**மேயகாற் கொருவனும்உயிர்,** 3/4

**343** **அஞ்சாமல் தந்துபின் வல்லா னிடத்திருவர்**
**அணுகிபொற் றலையாணைகோல்**
**அணிமாய விரதநால் வகைசால பரிசேனை**
**ஆதியை யவன்தரக்கொண்(டு)**
**எஞ்சா(து) அவன்மனைவி வேண்டமீண் டபயற்கும்**
**எழில்தில்லை அரனடிக்கும்**
**இணையில்தம் சிரமளித் துலகர்தொழ பதின்மரொடும்**
**ஈறில்பதம் அடைசீலரே.** 1

*[பொ.ரை]*

1/4 வஞ்சக எண்ணத்துடன் பிறர் அறியாதபடி 'வீராணம்' என்னும் ஏரியில் தூண்களை நிறுவி, அத்தூண்களின்மேல் மாளிகை அமைத்து வாழ்ந்து கொண்டு எட்டுத்திசைகளிலும் உள்ள அரசர்களையும் துன்புறுத்தி வந்த இராட்டிரகூடனாகிய வல்லான் என்பவனின் வில்லாற்றலையும் வாளாற்றலையும் கண்ட சோழமன்னன் தீமை செய்யும் அவனைக் கொல்லும் வழியை ஆராய்ந்து, இனிச் சிறிதுகாலமும் அவனை,

1/2 மேலும்வளரவிடுதல்கூடாது, அவனை வெல்லுதல் செங்குந்தர்களை தவிரப்பிறரால்அணுவளவும்ஆகாது' என்று முடிவு செய்து, தேவர்கள் புகழ்ந்து போற்றும் பஞ்சவண்ணக்கொடி முதலிய விருதுகளைத்தாங்கிய அச்செங்குந்தர் குலத்தவராகிய (பழுவூர்வீரன், நாராயணன், கச்சித்தனியன், ஒற்றியூரன் முதலிய)பன்னிருவரை அழைத்து[இப்பெயர்கள் ஈட்டிஎழுபதில் அவர்கள் செய்த செயல்களுடன் கூறப்பட்டுள்ளன.] வீரம் பொருந்திய அவர்களிடத்தில் மிக்க அன்புடன் தாம்பூலம் கொடுத்து அனுப்ப,



3/4 அவர்களும் வீரத்துடன் வல்லானை வெல்லுவதற்குச் செல்ல, வழியில் எதிர்ப்பட்ட காளிக்கும், துர்க்கைக்கும் தம்மில் இருவரைப் பலிகொடுத்தும், ஒருவனைக் கொன்று தெப்பம் கட்டியும், வல்லான் அரண்மனையின் முன் காவலாக இருந்த செந்நாய் புலி கரடி முதலியவைகளுக்கு நால்வர் உணவாகியும், நெருப்பாற்றின் மீது ஒருவன் படுத்து மேலேறிச் செல்ல உதவியும், அகழியில் இருந்த முதலைக்கு ஒருவன் உணவாகியும், வயிரத்தூணில் ஒருவனை அறைந்து கொன்றும், [இவ்வாறு பதின்மர் வழியிலேயே உயிர்த்தியாகம் செய்ய,]

1 மற்ற இருவரும் துணிந்து வல்லானிடம் சென்று அவன் வலியடக்கிக் கொல்லப்புகும்போது, அவன்மனைவி தன் கணவனுயிரைக்காத்துமாங்கல்யப்பிச்சையிடுமாறு வேண்டிக்கொள்ள அவனைக் கொல்லாமல் விடுத்து, அவ்வல்லானிடமிருந்த அவன் தலைபோன்ற பொன்தலையையும் செங்கோல், மாயம் வல்ல நால்வகைச் சேனை முதலியவைகளையும் கைக்கொண்டு சோழனிடம் மீண்டுவந்து நடந்தவற்றைக் கூற, [அதுகேட்ட அரசன், 'எவ்வாறு தலையை அரிந்தீர்கள்' என்று கேட்க] அவ்விருவரும் தங்கள் தலைகளைத் தாங்களே அரிந்துகொண்டு, உலகில் உள்ளோர் வியந்து வணங்குமாறு தில்லை நடராசப் பெருமானுடைய திருவடிகளை [முன்னே உயிர் நீங்கிய பதின்மருடன்] அடைந்து முத்தி பெற்றார்கள்.

பொருள் முடிவு

'வல்லானது சிலைத்திறமும், வாள் திமையும் கண்டமால் [சோழ மன்னன்] ஆய்ந்து 'இனி உவனை விஞ்சவிடல் ஆகாது' - எனவும், ['அவனை வெல்லச்] செவ்வேள் குலத்தவர்கள் அல்லால் வேறொருவரால் ஆகாது' எனவும் தேறி, செங்குந்தர்கள்தமில் பன்னிருவர் கையில் வெற்றிலைப் பாக்குக் கொடுத்து விடையளித்து அனுப்ப, [அவர்கள்] குதித்து ஓடி வல்லானுக்காக வந்து எதிர்த்த இருதேவியர்க்கு இருவரைப் பலிகொடுத்து பரியாப்பினுக்கு [தெப்பம்கட்டுதற்கு ஒருவன் உயிர்விட, '[அவன் உடம்பில் ஏறி மிதந்துச் சென்று] காவல் காத்த நாய், புலி, கரடிகளுக்கு நால்வர் இரையாய்விட, நெருப்பு ஆற்றின்மேல் ஒருவன் படுக்க மேல் ஏறிச் சென்றபோது அகழி முதலைக்கு ஒருவன் இரையாக, எஞ்சிய இருவர் சென்று வல்லானை வென்று சில பொருள்களைக் கைக்கொண்டு அவன் மனைவி வேண்டுதலுக்கு இரங்கி அவளுக்கு மாங்கல்யப் பிச்சை தந்து மீண்டு சோழனிடம் வந்து தெரிவிக்க,

அவன் நீங்கள் தலையை எப்படி அரிந்தீர்கள்? என்று கேட்க 'இப்படித்தான் அரிந்தோம்' என்று அவ்விருவரும் தங்கள்தலையரிந்துவீழ்த்தி, முன்புசென்ற பதின்மருடன் இவர்களும்சேர்ந்து தில்லைக் கூத்தன் திருவடியை அடைந்தனர்' என இதன் பொருட்சுருக்கம் காண்க.

### 7. மங்களம் — கீர்த்தனை

பல்லவி

**செயமங்களம் நித்திய சுபமங்களம்**

சரணம்

**344 அறைகாவல் மெய்க்காவ லமைந்தநவ வீரர்க்கும்**
**அறுமுகவன் துணைவரெனும் அரசர்கள் தமக்கும்**
**நறுமலர்ச்செங் கடப்ப மாலையணி மார்பர்க்கும்**
**நாவிலங் காதருள்செய் நாய கர்க்கும்**
(செயமங்களம்)

(பொ. ரை)

மெய்க்காவல் தொழிலை மேற்கொண்டவர்களும், அறுமுகப் பெருமானின் துணைவர்கள் என்னும் அரசர்களும், கடப்ப மாலையணிந்த தோள்களை உடையவர்களும், சொன்ன சொல் மாறாமல் கருணைபுரிகின்ற தலைவர்களும் ஆகிய செங்குந்தர்களுக்கு வெற்றியுடன் என்றும் நல்ல மங்களம் உண்டாவதாக.

**345 ஆதிசத்தி பாதச்சிலம்பி லவதரித் தவர்க்கும்**
**அமரர்சிறை தனைத்தீர்த்த அருளாளருக்கும்**
**சூதுசெயு மசுரர்களைச் செயித்துசெயங் கொண்டவர்க்கும்**
**செங்குந்தச் சிவநீதி தெளிவள வருக்கும்**
(செயமங்களம்)

(பொ . ரை)

உமாதேவியின் திருவடிச்சிலம்பில் அவதரித்தவர்களும், தேவர்சிறை நீக்கிய கருணை உடையவர்களும், வஞ்சனை



செய்யும் அசுரர்களை அழித்து வெற்றி கொண்டவர்களும், சிவநீதியில் நிலைத்து நிற்பவர் சோழ மரபினர்களும் ஆகிய செங்குந்தர்களுக்கு வெற்றியுடன் என்றும் நல்ல மங்களம் உண்டாவதாக.

**346 கயிலாய மலைக்காவல் காக்குமுயர் நாயகர்க்கும்**
**கருதரிய கோழிக் கொடிக்கதி பருக்கும்**
**பயனுதவுஞ் சிவசமய பத்திபரி பாலகர்க்கும்**
**பட்சமாய் நகர்காத்த பண்புள்ள வருக்கும்**
(செயமங்களம்)

(பொ . ரை)

கயிலை மலையைக் காக்கும் பணி பூண்டவர்களும், உயர்ந்த கோழிக்கொடிக்கு உரிமை உடையவர்களும், மூத்தி தரும் சைவசமயத்தையும் பக்தி நெறியையும் போற்றிக் காத்து வருபவர்களும், அன்போடு (உலகை) அரசாளும் குணம் படைத்தவர்களும் ஆகிய செங்குந்தர்களுக்கு வெற்றியுடன் என்றும் நல்ல மங்களம் உண்டாவதாக.

ஊசல் முதலியவை முற்றின.

வேலும் மயிலும் துணை.

செங்குந்தப் படையோன்திருவடி வாழ்க.

சிவமயம

ஸ்ரீபடம்பக்கநாதன் இயற்றிய

திருவொற்றியூர்ச்

# செங்குந்த விநாயகர் மாலை

காப்பு

நேரிசை வெண்பா

347 ஒற்றிச்செங் குந்த(ன்)என்றோர் ஓங்கல்மேல் நாள்பரவும்
வெற்றிச்செங் குந்த விநாயகற்கு — முற்றித்
தணிந்(து)உயவு தீர்தமிழ்ச்சொல் தண்மலரால் மாலை
அணிந்(து)உயஅன் னான்தாள் அரண்.

குறிப்பு :

காப்பு என்பது, எடுத்துக் கொண்ட செயல் இனிது நிறைவுறும் பொருட்டுத் தாம் வழிபடும் கடவுளையாவது, ஏற்புடைக் கடவுளையாவது வணங்கிப் போற்றுவது. இந் நூலாசிரியர் விநாயகர் மீது 'மாலை' பாடுவதற்கு, விநாயகக் கடவுளையே காப்புச் செய்யுளில் துதிக்கின்றார். இந்நூல் முழுவதும் கட்டளைக் கலித்துறை என்னும் பாவகையால் (முன்னர் உள்ள 'கலித்துறை மாலை' போல) அமைந்தது. இந் நூலில் 31 பாடல்களே உள்ளன. பொருள் விளங்குவதற்காகச் சில இடங்களில் பாடல்கள் சந்திபிரித்து எழுதப்பட்டுள்ளன.

பொழிப்புரை :

திருவொற்றியூரில் வாழ்ந்த செங்குந்த மரபினராகிய பெருமையுடைய ஓரன்பர் முன்னாளில வழிபட்ட வெற்றி பொருந்திய விநாயகப் பெருமான் மீது, நிறைவு பெற்று, குளிர்ந்து, வருத்தத்தினின்றும் நீங்குதற்குரிய தமிழ்ச்சொற்கள் எனும் குளிர்ந்த மலர்களாகிய மாலையைச் செய்து அணிந்து



உய்வதற்கு அப் பெருமானுடைய திருவடிகளே பாது காவலாகும்.

அருஞ்சொற் பொருள் :

ஓங்கல் — மலை [இவ்விடத்தில் பெருமையைக் குறித்தது.] பரவுதல் — துதித்தல்; முற்றி — நிறைவு பெற்று; தணிந்து— குளிர்ந்து; உயவு — வருத்தம்; உய — உய்ய, பிழைக்க (இடைக் குறை); தாள் — திருவடி.

கட்டளைக் கலித்துறை

348 பொன்னின்(று) அவிர்உருப் பூவையைச் சூள்கொடு போய் மகிழ்க்கீழ்
வன்னின்ற தொண்டற்(கு) அருள்வான் புடைவடி வாம்பிகை, என்
முன்னின்ற கற்கிக்கு மேல்பால்தென் கோணத்துள் மேவினன்எம்
வில்நின்ற சீர்ஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே! 1

பொழிப்புரை :

— ஒளிபொருந்திய, புகழ்படைத்த, திருவொற்றியூரில்வாழு கின்ற செங்குந்த விநாயகப்பெருமான், பொன்னைப் போன்று இருந்த இடத்தில் இருந்து ஒளிவீசும் அழகுடைய சங்கிலி நாச்சி யாரை, மகிழமரத்தினடியில் வன்தொண்டராகிய சுந்தர மூர்த்தி நாயனார் சூளுறுதற் பொருட்டு வருவித்து, அவருக்குத் திருமணம் செய்துவைத்த ஒற்றியூர்ப் பெருமானின் அருகில் உறையும் வடிவாம்பிகையம்மையின் கோயிலுக்கு மேற்கே தெற்கு மூலையில் எழுந்தருளியுள்ளார். அவரை அங்குச் சென்று அனைவரும் வணங்குவோமாக!

அருஞ்சொற் பொருள் :

பொன்னின்று — பொன்னைப்போல் இருந்த இடத்தி லிருந்து; அவிர் — ஒளிவீசும்; சூள் — சபதம்; மகிழ் — மகிழ மரம்; வன்னின்ற தொண்டர் — சுந்தரர்; புடை — அருகில்; கற்கி — கோயில்; வின்னின்ற — வில்நின்ற — ஒளிபொருந்திய; வில் — ஒளி.

**349 வக்ரதுண் டம்கொடு வானுயர் மூவரை வாய்மடுத்தங்(கு)**
**உக்ரபல் அண்ட உருக்காட்டிக் கன்மத்துள் ஒங்கவிடுத்(து)**
**அக்ரமெய்ப் பூசனை ஆற்றப் பெறீஇஅருள் அண்மநின்ற**
**விக்ரம னேஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 2**

பொ . ரை :

வேகம் கொண்ட (விரைந்து செல்லும்) பல அண்டங் களைத் தன்னுள்ளே அடக்கிய பேருருவை (விஸ்வரூபத்தை)க் கொண்டு, வளைந்த தும்பிக்கையைக் கொண்டு பெருமை மிகுந்த திருமால் பிரமன் உருத்திரன் ஆகிய மூவரையும் தன் னுள்ளே அடக்கி, பிறகு அவர்களை அவரவர் செயல்களைச் செய்யுமாறு அனுப்பி, எல்லோரும் உமக்கு முதல்பூசையைச் செய்யவைத்து அதனை ஏற்று அருளைப் பெறவைக்கும் வெற் றியை உடையவரே. திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! (உம்மை வணங்குகின்றேன்.)

அ . ள் :

வக்ரம் — வளைவு; துண்டம் — மூக்கு (துதிக்கை); வாய் மடுத்து — உட்கொண்டு; உக்(கி)ரம் — வேகம்; அக்ரபூசை முதல்பூசை; அருள் அண்ம — அருளைப்பெற; விக்ரமன்— வெற்றியை உடையவன்.

**350 கண்தோய் ஒளியில் கருத்தூடு நின்று கவின்செயும்நின்**
**தண்தோய்அருளுக்கும் தாழ்வுண்டுகொல்!தமியேன்மனத்தே**
**திண்தோயு(ம்) ஆணவம் தீர்தர ஆண்டருள் செய்வதெந்நாள்?**
**விண்தோய் பொழிலொற்றி யூர்வாழ்செங்குந்த விநாயகனே. 3**

பொ . ரை :

விண்ணளவும் உயர்ந்துள்ள சோலைகள் சூழ்ந்த திருவொற்றியூரில் வாழும் செங்குந்த விநாயகப் பெருமானே! கண்ணில் உள்ள ஒளியின் வழி உள்ளத்தின் உள்ளே சென்று நின்று அழகுசெய்யும் உம்முடைய குளிர்த்த (தண்) அருளுக்கு எப்போதும் குறைவு என்பது உண்டோ? (இல்லை). அடியவ னாகிய என்மனத்தில் வலிமை பொருந்துமாறு தங்கியுள்ள ஆணவ மலத்தை நீக்கி ஆட்கொண்டு, எனக்குத் திருவருள் செய்வது எந்த நாளோ?



அ. ள்

கண்தோய் ஒளி - கண்களில் பொருந்திய ஒளி; கவின் - அழகு; தாழ்வு - குறைவு; தமியேன் - துணையற்றவன் (அடியேன்); தீர்தர - நீங்குமாறு.

**351 களம்குன் றிடாத மனத்தோர்கள் நிற்பநின் காமர்கஞ்ச**
**வளம்குன் றிடாத்துணை வார்கழல் தாளை வழுத்துநர்தம்**
**உளம்குன் றிடாரெனில் யான்குன்றும் ஆற்றில் உறுவதென்?கூ**
**விளம்குன் றிடாஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 4**

பொ. ரை:

வில்வமரங்கள் ஓங்கி வளர்ந்துள்ள திருவொற்றியூரில் வாழும் செங்குந்த விநாயகப் பெருமானே! உமக்கு இடமாகச் செய்தலில் குறைவுபடாத மனத்தை உடையவர்கள் ஒருபால் இருக்க, அவர்களுடன் உம்முடைய அழகிய தாமரை மலர் போன்ற, நீண்ட, வீரக்கழலணிந்த, உபயபாதங்களைத் துதிக் கின்றவர்களும் தங்கள் ஊக்கத்தில் குறையாதிருக்கின்றனர் என்றால் அடியேன் மட்டும் அவ்வன்பில் குறைவது என்னோ?

அ. ள் :

களம் - இடம்; காமர் - அழகிய; கஞ்சம் - தாமரை; வார்கழல் - நீண்ட வீரக்கழல் (கழல் என்பது வீரர்கள் கால்களில் அணியும் ஆபரணம்;) வழுத்துநர் - துதிப்போர். கூவிளம் — வில்வம்.

**349 நதிபல வுக்கு(ம்)ஓர் அம்போதி என்னஇந் நானிலத்துள்**
**மதிபல கோடி சமயர்க்கும் நீஒரு மாமுதலாய்த்**
**துதிபல சேதனர்க்(கு) உள்ளொளி யே,மறை சொல்முதலின்**
**விதிபல வே,ஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 5**

பொ. ரை :

திருவொற்றியூரில் உறையும் செங்குந்த விநாயகப் பெருமானே! எல்லா ஆறுகளும் சென்று சேரும் கடல் ஒன்றாக இருப்பதுபோல, இவ்வுலகில் கூறப்படும் பலவகையான அறிவையுடைய சமயவாதிகட்கும், நீரே தலைவராகி விளங்கு

கின்றீர். உம்மைத் துதிக்கும் பல அறிவுடையோர்களுக்கு உள்ளொளியாக நிற்பவரே, வேதங்களால் சொல்லப்படுகின்ற பழைய விதிகளாய் உள்ளவரே, (உமக்கு வணக்கம்.)

அ. ள் :

அம்போதி - கடல்; மதி- அறிவு; ஒரு - ஒப்பற்ற; மாமுதல்- தனி முதல்வன்; சேதனர் - அறிவுடையவர்; விதி - விதி முறைகள்;

('அறுவகைச் சமயத்தோர்க்கும் அவ்வவர் பொருளாய் நின்றே...' எனவரும் ஆன்றோர் வாக்கை ஒப்புநோக்குக.)

**353 தாயாய் இளமுலைப் பாலும் அறுசுவைத் தண்ணமுதும்**
**காயா(து) அளித்தரும் தந்தையின் கல்வி கரைத்தருளி**
**மாயா மலங்கெட ஆரிய னாய்நின்ற வள்ள(ல்) அன்பில்**
**வீயாம லா(ள்)ஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 6**

பொ. ரை :

திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! தாயாக இருந்து வெறுப்பின்றி முலைப்பாலையும் அறுசுவை உணவையும் அளித்தும், அரிய தந்தையாக இருந்து கல்வியில் ஈடுபடச் செய்தும், குருவாக நின்று உலக இருளாகிய மாயையை நீக்கியும் அருள்செய்கின்ற வள்ளல்தன்மை உடைய வரே, உம்மிடத்தே எனக்குள்ள அன்பு குறையாதபடி ஆண்டு அருள்வீராக !

அ. ள் :

காய்தல் — வெறுத்தல்; கரைத்தல் — (கற்பித்தல்) இங்கே ஈடுபடச் செய்தல் என்னும் பொருளில் வந்தது; மாயா மலம் — மாய இருள்; ஆரியன் — குரு, ஆசாரியன்; வீயாமல்— அழியாமல். (இறைவன் தாயும் தந்தையும் குருவுமாய் நின்று அருள் புரிபவன் என்பது கருத்து.)

**354 நினைஓர் குநர்க்கன்றி அல்லார்க்கும் நின்னிடை நீளருளில்**
**தினைஓர் அளவுமென் பால்இலை யே(ல்)என தீமைஎன்னோ?**
**மனையோ டு,மக்களி னோடுமா ழாந்து மயங்குவதெவ்**
**வினையோ, திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 7**



பொ. ரை :

திருவொற்றியூரில் வாழும் செங்குந்த விநாயகப் பெருமானே, உன்னை அன்போடு நினைப்பவர்களுக்கல்லது ஏனையோர்க்குப்போல உம்மிடத்துள்ள நீண்ட திருவருளில் தினையளவேனும் என்னிடத்தில் செய்யவில்லை என்றால், நான்செய்த தீமைகள் எவையோ? மனைவி மக்கள் முதலானோ ரோடு கூடித் துன்புற்று, மயங்குவதற்கும் காரணம் என்ன பாவமோ? (அவைகளை மாற்றியருளுவீராக.)

அ. ள் :

ஓர்குநர் — நினைப்பவர்; தினை ஓர் அளவும் என்பதனை, ஓர்தினை அளவும் என மாற்றிப் பொருள் கொள்க; மாழாந்து - துன்புற்று; அல்லார்க்குப் போல என உவம உருபு விரிக்க.

**355 கழிப்பதெந் நாள்புன் நெறியாவும் சோரக், கவின்மனத்தில்**
**கொழிப்பதெந் நாள்நன் னெறியாவும் மித்தைக் குவலயச்சீர்**
**பழிப்பதெந் நாள்,பர மானந்த வாழ்வினைப் பற்றிஅதில்**
**விழிப்பதெந் நாள்,ஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 8**

பொ. ரை :

திருவொற்றியூரில்வாழும் செங்குந்த விநாயகப்பெருமானே என்னிடத்தில் உள்ள தீநெறிகள் தளர்ச்சியடைய (அவற்றை) என் மனத்தைவிட்டுக்கழிப்பது எந்த நாளோ? அழகியமனத்தில் (உம் நினைவாகிய) நல்லநெறிகள்யாவும்குவிப்பதுஎந்தநாளோ? பொய்யான இந்த உலகத்தைப் பொய் என்று நான் உணர்வது எந்த நாளோ? மேலான இன்பம் நிறைந்த வாழ்வினைப் போற்றி அதில் அறிவோடு இருப்பது எந்த நாளோ? [எனக்கு அருள் செய்வீராக!]

அ. ள் :

சோர்தல்—தளர்ச்சி அடைதல்; மித்தை—பொய் (உலகத்தை மித்தை என்பது வேதாந்த மரபு.) குவலயச் சீர்—

உலகத்தின் தன்மை; பழிப்பது—இகழ்ந்து ஒதுக்குவது; பரமானந்தம்—[ஆன்மாவுக்குவரும்]மேலான இன்பம்,சிவானந்தம்.

**356 நாடுறு மோ,எனை நல்லருள் வாழ்வு; நலந்தெரிந்து**
**கூடுறு மோமனம், மெய்ஞ்ஞான போகம் குணம்கடந்து**
**நீடுறு மோ,நிம[ல] ஆனந்த மோன(ம்)இன் னேவிளையும்**
**வீடுறு மோ,ஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 9**

பொ. ரை :

திருவொற்றியூரில் வாழும் செங்குந்த விநாயகப் பெருமானே, என்னிடத்தில் நல்ல அருள்மயமான வாழ்வு வந்து அடையுமோ? மனம் அலையாமல் நன்மையைத் தெரிந்து ஒரு முகப்படுமோ? உண்மையான அறிவுடன் கூடிய இன்பம் (சித்தானந்தம்) முக்குணங்களையும் கடந்து எல்லையின்றி விளையுமோ? தூய ஆனந்தத்துடன் கூடிய மோனநிலை சேர்ந்து இப்போதே உண்டாகின்ற வீடுபேறு கிடைக்குமோ? [அறிகிலேன்.]

அ. ள் :

நாடுதல்—சேர்தல்; போகம்—இன்பம்; நீடுறும்—எல்லையின்றி விளையும்; நிமல—குற்றமற்ற; வீடுறுமோ—அழியுமோ.

**357 எண்ணற்[கு] அரும்பல வல்வினை யாவும் எனைக்குழுமி**
**நண்ண வரும்துயர்க்(கு) என்கட வே(ன்)நவில், நாற்பயனும்**
**மண்ணவ ரெய்த, மதகய மாமுகம் வாய்ந்துலவா**
**விண்ணவர் சூழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 10**

பொ. ரை :

(உலகினரால் புகழ்ந்து) கூறப்படுகின்ற (அறம், பொருள் இன்பம், வீடு என்ற) நால்வகைப் பயன்களையும் மண்ணுலகில் உள்ளவர்கள் அடைய, மதயானையின் முகமமைந்த திருமேனி கொண்டு, அழியாத தேவர்கள் எப்போதும் சூழ்ந்துள்ள திருவொற்றியூரில் வாழ்கின்றசெங்குந்த விநாயகப்பெருமானே நினைத்துப் பார்க்க அரியதான பல கொடிய வினைகள் எல்லாம் என்னைச் சூழ்ந்து நெருங்கவரும் துன்பத்துக்கு நான் என்ன செய்யக்கடவேன்? கூறுவீராக.



அ. ள் :

வல்வினை — தீவினைகள்; குழுமி — சேர்ந்து; என்கடவேன் — என்னசெய்வேன்; கயமாமுகம் — யானைமுகம்.

**358 நாறும் கமல நயனனும் வேதனும் நாடரு(ம்) ஏ(று)**
**ஏறும் பரமன், எயிலொரு மூன்றும் எரித்தஅஞ் ஞான்(று)**
**ஈறில் முதன்மைநிற் காக்கின னே,நினை ஏய்பவர்யார்**
**வீறும் பொழிலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 11**

பொ. ரை :

உயர்ந்துள்ள சோலைகள் சூழ்ந்த திருவொற்றியூரில் வாழும்செங்குந்த விநாயகப் பெருமானே! மணம் வீசும் தாமரை மலர்போன்ற கண்களை உடைய திருமாலும், பிரமனும் தேடிக் காணமுடியாத, இடபத்தை வாகனமாக உடைய சிவபெருமான் திரிபுரத்தை அழித்த அந்நாளில் முடிவில்லாத் தலைமையை உமக்குத் தந்தனன் எனில் உம்மை ஒப்பவர் யாருளர்? (ஒருவருமிலர்.)

"முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்.
அச்சது பொடி செய்த அதிதீரா" எனவரும் திருப்புகழும்,

அச்சிறுப்பாக்கம் தலவரலாறும் இங்கே நினைவு கூறத்தக்கன.

அ. ள் :

நாறும் — மணம் வீசும் (நாற்றம் — மணம்) கமலநயனன்- தாமரைக் கண்ணன் (திருமால்); வேதன் — வேதம் வல்லவன் (பிரமன்); நாடரும் — தேடிக் காண இயலாத; ஏறு — எருது; எயில் — மதில்; ஈறில் — அழியாத; ஏய்பவர் — ஒப்பானவர்.

**359 நஞ்சும் பனிக்கும்கண் நாரியர் மோக நரலையில்வீழ்ந்[து]**
**எஞ்சும் சிறியருள் யான்தலை நிற்ப(து) இழிவதன்றோ**
**பிஞ்சும் கனியும்ஒப் பேன்பிழை தீர்த்தி,நற் பேறனைத்தும்**
**விஞ்சும் திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே** 12

பொ. ரை :

பெறுதற்கரிய நற்பேறுகள் அனைத்தும் கிட்டுமாறு உயர்ந்து நிற்கின்ற, திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே, விஷமும் அஞ்சுகின்ற (கொடிய) கண் பார்வையை உடைய பெண்களின் மோகம் என்னும் கடலில் வீழ்ந்து இளைக்கின்ற சிறுமை படைத்தவர்களுக்குள் நான் முதன்மை பெற்றவனாக இருப்பது மிகவும் இழிவைத் தருவது அன்றோ? (உயர்ந்தவர்கள் முன்னே யான்) பிஞ்சு போலவும் அவர்கள் கனிபோலவுமாக இருக்கின்றேன். என் பிழைகளைத் தீர்த்தருள்வீராக!

அ. ள் :

பனிக்கும்—நடுங்குகின்ற; நாரியர்—பெண்கள்; நரலை—கடல் (ஒலிப்பது என்றும் பொருளுடையது, காரணப்பெயர்) எஞ்சுதல்—இளைத்தல்; பிழை குற்றம்; விஞ்சும்—உயர்ந்துள்ள.

**360 துளையும் மிடறும் நரம்பு(ம்)நற் கஞ்சமும் தோலு(ம்)என**
**வளையும் இயமியம்(பு) அண்டமும் தூர்ப்ப அருமறையின்**
**கிளையும், முனிவரர் கேண்மையு மியாண்டும் கெழும அறம்**
**விளையும் எழிலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே** 13

பொ. ரை :

துளைக்கருவி, மிடற்றுக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக் கருவி தோற்கருவி எனும் ஐவகை இசைக்கருவிகளும், சங்கும், சேர்ந்து இயம்பும் இசையானது விண்ணளவும் சென்று நிறைக்கவும், வேதங்களின் உட்பிரிவுகளும் முனிவர்களுடைய கூட்டமும் எங்கும் நிறைந்திருக்கவும், தருமப் பயிர் நன்கு விளைகின்ற அழகிய திருவொற்றியூரில் வீற்றிருக்கும் செங்குந்த விநாயகப் பெருமானே, உமக்கு வணக்கம்.



அ. ள் :

துளை - குழல் நாதசுரம் போன்ற துளைக் கருவிகள், மிடறு-குரல் (ஒலியெழுப்பும் கழுத்துறுப்பு, வாய்ப் பாட்டு); நரம்பு -யாழ், வீணை போன்ற நரம்புக் கருவிகள்; கஞ்சம்- பிரமதாளம், சேகண்டி போன்ற வெண்கலத்தால் ஆன தாளக் கருவிகள்; தோல் பறை, மத்தளம் போன்ற தோற்கருவிகள்; வளை - சங்கு; இயம் - இசைக் கருவிகள்; தூர்ப்ப - நிறைக்க; மறையின் கிளை - வேதத்தின் உட்பிரிவு (சாகை); கேண்மையு மியாண்டும் என்பதில் உள்ள 'மி' குற்றியலிகரம் எழுத்தாக எண்ணப்படாமல் ஒற்றோடு ஒத்து எண்ணப்பட்டது.

**361 கழையில்அம் பூவினைக் கார்முகத்(து) அம்பெனக்காட்டுமதன்**
**உழைசிறு மானில் உழல்வேனுக்(கு) உன்னருள் ஒட்டுமதோ?**
**இழைபல கொண்ட இளம்பிடி யார்மயல் எய்தவிலார்**
**விழைதரும் நல்லொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.** 14

பொ.ரை :

பலவகையான ஆபரணங்களை அணிந்த அழகிய இளம்பிடி போன்ற பெண்களின் மயக்கத்தில் ஈடுபடாதவர்கள் வந்து விரும்பித் தொழுகின்ற திருவொற்றியூரில் வாழும் செங்குந்த விநாயகப் பெருமானே! கரும்பில் அழகிய மலர்களை (வைத்து) வில்லில் தொடுக்கும் அம்பு போலக் காட்டுகின்ற மன்மதனாகிய வேடன் முன்னே சிறிய உழைமான் போலத் திரிகின்ற எனக்கு உம்முடைய திருவருள் கிட்டுகின்ற ஒன்றாமோ? (திருவருள் கிடைக்க அருள் புரிவீராக.)

அ ள் :

கழை- கரும்பு; அம்பூ- அழகிய மலர்; கார்முகம் - வில்; உழை - கலைமான்; ஒட்டுமதோ - கிடைக்கக் கூடியதோ; விழைவு - விருப்பம்; இளம்பிடி - இளைய பெண்யானை (இது பெண்களின் நடைக்கு உவமை) மயல்; -மயக்கம். 'அம்பூவினை அம்பு எனக் காட்டும்' என்பது நயம்.

**362 மதியோ சிறிது(ம்)என் மாட்(டு)இலை; மாதர் மயக்கில் வனக்**
**கதியோ இருகணும் காணாக் கதி, என்றன் கைபடைத்த**
**நிதியோ பொய் வஞ்சம் கொலைமுத லாம்எனில் நீ(ள்)தலைக்கென்**
**விதியோ திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே.** 15

பொ. ரை :

திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! என்னிடத்தில் நல்லறிவு என்பது சிறிதும் இல்லை. பெண்களினுடைய ஆசை மயக்கத்தில் நான் செல்லும் போக்கோ இருகண்களும் பார்வையற்ற குருடர் நடப்பது போன்று உள்ளது. நான் என் கைகளில் சேர்த்து வைத்துள்ள பொருள்களோ பொய் வஞ்சனை கொலை முதலிய பாவங்களே என்றால் (இந்நிலை) என்பெரிய தலையில் எழுதப்பட்ட விதியோ? (அறியேன்.)

என் மாட்டிலை — என் + மாட்டு + இலை — என்னிடம் இல்லை; (மாடு - பக்கம்; தலைமாடு, கால் மாடு என வருவன காண்க.) கதி —போக்கு.

**363**

**நல்லார் குழுவினை நான்ஒரு போதும் நயந்தறியேன்**
**பொல்லார் குழுவிடைப் புக்குநின் றாடலைப் போக்ககிலேன்**
**எல்லா[ம்] அறிந்துளைநீ ஆத லின்எனக் கென்கதிகாண்**
**வில்லார் தருமொற்றி யூர்வாழ் செங் குந்த விநாயகனே! 16**

பொ. ரை :

ஒளி பொருந்திய திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! (தீயவனாகிய) நான் நல்லவர்கள் கூட்டத்தில் ஒருபோதும் விரும்பிச் சென்று அறியமாட்டேன். தியவர்கள் கூட்டத்தில் சேர்ந்து இருந்து செயல்படுபவரை எப்போதும் தவிர்ப்பதுமில்லை. இவ்வாறானஎன்னுடையஇயல்பை அறிந்துள்ளவர் நீர் ஒருவரே ஆதலின் எனக்கு உய்யும் வழி என்னவோ? (அதை நீரே அருள் செய்யவேண்டும்.)

அ. ள் :

நயத்தல் - விரும்புதல்; புக்கு - புகுந்து, சென்று; ஆடல் -செயற்படுதல். போக்ககிலேன் - போக்கும் ஆற்றல் அற்றவனாக இருக்கிறேன. 'கில்' - ஆற்றல் உணர்த்தும் இடைநிலை. வில் - ஒளி; ஆர்தரும் - நிலைத்திருக்கின்ற.



**364**

**கூடாப் பொருட்(கு)உளம் குன்றினைவேன்; அங்கை கூடியென்றும்**
**வாடாப் பொருளைஅல் வாழ்க்கையிற் பேண வகையறியேன்;**
**தேடாப் படிக்குன் திருவருள் இன்றெனச் சிந்திக்கிலேன்;**
**வீடாப் புகழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே! 17**

பொ. ரை :

அழியாத புகழையுடைய திருவொற்றியூரில் வாழும் செங்குந்த விநாயகப் பெருமானே!என்னால் அடைய முடியாத பொருளுக்கு (ஏங்கி) மனம்வருந்தித் துன்புறுவேன். அழகிய கையில் கிடைக்கும் திருவருளாகிய அழியாத பொருளைப் பெற்றுக் காப்பாற்ற வழி அறிய மாட்டேன். முயன்று தேட முடியாத அளவுக்கு உம்திருவருள் இல்லை (தேடினால் கிடைக்கும்) என்பதை எண்ணிப் பார்க்க மாட்டேன். (நான் வாழும் வழி எதுவோ?)

அ. ள் :

நைவேன் - வருந்துவேன்; வாடுதல் - அழிதல்; பேண— காப்பாற்றுதல்.

**365**

**பருப்புறு வெம்முலைப் பாவையர் ஆவலில் பட்[டு]எளியேன்**
**நெருப்புறு வெண்ணெயின் எய்த்தலை வேன், நினை நேரறியா**
**இருப்புறு வன்மனத் தேனுக்கு நின்னருள் என்னும்வகை**
**விருப்புறு மோஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே! 18**

பொ. ரை :

திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே,பருத்த தனபாரங்களை உடைய பெண்களின் ஆசையில் அகப்பட்டு, எளியவனாகிய நான் நெருப்பில் பட்ட வெண்ணெயைப்போல உருகி அலைகின்றேன். உம்மை நினைக்க அறியாத, இரும்பைப் போன்ற வலிய மனம் கொண்ட எனக்கு உமது திருவருளை அடையவிருப்பம் உண்டாகுமோ! உண்டாகாதே! அறியேன்.

அ. ள் :

பருப்பு- பருமை; எய்த்தல் — இளைத்தல்; வன்மனம் - கொடியமனம்; விருப்புறுமோ — விருப்பம் உண்டாகுமோ!

366

இலங்கையர் கோனைவிண் எற்றிச்சென் டாடி இரங்கவிடுத்[து]
அலங்கல்செய் வாழ்க்கை அளித்தாண்ட நின்னருள் ஆயுமதோ?
துலங்கு[ம்]செஞ் சாலி வயல்தொறும் மள்ளர்கள் துன்னவனம்
இலங்குறு சீர்ஒற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 19

பொ. ரை :

விளங்குகின்ற செஞ்சாலி நெல் விளைந்திருக்கும் வயல்களில் எல்லாம் உழவர்கள் நிறைந்திருக்க நீர் மிகுந்திருக்கின்ற சிறப்புடைய திருவொற்றியூரில் வாழும் செங்குந்த விநாயகப் பெருமானே! இலங்கை அரசனை (இராவணனை) ஆகாயத்தில் தூக்கிப் பந்து போல எடுத்து வீசி, அவன் வருந்துமாறு செய்து, பின்பு மாலையணிந்த உயர்ந்த வாழ்க்கையைத் தந்து அருள் செய்த உமது திருவருளின் தன்மை (என்னால்) ஆராயத் தக்கதோ?

அ. ள் :

எற்றி - எடுத்துவீசி; அலங்கல் - பூமாலை; சாலி - சம்பா நெல்; மள்ளர்கள் - உழவர்கள்; துன்னுதல் - நெருங்குதல்; வனம் - நீர்.

கதைக் குறிப்பு :

"இராவணன் கயிலாயத்தில் சிவபெருமானிடமிருந்து ஓர் இலிங்கத்தைப் பெற்று அதை இலங்கையில் பிரதிட்டிக்க எடுத்துச் செல்லத் தேவர்கள், 'அந்த இலிங்கம் இலங்கையில் பிரதிட்டிக்கப் பட்டால இராவணனை யாராலும் அழிக்க முடியாது' என்று சொல்லி விநாயகனை வேண்ட அவர் ஓர் அந்தணச் சிறுவனாய் இராவணன் முன்னே வர, இராவணன், 'நான் சிறுநீர் கழித்து வரும் வரையில் இந்த இலிங்கத்தைத் தரையில் வைக்காமல் உன் கையிலே வைத்திரு' என்றுசொல்லிக் கொடுத்துச் செல்ல, விநாயகர் அவன் வருவதற்குள் மூன்று முறை அவனை அழைத்து விட்டு இலிங்கத்தைத் தரையில் வைத்து விட்டார். இராவணன் வந்து எடுக்க அது, பெயராமையால் சினந்து அந்தணச் சிறுவனைத் தலையில் குட்டினான். விநாயகர் சுய உருவத்துடன்தோன்றித்தும்பிக்கையால் இராவணனை எடுத்து வானத்தில் பந்துபோல் பலமுறை வீசினார். இராவணன் அழுது வேண்டிக்கொள்ளப் பின்பு விநாயகர் அவனை சுகமாய்ப் போகும்படி விடுத்தார்" என்பது பிரமோத்தர காண்டத்தில் சொல்லப்பட்டது. இலிங்கம் அன்று நிலை பெயராது வேரூன்றிய தலந்தான் கோகர்ணம்.



367

எண்ணில் பெரியர் எடுத்தோதும் நல்லறத்(து) எய்துகிலேன்,
மண்ணில் பெரும்பவம் ஆற்றும்புன் மாந்தர் மருங்ககலேன்,
கண்ணில் திகழொளி போன்றன்பர் யாரையும் காத்தருள்வான்
விண்ணில் பொலியொற்றி யூர்வாழ் செங் குந்த விநாயகனே. 20

பொ. ரை :

கண்ணில் பொருந்தி நீங்காமல் இருக்கின்ற ஒளிபோல அன்பர் அனைவரையும் (திருவருளால்) காப்பாற்றியருள்வதற்காக, வானுலகம் போல விளங்குகின்ற திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே, எண்ணற்ற உயர்ந்தவர்கள் எடுத்துக் கூறுகின்ற நல்ல அறவழிகளில் நான் சென்று சேர மாட்டேன். இவ்வுலகில் பெரிய பாவச் செயல்களைச் செய்யும் அற்பர்கள் அருகில் இருந்து விலகவும் மாட்டேன். (இது என்ன பாவமோ?)

அ.ள்:

எண்ணில் — எண் இல்லாத (அளவற்ற), எய்துதல் — சேர்தல்; பவம் — பாவம்; புன்மாந்தர் — கயவர், அற்பர்; மருங்கு- அருகு, பக்கம்; விண்ணில் — வானுலகம் போன்று.

368

பொன்னியிப் பூதலம் யாண்டும் பொலியப், பொதி யன்தன்பால்
மன்னிய மந்தா கினிசேர்நற் கன்னலை வாயசமாத்
துன்னிமண் சாய்த்(து) அவன் துன்(பு) அகல் வித்தநின
சூழலென்னோ
மின்னியர் சூழொற்றி யூர்வாழ் செங் குந்த விநாயகனே. 21

பொ. ரை :

மின்னற் கொடி போன்ற பெண்கள் நிறைந்திருக்கின்ற திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! காவிரிநதி இந்த மண்ணுலகில் எல்லா இடத்திலும் பரவுமாறு, அகத்திய முனிவரிடத்தில் கங்கா தேவி அடங்கியிருந்த கரகத்தினைக் காக்கை உருவம் கொண்டு வந்து கவிழ்த்து அம்முனிவருடைய துன்பத்தையும் நீக்கிய உம்முடைய கருத்து என்னவோ? (அறியேன்.)

**கதைக்குறிப்பு :**

இறைவன் உமாதேவியைத் திருமணம் செய்துகொண்ட போது, அத்திருமணத்தைக் கண்டின்புற வந்து குழுமிய தேவர் முனிவர் முதலியோரது பாரம் தாங்காமல், வடதிசை தாழ்ந்து தென்திசை உயர்ந்து நிற்க, அதுகண்டு பயந்து நின்ற அனைவரின் பயத்தையும் போக்க இறைவனால் தென்திசைக்கு அனுப்பப் பட்டவர் அகத்தியர். அவ்வாறு அவர் வந்தபோது தம் கமண்டலத்தில் காவிரி நதியைக் கொண்டுவர, இந்திரனுடைய வேண்டுகோளின்படி விநாயகப் பெருமான் காக்கை வடிவம் கொண்டு கமண்டலத்தைக் கவிழ்த்து காவிரி நதி பெருக்கெடுத்து ஓடுமாறு செய்தமை கந்த புராணத்தில் சொல்லப்பட்டது.

**அ.ள்:**

பொன்னி — காவிரி; யாண்டும் — எங்கும்; மந்தாகினி — கங்காதேவி, கன்னல் — கரகம் (கமண்டலம்) வாயசம் — காக்கை; சூழல் — கருத்து; மின்னியர் — மின்னல் கொடி போன்ற பெண்கள்.

**369**

**திரிபொருள் உண்மையில் சிந்தையற் (று) ஆளல் செயும்சனகன்**
**பரிபவம் தீரப்புல் யாசித்து அவன்தன் படரொழித்துக்**
**கரிபல காட்டித் திரிசிர நற்றவர் காத்தளித்தாய்**
**விரிபொழில் சூழொற்றி யூர்வாழ் செங் குந்த விநாயகனே. 22**

பொ. ரை:

பரந்த சோலைகள் சூழ்ந்த திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே, முப்பொருள் தன்மையை உணராமல் உலகத்தை அரசாட்சி செய்யும் சனக மன்னனுடைய தாழ்வு நீங்கும்படி, (வேத நெறியில் சிறந்த திரிசிரா என்பவனிடம் சென்று, தம்மை வழிபட்டு அருச்சித்த) அறுகம் புல்லை யாசித்துப் பெற்று, அறியாமையை நீக்கும் சான்றுகளைக் காட்டி அம்மன்னனுடைய துன்பத்தை நீக்கிய நல்ல தவத்தில் சிறந்த முனிவர்களைக் காத்து அருள் செய்துள்வீர். (என் அறியாமையையும் நீக்கிக் காத்தருள் புரிவீராக)!



**கதைக் குறிப்பு:**

சனக மன்னன் பதிபசுபாசம் எனும் முப்பொருள் உண்மை சித்தாந்தத்தை உணராமல் ஏகான்ம வாதத்தில் நின்று, தானே பிரமம் என எண்ணிப் பிறரை மதியாது அரசாண்டுவந்தான். இதனை அறிந்த நாரத முனிவர், அவனுக்கு நல்லுணர்வு வரச் செய்யும்படி விநாயகப் பெருமானை வேண்ட, அவர் அந்தணர் வடிவு கொண்டு மன்னனிடம் சென்று தன் பசியைப் போக்குமாறு வேண்டினார். அரசன் அளித்த சமைத்த, வேகாத உணவுப் பொருள்கள் அனைத்தையும் உண்டும் பசியடங்காமல் போக, விநாயகப் பெருமான் அதே வடிவத்துடன், திரிசிரா என்பவனிடம் சென்று பசிதீர்க்கும்படிக் கேட்க, வறுமையில் இருந்த திரிசிராவும் அவன் மனைவி விரோசனையும், தம் மிடம் இருந்த விநாயகப் பெருமானை வழிபட்டு எஞ்சிய அறுகம் புல்லைக் கொடுக்கப் பெற்று உண்டு பசியடங்கினார் என்பது வரலாறு.

(இதன் விரிவை **விநாயகபுராணத்துள் தூர்வை யாசகப்படலம் தூர்வை துலையேற்றுப் படலம்** ஆகியவற்றில் காண்க.)

**அ. ள்:**

திரிபொருள் — பதி பசு பாசம் என்ற முப்பொருள்; சிந்தை — ஆராய்ச்சி; பரிபவம் — அவமானம்; படர் — துன்பம்; கரி — சான்று.

370

**கமலா சனனும் கருடப் பரியனும் கார்வையனும்**
**முமலர் கலியிடை மூழ்காத யோக முனிவரரும்**
**துமலா தியஒழி சுத்தரும் பத்தரும் சூழ்ந்துதொழும்**
**விமலா திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 23**

பொ. ரை :

தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனும், கருடனை வாகனமாக உடைய திருமாலும், மேகவாகனனாகிய இந்திரனும், மும்மலக் கடலில் அமுழ்ந்தாமல் யோக நிலையில் நிற்கும் முனிவர்களும், ஆரவாரம் முதலிய குற்றம் நீங்கிய தூய்மையானவர்களும், பக்தியில் சிறந்தவர்களும் ஒன்று கூடித் தொழுகின்ற தூய்மையானவனே! திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே, (உம்மை) வணங்குகின்றேன்.

அ. ள்:

கமல ஆசனன்—பிரமன்; பரி—குதிரை (இங்குவாகனத்தைக் குறித்தது.) கார்—மேகம்; முமலம் — மும்மலமாகிய ஆணவம் கன்மம் மாயை; ஆர்கலி — கடல்; துமிலம் — ஆரவாரம். அஃது எதுகை நோக்கி துமலம் என நின்றது. விமலன் — மலமற்றவன் (தூய்மையானவன்.)

371

**தொட்டோரைக் காயும் அனலினும், உள்ளத்துள் தோன்றல் செயப்**
**பட்டோரைக் காயும்வெங் காமம் பொலா (து), அதில் பாவியனேன்**
**மட்டோர்தல் இன்றி மடிந்தேன் புரந்தருள், மாயை அற**
**விட்டோர் புகழொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 24**

பொ. ரை:

உலகமாயை நீங்குமாறு பற்றினை விட்டவர்கள் புகழ்ந்து பேசுகின்ற திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! தீண்டினவர்களைச் சுடுகின்ற நெருப்பைக் காட்டிலும், மனத்தில் தோன்றிய அளவிலேயே அவ்வாறு எண்ணியவர்களை அழிக்கும் காமம் கொடியது (என அறிந்தும்) அதில் பாவியாகிய யான் அளவு அறியாமல் ஈடுபட்டு அழிந்தேன். (என்னை அதிலிருந்து மீட்டுக்) காத்தருள்வீராக.

'அம்பும், அழலும், அவிர்கதிர் ஞாயிறும்
வெம்பிச் சுடினும் புறம் சுடும்; — வெம்பிச்
சுவற்றி மனத்தைச் சுடுதலால், காமம்
அவற்றினும் அஞ்சப் படும்'

என்னும் நாலடியாரினைக் காண்க.

அ. ள்:

காய்தல் — அழித்தல்; மட்டு — அளவு; ஓர்தல் — ஆராய்ந்து அறிதல்; புரத்தல் — காப்பாற்றுதல்.

372

**பொய்யோ எனக்குப் பொருந்துண வாம்; புலை யும்கொலையும்**
**ஐயோ நிதம்புரி ஆன்மார்த்த பூசனை யாம்கனவுள்**
**மெய்யோ மருந்துக்கும் மேவரி தேல்உனை மேவல்எங்ஙன்?**
**வய்யோர் விளியொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 25**



பொ. ரை :

கொடியவர்கள் அழிதற்கு இடனாக இருக்கின்ற திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! எனக்குப் பொய்மொழியே பொருத்தமான உணவாகும். இழிவான செயல்களும், கொலையுமே நான் நாள் தோறும் செய்கின்ற ஆன்மார்த்த பூசை; மெய்பேசுதல் கனவிலும், மருந்துக்கும் இல்லை என்றால், நான் உம்மைப் பொருந்தி நின்று வாழுமாறு எங்ஙனம்?

அ. ள் :

பொருந்து உணவு — ஏற்ற ஆகாரம்; புலை - இழிசெயல்; மேவுதல் - பொருந்துதல்; வெய்யோர் - கொடியவர்.

373

**கடுகடென் றேகின் னரன் ஆகு[ம்] ஆகு கரந்துபுக்கு**
**மடுமடென் றேதவர் மன்னிடம் கல்லி மறைகறிப்பக்**
**குடுகுடென் றேவலித்[து] ஊர்ந்தோட்டி ஆண்ட குழக, மறம்**
**விடுவிடென் றோதொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 26**

பொ. ரை :

பாவத்தை விட்டொழியுங்கள் என்று உபதேசம் செய்கின்ற (உயர்ந்தவர்கள் வாழும்) திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப்பெருமானே! விரைவாகச் சென்று, தேவர்களின் ஒருபிரிவான கின்னர சாதியில் ஒரு கொடியவன் பெருச்சாளி வடிவம் கொண்டு மறைந்து ஓடி, மடமடவென்று தவ முனிவர்கள் வாழுமிடம் சென்று மண்ணைத்தோண்டி (அங்கிருந்த) வேதங்களைக் கடித்துத் தின்ன, (அவர்கள் வேண்ட) அவ்விடத்திற்கு ஓடிச் சென்று அந்தக் கின்னரனாகிய பெருச்சாளியை இழுத்து, அதன் மேலேறி ஊர்தியாகக் கொண்டு ஆண்டு கொண்ட இளமையுடையவரே, (உம்மை வணங்குகின்றேன்.)

அ. ள் :

கடு கடு, மடு மடு, குடுகுடு, -விரைவுக் குறிப்புச் சொற்கள்; கின்னரர் - இசைபாடும் தேவமரபினர்; ஆகு - பெருச்சாளி; கரத்தல் - மறைதல்; புக்கு - சென்று; தவர் - தவம் செய்பவர்; கல்லுதல் - தோண்டுதல்; கறித்தல் - கடித்துத் தின்னுதல்

குழகன் - இளமையுடையவன், (அழகன்); மறம் - பாவம்; அறத்துக்கு எதிரானது மறம். (மறம் என்னும் சொல் பல பொருள்களையுடையது, இங்குப் பாவம் என்னும் பொருளது.)

'அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி' என்னும் மணிவாசகரின் திருவாக்கினை நினைக்க.

374

**மாலோன் தரும்பெண்கள் ஆறிரு வோரையும் மாமறையென்**
**நூலோன் தரும்பெண்கள் ஓரிரு வோரையும் நூங்[கு]அவுண்**
**மேலோன் மரீசி தரும்பெண் ணையு[ம்]நனி வேட்[டு],அடல்கூர்**
**வேலோன்ற னோடொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 27**

பொ. ரை :

திருமாலின் புதல்வியர்களான **மோதை** முதலிய பன்னிருவரையும், வேதம் வல்ல பிரமதேவன் மகளிரான சித்தி, புத்தி எனும் இருவரையும் (பெருமையுடன்) மணந்து,(பிரமதேவரால் அவுணனாகுமாறு சபிக்கப்பட்ட) உயர்ந்த மரீசி முனிவர் பெற்றெடுத்த மகளான வல்லபையையும் திருமணம் செய்து கொண்டு, வலிமை மிகுந்த வேலாயுதத்தைக் கையில் கொண்டுள்ள முருகப் பெருமானுடன் திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! (உமக்கு வணக்கம்.)

அ. ள் :

மாமறையென் நூலோன் - பிரமன்; நூங்கு - பெருமை; வேட்டு-திருமணம் கொண்டு; அடல்-வலிமை; கூர்-மிகுதி.

கதைக் குறிப்பு :

பிரமதேவர் மனத்தில் தோன்றியவர் மரீசி முனிவர். இவர் பிரமதேவர் சரசுவதியைத் தோற்றுவித்துத் தாமே மணந்து கொண்டதை எண்ணிச் சிரிக்க, அதனால் பிரமன் சபிக்க அசுரரானவர். தவம் செய்து பிரமனால் சாபநீக்கம் பெற்றவர். இவர் விநாயகப் பெருமானை வேண்டித் தவம் செய்து விநாயகரின் இடப்பாகச் சக்தியைத் தாம் மகளாகப் பெறவும், அம்மகளை விநாயகர் திருமணம் செய்து கொள்ளவும் வரம் பெற்றவர். அவ்வரத்தின்படி சத்தியானவள் யமுனையாற்றில் ஒருதாமரை மலரில் கன்னியாகத் திருவுருக் கொண்டிருக்க, அவளை எடுத்து வந்து தம் மனைவியாகிய தேவவல்லியிடம்



கொடுத்து வளர்த்து வல்லபை என்ற அம்மகளை விநாயகப் பெருமானுக்குத் திருமணம் செய்து கொடுத்தவர்.

இந்த வரலாற்று விரிவை அபிதான சிந்தாமணியிலும், விநாயகபுராணம் வல்லபை கணேசர் திருவவதாரப் படலத்திலும் காண்க.

375

**அடையு மவருக் (கு)அ றாவினை போக்கும் அறுகொன்றினால்**
**விடையும் கரமும் புலைச்சியும் நன்முத்தி வீடுபெறப்**
**புடைநின்று அருள்தரும் புண்ணிய னே!புனி தம்சிறந்தோர்**
**மிடையும் திருவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 28**

பொ. ரை :

தூய்மை நிறைந்தவர்கள் நெருங்கியிருக்கின்ற திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! உம்மை வந்து தஞ்சம் என்று அடைந்து ஓர் அறுகம் புல்லைக் கொண்டு அர்ச்சித்து வழிபட்டவர்களின் தீராத தீவினைகளைப் போக்குகின்ற நீவிர், உம்மை வழிபட்ட எருதிற்கும், கழுதைக்கும், புலைச்சிக்கும் அருகிலிருந்து முத்தியளித்து அருள் புரிந்தீர், (அடியேனுக்கும் அருள் செய்து முத்தியருள்வீராக.)

அ. ள் :

அறாவினை - நீங்காத தீவினைகள்; விடை - எருது; கரம்- கழுதை; புடை - அருகில்; புனிதம் - தூய்மை; மிடைதல் - செறிந்திருத்தல், நெருங்கியிருத்தல்.

கதைக் குறிப்பு :

அவந்தி நகரத்து அரசன் சுலபன். அவன் மனைவி சுபத்திரை. மதுசூதனன் என்னும் வறிய அந்தணன் ஒருவன் அரசனிடம் பொருள் யாசித்தான். அரசன் இகழ்ச்சியாகச் சிரிக்க அந்தணன் அவனை எருது வடிவம் அடையுமாறு சபித்தான். அதனைக் கேட்டுச் சினந்த அரசனின் மனைவி அந்தணனைக் கழுதையாகும் படிச் சபித்தாள். 'தவறற்ற என்னைச் சபித்த நீ புலைச்சியாகுக' என அந்தணன் அவளைச்சபித்தான்.

மூவரும் நெடுநாள் வருந்தி இருந்தனர். ஒரு நாள் வயலை உழுத எருது வயலில் மேய்ந்திருக்க, பொதி சுமந்த கழுதை இளைப்பாற அங்கு வர, புல்லறுக்க வந்த புலைச்சியும்

அவ்விடத்திற்கு வந்தாள். அப்போது பெருமழை வர, மூவரும் அருகில் இருந்த விநாயகர் கோயிலினுள் சென்றனர். அன்று சதுர்த்தி நாள் முனிவர்கள் மந்திரம் ஓதிக் கொண்டிருந்தனர். கழுதையும் எருதும் புலைச்சியிடமிருந்த புல்லைத் தின்னத் தங்களுக்குள் சண்டையிட்டன. முனிவர்கள் மூவரையும் அடித்து விரட்டினர் மூவரும் கோயிலைச் சுற்றி ஓடும் போது காற்றினால் புலைச்சி கையிலிருந்த புல்லில் ஒன்று விநாயகரின் திருமுடியிலும். எருதின் வாயிலிருந்த புல் துதிக்கையிலும், கழுதைவாயில் இருந்த புல் திருவடியிலும் விழுந்தன. அடிபட்ட வருத்தத்தாலும் சுற்றி ஓடிய களைப்பினாலும் அம் மூவரும் இறந்தனர். விநாயகப் பெருமான் தம் மீது வீழ்ந்த அறுகம் புல்லையே அருச்சனையாகக் கொண்டு அம்மூவருக்கும் முத்தி யளித்தருளினார்.

(இந்த வரலாற்று விரிவை விநாயக புராணம் விடைகரம் புலைச்சி வீடுறு படலத்தில் காண்க.)

376

**அம்புவி யோர்க்குன் அருள்பெற் (று) அருந்தமி ழா (ம்)மறையை**
**உம்பரும் வாழ்த்த உகந்தளித் (து) உன்பணிக் கோவலிலா**
**நம்பியை ஆண்ட நலத்தினை நீநிற்க நான்துயரால்**
**வெம்புவ தோவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 29**

பொ. ரை

திருவொற்றியூரில் வாழ்கின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! இவ்வுலகில் உள்ளவர்களுக்கு, உம்முடைய திருவருளைப் பெற்று, அரிய தமிழ் மறையான தேவாரத்தினை, தேவர்களும் போற்றுமாறு, உமது வழிபாட்டைவிடாது செய்த நம்பியாண்டார் நம்பிகள் மூலமாக உலகிற்கு மகிழ்ந்தளித்தும், உம்முடைய திருத் தொண்டிற்கு அவரை உரியவராக்கிக் கொண்டும் ஆண்டு கொண்ட, நன்மை புரிகின்ற தன்மையை யுடைய தேவரீர் இருக்கவும் நான் துன்பப்பட்டு வருத்தப் படுவது நியாயமாகுமோ? (என் துன்பத்தைப் போக்கி ஆண்டருள் செய்வீராக என்பது கருத்து)

அ. ள்:

உம்பர் — தேவர்; ஓவல் — நீங்குதல்; நலத்தினை — நலத்தை உடைய நீவிர்; வெம்புதல் — வருந்துதல்.



377

**அரும்பா முலைச்சிறு பேதையர் தாமும், அவநசையால்**
**இரும்பாம் மனத்தரும் ஆற்றா ரென்(று) ஏச என் ஏந்திழையைத்**
**திரும்பா வணம்கவர்ந் திண்டுறில் யான்தனி சீவிப்பதோ?**
**விருப்பா ரிலாவொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 30**

பொ. ரை:

உம்மை விரும்பாதவர் இல்லாத (முத்தியின்பம் வேண்டுவோர் வாழுகின்ற) திருவொற்றியூரில் உறையும் செங்குந்த விநாயகப் பெருமானே! தனங்கள் மார்பில் தோன்றாத இளம் பெண்களும் பொருந்தாத ஆசையினால் தங்கள் மனத்தை இருப்புபோல ஆக்கிக் கொண்டவர்களும், 'இவர் இத்துன்பத்தைத் தாங்கிக் கொள்ள மாட்டார் (இஃது என்ன அறியாமை)' என்று பழிக்குமாறு (நான் வருந்தும்படி) என் துணைவியைத் திருப்பி வாராதபடி அழைத்துக் கொண்டு சென்றால் நான் எங்ஙனம் தனித்து வாழுவேன்?

(இந்நூலாசிரியர் வாழ்க்கைத் துணையை இழந்தவர் போலும். தெளிவாக அறியக் கூடவில்லை )

அ ள்:

பேதை — ஏழுவயதுப்பெண்; அவநசை — வீண் ஆசை ஆற்றுதல் — தாங்கிக் கொள்ளல்; ஏந்திழை — அணி கலன்கள் தாங்கியவள்.

378

**கரு பின் இரதமும் தேனும் அளைஇயதென் காண்சொல்கொடு**
**சுரும்பும் ஞிமிறும் தொடர்நறும் பூவில் தொடுத்தடியேன்**
**பெரும்புன் பவங்கெடப் பேணிநின் றார்த்த பிணையலைமேல்**
**விரும்பும் எழிலொற்றி யூர்வாழ்செங் குந்த விநாயகனே. 31**

பொ. ரை:

கரும்புச்சாறும் தேனும் கலந்தது போன்று காணப்படும் தமிழ்ச் சொற்களால், வண்டுகள் சேர்ந்துள்ள தேன் நிறைந்த பூமாலை போன்ற பாமாலையை உம்மீது அடியேன் என்னு

டைய இகழ்ச்சியான பிறப்பு நீங்குமாறு செய்தளித்தேன். அதை விரும்பி ஏற்றுக் கொள்ளும், அழகிய திருவொற்றியூரில் வாழுகின்ற செங்குந்த விநாயகப் பெருமானே! உமக்கு என் வணக்கம்.

அ. ள்:

இரதம் — இரசம் — சாறு; அளைஇய — கலந்த; அளபெடை அலகுபெறாது நின்றது. சுரும்பு, ஞிமிறு என்பன வண்டினத்தின்வகைகள்; பலம்—பிறப்பு; பிணையல் — மாலை.

வாழி

379 வாழிதிரு வொற்றியூர் வாழிவடி வாம்பிகைத்தாய்
வாழி அவள்கணவன் மக்களுடன் — வாழியவே
இந்தப் புவியில்வளர் எவ்வுயிரும் நன்னடையில்
குந்தப் பெரியருடன் கூர்ந்து.

பொ. ரை :

திருவொற்றியூர் என்றும் நிலைத்து வாழ்வதாக! வடிவாம்பிகை அம்மை அவருடைய கணவருடனும் பிள்ளைகளுடனும் என்றென்றும் வாழ்வாராக! இவ்வுலகில் உள்ள எல்லா உயிரினங்களும் நல்ல ஒழுக்கநெறியில், செங்குந்தப் படையைக் கைக்கொண்ட உயர்ந்தோருடன் கூடி மிக இன்புற்று வாழ்வதாக!

திருவொற்றியூர்ச்
செங்குந்த விநாயகர் மாலை முற்றிற்று.
வேலும் மயிலும் துணை.
செங்குந்த விநாயகன் திருவடி வாழ்க.

உ
சிவமயம்
முருகக் கடவுள் துணை
காஞ்சி வீரபத்திர தேசிகர் இயற்றிய

# செங்குந்த சிலாக்கியர் மாலை

சிலாக்கியர் என்பது உயர்ந்தோர் என்று பொருள்படுவது. செங்குந்தப் படையைக் கொண்டமையால் செங்குந்தர் என்று புகழப்படும் மரபினருள் உயர்ந்தவர்கள் இவர் என்று கூறும் நூல் இதுவாகும். இந்நூல் கட்டளைக் கலித்துறை என்னும் பாவினவகையால் இயன்றது.

இந்நூலாசிரியர், சைவ சித்தாந்த வேதாந்த ஞானாசிரியராக விளங்கியவர் எனவும், மெய்க்கண்ட சிவாசாரியர் மரபில் வந்த முத்தமிழ்ச்சூரி வீரபத்திர தேசிகர் எனவும் போற்றப்படுகிறார்.

விநாயகர் மீது இயற்றப் பட்டுள்ள காப்புச் செய்யுள் நேரிசை வெண்பாவால் ஆனது.

காப்பு

380 கமலன் முதலாக் கழறுபெருந் தேவர்
மும்மலமொழி அத்தி முகனே!— அமலனருள்
சீரார் குந்த சிலாக்கியர்மா லைசொலநீ
நேராயென் நாவுவந்து நில்.

பொ.ரை :

பிரமதேவன் முதலாகச் சொல்லப்படுகின்ற எல்லாத் தேவர்களுடைய மும்மலங்களையும் அழித்து அருள்புரியும் யானை முகம் உடைய விநாயகப் பெருமானே! மல அழுக்கற்றவராகிய சிவபெருமான் அருளிய சிறப்பு மிக்க செங்குந்தரில் உயர்ந்தோர் மீது நூல் செய்வதற்குத் துணையாக என்வாக்கில் மகிழ்ச்சியுடன் நின்று அருள் புரிவீராக!

அ. ள் :

கமலன் - தாமரையில் வாழும் பிரமன்; கழறுதல்-சொல்லுதல்; மும்மலம் - மூன்று குற்றம் (ஆணவம், கன்மம், மாயை); அததி- யானை; மலன் × அமலன் — குற்றமற்றவன் (சிவபெருமான்).

சண்முகக் கடவுள்

381 பொன்னுல கோர்; அவுண் போர்க்குடைந்[து] உற்ற
பொழுதமலன்
முன்னுறும் ஆறு முகக்கண் பொறிதர முற்றிவெஞ்சூர்
மன்னுறும் மாயேந் திரபுரி நண்ணிஅம் மாற்றலனைத்
தின்னுறும் வேல்கொண்ட செவ்வேள்செங் குந்த
சிலாக்கியனே. 1

பொ. ரை:

பொன்னுலகமாகிய தேவலோகததில் வாழும் தேவர்கள் அவுணனாகிய சூரபதுமனுடைய போருக்கு எதிர்நிற்க முடியாமல் தோற்றுவந்த பொழுது, சிவபெருமான் தம் ஆறு நெற்றிக் கண்களில் இருந்து தீப்பொறிகளை வெளிப்படுத்த, அவைகளில் தோன்றி சூரபதுமனுடைய வீரமகேந்திரபுரி' என்னும் நகரினுள் சென்று, அப்பகைவனை அழிக்கும் வேலைக் கையில் தாங்கிய முருகப் பெருமான் செங்குந்தர் குலத்தில் தோன்றிய உயர்ந்தவனாவான்.

அ. ள்.

உடைந்து — தோற்று; மன்னுறும் — வாழும்; நண்ணுதல் -அடைதல்; மாற்றலன் — பகைவன்.

நவவீரர்

382
ஆரன்(அ)வுண் மாள உகுத்த அனற்பொறிக்[கு] அஞ்சுமுமை
வரமுறு தாள்சிலம் பின்மணி ஒன்பதுள் மன்னியெழும்
உருவொளிச் சத்திகள் மாட்டு(உ)தித் திட்டி உவளருளச்
செருமுகம் கா(ண்)நவ வீரர்செங் குந்த சிலாக்கியரே. 2

பொ. ரை:

சிவபெருமான் சூரபதுமனை அழிக்கத் தோற்றுவித்த தீப்பொறிகளைக்கண்டு அஞ்சி ஓடிய உமாதேவியின் காற்சிலம்பில் இருந்து சிதறிய நவமணிகளில் தோன்றிய நவசக்திகளிடத்தில் தோன்றி, உமாதேவியால் செங்குந்தம் அருளப்பட்டுச் சென்று போர்க்களம் கண்ட நவவீரர்கள் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவர்களாவார்கள்



அ. ள்:

உகுத்த — சிந்திய; ஈட்டி — எறிவேல், குந்தம்; உவள்-அவள் (உமாதேவி); செருமுகம் — போர்க்களம்.

இலக்கவீரர்

383 உமையின் உருஒளிச் சத்திகள் அஞ்ஞான்[று] உமாபதிதன்
இமையும் அருள்கொடு சூலுத லும்உவ[ள்] ஏய்சினத்தால்
சமையும் வியர்விற் கரவாளி னோடும் சனித்துக்கந்த
சிமையம் உறுமிலக் கத்தோர்செங் குந்த சிலாக்கியரே. 3

பொ. ரை:

உமாதேவியின் உருவில் தோன்றிய நவசக்திகள் இறைவனுடைய திருவருள் நோக்கால் கருப்பமுற, அம்மை கொண்ட கோபத்தால் அச்சக்திகளிடம் உண்டான வியர்வையில் இருந்து, வாளேந்திய கையினராகத் தோன்றி, கந்தகிரியில் (முருகனுக்குத் துணையாக) வந்துசேர்ந்த இலட்சம் வீரர்கள் செங்குந்தர்களுள்ளே உயர்ந்தோர்களாவர்.

அ. ள்:

இமை — நொடிப்பொழுது; இமையும் அருள் — நொடிப் பொழுதில் உண்டான திருவருள்; சூலுதல் — கருவுறல்; ஏய்சினம் — கொண்ட கோபம்; சமையும் — உண்டாகும்; சனித்து -தோன்றி; சிமையம் — மலை.

ஆயிரத்துத் தொள்ளாயிரவர்

384 பாடா ருமிலக் கத்தொன் பதின்மர் பயந்தளித்த
ஓரா யிரத்துத்தொள் ளாயி ரவர்கள், மற் றூழிமுதல்
பேரால் நிறைந்த பெரியோர் எனப்பல்ப்ர பந்தம்பெற்ற
சீராள ரோடவர் செல்வர்செங் குந்த சிலாக்கியரே. 4

பொ. ரை:

பெருமை நிறைந்த [நவவீரர், இலக்கம்வீரர் ஆகிய] இலட்சத்தொன்பதின்மர் ஈன்றளித்த ஆயிரத்துத் தொள்ளாயிரவர் என்றும், ஊழிக்காலத்தும் 'முதலியர்' என்னும் பெயரால் நிறைவுடைய பெரியோர்கள் என்றும், பலவகையான சிறந்த நூல்களைக் [தம்மீது பிறர் இயற்ற] கொண்ட சிறப்புடையவர்களும், அவர்களுடைய பிள்ளைகளும் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவர்களாவர்.

அ. ள்:

பாடாரும் — பாடு + ஆரும் — பெருமை நிறைந்த; முதல்பேர் — 'முதலியர்' என்னும் பெயர்; சீராளர் — சிறப்பை [ஆள்பவர்] உடையவர். செல்வர் — மக்கட் செல்வமாய்த் தோன்றியவர்கள்.

திருக்கச்சியாளவந்த
வள்ளலார் மடாலயச் சைவாசாரியர்

**385 அன்றா ளுடைப்பிள்ளை கண்டோங்கும் பாளைய மாகிக்கச்சி**
**நின்றா டும்ஊருட் சமயாதி தீக்கை நிறுவிமுத்தி**
**குன்றா வகையில்தந் தாள வரும்வள்ள லார்குழுவில்**
**சென்றா டுரிமையர் யாரும்செங் குந்த சிலாக்கியரே. 5**

பொ. ரை:

காஞ்சிபுரமாகிய ஊரின் நடுவில், முன்பு ஆளுடைப் பிள்ளையார் வந்து கண்டதனால் உயர்ந்து நிற்கும் பிள்ளையார்பாளையம் பகுதியில், சமயம் முதலிய தீட்சைகள் அளித்துக் குறைவற்ற நிலையில் முத்திதர வல்ல வள்ளலார் திருமடத்தில் [இருந்து அருள்புரியும் தேசிகர் குழுவில்] இருக்கும் உரிமையுடையவர்கள் செங்குந்தர்களுள்ளே உயர்ந்தோர்களாவர்.

திருஞானசம்பந்தப்பெருமான் வந்த தங்கியமையால் காஞ்சியில் செங்குந்தர் வாழும் பகுதி 'பிள்ளையார் பாளையம்' என்று வழங்குவது அனைவரும் அறிந்தது. அங்கு ஆளுடைய பிள்ளையார் கோயிலும் உள்ளது. அப்பகுதியில் வள்ளலார் மடம் இருந்த பகுதி எதுவென இப்போது அறிய இயலவில்லை.



அ. ள்:

ஆளுடைப்பிள்ளை — ஞானசம்பந்தர்; சமயாதிதீக்கை — சமயம், விசேடம், நிருவாணம் ஆகிய முத்திறத் தீட்சைகள்.

திருவாலங்காடு
கார்க்கோடக மடாலயச் சைவாசாரியர்

**386 முக்கணன் எண்தோள் முதல்வனோர் தாளண்டம் முட்டவிட்டங்[கு]**
**ஒக்கநின் றாடும் அமரியை வென்ற உலப்பி[ல்] நலம்**
**புக்குறும் ஆல வனத்திற்கார்க் கோடன் புரிமடத்தெண்**
**திக்குமெச் சக்கலை தேர்ந்தோர்செங் குந்த சிலாக்கியரே. 6**

பொ. ரை:

மூன்று கண்களும், எட்டுத்தோள்களும் உடைய சிவ பெருமான் ஓர் திருவடியை வான் முட்டவிட்டு, அங்கு அவருடன் நிகராக நின்று நடனமாடும் காளியை வெற்றி கொண்ட அழியாத நன்மைகள் சேரும் திருவாலங்காட்டில் கார்க் கோடக மடத்தில், எட்டுத்திசையிலுள்ளோரும் புகழக் கலைகளில் உயர்ந்து நிற்பவர்கள் செங்குந்தர்களுள் உயர்ந்தோர்களாவர்.

அ. ள்:

அமரி — காளி, உலப்பில் நலம் — அழியாத நன்மை; புரிதல் — செய்தல்.

திருவழுவூர் வேதநாயக மடாலயச்
சைவாசாரியர்

**387 பூசல்வெண் ணீறும் புலம்பனல் மாபெரும் புகல்நரகென்(று)**
**ஏசி இகலால் வழுவுவித் தோநிறை முன்நிலைமை**
**பேசியேகி நான்மறை ஓதக் காட்டி வேதப்பெருக்கின்**
**தேசுறு நாயகர் என்போர்செங் குந்த சிலாக்கியரே. 7**

(இப்பாட்டின் பாடம் பெரிதும் எழுத்துப் பிழைகளையும் தளைப் பிழைகளையும் உடையதாய்க் காணப்படுகின்றது. உண்மைப் பாடம் கிடைத்தால் பொருள் விளங்கும்.)

மெய்கண்ட சிவாசாரியர்

388 முந்தடல் மொய்ம்பன் அருந்தவம் ஆற்றும் முசுமுகனை
நிந்தைசெய் ஊழ்முறை நிற்ப உலகில் நிரீச்சுரர் கோன்
உந்த மகதி முனியர னாரிடத்(து) ஓதவுவை
சிந்தச் சுவேதத் துதித்தோர்செங் குந்த சிலாக்கியரே. 8

('நவரத்தின சத்திகளது வெயர்வையில் ஓர் இலட்சம் வீரர்கள் தோன்றியது போல, நாரதமுனிவர் ஏதோ ஒரு செய்தியைக் கூறக் கேட்டுச் சிவபெருமான் சினங் கொண்ட பொழுது அவருடைய வெயர்வையில் சில வீரர்கள் தோன்றினர் அவர்களும் செங்குந்த சிலாக்கியரே' என இப்பாடல் கூறுவ தாகத் தெரிகின்றது. ஆயினும், வரலாறுதெரிய வாராததனால், இதன் பொருள் தெளிவாக விளங்கவில்லை.)

கிளை நாட்டு மடாலயச் சைவாசாரியர்

389
பண்டெம தன்னை பரனார் இடம்பெறப் பண்ணுறுநற்
றொண்டின் நிலைமைக் கிடும்எல்லை நான்கையும் சூழுமொன்பரன்
எண்தனி நாட்டுள் உறை,கைக் கோளருக்கிருந் தீக்கைசெயும்
திணடியை ஒப்பவர் யாரும்செங் குந்த சிலாக்கியரே. 9

பொ. ரை :

முற்காலத்தில் எம் அன்னையாகிய உமாதேவி இறைவனுடைய இடப்பாகத்தைப் பெறுவதற்காகச் செய்யும் நன்மை பொருந்திய தவத்திற்கான இடமாகிய காஞ்சிபுரத்தின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்துள்ள எழுபத்திரண்டு நாடுகளிலும் வாழ்கின்ற செங்குத்தர்களுக்குத் தீட்சைகளைச் செய்விக்கின்ற, அரசர்களுக்கு ஒப்பான ஆசாரியர்கள் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவர்களாவர்.

அ. ள் :

ஒன்பான் எண் தனிநாடு—செங்குந்தர் வாழும் 72நாடுகள். (கிழக்கே சிவபுர நாட்டுக்கிளைகள் 17, தெற்கே தொந்திபுர நாட்டுக்கிளைகள் 17, மேற்கே விரிஞ்சிபுரநாட்டுக்கிளைகள்17, வடக்கே சோழசிங்கபுர நாட்டுக் கிளைகள் 17 ஆக 68 உம் சிவபுரநாடு தொந்திபுரநாடு, விரிஞ்சிபுரநாடு, சோழசிங்கபுர நாடு ஆகிய 4 உம் சேர்ந்து 72நாடுகள்)



திருக்கச்சிமாவடித் தேவசிங்காசனாதிபதிகள்

390 காவல ராகிப்பன் னாட்டுளு மேழ்வில காரமெலாம்
சேவகத் தோடினி தாய்ந்து நடுநிலை தேர்ந்துரைப்பான்
மாவடிக் கீழண்டர் சூழ.மும் மண்டல மன்னவரால்
தேவசிங் காதனம் பெற்றோர்செங் குந்த சிலாக்கியரே. 10

பொ. ரை :

(உலக நன்மையைக்) காப்பாற்றுகின்ற தன்மை கொண்டு பலநாடுகளில் எழுகின்ற வழக்குகளையெல்லாம் வீரத்துடன் ஆராய்ந்து நடுவுநிலையுடன் முடிவு சொல்வதற்கு, திருக்கச்சி மாவடியின் கீழ் தேவர்கள் சூழ்ந்திருக்க, சேரசோழ பாண்டிய மண்டல மன்னவர்களால் தேவலோகத்திலிருந்து பெற்ற சிங்காதனத்தை உடையவர்கள் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவர்களாவார்கள்.

அ. ள் :

சேவகம் - வீரம்; தேர்ந்து - ஆராய்ந்து முடிவு செய்து; அண்டர் - தேவர்; 'எழு' என்பது 'ஏழ்' எனத் திரிந்து வந்தது.

திருவாரூர் முதலிய சத்தவிடங்கத் தாபகர்

391 பாரளந் தோனன்று பூசித் திடர்கெடப் பண்ணவர்கோக்(கு)
ஆர அளித்துள அண்ணலை வேண்டி, அவனியுளோர்
பூரணவாழ்வுற ஆரூர்மு னாம்எழு பூம்பதிக்கண்
சீருறத் தாபித்த மேலோர்செங் குந்த சிலாக்கியரே. 11

பொ . ரை :

உலகளந்த திருமால் முன்காலத்தில் பூசித்துத் துன்பம் தீருமாறு இந்திரனுக்கு அளித்த தியாகராசப் பெருமானை, வேண்டி ஒருவரால் மற்றும் அறுவரை விரும்பிக் கொண்டு வந்து, உலகில் உள்ளோர் நிறைவாழ்வு பெறும் பொருட்டுத் திருவாரூர் முதலிய ஏழு தலங்களில் சிறப்புடன் நிறுவி வைத்தவர்கள் செங்குந்தர்களில் உயர்ந்தோராவர்.

அ. ள் :

பாரளந்தோன்—திருமால்; பண்ணவர்கோன்—இந்திரன் (திருவாரூர், திரு கோளிலி, திருக்காறாயில், திருநள்ளாறு.

### மெய்கண்ட சிவாசாரியர்

388 முந்தடல் மொய்ம்பன் அருந்தவம் ஆற்றும் முசுமுகனை
நிந்தைசெய் ஊழ்முறை நிற்ப உலகில் நிரீச்சுரர் கோன்
உந்த மகதி முனியர னாரிடத்(து) ஓதவுவை
சிந்தச் சுவேதத் துதித்தோர்செங் குந்த சிலாக்கியரே. 8

('நவரத்தின சத்திகளது வெயர்வையில் ஓர் இலட்சம் வீரர்கள் தோன்றியது போல, நாரதமுனிவர் ஏதோ ஒரு செய்தியைக் கூறக் கேட்டுச் சிவபெருமான் சினங் கொண்ட பொழுது அவருடைய வெயர்வையில் சில வீரர்கள் தோன்றினர் அவர்களும் செங்குந்த சிலாக்கியரே' என இப்பாடல் கூறுவதாகத் தெரிகின்றது. ஆயினும், வரலாறுதெரிய வாராததனால், இதன் பொருள் தெளிவாக விளங்கவில்லை.)

### கிளை நாட்டு மடாலயச் சைவாசாரியர்

389
பண்டெம தன்னை பரனார் இடம்பெறப் பண்ணுறுநற்
றொண்டின் நிலைமைக் கிடும்எல்லை நான்கையும் சூழுமொன்பரன்
எண்தனி நாட்டுள் உறை,கைக் கோளருக்கிருந் தீக்கைசெயும்
திணடியை ஒப்பவர் யாரும்செங் குந்த சிலாக்கியரே. 9

பொ. ரை :

முற்காலத்தில் எம் அன்னையாகிய உமாதேவி இறைவனுடைய இடப்பாகத்தைப் பெறுவதற்காகச் செய்யும் நன்மை பொருந்திய தவத்திற்கான இடமாகிய காஞ்சிபுரத்தின் நான்கு எல்லைகளையும் சூழ்ந்துள்ள எழுபத்திரண்டு நாடுகளிலும் வாழ்கின்ற செங்குத்தர்களுக்குத் தீட்சைகளைச் செய்விக்கின்ற, அரசர்களுக்கு ஒப்பான ஆசாரியர்கள் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவர்களாவர்.

அ. ள் :

ஒன்பான் எண் தனிநாடு—செங்குந்தர் வாழும் 72நாடுகள். (கிழக்கே சிவபுர நாட்டுக்கிளைகள் 17, தெற்கே தொந்திபுர நாட்டுக்கிளைகள் 17, மேற்கே விரிஞ்சிபுர நாட்டுக்கிளைகள் 17, வடக்கே சோழசிங்கபுர நாட்டுக் கிளைகள் 17 ஆக 68 உம் சிவபுரநாடு தொந்திபுரநாடு, விரிஞ்சிபுரநாடு, சோழசிங்கபுர நாடு ஆகிய 4 உம் சேர்ந்து 72நாடுகள்)



### திருக்கச்சிமாவடித் தேவசிங்காசனாதிபதிகள்

390 காவல ராகிப்பன் னாட்டுளு மேழ்விவ காரமெலாம்
சேவகத் தோடினி தாய்ந்து நடுநிலை தேர்ந்துரைப்பான்
மாவடிக் கீழண்டர் சூழ.மும் மண்டல மன்னவரால்
தேவசிங் காதனம் பெற்றோர்செங் குந்த சிலாக்கியரே. 10

பொ. ரை :

(உலக நன்மையைக்) காப்பாற்றுகின்ற தன்மை கொண்டு பலநாடுகளில் எழுகின்ற வழக்குகளையெல்லாம் வீரத்துடன் ஆராய்ந்து நடுவுநிலையுடன் முடிவு சொல்வதற்கு, திருக்கச்சி மாவடியின் கீழ் தேவர்கள் சூழ்ந்திருக்க, சேரசோழ பாண்டிய மண்டல மன்னவர்களால் தேவலோகத்திலிருந்து பெற்ற சிங்காதனத்தை உடையவர்கள் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவர்களாவார்கள்.

அ. ள் :

சேவகம் - வீரம்; தேர்ந்து - ஆராய்ந்து முடிவு செய்து; அண்டர் - தேவர்; 'எழு' என்பது 'ஏழ்' எனத் திரிந்து வந்தது.

### திருவாரூர் முதலிய சத்தவிடங்கத் தாபகர்

391 பாரளந் தோனன்று பூசித் திடர்கெடப் பண்ணவர்கோக்(கு)
ஆர அளித்துள அண்ணலை வேண்டி, அவனியுளோர்
பூரணவாழ்வுற ஆரூர்மு னாம்எழு பூம்பதிக்கண்
சீருறத் தாபித்த மேலோர்செங் குந்த சிலாக்கியரே. 11

பொ . ரை :

உலகளந்த திருமால் மூன்காலத்தில் பூசித்துத் துன்பம் திருமாறு இந்திரனுக்கு அளித்த தியாகராசப் பெருமானை, வேண்டி ஒருவரால் மற்றும் அறுவரை விரும்பிக் கொண்டு வந்து, உலகில் உள்ளோர் நிறைவாழ்வு பெறும் பொருட்டுத் திருவாரூர் முதலிய ஏழு தலங்களில் சிறப்புடன் நிறுவி வைத்தவர்கள் செங்குந்தர்களில் உயர்ந்தோராவர்.

அ. ள் :

பாரளந்தோன்—திருமால்; பண்ணவர்கோன்—இந்திரன் (திருவாரூர், திரு கோளிலி, திருக்காறாயில், திருநள்ளாறு,

திருநாகைக்காரோணம், திருவாய்மூர், திருமறைக்காடு என்பன சப்த விடங்கத் தலங்கள் ஆகும்.)

சிவாலய குகாலய தருமகர்த்தத்துவ
பரிபாலன ஆட்சியோர்

392 **சோணாட்டு ளும்தொண்டை மானாட்டுளும் அம்சு ராதியரால்**
**பேணாநின் றோங்குமெம் பிஞ்ஞகன் கந்தன் பிறங்கிநிற்கும்**
**மாணார் நிலைய பரிபா லனத்தொழில் மன்னஎன்றும்**
**சேணாடர் போற்றிடச் செய்வோர்செங் குந்தசிலாக்கியரே.** *12*

பொ. ரை :

சோழநாட்டிலும் தொண்டை நாட்டிலும் தேவர் முதலியோரால் போற்றப்படுகின்ற சிவபெருமானும் முருகனும் விளங்குகின்ற பெருமையுடைய திருக்கோயில்களைப் பரிபாலனம் செய்து, என்றும் தேவர்களால் புகழப்படுகின்றவர்கள் செங்குந்தர்களுள் உயர்ந்தோராவர்.

அ. ள் :

பிஞ்ஞுகன் — தலைக்கோலம் உடையவன் (சிவபெருமான்); பிறங்குதல் — உயர்தல்; மாணார் — பெருமை நிறைந்த; சேணாடர் — தேவர்கள்.

தில்லைக்கொடி ஏற்றுவித்தோர்

393 **தம்புக ழோங்கநூல் தோய்பா(கு)உணுமிறை தன்கூர்ப்பரத்து**
**உம்பர் அமுதின் ஒழுகும் அதையுண் உமாபதியால்**
**அம்பல வன்துசம் ஏற்றும்ஆ திக்கமொ டார்கொடிப்பாச்**
**செம்பியன் ஏத்திடப் பெற்றோர்செங் குந்த சிலாக்கியரே.** *13*

பொ. ரை :

தம்முடைய புகழ் உயருமாறு, நூலுக்கு இடும் கஞ்சியைக் கையிலேற்று உண்ட ஆசாரியரின் முழங்கை வழியாக ஒழுகிய கஞ்சியைத் தாம் உண்ட உமாபதி சிவாசாரியார் மூலமாகக் கொடிக்கவி பாடப் பெற்று தில்லை நடராசப்பெருமான் கோயில் திருக்கொடியை ஏற்றும் உரிமைபெற்று, சோழ மன்னனால் புகழப்பெற்றவர்கள் செங்குந்தரில் உயர்ந்தோராவர்.



(குறிப்பு)

உமாபதி சிவாசாரியரின் குருவாகிய மறைஞான சம்பந்தர் தம்சீடரின் பரிபக்குவ நிலையைச் சோதிக்க வேண்டி, ஒருநாள் செங்குந்தர் பாவு தோயும் தெருவழியே சென்று அவர்கள் பாவுக்கு இடும் கஞ்சியை இரண்டு கைகளிலும் ஏற்றுக்குடிக்க, குருவின் முழங்கை வழியே ஒழுகிய கஞ்சியைத் தம் கையால் ஏற்றுச் சீடராகிய உமாபதியார் உண்டார் என்பதும், தில்லைப்பெருமான் திருக்கோயிலில் கொடியேற்றம் நடைபெறாது தடைப்பட்டபோது உமாபதியார் **'கொடிக்கவி'** பாடிக் கொடியேற்றுவித்தார் என்பதும் சந்தனாசாரியர் வரலாறு. சந்தனாசாரியர் நால்வருள் ஒருவராகிய இவர் கொற்றவன் குடி என்னுமூரில் திருமடம் அமைத்து வாழ்ந்தமையால் கொற்றவன் குடி உமாபதிசிவாசாரியர் எனப்படுவார்.

அ. ள் :

நூல்தோய் பாகு — நூலுக்கு இடும் கூழ்; கூர்ப்பரம் — முழங்கை; உம்பர்அமுது — தேவாமிர்தம்; துசம் — துவசம் — கொடி.

திருமூலதேவர்

394 **ஒப்புயர் வற்ற சிவாகமம் ஏழ்நான்கின் உண்மையெலாம்**
**எப்புவ னத்தும் விளங்கஆ மேய்க்கி இறந்தவுட**
**லிற்புகுந் தாண்டுக்கொன் றாகவே மூவா யிரமனுவைச்**
**செப்புறு ஞானக் கதிரோர்செங் குந்த சிலாக்கியரே.** *14*

பொ. ரை :

ஒப்பு உயர்வு இல்லாத 28 சிவாகமங்களில் கூறப்பட்ட கருத்துக்களை, அனைவரும் அறிந்து கொள்ளுமாறு, இறந்து கிடந்த 'மூலன்' என்னும் இடையன் உடலில் தாம்புகுந்து, (யோக நிலையில் இருந்து) ஓர் ஆண்டுக்கு ஒரு பாடலாக, 3000 பாடல்கள் (கொண்ட திருமந்திரம் என்னும் நூலைச்) சொல்லிய அறிவுவிளக்கமான **திருமூலர்** செங்குந்தரில் உயர்ந்தோராவர்.

('மூலன் உரைத்த தமிழ் மூவாயிரம்' என்பது முதுமொழி. இது திருமந்திரம் என்று போற்றப்பட்டுப் பத்தாம் திருமுறையாக வழங்கப்படுகின்றது. விரிவு பெரியபுராணத்துட் காண்க.)

அ. ள் :

ஏழ்நான்கு — இருபத்தெட்டு; மனு — மந்திரம்; ஞானக் கதிரோர் — அறிவு ஒளி உடையவர். ஆ பேய்க்கி — பசுவை மேய்க்கும் இடையன்.

காரித் தேசிகர்

395 **ஆரணம் ஓதும் அபிடேகர் தம்மில் அவதரித்துப்**
**பூரண நற்றமிழ்க் கோவைகள் பாடிப் புரவலர்பால்**
**ஏரண வப்பொருள் கூறிப்பொன் பெற்றிறை இன்பணிகள்**
**சீரண வச்செய் திறலோர்செங் குந்த சிலாக்கியரே.** 15

பொ . ரை :

வேதம் ஓதுகின்ற ஆசாரியர் குடியில் தோன்றி, தமிழில் முழுமையான கோவை நூல்கள் செய்து அதைக்கொண்டு மூவேந்தர்களிடம் அழகாகப் பொருள் கூறி, அவர்கள்பால் பொருள் பெற்றுச் சிறப்புடன் சிவப்பணிகள் செய்த வண்மையுடைய **காரியார்** செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தோராவார்.

அ . ள் :

கோவை — 400 பாடல்கள் கொண்ட அகப் பொருள் பிரபந்தம்; புரவலர் — அரசர், ஏர் அண்ண — அழகுபொருந்த; இன்பணி — இனிய தொண்டு; சீர் அணவ— சிறப்புப்பொருந்த.

நரசிங்க முனையரையர்

396 **ஒருநூறு பொன்னை உலப்பிலி நாள்சைவ உத்தமர்க்குத்**
**தருநூறி லன்புக் கெதிர்தூர்த்த வேடன் தனித்துறலும்**
**இருநூறு பொன்தந் திகலும் புறமதர் ஏவிடும்பல்**
**செருநூறும் வாழ்க்கை சிவண்வோர்செங் குந்த சிலாக்கியரே.** 16

பொ . ரை :

சிவனடியார்களுக்குத் திருவாதிரை நாளில் நூறுபொன் அளிக்கும் தன்மை கண்டு, அப்பொன்மீது ஆசைகொண்டு போலியாகச் சிவனடியார் வேடம் பூண்டுவந்த காமுகனுக்கு இருநூறு பொன் கொடுத்து, புறச் சமயத்தவர் செய்கின்ற சண்டைகளை அழித்த (அரச) வாழ்க்கையைப் பொருந்தியிருந்த **நரசிங்க முனையரையர்** செங்குந்தர்களுக்குள் உயர்ந்தவராவர்.



இவர் திருமுனைப்பாடி நாட்டினர். சுந்தர மூர்த்தி சுவாமிகளை வளர்த்தவர். (விரிவு பெரிய புராணத்துள் (நரசிங்க முனையர் புராணம்) காண்க.)

அ. ள் :

உலப்பு — அழிவு; உலப்பிலி — அழிவில்லாதவன் (சிவபெருமான்); உலப்பிலிநாள் — சிவபெருமானுக்குரிய நாள் (திருவாதிரை); சைவ உத்தமர் — சிவனடியார், தூர்த்தன்— காமுகன்; இகல்—மாறுபாடு; புறமதர்— வேற்றுச் சமயத்தவர்; செரு — போர்; நூறும் — அழிக்கும்; சிவண்வோர் — பொருந்தியவர்; (சிவணுதல் — பொருந்துதல்).

இடங்கழிப் பெருமான்

396 **தன்னர சில்சைவ மாணெறி வைதிகம் சார்நெறிகள்**
**மன்னுறு நாளில் அரன்தொண்டர்க் குண்டி வழங்கலற்ற**
**இன்னலொ டேநெற் களவாடு வோர்முன் இனையவரே**
**தின்ன நிதியும் விடுத்தோர்செங் குந்த சிலாக்கியரே.** 17

**இடங்கழிநாயனார்** என்னும் இவர் தம் முடைய அரசாட்சியில் உயர்ந்த சைவ நெறிகளும் வைதிக நெறிகளும் பொருந்த ஆளும்போது, சிவனடியார்களுக்கு அமுது படைக்கும் அன்பர் ஒருவர் உணவிட இயலாத துன்பத்தினால் (அரசனுடைய களஞ்சியத்தில்) நெல்லைத் திருட, (சேவகரால் பிடிபட்டு அரசன்முன் சென்று உண்மையைக் கூற) அரசர் உண்மையை உணர்ந்து நெல்லுடன் பொன்னையும் கொண்டு போமாறு செய்தனர். இவர் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவராவார்.

அ. ள்:

மாண்நெறி — பெருமையுடையவழி; வைதிகம் சார் நெறி — வேதநெறி. 'உண்ண, என்பது, ''தின்ன'' என வந்தது.

### முனைய வள்ளல்

398
**பொருந்தலர் போர்க்குடைந் திட்டோர்க் கெந்நாளும் புகலிடமாய்,**
**இருந்தவர்க் காடெய்தச் சென்றமர் வென்றதில் எய்திடும்பொன்**
**விருந்த ரருந்தவர்க் காக்குதல் அன்றி விமலனிடம்**
**திருந்து பணிக்கும் அளிப்போர்செங் குந்த சிலாக்கியரே.** *18*

பொ . ரை:

சோழ நாட்டில் திருநீடுர் என்ற தலத்தில் வாழ்ந்த முனை யடுவார் பகைவர்களுடைய போரில் தோற்று ஓடியவர்களுக்கு வெற்றி உண்டாகும் படி துணை சென்று, போரில் ஈடுபட்டு வெற்றிபெறும்போது அதில் கூலியாகக் கிடைக்கும் பொருள் களைக் கொண்டு அடியார்களுக்கு உணவிடுதல், இறைவனு டைய திருக்கோயில் பணிகளுக்குச் செலவிடல் முதலியவை களைச் செய்தார். அவர் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவ ராவார்.

அ . ள்:

பொருந்தலர் — பகைவர்; உடைந்திட்டோர் — தோற்று ஓடியவர்; ஆடு — வெற்றி அடுவது ஆடு எவனந்த முதனிலை திரிந்த தொழிற் பெயர். விருந்தர் — விருந்தினர்; விமலனிடம் — விமலன் இடம் — சிவபெருமான் கோயில்.

### பெருமிழலைப் பெருந்தகையார்

399 **கருக்கலை நேர்குழல் சங்கிலி சேள்வனைக் காதலித்த**
**பெருக்கம தால்சித்தியாவையும் பெற்றவன் பிஞ்ஞகன்பால்**
**இருக்கை பெறலறிந் தாற்றாது யோகில் இணங்கிமுன்னர்**
**திருக்கயி லைப்பதி மேயோர்செங் குந்த சிலாக்கியரே.** *19*

பொ . ரை:

இருளை ஒத்த [கறுத்த] கூந்தலை உடைய சங்கிலிநாச்சி யாருடைய துணைவராகிய சுந்தரரை நேசித்த மிகுதியான ஈடுபாட்டினால் சித்திகள் கைவரப்பெற்று, அவர் சிவபெரு மாணிடம் சேர்தற்பொருட்டு கயிலை செல்லப் போவதை



அறிந்து, தாம் இங்கே இருக்க மனம் பொறாமல் தம் யோக நிலையினால் அவருக்கு முன் கயிலை சென்ற பெருமிழலைக் குறும்பர் செங்குந்தரில் உயர்ந்தோராவார்.

அ. ள்:

கருக்கல் — இருள், இது நாட்டு வழக்கச் சொல், இங்கு கறுத்த கூந்தலுக்கு ஒப்பாக்கப்பட்டது. பெருக்கம் — மிகுதி; இணங்கி — ஈடுபட்டு.

### மெய்ப்பொருள் மூர்த்தி

400 **பன்முறை ஆயோ தனத்தெய்த்த மேவலன் பட்டிமையால்**
**கொன்முறை ஆய்ந்தரன் சின்னம் குலவுறு கோல்முடன்**
**சொன்முறை நூல்கர வாள்மறைத் தெய்தச்சோர் வின்றியுயிர்**
**சென்முறை செல்ல விடுத்தோர்செங் குந்த சிலாக்கியரே.** 20

பொ. ரை:

பலமுறை போர் செய்து தோற்ற பகைவன் [முத்தநாதன்] வஞ்சனையால் கொல்லும் வழி எதுவென ஆராய்ந்து சிவன டியார் வேடத்துடன் 'உபதேசிக்கத் தக்கநூல்' என்று சொல்லிச் சிறு வாளை மறைத்து வைத்து வர அவனை வரவேற்று (அவ்வாளால் தான் எண்ணியதை அவன்முடிக்க) அதற்காக வருந்தாமல் தம் உயிர் செல்ல விடுத்த மெய்ப் பொருள் நாயனார் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவராவார்.

அ . ள்:

ஆயோதனம் — போர். பட்டிமை — வஞ்சகம்; அரன் சின்னம் — சிவ வேடம்; கரவாள் — கைவாள், குத்துக்கத்தி.

### சத்தியண்ணல்

401 **அண்டார் புரத்தைச் சிரித்தெரித் தானை அவன்பொறியைத்**
**தொண்டா தரிக்கும் அவனடி யாரைத் துணிந்திகழ்நாத்**
**தண்டாயம் சிக்கி ஒள் வாளால் தறிபடத் தக்கணமே**
**சென்டா யுதனில்செய் தீரர்செங் குந்தசிலாக்கியரே.** *21*

பொ. ரை:

பகைவர்களுடைய திரிபுரத்தைத் தம் சிரிப்பினாலேயே (ஆயுதங்கள் இன்றி) எரித்து அழித்த சிவபெருமானையும் சிவ சின்னங்களையும் சிவன் அடியார்களையும் இகழ்ந்து பேசுபவர் களுடைய நாவைத் குறட்டினால் பற்றி உடனே வாளால் அறுத்து, செண்டாயுதத்தைக் கையில் கொண்ட ஐயனார்போல அழிக்கும் வீரமுடைய **சத்திநாயனார்** செங்குந்தர்களுள் உயர்ந் தோராவர்.

அ. ள்:

அண்டார் — சேராதவர் (பகைவர்); பொறி — அடையாளப், சின்னம்; தண்டாயம் — குறடு, தறிபட — துண்டாக; தக்கணம் — உடனே; செண்டாயுதன்— ஐயனார்.

**செருத்துணைக்குரிசில்**

**402 பாராளும் மன்னவன்தேவிமுக்கண்ணற்காம் பைம்மலர்என்**
**றோராள் எடுத்துமோந்தேகலும் கூந்தலீர்த்(து) ஒள்ளசியால்**
**வாராரும் கோணம் அரிந்தவள் கேவள்கை வாங்கவிட்ட**
**சீரார்சொல் மாலை புடையோர்செங் குந்த சிலாக்கியரே.** 22

பொ. ரை:

உலகை ஆளும் அரசன் (கழற்சிங்க நாயனார்) மனைவி, சிவபெருமானுக்காகப் புஷ்ப மண்டபத்தில் எடுத்து வைக்கப் பட்ட மலரை ஆராயாமல் எடுத்து மோந்து பார்த்தாள். அதைக்கண்டு **செருத்துணையார்** அவளது கூந்தலைப் பற்றி யிழுத்து வாள்கொண்டு மூக்கைத் துணிக்க, அதை அறிந்த கழற்சிங்கர் மலரை எடுத்த கையையும் வெட்டினார். இவ்வாறு சிவபெருமான் தொண்டில் சிறந்து புகழ்பெற்ற **செருத்துணையார்** செங்குந்தரில் உயர்ந்தோராவர்.

அ. ள்:

பைம்மலர் — பசிய (புதிய) மலர்; கூந்தல் ஈர்த்து — கூந்தலை இழுத்து; வாராரும் — நீண்ட; கோணம் —மூக்கு. ஒள் + அசி— அசி—வாள்.ஒளி பொருந்திய வாள்.



**கோட்புலிச் செம்மல்**

403
**வேயைவெல் தோளிபங் கன்தொண்டர்க் கென்று விதித்தநெல்தீ**
**நோயை ஆற்றா (து) இனத்தோருணக் கண்டுளம் நொந்துதந்தை**
**தாயை மனையைத் தமரை அவர்முலைத் தண்சுதைஉண்**
**சேயை அசிகொடு மாய்த் தோர் செங் குந்த சிலாக்கியரே.** 23

பொ. ரை:

மூங்கிலை வென்ற (அழகிய) தோளை உடைய உமாதேவியைப் பங்கில் உடைய சிவபெருமானுக்குரியது என்று சேர்த்து நியமித்து வைத்த நெற்குவியலை, பசிநோய் தாளாமல் தம்முடைய உறவினர் உண்டதைக்கண்டு மனம் வருந்தி, தம் தந்தை தாய் மனைவி உறவினர் மற்றும் அந்நெல்லை உண்ட தாயின் மார்பில் வரும் பாலை உண்ட குழந்தை ஆகிய அனைவரையும் வாளினால் மாய்த்த (திருநாட்டியத்தான் குடியில் வாழ்ந்த) **காட்புலி நாயனார்** செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தோராவார்.

அ. ள்:

வேய் — மூங்கில்; விதித்த — நியமித்த; தீ நோய்-வயிற்றுத் தீயாகிய பசி நோய். இனத்தோர் — உறவினர்; உளம்நொந்து — மனம்வருந்தி; தண் சுதை — குளிர்ந்த பால்.

**கூற்றுவத் தலைவர்**

**404 ஏர்சான்றசெம்பியர்க் கல்லால் இடோமுடி என்ன,தில்லை**
**ஊர் சான்ற அந்தணர் ஓதவும் ஆகுலம் உற்றரன்தாள்**
**ஏர் சான்ற மாமுடி யாகுற வேண்டி நெடுங்கனவில்**
**சீர் சான்றவ் வாறுபெற் றாண்டோர் செங்குந்த சிலாக்கியரே.** 24

பொ. ரை:

பெருமை மிகுந்த சோழர்களைத் தவிர பிறருக்கு முடி சூட்டமாட்டோம் என்று தில்லைவாழ் அந்தணர்கள் கூறக் கேட்டுத் துன்பம் அடைந்து, சிவபெருமானுடைய அழகு மிகுந்த திருவடியே தமக்குத் திருமுடியாக வேண்டும் என்று சொல்லித் துயின்று, நீண்டகனவில் தாம் வேண்டியபடிசிவபெரு

மான் திருவடி சூட்டக் கொண்டு அரசாண்டவர் (கூற்றுவ நாயனார்) செங்குந்தர்களுக்குள் உயர்ந்தவராவார்.

அ. ள்:

ஏர் — பெருமை, சிறப்பு, அழகு; செம்பியர் — சோழர்; ஆகுலம் — துன்பம்.

### எறிபத்த நாயனார்

405 என்றும் மலர்பறித் தேறூர்திக் காமியற் றுந்தொண்டர்
நின்றல றச்சிந்தும் தும்பியொ (டு) ஐவர் நெடுமழுவால்
பொன்ற விடுத்திறை மெய்யன்புக் கின்னுயிர் போக்க எண்ணிச்
சென்ற உயிரைமீள் வித்தோர் செங் குந்த சிலாக்கியரே. 25

பொ. ரை:

நாள்தோறும் மலர்களைப் பறித்துச் சிவபெருமானுக்கு மாலை கட்டும் (சிவகாமியாண்டார் என்னும்) தொண்டர், புலம்புமாறு (அவர்கையில் இருந்த பூக்குடலையில் உள்ள) மலர்களைச் சிதறிய யானையையும், (குத்துக் கோல்காரர், பாகர் முதலிய) ஐந்து பேரையும் கோடரியால் கொன்ற (எறிபத்தநாயனாரின்) சிறந்த இறையன்பைக் கண்டு, தம் உயிரைப் போக்கிக்கொள்ள எண்ணிய புகழ்ச் சோழரின் உயிர் போகாமல் மீட்ட எறிபத்தர் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தோராவார்.

அ. ள் :

ஏறூர்தி — எருதினை வாகனமாக உடைய சிவபெருமான்; அலற — வருந்த, புலம்ப; மழு — மழுப்படை, கோடரி; பொன்றுதல் — அழிதல்.

### கணம்புல்தாபதர்

406 தொகைபெறும் பல்பொரு ளால்சிவன் கோயிலில்
தூய்விளக்கிட்(டு)
அகமகிழ் கால்(இ)ன்மை எய்திக் கணம்புல் அறுத்துவிற்று
மிகைகெடல் இன்றி அதையே எரித்துப்பின் மிக்கின்மையால்
சிகைஎரித் திட்ட செயலோர்செங் குந்த சிலாக்கியரே. 26



பொ. ரை :

தொகுக்கப்பெற்றுள்ள நிறைந்த செல்வத்தால் சிவபெருமான் கோயிலில் திருவிளக்கேற்றி உள்ளம் மகிழ்ந்திருக்கும்போது வறுமை அடைந்து (திருவிளக்கேற்றப் பொருளின்மையால்) கணம்புல்லை அறுத்து அதனை விற்று விளக்கெரித்தும், ஒருநாள் அதுவும் விற்காமல்போக அதனையே விளக்காக எரித்து, அதுவும் போதாமையால் தம் தலைமுடியையே விளக்கில் கொளுத்தி எரித்த செயலுடைய கணம்புல்லர் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவராவார்.

அ. ள் :

கணம்புல் — ஒருவகைப்புல்; மிகைகெடல் — சுமை தீர்தல் (சுமை நீங்காமைக்குக் காரணம் விலை போகாமை) சிகை — தலைமுடி.

### தண்டியடிகள்

407 முகைத்த பொழுதே பெறுங்குரு(டு) ஏகிக்கண் முன்தெரிய
இகைத்த கயத்தொண் டினிதின்முற் றிப்புகல் ஈறிலொட்டால்
பகைத்த அமணர் குருடாகி ஏந்தல் பணிப்பினவர்
திகைத்து நிலைவிடச் செய்தோர்செங் குந்த சிலாக்கியரே. 27

பொ. ரை :

தோன்றிய பொழுதே இருந்த குருடு நீங்கிக் கண்பார்வை தெரிய நடந்த குளத்தின் திருப்பணி இனிதே நிறைவடையக் கூறிய சபதமொழியால் பகைகொண்ட அமணர்கள் குருடர்களாகி அரசன் கட்டளைப்படி (செய்வதறியாது) திகைத்து, இருந்த இடத்தை விட்டு அகலுமாறு செய்த தண்டியடிகள் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவராவார்.

அ. ள்:

முகைத்தல் — தோன்றுதல், பிறத்தல்; இகைத்தல் — நடத்தல்; கயம்—குளம்; ஒட்டு — சபதம்; ஏந்தல்— உயர்ந்தவன் (இங்கு அரசன்); பணிப்பின் — கட்டளையால்; நிலைவிட — இடம் பெயர.

குறிப்பு:

பாடல் தொடர் எண் 394 முதல் 407 முடிய (பாட்டு எண் 14 — 27) உள்ளவற்றில் கூறப்பட்ட வரலாற்று விரிவினைப் பெரியபுராணத்துள் காண்க.

ஒட்டக்கூத்தர்

**408 மங்காத கீர்த்தி மறைநெறி ஆறை மனுமுறைகள்**
**பொங்காநிற் பக்கவிச் சக்ரவர்த் திப்பெயர் பூண்டுதிறை**
**தொங்கா தவைதரச் சத்தியச் செங்கோல் சுமந்து சிரச்**
**சிங்கா தனத்திவர்ந் தாள்வோர்செங் குந்த சிலாக்கியரே.** 28

பொ. ரை:

மனுநீதி முறை சிறந்து விளங்கக் 'கவிச்சக்கரவர்த்தி' என்ற பெயர் தாங்கி, குறையாத புகழையுடைய வேதஒழுக்கம் ஆறினையும் அவை திறைப்பொருள் தளராமல் தமக்குக் கொடுப்ப பெற்று, உண்மையைச் செங்கோலாகக் கைக்கொண்டு, [ஆயிரத்தெண் தலைகளை வெட்டி அமைத்த] சிரச்சிங்காதனத்தின்மீது ஏறியிருந்து ஆண்டவர் ஒட்டக்கூத்தர் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவராவார்.

அ. ள்:

மறைநெறி ஆறு — பூர்வ மீமாம்சை முதலிய ஆறுநூல்களின் நெறி, திறை — கப்பம்; தொங்காது — தளர்ச்சியின்றி. இவர்தல் — ஏறியிருத்தல். 'மறைநெறி ஆறினையும் ஆள்வோர்' என்க.

குகனேரியப்ப நாவலர்

**409 பிறப்பிலி ஈன்ற பிரான்காதை யைஅவன் பேருளால்**
**துறப்பவ ரும்துதிப் பக்கச்சி யப்பன் முன் சொற்ற அறு**
**திறப்பகு திக்கப் புறத்தோர் பகுதியைத் தீஞ்சுவைகள்**
**சிறப்ப உரைத்த திறலோர் செங் குந்த சிலாக்கியரே.** 29

பொ. ரை:

பிறப்பு (இறப்பு) இல்லாதவராகிய சிவபெருமான் அருளிய முருகப் பெருமானுடைய வரலாற்றினை, அம் முருகப் பெருமானுடைய பெருங்கருணையால், முற்றும் துறந்த முனிவர்களும் வணங்குமாறு கச்சியப்ப சிவாசாரியார் முதலில் கூறிய ஆறு பகுதி [காண்டங்)களுக்குப் பிறகு, ஒரு பகுதியை [ஏழாவதான உபதேச காண்டத்தை] இனிய சுவைகள் எல்லாம் சிறந்து விளங்குமாறு கூறிய குகனேரியப்பர் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவராவார்.



அ. ள்:

காதை — கதை; (வரலாறு தழுவியது); திறலோர் — ஆற்றலுடையவர்.

'தாயுமிலி தந்தையிலி தான்தனியன் காணேடீ' என்று சிவபெருமானை மணிவாசகர் கூறுவது காண்க. சிவபெருமானுக்குத் தாய்தந்தை இல்லைஎன்பதனால் அவன் பிறப்பற்றவனாகிறான்.

காங்கேயர்

**410 மடம்பெறு மாந்தர் மருள்தீர மண்டல மாண்புருடன்**
**இடம்பெற ஓங்கும் உரிச்சொல் நிகண்டை இனிதுரைத்துக்**
**குடம்பெறு மாமுனி ஒப்பத் தமிழைக் குவலயத்தில்**
**திடம்பெற வைத்த திறலோர்செங் குந்த சிலாக்கியரே.** 30

பொ. ரை:

அறியாமையை உடைய மக்களின் மயக்கம் தீருமாறு உலகமாகிய பெருமையுடைய விராட்புருஷன் தன்னிடம் ஏற்று உயரும் 'உரிச்சொல் நிகண்டு' என்னும் அகராதிநூலை இனிமையாக எடுத்துக்கூறி, கும்பத்தில் தோன்றிய அகத்திய முனிவர் போல உலகில் தமிழை நிலைபெறச் செய்த வல்லமையுடைய காங்கேயர் செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தோராவர்.

'இவர் தொண்டை மண்டலத்துச்செங்குந்தர் மரபில் பிறந்த தமிழ்ப் புலவர். உரிச் சொல்நிகண்டு இயற்றியவர்' என்று அபிதானசிந்தாமணியில் இவரைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது.

அ. ள்:

மடம் — அறியாமை; மருள் — மயக்கம்; உரிச் சொல் — குணத்தைவிளக்கும் பதம்; குடம் பெறுமா முனி — அகத்தியர்; மண்டல புருடன் — விராட் புருடன்.

பொய்யாமொழிப் புலவர்

**411 உரமசைத் தார்கலி சூழ்புவி ஆளும் உசிதன்முன்னாள்**
**கரமசைத் தார்ப்பப் புனலமிழ் சங்கக் கவின்பலகை**
**வரமசைத் தும்பர் வயங்கவும், மற்றதில் வாழ்புலவர்**
**சிரமசைத் தொன்றவும் வைத்தோர்செங் குந்தசிலாக்கியரே.** *31*

பொ. ரை :

தன் (தோள்) வலிமையினால் கடல் சூழ்ந்த உலகை ஆளு கின்ற (வணங்காமுடிப்) பாண்டியன் முற்காலத்தில் கைகளை அசைத்து ஆரவாரம் செய்யுமாறு, தண்ணீருள் மூழ்கியிருந்த சங்கப் பலகை மேலெழுந்து தோன்றவும், மேலும் சங்கத்தில் (சிலைவடிவில்) இருந்த புலவர்கள் தம் தலைகளை அசைத்து ஒன்று சேரவும் செய்தவர் (பொய்யாமொழிப் புலவர்) செங்குந்தர் களுக்குள்ளே உயர்ந்தவராவார்.

அ. ள் :

உரம் - வலிமை; ஆர்கலி - கடல்; உசிதன் - பாண்டியன். ஆர்த்தல் - ஆரவாரித்தல்; உம்பர் - மேலே; ஒன்றுதல் -சேர்தல்; உசிதன் முன்னாள் என்பதனை ஒற்று நீக்கி அலகிடுக.

குறிப்பு. பொய்யாமொழிப்புலவர் தொண்டை நாட்டுச் செங் காட்டங்கோட்டத்து உறையூரில் பிறந்தவர். வயிரபுரத்தில் கல்விபயின்று வருகையில் காளியருளால் கவிபாடும் திறமையும் வாக்குப் பலிதமும் பெற்றவர். இவருடைய ஆசான் 'பொய்யா மொழியாய் இரு' என்று வாழ்த்த, அதுவே பெயராக வாழ்ந் தவர். ஒருசமயம் பாண்டிநாடு சென்று, அங்கு அரசாண்டிருந்த வணங்காமுடிப் பாண்டியனைக் கோயிலில் கண்டு அவன்மேற் கவிபாடவும் அவன் புலவரை மதியாது, அக்கோயிலில் சிலை வடிவிலிருந்த சங்கப்புலவர் 49 பேரும் சிரக்கம்பம் கரக்கம்பம் செய்யப்பாடுக, என்று கூறப் புலவரும்,

'உங்களிலே யானொருவன் ஒவ்வுவனோ ஒவ்வேனோ
திங்கள் குலனறியச் செப்புங்கள் — சங்கத்தீர்
பாடுகின்ற செந்தமிழ்க்கென் பைந்தமிழும் ஒக்குமோ
ஏடெழுதார் ஏழெழுவீர் இன்று'

என்றுபாட, புலவர் நாற்பத்தொன்மரும் சிரமசைத்து ஏற்றனர். மீண்டும் பாண்டிய மன்னன் புலவரை நோக்கி,



அங்குப் பொற்றாமரைக் குளத்தில் அமிழ்ந்த சங்கப் பலகை மிதக்கப் பாடுக எனப் புலவரும்,

'பூவேந்தர் முன் போல் புரப்பார் இலையெனினும்
பாவேந்தர் உண்டென்னும் பான்மையால் - கோவேந்தன்
மாறன் அறிய மதுரா புரித்தமிழோர்
வீற்றணையே சற்றே மித'

என்று பாடினர். எக்காலத்திலோ அமிழ்ந்த சங்கப் பலகையும் வெளியில் தோன்றியது என்பது வரலாறு.

பகழிக் கூத்தர்

**412 புதைந்தோட மாயேந் திரமன்று செற்ற புனிதன் வினை**
**வதைந்தோட யார்க்கும்பிள் ளைத்தமி ழோதென வாய்மலர்ந்தே**
**பதைந்தோடப் பாவலர் பாடும்வேப் பத்தவர் பாடுகுன்றிச்**
**சிதைந்தோடச் செய்திற லோர்செங் குந்த சிலாக்கியரே.** *32*

பொ. ரை :

வீரமகேந்திரபுரி மண்ணில் புதைந்து அழியுமாறு முன்பு போரிட்ட முருகப்பெருமான், அனைவருக்கும் தீவினை நீங்கி ஓடும்படி தம்மீது பிள்ளைத்தமிழ் பாடுமாறு திருவாய் மலர்ந்து கூற, அவ்வாறே வினை (வயிற்றுவலி) நீங்குமாறு (திருச் செந்தூர் முருகன் மீது பிள்ளைத்தமிழ்) பாடிய ஆற்றலுடைய வர் (பகழிக் கூத்தர்) செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தோராவர்.

அ. ள் :

செற்ற - அழித்த; பாடுகுன்றி - வருத்தம் குறைந்து.

இரட்டைப்புலவர்

**413 அத்தை மகன்குரு டம்மான் மகன்முட மாகிக்கீழ்மேல்**
**ஒத்துறைந் தேகூறு பாடோ(டு) அணிகொள் உலப்பில்கவி**
**முத்தரில் ஒதிர கம்பர் உலாமுன் மொழிந்தவரும்**
**சித்தம் உவப்பத் திரிந்தோர்செங் குந்த சிலாக்கியரே.** *33*

பொ. ரை :

குருடராகிய அத்தை மகன் முடவராகிய அம்மான் மகன் என்னும் இருவரும், குருடர் முடவரைத்தூக்கி நடக்க முடவர்

மேலிருந்து வழிகாட்ட இருவரும் ஒற்றுமையாக வாழ்ந்து, ஒரு பாடலின் முன் பகுதியை முடவர் பாடுவது, பின் பகுதியைக் குருடர் பாடுவது என்ற பாகுபாட்டுடன் அழகிய அழியாத பாடல்களை இயற்றி, திருவேகம்பப் பெருமான் மீது **'ஏகாம்பர நாதருலா'** வை இயற்றி எல்லோரும் மனம் மகிழுமாறு கவி வல்லவர்களாக உலவிவந்த **இரட்டைப் புலவர் செங்குந்தர்களுக்** குள்ளே உயர்ந்தோராவர்.

அ. ள்:

ஒத்துறைந்து — சேர்ந்து வாழ்ந்து; கூறுபாடு — பிரிவு; உலப் பில்கவி — அழியா பாடல்.

படிக்காசுப்புலவர்

414
**புகழ்பூத் திடுந்தில்லை மேலோனை அம்மையைப் போற்றிஎங்கும்**
**இகழ்பூத் திடாதபொற் காசைப்பஞ் சாக்கரத் தின்படிமேல்**
**நிகழ்பூத்தல் பெற்றுப்புள் வேளூர்க் கலம்பக நீட்டியறாத்**
**திகழ்பூத்து நின்ற செயலோர்செங் குந்த சிலாக்கியரே.** 34

பொ. ரை:

புகழ்மிக்க தில்லை நடராசப் பெருமானையும், சிவகாமி அம்மையாரையும் வணங்கி, எவ்விடத்தும் குறைவு வாராத (ஐந்து) பொற்காசுகளை நாள்தோறும், நடராச மூர்த்தியின் பஞ்சாக்கரத்திருப்படியில் பெற்று, புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம் என்ற நூலை இயற்றி நீங்காப் புகழ் பெற்று நின்ற செயலுடைய **படிக்காசுப்புலவர்** செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவராவார்.

(சுமார் 350 ஆண்டுகளுக்கு முன் தொண்டை நாட்டி லுள்ள பொன் விளைந்த களத்தூரில் செங்குந்த மரபில் தோன்றிய இவர் தொண்டைமண்டல சதகம், புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம் ஆகிய நூல்களை இயற்றியவர். தில்லைப் பெருமான் கோயில் பஞ்சாக்கரப்படியில் பொற்காசுகள் பெற்ற தால் படிக்காசுதம்பிரான் என்றும் பெயர் பெற்றவர் — அபி தான்சிந்தாமணி).



அ. ள்:

இதழ் பூத்திடா — இகழ்ச்சி இல்லாத (குறைவுவாராத); பஞ்சாக்கரப்படி — தில்லைக் கூத்தப் பெருமானின் திருமுன்பு உள்ள ஐந்து படிகள்.

கச்சியப்ப முனிவரர்

415 **மேனாள் வழுவூர் மறைநாத ருட்பஞ்சம் வீட்டிப் பின்னோன்**
**மானாரை வேட்கும் அவர்பால் உதித்துக், கைம் மாமுகவன்**
**ஆனாத காதை அகிலத் தவர் தொழ ஆய்ந்துரைத்த**
**தேனார் கிளவிப் புலவோர்செங் குந்த சிலாக்கியரே.** 35

பொ. ரை:

முன்காலத்தில் வழுவூரில் வாழ்ந்திருந்த வேதம் வல்ல அந்தணர்களின் வறுமையைப் போக்கி, அவர்களின் மரபில் தோன்றிய பெண்களைத் திருமணம் செய்து கொண்டு வாழ்ந்த வர்களின் வழியில் பிறந்து, கல்வி கேள்வியில்சிறந்து விளங்கி, விநாயகப் பெருமானுடைய அழியாத வரலாற்றினை உலகினர் வணங்குமாறு ஆராய்ந்து (விநாயகபுராணம் என்ற நூலாக) உரைத்த தேனை நிகர்த்த சொல்லை உடையவர் **(கச்சியப்பமுனிவர்)** செங்குந்தர்களுக்குள்ளே உயர்ந்தவரா வார்.

அ. ள்:

மேனாள் — முற்காலத்தில்; வீட்டி — அழித்து; வேட்டல்— திருமணம் கொள்ளல். கைம்மாமுகவன் — துதிக்கை உடைய யானை முகன் (விநாயகன்); ஆனாத — அழியாத, சுருங்காத; (முன்னிரண்டடிகளின் பொருள் தெளிவாக விளங்கவில்லை.)

சிதம்பரசுவாமிகள்

416 **அங்கயற் கண்ணி** அருள்வாங்கிச் **சாதன மாகியநான்**(கு)
**எங்கும் உலவுறச் சாத்தலிங் கன்மொழிக் கின்னுரையும்**
**பங்கமில் கண்ணுடை வள்ளல்** மொழிக்குரை **யும்பகர்ந்த**
**சிங்குவை யுற்ற திறலோர் செங் குந்த சிலாக்கியரே.**

பொ. ரை:

அங்கயற்கண்ணியம்மையின் அருள் பெற்று, இறையருள் பெறச் சாதனமாகிய விபூதிருத்ராட்ச தாரணம் பஞ்சாட்சர

ஜபம், சிவபூஜை ஆகிய நான்கும் எங்கும் பரவுமாறு செய்து, சாந்தலிங்கர் எழுதிய நூலுக்கு உரையும், குற்ற மற்ற கண்ணுடைய வள்ளலார் இயற்றிய நூலுக்கு உரையும் பகர்ந்த நாவுடைய திறமையுடைய திருப்போரூர்ச் சிதம்பரசுவாமிகள் செங்குந்தரில் உயர்ந்தோராவர்.

அ. வி:

சாதனம் - வழி; பங்கமில் - குற்றமற்ற; சிங்குவை - நாக்கு.

பிறசை அருணாசல சுவாமிகள்

417 **எட்டும் இரண்டும்எண் ணீராறு தத்துவத் தேதயங்கி**
**ஒட்டியும் ஒட்டா ஒருபொருளைச் சுட்டி ஓர்வையெலாம்**
**வெட்டி விளக்குநல் வேதாந்த சாகை விரித்திடும்வா**
**சிட்ட உரைமுனாள் செய்தோர்செங் குந்த சிலாக்கியரே.** 37

பொ. ரை:

அகாரஉகாரம் சேர்ந்த 'ய' கரத்திலும் தொண்ணூற்றாறு தத்துவங்களிலும் ஒளி பெற்றுப் பதிந்து, அதில் ஒன்றுபட்டும் வேறாகியும் உள்ள ஒப்பற்ற பரம்பொருளான இறைவனைக் குறித்துச் செய்யப்படும் ஆராய்ச்சியையெல்லாம் தடைவிடைக ளால் விளக்குகின்ற வேதாந்தப் பிரிவுகளை விவரித்துக் கூறும் ஞான வாசிட்டம் என்னும் நூலுக்கு உரையை முற்காலத்தில் செய்த பிறசை அருணாசல சுவாமிகள் செங்குந்தரில் உயர்ந்தவராவார்.

அ. வி:

எட்டும் இரண்டும் சேர்ந்தது பத்து. இது, தமிழ் எண் முறையில் ய (10) என்று எழுதப்படும். பஞ்சாட்சர மந்திரமாகிய 'சிவய நம' என்பதில் இடையில் உள்ள யகரம் இறைவனைக் குறிக்கும். எனவே எட்டும் இரண்டும் என்பது இறைவனைக் குறித்ததாகும். உகாரங்கள் எண்ணீ ராறு - (8×12); தொண்ணூற்றாறு; தயங்கி - ஒளிபெற்று, சுட்டி — குறித்து; ஓர்வு - ஆராய்ச்சி; சாகை - உட்பிரிவு.

வாழ்த்து

418 **ஆவாழி வாழி அந்தணர் அருமறை ஆதரிக்கும்**
**கோவாழி வாழிசெங் குந்த சிலாக்கியர்க் கூறிடு(ம்)அம்**
**பாவாழி வாழி அதுபகர் வோர்உறும் பான்மைமிகும்**
**கூவாழி வாழிய வாழிஅ ரோஇசை கூர்தரவே.**



பொ. ரை:

பசுக்கள் (நன்கு) வாழ்வதாக! மறையவர்களும் அவர்களை ஆதரிக்கும் அரசனும் நன்கு வாழ்வார்களாக! செங்குந்தரில் உயர்ந்தோரைப்பற்றிச் சொல்லுகின்ற அழகிய நூல் வாழ்வ தாக! இதனைப் பாராயணம் செய்வோர் வாழுகின்ற சிறப்பு டைய இடங்கள் வாழ்வதாக! புகழ் மிகப் பெற்று அனைவரும் நிலைத்து வாழ்வாராக!

அ. வி:

கோ - அரசன்; பகர்வோர் - சொல்லுபவர்கள். கூ- பூமி, இடம்; இசை- புகழ்; கூர்தல் - மிகுதல்.

செங்குந்த சிலாக்கியர் மாலை முற்றியது.
வேலும் மயிலும் துணை.



கவிச் சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் மன்றம் □ காஞ்சிபுரம்.

உ

சிவமயம்

முருகக்கடவுள் துணை

குமாரசாமி முதலியார் இயற்றிய

# செங்குந்த வேற்பதிகம்

செங்குந்த வேற்பதிகம் என்னும் இப்பகுதி பத்து பாடல்களைக் கொண்டது. அழகான சந்தமும் மூடுகியல் ஓசை நயமும் உடையது. நெடிலடி ஆசிரியவிருத்தத்தால் அமைந்தது. இதில் அமைந்துள்ள பாடல்கள் பெரும்பாலும் வீரவாகு தேவர் கையில் உள்ள செங்குந்தம் எனும் வேல் செய்த செயல்களையும் பெருமைகளையும் கூறுகின்றது.

பன்னிரு சீர்க்காழி நெடிலடியாசிரிய விருத்தம்

419 சங்கரி சுமங்கலை இமங்கிரி தரும்குமரி
தங்கமல நின்றகரமாம்
சத்திபர முத்தியில் உதித்தெமை இருத்துமருள்
தாயகி வராகிநிமலி
இங்குலி கஅங்கநிற சங்கர னிடங்குலவி
இவ்வுலகம் எவ்வுலகமும்
ஈன்றகம லாட்சிகா மாட்சிபொற் காற்சிலம்(பு)
இந்துமணி ஒளியில் வெளியாய்ச்
செங்கனல் நிறங்குலவும் மங்குலெழு மின்கொடி
திரண்டுரு வெழுந்தவகைபோல்
சித்ரநவ ரத்னமணி முத்தணியு மிட்டகன
தேவவுரு வாயுதிதராத்



துங்கநவ மங்கையர் இடங்குமர ராய்வந்த
சுத்தநவ வீரர்அங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. 1

பொ. ரை :

தூய்மை உடைய செங்குந்தம் எனப்படும் வேலாயுதம். சங்கரி, சுமங்கலி, இமயமலை ஈன்றெடுத்த பெண்பிள்ளை, கையில் தாமரை தாங்கிய சக்தி, இவ்வுலகில் உதித்த எம்மை மேலான முத்திநிலையில் சேர்க்கும் அருள்கொண்ட தாய், வாராகி, நிர்மலமானவள், செந்நிறத் திருமேனியையுடைய சங்கரனின் இடப்பாகத்தைக் கொண்டு விளங்கி, இந்த நிலவுலகத்தையும் பிற உலகங்களையும் ஈன்றருளிய கமலக் கண்ணி, காமாட்சி என்று புகழப்படும் இறைவியின் பொன்மய மான திருவடியில் அணிந்திருந்த சிலம்பிலிருந்து வெளிப்பட்டு, சிவந்த நெருப்புப்போன்ற நிறத்துடன் மேகத்தில் தோன்று கின்ற மின்னல் கொடி திரண்டு உருக்கொண்டது போல் தோன்றி அழகிய நவரத்தினம், முத்துக்கள் போன்றவைகளை அணியும் பெருமையுடைய தேவர்களைப்போன்ற தூய்மை யான ஒன்பது பெண்களிடம் குமாரர்களாகத் தோன்றிய நவ வீரர்களின் மணம்வீசும் அழகிய கையில் உள்ளதும், முருகப் பெருமானுக்கு இளையவர் கையில் உள்ளதும் ஆகும்.

அ. ள் :

சங்கரி - சங்கரனின் மனைவி; இமம் - பனி; இமங்கிரி - பனி மலை (இமயமலை); இங்குலிகம் - சிவந்த நிறம் (சிவப்பு); கமலம் - தாமரை; கமலாட்சி - தாமரைக் கண்ணி; இந்து- சந்திரன்; செங்கனல்நிறம் - நெருப்பின் வண்ணம்; மங்குல்— மேகம்; கனம் - பெருமை.

420 தந்தருமை யாகஅருள் எந்தையிடப் பாகமுறு
சத்தியுத வும்குந்தவேல்
சாமிநா தர்க்கிளவ லாகிவிளை யாடுகால்
தண்டையசை யும்குந்தவேல்

கந்தனொடு சென்றண்ட கோளமும் செண்டாடி
கதியில்வைத் திடுகுந்தவேல்
கார்வண்ணன் உந்திவரு பூமனை விலங்கிட்டு
காவல்வைத் திடுகுந்தவேல்
செந்தழ லினங்குலவு சந்தமுனி வேள்விதரு
திருகுபுரி கோட்டுத்தகர்
திடுக்கிட நடப்பதைப் பிடித்தாறு முகவன்
திருச்சமுகம் விடுகுந்தவேல்
தொந்திவயிற் றைந்துகரத் தந்திமுக னுக்கிளைய
சுத்தநவ வீரர்அங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. 2

பொ. ரை:

சரிந்த வயிற்றையும் ஐந்து கரங்களையும் உடைய யானைமுகப் பெருமானுக்கு இளையவர்களாகிய நவவீரர்களுடைய அழகியகைகளில் இருந்து அழகிய நறுமணம் வீசுவதும் கந்தனுக்குப் பின் தோன்றியதும் தூய்மை உடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம், அருமையான திருவருளைப் புரியும் சிவபெருமானுடைய இடப்பாகத்திலுள்ள பராசக்தியால் அளிக்கப்பட்டதும், சாமிநாதன் எனப்படும் முருகனின் தம்பியாக உதித்த விரவாகுத் தேவரின் காலில் அணிந்த தண்டை அசையுமாறு ஆடுகின்றதும், முருகப் பெருமானுடன் சென்று எல்லா அண்டங்களையும் நிலை மாற வைத்து, மீண்டும் நிலையில் வைத்ததும், திருமாலின் உந்தியில் வந்த பிரமதேவனை விலங்கு பூட்டிச் சிறையில் வைத்ததும், நாரத முனிவர்செய்த யாகத்தில் வந்து உலகினர் அஞ்சுமாறு திரிந்த முறுக்கிய கொம்புகளை உடைய ஆட்டுக் கிடாயினைப் பிடித்து வந்து அறுமுகப்பெருமானின் திருமுன்பு விடுத்ததும் ஆகிய பெருமைகளைக் கொண்டதாகும்.

அ. ள்:

அண்டகோளம் — உலக உருண்டை; செண்டு — பந்து; கதி — நிலை; கார்வண்ணன் — மேகநிறம் கொண்ட திருமால்; பூமன் — மலரில் இருப்பவன், பிரமன்; சந்தமுனி — இசைபாடும் நாரதன்; தகர்— ஆடு.



421 வஞ்சனையு லோபமுட னெஞ்சக் களங்கமுறு
வட்காரை யடுகுந்தவேல்
வாரண முகங்கொண்ட தாருக நெடுங்கிளைய
வாரியை நுகர்குந்தவேல்
பஞ்சா க்ஷரம்பூதி சாதன மிலாதவெம்
பாவிகளை யடுகுந்தவேல்
பன்னிரு புயாசலத் தண்ணலிட மென்றும்
பராக்குரைத் திடுகுந்தவேல்
மஞ்சுலவு மேருகிரி குலுங்கிடப் பாய்ந்தே
மகேந்திரம் புகுகுந்தவேல்
மாளா வரங்கொண்ட சூர்முனம் வெற்றிவேல்
வாழியென வருகுந்தவேல்
துஞ்சுவெம் புலியெனப் பகைவருட லங்கீறு]
சுத்தநவ வீரர்அங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. 3

பொ. ரை:

உறங்குகின்ற கொடிய புலி (எழுந்து பாய்ந்து தாக்குவது) போலப் பகைவர்களுடைய உடலைப் பிளவு படுத்துகின்ற, தூய்மையுடைய நவவீரர்தம் அழகிய கைகளில் உள்ளதும், அழகிய நறுமணம் வீசுவதும், கந்தனுக்குப் பின் தோன்றியதும் தூய்மையுடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம், வஞ்சனையும், பிறருக்குக் கொடுத்தறியாத மனமும் உடைய பகைவரை அழிப்பதும் யானைமுகம் கொண்ட தாரகாசூரனுடைய நெடிய உறவினர்களாகிய கடலை அழித்ததும், பஞ்சாட்சர ஜபம், விபூதி அணிதல் முதலியவை செய்யாதவர்களை அழிப்பதும், பன்னிருதோள் கொண்ட முருகனுக்குக் கட்டியம் கூறுவதும், மேகங்கள் தங்குகின்ற மேருமலை குலுங்குமாறு பாய்ந்து சென்று வீர மகேந்திரபுரியில் புகுந்ததும், அழியாத வரபலம் உடைய சூரபதுமனுக்கு முன்சென்று (முருகப் பெருமான் திருக்கரத்தில் உள்ள) வெற்றி பொருந்திய வேலாயுதம் வாழ்க என உரைப்பதும் ஆகிய பெருமைகளை உடையதாகும்.

அ. ள்:

உலோபம் - பிறருக்கீயாத தன்மை; வட்கார் - பகைவர்; வாரணம் - யானை; வாரி - கடல்; நுகர்தல் - விழுங்குதல்; பராக்கு - கட்டியம் கூறுதல்; மஞ்சு - மேகம்.

422 பம்பர மெனச்சுழன் றிம்பரில் அலைந்திடாப்
படிபுரந் திடுகுந்தவேல்
பாவிநீ தேவர்சிறை விடு; விடா விடில்அதம்
படுமெனும் குந்தவடிவேல்
வெம்பதும னால்ஏவு கிங்கரர் களைக்கொன்று
விண்ணெழுந் திடுகுந்தவேல்
வெற்றியென வேவஜ்ர வாகுஎன் பினைநாட்டி
விளையா டிடும்குந்தவேல்
அம்பர முறும்பெரு மகேந்திரம் கடல்படர
அணுவெனக் கொழிகுந்தவேல்
ஆறுமுக னின்பதும தாண்மல ரிணங்கிலான்
அசுரனென வுரைகுந்தவேல்
தும்புருவ ரொடுதேவர் அஞ்சலித் திடவந்த
சுத்தநவ வீரர்அங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. 4

பொ. ரை:

(இசையில் வல்ல) தும்புருமுனிவரும் தேவர்களும் வணங்குமாறு வந்த, தூய்மையுடைய நவவீரர்தம் அழகிய கைகளில் உள்ளதும், அழகிய நறுமணம் வீசுவதும், கந்தனுக்குப் பின் தோன்றியதும் தூய்மைஉடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம், பம்பரம் போலச் சுழன்று இந்த உலகத்தில் (நம்மை) அலைந்து திரியவிடாமல் காப்பதும், (சூரபதுமனை நோக்கி) நீ தேவர்களைச் சிறையிலிருந்துவிடுவி; விடுவிக்கா விடில் அழிந்து விடுவாய் என்று கூறியதும், (வீரமகேந்திர புரியில்) கொடிய பதுமன் என்பவனால் ஏவி விடப்பட்ட ஏவலர்களைக் கொன்று அழித்ததும், வஜ்ரவாகுவுடன் நடந்த போரில் வெற்றி பெற்று அவனுடைய முதுகெலும்பை எடுத்து நட்டு விளையாடியதும், கடல்நடுவே இருந்த வீரமகேந்திரபுரி கடலில் ஆழுமாறு அணுவினைப்



போல அழுத்தியதும், அறுமுகப் பெருமானுடைய தாமரைத் தாள்களை வணங்காதவர்கள் அசுரர்களைப் போன்றவர்கள் எனக்கூறுவதும் ஆகிய சிறப்புக்களை உடையது ஆகும்.

அ. ள்:

இம்பர் - இவ்வுலகம்; அதம்படும் - அழியும்; பதுமன் - சூரபதுமனுடைய சேனாபதி; கிங்கரர் - ஏவலாட்கள்(போர் வீரர்); அம்பரம் - கடல்; கொழித்தல்-ஒதுக்குதல்; தும்புரு - இசைவல்ல முனிவர் (நாரதருடன் இணைத்துப் பேசப்படுவர்.); அஞ்சலித்தல் - கும்பிடுதல்.

423 கோரமரு வும்பகைவர் குலைநடு நடுங்கவே
கொண்டுகாத் திடுகுந்தவேல்
கும்பலம் போதர கஜானனர்க் கிளவலாம்
குமரகுரு பரகுந்தவேல்
வீரமோ டெழுந்துமுத னாட்சூர னமர்க்களம்
வெறுங்களம் செய்குந்தவேல்
வெஞ்சூரன் மகவிலொரு மகவொழிய மற்றவரை
வெங்கண் டிடும்குந்தவேல்
சீரணங் கும்பானு கோபனுட லம்குத்தி
சென்னியும் பறிகுந்தவேல்
செங்கடம் பணிஉபய அம்போரு கம்கண்டு
தெரிசித் திடுங்குந்தவேல்
சூரனும் சூரனுக் கிளவலும் நுமக்கென்ற
சுத்தநவ வீரர்அங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே 5

பொ. ரை:

சூரபதுமனும், அவனுடைய தம்பியாகிய சிங்கமுகனும் உமக்கே உரியது என்று கூறிய தூய்மையுடைய நவவீரர்தம் அழகிய கைகளில் உள்ளதும், அழகிய நறுமணம் வீசுவதும், கந்தனுக்குப் பின் தோன்றியதும் தூய்மை உடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம் அச்சம் பொருந்திய பகைவரின் குலை நடுக்கம் பெறச் செய்து, (அன்பரைக்) காப்

பாற்றுவதும், குடம் போன்ற சரிந்தவயிற்றை உடைய யானை முகனுக்கு இளையவனாகிய குமரகுருபரன் கையில் உள்ளதும், வீரத்துடன் புறப்பட்டுச் சென்று சூரபதுமனுடைய போர்க் களத்தை முதல் நாளிலேயே வெற்றிடமாக்கியதும், கொடிய சூரபதுமனின் பிள்ளைகளில் ஒருவனை (இரணியனை)த் தவிர மற்றவர்களைப் புறமுதுகிடச் செய்ததும், அழகு மிகுந்த பானுகோபன் உடலைப் பிளந்து, தலையைப் பறித்ததும், சிவந்த கடம்ப மலர்களை அணியும் இரண்டு திருவடிகளாகிய தாமரை மலர்களைக் கண்டு பணிவதும் ஆகிய சிறப்புக்களை உடையது ஆகும்.

அ. ள்:

கோரம் மருவும் — கொடுமை பொருந்திய; கும்பம் — குடம்; லம்போதரன் — சரிந்த வயிறு உடையவன். கஜம் — யானை; ஆனனம் — முகம்; வெந் — வெரிந் — முதுகு; சீர் — அழகு (பெருமை); உபய அம்போருகம் — இரண்டு தாமரை.

424 மாமுதல் தடிந்துசெஞ் சேவலங் கொடிதனது
வலமேந்திப் பதுமனுடைய
மற்பெரிய வெம்புலிக் கொடிமுருக னால்தர
வாங்கும் சினக்குந்தவேல்
காமுதற் சுரராஜ னாதியாம் தேவரைக்
ககனமேற் றிடுகுந்தவேல்
கனவல்லி தெய்வானை திருமணம் கண்டே
களித்திடும் குந்தவடிவேல்
பாமுதற் புலவர்கள் துதிகந்த மாதனம்
பதியா யிருந்துநெடுநாள்
பக்தவிஜ யங்கொண்டு சுத்தசண் முகனுபய
பாதந் தொழுங்குந்தவேல்
தூமத கஜக்கடகம் ஆயிரம் நிதஞ்செற்ற
சுத்தநவ வீரர்அங்கை
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே.





பொ. ரை:

தூய்மையான மதநீர் ஒழுகுகின்ற யானைப்படைகள் ஆயிரத்தை தினம் அழிக்கும் தூய்மையை உடைய நவவீரர் தம் அழகிய கைகளில் உள்ளதும், அழகிய நறுமணம் வீசுவதும் கந்தனுக்குப்பின் தோன்றியதும் தூய்மை உடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம் (சூரபதுமனாகிய) மாமரத்தின் முதலை அழித்து சிவந்த சேவற்கொடியை வலப் பக்கத்தில் தாங்கி அவனுடைய பெரிய கொடிய புலிக்கொடியை முருகன் தரப்பெற்ற சோபமுடையதும், சோலை சூழ்ந்த தேவலோகத்தரசனான இந்திரன் முதலிய தேவர்களை விண் ணுலகில் குடியேற்றியதும், பொற்கொடி போன்ற தெய்வ யானையைத் திருமணம் கொண்டு மகிழ்வதும், பாடலை முதற் பொருளாகக் கொண்ட புலவர்கள் போற்றும் கந்தமாதன மலையில் நெடுநாள் தங்கியிருந்து பக்தர்களால் போற்றப் பெற்றுத் தூய்மையுடைய சண்முகனுடைய இரண்டு திருவடி களைத் தொழுவதும் ஆகிய பெருமைகளை உடையது ஆகும்.

அ. ள்:

தடிந்து — அழித்து; சுரராஜன் — தேவர்களின் அரசன் (இந்திரன்); ககனம் —ஆகாயம் (விண்ணுலகம்); கனம் — பொன்; வல்லி —கொடி; தூமதம் — தூய்மையான மதநீர்; கடகம் — படை.

425 மையிலகு தீவினைகள் நொய்ய அகம் உள்ளினரை
வந்துகாக் கும்குந்தவேல்
வரதமலி யும்சட்டி விரதமிகு முசுகுந்த
மன்னவன் இருந்தவத்தால்!
செய்யமயி லேறுமுரு கையனுட னாகவே
தென்னாடு வருகுந்தவேல்
தேவதனு அங்குதறி மானவ தனுப்பெற்றிச்
செகமிருந் திடுகுந்தவேல்
வெய்யவன் அருங்குலத் துய்யு(ம்)அர மாதரை
மீமணம் புரிகுந்தவேல்
வீரரது மகள்மழக் கிளியையுங் கிளியையும்
வேந்தனுக் கீகுந்தவேல்!

**தொய்யில்முலை மங்கையர்கள் மையலுறும் எழில்நிலவு**
**சுத்தநவ வீரர்அங்கை**
**சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்**
**தூயசெங் குந்தவேலே. 7**

பொ. ஙரை:

தொய்யில் எழுதிய நகில்களை உடைய மாதர்கள் விரும்புகின்ற அழகு தவழும் தூய்மையை உடைய நவவீரர் தம் அழகிய கைகளில் உள்ளதும், அழகிய நறுமணம் வீசுவதும், கந்தனுக்குப்பின் தோன்றியதும் தூய்மை உடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம், குற்றம் நிறைந்த தீவினைகள் அழியுமாறு உள்ளத்தில் (தன்னை) நினைத்தவர்களை முன்வந்து காப்பதும், வரமளிக்கும் சட்டி விரதத்தைக் கடைப் பிடிக்கும் முசுகுந்தனின் பெரிய தவத்தினால், செம்மைபொருந்திய மயிலை வாகனமாகக் கொண்ட முருகனுடன் தென்னாட்டிற்கு வந்ததும், தேவ உடம்பை அங்கேயே விட்டுவிட்டு மானிட உடம்பு பெற்று இவ்வுலகத்தில் [நிலைத்து] இருப்பதும், சூரிய குலத்தில் வாழ்ந்த தேவ மகளிரை உயர்ந்த மணம் கொண்டதும், வீரவாகுத் தேவருடைய மகளாகிய இளமை பொருந்திய [சித்திரவல்லி என்னும்] கிளியையும், அவள் வளர்த்த கிளியையும் [முசுகுந்தனாகிய] அரசனுக்கு அளித்ததும் ஆகிய பெருமைகளை உடையது ஆகும்.

அ. ள்:

நொய்ய - மெலிந்து போக, அழிய; உள்ளினர் — நினைத்தவர்; வரதம் — வரமளிப்பது. தனு — உடம்பு; தேவதனு — தேவ உடம்பு; உதறி — விடுத்து; வெய்யவன் — சூரியன்; வெய்யவனருங்குலம் — சூரியகுலம்; அரமாதர் — தேவமகளிர்; மழ — இளமை; தொய்யில் - சந்தனத்தால் உடலில் எழுதும் கோலம்.

**426 மாற்றலர்கள் நெஞ்சங் கலங்கிட நிணங்கமழ்தல்**
**மாறாத வைகுந்தவேல்**
**மாநிலத் தவர்நடு நடுங்கவரு செங்கண்எரு**
**மைக்கடா ஏறுமழகக்**



**கூற்றுவன் தம்மகள் கிள்ளையைக் கொண்டுசெலக்**
**கோபித் தெழுங்குந்தவேல்**
**குந்தத் திறங்கண்டு வந்திக்க வே யமன்**
**கொணர்ந்துதரச் செய்குந்தவேல்**
**ஊற்றமிகு சந்தான மாவினவி குடகரச**
**னோடவது பறிகுந்தவேல்**
**உரியகற் பினியமகட் காகமலை நாடேகி**
**உற்பலங் கவர்குந்தவேல்**
**தோற்றநனி பல்லூழி காலமும் பற்பமலர்**
**தோலாத குந்தவடிவேல்**
**சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்**
**தூயசெங் குந்தவேலே. 8**

பொ. ரை:

அழகிய நறுமணம் வீசுவதும், கந்தனுக்குப் பின் தோன்றியதும், தூய்மையுடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம், பகைவர்களுடைய மனம் கலங்குமாறு, இரத்த (மாமிச) வாசனை மாறாத கூர்மையுடையதும், உலகினர் அஞ்சுமாறு, சிவந்த கண்களை உடைய எருமைக் கிடாவில் வருகின்றவனான இயமன், தம்மகளான சித்திரவல்லி வளர்த்த கிளிப்பிள்ளையைக் கவர்ந்து செல்ல அதற்காகக் கோபித்து எழுந்ததும், குந்தத்தின் வலிமை கண்டு இயமன் அதனைத் தொழுது அக்கிள்ளையைத் திரும்பத் தருமாறு செய்ததும், மேம்பாடு (மேன்மை) உடைய சந்தான மாங்கனியைக் கேட்டு, குட நாட்டு அரசனுடன் போரிட்டு அவனை ஓடச் செய்து, அக்கனியைப் பறித்ததும், உயரிய கற்புடைய தம் இனிய மகளுக்காக மலைநாடு சென்று பழத்தைக் கவர்ந்து கொண்டு வந்ததும், தோன்றிய நாள் முதல் பல ஊழிக்காலமாக பல பல போர்களில் சண்டையிட்டுத் தான் தோற்காத ஆற்றல் உடையதுமான பெருமைகளை உடையது ஆகும்.

அ. ள்:

மாற்றார் - பகைவர்; நிணம் — கொழுப்பு, மாமிசம்; கிள்ளை - கிளி; பலம் - பழம். பற்பல்அமர் - பல போர்கள். தோலாத - தோற்காத.

இயமனுக்கு ஓலைவிட்டது, கிளியைத் திரும்பப் பெற்றது, சந்தானமாங்கனி பெற்றது போன்ற வரலாறுகள் முன்பே விளக்கப்பட்டுள்ளன.

427 வண்தமிழ்ச் சோழமண்டலமிருக் கப்பெருமை
வானமட் டெழுகுந்தவேல்
மாநக ரிற்பொரு வலானது வலங்கண்டு
மகபதிக் கருள்குந்தவேல்
அண்டருக் கரச(ன்)ஆன் மார்த்தித விடங்கரை
ஆரூரி டுங்குந்தவேல்
அங்கிவன் மன்றனொடும் அனகசன காதியர்க்
கரசுதந் திடுகுந்தவேல்
கண்டக வலானைவென் றன்னவன் தேவிக்குக்
களநாண் தருங்குந்தவேல்
........................................................
................................................
தொண்டரா னார்க்கெலாம் தொண்டருமையென்சிற்
சுகானந்த முறுகுந்தவேல்
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. 9

பொ. ரை:

அழகிய நறுமணம் வீசுவதும் கந்தனுக்குப் பின் தோன்றியதும் தூய்மை உடையதுமான செங்குந்தம் எனப்படும் வேலாயுதம், வளமுள்ள தமிழ் வழங்கும் சோழமண்டலத்தில் ஆட்சி செய்து தேவலோகம் வரை பெருமை உடையதும், [பெருமை உடைய] வீர மகேந்திரபுரியில் போர் வல்ல சூரபதுமனது வல்லமையைக் கண்டு [அடக்கி] இந்திரனுக்கு அருள் செய்ததும், தேவேந்திரன் ஆன்மார்த்தமாகப் பூசித்துவந்த விடங்கத் தியாகரை திருவாரூரில் பிரதிட்டை செய்ததும், அங்கிவன்மன், கடவுள் தன்மை உடைய சனகாதியர் போன்றவர்களுக்கு [தங்கள் பதவியை அளித்து] அரசாள விட்டதும், கொடுமை நிறைந்த வல்லானை வென்று, அவன் மனைவிக்கு மாங்கல்யப் பிச்சை அளித்ததும், தொண்டர்களுக் கெல்லாம் தொண்டு செய்தலால் உண்டாகும் அறிவோடு கூடிய ஆனந்தத்தை அளிப்பதும் ஆகிய பெருமைகளை உடையதாகும்.



அ. ள்:

பொருவலான் - போரில் வல்லவன்; வலம் - வல்லமை, வெற்றி; மகபதி - இந்திரன்; அனகன் - கடவுள்; கண்டகம்- கொடுமை; கள நாண் - கழுத்தில் அணியும் மாங்கல்யக் கயிறு. களம் - கழுத்து; சிற் சுகானந்தம் - அறிவுடன் கூடிய இன்பம்;

428 சிவநந்தி கணநாதர் ஆதிநவ வீரராய்ச்
சித்ரமண வூரில்எய்தித்
திவ்விய குலோத்துங்கன் அம்சமஸ் தானம்
தெரிந்தனந் தங்கூத்தயர்
இவனந்தி யாமென்ன ஆயிரத் தெண்டலைகள்
ஈந்திசை பெறுகுந்தவேல்
ஏகம்பர் தெய்வீகத் திருவுலாச் சொன்னதில்
இரட்டையர்கள் துதிகுந்தவேல்
நவநந்தி வீரரே முதலியர்க ளாமென்ன
ஞானப்பிர காசவள்ளல்
நாவினால் மழுவெடுத் தும்மாலை பிளைதமிழ்
நவிலப் பெறும்குந்தவேல்
துவனம் திருத்தெய்வ மாகிமனு வாகியும்
சொல்விலங் காக்குந்தவேல்
சுந்தர சுகந்தவேல் கந்தனுக் கிளையவேல்
தூயசெங் குந்தவேலே. 10

பொ. ரை:

அழகிய நறுமணம் வீசுவதும், கந்தனுக்குப் பின் தோன்றியதும் தூய்மை உடையதுமான செங்குந்தம் எனப் படும் வேலாயுதம்,

சிவகணத்தவர் நந்திகணத்தவர் முதலிய நவவீரர்கள் அழகிய மணவூர் என்னும் பதியை அடைந்து, தெய்வத் தன்மை யுடைய குலோத்துங்க சோழனுடைய அழகிய அரசவையில் ஆராய்ந்து அளவற்ற விளையாடல்களைச் செய்து, இவர் நந்தி கணத்தவர் என்னும்படி ஆயிரத்தெட்டுத் தலைகளை அளித்துப் புகழ் பெற்றதும், இரட்டைப் புலவர்களால் அருளிச் செய்யப்

பட்ட ஏகாம்பரநாதர் உலாவில் வணங்கப் பெறுவதும், ஞானப் பிரகாச தேசிகரால் நவவீரர்கள் வழியில் வந்தவர்களே முதலியர்கள் (பிறரில்லை) என்று ஞானப்பிரகாசர் தம் நாவினால் எரியிரும்புத்துண்டைத் தாங்கி நிறுவப் பெற்றதும், மாலை, பிள்ளைத்தமிழ் போன்ற நூல்களைப் பெற்றதும், நிலைபெற்ற தெய்வமாகியும், வேத நெறியாகியும், சொல் மாறாத தன்மை உடையதும் ஆகிய பெருமைகளை உடையதாகும்.

அ. ள்:

திவ்வியம் - தெய்வத் தன்மை; சமஸ்தானம் - அரசசபை; அனந்தம் - அளவற்ற; மழு - எரியிரும்பு; மனு - நீதி நூல்; விலங்குதல் - மாறுபடுதல். (முற்பகுதியில் உள்ள செய்தி விளங்கவில்லை.)

செங்குந்த வேற்பதிகம் முற்றிற்று

**வேலும் மயிலும் துணை.**

உ

சிவமயம்

முருகக்கடவுள் துணை.

**மாகறல் கார்த்திகேய முதலியார் இயற்றிய**

# செங்குந்தர் மரபு விளக்கம்

**கார்த்திகேய முதலியார் என்பவர் இயற்றிய, 'செங்குந்தர் மரபு விளக்கம்' எனப் பெயரிய இந்நூல் முப்பது பாடல்களைக் கொண்டது. கட்டளைக் கலித்துறை என்னும் பாவினவகையால் ஆனது. காப்புப் பகுதி ஐந்து நேரிசை வெண்பாக்களைக் கொண்டது. இந்நூலில உள்ள பாடல்களில் சிலவற்றிற்கு உரைகாண்பதே கடினமாக உள்ளது.**

**காஞ்சிபுரத்தில் உள்ள கச்சபேசர் திருக்கோயில் செங்குந்த மரபினர்க்கு உரியது. கச்சபேசருக்கும் சுந்தராம்பிகைக்கும் காப்புச்செய்யுள்இயற்றிய இந்நூலாசிரியர் ஆளுடைய பிள்ளை யாருக்கும் காப்புச்செய்யுள் இயற்றியுள்ளார்.**

விநாயகர் காப்பு

நேரிசைவெண்பா

**429 வாசவளம் தன்னாலும் மாசவளம் தன்னாலும்**
**தேசவளம் செய்கின்ற செங்குந்தர்—நேசவளப்**
**பாவளம்பெற் றோங்கப் பணைவளங்கொள் கச்சியில்தந்**
**தாவளம் பொன் வண்மை தரும்.**

பொ. ரை:

**தங்கள் வாழ்க்கை வளத்தினாலும், கையில் கொண்டுள்ள பெருமை உடைய செங்குந்தப் படையினாலும் நாட்டை வளப் படுத்தும் செங்குந்தர் மீது அன்புடன் பாடப்படுகின்ற**

'மரபுவிளக்கம்' என்னும் இந்நூல் செழித்து நிற்பதற்கு வயல் வளம் பொருந்திய காஞ்சிபுரத்தில் [கச்சபேசத்தில்] எழுந்தருளியுள்ள யானைமுகப் பெருமான் நமக்கு அழகிய வளப்பத்தை அருளுவார்.

(வாசவளம் - வாழ்க்கை வளம்; மா - பெருமை; சவளம்- குந்தம்; பணை - வயல்; தந்தாவளம் - யானை. பொன்- அழகு; வண்மை - வளம்.

சுப்பிரமணியர்

430 மங்களசெங் குந்தர் மரபுவிளக் கம்செய்வான்
எங்கள் அகத்தில் இருந்தொளிரும்—கங்கைமுடி
பைங்கச்சி காவளத்தான் பாலன் வடிவேலன்
தங்கச்சி காவளத்தான் தாள்.

பொ. ரை:

கங்கையை அணிந்த பசிய தலையில், சடைமுடி உடைய சிவபெருமானின் குமாரனும், தான் ஏறுவதற்கு மயில் வாகனத்தைக் கொண்டவனுமாகிய முருகப் பெருமானின் திருவடிகள், நன்மை பொருந்திய செங்குந்தர்களுடைய 'மரபு விளக்கம்' என்னும் நூல் செய்வதற்கு எம் உள்ளத்தில் இருந்து ஒளிவீசிக் கொண்டிருக்கும்.

(பைங்கச்சிகாவளத்தான் என்பதனை பை + கம்+ சிகா+ வளத்தான் எனவும், தங்கச்சிகா வளத்தான் என்பதனை தங்க+ சிகா + வளத்தான் எனவும் பிரித்துப் பொருள் கொள்க.)

அகத்தில் - உள்ளத்தில்; ஒளிரும் - விளக்கம் செய்யும்; பை- பசிய; கம் - தலை; சிகா - சிகை (இங்கு தலைமுடி; சடைமுடியைக் குறித்தது.) சிகாவளத்தான் -தலைக்கோலம் உடையவன்; தங்க - ஏறுவதற்கு; சிகா - சிகி -மயில்; சிகாவளத்தான்- வளப்பமான மயிலை உடையவன்; தாள் - திருவடி.)

கச்சபேசர்

431 வள்ளற்செங் குந்தர் மரபுவிளக் கம்செயஎன்
உள்ளத்தில் ஓங்கி ஒளிருமே,—கள்ளமிலா
நங்கச்ச பேசன் நலம்பொழிவாள் நன்னேசன்
தங்கச்ச பேசன் சரண்.



பொ. ரை:

குற்றமற்ற நம் இறைவனாகிய கச்சபேசனும், நன்மை அருளுகின்ற இறைவியின் கணவனும், எல்லா உயிர்களிலும் தங்கியிருக்கின்றவனுமாகிய அச்சபேசனுடைய திருவடிகள், வள்ளல் தன்மை உடைய செங்குந்தர்கள்மீது மரபு விளக்கம் என்னும் நூல் பாடுவதற்கு என்மனத்தின் உள்ளிருந்து ஓங்கி ஒளிவீசிக்கொண்டிருக்கும். (துணையாகும்.)

(நங்கச்சபேசன் என்பதனை நம் கச்சபேசன் எனவும், தங்கச்சபேசன் என்பதனைத் தங்கு அச்சபேசன் எனவும் பிரித்துப் பொருள் கொள்க.) கள்ளம் · குற்றம்; நேசன் - அன்புடையவன், கணவன்.

சுந்தராம்பிகை

432 மாட்சிபெறும் சோணாடர் மான்மியம்செய் வானுளத்தில்
ஆட்சிகொடு மேவி அருளுமே — காட்சிபெற
அந்தரத்தோர் போற்றும் அருங்கச்ச பத்தளியின்
சுந்தரத்தாய் நற்றாள் துணை.

பொ. ரை :

பெருமை பெற்று விளங்கும் சோழநாட்டு அதிபர்களாகிய செங்குந்தர்களின் பெரும்புகழைக் காவியமாகச் செய்வதற்கு வானுலகில் உள்ள தேவர்கள் இறைவனுடைய தரிசனத்தைக் காணவேண்டி வழிபாடு செய்கின்ற அருமைமிகுந்த கச்சபேசர் திருக்கோயிலில் (இறைவன் இடப்பாகத்தில் வீற்றிருக்கும்) சுந்தராம்பிகையின் நன்மையருளுகின்ற திருவடிகள், என் உள்ளத்தை இடமாகக் கொண்டிருந்து திருவருள் புரிந்து துணை நிற்பதாகும்.

[மாட்சி— பெருமை; சோணாடர் — சோழநாட்டில் வாழ்பவர்; மான்மியம்— பெரும்புகழ் [பெருமை]; காட்சி — தரிசனம்; அந்தரம் — மேலுலகம்; சுந்தரத்தாய் — கச்சபேசர் திருக்கோயிலில் உள்ள இறைவியின் பெயர். இவள் அழகம்மை எனவும் வழங்கப்படுவாள்.]

**433 கச்சிப் பதிக்குந்தர் கால்வழியைப் பாடஎன்னுள்
இச்சித் திடங்கொண்டிருக்குமே,—பச்சிமத்துக்
கோயில் திருத்தெருவில் கோயில்கொண்ட காழிநகர்
சேயின்பொன் தாளிரண்டும் தேர்.** 5

பொ . ரை :

திருமேற்றளி இறைவன் திருக்கோயில் கொண்டுள்ள அழகிய வீதியில், கோயில் கொண்டெழுந்தருளியுள்ள திருஞானசம்பந்தப் பிள்ளையாருடைய பொன் போன்ற திருவடிகளிரண்டும், கச்சியைத் தலைமையிடமாகக் கொண்ட செங்குந்தர்களுடைய மரபு விளக்க நூல் பாடுவதற்கு என் மனத்தை விருப்பி இடமாகக் கொண்டு விளங்கும். (திருவடிகள் எனக்குத் துணையாகும் என்பது கருத்து.)

(இச்சித்து — விரும்பி; பச்சிமம் — மேற்கு; பச்சிமத்துக் கோயில் — திருமேற்றளி; காழிநகர் — சீர்காழி; சேய் — குழந்தை (திருஞானசம்பந்தர்) ஞானசம்பந்தப் பிள்ளையார் வந்து தங்கியமை காரணமாகவே இப்பகுதி பிள்ளையார் பாளையம் என வழங்கப் படுகிறது.)

நூல்

**434 மங்கள வேளையின் மங்களமேளம் மகிழ்விரங்க
மங்கள மான செயலொருங் கெங்கும் வளம்பெறுமால்
மங்கள வாழ்வுசெய் நம்கச்ச பேசனின் மங்களம்கொள்
மங்கள செங்குந்தர் மங்களங்கோடி வழங்கலினே.**

பொ. ரை :

மங்களகரமான வாழ்வை அருளும் கச்சபேசப் பெருமானின் நன்மையைப் பெறுகின்ற நன்மை நிறைந்த செங்குந்தர் (உலகத்தார்க்கு) கோடிக் கணக்கில் நன்மையைத் தருதலினால், (உலகத்தவர்க்குப் புத்தாடை(கோடி) வழங்குதலால்) நன்மை நிறைந்த வேளையில் மங்கல இசை முழங்க மங்கலச் செயல்கள் எங்கும் நிறைந்து வளம் பெற்று விளங்கும்.

(மங்கலத்திற்குக் காரணர் செங்குந்தர் என்பது கருத்து.)



**435 தாரணி மூன்றும் நடுங்குமோர் வீரனைத் தாம்வெலற்குப்
பேரணைஏறிய வீரம் தெரித்த பெருமையினால்
வீரணத் தேரி எனப்பெறில் செங்குந்தர் வீரங்களில்
ஓரணு வேனும் உரைவன்மைத் தோவிவ் வுலகமுமே.**

பொ. ரை :

மூவுலகங்களும் அஞ்சுகின்ற வீரனாகிய வல்லான் என்பவனை வெல்லுவதற்கு, அவனுடைய இருப்பிடத்திற்கே சென்ற செங்குந்தர்களது வீரத்தை விளக்குகின்ற பெருமை உள்ளதால், அந்த ஏரி 'வீராணத்தேரி' என்றே பெயர் பெற்றது என்றால், செங்குந்தர்களுடைய வீரச்செயல்களில் ஓர் அணுவளவாவது எடுத்துரைக்கும் வல்லமையை இந்த உலகத்தில் உள்ளவர் உடைவரோ? (இலர்.)

அணை - இருக்கை, இருப்பிடம்; தெரித்தல் -சொல்லுதல்.

**486 நீரொட்டும் கோட்டையில் வல்லானை வென்றநெறி உரைப்பக்
கூரொட்டும் வாள்கொண்டளவில சென்னி கொடுத்தருளிப்
பேரொட்டக் கூத்தன தீட்டி எழுபது பெற்றிருக்கும்
சீரொட்டும் செங்குந்தர் மாட்சியை யாவர் சிதைக்குநரே.** 3

பொ . ரை:

நீரால் சூழப்பட்ட கோட்டையில் வாசம் செய்த(கொடிய) வல்லான் என்பவனை வெற்றிகொண்ட தன்மையை எடுத்துக் கூறுவதற்கு விலையாக கூர்மை மிக்க வாளைக்கொண்டு அளவற்ற தலைகளை வெட்டிக் கொடுத்து, (அத்தலைகள் மீளச் சென்று உடம்பில் ஒட்டப்பாடியதனால்) ஒட்டக்கூத்தர் எனப் பெயர் பெற்றவர் பாடிய ஈட்டி எழுபது என்னும் நூலைத் (தங்கள் பெருமைக்கு ஆதாரமாகப்) பெற்றிருக்கும், புகழ் படைத்த செங்குந்தகளுடைய சிறப்பை யாரால் அழிக்க இயலும்?

(அளவில சென்னி — அளவற்றதலை; சீர்—புகழ்; மாட்சி—பெருமை.)

**437 பொன்பொதி கொன்றை உமையாள் சிலம்பிற் புடைபெயர்ந்த**
**ஒன்பது வைரத்தில் ஒன்பது பெண்வழி ஒன்பதின்மர்**
**என்பதும் அன்னோர் வழிவீரர் என்பதும் என்னவென**
**மன்பதை சோரத் தலைதந்த செங்குந்தர் வைரம்நன்றே. 4**

பொ. ரை:

பொன்போலும் நிறமமைந்த கொன்றை மாலையணிந்த சிவபெருமானின் இடப்பாலுள்ள உமாதேவியின் திருவடிச் சிலம்பில் இருந்து வெளிப்பட்ட ஒன்பது மணிகளில் தோன்றிய நவசக்திகளினிடமாக உதித்தவர்கள் நவவீரர் என்பதும் அவர்களின் வழித்தோன்றல்கள் செங்குந்தர்கள் என்பதும் ஒரு பெருமையோ என்று சொல்லும்படி, இந்த உலகிலுள்ளோர் தளர்ச்சி அடையுமாறு தம் தலையை அரிந்து கொடுத்த செங்குந்தர்களுடைய வீரம் நன்றாக உள்ளது.

(பொன் பொதி — பொன்னை நிகர்த்த; புடைபெயர்ந்த — இடம் விட்டுச் சிந்திய; மன்பதை—மக்கள் உலகு. சோர்தல்— தளர்ச்சி அடைதல்; வைரம் — விரம்.)

**438 கற்றவர் மாதவர் மன்னவர் தேவர் கனியுமக்கட்**
**பெற்றவர் என்றிவர் மானங் கெடாமல் பிழைப்பதற்குக்**
**கொற்றவர் போல்நிதஞ் செங்குந்தர் கோடி கொடுப்பதல்லால்**
**மற்றவர் கோடி கொடுப்பர்க ளோசொல் மலர்மகளே. 5**

பொ. ரை:

இலக்குமி தேவியே! நூலறிவுடையோர், தவம் செய்வோர், அரசர்கள் வானவர், உள்ளத்தை நெகிழ வைக்கும் மக்கட் செல்வம் பெற்றவர்கள் முதலியவர்களின் மானம் அழியாமல் வாழ்வதற்கு, அரசர்களைப் போல நாள்தோறும் செங்குந்தர்கள் கோடி (புது ஆடை) கொடுப்பதைப் போல, மற்றவர்கள் கோடி கோடியாகக் கொடுப்பார்களோ! கூறுவாயாக.

**439 கோத்திரம் ஒன்பது பெற்றசெங் குந்தர் குளிர்ந்தகடை**
**நேத்திர மாத்திரம் பெற்றவர்க ளும்வேந்தர் நெடுஞ்சபையில்**
**பாத்திரம் ஏற்குந் தொழுநோய ராயினும் பாத்திரராய்த்**
**தோத்திரம் செய்யப் படுவர்தண் மாலைசுகந்தமுற்றே. 6**



பொ. ரை:

ஒன்பது கோத்திரத்தில் உற்பவித்த செங்குந்தர்களது குளிர்ந்த கடைக்கண் பார்வையை மட்டும் பெற்றவர்களும், அரசசபையில் பிச்சையேற்கும் பாத்திரம் ஏந்திவரும் தொழு நோயர்களாயிருந்தாலும் குளிர்ந்த மணம் வீசும் மாலை யணிந்த, அரசர்களாய் யாவராலும் புகழப்படுவார்கள் (நவ வீரர்மரபு என்பது ஒன்பது கோத்திரம் எனப்படும்.)

(நேத்திரம் — கண்; அது பார்வையைக் குறித்தது. பாத்திரர் — தகுதி உடையவர்.)

**440 நாடுயர் காஞ்சிப் பெருநாட்டுச் செங்குந்தர் நன்குநெய்யும்**
**ஆடை வளங்களை எவ்வா றியானிங் கறைகுவனால்**
**பீடைசெய் ஊதையில் வெம்மை கொடுத்துப் பிணிதவிர்த்தும்**
**கோடை யுழைஉவர் நீர்கவர்ந் தின்ன குணந்தருமே. 7**

பொ. ரை:

நாடுகளில் உயர்ந்த காஞ்சிப் பெருநாட்டில் வாழுகின்ற செங்குந்தர் நன்முறையில் நெய்தளிக்கும் ஆடைகளின் வளத் தினை நான் எவ்வாறு எடுத்துச்சொல்லுவேன்? அந்தஆடைகள் தம்மை அணிபவர்களுக்குத் துன்பம் தரும் குளிர் காற்றில் வெப்பத்தைக் கொடுத்து நோயை நீக்கியும், கோடைக் காலத் தில் வியர்வைநீரை உறிஞ்சியும், பிறவாறும் நன்மைகளைச் செய்யும்.

(பீடை — துன்பம்; ஊதை — குளிர்காற்று; கோடை யுழை — கோடைக்காலத்தில்; உவர் நீர் — உப்புநீர், வியர்வை.)

**441 புறநாடு வந்த கடலாடை யாவுமப் போதொளிரும்**
**நிறநாடு மூதையில் வேதையங் கோடையி னீளுவர்நோய்**
**அறநாடும் வைத்திய நூற்குப் பகையாத லால்,வணிகீர் !**
**அறநாடும் செங்குந்தர் ஆடையைக் கோடல் அழகென்பவே. 8**

பொ. ரை:

கடல் கடந்த வெளிநாடுகளில் இருந்து வந்த ஆடைகள் எல்லாம் புதிதாக உள்ள அப்பொழுதுதான் ஒளிவீசும். (அவ்

வாடையை அணித்தவர்கள்) ஊதைக் காற்றிலும், வெப்பந் தரும் கோடையிலும் நோய்வந்து பற்றத் துன்புறுவர். அவ் வாடைகள் தருமநெறியைக் கூறுகின்ற வைத்திய சாத்திரங் களுக்குப் பகையானவை ஆதலால், வணிகர்களே! தருமவழியில் செங்குந்தர் நெய்கின்ற ஆடையை நீவிர் வாங்குவதே வாணிகத் திற்கு அழகு என்று அறிஞர் கூறுவர்.

**442 புள்ளாடும் ஈட்டிகொள் செங்குந்தர் நெய்கின்றபொன்துகிலோ**
**வெள்ளாவி வைக்க விளக்கமுந் திண்மையு மேலிடுமால்;**
**கள்ளார் பனிநக ரத்துவர் நீர்கொள் கருவியுடை**
**வெள்ளாவி வைத்திட உள்ளவை யாவும் வெளுத் திடுமே.** *9*

*பொ. ரை:*

(புலால் மணம் வீசுவதனால் அதை விரும்பிப்) பறவைகள் சுற்றிப் பறப்பதற்குக் காரணமான ஈட்டியைக் கையில் கொண்ட செங்குந்தர் நெய்கின்ற பொன்மயமான ஆடை, (வண்ணார் சூடேற்றும் அடுப்பாகிய)வெள்ளாவியில் வைத்துச் சுடச்சுட ஒளியும் உறுதியும் அதிகமாகும். ஆனால், குற்றம் களையாத குளிர் நாட்டவர், துவர்ப்புச்சுவையுடைய தண்ணீர் கொண்டு நெய்கின்ற ஆடைகள் வெள்ளாவியில் வைத்தால் உள்ள நிறம் எல்லாம் வெளுத்துப் போய்விடும்.

(மேலிடும் —அதிகமாகும்; பனிநகர் — குளிர் நாடு;)

**443 தெவ்வா றிருங்கே சரிவச் சிரப்பொய்ச் சிரங்கொணர**
**எவ்வாறு வெட்டினிர் என்ன இறைவற் கிறைபயவா(து)**
**இவ்வாறு வெட்டினம் என்னத்தம் சென்னியை ஈர்த்துணர்த்தும்**
**செவ்வா றொழுகுநம் செங்குந்த ராண்டகைச் சிங்கங்களே** *10*

*பொ. ரை:*

பகைமை கொண்ட பெரிய சிங்கம்போன்ற (வல்லானு டைய) வலிமை மிக்க பொய்த்தலையை எவ்வாறு வெட்டிக் கொணர்ந்தீர் என்று (வீரன் நாராயணன் ஆகிய இருவரையும் பராந்தக) சோழன் கேட்க அரசனுக்குப் பதிலை வாயால் கூறாமல், 'இவ்வாறு வெட்டினோம்' என்று தம் தலையை வெட்டிக் காட்டிக் கூறிய, நன்னிலையில் ஒழுகும் செங்குந்தர் ஆண்மையுடைய சிங்கங்களைப் போன்றவர்களாவர்.



(தெவ் — பகை: கேசரி — சிங்கம்; வச்சிரம் — வயிரம்— வலிமை; இறை — விடை, பதில்; சென்னி — தலை; ஈர்த்தல்— வெட்டுதல் ஆண்டகை – ஆண்மையுடையவன், வீரன்.)

**444 ஆலும், கிணறும், உயர்கூரை வீடும் அணிமுலையும்**
**போலுநற் றூசுநெய் தின்னவர் என்னப் பொறியமைத்தல்**
**ஏலுஞ்செங் குந்த ருயர்திணை யஃறிணை யெவ்வுயிர்க்கும்**
**பாலும் பழமு மெனவே விளங்குவர்; பாருமினே.** *11*

*பொ. ரை:*

செங்குந்தர், மரம், கிணறு, உயர்ந்த கூரை வீடு, அழகிய மகளிர் என்று பலவகையான ஓவியம் அமைந்த நல்ல ஆடை களை நெய்து இவர்கள் இப்படிப்பட்டவர் என்ற முத்திரை பதிக்கவல்லவர்கள். அவர்கள் உயர்திணை அஃறிணை ஆகிய அனைத்துயிர்கட்கும் பாலும் பழமும் போல இனிமையாக விளங்குகின்றவர்கள் ஆவர்.

(ஆல் — ஆல மரம்; அணிமுலை, இங்கு ஆகுபெயராய்ப் பெண்களைக் குறித்தது; தூசு — ஆடை; பொறியமைத்தல் — முத்திரை பதித்தல்; ஏலும் —பொருந்துகின்ற; 'உயர்திணைப் பொருள், அஃறிணைப் பொருள் அனைத்தும் தங்கள் ஆடை களில் ஓவியங்களாகஅமைத்துக்காட்டுபவர்கள் செங்குந்தர்கள்' என்பது கருத்து.)

**445 வானம் வளரும்; பசுக்கள் வளரும்; மகம்வளரும்;**
**தானம் வளரும்; தருமம் வளரும்; தமிழ்முதலாம்**
**ஞானம் வளரும்; சிவஞான போத நலம்வளரும்;**
**மானம் வளர்க்கின்ற செங்குந்த ரெங்கும் வளர்தலினே.** *12*

*பொ. ரை:*

மானத்தைக் காக்கின்ற செங்குந்தர் எங்கும் வளர்ந்து வருதலினால், மழை அதிகரிக்கும்; பசுக்கள் வளம் பெருகும்; யாகம் வளரும்; தானதருமங்கள் அதிகமாகும்; தமிழ் முதலாகிய அறிவு வளரும்; சிவஞானமாகிய அறிவு பெருகி வளரும்.

446 தாயரும் பன்னநன் மாணாக்கர் யாருந் தழைந்துவர
நேயரின் எண்ணி முகமே அகமே நெடிதலர்ந்தே
ஆயரு நூல்பல வாய்கொண் டுரைத்தலின் ஆன்றதந்து
வாயரென் றோர்பெயர் பூண்டனர் செங்குந்தர்மண்டலத்தே. 13

பொ. ரை:

தாய்மார்கள் வலியுறுத்திச் சொல்ல, மாணவர்கள் அனைவரும் உடன்வர, அன்பர்கள் எண்ணி அகமும் முகமும் மலர்ந்து கேட்க, ஆராய்ந்து அறிவதற்கு அருமையான நூல்கள் பலவற்றைத்தம் வாயினால் எடுத்துச்சொல்லுவதனாலமாட்சிமைப் பட்ட 'தந்துவாயர்' என்று உலகில் ஒரு பெயர் பெற்றவர்கள் செங்குந்தர்களேயாவர்.

(பன்னல் — சொல்லுதல்; தழைதல் — செழித்தல்; அகமே முகமே—ஏகாரம் எண்ணுப் பொருளது; ஆய்—ஆராய்தல்; தந்து — நூல். தந்து வாயர் — நூல் உரைப்போர்.)

447 பைங்குந்தம் முன்விற்ற நம்கச்ச பேசன் பதுமமெனப்
பொங்குந்தங் கக்கழல் போற்றுவர்; சித்தாந்த புண்ணியர்கள்;
எங்குந்தம் போக்குவர்; எங்கும்தம் கீர்த்தி யெழுப்புவர்கள்;
செங்குந்தம் தங்குகைச் சிங்கங்கள் போலொளிர் செங்குந்தரே 14

பொ. ரை:

கைவேலாகிய செங்குந்தத்தைக் கையில் கொண்டு சிங்கங்களைப்போல வாழும் செங்குந்தர் முன்னாளில் அச்செங்குந்தத்தைத் தமக்களித்த கச்சபேசனின் தாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்குவர்; சைவ சித்தாந்தத்தை உணர்ந்த புண்ணியம் பெற்றவர்கள். எங்கள் குறைகளையும் நீக்குவர், எல்லா இடங்களிலும் தம் கீர்த்தியைப் பரவச் செய்திருப்பார்கள்.

(எம் குந்தம்- எங்கள் குறை; குந்தம்- குந்தகம்.)

448 நீழலும் உண்டு; முயற்சியும் உண்டு; நிலைத்தமிடிப்
போழலும் உண்டு; வருவாயும் உண்டு; புனிதம் உண்டு;
வாழலும் உண்டு; தருமமும் உண்டு; மகிழ்வும் உண்டு;
தாழல் சிறிது மிலையாஞ்செங் குந்தர் தறியிடத்தே. 15



பொ. ரை:

செங்குந்தர் தொழிலாகிய தறி நெய்யுமிடத்தில், தங்க நிழல் இருக்கிறது: தொழிலில் நல்ல முயற்சி இருக்கிறது; அதனால் நிலை பெற்ற வறுமையை அழிப்பதும் உண்டு; அத்தொழிலால் நல்ல வருவாயும், தூய்மையும், நல்வாழ்வும், தருமம் செய்தலும், மகிழ்ச்சியும் இருக்கின்றன; அத்தொழிலால் சிறிதும் குறைவு இல்லை

அ. ள்: மிடி - வறுமை; போழ்தல் — பிளத்தல், அழித்தல்.

449 சேவரு நம்கச்ச பேசனைப் போற்றிடும் செங்குந்தர்நெய்
பூவரும் பொன்னுடைவாங்கி உடுத்தற்குப் பொன்னின்மையால்
மேவருந் தேவர்விண் சென்றனர் ஏனையர் வேம்பினிலை
தாவரு மான்றோல் மரவுரி இன்ன தரித்தனரே. 16

பொ ரை:

எருதேறி வருகின்ற கச்சபேசப் பெருமானை வணங்குகின்ற செங்குந்தர்கள் நெய்கின்ற பூப்போன்ற மிருதுவான பொன்மயமான ஆடையை வாங்கி உடுத்துக் கொள்ளுவதற்குக் கையில் பொருள் இல்லாமையால், தேவர்கள் ஆகாயத்திற்குச் சென்றுவிட்டனர்; மற்றவர் வேம்பின் இலை, மான்தோல், மரப்பட்டை முதலியவற்றை உடுத்துக் கொண்டார்கள்.

(இயல்பாக நடைபெறும் செயலுக்கு ஒரு காரணம் கற்பித்துக் கூறியமையால் இது தற்குறிப்பேற்ற அணியாகும்.)

450 பாராளும் செல்வம் தவிர்ந்தருங் காட்டிடர் பட்டுறுநாள்
ஓராமை பூசித்த கோயிற்செங் குந்தரை ஓர்சிறிதும்
சேரா திருந்த தகைமையி னால்உடைச் சீர்லனாய்ச்
சீராமன் அன்று மரவுரி பூண்டு திரிந்தனனே. 17

பொ. ரை:

ஆமைவடிவு கொண்ட திருமால் பூசித்த கச்சபேசர் கோயிலுக்குரிய செங்குந்தர்களுடன் சேராதிருந்த காரணத்தால், இராம பிரான் அன்று உலகை ஆட்சி செய்யும் செல்வத்தை இழந்து, கொடிய வனத்தில் துன்பப்பட்டு வாழுகின்ற காலத்தில், ஆடை உடுத்தும் சிறப்பு இல்லாமல் மரப்பட்டையை உடுத்துத் திரிந்து கொண்டிருந்தனன்.

(இதுவும் தற்குறிப்பேற்ற அணி.)

**451 பாநலச் செந்நாப் புலவன்செங் குந்தரைப் பார்த்தபின்னர்க்**
**கானலம் வாசி நலங்காண நெஞ்சங் கசிந்துருகி**
**நூனலம் பாநல மோடே கலைநல நோக்கியதன்**
**மேனல மென்ற பொருணலந் தேர்ந்து விளங்கினனே.** *18*

பொ. ரை:

பாடலின் நலம் தெரிந்த திருவள்ளுவர் செங்குந்தர்களைப் பார்த்தபின்பு அவர்களுடைய கால் அழகையும் குதிரை அழகையும் கண்டு மனம் நெகிழ்ந்து அவர்கள் பயன்படுத்தும் நூல், பா கலை ஆகியவற்றைப்பார்த்து, அதன் பிறகு நன்மை என்ற பொருளின் அழகை ஆராய்ந்து (செம்மை பெற்று) விளங்கினார்.

பா-பாட்டு; பாவுநூல். கான்நலம்—இசையழகு; செந்நாப் புலவன்— திருவள்ளுவர்; கால் நலம் — (பாவு ஓடுவதற்கு விரைந்து செல்லும்) காலின் அழகு; வாசி — குதிரை [பாவு தோயும்போது பயன்படும் மூங்கில்குதிரை]; கலை — கல்வி, நூல்; ஆடை.

[இப்பாடலில் நூல், பா, கானலம், கலை இவை சிலேடையாக இரு பொருள் உணர்த்தின.]

**452 ஞானமி லாது சினேந்திரன் அம்மையி னல்லகலைத்**
**தானம் தாராதவன் போன்ம்வறி தேஇந்தச் சைவவுரு**
**வானசெங் குந்த ரிடஞ்செலக் கண்டுமுட் டஞ்சிஅஞ்சி**
**மானம் தெரிதந் திலன்;அம் மணத்துடன் வாழ்ந்தனனே.** *19*

பொ. ரை:

அருகனாகிய சினேந்திரன், சைவ உருவம் தாங்கிய செங்குந்தரிடம் சென்றால் கண்டுமுட்டு வரும் என அஞ்சி மான உணர்வு இல்லாமல் ஆடையின்றி வாழ்ந்தனன். அதனால் இவன் முற்பிறப்பில் ஞானம் இல்லாமையால் வஸ்திர தானம் செய்ய மறுத்தான் போலும்.

(சினேந்திரன் — அருகன்; அம்மை — முற்பிறப்பு; கலை— ஆடை; போன்ம் — போலும். வறிதே — வீணாக; கண்டு முட்டு—பார்த்தனால் திட்டு; சமணர்கள் சைவர்களை நேரில்



கண்டாலும் கண்டவர்கள் கூறக் கேட்டாலும் தீட்டுவந்தது என்று பட்டினியிருத்தல் 'கண்டு முட்டு' 'கேட்டு முட்டு' எனப்படும். (அம்மணம் — ஆடையின்மை.)

**453 தலையேற்ற கச்சப நாதனைப் போற்றித் தவவடிவாய்**
**நிலையேற்ற செங்குந்தர் போல்சந்திரனும் நெடுஞ்செல்வரும்**
**மலையேற்ற முள்ள புலவரும் மாதரும் மாதவரும்**
**கலையேற்றம் பெற்ற இயல்பால் பெருமை கலந்தனரே.** 20

பொ . ரை :

தலையோட்டில் பிச்சையேற்ற கச்சபேசப் பெருமானை வணங்கித் தவவேடம் நிலைபெற்றிருக்கின்ற செங்குந்தர்கள் கலையேற்றம் பெற்றதனால் பெருமையடைந்தது போல, சந்திரன், பெரிய செல்வர்கள், புலவர்கள், பெண்கள், தவசிகள் ஆகியோர் கலையேற்றம் பெற்ற தன்மையினாலே பெருமையடைந்தார்கள்.

(சந்திரன் கலை வளரப் பெற்றதும், செல்வர் கலைப் பொருள்கள் பலவற்றைக் கொண்டிருட்பதும், புலவர்கள் நூற்கலைகள் அறிந்ததும், பெண்கள் நடனக் கலை கொண்டதும், தவசிகள் இடைகலை பிங்கலை போன்றவை பெற்றதும் இங்குச் சிலேடையாகக் குறிக்கப்பட்டன.)

**454 கடையுகந் தன்னிற் பெரிதும் திருத்தளி கட்டவந்து**
**நடையுகந் தோங்கித் திகழ்நாட்டுக் கோட்டை**
**நணும்சைவர்போல்**
**விடைஉகந் தேறிய கச்சபன் தண்கழல் வேண்டிமிகக்**
**கொடைஉகந் தீபவர் செங்குந்த ராம்சற் குணசைவரே.** *21*

பொ. ரை :

கடையுகமாகிய இக்கலிகாலத்தில் இறைவன் உறையும் கோயில் திருப்பணிகள் செய்து ஒழுக்கத்தை விரும்பிக் கொடையால் ஓங்கியிருக்கும் நாட்டுக் கோட்டை நகரத்துச் சைவர்களைப் போல, இடபத்தை வாகனமாகக் கொண்ட கச்சபேசப் பெருமானின் குளிர்ந்த திருவடிகளை வழிபட்டு, நிறைந்த கொடையை விரும்பி அளிப்பவர்கள் நற்குணம் கொண்டு சைவநெறி நிற்கும் செங்குந்தர்களாவர்.

நாட்டுக் கோட்டைத் தனவணிகர்கள் இரணிய தானம் செய்வது போலச் செங்குந்தர்கள் வஸ்திர தானம் செய்கின் றார்கள் என்பதாம்.

455 கூழ்குடித் தாலும், குறையிரந் தாலும், குடலொருங்கே
சீழ்பிடித் தாலும், மதியழிந் தாலும் சிறையிருக்க
ஊழ்பிடித் தாலும் கடனிருந் தாலும் உணர்வரிதாம்;
வாழ்குடி கொண்டொளிர் செங்குந்தர் யாவு மறைத்தலினே. 22

பொ. ரை :

குடி வாழ்க்கையில் உயர்ச்சி பெற்ற செங்குந்தர்கள் தாம் வறுமையால் கூழ் குடித்தாலும், குறைகளைக் கூறி யாசித் தாலும், குடர் வெந்து சீழ்கொண்டு துன்பப்பட்டாலும், அறிவு குறைந்தாலும், ஊழால் சிறைப்பட்டாலும், கடன் பட்டாலும், அவைகளைப் பிறர் உணராதவாறு தமக்குள்ளே பொதிந்து வைத்து வாழ்தலினால், அவைகளைப் பிறர் அறிதல் இயலாது.

('அரிது' — என்றது பன்மை யொருமை மயக்கம்.)

456 மலைவா சவனன்று கௌதம னாற்குறி மன்னுறுநாள்
நிலைவாசத் தாங்கே புரந்தசெங் குந்தர், தண் ணித்திலப்பூந்
தலைவாச னாகம் திகிரி பரிவட்டம் தானையொடு
கலைவாசங் கோடி யுடைபுத் தகமிவை கண்டனனே. 23

பொ. ரை:

போரிடுதலைச் செய்யும் இந்திரன் முற்காலத்தில் (அகலி கையை விரும்பி, அவள் கணவராகிய) கௌதம முனிவரின் சாபத்தினால் உடலில் எங்கும் குறிகளாகப் பெற்று, ஒதுங்கி ஓரிடத்தில் மறைந்து வாழும்போது அங்கே சென்று ஆடை கொடுத்துக் காப்பாற்றியவர்கள் செங்குந்தர்களேயாவர்.

(மலை — மலைதல்—போரிடுதல்; மன்னுறும் — பொருந்தி யிருக்கும்; புரத்தல் — காத்தல்.)

★ (இப்பாடலின் பின்னிரண்டு அடிகளுக்கு நேரானபொருள் விளங்கவில்லை.)



457 நிலைபடு வாழ்க்கைச்செங் குந்த குலத்தோய் நிதநிதமும்
இலைபடு வத்திர கேத்திரங் கேட்டே னிறைஞ்சியிரேன்
தலைபடு வாசம் புனைவட்ட நாகமுன் றான்பிடியல்
கலைபட நீவிமடிகோடி யின்பணி கண்டையின்றே. 24

இப்பாடலின் பொருள் விளங்கவில்லை.

458 சமைய விசேட நிருவாண தீக்கை தரித்தலுடன்
அமையபி டேகமும் பெற்றங் கவர்குலத் தாரியராய்
இமைய முதற்கொடு சேது வரைக்கு மினிதுறைந்து
சிமைய விளக்கென யாண்டும் விளங்குவர் செங்குந்தரே. 25

பொ. ரை:

மூன்றுவகை தீட்சைகளான சமயம், விசேடம், நிருவாணம் ஆகியவற்றுடன் ஆசாரிய அபிடேகமும் ஏற்றுக் கொண்டு, (செங்குந்தர்) குலத்துக்குக் குருவாக விளங்கி, இமயம் முதல் சேது (இராமேஸ்வரம்) வரை எல்லா இடங்களிலும் இனிமை யுடன் வாழ்ந்து, மலை மேலிட்ட விளக்குப் போல எங்கும் பிரகாசமாக விளங்குபவர்கள் செங்குந்தர்களேயாவர்.

[ஆரியர் — ஆசாரியர், குரு; சிமையம் — மலை.)

459 பூவாருஞ் சோலைச் சிவாலயந் தோறும் புளகமுற்று
நாவார நெஞ்சக மாரஇசையின் நலந்தெரிந்து
தேவார மும்திரு வாசகமும் சொல்லிச் சின்மயமே
ஆவார்; மகிழ்வார்; நடிப்பார்; செங்குந்தர் அனைவருமே. 26

பொ. ரை:

பூக்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்த, சிவபெருமான் உறையும், கோயில்களுக்குச் சென்று, புளகம் போர்த்து, நாவும் மனமும் பொருந்தி இசையின் தன்மையை உணர்ந்து தேவாரம், திருவாசகம் இசைத்து, ஞானமயமாக நிற்பவர்களும் மகிழ்ந்து நடிப்பவர்களும் செங்குந்தர்களாவர்.

[புளகம் — உடல்சிலிர்த்தல்; சின்மயம் — ஞானமயம்.]

**460 மூத்தவன் என்று முருகப் பிரானை முறைமைகொண்டிங்(கு)**
**ஏத்துவர் செங்குந்தர்; நீற்றொளி ஆசார மேற்றிருக்கும்**
**மாத்துவர் வைணவர் சைனர் முதலிய மற்றவரும்**
**நீத்தவர் போற்றரும் வைதிக சைவ நெறியினரே.** 27

பொ. ரை :

முருகப் பெருமானைத் 'தமையன்' என்று உறவு கொண்டு துதிப்பவராகிய செங்குந்தர்கள், திருநீற்றை விலக்குகின்ற ஒழுக்கமுடைய மாத்துவர்கள், வைணவர், சமணர் முதலிய பிறமதத்தவரும் துறவராயினும் அவர்களால் போற்றுவதற்கு அருமையான வைதிகச் சைவ நெறியை மேற்கொண்டவர்கள்.

(ஏத்துவர் — வழிபடுவர்; ஆசாரம் — ஒழுக்கம்; நீத்தவர்— துறந்தார்)

**461 காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனி னுங்கவின்செய்**
**ஞாலத்தின் மாணப் பெரிதென்று வள்ளுவர் நாட்டினர்;அச்**
**சீலத்தின் மிக்கசெங் குந்தர்க ளைவர் திரௌபதைக்குக்**
**காலத்திற் செய்ந்நன்றி வானிற் பெரிதெனக் கண்டனமே.** 28

பொ. ரை:

உரிய காலத்தில் செய்த உதவி அளவில் சிறியதாக இருந்தாலும், அது செய்யப்பட்ட காலத்தை எண்ணிப்பார்க்கும் போது, அவ்வுதவி உலகத்தைவிடப் பெரியது என்று திருவள்ளுவர் கூறிய ஒழுக்க நெறியில் நிற்பவர்களான செங்குந்தர், பாண்டவரின் தேவியாகிய திரௌபதைக்கு மானம் கெடவந்த காலத்தில் ஆடை கொடுத்துக் காத்த அந்த உதவி வானத்தைக் காட்டிலும் உயர்ந்தது ஆதலை அறிந்து கொண்டோம்.:

**462 மானிடை வேங்கை யருள்கொள நூலின் வகைசெலுத்த**
**யானிடைச் செல்வரைப் போற்று செங்குந்தரி னன்புடைமை**
**கானிடைப் பாதித் துகிலோ டுழன்றவன் கார்உருத்தீர்**
**வானிடை மேற்கொளும் போர்வைகளே சொலும் வையகத்தே.** 29



பொ. ரை:

மானினிடத்தில் புலி அன்பு கொண்டு ஒழுகும்படி அறநூல்களின் வழியில் வாழ்ந்து, சிவபெருமானை வணங்குகின்ற செங்குந்தர்களிடத்திலுள்ள அன்புடைமையை, காட்டில் பாதி ஆடையுடன் திரிந்த நளன், தான் நாகராசனால் அடைந்த கரிய உருவம் நீங்கி நிற்கின்ற சமையத்து அவன் சிறப்பாக உடுத்த ஆடைகளே உலகிற்கு எடுத்துக் கூறும்.

[ஆன் —எருது; ஆனிடைச் செல்வர் — சிவபெருமான்; பாதித்துகிலோடு உழன்றவன் — மனைவியின் புடைவையில் கிழித்த பாதியாடையுடன் திரிந்த நளன்; கார் உரு—கரிய உருவம்; போர்வை — மேலாடை. நளன் தன் உருவம் வேறுபட்டதனால் 'இன்னான்' என அறிய முடியாதபடி இருந்தான். அவன் அவ்வுருவம் நீங்கி இயற்கை உருவத்தைப் பெற்ற பொழுது பெருமையை இழக்காமல் உயர்ந்த ஆடைகளை உடுத்து விளங்கினான். அந்த விளக்கம் செங்குந்தரால் வந்தது என்பதாம். தீர்வான்- தீர்கின்றவன்.]

**463 வாழிய தண்பெயல்; ஆனினம் அந்தணர்; மாமகங்கள்**
**வாழிய தேவர்; முனிவர்; புலவர்; மனிதரெலாம்;**
**வாழிய காஞ்சியில் நம்கச்ச பேசன் உமாசகிதம்;**
**வாழிய இங்கவன் தாள்தொழும் செங்குந்த மானவரே.** 30

பொ. ரை:

குளிர்ந்த மழை என்றும் பொழிவதாக; பசுக்கள், அந்தணர், வேள்விகள் இனிது வாழ்வனவாக! தேவர், முனிவர், அறிஞர் மற்றும் பொதுவான மனிதர் ஆகிய அனைவரும் வாழ்வாராக! காஞ்சியில் உள்ள நம் கச்சபேசப் பெருமான் உமாதேவியாரோடு என்றும் வாழ்வாராக! இந்த இறைவனின் திருவடிகளை வணங்கும செங்குந்தர்களும் என்றும் நிலைத்து வாழ்வாராக!

[பெயல் —மழை; புலவர் — அறிவுடையவர், கற்றோர்; சகிதம்-உடன்; மானவர் — மனம் உடையவர்.]

செங்குந்தர் மரபுவிளக்கம் முற்றியது.

வேலுமயிலுந் துணை.



உ

சிவமயம்

முருகக் கடவுள் துணை

நரசிங்கபுரம் வீராசாமி முதலியார் இயற்றிய

## சேனைத்தலைவர்

# மரபு விளக்கச் சூறாவளி

வீரவாகுத் தேவருடன் தோன்றிய செங்குந்தர்கள் முருகப் பெருமானுடைய படைக்குத் தலைமை பூண்ட காரணத்தினாலும், செங்குந்தர்களில் பலர் சோழ மன்னர்களுடைய சேனைக்குத் தலைமை பூண்டு ஒழுகிய காரணத்தாலும் இவர்கள் 'சேனைத்தலைவர்' என்றும், இவர்தம் மரபு 'சேனைத் தலைவர் மரபு' என்றும் வழங்கப் பெறுகின்றது.

காஞ்சிபுரம் சபாபதி முதலியார் என்னும் இலைவாணிகர், கலியுகாதி வருடம் 4944 இன் பின் சோபகிருது வருடம் ஆனி மாதம், 'சேனைத் தலைவர் மரபு விளக்கம்' என்னும் நூலெழுதி, அதில் செங்குந்தர்களைப் பற்றிய தவறான, பொய்யான செய்திகளைக் கூறியுள்ளார். அந்நூலை மறுத்து எழுதப் பட்டதே, வீராசாமி முதலியார் அவர்கள் இயற்றிய 'சேனைத்தலைவர் மரபு விளக்கச் சூறாவளி' என்னும் இந் நூலாகும். மரபு விளக்கத்தின் ஆசிரியர் இலை வாணிகர் என்று சொல்லப்படுகிறார். 'இலை வாணிகம்' என்பது என்ன என்று விளங்கவில்லை.

காஞ்சிபுரம் சைவசித்தாந்த வேதாந்த ஞானாசிரியர், மெய்கண்ட சிவாசாரியார் மரபு திருவூறல் - விநாயகதேசிகர் இந்த நூலுக்கு இயற்றிய சாற்றுக்கவிகளில்,



'பேரார்செங் குந்தர் பெருமை மிகப்பிர காசிக்கவே,
தாராரும் சேனைத் தலைவர் மரபுவிளக் கத்திற்குச்
சீரார்சூ றாவளி செய்தான் எழில்நர சிங்கபுரம்
வீரா சாமிக் கவிவாணன் யாரும் வியப்புறவே.'

'செய்க்கமலம் சூழுநர சிங்கபுரம் வாழ்வீரா சாமிவாணன்
மெய்க்கந்தர் புராணமுதல் உணர்ந்தறிவால் செங்குந்தர் மேன்மை ஓங்கத்
தக்கசேனைத் தலைவர் மரபுவினக் கச்சூறா வளிதந்தானால்
கைக்கனி ஆமலகமெனக் கவிஞரெலாம் கண்டுமனம் களிக்கத் தானே.

என்று காணப்படுகின்றன. 'சேனைத் தலைவர் மரபு விளக்கம்' என்ற நூல் காணக்கிடைக்கவில்லை. அந்த நூலில் கூறப்பட்ட குற்றங்களை நீக்கி உண்மையை நிலை நிறுத்த எழுதப்பட்டதே இச் சூறாவளி என்பது விளங்குகின்றது.

இந்நூலாசிரியர் தாமே எழுதியுள்ள உரைச்செய்யுள், இந் நூலில் கூறப்பட்ட செய்திகளைச் சுருங்க விளக்கியிருத்தலானும், இதே செய்திகள் இப் பிரபந்தத்திரட்டில் பல இடங்களில் வருவதனாலும், இந்நூலுக்குத் தனியே உரை எழுதாது பாடலில் உள்ள அருஞ் சொற்களுக்கு மட்டும் கண்ணிகளின் எண் கொடுத்துப் பொருள் எழுதப்பட்டுள்ளது. அன்பர்கள் அதனைக் கொண்டு கருத்தினை விளங்கிக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

கலி வெண்பாவினால் அமைந்த இப்பாடல் இயன்ற அளவில் சந்தி பிரித்துத் தரப்பட்டுள்ளது.

காப்பு

நேரிசை வெண்பா

464 தளிர்த்து வரும்சேனைத் தலைவர் மரபு
விளக்கச்சூ றாவளிவி ளம்பத் — துளக்கமறு
செம்பவள வாயுமையாள் சிந்தைமகிழ்ந் தேயளித்த
அம்பவளக் குஞ்சரமே காப்பு.

பொ. ரை:

அசைதல் இல்லாதவரும், சிவந்த பவளம் போன்ற வாயினை உடையவரும் ஆகிய உமையம்மையார் மனம் மகிழ்ந்து ஈன்றெடுத்த, அழகிய பவளம் போன்ற யானையாகிய விநாயகப் பெருமானின் திருவடிகளே, தழைத்து வருகின்ற 'சேனைத் தலைவர் மரபு விளக்கச் சூறாவளி' என்னும் இந் நூலை உரைப்பதற்கு எனக்குப் பாதுகாவலாக இருக்கும்.

நூல்

கலி வெண்பா

465

1. வேதம் ஒரு நான்கும் வியந்தேத்தும் வெள்ளிமலை
மாதுமையாள் பங்கன் மகிழ்ந்தளித்த — போதமிகு

2. கந்தவேட் கெம்பியராக் கன்னியுமை காற்சிலம்பின்
சந்தமணி மாதர் தரத்தரையில் — விந்தையொடு

3. வந்தநவ வீரர் மரபார்செங் குந்தரென்றே
எந்த உலகும் இனிதுணரச் — சந்ததமும்

4. காந்தம் முதலாக் கருதுபுரா ணங்களெலாம்
ஓர்ந்துரைக்கஈண்டவர்தம் ஒண்சரிதைப் — பாந்தமெலாம்

5. காதல் கொளும் குள்ளாண்டிக் கச்சிச் சபாபதியென்[று]
ஓதும்இலை வாணிபர்தாம் உட்கருதிப் — போதுகலி

---

1. வியந்து ஏத்தும் — அதிசயித்துப் போற்றும்; வெள்ளிமலை —கைலைமலை; உமையாள் பங்கன் — சிவபெருமான்; போதம் — அறிவு.

2, கன்னி — இளமை மாறாதவள்; சந்தமணி — அழகிய நவரத்தினம்.

3. மரபார் — வழிவந்தவர்; சந்ததம் — எப்பொழுதும்.

4. காந்தம் — கந்தபுராணம்; ஓர்ந்து-ஆராய்ந்து; பாந்தம் — சாதிக்கட்டு.

5. காதல் கொளும் — அன்பு செய்யும்; (குள்ளாண்டி என்பது இகழ் மொழி போல உள்ளது.) உட்கருதி — மனத்தில் நினைத்து.



6. நாலா யிரத்துத்தொ ளாயிரத்து நாற்பத்து
நாலாம் வருடம் நடந்ததற்பின் — மேலாண்டில்

7. திண்மை பெறும்தெலுங்கு தேசத்தில் உள்ளவரால்
கண்மை பெறும் கூறாக்குக் காரரென்றும் — வண்மை

8. புலப்பட்ட தென்பால் புகழ்தமிழ்நாட் டாரால்
இலப்பட்டிலைவணிகர் என்றும்— சொலப்பட்ட

9. தம்மரபுக் கென்ற தமிழ்க்கலிவெண் பாவதனால்
அம்ம உரைத்தார் அகமகிழ்ந்தே — இம்மகியில்

10. செங்குந்தர் உண்டென்னும் சிந்தைஉடை யார் என்னில்
தங்கும் படிஅந்நூல் தாமியற்றார் — அங்கதற்கும்

11. காட்சி அளவின்றே கருதல் அளவின்றே
ஆட்சி பெறும்நூல் அளவின்றே — சாட்சியொடு.

12. திட்டாந் தங்காட்டித் தெரிவிக்கின்ற எந்நூலும்
பட்டாங் கெனலாமிப் பாரிலொரு —திட்டாந்தம்

13. இல்லாம லேயவ் விலைவணிக ரிவ்வுலகின்
எல்லாருங் காண இயல்பின்றிச் —செல்லாத

14. வெம்மையினாற் பொய்ந்நூல் விரித்ததுதான் வேற்றொருவர்
செம்மைபெறுங்காணியெலாஞ்சென்றெடுத்துத் — தம்மதென்று

---

7. கண்மை — கண்ணோட்டம், கருணை; கூறாக்கு என்பது தெலுங்கு மொழியில் இலை, கீரை எனப் பொருள்தரும் சொல்.

8. இலை வணிகர் — வெற்றிலைவியாபாரி போலும்.

9. அம்ம — இடைச்சொல்; மகி — உலகம்.

11. காட்சி அளவு, கருதல் அளவு, நூல் அளவு என்பன ஒரு செயலை அல்லது வழக்கத்தை உறுதிப்படுத்தும் பிரமாணங்கள் (ஆதாரங்கள்) ஆகும்.

12. திட்டாந்தம் — உதாரணம் பட்டாங்கு — சாத்திரநூல்.

13. இயல்பின்றி — முறையில்லாமல்; செல்லாத — விலை போகாத.

14. வெம்மை — சூடு, இங்கே வெறுப்பு எனக் கொள்ளலாம்.

15 பொய்ப்பத் திரமெழுதிப் பூவுலகிற் சிற்சிலர்கள்
கைப்பத்தி ரஞ்செய் கணக்கென்கோ —மெய்க்குறியுட்

16 கொண்டொருவன் வேறோர் குலமனையை ஆற்றினிடைக்
கண்டுவழக் கிட்ட கதையென்கோ — பண்டுலகில்

17 சிங்க முறுகுகையைச் சேர்ந்து நரித்திரள்கள்
தங்குகையென் றோதும் தரமென்கோ—பொங்குமிந்திர

18 சாலவித்தை யென்கோ சழக்குடையோர்க் கேற்றகலி
காலவித்தை யென்கோகண் கட்டென்கோ—ஏலவினி

19 ஏசுறுபன் மாயையினு ளெம்மாயை யீதென்கேன்
வீசு மிரவிகுல வேந்தனெனும்— வாசமுகில்

20 கொல்லி மலையான் குலவியபொன் னித்துறையான்
சொல்லரிய சீர்த்திபெறுஞ் சோணாடன்—நல்லமலர்ப்

21 பொன்னா ருறந்தையான் போற்றுங்கோ ரப்பரியான்
தன்னே ரிலாதமதத் தந்தியான் —மின்னாரும்

22 ஆத்திமலர் மாலையான அம்புவியிற் பாவலர்கள்
ஏத்தியபா மாலை யினிதணிந்தோன்—மாத்தரங்க

---

15. என்னே — என்று சொல்லுவேனோ.

16. ஆற்றினிடை — ஆற்று வெள்ளத்தில்

17. தரம் — தன்மை

18. இந்திரசாலம் — மாயம்; வித்தை - தந்திரம்; சழக்கு-பொய்

19. இரவிகுல வேந்தன் - சூரியகுல அரசனாகிய சோழன்; வாசமுகில் - மேகம் தங்கும்.

20. சீர்த்தி - மிகுந்தபுகழ்; (கீர்த்தி - புகழ்)

21. கோரப்பரி - கோரம் என்னும் குதிரை. (இது சோழமன்ன னுடைய குதிரையின் பெயர். முன்பு தசாங்கத்திலும் கூறப் பட்டது.) தந்தி -யானை; மின் ஆரும் - மின்னலைப் போல ஒளிவீசும்.

22. தரங்கம் - அலை.



23 வாரியொலி போல்முழங்கும் வண்மைதிகழ் மும்முரசான்
பாரினுயர்த் தும்புலிப்ப தாகையான் —சீருயர்ந்த

24 ஆணையினா னெவ்வுலகு மாண்மைசெ லுத்திவரும்
கோணலிலாச் செல்வமிகு கோவேந்தன்—வேள்நிகரான்

25 மாதர் நிதமு மடலெழுது மார்பினான்
நீதிவ மாத மநுநெறியான்—ஓதி

27 மகுடமுடி மண்டலிகர் வந்து வணங்கச்
செகமுழுது மோச்சியசெங் கோலான்— பகலிரவும்

வெண்ணிலவு துப்பைஅணி வேணியரன் தாள்பணிந்து
கண்ணிமையைப் போலுலகங் காத்தளித்த
—புண்ணியவான்

28 சோழமக ராச சுமுகன் சமூகத்தில்
வாழு மியற்றமிழ்சொல் வண்புலவர்— சூழுமெழில்

29 செந்தமிழை யெட்டுத் திசையி னடாத்திவரும்
உந்துகட லுண்ட முனிக் கொப்புடையார் —சந்ததமும்

30 அன்னங்கள் செங்கமலத் தாருமகன் பணைகள்
மன்னும் பெரிய மணவூர் வாழ்—தந்நிகரில்

31 கூத்தரெனும் பாவாணர் கூறுலகி லோங்கியநாள்
மாத்திரள்செங் குந்தர் மனமகிழ்ந்து —சீர்த்தியுள

---

23. வாரி ஒலி - கடல்ஒலி; மும்முரசு - வீரமுரசு, வெற்றிமுரசு, கொடை முரசு என்பன; பதாகை - வெற்றிக் கொடி.

24. வேள்நிகரான் - மன்மதனுக்கு ஒப்பானவன்.

25. மடல் - அகப்பொருள் பிரபந்தம் (ஒரு பெண் தான் ஆசை கொண்ட அவரையே மணப்பேன் எனக் கொண்ட உள்ள உறுதியைப் பிறருக்குக் காட்டுவதாக அமைந்த நூல்.)

26. மண்டலிகர் — அரசர்.

28. சுமுகன் — இன்முகம் உடையவன்

29. கடலுண்டமுனி — அகத்தியர்

30. ஆரும் — நிறைந்துள்ள; அகன்பணை — அகன்ற வயல்கள் மணவூர்-ஒட்டக்கூத்தருடைய ஊர்.

31. மாத்திரள் — பெருங் கூட்டம்.

32 நங்குலத்துக் கோர்நூல் விற்றுகென நாவலரும்
நங்குலநா மேத்தனல மன்றென்ன—அங்கதனுக்(கு)

33 உள்ளமுவ வாதுகொல்வா னோடிவர அப்புலவர்
பொள்ளெனவோ ரந்தணனிற் புக்கியிட—உள்ளிருந்த

34 சோமாசி யாண்டான் துணிவுற் றொருமகவை
நாமாசை நண்ணாது நல்கியின்சொற் —கோமானைக்

35 காக்கில் புவிமேற் கனபுகழைக் கொள்வமெனத்
தூக்கிப் புவனையிலத் தூய்மறையோன்—மாக்கலைகள்

36 ஓதியசே யைப்பேழைக் குள்வைத்தல் வாணரெனச்
சாதனையால் செப்பித் தரக்கொண்டு—போதவே

37 ஆர்த்தோடி ஆங்கவர்க ளப்பேழை யைத்திறந்து
பார்த்தே வியந்து பயந்தடியைப்- பேர்த்தங்கு

38 மீட்டும் புவனையிலவ் வேதியன்பாற் சென்றுபழி
நாட்டுதுமந் நாவலனை நன்கெமக்குக் —காட்டுமந்தக்

39 கூத்தன் றனக்குநாங் கூற்றுவர்கா ணென்றுரைக்கச்
சாத்திரங்கள் தேர்ந்த தனிமறையோன்—கூத்தரது

40 சிந்தையெண்ணம் ஓர்நதுதிருச் செங்குந் தரைநோக்கி
இந்தப் புலவருள மின்புறவே—அந்தமிகு

41 தாய்க்குத் தனியர் தலைச்சிறுவர் கல்விசெல்வம்
வாய்க்கு நுமதுகுல மாமைந்தர்—தூய்க்குணத்தோர்

---

33. உவவாது —மகிழாமல்; பொள்ளென — விரைவாக. புக்கியிட — உள்ளே செல்ல.

34. நண்ணாது -- அடையாமல்.

35. கனபுகழ் — மிக்கபுகழ்.

37. பேழை — அகன்ற வாயை உடையது, பெட்டி.

38. மீட்டும் — மறுபடியும்; புவனை — திருபுவனை (இவ்வூர் திருபுவனம் எனவும், புவனகிரி எனவும் கூறப்படுகின்றது.) வேதியன் — சோமாசி யாண்டார்.

39. கூத்தன்-ஒட்டக்கூத்தர்; கூற்றுவன் — இயமன்.

40. ஓர்ந்து — ஆராய்ந்து: அந்தம் மிகு — அழகு மிகுந்த.

41. தனியர் — ஒரேபிள்ளை.



42 ஆயிரத்தென் மர்சிரத் தாலா தனமிட்டுத்
தூயதமிழ் கேட்கத் துணிவீரேல் பாயிரநூல்

43 கேட்பீ ரெனமறையோன் கீர்த்திபெறுஞ் செங்குந்தர்
நாட்பாரா தக்கணமே நல்கியிட — வேட்கையொடு

44 வேதம் படித்தல் படிப்பித்தல் வேள்விசெயல்
ஏதமறச் செய்வித்த லீதலோ(டு)—ஈதலைத்தாம்

45 ஏற்ற லெனுந்தொழிலை யெக்கா லமுமினிதாய்
ஆற்றுபுக ழாற்சிறந்த அந்தணருஞ் —சாற்றரிய

46 ஓதல் மகஞ்செய்த லோம்புதலீ தற்படைகள்
போதப் பயிறலிகல் போர்செய்தல் — ஓதுறுமிவ்

47 ஆறுதொழிற் காவலரு மவ்வா றியல்பெருகக்
கூறும் வசிய குலத்தவரும் — வீறுகின்ற

48 வேளாண்குலத்தில்வரு மேன்மையருஞ் சூழ்ந்திலங்க
வாளாண்மை மிக்க வலியுடையோர் — நீளாண்மை

49 சொல்லுங் குலோத்துங்கச் சோழன் திருமுன்னர்
வல்லமையி னாலே வழங்கியவன் — நல்லசிரச்

50 சிங்கா தனத்திருந்து சிந்தைமகிழ்ந் தெல்வெவரும்
அங்கா தரவின் அகங்குளிரத் — துங்கமிகு

51 விண்ணி னமரர் விடாது மலர்மாரி
மண்ணிற் சொரிந்துமிக வாழ்த்தெடுப்ப — எண்ணரிய

52 ஈட்டி யெழுபதென இன்புறுதம் சாதிநூல்
நாட்டிவைத்துப் பின்னரவர் நல்குசிரம் — வாட்டமற

53 ஒட்டும் படிக்கோ ரெழுப்பெழுப தென்றொருநூல்
கட்டுரைத்தே நற்கலைகள் கற்றோரால் — இட்டமொடு

---

42. ஆதனம் - ஆசனம், இருக்கை.

43. தக்கணம் - உடனே, விரைவாக.

44. ஏதம் - குற்றம்; அந்தணருடைய ஆறு செயல் இதில் கூறப் பட்டன.

45. சாற்றரிய - சொல்லுவதற்கு அருமையான.

46. படைகள் மோதப் பயிறல் - படைப்பயிற்சி செய்தல்.

47. வசிய குலம் — வணிகர்

50. துங்கம் மிகு - உயர்வுடைய.

54 கூறுதமி ழொட்டக் கூத்தரெனப் பேர்பெற்றார்
வீறுமவர் கீர்த்தி வியனுலகில் — தேறுகலை

55 கற்றவரெல் லாமறிவார் கைக்கனிபோற் கல்லாத
மற்றவருங் கேள்வியுற்று வாழ்கின்றார் — எற்றிவர்தாம்

56 சற்றுமறிந் தாரிலையே தண்டமிழ்நூற் சிற்சிலதாம்
கற்றும்இது தேறாக் கருத்தென்னே -- சொற்றவிவை

57 அன்றியுஞ்செங் குந்தர்புரா ணங்கோவை யூசலொடு
துன்றியபிள் ளைத்தமிழுஞ் சொன்மாலை - நன்றிகொளும்

58 வாக்குலா வும்பரணி வாய்மைத் திருப்புகழ்சீர்
நோக்குலா ஆதியஇந் நூலெல்லாம் — ஆக்கமிகு

59 செங்குந்த ரேகயிலைச் சீர்மரபார் செம்மைபெறு
செங்குந்த ரேமெய்ச் சிவகுலத்தார் — செங்குந்தர்

60 தாமே நவவீரர் சந்ததியார் செங்குந்தர்
தாமேநற் சேனைத் தலைவராம் — மாமேரு

61 வல்லானை யொத்ததிறல் வல்லானை வென்றுயர்ந்தார்
கல்லானை தின்னக் கரும்பளித்தே — எல்லாமும்

62 வல்லசித்த ராகி மதுரா புரியிலன்று
நல்லவித்தை காட்டி நலஞ்சிறக்கத் — தில்லையிடை

63 நீண்ட கனக நிருத்தமணி மண்டபத்தே
தாண்டவஞ்செய் மாதேவர் தம்மிடத்தும் — ஈண்டுயிர்கள்

64 சேயாகி வைகத் திருவருளீந் தாள்பெரிய
தாயாகுஞ் சங்கரியார் தம்மிடத்தும் — ஓயாமல்

65 வானேத்து மாலயனை வாழத்தத் தம்வைப்பில்
தானேற்றும் சண்முகனார் தம்மிடத்தும் — மான

வரம்பெற்றார் நல்ல வளம்பெற்றார் என்றும்
திரம்பெற்றார் வண்மைச் சிறப்போ — டுரம்பெற்றார்

---

54. வீறும் - பெருமை பெறும்
56. தேறா — ஆராயாத
58. ஆதிய — முதலான; ஆக்கம் — செல்வம்
61,62. இதில் திருவிளையாடல் கதைகள் கூறப்பட்டுள்ளன.
63. கனகம் - பொன்; நிருத்தமணி மண்டபம் - நடனசபை.



67 மண்டலத்தை யாள்சோழ மன்னவர் மன்வனால்
தண்டிகையை முன்னே தரப்பெற்றார் — கொண்டல்செறி

68 தில்லைமா காளிதிருத் தேரோடச் செய்திட்ட
தொல்லைமர பாரென்னுய சொற்பெற்றார் — இல்லை
யென்று

69 சொல்லாம லேற்பவர்க்குத் தூய்மையொடு கேட்டவைகள்
எல்லாம் வழங்கு மியல்புடையார் — எல்லாரும்

70 தீட்டுபுக ழேலேல சிங்கன் தன் செல்வநிலை
நாட்ட வுளத்தி னயந்தருளி — நீட்டுகின்ற

71 நற்றலைக ளீந்ததற்கு நாடி யவனல்கும்
பொற்றலைகள் வாங்காப் புகழுடையார் -- கற்றவருக்

72 கேற்புடையா ரென்றே இசைக்கின் றனவந்த
நூற்புடையா தேனுமொன்று நோக்கிலரே — ஏற்பவுரை

73 பொன்னேர் மதுரைப் புராணத்தை யேனுமிவர்
என்னே யறியா திருந்தனரே — மின்னேய்ந்த

74 கூர்வேற்கைப் பெம்மான் செங் குந்தர் தொழில்விளங்க
ஏர்வேட்கை யோடு மெழுந்தருளிப் — பேர்வேட்கை

75 பாவோடு கின்றதெனப் பாவனையிற் செய்திடுமப்
பாவோடு முற்சவமும் பார்த்திலரே — தூவாய்மை

---

67. தண்டிகை - பல்லக்கு; கொண்டல் - மேகம்.
70. ஏலேலசிங்கன் - முற்காலத்தில் வாழ்ந்த கப்பல்வாணிகம் செய்தவர் (திருவள்ளுவரின் மாணவர் என்றும் கூறுவர்).
72. நூல் புடை யாதேனும் ஒன்றும் நோக்கிலர் - நூலின் கருத்துக்களை ஒன்றும் காணாதார்.
73. மின் ஏய்ந்த - ஒளிபொருந்திய.
74. ஏர் - அழகு; வேட்கை-விருப்பம்
75. முருகப் பெருமானை வீதிக்கு எழுந்தருளச் செய்து முன் நிறுத்தி, பாவோடும் உற்சவம் என்று முன்னர் செங்குந்த மரபினரால் நடத்தப்பட்டு வந்து தற்காலம் நின்று விட்டது எனத்தெரிகிறது. பாவனை - எண்ணம், மாதிரி.

76 நற்குணச்செங் குந்தர்செய்யு நல்ல நவவீரர்
உற்சவத்தைச் சற்று முணர்ந்திலரே — சிற்பரன்சேர்

77 கச்சிதிரு வானைக் காஅண்ணை காளத்தி
இச்சைதருந் தில்லை இடைமருதூர் — உச்சிதம்சேர்

78 மாகாளம் சாய்க்காடு மன்னும் விருத்தகிரி
சீகாழி வெண்காடு செங்காடு — வாகார்

79 மதுரைதிரு மாற்பேறு மாசகற் றையாறு
முதிர்புக ழாரூர் முதலாம் — துதிபெறுசீர்

80 மன்னும் சிவதலத்தும் வாய்ந்தபரங் குன்றமொடு
பன்னு திருவே ரகம்பழனி — மின்னுமுகிற்

81 சென்னிமலை தோகைமலை சீரார் விராலிமலை
மன்னுதிருச் செங்கோடு வண்போரூர் — துன்னும்

82 தணிகா சலம்சீர் தருஞ்செந்தி லாதி
அணியார் முருக னமரும் — மணியார்

83 தலத்துஞ்செங் குந்தர் தமதுமர போங்கி
நிலத்து நெடுநா ணிலைக்க — நலத்துடனே

84 நித்தியநை மித்தியங்க ணேய மனங்களிப்பச்
சத்திய பத்தியொடு தாம்செய்து — நித்தியமும்

85 நாட்டுநவ வீரர் நற்குலத்தா ரென்பதனைக்
காட்டுகின்றார் மற்றிஃதுங் கண்டிலரே — நாட்டிலிவர்

86 வேதியர்க டம்மரபின் மேன்மைதனைக் கொள்ளிலவர்
தீதின்வலக் கையாசி யைப்புரிந்தே — ஓதரிய

87 பொல்லாத சாபம் பொருத்துவரென் றோவரசர்
மல்லார் மரபின் வளங்கொண்டால் — சொல்லாத

88 பாடுபட வைப்பரிந்தப் பாரி லிலைவணிகப்
பூடொன்று மில்லாமல் போமென்றோ — தேடுபுகழ்க்

---

76. நவவீரர் உற்சவம் - வீரவாகுதேவர் காப்பு கட்டும் கந்த சட்டி விழா.

78. வாகார் - அழகுநிறைந்த

79. மாசகற்று ஐயாறு - குற்றத்தை நீக்கும் திருவையாறு.

81. வண்போரூர் - வளப்பமுடைய திருப்போரூர்.

88. பூடு - பூண்டு. (பூடு ஒன்றும் இல்லாமல் போம் என்பது முழுவதும் அழிந்துவிடும் என்றவாறு.)



89 காராளர் தம்மரபின் காதையெம தென்னிலவர்
ஏருரப் பூட்டி இழுப்பரென்றோ — பேரார்ந்த

90 மெய்வழுத்தும் செட்டிமக்கள் மேன்மையெம தென்னிலவர்
வைது துலையால் வதைப்பரென்றோ — மெய்தீர்

91 விருப்பாகக் கண்ணாளர் மேன்மை எமதென்றால்
இருப்பாணி நாவிடுவா ரென்றோ — தரைக்குள்வரு

92 தக்க திலவணிகர் தஞ்சரிதை கொள்ளிலவர்
செக்கினுளே வைத்துச் சிதைப்பரன்றி — மைக்கடல்சூழ்

93 தொல்லுலகிற் பாளையத்தார் தோத்திரஞ்செய் சீர்த்தி பெறு
நல்லதிறற் சீல்நாய்க்க னாளையிலே — எல்லவர்க்கும்

94 அல்லல் விளைவித் ததுபோல வேஇன்றும்
கொல்லவகை தேடக் குறிப்பரென்றோ — வல்லமைசேர்

95 வன்னியர்தம் தொல்மரபின் வண்மையெம தென்னிலவர்
சென்னி பிளவுபடச் செய்வரென்றோ — உன்னியஅவ்

96 சொன்மரபின் சீரொன்றுஞ் சூழ்ந்து கரவாமல்
தன்மைபெறும் செங்குந்தர் தம்மரபின் - தொன்மை கொள்சீர்

97 தாம்கரந்தா ரம்மவிவர் தங்கரவை நோக்குங்கால்
ஈங்குநகைப் பெய்தாதார் யாருளரே — பாங்கின்முழுப்

---

89. காராளர் - உழவர், வேளாளர்; ஏர் ஊரப்பூட்டி- ஏரினை இழுப்பதற்கு மாடுகளைப் போலக் கட்டி; பேர் ஆர்ந்த - புகழ் நிறைந்த.

90. வைது - தூஷித்து; துலை - தராசுக்கோல்; வதைப்பர் - துன்புறுத்துவர்.

91 இந்தக் கண்ணியில் கூறப்பட்ட செய்தி முழுமையாக விளங்கவில்லை- கண்ணாளர் - கம்மாளர், கம்மியர்;

92. தில வணிகர் : எள் வாணிகர், செக்கார்.

95. சென்னி பிளவு படச் செய்வர் - தலையை உடைப்பர்.

96. கரத்தல் - மறைத்தல், அழித்து ஒடுக்குதல்

97. பாங்கு - அருகில்

78 பூசினிக்கா யைச்சோற்றில் போதமறைத் தாரென்றே
காசினியிற் சொல்வார் கதையொன்று —மாசறவே

99 அக்கதைபோல் முக்கதையுண்டாமேல் பெருங்கரவாம்
இக்கதைக்குச் சற்றே இணையாகும் —மிக்கபுகழ்க்

100 கைக்கொள நிலாவிடத்தில் காதைசொலல் வேண்டுமெனும்
தக்க மொழிசெவியில் சார்ந்திலரே —ஒக்கஇவர்

101 சென்று விளங்கா நூல் செய்ததனுக் கோர்பரிசாய்
ஒன்றுறவே செங்குந்த ரொண்மரபின்—நன்றி

102 இலைவணிக ருக்கென் றெடுத்தோதக் கண்ட
நிலையுலகோர் நிட்டூர மாகச் —சொலவருமுன்

103 நண்டுகொழுத் தால்வளைக்கு(ள்)நண்ணாதெனுமதுபோல்
பண்டு புதுவைப் பதியதனுள்—அண்டும்

104 குமரப்பன் கோலக் கருணசெட்டி யென்னும்
அமரு மிலைவணிக ரானோர்— தமதுளத்தில்

105 பொங்கி மகிழ்ந்துசென்னைப் போற்றுமகா நாட்டாருந்
தங்கியதே சாயிகளும் தாரணியில்—எங்களைப்போல்

106 மேன்மை பெறஅறியார் வீண்தலைமை மேவியதெப்
பான்மையெனப் பின்விளைதற் பாராமல்—நோன்மை

107 அராமுடிமேல் தங்கு மிந்த வம்புவிக் காதாரத்
திராவிட தீபிகையில் செப்பத்—தராதரந்தேர்

109 சென்னைப் பதிநாட்டார் சீறி யிவர்தம்மை
மன்னுஞ் சபையில் வருவித்துத்— துன்னுபொய்ந்நூல்

109 செய்தீர் நுமரதற்குச் செம்மாந்து கூத்தாடிப்
பொய்தீரெம் சீர்மையெல்லாம் போற்றாது — வெய்தாகப்

---

98. காசினி - உலகம்.

103. புதுவைப்பதி - புதுச்சேரி; அண்டும் -நெருங்கும் (வாழும்)

105. தேசாயிகள் - தேசத்தில் உள்ளோர். தாரணி - பூமி, உலகு

107. அரா - பாம்பு, ஆதிசேடன்; தீபிகை : தீபம், விளக்கு
தராதரம் தேர் - தகுதியை ஆராய்கின்ற;

108. சீறி - கோபித்து; துன்னுதல் - நெருங்குதல்.

109. சீர்மை - சிறப்பு. வெய்தாக - கொடியதாக.



110 பொங்கி வழிகின்றார் பொச்சாந்து மற்றவர்கள்
இங்கிவகை சொல்லற் கிடம்உம்மால்—தங்கியதால்

111 என்னேநீர் கற்றதனை எங்கொளித்தீ ரிவ்வாறு
கொன்னே கொடிமுடிந்து கொள்வதுதான் — சொன்னேம்

112 இயலன் றெனவுணர்ச்சி யெய்த இயம்புஞ்
செயல்கண்டு நெஞ்சந் தியங்கிப் - பயமடைந்து

113 மெய்யொப்பஞ் செய்வோம் வெகுளிவிடுக என்றோர்
கையொப்ப மிட்டுக் கனம்பெற்றார் - பொய்யொப்பும்

114 பொத்தடைந்த அப்பரிசு போலே வரும்பரிசிங்
கெத்தனையோ இன்னுமவ ரெய்துவரென்- றுய்த்துரைக்க

115 ஐயுறவு மில்லையிவ ராலே இவர்மரபு
மெய்யுறவு மில்லைநலம் வேறில்லை - கையறைந்து

116 நோவுற்றார் போலப்பொய்ந் நூல்செய் துறுங்கீர்த்தி
மேவுற்றா ரீதே வியப்பு.

---

110. பொச்சாந்து - மறந்து; மால்தங்கியது - மயக்கம்
கொண்டது,

111. கொன்னே - வீணாக; கொடிமுடிந்து - சிக்கலாக்கி.

112. இயலன்று - நன்மையன்று; உணர்ச்சியெய்த - உணர்வு
வருமாறு; தியங்கி - சஞ்சலப் பட்டு.

113. கனம் - பெருமை.

116. கையறைந்து நோவுற்றார் - கையைத் தரையிலடித்துத்
துன்பம் அடைந்தவர்கள்.

வாழ்த்து

பஃறொடை வெண்பா

466 சேனைத் தலைவரெனும் செங்குந்தர், வேலரொடு
கானக் குறவள்ளி காதலனும் — வானினுயர்
குந்தப் படையும் கூறுநவ வீரர்களும்
இந்தப் புவியினுளார் இன்படைய - சந்ததமும்
வாழி மிகப் பெரிதும் வண்மைகொடு வாழியவே
ஏழுலகம் போற்ற இனிது.

பொ. ரை:

சேனைத் தலைவர் என்று போற்றப்படுகின்ற, வேலைக் கையில் கொண்ட செங்குந்தர், காட்டில் வாழும் குறப் பெண்ணாகிய வள்ளி கணவன், புகழையுடைய செங்குந்தப் படை, உயர்த்திக் கூறப்படும் நவவீரர் ஆகியோருடன், இந்த உலகில் உள்ளவர்கள் மகிழ்ச்சி அடையும்படி, பெரிய கொடைத் தன்மையுடன், ஏழுலகங்களும் போற்றுமாறு என்றும் இனிதே வாழ்வார்களாக.

சேனைத் தலைவர்
மரபுவிளக்கச் சூறாவளி குறிப்புரை முற்றிற்று.

குறிப்பு :

இந் நூலுக்கு அளிக்கப்பட்டுள்ள சாற்றுக்கவிகள் ஐந்தனுள் இரண்டு கவிகள் நூலின் தொடக்கத்தில் உள்ளன. ஐந்துகவி களும் இப்பிரபந்தத்திரட்டில் முன்பகுதியில் உள்ள பதிப் பாளருரை பக். 92, 93 இல் காணலாம்.

## சேனைத்தலைவர்
## மரபு விளக்கச் சூறாவளி
## உரைச்செய்யுள்

ஸ்ரீ கயிலாயத்தின்கண் அமரர்முதல் போகபூமியோர் வரையுமான பதினெண்கணத் தலைவர்களும், நந்தி பிருங்கி பிங்கிருடி முதலாகிய சிவகணத் தலைவர்களும் பணிந்து புகழப் பார்வதி சமேதராக அமர்ந்தருளிய பரமேஸ்வரர், தமது இளைய பிள்ளையாராகிய சண்முகக் கடவுளுக்குச் சகோதரராகப் பார்வதியாரது பாதச் சிலம்பின்கணின் றுதிர்ந்த நவமணிகளிற் றோன்றிய நவசத்திகளிடத்தில் நந்திகேஸ்வரர் முதலாகிய சிவகணத் தலைவர்களையே அவத ரிப்பிக்க, அவதாரஞ்செய்த வீரவாகுதேவர் முதலாகிய நவ வீரர்களது சந்ததியார், கைக்கோளரென்று சொல்லப்பட்ட செங்குந்தர்களென்று தொன்றுதொட்டு உலகத்தில் விளங்கி வருகின்றதை யாவரும் உள்ளங்கை நெல்லிக் கனிபோல உணர்ந்திருக்கின்றனர்.



கலியுகாப்த வருடம் நாலாயிரத்துத் தொளாயிரத்து நாற்பத்து நான்குக்குமேல் நிகழ்ந்த சோபகிருது வருடம் ஆனி மாதத்திலே, மூன்றுலகையும் முன்றானையில் மறைத் தற் கெண்ணுதல்போல ஓரெண்ணங்கொண்டு இங்ஙனம் இலைவணிகருள் ஒருவராகிக் கல்வியிற் பயின்ற காஞ்சிபுரம் சபாபதி முதலியாரென்பவர், முற்கூறிய நவவீரர்கள் சந்த தியார் தம் மரபினரென்று கலிவெண்பாவினாலும் வாக்கி யத்தினாலும் கட்டுநூலொன்று தாமே செய்து கொண் டனர். இவர் கதிரவனைக் கண்ணாடியால் மறைத்து, உல கிற்கு இருள்வர நினைத்த ஒருவரை யொப்பர்; ஏனெனின், தாமொருவாறு கட்டிய கட்டு நூலால் முன் உண்மை விளங்க உணராத சிலரும் உணர்ந்து கொண்டாராதலின்.

பற்பல தேசத்து அரசர்களும் வணங்கித் திறை தர மநுநீதி வழாது தெய்வீகம் விளங்கச் செங்கோலோச்சிய குலோத்துங்கச் சோழ மகாராஜனுடைய சிங்காதனத்திருச் சமுகத்தைச் சிறப்பிக்கும் வித்துவ சிரோமணியாகிய 'கூத் தர்' என்னும் புலவர்பெருமான் விளங்கிய காலத்து, ஒரு தினம் அக்காலத்திருந்த செங்குந்தத் தலைவர்கள் தங்கள் குலத்துக்கு ஓர் தீபம்போல விளங்கிய கூத்தரென்னும் புலவர்பெருமானை நோக்கி, 'எங்கள் மரபிற்கு மாணிக்க மணிபோற் கிடைத்த தமிழ்ப் புலவர் சிங்கமே! தொன்று தொட்டு விளங்கிவரும் நமது செங்குந்தர் மரபின் சீர்த் தியை ஓர் தமிழ் நூலாகச் செய்து தரல் வேண்டும்' என்று கேட்க, அப் புலவர் பெருமான் 'நம்மரபின் சீர்மையை நாமே பாடுதல் தகாது' என்ன, அதற்குச் செங்குந்தத் தலைவர்கள் சம்மதியாமல் கோபங் கொண்டு, அப் புலவர்பெருமானைக் கொல்லுதற்குத் துணிவு கொண்டு ஓடிவர, அதுகண்டு அவர் 'புவனை வீரன்' பட்டினத் தில் ஓடிப்போய்ச் சோமாசியாண்டா ரென்னும் அந்தண ரிடத்தில் அடைக்கலம் புக, அந்தணர் மனமிரங்கிக் கல்வியிற் சிறந்த தனது ஏகபுத்திரனை ஓர் பேழைக்குள் வைத்து அப் புலவரென்றே சாதித்துப் பின்றொடர்ந்து,

வந்த செங்குந்தத் தலைவர்கள் வசத்திற்கொடுக்க, அவர்கள் அப்பட்டினத்திற்கு வெளியிற் கொண்டுபோய்த் திறந்து பிராமணப் பிள்ளை உள்ளிருக்கக் கண்டு மிகவும் அதிசயப்பட்டு மீட்டுஞ் சோமாசியாண்டாரிடத்தில் வந்து 'கூத்தரென்னும் புலவரைக் கொல்லாது விடோம்' என்ன, அவ்வந்தணர் மிகவும் வருத்த முற்றுக் கூத்தரென்னும் புலவர் பெருமானனுமதியால் செங்குந்தத் தலைவரை நோக்கி, 'உங்கள் மரபில் அறிவு அன்பு அழகு முதலிய விசேடத் தன்மை வாய்ந்து, தாய்க்குத் தனியராயும் தலைமை புத்திரராயுமிருக்கிற ஆயிரத் தெண்மர்களுடைய தலைகளை அறுத்து அவைகளால் ஓர் சிரச்சிங்காதனமிடுவீர் களாயின், அதன் மேலிருந்து இப்புலவர் பெருமான் உங்கள் எண்ணப்படி செய்வார்' என்றுரைக்க, அவ்வாறே அகமும் முகமும் மலர்ந்து ஆயிரத்தெண்மர்கள் சிரங்களை அறுத்துச் சிரச்சிங்காதனமிட, அதன் மேலிருந்த குலோத்துங்கச் சோழ மகாராஜனும் இராஜ சபையிலிருந்த அந்தணர் முதலிய நான்கு வருணத்தாருங் கண்ணும் மனமும் களிப்பக் கண்டிருக்கவும், வானோர் மலர்மாரி பெய்து மகிழ்ச்சியடையவும் ஈட்டியெழுபது என்னும் பிரபந்தத்தை உலகுள்ளளவும் ஓங்கச்செய்து, பின்பு அவ்வாயிரத் தெண்மர் தலைகளும் அவ்வவர் உடலிலேஒட்டிஉயிர்பெற்றெழ எழுப்பெழுபது என்னும் ஓர் பிரபந்தமுஞ் செய்து, அறிவுடையோரால் ஒட்டர்கூத்தர் என்னும் காரணப் பெயரைப் பெற்றுக் கொண்டிருந்தனர்.

அவரது பெருங்கீர்த்தி இக்காலத்தும் கற்றவராலும் மற்றவராலும் சொல்லப்படுகின்றதைச் சிறிதேனும் இவர் கருத்துட் கொண்டவரானால் எவ்வாறு இவ்வாறு செய்யத் துணிவர்?

ஸ்ரீ கயிலாய பரம்பரையா ரென்றும், உப சுப்பிரமணிய மரபின ரென்றும், நவவீரர் சந்ததியா ரென்றும், சேனைத் தலைவ ரென்றும், தில்லைமாகாளித் தேரோடச் செய்தவ ரென்றும், சோழமகாராஜனால் தண்டிகைபெற்றோரென்றும், வல்லானது வன்மையை யழித்து அவன் மனைவிக்கு மாங்கல்யப்-



பிச்சை இட்டவரென்றும், ஏலேல சிங்கனுக்கு மெய்த்தலை கொடுத்தவ ரென்றும், இன்னும் பலவித சிறப்புடையோ ரென்றும் சொல்லப்படுகிற செங்குந்தர் மரபின் பெருமை, மேற் கூறிய ஈட்டியெழுபது, எழுப்பெழுபது என்னும் பிரபந்தங்களிற் பிரமாணிக்கப்பட்டிருக்கிறது மன்றிக் கந்தபுராணம், திருவாரூர்லீலை, ஏழாயிரப் பிரபந்தம், செங்குந்தர் புராணம் மதுரைப் புராணம்,இரட்டைமணிமாலை, மும்மணிக்கோவை நான்மணிமாலை,அலங்கார பஞ்சகம்,ஒலியலந்தாதி, கலம்பகம் பிள்ளைத்தமிழ், கோவை, உலா, பரணி, ஊசல், வல்லான் காவியம், மாலை, திருப்புகழ் முதலிய நூல்களிலும் ஐயமறக் காட்டப்பட்டிருக்கின்றது.

இவைகளில் ஒன்றும் பார்த்துணர்ந்திரா ராயினும் செங்குந்தர் தங்கட்குச் சிவசண்முகக்கடவுள் சகோதர பாவனையாக எழுந்தருளிக் கிருபைசெய்கிற பாவோடும் உற்சவம், வீரவாகு தேவர் உற்சவம் வருடந்தோறும் நடத்துவதையும் சிதம்பரம், காஞ்சீபுரம், திருவாலங்காடு, திருவண்ணாமலை, திருக்காளத்தி, திருக்கழுக்குன்றம், திருக்கச்சூர், திருவானைக்கா, மதுரை, திருப்பரங்குன்றம், திருவாவினன்குடி, திருச்செந்தூர், திருத்தணிகை, வள்ளிமலை முதலாகிய சிவ ஸ்தலங்களினும் சுப்பிரமணியர் ஸ்தலங்களினும் தொன்று தொட்டு மரபுவிளங்க நித்திய நைமித்திய பூஜைகள் செய்விக்கின்றதையும் காட்சிப் பிரமாணத்தால் இவர் உண்மை விளங்கக் கண்டும் விபரீதநூல் செய்துகொண்டதற்குக் காரணம், இவர்க்கு அக் காலத்துள் நேரிட்ட மதிமயக்க மென்றே தோன்றுகின்றது.



குறிப்பு :

காஞ்சி ஸ்ரீ நாகலிங்க முனிவர் பதிப்பில் உள்ள உரைச்செய்யுள் என்னும் பகுதியில் 1 முதல் 85 கண்ணிகளுக்கே உரை காணப்படுகின்றது. எனவே இப்போது 86 முதல் 116 வரை புதிதாக உரை எழுதிச் சேர்த்து அச்சிடப்பட்டது.

**கண்ணிகள் 86-116**

இவ்வாறு நூல்செய்தோர் இவற்றையெல்லாம் கண்டு தெளியவில்லை. இவர்கள் அந்தணர் மரபுபற்றித் தவறாக எழுதினால், அந்தணர் கொடிய சாபமிடுவர் என்று எண்ணியும், அரசமரபு பற்றித் தவறாகக் கூறினால், அரசர்கள் மிகவும் துன்பம் கொடுத்து இலைவாணிகர் என்னும் மரபையே முற்றிலும் அழியச் செய்து விடுவார்கள் என்று எண்ணியும், புகழ்பெற்ற வேளாளர் மரபு பற்றித் தவறாகக் கூறினால், வேளாளர் தம்மை ஏரில் பூட்டி நிலத்தை உழச் செய்து விடுவார்கள் என்று எண்ணியும், செட்டி மக்கள் (வணிகர்) பற்றித் தவறாகக் கூறினால் அவர்கள் துலாக்கோல் (தராசு) கொண்டே துன்புறுத்துவர் என்று எண்ணியும், கம்மாளர் மரபுபற்றிக் குறைத்துக் கூறினால் அவர்கள் (காய்ச்சிய) இருப்பாணியை நாக்கில் வைத்துச் சுடுவர் என்று எண்ணியும், எள் வணிகர் (செக்கார்) பற்றித் தவறாகக் கூறினால் செக்காடும் அவர்கள் செக்கிலிட்டு அழிப்பார்கள் என்று எண்ணியும், பாளையக்காரர் மரபுபற்றிக் குறைத்துக் கூறினால், அவர்கள் முன்பு பிறருக்குத் துன்பம் கொடுத்ததுபோல நம்மைக் கொல்லும் வழி தேடுவார்கள் என்று எண்ணியும், வன்னியர் மரபு பற்றித் தவறாக எழுதினால் அவர்கள் தம் தலையைப் பிளப்பார்கள் என்று எண்ணியும் அந்த மரபினர்களைப் பற்றித் தவறாக நூல் எழுதி அவர்களுடைய பெருமைகளைசொல்லாம் மறைக்காமல், நல்ல தன்மைகளைக் கொண்ட செங்குந்தர்களுடைய பழமையான, புகழ்பெற்ற மரபின் பெருமைகளை



மறைத்துக் கூறி (எழுதி)னர். இதைக்கண்டு யார்தான் சிரிக்க மாட்டார்கள்!

இதைப் பார்க்கும்போது, முழுப் பூசனிக்காயைச்சோற்றில் மறைத்தல் என்று கூறும் கதைபோல மூன்று கதைகள் இருந்தால், பெரிய பொய்யைக் கூறும் இந்தக் கதைக்குச் சரியாக இருக்கும். 'கைக்கோளர் இல்லாத இடத்தில் கதை சொல்ல வேண்டும்' என்று கூறப்படும் வார்த்தையை இவர்கள் கேட்டதில்லை போலும். இவ்வாறு இவர்கள் ஒன்றும் விளங்காமல் நூல் எழுதியமைக்கு, செங்குந்தரிற் சிலர் நன்றிகூற, அதைக் கண்ட மற்ற செங்குந்தர் இடையூறாக நிற்க, இதனிடையில் 'நண்டு கொழுத்தால் வளையில் தங்காது' என்னும் பழமொழிக்கேற்பத் தாமே (இலை வணிகரே) வலிய வந்து, முன்பு புதுச்சேரியில் வாழ்ந்திருந்த குமரப்ப செட்டி, கருண செட்டி என்னும் இலைவணிகர் இருவரும் தம் மனத்தில் மகிழ்ச்சி கொண்டு சென்னை நகரில் வாழ்ந்த தலைமக்களுக்கு, 'எங்களைப் போன்று பெருமையில்லாத நீவிர் வீணாகக் குலத் தலைமை ஏற்றுக் கொண்டமை எதனால்?' என்று பின்னர் வரப்போகும் விளைவை எண்ணிப் பாராமல், '**திராவிடதீபிகை**' என்னும் ஏட்டில் எழுத, அவரவர்களுடைய தராதரம் அறிந்த சென்னைப் பதியில் வாழ்ந்த செங்குந்தத் தலைவர்கள் கோபித்து, இந்த இருவரையும் கூட்டத்திற்கு வரச் செய்து 'இவ்வாறு பொய்க்கதை சொல்லி நூலெழுதி செருக்கி இருக்கின்றீர்; எங்களுடைய உண்மையான பெருமைகளைப் போற்றாமல், மற்றவர்கள் தவறாகச் சொல்ல இடம் உண்டாக்கினீர்; நீவிர் படித்ததை எங்கே மறந்து வைத்தீர்; இவ்வாறு வீணாக முடிச்சுப் போடுவது இயல்புடையதா?' என்று உணர்ச்சி மேலிட்டுக் கேட்க, அதைக் கண்டு மனக்கலக்கமும், பயமும் அடைந்து இந்த இருவரும் 'நாங்கள் எழுதியது தவறு என்று கைச்சாத்திட்டுத் தருகிறோம்' என்று கூறி அவ்வாறே செய்து அதனால் பெருமை அடைந்தார்கள்.

பொய்யைப் பொய்யென அவர்கள் ஏற்றுக்கொண்டு, அதனால் பெருமை பெற்றதுபோல, இன்னும் பல பரிசுகளை

அடைவார்கள் என்று கூறி, சென்னை மகாநாட்டுத் தலை மக்கள் அவர்களை அனுப்பிவைத்தார்கள்.

இவ்வாறு அந்த இலைவணிகர் நூலெழுதியதனால், பழம் பெருமையில் எந்த ஐயமும் இல்லை. எழுதிய அவர்கள் மரபும் (இலை வணிகர் மரபு) உயர்வும் நன்மையும் பெறவில்லை. கையால் தரையின் மீது ஓங்கி அறைந்து அதனால் துன்பம் அடைந்ததைப்போலப் பொய்யாக நூல் செய்து அதனால் விளக்கம் (புகழ்) பெற்றதுதான் வியப்பாக உள்ளது.

உரைச்செய்யுள் முற்றிற்று.

வேலும் மயிலும் துணை.



உ

சிவமயம்

முருகக் கடவுள் துணை

ஆறுமுகப் பாவலர் இயற்றிய

செங்குந்த வேலவர்

# திருக்கை வழக்கத்தந்தாதி

'திருக்கை வழக்கம்' என்று கலிவெண்பாவினால் ஆகிய நூல் முன்னே கூறப்பட்டது. அந்நூல் கண்ணி தோறும் செங்குந்தர்களின் கை இன்ன இன்ன செயல்களைச் செய்தது எனக் கூறிக் கை என்று முடிபு கொண்டு வந்தது. கட்டளைக் கலித்துறை என்னும் பாவினவகையால் இயன்ற இந்நூல் ஒவ்வொரு பாடலிலும் செங்குந்த வீரர்களுடைய கை என் னென்ன வீரச் செயல்களைச் செய்தது என்று (ஒன்றுக்கு மேற்பட்ட செயல்களைக்)குறிக்கின்றது. இந்நூலில்உள்ள நூறு பாடல்களிலும் பொதுவாகச் செங்குந்த வீரர் செயல்களும் குறிப்பாக. வீரவாகு தேவர் நவவீரர் செயல்களும் கூறப் பட்டுள்ளன.

இத்திரட்டில் முன்னே உள்ள **'திருக்கை வழக்கம்'** என்ற நூலுக்கும் இந்நூலுக்கும் என்ன தொடர்பு உள்ளது என்று விளங்கவில்லை.

இதுவரை உள்ள நூல்களில் **செங்குந்தர்** என்றே குறிக்கப் பட்டது. இங்கே **செங்குந்த வேலவர்** என்று கூறப்படுகிறது. செங்குந்தம் என்பதே **கைவேல்** எனப்பொருள் தருவதாக இருக்க, செங்குந்த வேலவர் என்பது, 'செங்குந்தமாகிய வேலைக் கையில் கொண்டவர்' என்ற பொருள் தருவதாக இருக்கலாம். எனவே செங்குந்தர் என்ற பொருளில் செங்குந்த வேலவர் என்றும் வழங்கப்பட்டதாகக் கொள்ள இடமளிக் கின்றது.

அந்தாதி என்பது ஒரு பாடலின் இறுதியில் அமைந்த சீர், அசை அல்லது எழுத்து அடுத்த பாடலின் தொடக்கமாக

அமைவது. (அந்தமாக உள்ளது ஆதியாக வருவது.) நூலின் தொடக்கம், நூலின் இறுதி அடியில் அமைந்து முடிவுறும். (இதை மண்டலித்தல் என்று கூறுவர்.) அவ்வாறே இந்நூல் 'கார் கொண்ட 'கைத்தலம் என்று தொடங்கி, கார், கொண்ட கைத்தலமே' என முடிவுறுகின்றது.

'ஆறுமுகப்பாவலர்' என்பவரால் இயற்றப்பட்ட இந்நூல் இனிய எளிய பாடல்களைக் கொண்டு ஆற்றொழுக்காகச் செல்லுகின்றது. இந்நூலில் உள்ள செய்திகள் இப்பிரபந்தத் தில் வேறு இடங்களிலும் கூறப்பட்டுள்ளன.

தற்சிறப்புப் பாயிரம்

பாயிரம் என்பது ஒரு நூலுக்கு முன்னுரையாக அமைவது. நூலில் கூறப்படும் பொருள், நூலைச் செய்தோர், செய்வித் தோர், அரங்கேற்றிய காலம் முதலிய செய்திகளைப் பாயிரம் கூறும். பாயிரம் சிறப்புப்பாயிரம் எனவும் கூறப்பெறும். பாயிரம் ஒரு நூலுக்கு இன்றியமையாதது என்பதனை,

"ஆயிரம் முகத்தால் அகன்ற தாயினும்
பாயிரம் இல்லது பனுவல் அன்றே"

என்னும் பழைய சூத்திரத்தினால் அறியலாம். இப் பாயிரம் நூலாசிரியரே இயற்றியது ஆகையால் 'தற்சிறப்புப் பாயிரம்' என்று சொல்லப்பட்டது.

வழிபடுகடவுள்
குறள் வெண்பா

467 **செங்கோட்டில் வாழுமந்தச் செவ்வேள் திருவடியை**
**நங்கோட்டம் தீரவே நாடு.**

திருச் செங்கோடு என்னும் தலத்தில் வாழுகின்ற செவ் வேளாகிய முருகப் பெருமானின் திருவடிகளை, நம்முடைய மனக் கோணல் (குற்றம்) அனைத்தும் நீங்குவதற்காக, எண்ணித் துதிப்போமாக.

ஆக்கியோன் பெயர்
நேரிசை வெண்பா

468 **செங்குந்த வேலர் திருக்கை வழக்கநூல்**
**எங்கும் பரிமளிக்க வேசெய்தான் - கொங்கில்**
**நிகரற்ற ஆறுமுகன் என்றுசொலும் வேளாண்**
**வகைவந்த நன்னா வலன்.**



பொ. ரை:

கொங்கு நாட்டில் வாழுகின்ற (கல்வியில் தனக்கு எவரும்) நிகரில்லாத, வேளாண்மரபில் தோன்றிய நல்ல நாவன்மை உடைய ஆறுமுகப்பாவலர் என்பவர் (பா) மணம் வீசும்படிச் 'செங்குந்த வேலவர் திருக்கை வழக்கத்தந்தாதி' என்ற நூலைச் செய்தளித்தார்.

(செங்குந்தரில் நால்வகை வருணம் உண்டு என்பது முன்னர்க் கூறப்பட்டது.)

பாடபேதம்

469 **செங்குந்த மன்னர் திருக்கை வழக்கநூல்**
**எங்கும் பரவ இசைத்திட்டான் —மங்கலஞ்சேர்**
**வீறுமுகப் பாவலர்கள் வீற்றிருந்த நற்சபையில்**
**ஆறுமுகப் பாவலன் அன்று.** 1

பொ. ரை:

நன்மையுடைய, ஒப்பற்ற சிறப்புடைய கவிஞர்கள் கூடி யிருந்த சபையில், அரசர்களுக்கு நிகரான செங்குந்தர்கள் செய்த அரிய செயல்களைக் கூறும் செங்குந்த வேலவர் திருக்கை வழக்கத் தந்தாதி' என்ற நூலை ஆறுமுகப்பாவலர் என்பவர் (அச் செங்குந்தர்களின் புகழ்) எல்லா இடங்களிலும் பரவுமாறு பாடி யருளினார்.

(வீறு — பிறர்க்கு இல்லாத சிறப்பு; வீறுதல்—மேம்படுதல்)

முன்னூல்
கட்டளைக் கலித்துறை

470 **பேசும் திருக்கை வழக்கப் பெருமையைப் பேருலகில்**
**வாச மலர்மதுத் தேனுண்ட வாறொக்கும் வண்கவியில்**
**ஆசு மதுரமும் சித்திரவித் தாரம் அவைதெரிந்து**
**தேசம் புகழுமுற் காந்த புராணத்திற் செய்தனனே.** 2

பொ. ரை:

மணம்வீசும் பூக்களில் உள்ள தேனைப் பருகியது போன்ற இன்பத்தைத் தரும் வளமுடைய பாடல்களால், ஆசுகவி, மதுர கவி, சித்திரகவி, வித்தாரகவி எனப்படும் நால்வகைப் பாடல் களையும் நன்கறிந்து (செங்குந்தர்களுடைய) திருக்கை

வழக்கத்தின்பெருமையை உலகம்புகழும்ஸ்ரீகந்தபுராணம் என்ற நூலில் கூறியுள்ளார்.

(கச்சியப்ப சிவாசாரியர் செய்த கந்தபுராணத்தில் திருக்கை வழக்கப் பெருமை கூறப்படவில்லை. நாவினால் மழுவெடுத்த ஞானப்பிரகாசர் செய்த ஸ்ரீகந்த புராணத்தில் தான் அது சொல்லப்பட்டது.)

காலம்

471
கலியுக நாலா யிரத்துத் தொள்ளாறரங் கண்டபின்பு
வலிபெறுஞ் சர்வசித் தைப்பசி மாதம் வளர்மதியில்
சொலுநாள் சதயம் நவமியுந் திங்களுந் தோன்றுதினம்
பொலியும் திருக்கை வழக்கத் தந்தாதி புகல் றதுவே. 3

பொ. ரை:

கலியுகாதி வருடம் நாலாயிரத்துத் தொள்ளாயிரம் சென்ற பின்பு நிகழும் சர்வசித்து வருடம் ஐப்பசி மாதம் வளர்பிறையில் சதய நட்சத்திரம், நவமி திதி கூடிய திங்கட் கிழமையில் திருக்கை வழக்கத்து அந்தாதி என்னும் இந்நூல் அரங்கேற்றப் பட்டதாம்.

களம்

472 புகழாம் தமிழ்க்கவி ஆறு முகவன் புகலுமிந்நூல்
மகிழ்வாய் உணர்ந்தவன் செங்குந்த மன்னன்வை யாபுரியாம்
திகழ்நாக மாமலைத் தென்கோதை மாநகர் சேர்கருணை
அகழங்கன் கையெழுத் தாணியி னால்இங் கமைந்ததுவே. 4

பொ. ரை:

விளங்குகின்ற நாகமலைப் பகுதியில் உள்ள தென்கோதை நகரில் வாழும் கருணைமிகுந்த அகழங்கன் என்னும் செங்குந்தர் குல மன்னனாகிய வையாபுரியினால் கையொப்பமிட்டுத்தர, புகழ்மிக்க ஆறுமுகப் பாவலர் இயற்றிய இந்நூல் உரைக்கப் பட்டது.



நூல்

விநாயகர்

473 கார்கொண்ட கைத்தலச் செங்குந்தர் தன்றிருக்
கைவழக்கம்
சீர்கொண்ட சொல்லைக் கலித்துறைப் பாவினிற்
செப்புதற்கு
ஏர்கொண்ட கொம்பொன்று கையைந்து மாமுகத்
தெந்தைபதம்
பேர்கொண்டு போற்றித் துதிப்பாம் கவித்திறம்
பேசுதற்கே. 1

பொ. ரை:

மேகம் போன்ற கொடைத்தன்மை உடைய செங்குந்தர்களுடைய திருக்கை வழக்கம் என்னும் நூலைக் கலித்துறைப் பாவகையில் இயற்றுவதற்கு, அழகிய ஒற்றைக் கொம்பும் ஐந்து கரமும் யானை முகமும் உடைய விநாயகப் பெருமானின் திருவடிகளைப் போற்றி வணங்குவோமாக.

சுப்பிரமணியர்

474 பேசும் பெருந்திறல் சூர்க்கூட்டம் பின்னிட அன்றொழித்துத்
தேசும் திருமுதற் செல்வமும் பெற்றிடத் தேவர்தம்மை
வீசும் புகழொடு வைத்தாண்ட கூர்முனை வேலவர்தம்
காசும் பதாம்புயம் அல்லதுண் டோகாண் கவிதனக்கே. 2

பொ. ரை:

(அச்சத்தினால் கண்டவர் நடுக்கத்துடன்) பேசுகின்ற பெரிய வல்லமை உடைய சூரபதுமனும் அவனைச் சார்ந்த கூட்டத்தினரும் முன்னொரு காலத்தில் தோல்வியடையச் செய்து, தேவர்கள் கீர்த்தியும் செல்வமும் அடைந்து மீண்டும் புகழுடன் நிலை பெற நிறுத்தி ஆட்கொண்ட கூர்மையான வேலைக் கையில் கொண்ட முருகப் பெருமானுடைய ஒளிவீசும் திருவடி மலர்களைத்தவிர, கவிஞர்களுக்கு வேறு பற்றுக்கோடு உள்ளதோ? (இல்லை என்றவாறு.)

ஒன்பதின்மர்

475 **கவிகேட் பவர்நல்ல காலா யுதக்கொடி கைப்பிடித்தோர்**
**செவிகேட்கும் ஈட்டி யெழுபதும் கேட்குந் தினந்தினமும்**
**புவிகேட்கும் அந்தப் புரவலர் கைக்கொளப் போர்புரிந்தால்**
**அவிகேட்கும் வீர நவவீர தேவர்கள் நற்குலமே.** 3

பொ ரை:

'ஈட்டி எழுபது' என்னும் நூலை, நல்ல கவிதைகளை விரும்பிக் கேட்பவர்களும், சேவற் கொடியைக் கையில் கொண்டவர்களும் ஆகிய செங்குந்தர்களது செவி நாள்தோறும் கேட்கும். மற்றும் இந்தப் புவியிலுள்ளோரும் விரும்பிக் கேட்பர். (புகழை உடைய) அந்தக் கொடையாளர்கள் நன்கு போரிட்டால் வீரம் பொருந்தியநவவீரர் முதலிய தேவர் கூட்டத்தினர் அவி உணவு கேட்டு நிற்பார்கள்.

(புகழில்மட்டுமின்றிப் போரிலும் சிறந்தவர்கள் செங்குந்தர் என்பது கருத்து.)

(காலாயுதம் — சேவல்; புரவலர் — கொடையாளர்;அவி— யாகத் தீயில் இடப்படும் உணவு.)

பிறப்பு

476 **நற்குலஞ் செங்குந்தர் கச்சிப் பதிவளர் நாயகியாள்**
**பொற்சிலம் (பு) உற்பனர் மாமணிப் பாலகர் பூமிசையில்**
**விற்குலந் தாங்கிய திண்புயத் தார்குந்த வேற்கரத்தார்**
**சொற்குலத் தோர்க்குச் சிரந்தந்த கந்தன் துணைக்**
**கையரே** 4

பொ. ரை:

நல்ல குலத்தவராகிய செங்குந்தர், காஞ்சியம்பதியில் கோயில் கொண்டுள்ள காமாட்சி தேவியின் பொற்சிலம்பில் உதித்தோர்; அழகிய மணியிடத்தே தோன்றியவர்; உலகில் (வீரத்துடன்) வில்லைத் தாங்கிய வலிய தோள்களை உடையவர்கள்; செங்குந்தம் என்னும் வேலைக் கையில் கொண்டவர்கள்; தங்கள் குலத்தவர்க்காகத் தலையைத்தந்தவர்கள்; முருகப் பெருமானுக்குத் துணைவர்களும் ஆவார்கள்.

(உற்பனர்-பிறந்தவர்கள்.)



தொழில்

477 **கையால் அரனுக்குச் சீர்ப்பாதந் தாங்கிக் கதிர்மகுடம்**
**மெய்யாய்விண் ணாட்டுறை வேந்துக்குச் சூட்டி விறலசுரன்**
**பொய்யாம் முடிபறித் தே,கிர வுஞ்சப் பொருப்பைவெட்டி**
**வைவேற் கைக்கொள்வர் திருக்கை வழக்கம்வளம்பெறவே.** 5

பொ. ரை :

செங்குந்தர் தம் அழகிய கைகளினால் செய்யப்படும் செயல்கள் வளம் அடையும் வகையில், தம் கைகளால் சிவ பெருமானுடைய திருவடிகளைத் தாங்குவர். ஒளி வீசும் மகுடத்தை இந்திரனுக்கு அணிவித்து, வலிமையுடைய சூர பதுமனின் பொய்யான மகுடத்தை அகற்றி, கிரவுஞ்சம் என்னும் மலையைப் பிளந்து, கூர்மையான வேலைக் கையில் கொண்டிருப்பர்.

(பொருப்பு — மலை; வை — கூர்மை)

கைவளம்

478 **வளம்பெறு சென்னிச்சிம் மாசனங் கூத்தர்க்கு வைத்தசெங்கை**
**இளம்பிறை தண்நுதல் காமாட்சி பாதம் இறைஞ்சு செங்கை**
**தளம்பெறு வெற்றிவல் லானைச் செயித்த தயிரியக்கை**
**உளங்களி கூர்ந்திரப் போர்க்கமு தைஅள்ளி யூட்டுங்கையே** 6

பொ ரை :

வளம் பெற்ற சிரச்சிங்காதனத்தை ஒட்டக்கூத்தருக்கு அமைத்த கை; இளம்பிறையைப் போலும் குளிர்ந்த நெற்றியினை உடைய காமாட்சியம்மையின் திருவடிகளை வணங்குகின்ற கை; உப்பரிகையில் வாழ்ந்த வெற்றி பொருந்திய வல்லான் என்பவனை வெற்றிபெற்ற வீரமுடைய கை; இரப்பவர்களுக்கு மனமகிழ்ச்சியுடன் உணவளிக்கும் கை; இவை செங்குந்தர்களுடைய கைவண்மையாகும்.

[சென்னி - தலை; தண்ணுதல் - குளிர்ந்த நெற்றி]

479 **ஊட்டியில் ஈட்டியைப் பாய்ச்சிய செங்கைஒன் னார்முதுகு**
**காட்டிட ரத்தத்தில் பாவாடை வீசிய கற்பகக்கை**
**தாட்டிக வீரசெங் குந்த குலாதிபர் தந்திரக்கை**
**ஏட்டில் எமனுக் கொருபொழு(து)ஓலை எழுதுதுங் கையே.** 7

பொ. ரை :

பலமும் வீரமும் உடைய செங்குந்தர்குல அதிபர்களுடைய சாமர்த்தியம் உடைய கை [பகைவர்களுடைய] குரல் வளையில் ஈட்டியைச் செலுத்தியதும், பகைவர் புறமுதுகிட்டு ஓடுமாறு செய்ததும், ரத்தப்பாவாடை விரித்ததும் கொடைமிகுந்ததும் ஒரு சமயத்தில் இயமனுக்கு ஓலை எழுதி அனுப்பியதுமாகும்.

(ஊட்டி - குரல்வளை, கழுத்து; தாட்டிகம் - பலம்; குலாதிபர் - குல + அதிபர்;)

**480 எழுதும் பிரமனைக் குட்டித் தளையிட்ட இங்கிதக்கை**
**பழுதறு காளிகை யம்பாய்ப் பிடித்த பரவசக்கை**
**குழகன் அறுமுக வேலனைக் கூப்பிக்கொண் டாடிடும்கை**
**மழையில் தியாகம் தரும்குந்த வீரர் வரிசைக்கையே.** 8

பொ. ரை :

மழையை [மேகத்தை]ப் போன்று கொடை கொடுக்கும் செங்குந்த வீரர்களுடைய சிறப்புடைய கை, (உலக உயிர்களின் படைப்புக் கணக்கு) எழுதும் பிரமனைக் குட்டிக் கால்களில் விலங்கிட்ட நலம் உடையதும், குற்றமற்ற காளிதேவியின் கையைப் பிடித்து(க் கட்டிப்) பரவசமடைந்ததும், இளமை பொருந்திய ஆறுமுகவேலவனை வணங்கிக் கொண்டாடியதும் ஆகும்.

(இங்கிதம் - இனிமை, மழையில் என்பதில் உள்ள 'இல்' என்பதை, போல என உவம உருபாகக் கொள்க; தியாகம் - கொடை)

**481 வரிசைத் திருக்கை வடிவேல் தரித்தகை மாமரச்சூர்**
**இருபிள வாக்கிக் குருகேந்து செங்கை, இயலிந்திரன்**
**மருவயி ராணிக்கு மங்கலந் தந்தகை, வானவர்கள்**
**அருஞ்சிறைநீக்கும் நவவீர சூரர் அருமைக்கையே.** 9

பொ. ரை:

தேவர்களுடைய கொடிய சிறையினை நீக்கிய சூரத்தனம் மிகுந்த நவவீரர்களுடைய அருமையான (செயல்களைச் செய்யும்) கைகளானவை, சிறப்புடையன; கூர்மையான



வேலைத் தரித்தன; மாமர வடிவில் நின்ற சூரபதுமனை (வெட்டி) இரண்டு பிளவாகச் செய்து கோழிக்கொடியைத் தாங்கின; இந்திரன் தழுவி மகிழும் இந்திராணிக்கு மாங்கல்யம் அளித்தன.

(வடிவேல் —கூர்மையான வேல்; குருகு —கோழி; அயிராணி — இந்திராணி; மங்கலம் —மாங்கல்யம்.)

**482 கையானை பின்வந்த கந்தன் சகோதரர் கைக்கொளும்கை**
**மெய்யாம்பன் மாமுகச் சூரை வதைத்திட்ட வெற்றிச்செங்கை**
**செய்யாம்பல் வாய்முகச் சிங்கன் சிரந்துணித் திட்டசெங்கை**
**மெய்யாம்கவிக்குச் சிரம்தந்த செங்குந்தர்வெற்றிக்கையே.** 10

பொ. ரை:

ஒட்டக்கூத்தருடைய உண்மையான (ஈட்டி எழுபது என்னும்) பாடலுக்குச் சிரச்சிங்காதனம் அமைத்துக் கொடுத்த செங்குந்தர்களுடைய வெற்றி பொருந்திய கையானது, துதிக்கை உடைய யானை முகத்தோனின் பின்வந்த முருகனுக்குச் சகோதரர்களுடையதும், மெய்போல பல உருவம் கொண்டு வந்த சூரபதுமனை அழித்த வெற்றியுடையதும், ஆயிரம் வாயினை உடைய சிங்கமுகனுடைய தலையைத் துணித்ததும் ஆகும்.

(கையானை —தும்பிக்கையும் யானை முகமும் உடைய விநாயகன்; பன்மாமுகம்—பல உருவங்கள்; செய்யாம் பல்வாய் சிவந்த பல வாய்கள் (சிங்கமுகனுடைய ஆயிரம் வாய்கள்.)

**483**
**வெற்றிச்சங் கம்தொனித்(து)அண்டரைக் காக்கின்றவீரச்செங்கை**
**பற்றலர் நெஞ்சம் திடுக்கிட வேலைப்பறித்தசெங்கை**
**ஒற்றைக் கவுரி உயர்வீர வெண்டய முற்றசெங்கை**
**கொற்றக் குடைபிடித் தாள்வீர வாகுவின் கோலக்கையே.** 11

பொ. ரை:

வெற்றி பொருந்திய (கொற்றக்) குடை பிடித்து ஆட்சி செய்கின்ற வீரவாகு தேவரின் அழகிய கையானது, வெற்றிச் சங்கெடுத்து ஒலி செய்து தேவரைக் காப்பாற்றும் வீர

முடையதும், பகைவர்களுடைய மனம் நடுங்குமாறு அவர்களது வேலைப் பறித்ததும், தனிச்சிறப்புடைய கவுரியின்பாதச்சிலம்பி லிருந்து தோன்றியதும் ஆகும்.

(தொனித்து - ஒலிசெய்து; அண்டர் - தேவர்; பற்றலர் - பகைவர்; வெண்டயம் - ஒரு சிறு மணி, குதிரை முதலிய வற்றின் சலங்கை)

**484 கோலம் சிறந்தகை, கூர்வேல் எடுத்தகை கொங்குதிகழ்**
**மாலை கடப்ப மலர்திண் புயம்பெற்ற வாரிசக்கை**
**சூலம் தரித்தகை சூர்மால் சிறந்த சுடர்மணிக்கை**
**ஞாலம் புரக்கு நவவீரர் செய்ய நளினக்கையே.** 12

பொ. ரை:

உலகத்தைக் காப்பாற்றும் நவவீரர்களுடைய சிவந்த தாமரை மலர் போன்ற கை, அழகிய சிறப்புடையதும், கூரிய வேலைக் கையில் கொண்டதும், தேன்நிறைந்த கடப்பமலர் மாலைதரித்த வலிய புயங்களைப்பெற்ற தாமரைமலர் போன்றதும், சூலம் தாங்கியதும், சூரபதுமனுடைய மயக்கம் மிகுவதற்குக் காரணமாக இருந்து ஒளிவீசியதும் ஆகும்.

(கோலம் -அழகு; கொங்கு - தேன்; வாரிசம் - தாமரை; நளினம்-தாமரை; மால் - மயக்கம்; சிறந்த - மிகுவதற்குக் காரணமான)

**485 நளினத் திருக்கண்ணன் மாலைஅம் பாய்வைத்த நாமச்செங்கை**
**ஒளிவைத்த மேருவை வில்லாய் வளைத்த உபாயச்செங்கை**
**நெளிவுற்ற சேடனை நாணாய் வகுத்த நிதானச் செங்கை**
**தெளிவுற்று முப்புரந் தீயிட்ட, செங்குந்தர் சித்ரக்கையே.** 13

பொ. ரை:

செங்குந்தர்களுடைய அழகிய கையானது, தாமரை மலர் போன்ற அழகிய கண்களை உடைய திருமாலை அம்பாகக் கொண்ட வியப்புடையதும், ஒளி பொருந்திய மேருமலையை வில்லாக வளைத்த செயல் உடையதும், வளைகின்ற ஆதி சேடன் என்னும் பாம்பை நாணாகக் கொண்ட பெருமை



உடையதும், நன்கு ஆராய்ந்து திரிபுரதகனம் செயததும் ஆகிய செயல்களை உடையதாம்.

(சிவபெருமானுடைய செயல்கள் செங்குந்தர் செயல் களாகக் கூறப்பட்டன)

**486 சித்திரத் தக்கனின் யாகம் சிதைத்த செழுமலர்க்கை**
**முத்தமிழ் வாணர் கலிதீர்க்கும் செங்கை, முகிழ்மலர்க்கை**
**கத்தணி ரம்பையி னற்றன பார நலங்கொளுங்கை**
**பத்திர வீர நவவீர தேவர் பவளக்கையே** 14

பொ. ரை:

வாள்போரில் வல்ல நவ வீரர்களுடைய சிவந்த பவளம் போன்ற கையானது, தக்கனின் யாகத்தை அழித்ததும், முத்தமிழ் வல்ல கவிவாணர்களின் வறுமையைத் தீர்த்ததும், மலர் போன்ற கைகளை உடைய, விரும்பப்படுகின்ற ஆபரணங் களை அணிந்த தேவமகளிரின், மார் பினைத் தழுவி இன்பம் கொண்டதும் ஆகிய செயல்களை உடையதாகும்.

நத்து விரும்பப்படுகின்ற; மூக்கில் அணியும் அணியும்ஆம். அரம்பை - தேவகணிகையருள் ஒருத்தி. பத்திரம் — வாள்.

வான்அரமகளிர்க்கு வேதுவை சூட்ட
சூர்மகளிர் மேவக்குழைத் தணைந்த மென்கரமும் என்ற திருமுருகாற்றுப்படை வரிகளை ஒப்பு நோக்குக.

**487 பவளமும் பொன்னும் மணிபுனை முக்குடை பற்றுசெங்கை,**
**தவளவெண் ணீறுபஞ் சாக்கர வாசம் தரித்தசெங்கை,**
**துவள இருகரம் கூப்பிக் குகனைத் தொழவரும்கை**
**எவள வெனினும் கொடுத்துணும் செங்குந்தர் இன்பக்கையே** 15

(2 ஆம் அடியில் ஓர் எழுத்து மிகுந்துள்ளது.)

பொ. ரை:

பிறர் கேட்கும் பொருள் எந்த அளவினதாக இருப்பினும் அதை மறுக்காமல் கேட்போருக்குக் கொடுத்த பிறகு தாம் உண்ணும் செங்குந்தர்களின் இன்பம் தருகின்ற கை, பவழம், பொன், மணிகள் முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்ட மூன்று வகையான குடைகளைத் தாங்கியதும், தூய்மையான

வெண்ணீறுதரித்துப் பஞ்சாட்சர ஜபம் செய்வதும், இரு கரங்களையும் கூப்பி முருகப்பெருமானை வணங்குவதுமாகிய செயல்களைச் செய்வதாகும்.

(வாசம் — வாசனை; அருள் மணம். 'வாசகம்' என்பது இடைக்குறைந்து வந்ததாகவும் கொள்ளலாம்.)

**488 இன்பச் சிலைமதன் கைக்கிணை யான இனியசெங்கை**
**செம்பொன் திகிரி இரவலர்க் காகச் செயும்செழுங்கை**
**தம்புரு வீணை மடவார் படிக்கத் தனம்தரும்கை**
**அம்புவி ஆண்டகை செங்குந்த மன்னவர் ஆசைக்கையே.** 16

பொ. ரை:

(அரசர்களுக்கிணையாக) உலகத்தை ஆட்சி செய்த செங்குந்த வீரர்களுடைய, பிறர் கண்டு ஆசைப்படும் கையானது கரும்பு வில்லைத் தரித்த மன்மதனின் கைகள் தரும் இன்பத்துக்கு இணையான இன்பத்தைத் தருவதும், சிவந்த மலைபோன்ற பொன்னை இரவலர்க்கு அளிப்பதும், தப்புரா, வீணை முதலிய இசைக்கருவிகளைப் பெண்கள் பயிலுவதற்குப் பொருள் கொடுத்துஉதவுவதுமான செயல்களைச்செய்யும் பெருமை உடையதுமாகும். (பெண்கள் பயிலத் தனம்தருவர் என்றதால், இசைக்கலை பெண்களுக்குச் சிறப்பாகஉரியது என்பது கருத்து.)

**489 ஆசைப் படுதற்குச் சத்திய முற்றகை, அஞ்சலெனப்**
**பாசத் தமிழ் சொலும் பாவாணர் தங்கள் பதிநிதிக்கை;**
**வாசக் கடம்ப மலர்க்கங் கணக்கை, வழங்குசெங்கை,**
**தேசம் புகழ்திருச் செங்குந்த மன்னவர் செம்மைக்கையே** 17

பொ. ரை:

உலகம் எங்கும் புகழப்படுகின்ற செங்குந்த மன்னவர்களுடைய செம்மையான கை, விரும்பத்தக்க மெய்ம்மை உடையதும், அன்பைத் தரும் தமிழ் மொழியில் வல்ல பாவாணர்களது வாழ்க்கைக்குப் பொருள் அளிப்பதும், மணம் மிகுந்த கடப்பமாலையைக் கங்கணமாக அணிவதும், கொடை வழங்குவதுமான சிறப்புக்களை உடையதாம்.



**490 செம்மைச்சிந் தாமணி கற்பகத் தாருவுஞ் சேர்ந்த செங்கை**
**வெம்மைக் குரூர மடவார்முன் விட்ட விசயச் செங்கை**
**தம்மைப் புகழும் புலவோர்க் கிருநிதி தந்தசெங்கை**
**இம்மைக்குள் கீர்த்தியைக் கைக்கொளும் குந்தர்**
**இயல்புக்கையே.** 18

பொ. ரை:

இப்பிறப்பிலேயே புகழைத் தங்களுடையதாக ஆக்கிக் கொள்ளும்இயல்புடைய செங்குந்தருடைய கை,செவ்விய சிந்தாமணியும் கற்பகத் தருவும் சேர்ந்து வழங்குவது போலக்கொடை கொடுப்பதும், கொடிய பெண்களைக் கைவிட்ட வெற்றியினை உடையதும், தம்மைப் புகழ்ந்துரைக்கும் புலவர்களுக்குப் பெருஞ்செல்வம் வழங்குவதும் ஆகிய பெருமையுடையதாகும்.

[வெம்மை, குரூரம் என்பன கடுமை என்னும் ஒருபொருள் குறித்தன. இருநிதி — பெருஞ்செல்வம். சங்கநிதி பதுமநிதி என்ற இரண்டு செல்வம் எனவும் கொள்ளலாம்.]

**491 இயலிசை நாடக முத்தமிழ் வாணருக் கீந்தசெங்கை**
**மயலுறும் ரூப மடவார் கனதன மல்குசெங்கை**
**புயலென வந்து புவிகாக்கும் செங்கை புரவலக்கை**
**செயலுயர் கச்சிப் பதிவீர வாகு திறமைக்கையே.** 19

பொ. ரை:

தம் செயல்களால் உயர்வடைகின்ற காஞ்சிப் பதியில் வாழும் வீரவாகு தேவரின் [மரபினராகிய செங்குந்தரின்] திறமை மிக்க கையானது, இயலிசை நாடகம் என்னும் முத்தமிழிலும் வல்லவர்க்குப் பொருள் அளிப்பதும், காதல் கொள்ளும் அழகிய பெண்களின் நகில்களைத் தழுவிச் செழிப்பதும், கடுங்காற்றுப்போல விரைந்து வந்து இவ்வுலகைக் காக்கும் கொடைத்தன்மை உடையதும் ஆகிய சிறப்புக்களை உடையதாகும்.

(மயல் - மயக்கம், காதல்; ரூபம்- அழகு; மல்குதல் - செழித்தல்.)

**492 திறங்காட்டும், மிக்க திருக்காட்டும் செங்கை, செகமுழுதும்**
**அறங்காட்டும் செங்கை, அலங்காரச்செங்கை, அடையலர்கள்**
**புறங்காட்டும் வீர,வை வேல்காட்டும் வெற்றிப் புயபெலக்கை**
**நிறங்காட்டும் செங்குந்தர் ஆண்மையைக் காட்டு**
**நிசங்கக்கையே.** *20*

பொ. ரை:

(பகைவர்க்கு அஞ்சாமல் நேர்நின்று தம்) மார்பினை ஆண்மையுடன் காட்டுகின்ற செங்குந்தர்களின் உண்மை உறுப்பாகிய [தவறாமல் செயல்படும்] கையானது, வலிமையையும் மிகுந்த செல்வத்தையும் காட்டுவதும், உலக மக்கள் அனைவருக்கும் அறவழி காட்டுவதும், அணிகலன்களை அணிந்து அலங்காரமாக உள்ளதும், பகைவர் புறங்காட்டி ஓடுமாறு வீரம் மிக்க கூர்மையான வேலைக் கையில் கொண்டதும்; வெற்றி பொருந்திய தோளின் பலத்தைக் காட்டுவதும் ஆகிய தன்மைகளை உடையது.

[திறம் - வலிமை; அடையலர் - பகைவர், வை - கூர்மை; வைவேல் - கூர்வேல்; நிறம் - மார்பு, நிசஅங்கம்- மெய்யுறுப்பு]

**493 சங்காழி தண்டந் தரித்த திருக்கை, சரோருகக்கை,**
**செங்கேழ் மழுப்படை தாங்கிய செங்கை, செருச் செயுங்கை,**
**மங்காத கீர்த்தி வளருங் கருணை மருமலர்க்கை!**
**கொங்கார் கடம்பணி செங்குந்த வேலவர் கொற்றக்கையே.** *21*

பொ. ரை:

தேன் நிறைந்த கடப்பமலர் மாலையை அணிகின்ற செங்குந்த வேலவருடைய வெற்றி பொருந்திய கையானது, சங்கு, 'சக்கரம், கதை முதலியவைகளைத் தரித்த அழகுடையது. சிவந்த ஒளி வீசும் மழுப் படையைத் தாங்கிய சிவந்த கை. போர் செய்யும் (அஞ்சாத) கை. புகழ் குறையாது நாள் தோறும் வளர்ந்துவரும் கருணையுடையது. மணம் வீசும் மலர் போன்றகை இவ்வாறு பல சிறப்புக்களை உடையதாகும்.

(செங்குந்தர் திருமால், சிவபிரான், முருகன் முதலியோர் போல ஆயுதங்களைக் கையில் கொண்டவர்கள் என்பது கருத்து.)



தண்டு — கதாயுதம்; சரோருகம் — தாமரை; கேழ்— ஒளி; மழு — கோடரி; கொற்றம் — வெற்றி.

**494 கொற்றவர் தங்கட்கு வீரங்கொடுத்த குலிசச்செங்கை**
**நற்றமி ழோர்க்கு ரணபீடி கைவைத்து நாட்டியகை**
**அற்றவர் தங்களை ஆதரித் தேத்தி அனம்தரும் கை**
**கற்றறி வாளர்செங் குந்தகுலேசர் கனகக்கையே.** *22*

பொ. ரை:

நன்கு கற்று அறிந்தவர்களாகிய செங்குந்த குல மன்னர்களின் பொன் பொன்ற கை, அரசர்களுக்கு வீரம் உண்டாகுமாறு துணை நின்ற 'குலிசம்' என்ற வச்சிராயுதத்தைக் கொண்டதும், நல்ல தமிழ்வல்லபுலவர்க்கு (ஒட்டக் கூத்தருக்கு) இரத்தப் பாவாடை இட்டு வைத்ததும், பொருளற்றவர்களுக்கு ஆதரவு காட்டி உபசரித்து உணவிட்டதும் ஆகிய பெருமைகளை உடையதாகும்.

(ரண பீடிகை - இரத்தப் பாவாடையிட்ட ஆசனம்; அனம் - அன்னம் - உணவு )

**495 கனக வரையையும் கைலாச வெற்பையும் காத்தசெங்கை**
**தனதன் தனக்குப் பரியீந்த செங்கை, தழலவர்க்குப்**
**புனிதத் தகர்தந்த பூங்கமலக்கை, புவியதனை**
**அனிலனுக் கீந்த நவவீர செங்குந்தர் ஆண்மைக்கையே.** *23*

பொ. ரை :

நவவீரராகிய செங்குந்தர்களுடைய ஆண்மை உடைய கைகள், பொன் மலையாகிய மேரு மலையையும், வெள்ளிமலையாகிய கைலாய மலையையும் காவல் பூண்டு காத்தன, குபேரனுக்கு வாகனமாகக் குதிரையைக் கொடுத்தன. அக்னி தேவனுக்கு தூய ஆட்டுக் கிடாவை வாகனமாகக் கொடுத்தன. வாயு தேவனுக்குப் பூமியை உறைவிடமாகக் கொடுத்தன.

(கனகம் — பொன்; வரை, வெற்பு — மலை; தனதன் — குபேரன்; தழலவன் —அக்னி; அனிலன் — வாயு; தகர் — ஆட்டுக்கிடா.) சூரபதுமனால் தம் நிலை கெட்டிருந்த தேவர்களுக்குப் பழைய நிலையைத் தந்தன என்பது கருத்து.

**496 ஆணாய்ப் பிறந்து புலிக்கொடி பெற்றிடும் அம்புயக்கை**
**கோணா இடபக் கொடிகுக் குடக்கொடி கொண்டசெங்கை**
**சேணாட் டமரர் செயம்பெறக் காத்தசிங் கக்கொடிக்கை**
**பூணாரம் பொற்கடம் புப்புயச் செங்குந்தர் பூசைக்கையே.** 24

பொ. ரை :

ஆபரணம் பூண்டு,பொன்னிறமான கடப்ப மாலையணிந்த தோள்களை உடைய செங்குந்தர்களுடையபூசைக்குரிய கைகள், உலகில் ஆண்மையுடன் தோன்றித் தம் சின்னமாகப் புலிக் கொடி பெற்றன. மாறுபடாத இடபக் கொடிக்கு நிகரான சேவற்கொடியைக் கொண்டன. வானுலகில் உள்ள தேவர் வெற்றி பெறச் செய்து காத்த சிங்கக் கொடி பிடித்தன.

(அம்புயம் — தாமரை; குக்குடக் கொடி — சேவற்கொடி; சேணாடு — தேவருலகம்;)

**497 பூசை புரியுங்கை, மாவடிக் கம்பரைப் போற்றுசெங்கை,**
**தேசிகன் முத்துக் குமரனை வாழ்த்தித் தினம்தொழுங்கை,**
**வாச மதுரையிற் சொக்கேசர் பாதம் வணங்குசெங்கை,**
**பேசுந் தமிழறி செங்குந்த வீரர் பெருமைக்கையே.** 25

பொ. ரை:

புகழ்ந்து பேசப்படும் தமிழ்மொழி வல்ல செங்குந்த வீரர்களுடைய பெருமை மிக்க கைகள் சிவபூசை செய்வன. மாவடியில் எழுந்தருளியுள்ள திருவேகம்பரை வணங்குவன.குருநாதனாகிய முத்துக்குமாரப் பெருமானை நாள்தோறும் வாழ்த்தி வணங்குவன. மதுரையில் கோயில் கொண்டுள்ள சொக்கநாதப் பெருமானுடைய திருவடிகளை வணங்குவன. ஆகிய

**498 பெருமாள் திருச்சக் கரத்தைவிண் ணோட்டும் பிரபலக்கை**
**திருசூல வேலை மகிட னிடத்துச் செலுத்துசெங்கை**
**உருவாம் அயன்தலை ஐந்தினில் ஒன்றுக் குருத்திரக்கை**
**தருவாம் புகழ்திருச் செங்குந்த வீரர் தருணக்கையே.** 26



பொ. ரை:

கற்பகத் தருவினைப் போன்ற புகழுடன் கூடிய செல்வம் பெற்ற செங்குந்த வீரர்களின் தக்க சமயத்தில் உதவும்கைகள் திருமாலின் சக்கரப்படையை விண்ணில் செலுத்தின. முத்தலைச் சூலம் போன்ற வேலாயுதத்தை, மகிடன் என்னும் அசுரன்மேல் ஏவின. பிரமதேவனுடைய ஐந்து தலைகளில் ஒன்றை உருத்திரனைப் போலக் கிள்ளி எறிந்தன.

**499 தருவை வனத்திற்(கு) அகற்றிய செங்கை, தயாமணியை**
**உருவென் றெடுத்துக் கொடுத்(து)அது கல்லென் றுரைத்த செங்கை**
**மருவார் அளகைப் பதியான் கொடையினை மாற்று செங்கை**
**ஒருமொழி வாசகர் செங்குந்த வீரர் உபயக்கையே.** 27

பொ. ரை:

சொன்ன சொல் மாறாத செங்குந்த வீரர்களுடைய சிறந்த இரு கைகளே, கற்பகத்தருவைக் காட்டிற்கனுப்பித் தாமே கொடை கொடுத்தன, சிந்தாமணியை அழகுடையது என எடுத்து அது வெற்றுக் கல் என்று கூறித் தாமே கொடுப்பன. மணம் நிறைந்த அளகையில் வாழும் குபேரனுக்கும் அதிகமான செல்வத்தை வழங்குவன.

(தரு - கற்பகமரம்; தயாமணி - சிந்தாமணி (தேவலோகத்தில் இருப்பது, கேட்டவர்களுக்கு வேண்டிய பொருள் தருவது.) அளகைப்பதியான்—குபேரன்; இவன் செல்வத்திற் சிறந்தவன். ஒருமொழி - சொன்ன சொல் மாற்றாமை )

**500 உபயக் கதிர்மதி கோணினும்கோணா துதவு செங்கை**
**அபயமென் றாரை அருகணைத் தாதரித் தாண்டசெங்கை**
**சபையி லெழுதிப் படித்துப்ர சங்கஞ்செய் சாதனக்கை**
**நிபயம்கொண் டாடிய செங்குந்த வீரர் நிதானக்கையே** 28

பொ. ரை:

பயமற்றுப் பிறரால் கொண்டாடப் படுகின்ற செங்குந்த வீரர்களுடைய பொறுமை மிக்க கையே. சூரியன்

சந்திரன் ஆகிய இருவரும் திசை மாறினாலும், மாறுபாடு இல்லாது பிறருக்கு உதவுவன. அடைக்கலம் என்று வந்தவரை அருகில் அழைத்து அணைத்து ஆதரிப்பன. கற்றோர் கூடிய சபையில் எழுதிப் படிப்பன (சொற்பொழி வாற்றுவன.)

(உபயம் - இரண்டு; கதிர் - சூரியன்; மதி - சந்திரன்; கோணுதல் - மாறுதல்; அபயம் — அடைக்கலம்; நிபயம் - நிர்ப் பயம் - பயமற்ற தன்மை.)

**501 தான முதல்அன்ன தானம் கொடுக்கும் சமயச்செங்கை**
**கானம் உருத்திர வீணை எடுத்துக் கழறுசெங்கை**
**மீன விழிச்சி கருணா கடாட்சத்தை வேண்டுசெங்கை**
**மோன மனத்து நவவீர வாகு முறைமைக்கையே. 29**

பொ. ரை :

மோன நிலை கொண்ட மனத்தையுடைய வீரவாகு முதலிய நவவீரர் (செங்குந்தர்) களின் சீரான கைகளே தானங் களுள் முதலாவதாகிய அன்னதானத்தை உரிய நேரத்தில் கொடுப்பன. உருத்திர வீணை எடுத்து இசைத்துப் பாடுவன. மீன்போலும் கண்ணை உடைய (அங்கயற் கண்ணியின்) அம்பிகையின்கடைக்கண் பார்வையை வேண்டுவன.

(அட்சம் —கண்; கடை + அட்சம்: கடாட்சம்—கடைக்கண் பார்வை; மோனமனம் — மௌன நிலை.)

**502 முறைமுறை முப்பத் திரண்டறஞ் செய்து முடிக்குஞ்செங்கை**
**நிறைசவு பாக்கிய சந்தான மென்றும் நிலைக்குசெங்கை**
**பொறைவளர் மேன்மைப் புகழைப் படைத்த புதியசெங்கை**
**நெறிதவ றாதசெங் குந்த குலாதிபர் நேமிக்கையே. 30**

பொ. ரை,

முறை தவறாத செங்குந்த குல அதிபர்களுடைய சக்கரப் படை தாங்கிய கையே முறையான முப்பத்திரண்டு தருமங் களைச் செய்து முடிப்பதும், நிறைந்த செல்வமும் சந்ததியும் என்றும் நிலைத்திருக்கச் செய்வதும், பொறுமை வளர்க்கும் சிறந்த புகழைப் படைப்பதுமான, மேன்மை உடையதாகும்.



(ஆதுலர்க்கு உணவு முதல் கன்னிகாதானம் முடிய உள்ள தருமம் 32 ஆகும். சவுபாக்கியம் — செல்வம்; சந்ததி; நேமி— சக்கரம்)

**503 நேமியைத் தியாக முரசாய் அறைந்து நிதிதருங்கை**
**பூமியைப் போன்று பொறையே படைத்த புனிதச்செங்கை**
**சாமியை அர்ச்சித் தருள்கம்பர் சேவடி தாங்கு செங்கை**
**வாமியைப் பூசை புரியுஞ்செங் குந்தர் மதுரக்கையே. 31**

பொ. ரை:

பார்வதிதேவியைப் பூசை செய்யும் செங்குந்தர்களுடைய இனிமை பொருந்திய கை பூமியில் உள்ளவர்களுக்குத் தியாக முரசு அறைந்து செல்வம் தருவதும், பூமியைப் போன்று பொறுமையைக் கொண்டிருப்பதும், முருகனை வழிபட்டு, அருள்தரும் திருவேகம்பப் பெருமானுடைய திருவடிகளைத் தாங்குவதும் ஆகிய சிறப்புக்களை உடையதாகும்.

[சாமி - முருகன்]

**504 மதுரைத் தமிழ்க்குத் தலையே கொடுத்த மகிமைச் செங்கை**
**எதிருற்ற பற்றலர் போய்ப்புறங் காட்ட இகல்புரிகை**
**சதுருக்குள் மேன்மை தழைத்தோங்கு செங்கை**
**சமுகச் செங்கை**
**கதிர்மிக்க கச்சி நவவீர வாகு கமலக்கையே. 32**

பொ. ரை:

(புகழால்) ஒளி வீசும், கச்சியில் வாழும்வீரவாகு முதலிய நவவீரர் (செங்குந்தர்)களின் தாமரை மலர் போன்ற கைகள் மதுரையில் வளர்ந்த (சங்கத்) தமிழாலாகிய ஒட்டக்கூத்தர் பிரபந்தத்துக்குத் தலைகொடுத்தன. எதிர் வந்த பகைவர்கள் புறங்காட்டி ஓடுமாறு போரிடுவன. பலருடைய பெருமைகளுக் குள்ளும் பெருமை செழித்து ஓங்குவன. இனத்தாருடன் சேர்ந் திருப்பன ஆகும்.

(தமிழுக்குத் தலை கொடுத்த குமண வள்ளல் வரலாறும் உள்ளது. இகல்- மாறுபாடு, போர்; சதுர் - பெருமை)

505 கமலா லயப்பெண்ணை மாலுக்குத் தந்த கனகச் செங்கை
கமலா யுதனுக்(கு) இரதியை மாமணம் கண்டசெங்கை.
கமலாயி எந்தை சடைமீ திருந்திடக் காட்டுசெங்கை
கமலாசனன் கச்சியில்நவ வீரர்தம் கஞ்சக்கையே. 33

(நான்காம் அடியில் ஓர் எழுத்து மிகுந்துள்ளது.)

பொ. ரை :

பிரமதேவனால் வழிபாடு செய்யப்பட்ட கச்சிநகரில் வாழும் நவவீரர்களுடைய அழகிய தாமரை மலர் போன்ற கைகளே, (சூரபதுமனை அழித்துத் தேவலோக ஆட்சியை நிலை நிறுத்தித்) திருமகளைத் திருமாலுக்கு அளித்தன. மன்மதனுக்கு இரதிதேவியை மணம் செய்யக் கண்டன. கங்காதேவி சிவபெருமானது சடைமுடியில் இருப்பதைக் காட்டுவன.

[கமலாலயப் பெண் - தாமரைக் கோயிலில் வாழ்பவள், இலக்குமி; கமலாயுதன் - தாமரை மலரை ஐந்து மலரம்புகளில் ஒன்றாகக் கொண்ட மன்மதன்; ஆயி - தாய்; கமலாயி -கங்கை; கமலம் - தண்ணீர்; கமலாசனன் - பிரமதேவன்; கஞ்சம் - தாமரை.)

506 கஞ்சனும் மாலுமுன் காணாச் சிவபதம் கண்டசெங்கை
தஞ்சமென் றாரை அழைத்தா தரித்த தயாளச்செங்கை
செஞ்சொல் மதுர கவிமாலை வாங்குபொற் சீதளக்கை
பஞ்ச தருநிகர் செங்குந்த பார்த்திபர் பண்புக்கையே. 34

பொ. ரை :

(தேவலோகத்தில் உள்ள கற்பகம் முதலிய) ஐந்து மரங்களுக்கு நிகரான கொடை வழங்கும் செங்குந்த மன்னவர்களின் பண்புடைய கைகள் பிரமதேவனும் திருமாலும் முன்பு காண முடியாத சிவபெருமானுடைய திருவடிசளைக் கண்டு தரிசித்தன. அடைக்கலம் என்று வந்தவர்களை அழைத்து ஆதரிக்கும் கருணை உடையன. செவ்வையான இனிய பாமாலை பெறும் பொன்போலும் குளிர்ச்சி உடையன.

(தஞ்சம் - அடைக்கலம்; தயாளம் - கருணை: பஞ்சதரு - கற்பகம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிஜாதம், சந்தானம் ஆகியன; மதுரகவி - இனிய பாடல், ஆசுகவி, மதுரகவி, சித்திர கவி, வித்தாரகவி என்ற நான்கினுள் ஒன்று.)



507 பண்பாம் தமிழ்க்கவிப் பாவலர் ஏற்கப் பணித்தசெங்கை
நண்பா னவர்க்கு நலமே கொடுத்து நயம்தரும்கை
உண்பார்க் கமுதள்ளி ஊட்டிப் புசித்திட உள்ளசெங்கை
திண்பார் புகழ்திருச் செங்குந்தர் வீரம் செலுத்துகையே. 35

பொ. ரை:

வலிய பூமியில் உள்ளோர் புகழுகின்ற அழகிய செங்குந்தர்களுடைய வீரமுடைய கைகளே, பண்புள்ள தமிழ்ப்பாவலர்கள் (தாம் கொடுக்கும்) பொருள்களை ஏற்றுக் கொள்ளுமாறு செய்வன. நண்பர்களுக்கு நன்மையே செய்து நலம் தருவன. (பசியால் வருந்தி) உண்ணுபவர்களுக்கு உணவை ஊட்டிப் புசிக்கச் செய்வன.

(பணித்தல் - கட்டளையிடுதல்; திண் - திண்மை - வலிமை; பார்- பூமி.)

508 செலுத்தும் அரசு திருக்கச்சி ஆதிக்கம் தேடுசெங்கை
புலிக்கும் பசுவுக்கும் ஓர்துறை ஆக்கினை போட்டசெங்கை
உலுத்தப் பசாசர்க்கு மார்பாணி வைக்கும் உதாரச் செங்கை
பலிக்கும் புகழ்திருச் செங்குந்த வீரர் பருவக்கையே. 36

பொ. ரை:

வாய்த்த புகழைஉடைய அழகிய செங்குந்த வீரர்களுடைய சமயமறிந்து உதவும் கைகளே, அழகிய காஞ்சி நகரில் தாம் செலுத்தும் அரசுரிமையை நாட்டுவன; புலியும் பசுவும் (தம்பகைமறந்து) ஒரே துறையில் நீர் அருந்த ஆணையிட்டன. கீழ்மைக்குணம் உடைய உலோபிகள் மார்பில் ஆணி அடிக்கும் வகையில் பலருக்குக் கொடை வழங்குவன.

(ஆதிக்கம் - அதிகாரம். ஆக்கினை - ஆணை; உலுத்தம் - உலோபத்தனம்; பசாசர் - உலோபிகள். உதாரம் - கொடை.)

509 பருவ முகிற்குள் எழிலியை ஒத்துப் பணைத்தசெங்கை
குருவைப் பிதாவைத் துணைத்தாள் பணிந்து குலாவுசெங்கை
அருமைப் புகழைத் திரிலோக மட்டும் அளந்தசெங்கை
ஒருமைத் திடம்பெறும் செங்குந்த வீரர் உயர்ச்சிக்கையே. 37

பொ· ரை:

ஒன்றுபட்டு வலிமை பெறுகின்ற செங்குந்த வீரர்களின் உயர்ந்தகைகளே பருவகாலத்தே தோன்றுகின்ற மேகங்களில் மழையைப் பொழியும் மேகம் போன்று செழித்திருப்பன. ஆசிரியரையும தந்தையும் திருவடிவணங்கிப் போற்றுவன தங்கள் மேலான புகழை மூன்று உலகங்களிலும் பரவச் செய்வன.

(எழிலி — எழுச்சியை உடையது.)

**510 உயர்ச்சித் திருக்கை, ஒளிர்தனு நேமி உடையசெங்கை,**
**செயத்தைப் பெறும்கை,தெய் வானைகாந் தன்னடி சேவைசெய்கை,**
**புயத்துக்கு வாகை மலர்சூட்டிச் சூரைப் பொருதசெங்கை,**
**நயத்தைத் தருந்திருச் செங்குந்த வீரர் நலமைக்கையே. 38**

பொ. ரை:

நன்மையைத் தருகின்ற அழகிய செங்குந்த வீரர்களுடைய கைகளே உயர்வும் அழகம் உடையன, ஒளிவீசும் வில்லையும் சக்கரத்தையும் தாங்கியன. வெற்றியைப் பெறுவன தெய்வ யானை கணவனுக்குத் தொண்டு செய்வன. தோள்களில் வெற்றி மாலைகளைச் சூடி, சூரபதுமனுடன் பேரிட்டன.

(புயத்துக்கு என்பதில் உள்ள நான்கனுருபை புயத்தில் என ஏழனுருபாகத் திரித்துக் கொள்.)

**511 நலமைப் புகழை நடத்தும் திருக்கை,நண் ணார்கள்நெஞ்சம்**
**சலனப் படும்படி வேல்வாங்கு செங்கை, சகங்கள் மெச்சத்**
**தலையைக் கொடுத்துத் தமிழேந்திக் கொண்ட தருமச் செங்கை**
**பலனைத் தரும்திருச் செங்குந்த வீரர் பனுவற்கையே. 39**

பொ. ரை :

(மற்றவர்களுக்குப்) பலன் கிடைக்குமாறு செய்யும் அழகிய செங்குந்த வீரர்களுடைய பாடல் பெறும் கைகள் நன்மையுடன் கூடிய புகழைச் செலுத்தும் அழகினை உடையன பகைவர்கள் மனம் கலங்குமாறு வேலாயுதத்தைப் பெற்றன. உலகங்கள் வியக்கும்படி தலையைக் கொடுத்துத் தமிழை வாழச் செய்த தருமம் உடையன.



**512 பனுவல் தமிழ்சொலும் பாவாணர் தம்மைப் படைத்த செங்கை**
**மனுவுக்குள் நீதி முறைவழுவாத மணிஅணிகை**
**தனுவுக்கு வீர விசயனைப் போலும் சமர்செயுங்கை**
**புனிதத் திருக்கச்சி வீரசெங்குந்தர் புகழ்மைக்கையே. 40**

பொ. ரை :

தூய்மையுடைய அழகிய கச்சிநகரில் உள்ள வீரம் மிக்க செங்குந்தர்களின் புகழ் படைத்த கைகளே தமிழ்க்கவிதைகளை இயற்றும் பாவாணர்களைத் தம் கொடையால் உண்டாக்கின. வார்த்தைகளில் நீதிமுறை தவறாது அணிகள் பூண்டன. வில்லாற்றலில் அருச்சுனனைப் போலப் போரிடுவன.

(பனுவல் - பாடல்; மனு- வார்த்தை; தனு-வில். போலும் - போல், உப் சாரியை )

**513 புகழும் தரும நெறியை நடாத்தும் புதுமைச் செங்கை**
**நெகிழ மருவலர் தங்களை வாட்ட நினைக்கும் செங்கை**
**துகளென ஈந்து மலைபோலும் கீர்த்தி துலங்குசெங்கை**
**அகளங்க வீரசெங் குந்த குலாதிப ராதிக்கையே. 41**

பொ. ரை:

குற்றமற்ற வீரமுடைய செங்குந்த குலத்து அதிபர்களின் கைகள், (எல்லோராலும்) புகழப்படும் தருமவழியை நடத்திச் செல்லுகின்ற புதுமை உடையன. பகைவர்களை அவர்கள் உள்ளம் உருகுமாறு துன்புறுத்த எண்ணுவன. செல்வத்தைத் தூசாக எண்ணிக் கொடுத்து மலைபோல உயர்ந்த கீர்த்தியில் விளங்குவன.

(மருவலர் - பகைவர், சேராதவர்; துகள் - தூசு. அற்ப மானது; அகளங்கம் - குற்ற மற்றது; களங்கம் × அகளங்கம்.)

**514 ஆதி பராபரை அம்மைபொன் தாள்சிலம் பாண்டசெங்கை**
**சோதி வயிர வடிவேலில் சூரைத் துரந்தசெங்கை**
**நீதி முறைமை வழுவா தறத்தை நிறுத்து செங்கை**
**கோதில் அருமைக் குலவீர செங்குந்தர் கூர்மைக்கையே 42**

பொ. ரை:

குற்றமற்ற அருமையான (உபசுப்பிர மணிய) கோத்திரத்தில் அவதரித்த செங்குந்தர்களுடைய கூரியகையே, ஆதி முதல்வியான உமாதேவியின் பொற்சிலம்பில் இருந்து தோன்றி உலகை ஆண்டன, ஒளிவீசுகின்ற உறுதியமைந்த வடிவேலை சூரபதுமன் உடலுட் செலுத்தின. நீதிவழி தவறாமல் தருமத்தை நிலைநாட்டுவன.

**515 கூர்மை திருக்கை குருகுத் துசங்கட்டிக் கொண்ட செங்கை**
**தார்பொன் கடம்பைப் புயமே படைத்த சமரசக்கை**
**பேர்பெற்ற கீர்த்திப் பிரதாபச் செங்கை பிரபலக்கை**
**சீர்சச்சி ஆதிபர் செங்குந்த வேலவர் செல்வக்கையே. 43**

பொ. ரை:

சிறப்புடைய கச்சிப் பதியில் உரிமை கொண்ட செங்குந்த வேலவருடைய செல்வம் பொருந்திய கைகள், கூர்மையுடன் செயலாற்றும் அழகுடையன. கோழியைக் கொடியாகக் கொண்டிருப்பன. பொன்னிறமான கடப்ப மலர் மாலையைத் தோள்களில் தாங்கியன. நற்பெயர் கொண்ட புகழ் உடையன, எல்லோருக்கும் விளங்கித் தோன்றுவன.

(துவசம் என்பது துசம் (கொடி) என நின்றது.)

**516 செல்வஞ் சிறந்த திருமால்பக் கத்தில் திகழ்ந்தசெங்கை**
**வில்வந் துளபஞ் சிவன்மால் பதத்தில் விரைக்குஞ் செங்கை**
**இல்வந்து நின்ற இரவலர்க் கன்ன மிடுஞ்செழுங்கை**
**நெல்வந்து முத்துதிர் கச்சியில் செங்குந்தர் நேர்மைக்**
**கையே. 44**

பொ. ரை:

நெல் மணிகள் முதிர்ந்து முத்துக்களாகி உதிர்கின்ற வளம் நிறைந்த கச்சிப்பதியில் வாழும் செங்குந்தர்களுடைய நேர்மையான கைகள், செல்வம் நிறைந்துள்ள கண்ணபிரான் பாஞ்சாலிக்கு ஆடை அளித்தபோது அருகில் இருந்த செம்மை உடையன; வில்வம் துளசி ஆகியவற்றை முறையே சிவ பெருமான் திருமால் திருவடிகளில் கர்ச்சிப்பன. தம் இல்லத்தில் வந்து யாசிப்பவர்களுக்கு உணவிடுவன.

திருமால் — இங்கு கண்ணன்



**517 நேரார் நடுங்க நெடுவேல் எடுத்த நியமச்செங்கை**
**சூராதி சூரன் படச்சுத்த வீரம் துலங்கு செங்கை**
**பாராதி பார்த்திபர் செங்கோல் நடத்தும் படிசெயுங்கை.**
**தாராளங் கீர்த்தி பெறும்வீர செங்குந்தர் தண்மைக்கையே. 45**

பொ. ரை:

பெரும் புகழ் உடைய வீரசெங்குந்தர்களின் தண்ணிய கைகள், பகைவர்கள் நடுங்குமாறு நெடிய வேலைக் கையில் கொண்ட முறைமை உடையன. சூரத்தன்மை உடைய சூர பதுமன் அழியப் போரிட்ட தூய வீரம் விளங்குவன. பூமியில் உள்ள அரசர்கள் செங்கோலாட்சி நடத்தத் துணைசெய்வன.

(நேரார் — பகைவர்; நியமம் — முறைமை;)

**518 தண்மைத் திருக்கைத் தயவே பொருந்துகை தாட்டிகக்கை**
**வெண்மைக் குடைகவித் திந்திர லோகம் விளங்குசெங்கை**
**பண்மிக்க செந்தமிழ்ப் பாமாலை சூடிய பங்கயக்கை**
**மண்ணுக்குள் கீர்த்தி பெறும்வீர செங்குந்தர் வாசக்கையே. 46**

பொ. ரை:

உலகில் புகழ்பெறுகின்ற வீரசெங்குந்தர்களுடைய மணம் பொருந்திய கைகளே, குளிர்ச்சியும், கருணையும், ஆண்மையும் பொருந்தி இருப்பன. வெண் கொற்றக் குடை பிடித்து தேவ லோகத்தில் இருக்கும் செம்மை உடையன. பண்ணமைந்த செவ்விய தமிழ்ப் பாமாலைகளைச் சூடியன.

**519 வாசா மகோசரம் பெற்றோங்கு செங்கை, மகரச்செங்கை**
**பூசா பலம்பெறும் புண்ணியர் செங்கை புருடச்செங்கை**
**ஆசார யோக்ய அனுபூதி தங்கிய அற்புதக்கை**
**தேசாதி பர்புகழ் செங்குந்த மன்னவர் தீர்க்கக்கையே. 47**

பொ. ரை:

உலக மன்னர்களால் புகழ்ப் பெறுகின்ற செங்குந்த அரசர்களின் தெளிவு பெற்ற கைகள், சொல்லுக்கடங்காத புகழ் பெற்று உயர்ந்து நிற்பன. நிதானம் உடையன, கடவுளரைப்

பூசித்துப் பயன் பெறுவன. ஆண்மை உடையன. ஒழுக்கம் தகுதி அனுபவ அறிவு முதலியன பெற்றன.

(மகரம் — நிதானம்; அனுபூதி—அனுபவ அறிவு; தீர்க்கம்-தெளிவு; வாசா மகோசரம் — வாய்ச் சொல்லுக்கடங்காத.)

**520 தீர்க்கந் திருந்திய செந்தா மரையின்கை செம்பணிக்கை**
**ஏற்கு மிரவலர்க் கிட்டுண்டு கீர்த்தி யெடுத்தசெங்கை**
**கார்த்திகை சேயன் துணைத்தாள் வணங்கிக் கதிபெறுங்கை**
**பார்க்கு ளுயர்திருச் செங்குந்தர் வீரர் பவிசுக்கையே. 48**

பொ. ரை :

உலகில் (புகழால்) உயர்ந்த செங்குந்த வீரர்களின் தகுதி பெற்ற கைகள், தெளிவும் திருத்தமும் உடைய செந்தாமரை மலர் போன்றன. செம்மையான செயல்களைச் செய்வன. இல்லை என வரும் இரவலர்க்குக் கொடுத்துப் பின் உண்டு புகழ் பெற்றன. கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்ட குழந்தையின் (கார்த்திகேயனின்) திருவடிகளை வணங்கி முத்தி பெறுவன.

(பவிசு — தகுதி)

**521 பவிசே பெருகும் பரிபூ ரணக்கை பரன்பரைக்கும்**
**அவிசே தருங்கை அணிமலர் சாற்றலங் காரச்செங்கை,**
**தவசே புரிகுவர் வேள்வி முடிக்கத் தசைதருங்கை**
**புவியே புகழ்திருச் செங்குந்தர் வீரம் பொருந்துகையே. 49**

பொ. ரை :

பூமிபுகழும் திருவுடைய செங்குந்தர்களின் வீரம் பொருந்திய கைகள் தகுதி மிகுதியாகும் முழுமை உடையன; இறைவனுக்கும் இறைவிக்கும் அவி உணவு தருவன, அழகிய மலர்களால் [அவர்களை] அலங்கரிப்பன, தவம் செய்யும் முனிவர்களில் சிலர் தங்கள் யாகத்தை முடிக்க ஊன் தருவதுமான, செயலுடையன.

(அவிசு — வேள்வித்தீயில் இடும் உணவு; தவசு — தவம்: தசை — இறைச்சி; வேள்வி செய்பவர்களில் ஊன் வேள்வி செய்பவரும் சிலர் உளர்.



**522 பொருந்தார் புரத்துக்கு வேல்வாங்கி விட்டுப் பொருதசெங்கை**
**விருந்தாம் இரவலர் தன்கலி தீர்க்கும் விவேகச்செங்கை**
**அருந்தாது பூத்த கடம்பணி திண்புயத் தாண்மைச்செங்கை**
**பெருந்தாரை கீர்த்திப் பிரதாபச் செங்குந்தர்பெற்றிக்கையே; 50**

பொ. ரை :

பெருமையும் ஒழுங்குமுடைய புகழ்பெற்ற செங்குந்தர்களுடைய கைகள் பகைவர்களுடைய நகர் அழியுமாறு வேல் எடுத்து விட்டுப் போர் செய்தன. புதியராக வரும் இரவலரது வறுமையைத் தீர்க்கும் அறிவை உடையன. மிகுந்த மகரந்தம் நிறைந்த கடப்பமலர் மாலை அணிந்த தோளாற்றல் உடையன.

(பொருந்தார் — பகைவர்; கலி — வறுமை; விவேகம் — பகுத்தறிவு; தாது—மகரந்தகம். தாரை—ஒழுங்கு-பெருந்தாரை; — பெருமை + தாரை.)

**523 பெற்றத் தரனுமை பாதச் சிலம்பிற் பிறந்தசெங்கை**
**கற்றோர் தமது கலிநோ யகற்றும் கருணைச் செங்கை**
**பற்றல ராவி பதைக்கப் பரசு படைத்தசெங்கை**
**உற்றவர் செங்குந்தர் ஆண்மைபெற் றோங்கிடும் உண்மைக்**
**கையே. 51**

பொ. ரை:

உபகாரம் செய்யும் செங்குந்தர்களுடைய ஆற்றல் நிறைந்த உண்மைமான கைகளே. இடபத்தை (வாகனமாகவும் கொடியாகவும்) உடைய சிவபெருமானின் துணைவியான உமா தேவியின் திருவடிச் சிலம்பில் தோன்றியன; கல்வி கற்றோரின் வறுமையைத் தீர்ப்பன; பகைவர்களுடைய உயிர் துடிக்குமாறு கோடரி தாங்கியன.

(பெற்றம் - எருது; கலி - வறுமை; பற்றலர் - பகைவர்; பரசு - கோடரி)

**524 உண்ணும் பொழுது விருந்தோ டுணுங்கை யுவகைச்செங்கை**
**பண்ணுந் தமிழ்வலர் தன்கலி மாற்றிய பைந்தருக்கை**
**எண்ணு மெழுத்துந் தெரிந்தே எழுது மினியசெங்கை**
**மண்ணுவிண் ணும்புகழ் செங்குந்த வீரர் வலிமைக்கையே. 52**

பொ. ரை:

மண்ணுலகமும் விண்ணுலகமும் புகழ்ந்து போற்றுகின்ற செங்குந்த வீரர்களின் வலிமை பெற்ற கைகள் உணவு கொள்ளும் போது விருந்தினருடன் கூடியே உண்பன. மகிழ்ச்சியுடையன. தமிழ்வல்லவர் வறுமையை மாற்றுகின்ற பசிய கற்பகத்தரு போன்றன. இலக்கண இலக்கியம் தெரிந்து எழுதும் இனிமை உடையன.

525 **வலிமை அசுரன் முடிசாய வேல்தொட்ட வல்லமைக்கை**
**புலமை செலுத்தும் கவியோர்க்கு வேண பொருள்தருங்கை**
**நிலமை அரிச்சந்த்ரன் மெய்போலும் கீர்த்தி நிலைத்த செங்கை**
**தலைமை நகர்கச்சி வீரவா குவ்வின் தனதுகையே. 53**

பொ. ரை:

(செங்குந்தர் நாட்டுக்குத்) தலைநகரான கச்சிநகரில் உள்ள வீரவாகுதேவரின் (செங்குந்தர்களின்) கைகள்வல்லமை பொருந்திய சூரபதுமன் மணிமுடி கீழே விழும று வேல் விடுத்தஆற்றல் உடையன; கவிபாடுவதில் வல்ல புலவர்களுக்கு வேண்டிய பொருளைத் தருவதும், உண்மை பேசுவதில் அரிச்சந்திரனைப் போன்ற புகழை நிலை நிறுத்துவதும் ஆகிய சிறப்புடையதாகும்.

526 **தனக்கோர் நிகரில்லை என்றவை வேல்கொண்ட சந்தனக்கை**
**சினக்கோபம் ஒன்னலர் மீதேசெலுத்தும் திறமைச் செங்கை**
**புனக்கோ குறவள்ளி காந்த னிருசரண் போற்று செங்கை**
**மனக்கே டிலாதசீர் செங்குந்த வீரர் வளமைக்கையே. 54**

பொ. ரை:

மனத்தில் குற்றமற்ற சிறப்புடைய செங்குந்தவீரர்களுடைய வளம் பொருந்திய கைகள் தமக்கு ஒப்பு வேறெதுவும் இல்லை என்று புகழ்பெற்ற கூர்மையான வேலைக்கொண்டன. சந்தனம் அணிந்துள்ளன. தம் கோபத்தைப் பகைவர் மீதே செல்ல விடுவன. தினைப்புனங்காத்த குறப்பெண்ணாகிய வள்ளியின் கணவனுடைய திருவடிகளைப் போற்றின.



527 **வளமை பொருந்தி வளர்தொண்டை மண்டலம் மன்னுசெங்கை**
**களமே அரிந்து சிரந்தமிழ்க் கீந்த கமலச்செங்கை**
**எழுதா மறையுணர்ந் தின்பச் சிவானந்தம் ஏற்றசெங்கை**
**மொழிமா றிலாதசிர் செங்குந்த வீரர் முதன்மைக்கையே. 55**

பொ. ரை:

சொன்ன சொல் மாறுபடாத சிறப்புடைய செங்குந்த வீரர்களுடைய முதன்மை பெற்ற கைகள், வளம் செறிந்து தொண்டை மண்டலத்தில் நிலைபெற்றிருப்பன. கழுத்தை அரிந்து ஒட்டக்கூத்தர் தமிழுக்குத் தலையளித்தன. எழுதாக் கிளவி எனப்படும் வேதப் பொருளை உணர்ந்து இன்பத்தில் மூழ்கிச் சிவானந்தத்தில் திளைப்பன.

(மன்னும் — நிலைத்திருக்கும்; களம் — கழுத்து.)

இச் செய்யுள் பின்னிரண்டடிகள் இன எதுகை பெற்றன.

528 முதலிய ரென்று மழுவேந்து செங்கை, முனையியற்கை
புதல்வரைத் தேவைப் புகழ்ந்துகொண் டாடிய பூமலர்க்கை
அதல விதல தராதல மேழு மளந்த செங்கை
மதலை வளந்திகழ் கச்சியில் செங்குந்தர் வண்மைக்கையே. 56

பொ. ரை:

கொன்றை மரங்கள் நிறைந்து வளம்பெற்றிருக்கும் கச்சியம்பதியில் உள்ள செங்குந்தருடைய வளமுடைய கைகளே (செங்குந்தரே) முதலியர் என்னும் பட்டத்துக்கு உரியவர் என்று (நாவினால்) நெருப்புத்துண்டு (மழு) ஏந்தின. சிவபெருமானின் புதல்வராகிய முருகனையும், சிவபெருமானையும் புகழ்ந்து கொண்டாடுவன. கீழ் உலகங்கள் எனப்படும் அதல, விதல, சுதல, தராதல, நிராதல, மகாதல பாதாளம் என்னும் ஏழினையும் அளந்து நிற்கும் செம்மை உடையன ஆகும்.

**529 வண்ண உலாமடல் தூதென்று பாவலர் வாழ்த்து செங்கை**
**நண்ணலர் சிந்தை நடுங்கவை வேலினை நாட்டுசெங்கை**
**அண்ணல் திருக்கச்சி ஏகம்பர் செம்பொ னடிதொழுங்கை**
**புண்ணிய வீரசெங் குந்த குலேசர் பொறுமைக்கையே. 57**

பொ. ரை:

புண்ணியமும் வீரமும் உடைய செங்குந்தகுல அரசர்களது பொறுமை உடைய கைகள் இசை வண்ணம் உடைய உலா, மடல், தூது என்னும் நூல்களால் பாவாணர்கள் வாழ்த்துப் பெற்றன. பகைவர் மனம் நடுங்கக் கூர்மையான வேலினைச் செலுத்துவன. கச்சித்திருவேகம்பர் திருவடிகளைத் தொழுவன ஆகும்.

(நண்ணலர் - பகைவர்; வைவேல் - கூர்மையான வேல்; நாட்டும் - செலுத்தும்.)

**530 பொறுமைத் தவமுயர் வேத புராணம் பொருந்து செங்கை**
**சிறுமைக் கவியைப் புலவோர்க் ககற்றும் தினகரக்கை**
**சருவ பிராணிகள் தம்முயிர் போலும் தயாபரக்கை**
**கிருபைக் கடல்திருச் செங்குந்த வீரர் கிளர்ச்சிக்கையே. 58**

பொ. ரை:

கடல் போன்ற கருணை உடைய அழகிய செங்குந்த வீரர்களின் கைகள் பொறுமை, தவம் இவைகளையுடைய உயர்ந்த வேதம், புராணம் போன்றவைகளைத் தாங்குவன. குற்றமுடைய கவிகளைப் புலவர்களிடமிருந்து விலக்கிச் சூரியன் போல ஒளிதருவன. எல்லா உயிர்களையும் தம்முயிர் போலக் காப்பாற்றின கருணை உடையனவுமாகும்.

**531 கிளைக்கும் இரவலர் தங்கட்கும் ஈந்த கெணிதச்செங்கை**
**துளைக்குங் கதிர்வடி வேலால் அசுரைத் தொலைத்தசெங்கை**
**முளைக்கும் பொழுதுசற் கீர்த்திவித் தாய்வந்த மோனச்**
**செங்கை**
**பிள்ளைக்கும் பிரபல வீரசெங்குந்தர் பெருமைக்கையே. 59**



பொ. ரை:

பிள்ளையாகிய முருகனுக்குரிய வீரர்களாகிய செங்குந்தரின் பெருமையுடையகையே உறவினருக்கும் இரப்போர்க்கும் கொடுத்து மகிழ்வன. துளை செய்யும் கூர்மையான ஒளிவிடும் வேலைக் கொண்டு அசுரர்களை அழித்தன. தோன்றுகின்ற பொழுதே நல்ல புகழுடன் கூடிய அறிவுவடிவான வித்தாக இருப்பன, எல்லோருக்கும் விளங்கித் தோன்றுவன ஆகும்.

('தோன்றிற் புகழொடு தோன்றுக'—என்ற திருவள்ளுவர் வாக்கையும், 'மோனம் என்பது ஞான வரம்பு'—என்ற ஔவையார் கூற்றையும் எண்ணுக. பிளை — பிள்ளை.)

**532 பெருந்திரு உற்றகை பேதைமை அற்ற பிரமச்செங்கை**
**தருந்திரு அட்டச் சவுபாக் கியம்பெற்ற சம்ப்ரமக்கை**
**குருந்திருந் தோங்கும் திருப்பாண்டிச் சொக்கரைக்கூப்பு**
**செங்கை**
**விருந்திருந் தன்னம் புசிக்குஞ் செங்குந்தர் விளங்குங்கையே. 60**

பொ. ரை:

விருந்தினரை எதிர் நோக்கி இருந்து அவர்களுடன் உண வருந்தும் செங்குந்தர்களுடைய விளக்கம் பெற்ற கைகள் பெரிய செல்வம் படைத்துள்ளன; அறியாமை நீங்கிய படைப்புத் தொழில் உடையன. எட்டுவகைச் செல்வங்களைப் பெற்ற மகிழ்ச்சி உடையன; குருந்த மரத்தினடியில் இருந்து மணிவாசகர்க்கு அருள் செய்த பெருமைமிக்க திருப்பாண்டி நாட்டுச் சொக்கநாதப்பெருமானை வணங்குவனவுமாகிய செயல்களை உடையன.

(பேதமை — அறியாமை; பிரமச்செங்கை — படைத்தல் தொழில் செய்யும் சிவந்த கை; அட்டசவுபாக்கியம் — அஷ்ட ஐசுவரியம்; சம்ப்ரமம் — மகிழ்ச்சி; குருந்து — குருந்தமரம்; 'செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான் நல்விருந்து வானத்தவர்க்கு' என்னும் குறள் விளக்கமாக வாழ்ந்தவர் செங்குந்தர் என்பது கருத்து.)

533 விளங்கும் குருகு துசமயில் விற்படை வேண்டுசெங்கை
களங்க மகற்றிக் கனவீர வாகு கதிர்த்தசெங்கை
கொளுங்கனி முத்தமிழ் கூர்வாணர் தன்கலி கோபச்செங்கை
இளங்கும ரேசர் நவவீர செங்குந்தர் ஈட்டிக்கையே. 61

பொ ரை :

குமரக் கடவுளுக்கு இளையவர்களாகிய நவவீர செங்குந்தர்களுடைய ஈட்டியைத் தாங்கிய கைகள் விளக்கம் பெற்றுள்ள சேவல்கொடி, மயில், விற்படை முதலியவைகளை விரும்பி ஏற்பன. குற்றம் நீக்கிய பெருமையுடைய வீரவாகுத் தேவரிடம் ஒளியுடன் விளங்குவன. முக்கனி போன்ற முத்தமிழ் வாணர்களுடைய வறுமையைக் கோபிப்பனவாய் வறுமையை நீக்குவன ஆகும்.

(கனம் — பெருமை; கதிர்த்தல் — ஒளிவீசுதல்; கூர்தல் — மிகுதல்.)

534 ஈட்டி எழுபதும் பாமாலை தங்கும் இயற்கைச் செங்கை
வேட்டால் முதற்பஞ்ச தானங் கொடுக்கும் விரைமலர்க்கை
காட்டகந் தன்னையும் நாடாக்குஞ் செங்கை கதிர்மணிக்கை
பாட்டியல் பேசிய செங்குந்த வீரர் பதுமக்கையே. 62

பொ ரை :

பாட்டியல் என்னும் செய்யுள் இலக்கண நூலைச் செய்த செங்குந்த வீரர்களுடைய தாமரை மலர் போன்ற கைகளே, ஈட்டி எழுபது என்னும் பாமாலையைத் தாங்கிக் கொண்டிருப்பன. திருமணம் செய்து கொண்டது முதல் பஞ்ச தானங்களைச் செய்வன. காடுகளையும் நாடாகத் திருத்தும் சிவந்த அழகிய ஒளி பெற்ற சிறப்புடையன.

(வேட்டல் — திருமணம் செய்தல்; பஞ்சதானம் — தேவ யாகம், பிரமயாகம், பிதிர்யாகம், மானுடயாகம், பூதயாகம் என்பன. வேள்வியைத் தானம் என்கிறார். இது இல்லறத்தார் செய்ய வேண்டிய ஐம் பெரும் வேள்வி எனப்படும்.)



535 பதினொருகோடி உருத்திர வீரம் படைத்தசெங்கை
பதினிரு வான வயிரவர் சூலம் படைத்த நற்கை
பதினிரு செங்கைக் குமரனைப் போற்றிப் பணிந்தசெங்கை
பதினிரு கச்சி நவவீர செங்குந்தர் பட்சக்கையே. 63

பொ. ரை :

பன்னிருதிருப்பெயர்கள் உடைய காஞ்சியில் வாழும் நவவீர செங்குந்தர்களுடைய கைகள், பதினோரு கோடி உருத்திரர்களின் வீரத்தைச் சேரப் பெற்றன. பன்னிரண்டு வயிரவர்களின் சூலாயுதத்தைத் தாங்கிய நன்மையுடையன. பன்னிரு கரம் கொண்ட முருகப் பெருமானைப் போற்றி வணங்கின.

536 பட்சணஞ் சாட்சிப் பயத்தோ டருந்தும் பரிமளக்கை
தட்சகன் யாகம் செகுத்துக் கைலையைச் சார்ந்தசெங்கை
புட்சினம் ஏறும் திருமாற் கடிமை புரிந்தசெங்கை
எட்சணி வாழ்கச்சி வீரசெங் குந்தர் இணையில்கையே. 64

பொ. ரை :

எட்சிணி என்னும் தேவப் பெண் வாழுகின்ற கச்சியம் பதியில் வாழுகின்ற வீரமுள்ள செங்குந்தரின் இணையற்ற கைகள் பட்சணங்களைத் துணையுடன் (விருந்துடன்) உண்ணும் மணம் பெற்றன தட்சன் செய்த யாகத்தை அழித்துக் கைலை மலைக்குச் சென்றடைந்தன. கருடவாகன மேறும் திருமாலுக்குத் தொண்டு செய்யும் பெருமையுடையன

பரிமளம் — மணம், தட்சனை, 'தட்சகன்' என்றார் செகுத்து — அழித்து; அடிமை — தொண்டு, எட்சணி - தேவப் பெண் (இவள் குபேரன் மனைவி என்றும் சொல்லப்படுவாள்.)

537 இணக்கம் அறிந்திணங் கென்றேசொல் வைத்தகை
யாழிசைக்கை
பிணக்கை விலக்கப் பெருவேல் எடுத்த பெல்முள(க்)கை
கணக்கு வகைதொகை காணரி தாம்புகழ் கைக்கொளுங்கை
துணைக்குள் அதிக துணைவீர செங்குந்தர் சுத்தக்கையே. 65

பொ. ரை :

எண்ணற்ற நல்ல துணைவர்களைப் பெற்ற வீர செங்குந்தர்களுடைய கைகளே 'இணக்கம் அறிந்து இணங்கு' என்று கூறிய ஔவை சொல்லைக் கடைப் பிடித்தன. யாழிசைக்க வல்லன. நெறிமுறையில் மாறுபட்டவர்களைத் தவிர்ப்பதற்காகப் பெரிய வேலாயுதத்தை எடுத்த வலிமையுள்ளன. சுணக்கு வழக்கற்ற, அளவுகாண இயலாத புகழைக் கைக் கொண்டன.

(பிணக்கு — சண்டை; வகை தொகை — (பேச்சுவழக்குச் சொல், வழிமுறை.)

538 சுத்த சிவசைவ சண்முகர் பின்பிறந் தோங்குசெங்கை
சித்தி அறுபத்து நான்கும் புரிந்த சிரவணக்கை
எத்திசை கீர்த்தி விளங்கும் திருக்கை இதந்தருங்கை
பத்தி தருங்கச்சி வீரசெங் குந்தர் பருவக்கையே. 66

பொ. ரை :

பக்தி நெறியை அருளுகின்ற கச்சியம் பதியில் வாழும் வீரம் பொருந்திய செங்குந்தர்களுடைய சமயமறிந்து உகவும் கைகளே தூய்மையான சிவபெருமானிடத்து உற்பவித்த சண்முகருக்குப் பின்னர்த் தோன்றி உயர்ந்திருப்பன. அறுபத்து நான்கு திருவிளையாடல்களையும் விரும்பிக் கேட்டன. எல்லாத் திசைகளிலும் புகழ் பெற்று விளங்குவன. நன்மைகளைத் தருவன.

(சிரவணம் — கேள்வி. இதம் — நன்மை.)

539 பருக்கையில் வச்சிரம் வைடூரி யத்தைப் படைத்தசெங்கை
குருக்கிளர் மாணிக்கம் கோமே தகம்குளிர் நீலச்செங்கை
செருச்செயும் போது மருவலர் பச்சைத் திறஞ்செயுங்கை
மருப்புகள் முத்து மணியணி குந்தர் மலர்ப்பொன்கையே. 67

பொ. ரை :

யானைத் தந்தம் முத்து புட்பராகம் போன்றவைகளை அணியும் செங்குந்தர்களுடைய மலர் போன்ற பொன்மயமான கைகளே (பயனற்ற) பருக்கைக் கல்லில் இருந்து வயிரம் வைடூரியம் முதலியவற்றை உண்டாக்கும் திறமை உடையன. ஒளி வீசுகின்ற மாணிக்கம், கோமேதகம், குளிர்ச்சிபொருந்திய நீலம் முதலியவற்றை உடையன போரிடும் போது பகைவர்களை பச்சை (தோல்) ஆக்குவன.



(குரு— ஒளி; செரு — போர்; மருவலர் — பகைவர்; மருப்பு —(யானைத்)தந்தம்; மணி என்பதற்குப் புட்பராகம் எனக் கொள்ளப் பட்டது, நவரத்தினங்களில் அதுகுறைவது நோக்கி. பச்சை — தோல் (சிலேடை.)

540 மலர்ப்பொன்னை மார்பகஞ் சேர்க்குந் திருக்கை வடிவுள்கை
அலர்க்கடம்(பு) ஆரம் புயமீ தணியும் அமுதச்செங்கை
பலர்க்குப காரம் படைத்த திருக்கை பரவசக்கை
இலக்கம் பொருந்து நவவீர செங்குந்தர் இச்சைக்கையே. 68

பொ. ரை :

இலக்கம் வீரர்களுடன் சேர்ந்திருக்கின்ற நவவீரர்களாகிய செங்குந்தர்களின் விருப்பத்துக்குரிய கைகளே (சூரபதுமனால் அஞ்சிவாழ்ந்த தேவர்களின் அச்சம் நீக்கிப் பழமைபோலத்) தாமரை மலரில் உறையும் திருமகளைத் திருமாலின் மார்பில் சேர்த்து வைத்தன. அழகுடையன. கடப்பமலர் மாலையைத் தோளில் அணிவன. அனைவருக்கும் உபகாரம் செய்வன. பரவசமாகி மகிழும், பெருமை உடையன.

(பொன் — திருமகள்; பரவசம் — தன்னை மறந்த நிலை. வடிவு — அழகு )

541 இச்சகம் பாடிய லோபரைப் பாடா திருத்தசெங்கை
பிச்சுத் தமிழர் தலையரி கூத்தன் பிரபலக்கை
பச்சைப் பிடிமடப் பாவையர் லீலை பழகுசெங்கை
உச்சிதக் கீர்த்தி யுடையார்செங் குந்தர் உரிமைக்கையே. 69

பொ. ரை :

உயர்ந்த புகழுடைய செங்குந்தரின் உரிமையுடைய கைகளே, மேலுக்கு இனிய வார்த்தைகளைக் கூறிய கருமிகளைப் பாடாது அவர்களை அழித்தன. அரை குறைப் புலவர்கள் தலைகளை அரிந்த சிறப்புடையன. உண்மையான பெண்யானை

போன்ற இளம் பெண்களுடன் விளையாடல் புரியும் செயல்களையுடையனவாகும்.

லோபர் — உலோபர் — கருமிகள். இறுத்தல் - அழித்தல்; பச்சை — அசல்; பிடி—பெண் யானை: வீலை — விளையாட்டு; உச்சிதம் — உயர்வு;

542 உருமெனச் சீறி மருவார்முன் வேலினை ஓங்குசெங்கை
தருவெனத் தோன்றித் தரணி தழைக்கத் தயைபுரிகை
முருகனைக் கச்சி முதலியைக் கூப்பி முடியுயர்கை
அருகனைப் போலும் சுடர்வீசு குந்தர் அருணக்கையே. 70

பொ. ரை :

சூரியனைப் போல ஒளி வீசுகின்ற செங்குந்தர்களுடைய சிவந்தகைகளே இடிபோல முழங்கிப் பகைவர்களுக்கு முன்னே வேலை உயர்த்துவன. கற்பகத்தரு போல உலகில் விளங்கி, இந்த உலகம் செழிக்க அன்பு செய்வன. முருகப் பெருமானையும், காஞ்சிபுரத்துக்கு முதல்வராக உள்ள திருவேகம் பரையும் வணங்கி முடிசூடி உயர்வனவாகும்.

(தரு — (கற்பக) மரம்; முதலி — முதல்வன்; அருக்கன் — சூரியன்; இஃது 'அருகன்' என வந்தது அருணம் — சிவப்பு.)

543 அருணா சலம்கச்சி அம்பலம் காசி அருள்பெறும் கை
பெருநா வலர்க்குப் புயல்போல் கனகத்தைப் பெய்தசெங்கை
கருணா கரக்கை கதிர்வேல் தரித்த கமலச்செங்கை
தருணாதி வீரசெங் குந்த குலேசர் தடக்கைக்கையே 71

பொ. ரை :

தக்க சமயத்தில் உதவும் பெருவீர முடைய செங்குந்த குல அரசர்களுடைய விசாலமான கைகளே, திருவண்ணாமலை, காஞ்சிபுரம், தில்லையம்பலம், காசி முதலிய தலங்களைத் தொழுது திருவருள் பெறுவன. உயர்ந்த நாவன்மை உடைய புலவர்களுக்கு மேகம் மழை பொழிவது போலப் பொன் மழை பொழிவன. கருணைக்கு இருப்பிடமாக உள்ளன, ஒளி வீசுகின்ற வேலைத் தாமரைபோன்ற கையில் தாங்கின.



(புயல் — மேகம்; கனகம் — பொன்; கருணாகரம் — கடல், கருணா + ஆகரம்; ஆகரம் — இருப்பிடம். தருணம் — உரிய சமயம்; குலேசர் — குல + ஈசர் — வட சொற்புணர்ச்சி.)

544 தடக்கைக் கரிமுகத் தானுக்குக் குட்டுத் தலைக்கொளுங்கை
படைக்கே வயிர வடிவேல் பிடித்த பராக்ரமக்கை
துடைக்கும் திதிசிட்டி நிக்ர அனுக்ரகம் தோன்றுசெங்கை
நடக்கும் பெரும்புகழ் செங்குந்த வீரர்கள் ஞானக்கையே. 72

பொ. ரை :

பெரும் புகழுடைய செங்குந்த வீரர்களின் அறிவுதுலங்கும் கைகள், பெரிய [துதிச்]கையையுடைய விநாயகப்பெருமானுக்கு எதிரில் தலையில குட்டிக்கொள்ளுவன ஆயுதங்களுள் உறுதியான கூரிய வேலைத் தரித்த ஆண்மை உடையன. படைத்தல் முதலாகிய ஐந் தொழில்களைச் செய்வன ஆகிய சிறப்புக்களைப் பெற்றனவாகும்.

[தட - பெரிய; 'வளைந்த' என்றும் ஆம்; கரி- யானை: வயிரம் - உறுதி, திண்மை; பராக்ரமம் - வீரம், ஆண்மை; துடைத்தல் - அழித்தல்; திதி - காத்தல்; சிட்டி - படைத்தல்; நிக்ரகம் - மறைத்தல்; அனுக்கிரகம் - அருள் செய்தல்; இந்த ஐந்தொழில்கள் வட மொழியில் ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம், திரோபவம், அநுக்ரஹம் என்று கூறப்படும்.

முருகப்பெருமானுக்குரிய ஐந்தொழில்கள் இங்கே செங்குந்தர்களுக்குக் கூறப்பட்டன.]

545 ஞானம் சரியை கிரியைநல் யோகம் நடத்துசெங்கை
மானாபி மானம் வளர்க்குந் திருக்கை வரன்முறைக்கை
தேனபி டேகந் திருக்கம்ப நாதர்க்குச் செய்திடுங்கை
தான தருமங்கள் காட்டுஞ்செங் குந்தர் தமதுகையே. 73

பொ. ரை :

தான தருமங்களைச் செய்யும்செங்குந்தர்களுடைய கைகள், [இறைவனை அடையும் படி முறைகளாகிய] சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கு நிலைகளையும் செயல்படுத்துவன. மான அபிமானங்களை வளர்ப்பன. சிறந்த வரன்

முறைகளைப் பின்பற்றுவன. திருவேகம்பப் பெருமானுக்குத் தேனபிடேகம் செய்வது முதலிய செயல்களை உடையனவாகும்.

[மானம் — தன்மதிப்பு; அபிமானம் — பற்று; வரன் முறை மரபு முறை; தானம்—உயர்ந்தோர்க்குத் கொடுத்தல்; தருமம்— எளியவர்க்கு ஈதல்.

**546 தமர்க்கும் இரவலர் தங்கட்கும் கேட்ட தனம் தருங்கை**
**அமர்க்குள் அடையலர் வெம்பு மதிரி அயில்தொடும்கை**
**கமர்க்குள் எறிந்த மணிபோல் பவத்தைக் கடிந்தசெங்கை**
**சுமக்கும் பெரும்புகழ் செங்குந்த வீரர் துணிவுக்கையே. 74**

பொ.ரை :

பெரும் புகழைத் தாங்கும் செங்குந்த வீரர்களின் துணிவு கொண்ட கைகள். தம் உறவினர்க்கும், யாசிப்பவர்களுக்கும் அவர்கள் கேட்டவாறு பொருள் கொடுப்பன. போரெனில் பகைவர்கள் அதிர்ச்சி அடைந்து வாட்டமடையும்படி வேல் விடுவன. பூமியின் வெடிப்பில் வீசி எறிந்த மணி திரும்ப வாராததுபோல, பிறவியைத் திரும்ப வாராமல் விலக்கும் செயலுடைய பெருமைக்குரியனவாகும்.

[அடையலர் — பகைவர்; வெம்பும் — வாட்டமடையும்; அதிரி—அதிர்ந்து; கமர் — வெடிப்பு; பவம் — பிறப்பு. கடிதல் நீக்குதல், விலக்குதல்.]

**547 துணிவையும் காட்சித் துரைமாதர் பாலில் தொடங்குசெங்கை**
**மணிபெயும் செங்கை மழைபோலும் செங்கை மலைக் குகன்தாள்**
**பணிசெயும் செங்கை பகைவே ரறுக்கப் படைதொடுங்கை**
**அணிமெயில் பூதி அணியுஞ் செங்குந்தர் அழகுகையே 75**

பொ. ரை:

அழகிய உடம்பில் விபூதி அணியும் செங்குந்தர்களின் கைகளானவை அழகிய அரச மகளிர் இருப்பிடத்திற்கும் சென்று செயலாற்றுவன; மாணிக்கங்களை மழைபோலக் கொடுப்பன; குன்றுகளில் கோயில் கொண்ட முருகப் பெருமானுக்குத் தொண்டு செய்வன; பகைவர்களை வேருடன் களைய ஆயுதங்களைக் கொள்ளும் செயல்களுடையனவாகும்.

(துரைமாதர் — அரசகுலப்பெண்கள் (இது பிற்கால வழக்கு) அணிமெயில் — அழகிய (மெய்யில்) உடம்பில்.



**548 அழகா பரணம் அணியும் திருக்கை அருந்துதிகண்(டு)**
**அழகாம்என் றெண்ணுவர் என்றே கவிகை யணிமணிக்கை**
**அழகார் மதனை உருவிலி யாமென் றகற்றுசெங்கை**
**அழகான கச்சி நவவீர செங்குந்தர் அன்புக்கையே. 76**

பொ. ரை:

அழகிய கச்சிநகரில் உள்ள நவவீரர் வழிவந்த செங்குந்தர் களின் அன்புடைய கைகளானவை அழகிய ஆபரணங்களை அணிவன. (பிறர் தம்மைப்புகழும்) புகழ்மொழிக்கு நாணி, தம்மை மறைப்பது போலக் குடைபிடிப்பன. அழகு மிக்க மன்மதனை அவன் உருவமில்லாதவன் (இகழ்வதற்குரியவன்) என்று விலக்குவனவாம்.

(மன்மதனை உருவிலி என்று அகற்றுவர் என்பதனால், பெண்ணின்பத்தைப் பொருட்படுத்த மாட்டார் என்பது கருத்து.)

**549 அன்பார்ந்த மின்னனார்க் காதாரச் செங்கை, அடையலர்கள்**
**பின்பார்த்தும் ஏகப் பெருவேல் தொடுக்கும் பெருமைச்செங்கை**
**தன்பாரம் பாரமென் றெண்ணாமல் ஏனையர்த்தாங்குசெங்கை**
**பொன்பார் புகழ்திருச் செங்குந்த வீரர் புனிதக்கையே. 77**

பொ. ரை:

பொன்போன்ற, உலகம் புகழும் செங்குந்த வீரர்களின் புனிதமான கைகளானவை தம்மீது அன்பு கொண்ட பெண் களை ஆதரித்துக் காப்பாற்றுவன, பகைவர்கள் நேரில் நிற்காமல் முதுகு காட்டி ஓடுமாறு பெருமையுடைய வேல் செலுத்தும் பெருமிதம் உடையன. தம்முடைய துன்பங்களைப் பெரிதாகஎண்ணாமல் மற்றவர்களுக்கு உதவிசெய்து காப்பன.

**550 புனுகு களபக் குழம்புசிந் தூரம் புனைதிருக்கை**
**நனுகு மெலியர் நலியாமல் காத்து நலந்தருங்கை**
**அனுகுல வீடு அறம்பொரு ளின்பம் அமைந்தசெங்கை**
**தனுகுண பேதமொன் றில்லாத செங்குந்தர் சாந்தக்கையே. 78**

பொ. ரை:

பிறப்பால் உயர்வு தாழ்வு பாராட்டாத செங்குந்தர்களுடைய அமைதி நிலவும் கைகளானவை புனுகு, சந்தனம், சிந்தூரம் ஆகியவைகளை அணிவன, தம்மை வந்து ஆதரவாகப் பற்றும் வறியவர்களைக் காப்பாற்றி நன்மை செய்வன, அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப் பயன்களை மற்றவர் அடைய உதவும் சிறப்புக்களை உடையனவாகும்.

(தனு—உடம்பு; பேதம்—வேறுபாடு; தனு குண பேதம்—பிறப்பால் உண்டாகும் ஏற்றத்தாழ்வு) 'நணுகு' என்பதுஎதுகை நோக்கி, 'நனுகு'- என வந்தது.

**551 சாந்து கத்தூரி பரிமளம் பூசும் தடம்புயக்கை**
**வேந்தர் எதிர்நின்று வீரம் செலுத்தும் விசயச்செங்கை**
**ஆய்ந்த புலவர் கலிநோய் அகற்றி அனந்தருங்கை**
**மாந்தர் எணின்மிக்க செங்குந்த வீரர் மணச்செங்கையே.** 79

பொ. ரை :

எங்கும் எண்ணிக்கையில் மிக்குள்ள செங்குந்த வீரர்களின் மணம்மிக்க கைகளானவை சந்தனம் கத்தூரி முதலிய மணப் பொருள்களை அணிவன. அரசர்களுக்கு முன்னே இருந்து தங்கள் வீ ர த் தை த வெளிப்படுத்தும் வெற்றியுடையன. நூலாராய்ச்சி மிக்க புலவர்களின் வறுமையை அகற்றி உண விடுவன.

[கலிநோய் — வறுமைத் துன்பம்; அனம் — அன்னம்-உணவு.]

**552 மணநாறுஞ் சண்பகம் சாதி மருவு மணந்த செங்கை**
**குணவீறு கொள்ளு மருவலர் வில்லைக் குனித்தசெங்கை**
**பணமாறு கொண்டிட்ட லோபரைக் காயும் பரசுசெங்கை**
**துணைவீர வாகு சுதராம்செங் குந்தர் சுமுகக்கையே.** 80

பொ. ரை :

முருகப் பெருமானின் துணைவரான வீரவாகுத் தேவரின் மரபில் தோன்றிய செங்குந்தர்களுடைய இனிமைதரும் கைகளானவை மணம் வீசுகின்ற சண்பகம், பிச்சிப்பூ, மருக்கொழுந்து முதலியவற்றை அணிவன, தம்மைப் புகழ்ந்து கொள்ளும் பகைவர் வில் வளைத்தது வளைந்தே போகச் செய்வன. பணத்தைச் சேர்த்துக் காத்து வைக்கும் கருமிகளை அழிக்கக் கோடரி தாங்குவன.



[சாதி - பிச்சிப்பூ, குணவீறு - தற்பெருமை; மருவலர் - பகைவர்; காய்தல் - வெறுத்தல், அழித்தல்; பரசு - கோடரி. சுதர் - மக்கள்; சுமுகம் - இனிமை.]

**553 முகம்பார்த் திரப்பவர் கைபார்த்துக் காக்கும் முறமைச்செங்கை**
**அகம்பாக்கும் சிந்தை அடையலர் வீறை அடக்குசெங்கை**
**சுகம்போற் குயின்மொழி மங்கையர்க் கின்பத் தொழிற் சொலுங்கை**
**செகம்போற்றும் செங்குந்தர் தாளாண்மை பற்றிய செல்வக்கையே.** 81

பொ. ரை -

உலகம் போற்றுகின்ற முயற்சியை உடைய செங்குந்தர்களின் கைகளானவை தமமைப் பார்த்து யாசிப்பவர்களுடைய முகத்தைப் பாராமல் பொருள் நிரம்புகின்றதா என அவர்களுடைய கைகளைப் பார்த்து வழங்கும் முறைமை உடையன, கர்வம் கொள்ளும் பகைவர்களின் பெருமையை அடக்குவன. இனிய குயில் மொழி போன்ற சொல்லுடைய பெண்களுக்கு இன்பம் விளைக்கும் செயல்களைக் கூறி மகிழ்விப்பன.

[முறைமை - நீதி; அகம் பார்க்கும் - தம்மையே எண்ணும், கருவம் கொள்ளும்.]

**554 செல்வந் துதிக்கும் கறைமிடற் றன்கழல் தேடுசெங்கை**
**சொல்வந் துதிக்கும் தமிழ்வாணர்க் கன்பு துலங்குசெங்கை**
**மல்வந் துதிக்கில் வடிவே லெடுக்கும் வலிமைச்செங்கை**
**கொல்வந்த பேரைக் குணமாய் அணைக்குஞ் செங்குந்தர்கையே.** 82

பொ. ரை :

தம்மைக் கொல்ல வந்தவர்களிடத்தும் அன்பு காட்டி அவர்களை ஆதரிக்கின்ற தன்மையுடைய செங்குந்தர்களின்

கைகளானவை மேகம்போலும் கருநிறமுடைய கழுத்தினனான சிவபெருமான் திருவடிகளைத் தேடிப் பணிவன, இனிய சொற்களால் கவிபாடும் புலவர்களிடத்தே அன்புகாட்டு வன, போர் என்று வந்தால் கூரிய வேலைக் கையிலெடுக்கும் ஆற்றல் உடையன.

(செல் — மேகம்; செல்வந்து உதிக்கும் — மேகம் போன்று கருத்துத் தோன்றும்; மிடறு — கழுத்து; கறைமிடறு — நீலகண்டம்; மல் — மற்போர், இங்கு போர் என்று கொள்ளப் பட்டது.)

**555 குந்தம் எடுத்தசு ராரைக் கடிந்த கொடூரச் செங்கை**
**சிந்து கவிப்பிர சங்க வினோதஞ் சிறந்தசெங்கை**
**கொந்தலர் போற்று கடம்பார் தடம்புயங் கொண்டசெங்கை**
**சந்த வீர செங்குந்த குலேசர் தருமக்கையே.** 83

பொ. ரை :

செங்குந்த குலத் தலைவர்களின், தருமத்தையும் வீரத்தையும் நாள்தோறும் வளர்க்கின்ற கைகளானவை கைவேலை எடுத்து அசுரரை அழித்த செயலுடையன, பாடலும் பொருள் விளக் கமும் கூறுகின்ற அழகுடையன. பிறரால் போற்றப் படுகின்ற கொத்தாக மலர்ந்துள்ள கடப்ப மாலையை யணிந்த விசால மான தோள்களையுடையன வாகும்.

(கொடூரம் — கடுமை; வினோதம் — வியப்பு. கொந்து— (மலர்க்) கொத்து.)

**556 தருமக் கருத்த ரெனப்புக ழோங்கும் தயாளச்செங்கை**
**உரிமைக் கவிஞர் கொடுங்கலி தீர்க்கும் உதாரச்செங்கை**
**செருவில் பிறருயிர் தென்திசைக் கோனிடஞ் சேர்த்தசெங்கை**
**மருவுற்ற கீர்த்தி நவவீர வாகு வனசக்கையே.** 84

பொ. ரை :

புகழ் மணம் வீசும் வீரவாகுத்தேவர் முதலிய நவவீரர் (வழிவந்த செங்குந்தர்களின்) தாமரை மலர் போன்ற கைகளா னவை, தருமம் செய்யும் கருத்துடையவர் என்று மேம்பட்ட புகழுடன் கூடிய கருணை உடையன. கவிக்குரிமையுடைய புலவர்களின் கொடிய வறுமை நோய் தீர்க்கும் கொடை உடையன. போர்க்களத்தில் பகைவர் உயிரை இயமனிடம் சேர்க்கும் வீரமுடையன ஆகும்.



(உதாரம் — கொடை; தென்திசைக்கோன் — தெற்குத் திசைக் கதிபதியாகிய இயமன். வனசம் — வனம் + ஜம் — வனம் — நீர். ஜம் — ஜனிப்பது — தாமரைக்குக் காரணப் பெயர்.)

**557 வனசத் திரரிஷி மார்க்கண்டன் வேள்வி வளர்க்குஞ் செங்கை**
**சொனசத் தியமொழி மாறா விரதச் சுகிர்தச்செங்கை**
**கனசத்தி யம்புதொட் டொன்னார் சிரத்தைக் கலக்குசெங்கை**
**தனசத்தி மிக்க நவவீர வாகு தலைமைக்கையே.** 85

பொ. ரை :

பொருள் பலம் மிக்க நவவீரரில் தலைமைபெற்ற வீரவாகுத் தேவரின் (செங்குந்தரின்) கைகளானவை காட்டில் மார்க்கண்டேயர் முதலானோர் செய்கின்ற வேள்வியைக் காத்து வளரச் செய்வன. சொன்ன உண்மையில் இருந்து மாறாத விரதத்தை மேற்கொண்ட நற்செயல் உடையன. பெருமை மிகுந்த சத்தியாயுதம் எடுத்துப் பகைவர் சிரத்தைக் கலக்க முறச் செய்வன ஆகிய பெருமைகளை உடையனவாகும்.

(சொன — சொன்ன — இடைக்குறை; சத்தியமொழி — உண்மை வார்த்தை; கிர்தம் — செயல்; சுகிர்தம் — நற்செயல்; சத்தியம்பு — சத்தியாயுதம் என்னும் படைக்கலன்: தனம் — செல்வம்; தனசத்தி — பொருள் பலம்.)

(சத்திரம் என்பது குடை எனப்பொருள் தரும். வனத்தைக் குடைபோலக் கொண்டு உலவிய மார்க்கண்டேயர் என்பதாம்.)

**558 தலமிக்க கச்சி தருமகர்த் தாப்பணி தாங்குசெங்கை**
**புலமைத் தமிழ்வலர் எந்நாளும் வாழ்த்திப் புகழ்ந்தசெங்கை**
**கலகச் செருக்கண்டு திண்புய வீரம் கதித்தசெங்கை**
**நலமுற்ற செங்குந்த வேலவர் கீர்த்தி நடத்துங்கையே.** 86

பொ. ரை :

நன்மையுடைய, கைவேல்கொண்ட, செங்குந்தர்களின் புகழைச் செலுத்துகின்ற கைகளானவை தலங்களில் உயர்ந்த கச்சிநகரில் தருமகர்த்தர் பணி ஏற்றுச் செய்வன. தமிழில் வல்ல புலவர்களால் எந்நாளும் வாழ்த்திப் புகழப் பெறுவன, கலகத்தினால் ஏற்படும் போரைக் கண்டு வலிய தோளாற்றலால் எழுச்சி அடைவன ஆகிய பெருமைகளை உடையனவாகும்.

(கலகச் செரு — கலகத்தால் உண்டாகும் போர்; திண்புயம் — வலிய தோள்; கதித்தல் — எழுச்சி அடைதல்.)

**559 நடனப் பரமன் கயிலாயங் காத்த நளினச்செங்கை**
**திடனத் தருங்கம்பை மாநதி வாய்த்தவஞ் செய்செழுங்கை**
**தொடெனத் தொடும்படி நற்றொண்டை நாளும் தொடர்ந்த செங்கை**
**இடனத் தியகச்சி வேல்வீர வாகு இனியகையே. 87**

பொ. ரை :

அழகிய இடமகன்ற கச்சியிலுள்ள வேலைத்தரித்த வீரவாகுத் தேவரின் (செங்குந்தரின்) இனிமையுடைய கைகளானவை திருநடனம் செய்கின்ற பரமசிவன் வீற்றிருக்கும் கைலைமலைக்குக் காவல் பூண்ட அழகுடையன. திட்டுகள் நிறைந்த அரிய கம்பையாற்றில் தவம் செய்வன, நாள்தோறும் மாலை போலத் தொடர்கின்ற நல்ல தொண்டுகளைச் செய்வன ஆகிய பெருமைகளை உடையனவாகும்,

(நளினம் — அழகு. தாமரை; திடல் நத்து அருங்கம்பை— மணல் திட்டுக்கள் உடைய கம்பாநதி; நதிவாய் — ஆற்றின் கரையில்; தொடென — தொடு + என—(என— உவம உருபு.)

**560 இனிது கொடுக்கும் கடம்பார மார்பின் இசைத்தசெங்கை**
**புனித மரகத மாயூர வான்பரி பூட்டுசெங்கை**
**தனுவ தெடுத்துத் தடத்தந் திகந்த சதுரச்செங்கை**
**கனகக் குருகு த்வசவீர வாகு கருணைக்கையே. 88**



பொ. ரை :

பொன் மயமான சேவற் கொடியைத் தாங்கிய வீரவாகுத் தேவரின் கருணை மிகுந்த கைகளானவை, கடப்பமலர் மாலையை மார்பில் இனிமையாக அணிந்துள்ளன, தூய்மை உடைய பசுமையான மயில் வாகனத்தைச் செலுத்துவன, வில்லை எடுத்துப் பெரிய யானையையும் வென்ற திறமை உடையன ஆகிய பெருமைகளை உடையனவாகும்.

(கடம்பு + ஆரம் — கடப்பமாலை; இசைத்தல் — அணிதல்; வான்பரி — உயர்ந்த குதிரை (வாகனம்) தனு — வில்; தடத் தந்தி — பெரிய யானை; 'தந்தி' என்பதன் ஈற்று இகரம் தொகுக்கப்பட்டது சதுரம் — திறமை.)

**561 கருணா கலையன் முரசே அறையும் கமலச்செங்கை**
**தருணாதி யாக முரசு புலவர்க்குச் சாற்றுசெங்கை**
**அருணேசர் கம்பர் திருவெழுத் தஞ்சுசொல் லானசெங்கை**
**பொருணேசன் கீர்த்தி புகழ்தேறுஞ் செங்குந்தர் பொற்புக்கையே. 89**

பொ. ரை :

பொருளில் குபேரனுக்கு இணையான புகழை உடையசெங்குந்தர்களின் அழகிய கைகளானவை, கருணை உள்ளவனும், கலைகளில்தேர்ந்தவனுமான அரசனுக்காசமுரசறையும் தாமரை போன்றன. தக்க சமயத்தில் புலவர்க்காகத் தியாகமுரசறைவன. அருளைப் புரியும் திருவேகம்பப் பெருமானுடைய திருவைந்தெழுத்தைச் செபிப்பனவாகும்.

(கருணாகலையன் என்பது அரசனைக் குறித்தது. அருள் நேசர் — அருளை நேசிப்பவர்; பொருள்நேசன் — குபேரன்.)

**562 பொற்பலங் கார மனமே சிறந்து புகழ்தருங்கை**
**கற்பலங் கார மடந்தயர்க் கேளழில் காட்டுசெங்கை**
**சற்பலங் காரத் திருக்கம்பர் மாவடி சார்ந்தசெங்கை**
**விற்பலங் கற்றசெங் குந்த குலேசர் இருமைக்கையே. 90**

பொ. ரை :

விற்போர்ப் பயிற்சி பெற்ற செங்குந்த குலத்தலைவர்களுடைய, இப்பிறப்பு மறுபிறப்பு ஆகிய இரண்டிலும் உதவும் கைகளானவ, அழகிய அலங்காரத்தில் மனமகிழ்ந்து புகழப் படுவன. கற்பை அணிகலனாகக் கொண்ட மகளிர்க்கு அழகைத் தோற்றுவிக்கும் செம்மையுடையன, பாம்புகளை அழகிய அணிகலன்களாக உடைய திருவேகம்பர் வீற்றிருக்கும் மாவடியைச் சார்ந்து நிற்கும் புகழுடையனவாகும்.

('சர்ப்பம்' என்பது எதுகை நோக்கி 'சற்பம்' என்றாயிற்று. விற்பலம் — வில்லாற்றல்.)

**563 விருது ரணசுத்த வீரர்கண் டீரங்கள் வில்தடக்கை**
**மருது தடிந்தவர் தம்மைச் செயங்கொள் வளரும்செங்கை**
**எருது நடத்திய ஏகம்ப நாதர்க் கிணங்குசெங்கை**
**கருதும் கவிஞரைக் காக்கும்செங் குந்தர் கனிசக்கைகயே.** 91

பொ. ரை :

பிறரால் மதிக்கப்படுகின்ற உயர்ந்த கவிஞர்களைக் காப்பாற்றுகின்ற செங்குந்தர்களின் கனி போன்று இனிய கைகளானவை, விருதுபெற்ற போரில் வல்ல சிங்கங்கள் போன்று வில் ஏந்திய பெருமை உடையன, திருமாலை வெற்றி கொண்டு உயர்ந்து வளருவன, இடப வாகனனாகிய திருவேகம்பர்க்குத் தொண்டு செய்வன ஆகிய சிறப்புக்களை உடையனவாகும்.

(கண்டீரம் — சிங்கம்; தட — பெருமை (உரிச்சொல்); மருது தடிந்தவர் — கண்ணபிரான்; திருமால், (திருமாலை வெற்றி கொண்ட வரலாறு விளங்கவில்லை.)

**564 கனிபால்கற் கண்டு மொழிமாதர்க் கின்பக் கலவிச்செங்கை**
**பனிபோலும் சீத பரிமள குங்குமப் பங்கையக்கை**
**தொனிவீரர் வெற்றி முரசே முழக்கிய சுந்தரக்கை**
**இனிதே கொடுக்கும் நவவீர வாகு இயற்கைக்கையே.** 92



பொ. ரை :

இன்சொல் கூறிக் கொடை வழங்கும் இயல்பமைந்த நவவீரர் (செங்குந்தர்) களின் கைகளானவை பழம், பால் கற்கண்டு போலும் சுவையான மொழிபேசும் மாதர்களுடன் சேர்ந்து இன்பந்தருவன. பனியைப் போன்ற குளிர்ச்சியும், மணமும் செந்நிறமும் அமைந்தன. வெற்றிமுரசு முழக்கி ஒலி செய்யும் அழகுடையன.

(கலவி — சேர்க்கை; சீதம் — குளிர்ச்சி; தொனி — ஒலி.)

**565 இயக்கரமரர் எழிலிந்த்ர போகம் இலங்குசெங்கை**
**கயக்கம் நமதெனும் காமாட்சி பொற்பதம் கண்டசெங்கை**
**செயக்கங் கணக்கை திரிலோக மட்டுந் தியாகசெங்கை**
**நயக்கும் புகழ்திருச் செங்குந்த வீரர்கள் நன்றிக்கையே.** 93

பொ. ரை :

பிறரால் விரும்பப்படுகின்ற புகழுடைய அழகிய செங்குந்த வீரர்களுடைய நன்மைதரும் கைகளானவை, இயக்கர், அமரர் போன்று அழகிய இன்பந்தருவன, (பிறர்படும்) துன்பத்தைத் தான் ஏற்றுக் கொள்ளும் காமாட்சிதேவியின் பொன் போன்ற திருவடிகளை வணங்குவன, வெற்றிக்கு அடையாளமான கங்கணம் அணிந்தன, மூவுலகிலும் கொடை அளிக்கும் சிறப்புடையன.

(இயக்கர், அமரர் — தேவலோகத்தினர்; இந்திரபோகம்— தேவலோகத்தில் பெறும் இன்பம்; கயக்கம்— கலக்கம், துன்பம்; கங்கணம் —காப்பு; தியாகம் — கொடை; நயத்தல் — விரும்புதல் )

**566 நன்றி மறாதகை நானிலங் கீர்த்தி நடாத்து செங்கை**
**குன்றாத பாக்கியம் கூடும் திருக்கை குணம்தருங்கை**
**என்றுந் திருக்கச்சி யேகாம் பரர்தாளை ஏத்துசெங்கை**
**மன்றிலோ யாத்திருச் செங்குந்த வீரர் மணிச்செங்கையே.** 94

பொ. ரை :

நியாய சபையில் இடைவிடாது நீதி வழங்கும் செங்குந்த வீரர்களின் அழகிய சிவந்த கைகளானவை பிறர் தமக்குச்

செய்த நன்றியினை மறவாமல் உலகில் புகழ் செலுத்துவன, குறையாத செல்வம் சேர்வன, நற்குணம் உடையன, எல்லாக் காலத்திலும் திருவேகம்பப் பெருமான் திருவடிகளை வணங்குவன வாகிய பெருமையுடையனவாகும்.

(நானிலம் — உலகம், நான்கு + நிலம் — குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நான்குவகை நிலம்; பாக்கியம் — செல்வம்; மன்று - நியாய சபை)

**567 செங்காந்த ளங்கை செழுங்களிம் பாக்கிய தேசிகக்கை**
**மங்காத கீர்த்தியும் மாளாக்கருணையும் வைத்தசெங்கை**
**சங்கீத வீணை சரமண் டலமிசை தந்திருக்கை**
**துங்காபி ராமசெங் குந்த குலாதிபர் தூய்மைக்கையே. 95**

பொ. ரை:

உயர்ந்த அழகிய செங்குந்தர் குலத்தலைவர்களின் தூய்மையான கைகளானவை செங்காந்தள் மலர்போன்ற அழகுடையன, களிம்பை நன்மை ஆக்கிய குருவுபதேசம் உடையன, குறையாத புகழும் அழியாத இரக்கமும் உடையன; வீணை இசையை இவ்வுலகில் தரும் அழகுடையன.

(களிம்பு — குற்றம். துரு; செம்பில் உண்டாகும் அழுக்கு, தேசிகர் — ஆசிரியர்; சரமண்டலம் — இயங்கும்உலகம்; சரம் + அசரம் = சராசரம்; துங்கம் — உயர்ச்சி; அபிராமம் — அழகு.)

(காந்தள் மலரைப் பெண்கள் கைகளுக்கு உவமை கூறுதல் மரபு. இங்கு ஆண்களுக்குக் கூறப்பட்டுள்ளது.)

**568 தூய நெறிவரத் தோலாத வீரம் தொடங்குசெங்கை**
**நேய மிரவலர் தம்மீது வைத்த நிலைமைச்செங்கை**
**தாயைப் பிதாகுரு தெய்வத்தை வந்தனை சாற்றுசெங்கை**
**சீயத்தையொத்த திறலோர் செங் குந்தர்தம்**
**செம்பொற்கையே. 96**

பொ. ரை:

சிங்கம் போன்ற வலிமையுடைய செங்குந்தரின் செவ்விய பொன்போலும் கைகள் தூய்மையான வழியில் செல்லத் தயங்காத வீரமுடையன, இரவலர் மீது அன்புகொண்ட நிலையுடையன. தாய் தந்தை குரு தெய்வம் ஆகியவர்களைவழிபாடு செய்வன ஆகிய செயல்களை உடையனவாகும்.



[தோலாத—கெடழியாத; சீயம்—சிங்கம்.]

**569 செம்பொற் சிலம்பி லுதித்த திருக்கைசெந் தாமரைக்கை**
**கும்பக் கனதன மின்னார் மணங்கள் குறித்தசெங்கை**
**தும்பைத் தொடையணி கம்பர் சரணந் துதித்தசெங்கை**
**அம்புக்கை யானசெங் குந்த குலேசர் அருமைக்கையே. 97**

பொ. ரை:

அம்பினைக் கையில் கொண்ட செங்குந்தத் தலைவர்களின் அரிய கைகளானவை, சிவந்த பொற்சிலம்பிலிருந்து தோன்றியன, தாமரை மலர் போன்று (கொடையால்) சிவந்துள்ளன, குடம் போன்ற தனபாரங்களையுடைய பெண்களின் திருமணங்களை நிறைவேற்றி வைப்பன, தும்பை மாலையணிந்த திருவேகம்பப்பெருமானின் திருவடிகளைத் துதிக்கும் செயலுடையன.

[கும்பம்—குடம்; கனதனம்—பருத்த நகில்; மின்னார்—மின்னற்கொடி போலும் பெண்கள்; தும்பைத்தொடை—தும்பைமாலை. தும்பைமாலை இன்றளவும் திருவேகம்பப் பெருமான் அம்மையைத் திருமணம் கொண்டு உலாவரும் பங்குனி உத்திர நாளில் அணிவிக்கப்படுகின்றது.]

**570 அரும்பொரு ளின்பம் அறம்தழைத் தோங்கி அருள்பெறுங்கை**
**வரும்பொரு ளென்றும் அருகாது நாளும் வரையறைக்கை**
**சுரும்புகள் பாடும் கடப்ப மலர்புயம் தோன்றுசெங்கை**
**பெரும்புக ழாயர்செங் குந்த குலேசர் பெருமைக்கையே. 98**

பொ. ரை:

பெரும்புகழை உடையவர்களாகிய செங்குந்த குலத் தலைவர்களின் பெருமை உடைய கைகளானவை அரிய பொருளும் இன்பமும்அறமும் செழித்துவளர அருள் பெறுவன, பொருள் வரவில் என்றும் சுருங்காது நாள்தோறும் வரையறை

செய்வன, வண்டுகள் பாடும் கடப்பமலர் மாலையணிந்து தோன்றும் செம்மையுடையன.

(அருகுதல் — சுருங்குதல், குறைதல்; புகழாயர் — புகழ் ஆகியவர்—புகழை உடையவர்கள்.)

**571 பெருந்தவத் தோனைப் பிரானை முருகனைப் பேணுசெங்கை**
**திருந்துவை வேல்கொண்டு சீர்கச்சி யாண்மை செலுத்து செங்கை**
**விருந்து தமிழ்வலர்க் கொண்டாட வேண்டி விரும்பு செங்கை**
**தருந்தரு வாகுஞ்செங் குந்த குலாதிபர் தங்கள்கையே.** 99

பொ. ரை:

பிறருக்குக் கொடுக்கும் கற்பகத் தருப்போன்ற செங்குந்த குலத் தலைவர்களுடைய கைகளானவை, பெரிய தவமுடைய அகத்திய முனிவரையும் சிவபெருமானையும் முருகப் பெருமானையும் போற்றுவன. திருத்தமுடைய கூரிய வேல் கொண்டு கச்சியை ஆட்சி செலுத்துவன. தமிழில் வல்லவர் களைப் போற்றிக் கொண்டாட விருந்தளிக்க விரும்புவன ஆகிய சிறப்புக்களை உடையனவாகும்.

(பெருந்தவத்தோன் —அகத்தியர்; பிரான்—சிவபிரான் பேணுதல்—போற்றுதல்; ஆண்மை—ஆளும் தன்மை.)

**572 தங்கும் அரும்பொருள் தாளாண்மை கீர்த்திதழைத்தசெங்கை**
**திங்கள் முடிப்பரன் காமாட்சி அன்பு சிறந்தசெங்கை**
**மங்களக் தெய்வப் புலவோர் வழுத்த மகிழ்திருக்கை**
**கங்கா தரன்சுதர் செங்குந்தர் கார்கொண்ட கைத்தலமே.** 100

பொ. ரை:

கங்கையைத் தரித்த சிவபெருமானின் குமாரர்களாகிய செங்குந்தருடைய, மழைபோல் கொடை வழங்கும் கை களானவை, அரியபொருள் தங்குவன; ஊக்கம் புகழ் முதலியன தழைத்து வளருவன; நிலவைச் சடையில் தரித்த இறைவனுக் கும், காமாட்சி தேவியாருக்கும் அன்பு செலுத்துவன; மங்கள கரமான தெய்வத்தன்மை உடைய புலவர்கள் வாழ்த்துமாறு மகிழ்ந்திருப்பன ஆகிய பெருமைக்குரியனவாகும்.



(தாளாண்மை—ஊக்கம், முயற்சி; பரன்—மேலானவன்; சுதர்— மைந்தர்)

இவ்வந்தாதி 'கார்கொண்ட கைத்தலச் செங்குந்தர்' என்று தொடங்கி 'கார்கொண்ட கைத்தலமே' என்று முடிவுற்றது.

**573 கார்வாழி வாழி கலைமகள் வாழி கனகமயில்**
**கூர்வேலஞ் சேவற் கொடிவாழி வாழி குகனிருதாள்**
**சீர்வாழி வாழி தவயானை வள்ளி சிறந்தகச்சி**
**ஊர்வாழி செங்குந்த வேலவர் வாழி உலகெங்குமே.**

பொ ரை:

மழை பொழிந்து வாழ்வதாக! சரசுவதி நெடுநாள் வாழ் வாளாக! பொன்மயமான மயிலும், கூர்மையுடைய வேலும், சேவற்கொடியும் நிலைத்து வாழ்வனவாக! முருகப் பெருமா னுடைய திருவடிப் புகழ் வாழ்வதாக! தெய்வயானை வள்ளி யெனும் இருவரும் வாழ்வாராக! எல்லாவகையான சிறப்புக் களையுமுடைய கச்சிநகரம் நிலைத்து வாழ்வதாக! உலகம் எங்கிலும் பரந்துள்ள செங்குந்த வேலவர்கள் (புகழுடன்) வாழ்வார்களாக!

[கார்—மழை; கனகம்—பொன்; சீர்—புகழ்)

செங்குந்த வேலவர்
திருக்கை வழக்கத்தந்தாதி முற்றியது.
வேலுமயிலுந்துணை.

உ
சிவமயம்
முருகக் கடவுள் துணை

# செங்குந்தர் குலமாட்சி

'செங்குந்தர் குலமாட்சி' என்னும் இப்பகுதி, திருவாரூர் **வள்ளல் திரு. தி.க.ச. சபாபதி முதலியார்**அவர்களால் தொகுக்கப் பட்டுள்ளது. இப்பெருமகனார் காஞ்சி நாகலிங்க முனிவர் **1926** இல் 'செங்குந்தர் பிரபந்தத்திரட்டு' என்னும் இந்நூலைப் பதிப்பித்து வெளியிடக் காரணமாக இருந்தவர். செங்குந்த குலத்துக்குப் பெருநன்மைகள் பல புரிந்தவர். பலர் பல காலங் களில் இயற்றிய நூல்களில் செங்குந்தர் பற்றி வரும் குறிப்புக் கள் கொண்ட பாடல்களை இவர் இப்பகுதியில் தொகுத்து வெளிப்படுத்தியுள்ளார். இதில் உள்ள பல பாடல்கள் மிகப் பிற்காலத்தில் எழுந்த சாதாரண வெள்ளைப் பாட்டுக்களாக உள்ளன.

தொகுத்தானுரை

**574 பல நூலைக் காட்டப் பருவமிது அல்ல**
**சில நூலைக் காட்டுவாம் தேர்ந்து.**

இதன் பொருள் :

செங்குந்தர் குலத்தின் பெருமையைக் கூறும் ஆதாரங் களைப் பல நூல்களில் இருந்து எடுத்துக்காட்டி விளக்க இது உரிய சமயமன்று. ஆகவே, தேர்ந்தெடுத்த சில நூல்களில் இருந்து அப்பெருமையைக் கூறுவோமாக.



மதுரைப் புராணம்

**575 சாம்பவி சிலம்பிற் பூத்த சாயலாம் மணியின் மாதர்**
**சாம்பவன் கருணை யாலே தந்தசெங் குந்த மாக்கள்**
**தேம்பொலி வீதி தன்னில் திருவல கியற்று வோர்கள்**
**வேம்பலர் மன்னன் போல மேதினி பிறந்து வாழ்வர். 1**

இ. ள்:

உமாதேவியின் திருவடிச் சிலம்பிலிருந்துதோன்றி நவமணி களில் உதித்த, அவ்வம்மையின் சாயலைத் தம்மிடத்தே கொண்டு விளங்கிய பெண்களிடம் இறைவனுடைய கருணை யினால் தோன்றிய செங்குந்தர், தேன்போன்று இனிமை யுடைய (திருக்கோயிலமைந்த) வீதிகளில் திருவலகிட்டுத் திருப் பணி செய்வார்கள். அவர்கள் வேப்பமலர் மாலையணிந்த பாண்டிய மன்னனைப் போன்று இவ்வுலகில் தோன்றி வாழு வார்கள்.

(செங்குந்தர் சோழ மரபினர் எனபது வழக்கு ஆயினும், இந்நூல் மதுரைப்புராணமாதலின் பாண்டியனோடு ஒப்புமைப் படுத்திக் கூறிற்று.)

**576 உலத்தினிற் புட்ப ராகம் ஒளியினில் கதிராம், ஐந்து**
**புலத்தினிற் கருங்கண் வாவிப் பூவினிற் கமலம் சொல்லும்**
**குலத்தினிற் செய்ய குந்தம் குன்றினின் மேருக்குன்றம்**
**தலத்தினின் மதுரை மேலாந் தரமெனுந் தகைமைத்தம்மா. 2**

இ. ள்:

(ஒளி வீசும்) கற்களில் புட்பராகம் போலவும், ஒளியினில் சூரியன் போலவும், ஐம்புலன்களில் கண்கள் போலவும், குளத் தில் உள்ள பூக்களில் தாமரை போலவும், மலைகளில் மேருமலை போலவும், நகரங்களில் மதுரையம்பதி போலவும் குலங்களில் உயர்ந்து நிற்பது செங்குந்த குலமே ஆகும்.

(உலம்— திரண்டகல்; புலத்தினிற்கு அரும்கண் - ஐம்புலன் களில் கண்கள்; வாவி — குளம்; மேலாம்தரம் - மேலான தன்மை; கதிர் — சூரியன்.)

577 **கோக்களை மின்ன னாரைத் தவத்தரைக் குலத்தில் வேத**
**மாக்களைச் சிசுவைக் கொன்றான் செய்ந்நன்றி**
**மறந்தான், ஆசான்**
**ஆக்கம தழித்தான் பாவ மனைத்தும்செங் குந்தர்வீதி**
**தேக்கிடப் பிச்சை வாங்கி உண்டிடத் தீரு மன்றே.** 3

இ. ள் :

பசுக்கள், பெண்கள், தவசிகள், வேதம் வல்ல அந்தணர்கள், குழந்தைகள் ஆகியவர்களைக் கொன்றவர்களும், பிறர் தமக்குச் செய்த நன்றியை மறந்தவர்களும், குருவின் செல்வத்தை அழித்தவர்களும் ஆகிய இவர்களுடைய பெரும் பாவங்கள் எல்லாம் செங்குந்தர் வாழுகின்ற வீதியில் சென்று இரந்து சோறுண்பதனால் நீங்கிப் போகும். (செங்குந்தர்கள் பாவம் போக்க வல்லவர்கள் என்பது கருத்து. காரணம் பாவம் இல்லாத தொழிலைச் செய்தல் என்பதாகும்.)

(மின்னனார் — மின் போலும் பெண்கள்; ஆக்கம்— செல்வம்.)

அம்மானை

578 **மாவடியி லேவிளங்கும் வல்லிகா மாட்சித்தாய்**
**சேவடியி லேஉதித்தார் செங்குந்தர் அம்மானை**
**சேவடியி லேஉதித்தார் செங்குந்தர் ஆமாயின்**
**பாவடியி னின்று பசப்புவதேன் அம்மானை**
**பசித்தவருக் கன்னமிடப் பசவாரோ அம்மானை.** 4

அம்மானை என்பது பெண்கள் இரு அணிகளாகப் பிரிந்து ஆடும் ஓர் விளையாட்டு. ஓர் அணியினர் ஒன்றைச் சொல்ல, அதுபற்றி எதிர் அணியினர் ஒரு கேள்வி கேட்க அதற்கு முதல் அணியினர் தக்க விடை கூறுவது. இவ்வாறு வினா எழுப்பும் போது கையில் உள்ள அம்மானைக் காய்களை மேலே எறிந்து கையால் பிடித்து ஆடுவது வழக்கம்.



இ. ள்:

மாவடியில் வீற்றிருக்கும் (திருவேகம்பப் பெருமானின் இடப் பாலமர்ந்த) காமாட்சியம்மையின் திருவடிச் சிலம்பில் உதித்தவர்கள் செங்குந்தர்களாவர், அம்மானை.

செங்குந்தர்கள் திருவடிச் சிலம்பில் (சேவடியில்) உதித்தவர்கள் என்றால் அவர்கள் பாவடியில் (பாவுதோயும் இடத்தில்) இருந்து இரங்குவது ஏன்? அம்மானை.

பசித்தவர்களுக்கு உணவிடுபவர் இரங்காரோ? (இரக்கம் காட்ட மாட்டார்களா?) அம்மானை. (பசப்புவது — இரக்கம் காட்டுவது.)

போகர் ஜாதி உற்பத்தி நூல்

579 **பண்பான புலிப்பாணி மைந்த கேளு**
**பகருகின்றேன் நவவீரர் வருக்கந் தானே**
**தண்பான சிவசத்தி சிலம்பில் தோன்றித்**
**தருவாக நந்திகணத் தவருமாகித்**
**திண்பான செங்குந்தர் வமிச மானார்**
**திடமுள்ள வளவகுல மணமே சூட்டி**
**எண்பான சகத்திர நூற் றொன்பான் பாலர்**
**இணங்கியே உலகிலர சியற்றி னாரே.** 5

(இந்நூல் 'போகர்' என்னும் சித்தரால் இயற்றப்பட்டது எனவும், அவர் 'புலிப்பாணி' என்பவருக்கு இதனைக் கூறினார் எனவும் வழங்கப்படும்.)

இ. ள் :

நவவீரர் மரபினை நான் கூறுகின்றேன். அதனைப் புலிப்பாணியே நீ கேட்பாயாக. சிவசக்தியின் சிலம்பின் மணிகளிலிருந்து அவதரித்து, நந்தி தேவர் வழியில் வந்து, கையில் குந்தப்படை ஏந்தியதனால், 'செங்குந்தர்' என்று இவர்கள் வழங்கப்பட்டனர். சோழகுலத்தில் இவர்கள் மணம் கொண்டு, இலக்கம் வீரர்களுடன் நவவீரர்களும் இணைந்து உலகினை ஆட்சி செய்தார்கள். (வளவகுலம் — சோழர் மரபு.)

கருவூரார் கடைக்காண்டம்

580 சாதியா மின்னமொரு மார்க்கம் கேளு
சாங்கமுட னேஉரைப்பன் மைந்தா இன்று
ஆதியாம் வீரகே சரியாம் தேவர்
அன்பான பரிதிகுல சாதி யாகும்
நீதியாம் சேனைக்குத் தலைவ ரென்று
நிட்களங்க மாகவல்லோர் நூல்கள் தோறும்
பாதியாம் சடையணிந்த தம்பி ரானும்
பாடிவைத்த நூல்தனிலே பார்க்க லாமே. 6

இ. ள் :

சாதி என்னும் முறையை ஒழுங்காகக் கூறுகின்றேன். கேட்பாயாக. வீரகேசரி முதலிய தேவர்கள் சூரியகுலத்தவர் ஆவர். அவர்கள் நீதி முறையுடன் சேனைத் தலைமை ஏற்றவர்களாவர். அவர்களுடைய குற்றமற்ற தன்மைகளை சிவபெருமானைப் பற்றிப் பாடப்பட்டுள்ள நூல்களில் கண்டு தெளியலாம். (வீரகேசரி என்பவர் நவவீரர்களுள் ஒருவராவர்.)

(சாங்கம் — ஒழுங்கு; நிட்களங்கம் — தூய்மை.)

அகத்தியர் மரபு நூல்

581 பாரப்பா இன்னமொரு செய்தி கேளு
பண்பான புலத்தியனே பாங்கு ளோனே
சாரப்பா சண்முகருக் கிளையோ ரான
சருவாக சத்தியிட புதல்வ ரையா
தாரப்பா நந்திகணத் தவருமாகித்
தருவாக நவவீரர் மரபில் தோன்றி
வாரப்பா வீரசிங்க ராயன் தானும்
வளமான வீரசிங்கா சனத்தோன் பாரே. 7

இ. ள் :

அருகில் உள்ள புலத்திய முனிவரே, இன்னும் ஒரு செய்தியைக் கூறுகின்றேன், கேட்பீராக. சண்முகப் பெருமானுக்கு இளையராகவும், உமாதேவியாகிய சக்தியின் புதல்வர்களாக



வும், திரு நந்திதேவர் மரபில் வந்தவர்களாகவும் உள்ளவர்கள் நவவீரர்களாவர் அவர்தம் மரபில் தோன்றி வீரததுடன் சிம்மாசனம் ஏறிய வீரசிங்கராயன் செங்குந்த குலத்தவனாவான்.

அகத்தியர் மரபு விளக்கம்

582 என்னவே இன்னமொரு வழியும் சொல்வேன்
எழிலான கண்மணியே இசைவல் லோனே
நன்னவே நவவீரர் மரபு தானும்
நாம் கண்ட நாற்றிசையும் கீர்த்தி ஓங்கக்
கன்னவே கந்தவேள் கருணை யாலே
கனமான மனுகுலத்தில் கலந்த தாகும்
அன்னவே முசுகுந்தர்க்(கு) அவனி தன்னில்
அன்பாய்ச்சா மந்திரரா யிருந்தார் பாரே. 8

இ. ள் :

அழகிய கண்மணி போன்றவனும் இசையில் வல்லவனும் ஆகிய முனிவனே, இன்னமும் ஒரு முறைமையைக் கூறுகின்றேன், கேட்பாயாக! நவவீரர்களுடைய மரபானது எல்லாத் திக்குகளிலும் புகழ் பரப்பி, முருகப் பெருமானின் திருவருளினால் மனுகுலத்துடன் இணைந்து விட்ட மரபாகும். அதனாலேயே அவர்கள் இவ்வுலகில் முசுகுந்தச் சக்கரவர்த்திக்குப் படைத்தலைவர்களாக விளங்கினார்கள்.

(கனம் — பெருமை; சாமந்திரர் — படைத்தலைவர்.)

தேரையர் மரபு விளக்கம்

583 ஆமப்பா இன்னமொரு வழியும் சொல்வேன்
அப்பனே செங்குந்தர் மரபைக் கேளு
தாமப்பா தரணிதனில் மனுமாந் தாதா
தருவாகச் சந்ததியில் வந்து தோன்றிச்
சாமப்பா நவவீர தேவர் தானும்
சார்வாகப் படைத்துணையாய் அவனி மீதில்
காமப்பா கந்தவேட் சொல்லில் நின்று
கனமாய்ச்சா மந்திரராய் நின்றார் தாமே. 9

இ. ள் :

இந்த உலகில் செங்குந்தர் மரபு சோழர் குலத்தில், மனு, மாந்தாதா போன்ற பேரரசர்களின் வழியில் கொடை வழங்கும் கற்பகத் தருவைப்போல வந்து உதித்ததாகும் இம்மரபின ரான வீரவாகு தேவர் முதலிய நவவீரர் முருகப்பெருமா னுடைய ஆணைப்படி நடந்து, அப்பெருமானின் படைத் துணைவர்களாகவும், பெருமை மிகுந்த படைத்தலைவர்களா கவும் விளங்கினவர்களாவார்கள்.

கொங்கணர் நந்தீசர் மரபு

584 மறைவான நந்தீசர் மரபே தென்றால்
மார்க்கமுள செங்குந்த குலமே யாகும்
கறைவான நவகன்னி புதல்வ ராகும்
நவவீர வாகுவே முதலா யுள்ளோர்
தறைதனிலே க்ஷத்திரியக் கூட்டத் துற்றுத்
தருவாக வமிசத்தின் கிளையைக் கண்டு
உறைவாக முசுமுகனாம் மன்ன னுக்கும்
உண்மையுள துணைவராய் நின்றார் காணே 10

இ. ள் :

சிவபெருமானுக்கு அகம்படித் தொண்டரான நந்தியெம் பெருமான் தோன்றிய மரபு செங்குந்தர்தம் மரபேயாகும். நவரத்தினங்களிலிருந்து தோன்றிய ஒன்பது பெண்களிடத்தே உதித்த வீரவாகு முதலிய நவவீரர்கள், இவ்வுலகில் க்ஷத்திரியர் களாகப் (அரசகுலத்தில்) பிறந்து, கற்பகத் தருவைப் போல் தழைத்து வளர்ந்து, கிளைகளாக அம்மரபு செழித்து வளர, அம்மரபில் தோன்றியசெங்குந்தர்கள் முசுகுந்தச் சக்கரவர்த்திக் குத் துணைவர்களாகவும் விளங்கினார்கள்.

கடம்பவன புராணம்

585 மாலயன் காணொ ணாத வடிவனாம் சொக்க நாதன்
பாலராம் ஒன்பான் வீரர் பார்ப்பதி சிலம்பில் வந்தோர்
சூலமும் வேலும் கொண்டு சூர்க்கிளை தடிந்து பின்னர்
சீலமே மிக்க நந்தம் செங்குந்தர் திறத்தைச் சொல்வாம். 11



இ. ள் :

திருமாலும் பிரமனும் தேடியறிய முடியாதவனாகிய சிவ பெருமானுடைய புதல்வர்களும், உமையம்மையின் திருவடிச் சிலம்பினின்றும் தோன்றியவர்களுமான நவவீரர்கள் தம் கையில் சூலம் வேல் முதலிய படைக்கருவிகளை ஏந்தி, சூரபது மனை உறவினரோடு அழித்த, உயர் பண்புகளுடன் கூடிய செங்குந்தர்களின் தன்மையைக் கூறுவோமாக.

586 சதுர்மறை நாலி லில்லை சாத்திரம் ஆறில் இல்லை
பதினெண்பு ராணத் தில்லை பத்திரண் டெட்டி லில்லை
முதலியர் மூவர் சொல்லின் முனிமொழி குறளி லில்லை
உயிர்வதை செய்வ துண்ணல் செங்குந்தர் மரபுக் கில்லை. 12

இ. ள் :

நான்கு வேதம், ஆறுசாத்திரம், பதினெட்டுப் புராணம். இருபத்தெட்டு ஆகமம், மூவர் முதலிகள் மொழிந்த தேவாரம், திருவள்ளுவர் உரைத்த திருக்குறள் ஆகிய நூல்களில் விதிக்கப் படாத உயிர்க்கொலை செய்தல், புலால் உண்ணல் இவை களைச் செய்யாமையே செங்குந்தர்கள் பின்பற்றும் ஒழுக்க மாகும்.

587 கைக்கோளர் தமக்கு நிந்தை கனவிடைச் செய்த பேர்கள்
மக்களும் மாடும் தோற்று மனைவியும் பொருளும் தோற்றுக்
கைக்குளே அன்னம் ஏந்திக் காட்டகம் எங்கும் சுற்றித்
தக்கபேர் நமனுக் காளாய்த் தாம்நர கெய்து வாரே. 13

இ. ள் :

கைக்கோளர் என்று வழங்கப்படும் செங்குந்தர்களுக்குக் கனவில் சிலர் தீமை செய்தாலும், அவர்கள் மனைவி மக்கள் பொருள் முதலிய அனைத்தையும் இழந்து, பிச்சையேற்று, காட்டில்அலைந்து திரிந்து,இயமவாதனை யடைந்து நரகத்தை அடைவார்கள்.

(மாடு — செல்வம்; தோற்று — இழந்து.)

588 **காதிலே ஆறு கட்டிக் கையிலே வேலும் வாங்கி**
**வாதுசேர் அசுரர்மாள வந்ததோர் வீர வாகு**
**ஆதியும் அந்த மில்லா அரனுக்குக் குருக்க ளான**
**சோதியாம் முருகன் பின்னே தோன்றிய குந்த னாமே.** 14

இ. ள் :

காதில் உருத்திராக்கவடமணிந்து, கையில் வேலை ஏந்தி, போர்புரியும் அசுரர்கள் அழியப் படைகொண்டு சென்ற வீரவாகுத் தேவர், ஆதியந்தமில்லாத சிவபெருமானுக்கு, [பிரணவப் பொருள்கூறிய] குருநாதனாகிய ஒளிபொருந்திய முருகப் பெருமானுக்குப் பின்னே தோன்றிய செங்குந்தராவார்.

[காதிலே ஆறு கட்டி என்பது ஆறு சிறு உருத்திராக்க மணிகளை வட்டமாகக் கோத்துக் காதில் அணிந்து கொள்ளுவதைக் குறிக்கும்.]

ஸ்ரீ கந்தபுராணம்

589 **முந்தவே கயிலை வெற்பின் முயலு மெய்க் காவ லாளர்**
**கந்தர்கைக் கோள ராகிக் கார்நிறத் தசுரைச் செற்றுச்**
**சுந்தர முசுகுந் தற்குச் சுற்றமும் அமைச்சும் ஆன**
**குந்தர்கள் உறையும் வீதித் தன்மையைக் கூறு வோமால்.** 15

இ. ள்:

கைலை மலையினை மெய்க்காவல் கொண்டு காத்துநின்று, கந்தப் பெருமானால் (தம்பியராகக்) கொள்ளப்பட்டு கருநிறம் பொருந்திய (சூரபதுமன் முதலிய) அசுரர்களையழித்து, அழகுடைய முசுகுந்தச் சக்கரவர்த்திக்கு உறவினரும அமைச்சர்களுமாகிப் பெருமைகொண்ட செங்குந்தர் வாழுகின்ற தெருவின் சிறப்பினை எடுத்துக் கூறுவோம்.

திருவாரூர்லீலை

590 **கண்டிடும் தவங்க ளெல்லாம் கந்தவேள் தனக்கே யாக்கி**
**எண்டருஞ் சிறப்பு வாய்ந்த இயன்முசு குந்த மன்னன்**
**மண்டனிற் கொண்டு வந்த மாப்பெரும் வீரர் ஒன்பான்**
**கண்டியர் தம்மை முந்திக் கமலையில் வைத்தான் மாதோ.** 14

இ. ள்:

பிறரால் மதிக்கப்படுகின்ற சிறப்பினை உடைய முசுகுந்த மன்னன், தன் வழிபாட்டினை முருகப்பெருமானுக்கே உரிமை



யாகச் செய்து, நிலவுலகிற்குத்தான் கொண்டு வந்த புகழ்மிக்க நவவீரர்களைத் திருவாரூரில் வாழச்செய்தான்.

[தவம்—பற்றுநீங்கிய வழிபாடு; கண்டியர்—புகழுடையோர்; கமலை—திருவாரூர்.]

591 **இப்பெரும் காரணத்தால் எழில்நவ வீரர் கூட்டம்**
**செப்பரும் சோழ நாட்டுத் திருப்பெயர் முதலில் பெற்றார்**
**தப்பரும் சீர்த்தி கொண்ட சைவசெங் குந்தர் மேன்மை**
**எப்படி உரைப்ப தாகும் என்றனன் சூதன் தானே.** 17

இ. ள்:

இவ்வாறு திருவாரூரில் குடிவைத்த காரணத்தினால் நவ வீரர்களும் அவர்தம் மரபுளோரும் சோழ நாட்டு முதலிகள் என்ற பெயரைப் பெற்றார்கள். குறைவில்லாத பெரும்புகழ் கொண்ட சைவர்களான செங்குந்தருடைய மேன்மையை எவ்வாறு எடுத்துக்கூற முடியும் என்று சூத முனிவர் கூறினார்.

வாழ்த்து

591 **சோணாட்டு முதலியெனச் சொலவந்த**
**செங்குந்தத் தொகுதி வாழி**
**நாணாளும் அவர்செய்த நற்றருமம்**
**இத்தரைமேல் நன்கு வாழி**
**காணாத காட்சியெலாங் காட்டியருள்**
**கந்தப்பன் கருணை வாழி**
**மாணாரும் வடிவேலும் மயிலும்இரு**
**மாதர்களும் வாழி வாழி.** 18

இ. ள்:

சோழநாட்டு முதலியர் என்று கூறப்படுகின்ற செங்குந்தர் இனம் நிலைத்துவாழ்வாராக. தினந்தோறும் அவர்கள்செய்யும் நல்ல தருமச் செயல்கள் இவ்வுலகில் இருந்து வாழ்வனவாக. மேலான நிலைகளைக் காட்டி அருள்புரியும் முருகப்பெருமான் திருவருள் வாழ்வதாக. பெருமை மிகுந்த வடிவேலும் மயிலும் (சேவற்கொடியும்) வள்ளி தெய்வயானையும் என்றும் வாழ்வார்களாக.

செங்குந்தர் குலமாட்சி முற்றியது.
வேலும் மயிலும் துணை.

ㄇ





## பிற்சேர்க்கை

காஞ்சிபுரம் உயர்ந்த புகழுடையது என்பதும், காஞ்சிபுரம் மாநாடு என்பதும் கூறுகின்ற பழம் பாடல்கள், 1911 ஆம் ஆண்டு பதிக்கப்பட்ட 'ஜாதி நூல் கோவை'யில் காணப் படுவது.

1 பகர்வரை தனக்கெலாம் கைலைமலை பெரியது
பட்சியில் பெரிதுகருடன்
படையென்ற வாளியில் பாசுபத மேபெரிது
பண்பினில் பெரிதுதங்கம்,
அருமறை உணர்ந்திடச் சதுர்முகன் பெரியவன்
அண்டருக் கோஇந்திரன்
ஆழிக்கு முகில்வண்ணன் பாற்கடல் பெரியது
அரவுக்கு ஆதிசேடன்
மருவுமத யானைக்கு வெள்ளானை பெரியது
மணிக்கெலாம் பெரிதுவைரம்
மரமான தற்கெலாம் கற்பகத் தருபெரிது
வளர்நதியில் கங்கைபெரிது
விருதுவில் லுக்கரன் வில்லதே பெரியது
மீனுக்கு மகரம்பெரிது
மேதினி துதிக்கின்ற நாட்டினில் பெரியது
வெற்றிபுகழ்க் காஞ்சிநாடே.

2 கச்சியெனும் மாநாட்டில் அனகனெனும்
அரசிருக்கக் கண்டவீரன்
கச்சியினாற் றிசைமுகத்தும் சிவபுரமும்
தொங்திபுரம் நறுவிரிஞ்சை
உச்சிதசோ ளிங்கபுர நாடொன்றுக்
கொருபன்னே ழுள்ளநாட்டில்
நிச்சயமாய்ச் சனகன்முதற் செங்குந்த
மன்னவரை நேமித்தானே.

## பிற்சேர்க்கை

# காஞ்சிபுரம் மாநாட்டில் அடங்கிய

## எழுபத்திரண்டு நாடுகள்

### முதலாவது கிழக்கே சிவபுர நாட்டின் கிளை நாடுகள் 17

1 மேல் படப்பை.கீழ்படப்பை, ஆத்தஞ்சேரி
2 மானாம்பதி, செம்பாக்கம், அகரம், மூணத்தொன்று
3 முன்னூர், பரமேச்சுர மங்கலம், மதுராந்தகம்
4 திண்டிவனம்
5 அக்கரைப்பத்து, மைலம்
6 திருவக்கரை, புதுச்சேரி, ஒழுகரை, கதிர்காமம்
7 திரிபுவனம், நல்லாத்தூர்
8 திருவதிகை, பாலூர்
9 இடையாற்றூர், திருவெண்ணெய்நல்லூர்
10 பனமலை, அனந்தபுரம்
11 வழுதலைப்பட்டு
12 மாப்பறை, ஆரூர்
13 பட்டினம், கருங்குழி
14 மன்னார் கோயில்
15 பாளையம்
16 குப்பாக்கம், திருக்கண்டேச்சரம்
17 ஜம்பை, திருவரங்கம்

### 2ஆவது தெற்கே தொந்திபுர நாட்டின் கிளை நாடுகள் 17

1 முருகமங்கலம்
2 திருவாமாத்தூர்
3 திருவண்ணாமலை
4 வரத்தூர், செங்குறிச்சி
5 கச்சித்திடல்
6 சேலம், விருத்தாசலம்
7 திட்டைக்குடி
8 திருமலைப்பாடி
9 திருக்கோவல்
10 திருநாகேச்சுரம் கும்பகோணம்
11 திருச்செம்பொன் பள்ளி
12 கோயில், சீர்காழி
13 மாப்பிள்ளை குப்பம்
14 திருமருகல்
15 தேவூர், காட்டூர்
16 நல்லாச்சேரி, போலகம்
17 இராமேச்சுரம், குமரி



### 3ஆவது மேற்கே விரிஞ்சிபுர நாட்டின் கிளை நாடுகள் 17

1 ஆமூர், குடியேற்றம்
2 வாணியம்பாடி
3 கொறட்டை
4 தருமபுரி
5 பவானி
6 தாரமங்கலம்
7 எழுகரை நாடு
8 புகழாரை
9 பூரத்திரை
10 திருச்செங்கோடு
11 வையாபுரி, பழநி
12 அவிநாசி
13 நஞ்சுண்ட குடி
14 காவல்பாளையம்
15 கரூர், நத்தம்
16 கருகூர் காங்கேயம் சிவன்மலை, சென்னிமலை
17 நாமக்கல்

### 4ஆவது வடக்கே சோழசிங்கபுர நாட்டின் கிளை நாடுகள் 17

1 திருத்தணி
2 தெளிநாடு
3 நெறிநாடு
4 திருவடி நாடு
5 திருமழிசை
6 கொந்தம்பாக்கம்
7 திருக்காளத்தி
8 தொண்டை மாநாடு
9 வரைநாடு
10 வேங்கடகிரி
11 திருப்பதி
12 ஜெகந்நாதம்
13 சீட்டம்பள்ளி
14 செம்புரம்
15 வரதபுரி
16 சந்திரகிரி
17 காசி, கயா, அயோத்தி, இமய நாடு

## பிற்சேர்க்கை

### 'ஈட்டி எழுபது' குறிப்பிடும் வல்லானை வென்ற 12 செங்குந்த குலத் தலைவர்கள்

### 1,2. பழுவூர் வீரன், பழுவை நாராயணன்

இவ்விருவரும் பராந்தக சோழன் காலத்தில், பழுவூரை ஆண்டு வந்த **கோமதி** என்னும் அரசனுக்கு இரட்டைப் பிள்ளைகளாகத் தோன்றியவர்கள். இவர்கள் **வீரநாராயணர்** என்றே அழைக்கப் பெறுவா். இவர்கள் காலத்தில் இராட்டிரகூடனாகிய **வல்லான்** என்பவனை, தக்க துணைவருடன், மிக்க வீரம் கொண்டு சென்று வென்று சோழநாட்டில் ஆட்சியை நிலை நிறுத்தினர். (வல்லான் காவியம் — வீரநாராயணச் சருக்கம்).

### 3. கச்சித்தளியன்

இவன் காஞ்சிபுரத்தை அரசாண்டுவந்த **பதுமவண்ணன்** என்பவனுக்குத் தோன்றிய ஒரே மகன். இவன் இளவரசனாக இருக்கும்போதே இவன் தந்தையாகிய அரசன் இறந்துவிட்டதனால், பகைவர் (மறு புலத்தார்) இவன்மேல் படைகொண்டு வந்தனர். அவர்களையெல்லாம் போரில் புறங்கண்டு, வெற்றி மாலை சூடி, காஞ்சி மாவடியின் கீழ், தேவசிங்காதனத்திலிருந்து, நீண்டநாள் அரசாண்டுவந்தவன். [வல்லான்காவியம்-தேவசாட்சிச் சருக்கம்.]

### 4. ஒற்றியூரன்

இவன் திருவொற்றியூரை அரசாண்டுவந்த **சுதனகன்** என்னும் அரசனுக்கு மகனாகத் தோன்றியவன். இவன் மாணிக்கத் தியாகருக்குத் தனியாக ஒரு நந்தவனம் அமைத்து,



அதிலிருந்து மலர்களைக் கொண்டு காலை, உச்சி, மாலை வேளைகளில் அப் பெருமானை அருச்சித்து வந்தவன்.

அந்நாளில் **அனலன்** என்னும் ஓர் அரசன் அந்நந்தவனத்தில் வந்துசேர்ந்து, பல உயிர்களுக்குத் துன்பம் விளைத்துக் கொண்டிருக்க, அவனைத் தன் கைக் குந்தத்தினால் கொன்று, உலகத்திற்கு நன்மை செய்தவன். (வல்லான் காவியம் — தேவசாட்சிச் சருக்கம்.)

### 5. களந்தையரசன்

இவன் பொன் விளைந்த களத்தூரை ஆண்டுவந்த **மதிமான்** என்னும் மன்னனுக்கு மகனாகத் தோன்றியவன். இவன் எக்காலத்தும் நிலைக்கும் அணி உருத்திராக்கமணியே என்று அறிந்து தரித்து, நடராசப் பெருமான் திருவடிகளைத் திருமுடியாகப் பெற்றவன். இவன் தந்தை இவனுக்கு முடிசூட்ட எண்ணி அரசர்களுக் கெல்லாம் திருமுகம் அனுப்பினான்.

**காட்டூரான்** என்னும் குறுநில மன்னன் அதனை மதியாமல் இருந்துவிட்டான். அதனால் கோபம்கொண்ட மதிமான் அவன் மேல் படைகொண்டு சென்று வெற்றிபெற்று வந்து தன் மகனுக்கு முடிசூட்டி, செங்கோலைக் கொடுத்தான். (வல்லான் காவியம் — தேவசாட்சிச் சருக்கம்.)

### 6. புற்றிடங் கொண்டான்

திருவாரூரில் வாழ்ந்த இவன் பெருஞ்செல்வம் உடையவன். இம்மன்னன் தமிழில் பெருவிருப்பம் உடையவன். பல புலவர்களால் பாடப் பெற்றவன். வீதிவிடங்கப் பெருமானிடம் பக்தி கொண்டு, நீதி தவறாமல் ஆண்டவன்.

இவன் புகழைக்கேட்ட அங்கதேசத்தரசன், திருவாரூர் வந்து, கலிங்கநாட்டு அரசன் தனக்கு ஏற்படுத்தும் துன்பங்களைக்கூறித் தனக்கு உதவுமாறு வேண்டினான். அது கேட்ட புற்றிடங் கொண்டான், கலிங்க மன்னனுக்கு சமாதானமாகப் போமாறு ஓலையனுப்ப, அவன் அதற்கு உடன்படாமல் போகவே, அவன் மீதுபடைகொண்டு சென்று வென்று, அவன் நாடு முழுவதையும் தன்னையடைந்த அங்க தேசத்தரசனுக்குக் கொடுத்துதவினான். (வல்லான் காவியம் — தேவசாட்சிச் சருக்கம்.)

## 7. கோளாந்தகன்

இவன் கொடுங்குன்றம் என்னும் தலத்தை ஆண்டுவந்த **மதிநாதன்** என்பவனுக்கு மகனாகத் தோன்றியவன். வேத சிவாகமங்களை நன்றாக ஓதியுணர்ந்து சிவபெருமானே தெய்வமென்று உணர்ந்தவன். உலகத்தைக் காப்பாற்றும் பொருட்டுத் தனுர் வேதத்தில் கூறப்படும் வில்வித்தையைச் செவ்வையாகக் கற்றுத் தேர்ந்தவன்.

இவன், தன்னோடுமல்யுத்தம் செய்யுமாறு கூறி வந்த **உணங்கன்** என்னும் வடநாட்டு அரசனைப் புறங்கண்டு ஓடச்செய்து வெற்றிமாலை சூடியவன். (வல்லான் காவியம் — தேவசாட்சிச் சருக்கம்.)

## 8. புலியூர்ப் பள்ளி கொண்டான்

இச்செங்குந்த மன்னன் சிதம்பரம் என்னும் தலத்தினை ஆண்டுவந்த **விடங்கன்** என்பவனுடைய ஒரே மகன். எந்தநேரமும் வேலும் மயிலும் துணை என்று ஜெபம் செய்தவன். தில்லை நடராசப்பெருமானுடைய திருவனந்தல், காலை சந்தி முதலிய கட்டளைகளைச் செவ்வையாக நடைபெறச் செய்தவன்.

இவன் கனவில் நடராசப்பெருமான் தோன்றி, 'ஆந்திர நாட்டரசன் **சிரத்தாமன்** என்பவன் படைகொண்டு வந்து நகரத்தின் மதிலை முற்றுகையிட்டிருக்கின்றான்; நீ படையுடன் சென்று அவனை வெல்வாயாக' என்று உணர்த்தினார். அவ்வாறே அவனும் துயிலுணர்ந்து, பெருமானை வணங்கி, வெட்சி மாலையணிந்து படைகொண்டு செல்ல, ஆந்திர அரசன் இவனது வல்லமை கண்டு அஞ்சி ஓட, அவனைக் கொன்று தன்னாட்சியை வளம் பெற நடத்தினான். (வல்லான் காவியம்-தேவசாட்சிச் சருக்கம்.)

## 9. பிணவன்

பிணவன் என்னும் செங்குந்த மன்னவன் கடம்பூரை ஆண்டு வந்த **கதம்பன்** என்பவனுடைய தவப்புதல்வன்.



எல்லாம் வல்லவன் சிவபெருமானே என்று உணர்ந்து தன்னுயிர்போல உலக உயிர்களை எண்ணுபவன், வேதாகமங்களை ஓதி உணர்ந்தவன். இவன் ஓர்நாள் பூஞ்சோலைகளின் வளப்பங்களைக் கண்டுவர குதிரையின் மேல் நெடுந்தூரம் சென்று ஒருசோலையில் தங்கினான், அப்போது வேடராஜன் ஒருவன், வேட்டையில் வீணாக உயிர்களைக் கொல்லுவதைக் கைவிடுமாறு கூறி அவனுடன் போரிட்டுத் திரும்பிச் செல்லுமாறு செய்தவன். (வல்லான் காவியம் — தேவசாட்சிச் சருக்கம் )

## 10. கண்டியூரன்

அட்டவீரத் தலத்தில் ஒன்றான திருக்கண்டியூரை அரசாண்ட **விபுலன்** என்னும் வேந்தனுடையமகன் கண்டியூரன். இவன் மதுகையான் என்றும் கூறப்படுவான். கண்டியூருக்கு வடக்கில் இருந்த ஒரு காட்டில் **பிரமராக்கதன்** என்னும் ஒரு கொடியவன் இருந்தான். அவன் எப்போதும் உயிர்களுக்குத் துன்பம் விளைவித்து வந்தான்.

இதைக் குடிமக்கள் மூலம் கேட்டுணர்ந்த கண்டியூரன் அவன்மேல் படைகொண்டு சென்று போரிட்டு, இறுதியில் தன் குந்தப் படையால் இயமனுலகம் அனுப்பினான். அதனால் குடிமக்கள் அவனைப் போற்ற அரசாண்டிருந்தான். (வல்லான் — தேவசாட்சிச்சருக்கம்.)

## 11. முதுகுன்ற மணியன்

பழமலை என்னும் விருத்தாசலத்தை ஆண்டுவந்த **பாராயணன்** என்பவனுடைய தவத்தால் பிறந்தவன் முதுகுன்ற மணியன். பழமலை நாதரின் திருப்பணிகள் பதிந்த மனமுடையவன். வரலாற்று முறையில் நூல்களை ஓதியுணர்ந்து, யானையேற்றம், குதிரை வில்வித்தை முதலியவைகளில் நன்கு தேர்ச்சி பெற்றவன்.

உரிய காலத்தில் முடி சூட்டப்பெற்று அரசாட்சி செய்தவன். மணவூர் என்னும் நகரத்திற்கு அதிபதியாகி **மந்தகாசன்** என்பவன் வேண்டிக்கொண்டதனால் மாளவதேயத்து அரசன் மீது படையெடுத்துச் சென்று, அவனைப் புறங்காட்டி ஓடச் செய்தவன். பிறகு அம் மாளவ மன்னன் இவனைச்

சரணடைய அவனுக்கே அத்தேசத்தைத் தானமாக வழங்கியவன். (வல்லான்—தேவசாட்சிச் சருக்கம்.)

12. தஞ்சை வேம்பன்

தஞ்சாவூரைத் தலைமையிடமாகக் கொண்டு ஆண்டுவந்து பெரும்பாலும் பஞ்சநதம் என்னும் திருவையாற்றில் வசித்த குமரன் என்பவனுடைய தவப்புதல்வன். ஐயாறப்பரின் தரும பரிபாலன கூட்டத்தில் தலைமை வகித்தவன். வேதாகமங்களை ஓதி உணர்ந்தவன், கொடையால் சிறந்தவன். ஆட்சிமுறையில் தேர்ந்த ஆராய்ச்சி உடையவன். பராந்தகச் சோழனுக்கு முதலமைச்சராக இருந்தவன். சோழ மன்னர்களின் தலைநகரமாகிய கருவூரில் பலநாள் வீற்றிருந்தவன். (வல்லான் — வீரநாராயணச் சருக்கம்.)

(இதில் குறித்தபெயர்கள் ஈட்டியெழுபது பாடல்களில் 46 முதல் 57 முடிய உள்ளவையாகும்.)

□

செங்குந்தர் பிரபந்தத் ★ திரட்டு கவிச்சக்கரவர்த்தி
ஒட்டக்கூத்தர் மன்றம், காஞ்சிபுரம்.



# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 6 | 26 | செல்லும் | சொல்லும் |
| 7 | 22 | ஆகிய | ஆதிய |
| 9 | 17 | ஏமாற்றமடைய | ஏற்றமடைய |
| 11 | 1 | தலைப்பை பெயரிட்டு | தலைப்பெயரிட்டு |
| 13 | பாடல் | சத்தவீரம் | சுத்த வீரம் |
| 29 | 6 | பற்றார் | பெற்றார் |
| 42 | 23 | உயர்ந்தவையுள்ள | உயர்ந்தவையாயுள்ள |
| 50 | 21 | சாழ மண்டல | ஈழமண்டல |
| 69 | 2 | காளியொட்டக் | காழியொட்டக் |
| **ஈட்டிஎழுபது** | | | |
| 2 | 3 | என்பவனால் | என்பவரால் |
| 4 | 23 | வீரபுரந்தரர் என்பதன்பின், வீரராக்கதர், வீரமார்த்தாண்டர், வீரராந்தகர்என்னும் மூன்று பெயர்களைச் சேர்த்துக் கொள்க. | |
| 10 | பாடல் 19 | செய்வகுந்தமே | செய்ய குந்தமே. |
| 11 | ,, 21 உரை | வெற்றி யிழந்து நான் | வெற்றியிழந்து நாண |
| 17 | ,, 33 | பூசித்திருங்காலை | பூசித்திடுங்காலை |
| 19 | ,, 35 | சென்றி வியப்ப | சென்னிவியப்ப |
| 22 | ,, 40 | செறியுமா படங்கல் | செறியுமா மடங்கல் |
| 25 | ,, 46 | இருப்பது | இருப்பவர் |
| 28 | ,, 54 | ஒண்தேரளான் கை | ஒண்தோளான்கை |
| 31 | வரி 8 | முதுகுன்றன் மணியன் | முதுகுன்ற மணியன் |
| 36 | பாடல்68 | கவின்களின் | கவின்கவின் |
| 38 | கடைசிவரி | அறகத்திய முனிவர் | அகத்திய முனிவர் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| **எழுப்பெழுபது** | | | |
| 43 | வரி 12 | அளித்தவன் | அளித்த |
| **திருக்கை வழக்கம்** | | | |
| 66 | பாடல் 7 | வாகுமுற | வாளுமுற |
| 73 | வரி 26 | சகத்திரள் | சகத்திரவாகுகள் |
| 75 | பாடல் 41 | அரிகண்டாற்கும் | அரிகண்டற்கும் |
| 77 | ,, 47 | சேமுற | சேமமுற |
| 78 | ,, 49 | சிறை முகற்கு | சிரைமுகற்கு |
| 84 | , 72 | கண்டாங்கவகதம் | கண்டாங்கவர்தம் |
| 84 | ,, 72 | உச்சிமுன் | உச்சினிமுன் |
| 90 | ,, 93 | என்புகழ் | எண்புகழ் |
| 103 | ,, 133 | வில்லிஞானம் | வில்விஞானம் |
| **செங்குந்தர் பிள்ளைத்தமிழ்** | | | |
| 115 | பாடல் 101 | தினக் | தினம் |
| 117 | வரி 7 | வல்ளலாரும் | வள்ளலும் |
| 119 | வரி 29 | உட்காணம் | உட்கரணம் |
| 127 | வரி 14 | அனைவரையும் | அனைவரும் |
| 142 | வரி 18 | தடவிஉள்ள | தடவ |
| | வரி 19 | கன்றுகள்தாய் | கன்றுகள் தாம் |
| 143 | பாடல் 125 | அசரர் | அரசர் |
| 148 | ,, 127 | சதிதரு | கதிதரு |
| 155 | ,, 132 | வளர்த்திடு | வளர்ந்திடு |
| 157 | ,, 134 | பேரென்ன | பேரெள்ள |
| | ,, ,, | வைகையால் எதிரேடு | வைகையாற்றெதிரேடு |
| 164 | ,, 139 | மதானி | மதாணி |
| 174 | ,, 147 | மாகளியை | மாகாளியை |
| 176 | வரி 19 | 'தமிழ்கற்றுபற்றுக்' என்று வருவதிலுள்ள பற்றுக் என்பதை, நீங்களே எமக்குப் பற்றுக்கோடு என மாற்றிக் கொள்க. | |
| 194 | வரி 12 | கூரினமையின் | கூறினமையின் |
| 201 | பாடல் 168 | தருமணத்தக்கினி | தருமனத்தக்கினி |
| 203 | ,, 169 | பெரியேர் | பெரியோர் |
| 206 | ,, 172 | களவன் தரள | கனவண்தரள |
| 211 | ,, 177 | நிரைந்த தரளம் | நிரைத்த தரள |
| ,, | ,, ,, | விளம்புவீர்காள் | விளம்புவிர்காள் |



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 217 | வரி 10 | துளிக்கும் | துளிர்க்கும் |
| 222 | பாடல் 186 | கூடஏசி | கூடஏகி |
| 224 | ,, 187 | வருபொருவிராசி | வருபொருளிராசி |
| 225 | ,, 188 | பூதம் என்ன | பூதரம் என்ன |
| **கலித்துறை மாலை** | | | |
| 241 | வரி 1 | வைத்த மற்ற | வைத்து மற்றத் |
| 242 | பாடல் 214 | சேவற்கெடியும் கெடியும் | சேவற் கொடியும் கெடியும் |
| 256 | மேற்கோள் பாடல் | கூடுவுட்டு | கூடுவிட்டு |
| ,, | வரி 22 | அறிவுடன் கூறிது | அறிவுடன் கூடிய |
| ,, | ,, 23 | பலகலைகளிலும் | பலகலைகளிலும் தேர்ந்தவர்களும் |
| 257 | பாடல் 240 | பாணமதன | பாணமதன் |
| 259 | வரி 14 | என்று உறுமாறு | என்று கூறுமாறு |
| ,, | பாடல் 244 | நூலதாகியம் எந்நூலு | நூலதாகிய எந்நூலும் |
| 271 | வரி 14 | இந்த பிடி | இந்தா பிடி |
| 284 | பாடல் 287 | குலத்தந்தனர் | குலத்தந்தணர் |
| 285 | ,, 288 | அமவந்தி | அவந்தி |
| **ஊசல்** | | | |
| 314 | வரி 19 | நவவீரர்கயே | நவவீரர்களே |
| 317 | பாடல் 335 | மடற்றார் | மிடற்றார் |
| **பெரிய கட்டியம்** | | | |
| 318 | வரி 13 | மார்புடையவார் | மார்புடையவர் |
| 319 | பாடல் 336 | வங்கை கடல் | லங்கை கடல் |
| **மங்களம்** | | | |
| 327 | வரி 2 | நிற்பவர் | நிற்பவர்களும் |
| **செங்குந்த விநாயகர் மாலை** | | | |
| 337 | பாடல் 362 | வனக்கதியோ | மனக்கதியோ |
| 341 | ,, 367 | வித்தநின | வித்தநின் |
| 344 | ,, 372 | மய்யோ | மெய்யோ |
| | ,, | வய்யோர் | வெய்யோர் |
| 349 | வரி 6 | உம்மை விரும் பாதவர் | உலகை விரும் பாதவர் |